# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## எட்டாம் மடலம் - இரண்டாம் பாகம்

## வா - வீ

## Vol. VIII - Part - II

து. இராசேந்திரன் இ.ஆ.ப

அரசு செயலாளர்

தமிழ் வளர்ச்சி, அறநிலையங்கள் மற்றும் செய்தித்துறை

மற்றும்

இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட

இயக்கக வெளியீடு

2007

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## எட்டாம் மடலம் - இரண்டாம் பாகம்

## (வா, வீ)

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## VOL. VIII - PART II


து. இராசேந்திரன், இ.ஆ.ப.

அரசு செயலாளர், தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும்

செய்தித் துறை

மற்றும்

இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக வெளியீடு

2007

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக வெளியீடு – 23

முதற் பதிப்பு : 2007

A Comprehensive Etymological Dictionary of the Tamil Language, Vol. VIII, Part - II

பதிப்புரிமை : தமிழ்நாட்டரசு
Government of Tamilnadu

விலை : உருபா 400/–

குறியீட்டெண் : Colon No. P.J1-J, 314"K.M4

வெளியிட்டோர் : செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
சி–48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்
அண்ணாநகர், சென்னை – 600 040.

அச்சீடு : உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி,
சென்னை 600 113.

நூல் கிடைக்குமிடம் : செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
சி–48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்
அண்ணாநகர், சென்னை – 600 040.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி,
சென்னை – 600 113.

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## VOL. VIII- PART II

எட்டாம் மடலம் - இரண்டாம் பாகம்

(வா - வீ)

பதிப்புக் குழு


து. இராசேந்திரன், இ.ஆ.ப.

*அரசு செயலாளர், தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும்*

*செய்தித் துறை*

மற்றும்

இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)

*செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்*

கூர்ந்தாய்வாளர்

புலவர். இறைக்குருவனார்

திரு.க.கணேசன்

தொகுப்பாளர்கள்

திரு.முத்து.பிச்சை

முனைவர் மு.கண்ணன்

முனைவர் பா.வெற்றிச்செல்வன்

முனைவர் ச.செந்திலாண்டவன் (பகுதிப் பொறுப்பாளர்)

முனைவர் இரா.கு.ஆல்துரை

திரு.கா.இளமுருகு

திரு.ச.கி.கணேசன் (ஓவியர்)

*செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்*

கருணாநிதி
முதலமைச்சர்



தலைமைச் செயலகம்
சென்னை

20-4-2007

# அணிந்துரை

அகரமுதலி திட்டத்தின் ஏழு மற்றும் எட்டாம் மடலங்கள் இதழ்களை விரிப்பது கண்டு என் இதயம் பெருமிதம் எய்துகிறது. ஒவ்வொரு மொழியிலும் அதன் சொற்களுக்கு வேர் மூலம் காண முற்படும்போது, பெரும்பாலான சொற்களின் வேர்மூலங்கள் அடுத்த மொழிகளில் சென்று நிற்கும். ஆனால், தமிழில் உள்ள சொற்களின் மூலங்கள் அனைத்தும் தமிழிலேயே அமைந்துள்ளன. இப்போது நடைமுறையில் வழங்குகிற தமிழ்ச் சொற்களும், உருவாகி வருகின்ற கலைச் சொற்களும், தொழில்நுட்பச் சொற்களும் ஏற்கனவே வழங்கிய வேர் மூலங்களிலிருந்து விரிந்தும் பெருகியும் வந்தனவும் வருவனவும் ஆகும்.

அறிவியல் வளர்ச்சி மிகுந்துள்ள இந்நாளில், செய்தித் தொடர்பாலும் தொழில் நுட்ப வளர்ச்சியாலும் உலகம் சுருங்கிவிட்ட நிலையில், ஒரு மொழியில் அண்டையயல் மொழிச் சொற்களெல்லாம் கலந்து விடுவது இயல்பு. இத்தகைய சூழ்நிலையிலும் தமிழ் தனித்தியங்க வல்லதாக நெடுங்காலமாக இயங்கிக் கொண்டு இருக்கிறது. இதைத்தான் பாவேந்தர் பாரதிதாசனார் 'தனித்தியங்கும் தன்மை தமிழினுக்கு உண்டு; தமிழே ஞாலத்தில் தாய்மொழி பண்டு' என்று ஆணித்தரமாகப் பாடி வைத்தார்.

அவ்வாறு, தமிழ், தான் தனித்தியங்குவது மட்டுமல்லாமல், பிற மொழிகளுக்கும் சொற்களை வாரி வழங்கிக் கொண்டுள்ளது. தமிழகத்திற்கு அப்பால் தனித்தனியே பிரிந்து வழங்கிவரும் திராவிட மொழிகளுக்கெல்லாம் தமிழ்மொழி வேர் மூலங்களை வழங்கியுள்ளதால், அவற்றின் அடிப்படையிலேயே அம்மொழிகளில் சொற்கள் பெருகியுள்ளமையைக் காண்கிறோம். அதனாலேயே, 'தமிழ் திரவிடத்திற்குத் தாய்' என்று தேவநேயப் பாவாணர் பறை சாற்றினார்.

இன்னும் பல மொழிகளிலுமுள்ள சொற்களின் வேர் மூலங்களும் தமிழிலேயே இருப்பதைக் காண நேர்கிறது. இது மொழியியல் உலகின் ஆய்வுப் போக்கைப் பல திருப்பங்களுக்கு உள்ளடக்குகின்றது. நெடுங்காலமாக வழக்கத்தில் இருப்பதும், தனித்தியங்க வல்லதும், பிறமொழிகளுக்குச் சொற்களை வழங்கவல்லதுமான மொழியே 'செம்மொழி' எனச் செம்மொழி இலக்கணம் வரையறுக்கப்படுகின்றது. தமிழின் இலக்கண இலக்கிய நூல்கள் இருட்டடிப்புச் செய்யப்பட்டு மறைக்கப்பட்டிருந்த காலமான கி.பி. 1857 அளவில் தமிழகம் வந்திருந்த கால்டுவெல் பெருமகனார் தமிழ், மலையாளம், தெலுங்கு, கன்னடம் ஆகிய மொழிகளில் ஓர் ஒப்புமையைக் கண்டறிந்து, "திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்" (The comparative grammar of Dravidian Languages) என்ற நூலை வெளியிட்டார். அதன் வழி அவர் தன் ஆராய்ச்சியில் கண்ட முடிவுதான், "தமிழ் ஒரு செம்மொழி" என்பதாகும்.

அதன்பின், ஆங்கில அறிஞர்களான, "மெக்ஸின்" போன்றவர்கள் தமிழ்மொழியில் உள்ள பதிவுகளையும், தமிழர்களின் பண்பாடு, நாகரிகம் ஆகியவற்றையும் அறிவியல், வானியல் போன்றவற்றில் அவர்கள் பெற்றிருந்த அறிவாற்றலையும் ஆராய முற்பட்டனர். அவற்றின்வழி அந்த அறிஞர் பெருமக்கள் எல்லாம், 'தமிழ் ஓர் உயர் தனிச் செம்மொழி' (Primary Classical) என்று வழிமொழிந்து சென்றனர்

இவற்றின் தொடர்ச்சியாகத் தமிழை ஒரு செம்மொழி என அரசே அறிவிக்க வேண்டுமென்று பரிதிமாற் கலைஞர் தன் கோரிக்கையை முதன்முதலில் அரசின் முன்வைத்து வலியுறுத்தினார்.

ஆனால், இதை முழுவதுமாக அறிவியல் வழியாக மொழியியலில் நிறுவுவதற்குச் சொற்களுக்கு உரிய வேர் மூலம் காணும் சொற்பிறப்பியல் பணியே துணை நிற்கும் என்று, தன் வாழ்நாளையே சொல்லாய்வுக்கென ஒப்புவித்துக் கொண்டவர் 'மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர்'. இத்தகைய பலரது தொடர்ச்சியான சிந்தனைகளின், செயல்பாடுகளின் மூலமாகத்தான் தமிழ் ஒரு செம்மொழி என்பதற்கான அங்கீகாரத்தை இன்று நாம் வென்றெடுத்துள்ளோம்; வெற்றிவாகை சூடியுள்ளோம்.

தமிழ்மொழியில் வழங்கும் சொற்களுக்கெல்லாம் வேர்மூலம் காண்பது என்பது ஆழ்கடலில் முத்தெடுக்கும் பணியினும் கடினமானது; இந்தப் பணியொன்றே தமிழ் செம்மொழி என்பதை ஏற்கச் செய்யும் முதன்மைப் பணியாகும். இப்பணியில் மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் பல ஆண்டுகள் உழைத்து ஆராய்ச்சி நூல்கள் பலவற்றை உருவாக்கி வெளியிட்டுள்ளார்; 'உயர்தனிச்செம்மொழி' (The Primary Classical Language of the World) என்ற நூலைப் பல ஆண்டுகளுக்கு முன்னமேயே வெளியிட்டுள்ளார்.

தேவநேயப் பாவாணரின் இந்தச் சொல்லாராய்ச்சித் திறனை அறிந்து, அவர்தம் பணி தமிழ் உலகிற்குத் தேவை என்று நான் கருதியதால் 8.5.1974 அன்று, 'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககம்' என்னும் ஒரு துறையைப் புதிதாக நிறுவி, அதற்குப் பாவாணர் அவர்களையே இயக்குநராகவும் நியமனம் செய்து அகர முதலித் தொகுதிகள் வெளிவர ஆவன செய்ததை இவ்வேளையில் மகிழ்வுடன் நினைவு கூர்கிறேன். அதன் பயனாக, பணிகள் சிறப்பாக நிகழ்ந்து முதல் தொகுதி அணியமாகிக் கொண்டிருக்கும் நிலையில் பாவாணர் அவர்கள் திடீரென மறைந்தார்கள். அதற்குப்பின் அவர்தம் நூல்களை அடிப்படையாகக் கொண்டு, அவரின் அணுகுமுறையிலேயே தொடர்ந்து அகர முதலித்திட்டத்தின் அடுத்தடுத்தத் தொகுதிகள் வெளிவரலாயின.

பாவாணர் மறைவுக்குப் பின்னும், ஒவ்வொரு முறையும் அரசுப்பொறுப்பு ஏற்கிற போதும் இந்தத் துறையின் வளர்ச்சியில் நான் மிகுந்த அக்கறை செலுத்தி வந்துள்ளேன். 1996ஆம் ஆண்டில் தமிழ் ஆட்சி மொழி, தமிழ்ப் பண்பாட்டுக்கு எனத் தனி அமைச்சகம் உருவாக்கப்பட்டுச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்திற்குத் தேவையான கூடுதல் பணியாளர்கள், கணிப்பொறியமைப்பு போன்ற வசதிகள் செய்து கொடுக்கப்பட்டன.

இதுவரை, மும்மூன்று தொகுதிகள் கொண்ட ஆறு மடலங்களாக மொத்தம் 18 தொகுதிகள் சென்ற ஆண்டுவரை வெளிவந்து முடிந்துள்ளன. இப்போது 'ம', 'ய', 'வ' வரிசையில் ஆறு பகுதிகள் வெளிவருவது கண்டு மகிழ்ச்சியடைகிறேன். எஞ்சிய பகுதிகளும் விரைந்து வெளிவர வேண்டும் என்பது என் அவா. இந்த அகரமுதலிப் பகுதிகள் வெளிவர உறுதுணையாய் நின்ற தமிழ் வளர்ச்சி–பண்பாடு (ம) அறநிலையத் துறை சிறப்பு ஆணையர் மற்றும் அரசுச் செயலாளர் மற்றும் அகரமுதலித் திட்ட இயக்கத்தின் பொறுப்பு இயக்குநர் திரு. து. இராசேந்திரன், இ.ஆ.ப. அவர்களுக்கும், நூல்களை உருவாக்கியுள்ள அகரமுதலித் திட்டத்தின் ஆசிரியர், பணியாளர் குழுக்களுக்கும் எனது உளமார்ந்த பாராட்டுகள் உரித்தாகுக.

என்றும்,
அன்புடன்

(மு. கருணாநிதி)

*து. இராசேந்திரன்,* இ.ஆ.ப.,
அரசு செயலாளர்,
தமிழ் வளர்ச்சி, அறநிலையம் (ம) செய்தித் துறை
மற்றும்
இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்
அகரமுதலித் திட்ட இயக்ககம்,

# பதிப்புரை

## "தமிழ் எங்கள் உயிருக்கு நேர்" – பாவேந்தர்

மொழிஞாயிறு தேவநேயப் பாவாணரை அவரது செந்தமிழ் ஆய்வைக் கண்டு அறிஞருலகம் பாராட்டி மகிழ்ந்தது. 'செஞ்சொற் கொண்டல்' என்னும் புலவர் பாவாணரைப் பாடுகிறார்:

*"செந்தமிழ்ச் சீயம் ! சிந்தனைக் கூர்வாள் !*
*முந்தும் மொழியியல் மூத்த மறவன் !*
*உயிரும் உணர்வும் ஒண்டமிழாக*
*அயிர்ப்பின்றி வாழ்ந்த அயர்விலாப் புலவன்*
*'தமிழே முதன்மொழி ! தமிழரே முதலோர்' –*
*அமிழ்தென உண்மையை அனைவரும் அறிய*
*முழங்கிய அறிஞர் ! முழுதும் தமிழாய்*
*வழங்கிய காவலன் !*

ஆம் புலவர் கூறியது அனைத்தும் உண்மை ! பாவாணரது அகரமுதலி ஆய்வு தமிழையும் தமிழனையும் பற்றியது ! சொல்லும் பொருளும் இயைந்து நடந்து எழில்மிக்க சோலையாகத் திகழும் செந்தமிழ்ப் பூங்காட்டில் 'வேராய்வு' என்னும் தேனெடுத்து நமக்குத் திகட்டாமல் தந்தவர் மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர், அவர்களாவர் ! பன்மொழிப் புலவராகவும் பல்வகைக் கலையறிவு படைத்தவராகவும் விளங்கினார். அத்தகைய 'சொல்லாய்வுச் செம்மல்' காட்டிய வழியில் சொற்பொருளாய்வு செய்து தற்போது வெளிவரும் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் எட்டாம் மடலத்தின் இரண்டாம் பகுதி செவ்விய முறையில் வெளிவருகின்றது !

இம்மடலத்தில் அமைந்துள்ள சொற்களின் விரிவான விளக்கங்களும் அவற்றிற்கேற்ற படங்களும் இம்மடலத்தின் விரிவையும் அகலத்தையும் ஆழத்தையும் காட்டுவதாக அமைந்துள்ளன. எடுத்துக்காட்டாகப் பாவாணர் கூறிய விளக்கங்களை ஒரு சொல் விளக்கம் மூலம் இங்கே காணலாம்.

விடை[9] *viḍai*, பெ.(n.) 1. எருது (பிங்.); bull *"பீடுடைய போர்விடையன்" (தேவா.539, 2). "தோடுடைய செவியன் விடையேறியோர்" (தேவா.)* 2. எருது ஓரை (இடபவிராசி) (பிங்.); taurus of the zodiac. 3. எருமைக்கடா; buffalo bull. *"மதர்விடையிற் சீறி" (பு.வெ.7, 14).* 4. மரையின் ஆண்; male of the bison. *"மரையான் கதழ்விடை" (மலைபடு.331).* 5. ஆட்டுக்கடா; ram. *"விடையும் வீழ்மின்" (புறநா.262).* 6. வெருகு (தொல்.பொ.623, உரை); tom-cat. 7. குதிரை (யாழ்.அக.); horse.

கூடற்கேற்ற நிலையில் எல்லா உயிரினங்களும் அதற்கேற்றவாறு பருத்திருத்தல் இயல்வு. இதனாலேயே, ஆடு மாடு சில விலங்கினங்களும் கோழி மயில் முதலிய பறவையினங்களும் பருத்த இளமை நிலையில் விடையெனப்படும். (த.வ.பக்.46).

விடைத்தல் = விம்முதல், பருத்தல், விறைத்தல், செருக்குதல்.

விலங்கினத்தில் பெரும்பாலும் ஆண் பருத்திருப்பதால், விடை என்னும் சொல் விலங்கின் ஆண்பாலை உணர்த்தும்.

*விடை → விடலை = இளங்காளை, காளை போன்ற மறவன், பாலைநிலத் தலைவன்.*

விடலை = L. Vitula Gk. italos-skt. vatsa.

விடை என்பது விலங்கினத்தின் ஆண்பாலைக் குறிக்கும் பொதுச் சொல்லாயினும், வழக்கு மிகுதிபற்றிச் சிறப்பாகக் காளையையே உணர்த்தும்.

வடவர் காட்டும் மூலம் வ்ருஷ் (மழைபெய்) என்பதே. மழைக் கருத்தினின்று, ஆண்மைக் கருத்தை இருவேறு வகையில் கடுகளவும் பகுத்தறிவிற்கொவ்வாதவாறு வலிந்து வருத்தி யிருக்கின்றனர்.

வ்ருஷ் = மழைபெய் (இ.வே.) மழைபோல் அம்பைப் பொழி, ஆண்மைகொள், பிறப்பிப்பு ஆற்றல் பெறு.

வ்ருஷன் = (ஒருகால், முதலில் பெய்கின்ற, தெளிக்கின்ற, சினைப்பிக்கின்ற) ஆண்மையுள்ள வலிமையுள்ள, மைந்துள்ள (இ.வே.) ஆடவன், ஆண், ஆண்விலங்கு, காளை, ஆண்குதிரை, தலைவன்.

*வ்ருஷ = ஆடவன், ஆண், கணவன், ஆண் விலங்கு, காளை, விடையோரை, தலைவன், தலைசிறந்தது.*

வ்ருஷப(bh.) = வ்ருஷன் (இ.வே.)

வ்ருஷப–ருஷப = காளை (இ.வே.)

வ்ருஷப என்பதன் முதற்குறையே ருஷப என்பது. ஆயினும் வடவர் அதுவந்த வழியை அறியாமலோ, வடசொல்லாகக் காட்டல் வேண்டி வேண்டுமென்றோ, ருஷ்$^2$ என்பதை ருஷப என்னும் வடிவிற்கு மூலமாகக் காட்டுவர்.

ருஷ்$^2$ = செல், இயங்கு; குத்து, கொல்; உந்து, தள்.

விடை என்னும் சொல்லின் திரிபாதலாலேயே, வ்ருஷ என்பதில் வகரம் உள்ளது. ஆயின், வ்ருஷ் (மழைபெய்) என்னுஞ் சொல்லொடு அதைத் தொடர்புபடுத்தி உத்திக் கொவ்வா முறையில் பொருள் தொடர்பு காட்டினர். அதனோடமையாது, ருஷப என்னும் முதற்குறைத் திரிபையும் வேறுசொல்லாகக் கொண்டு அதற்கும் பொருள் பொருந்தா முறையிற் பொருள் பொருத்தினர்.

'விடை' என்பது கொச்சை வடிவில் 'விட' என்று நிற்கும். இடையின விடைச் செருகல் வழக்கப்படி வி → வ்ரு என்றும், மெய்த்திரிபு மரபுப்படி ட → ஷ என்றும், திரிந்தனவென உண்மையறிக. (வ.மொ.வ.89–90).

*[விள் → விடு → விட → விடை (சு.வி.பக். 17]*

மேலும் கூறுவதென்றால் 'வா' என்னும் வினைச்சொல் வரலாற்றைப் பாவாணர் கூறியவாறு தொகுத்துள்ளதும் 'வாகைத்திணை' விரிவைத் தொகுத்துள்ளதும், பல்வேறு மூலிகைப் பெயர்களும் அவற்றின் பயன்களும் காட்டப்பட்டுள்ளதும், வாய்ச்செய்கையொலிச் சொற்களைத் தொகுத்துள்ளதும், வாழ்த்துரை வகைகளைத் தொகுத்துத் தந்துள்ளதும், வாழை வகைகளைத் தந்துள்ளதும், வினைச்சொல் வகைகளைக் காட்டியுள்ள வகைமையும் வீணை பற்றிய விளக்கமும், வேர் விளக்கங்களும் 'தமிழே உலக முதன்மொழி, தமிழனே உலக முதல் மாந்தன்' என்ற மொழிஞாயிறு தேவநேயப் பாவாணரின் முழக்கத்திற்கு அணி சேர்ப்பதாக அமைகின்றன.

மேலும் ஆங்காங்கே விரிவாக எடுத்துக் காட்டியுள்ள வண்ணப்பட விளக்கங்களும் இம்மடலத்தின் பொலிவுக்கு வலுச்சேர்க்கின்றன.

தமிழ் வளர்ச்சிக்குப் பல்லாற்றானும் ஊக்கம் அளித்து வரும் நமது மாண்புமிகு முதலமைச்சர் அவர்களுக்கு எனது நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இந்நூல் வெளிவர அரும்பாடுபட்ட அனைத்துப் பதிப்பாசிரியர்கள், உதவிப் பதிப்பாசிரியர்கள், பகுதிப் பொறுப்பாளர், தொகுப்பாளர்கள் உள்ளிட்ட அனைவரையும் மனதாரப் பாராட்டுகிறேன்.

7/3/2007

து. இராசேந்திரன்

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## வா

**வா**[1] *vā*, வகர மெய்யும் அகரத்தின் நெட்டுயிரும் சேர்ந்து பிறக்கும் உயிர்மெய்யெழுத்து; the compound of வ் and ஆ.

*[வ் + ஆ]*

கீழுதடு மேல்வாய்ப் பல்லைத் தொட்டிறங்குவதாற் பிறப்பது. வா.

**வா**[2]**–தல்** *vā-*, செ.கு.வி. (v.i.) 1. வருதல்; to come. *"தருசொல் வருசொல் ......தன்மை முன்னிலை" (தொல்.சொல்.29).* 2. நேர்தல்; to happen. *"வருப வந்துறுங்க ளன்றே" (சீவக.509).* 3. உண்டாதல்; to come into being. *"நலம் வர நாடி" (பு.வெ.ஒழிபு.9).* 4. பிறத்தல்; to be born. *"அந்தநன் மரபினில்... சந்தனு... வந்தனன்" (பாரத. குருகுல.33).* 5. மனத்துப் பதிதல்; to be known, understood, comprehended. *"அந்தப் பாடம் உனக்கு வந்ததா?".* 6. நன்கறியப்படுதல்; to become crystal clear, to be attained, as a language, a science. *"அவனுக்கு இலக்கணம் வரும்".* 7. முற்றுப்பெறுதல்; to be completed, finished. *"ஸ்ரீமான் செய்ததெல்லாம் நன்றாய் வருங்காண்" (ஈடு.7, 9, 9).* 8. இயலுதல்; to be able. *"அது என்னாற் செய்ய வாராது".* 9. மிகுதல்; to surplus, to abound, increase. *"அணிவரு பூஞ்சிலம்பு" (பு.வெ.12, பெண்பாற்.17).*

தெ. ரா; க., து. பா; ம. வா.

'வா' என்னும் வினைச்சொல் வரலாறு:

வள் → வர் → வார் → வ. வர் → வரு. சொல்லாக்கத்தில் ட, த, ல, ழ, ள ஐந்தும் ரகரமாகத் திரியும். அத்திரிவில் லகரளகரம் பேரளவும், அவ்விரண்டனுள்ளும் ளகரம் பெரும்பான்மையும் ஆகும்.

எ – டு:

ட – ர : கடு → கடி → கரி. படவர் → பரவர்.

த – ர : விதை → விரை. ல – ர : உலவு → உரவு, குலவை → குரவை, குதில் → குதிர், பந்தல் → பந்தர்.

ழ – ர : புழை→புரை.

ள–ர : அள் → அர் → அரு → அருகு. கள் → கர் → கரு, சுள் → சுர், தெளி → தெரி, நீள் → நீர், பிள் → பிர் → பிரி, முள் → முர் → முரு → முருகு (இளமை), விள் → விர் → விரி.

முதற்காலத்தில் முதனிலையாக வழங்கி வந்த சில வினைச் சொற்கள் வழக்கற்றுப் போனதினால், இன்று அவற்றிற்குத் தலைமாறாக அவற்றின் தொழிற் பெயர்களே தமித்தும் துணைவினையொடு கூடியும் வழங்கி வருகின்றன.

எ – டு:

| முதனிலை | முற்காலப் புடைபெயர்ச்சி | இக்காலப் புடைபெயர்ச்சி |
|---|---|---|
| நகு | நக்கான் | நகைத்தான் |
| தள் | தட்டான், தட்கின்றான், தட்பான், | தளைத்தான், தளைக்கின்றான் தளைப்பான் |
| கள் | கட்டான், கட்கின்றான், கட்பான் | களவுசெய்தான், களவு செய்கின்றான், களவு செய்வான். |

களவாண்டான், களவாள்கின்றான், களவாள்வான்; களவாடினான், களவாடுகின்றான், களவாடுவான்; என்பனவும் தொழிற்பெயர் துணை வினை கூடி முதனிலையாகிப் புடை பெயர்ந்தனவே. ஆள், ஆடு என்பன துணை வினைகள், களவுபன், களவடி, களவுகாண் என்பனவும் துணைவினை கொண்டனவே.

இக்காலத்தில் 'வளை' என்று வழங்கிவரும் முதனிலை முற்காலத்தில் 'வள்' என்றே வழங்கிற்று.

வள்ளுதல் = வளைதல். வள்வு = வளைவு. வள்ளம் = வளைவு. வட்டம், வளைந்த அல்லது வட்டமான பொருள் (தொழிலாகு பெயர்). வள்ளி = வளைந்த கொடி.

ஒருவன் தன் உறைவிடத்தினின்று அல்லது இருப்பிடத்தினின்று ஓரிடத்திற்குப் போனபின், அங்கிருந்து உறைவிடத்திற்கு வருவது முன் பின்னாகத் திரும்பியே யாதலால், திரும்பற் கருத்தினின்றே வருகைக் கருத்துப் பிறந்தது. அதனால், திரும்பற் பொருட் சொல்லினின்றே வருகைப் பொருட்சொல் தோன்றிற்று.

திரும்புதல் = வளைதல், திசைமாறி நோக்கி நிற்றல், மீளுதல்.

மீளுதல் = திரும்பி வருதல், காலையிற் சென்று மாலையில் திரும்பினான் என்றால், திரும்பினான் என்பது திரும்பி வந்ததைக் குறித்தல் காண்க.

வலமாகவோ இடமாகவோ திரும்புதலுங் கூடுமேனும், ஒருவன் தான் போன இடத்தினின்று புறப்பட்ட இடத்திற்குத் திரும்பி வருவது முன்பின்னாகத் திரும்பியே யென்பது, சொல்லாமலே விளங்கும்.

திரும்பு என்னும் சொற்போன்றே, வளைதலைக் குறிக்கும் வேறுசில சொற்களும் மீளுதலைக் குறிக்கின்றன.

திரிதல் = வளைதல், மீளுதல். மடங்குதல் = வளைதல், மீளுதல். மறிதல் = வளைதல், மீளுதல்.

*"திரிதல் மீளுதல்" (பிங்.7, 202).*
*"மறிதர லென்பது மீளுத லாகும்"(திவா.9)*
*"மறிதரல் திரிதரல் மடங்கல் மீளுதல்"*
*(பிங்.7 : 444)*

அளைமறிபாப்பு என்னும் பொருள்கோட் பெயரிலும், மறியென்னுஞ் சொல் வளைதலையும் திசைமாறித் திரும்புதலையுங் குறித்தல் காண்க.

ஆங்கிலத்தில் வளைதலை அல்லது திரும்புதலைக் குறிக்கும் turn என்னும் சொல், re என்னும் முன்னொட்டுப் பெற்றுத் திரும்பி வருதலைக் குறிக்கின்றது. He never turned up this side என்னும் தொடரியத்தில், அச்சொல் up என்னும் முன்னீட்டொடு கூடி, வருகைப் பொருளையும் உணர்த்துகின்றது.

இதுகாறுங் கூறியவற்றால், 'வா' என்னும் வினைச்சொல் 'வளைதலைக் குறிக்கும் 'வள்' என்னும் முதனிலையினின்றே திரிந்துள்ளமை பெறப்படும்.

இற்றை முதனிலையான வளையென்னுஞ் சொல்லும், வளைய வளைய என்னும் நிகழ்கால வினையெச்ச வடுக்கிலும், வளைத்து வளைத்து என்னும் இறந்தகால வினையெச்ச வடுக்கிலும், திரும்பத் திரும்ப என்னும் பொருள் தோற்றுவித்தலைக் காண்க.

இதனால், கீழ்ப்படை முதனிலையான வள் என்னுஞ் சொல்லும், முற்காலத்தில் இப் பொருளுணர்த்தினமை உய்த்துணரப்படும்.

வள் → வர் → வார் → வா →வ. வர் → வரு. இனி, வள் → வாள் → வார் என்றுமாம். வாள் → வாளம்= வட்டம், வாள் → வாளி = வட்டமாயோடுகை.

வார் → வர் → வரு.

தமிழ் வினைச்சொற்களின் முதனிலை பெரும் பாலும் ஏவலொருமை வடிவிலேயே யுள்ளது. அவற்றுட் சிலவற்றில் மட்டும், ஏவலொருமை வடிவினின்று முதனிலை வேறுபட்டுள்ளது. அவ்வேறுபாடு மிக்க வினைகளுள் ஒன்று 'வா' என்பது, அதன் ஆட்சியிலும் புடைபெயர்ச்சியிலும், வா, வார், வர், வ, வரு என்னும் ஐவேறு வடிவுகள் காணப்படுகின்றன.

ஏவல் வடிவு, பொதுவாக முதனிலையளவில் ஒருமை பன்மையிரண்டிற்கும் பொதுவாகவே யிருக்கும். ஆயின், வருதல் வினையில் அவ்விரண்டும் வேறுபட்டுள.

| ஒருமை | பன்மை |
|---|---|
| வா | வாரும் (வார்+உம்) |
| | வாருங்கள் (வார்+உம்+கள்) |
| | வம்மின் (வரு–வர்–வ + மின்) |

பாரும் என்னும் பன்மை யேவலிற் பார் என்பது முதனிலையாயிருத்தல் போன்று, வாரும் என்பதில் வார் என்பதே முதனிலை யென்பது தேற்றம். ஆதலால், வார் என்னும் வடிவினின்றே ஏனை நால்வடிவுகளுந் திரிந்திருத்தல் வேண்டும். மேற்குறித்த ஐ வடிவுகளின் ஆட்சியும் வருமாறு.

1. வார்

வாரானை (வருகை) என்னும் வினைப்பெயர்; வாராமை என்னும் எதிர்மறை வினைப்பெயர்; வாரான், வாராதான் என்னும் எ.ம.வினையாலணையும் பெயர்கள்; வாரான் என்னும் எ.ம.வினைமுற்று; வாராய், வாரும், வாரீர் என்னும் உடன்பாட்டு ஏவல் வினைகள்; வாரல், வாராதி, வாராதே, வாராதீர், வாராதிர், வாரன்மின் என்னும் எ.ம. ஏவல் வினைகள்; வாரல், வாரற்க என்னும் எ.ம.வியங்கோள் வினைகள்; வாரா,

வாராத என்னும் எ.ம.பெயரெச்சங்கள்; வாராது, வாராதே, வாராமை, வாராமல், வாராமே, வாராக்கால், வாராவிடின் என்னும் எ.ம. வினையெச்சங்கள் ஆகியவற்றில் வார் என்னும் வடிவம் நிலைத்துள்ளது.

**2. வா**

வா என்னும் ஒருமையேவல் வினையில் மட்டும் வா என்னும் வடிவம் நிலைத்துள்ளது.

**3. வ**

வந்தான் என்னும் இறந்தகால வினைமுற்று; வந்தவன், வந்தான் என்னும் இ.கா. வினையாலணையும் பெயர்கள்; வந்த என்னும் இ.கா.பெயரெச்சம்; வந்து, வந்தால், வந்தக்கால், வந்தவிடத்து என்னும் வினையெச்சங்கள் ஆகியவற்றில் வ என்னும் வடிவம் நிலைத்துள்ளது. வம்மின், வம்மோ என்னும் பன்மை யேவல் வினைகள் வருமின், வருமோ என்பவற்றின் திரிபாயே யிருத்தல் வேண்டும்.

ஒருசில முதனிலைகளின் நெடின்முதல் இறந்தகால வினையிற் குறுகும்.

ஒ.நோ. தா–தந்தான்
சா – (சத்தான்) – செத்தான்
நோ – நொந்தான்
காண் – கண்டான்

**4. வர்**

வரவு, வரல், வரத்து என்னும் வினைப் பெயர்கள்; வராமை என்னும் எ.ம.வினைப்பெயர்; வராதவன், வராதான் என்னும் எ.ம. வினையாலணையும் பெயர்கள்; வரல், வரேல், வராதி, வராதே, வராதிர், வராதீர், வரன்மின் என்னும் எ.ம.ஏவல் வினைகள்; வரல், வரற்க என்னும் எ.ம.வியங்கோள் வினைகள்; வரா, வராத என்னும் எ.ம. பெயரெச்சங்கள்; வர என்னும் நி.கா. பெயரெச்சம்; வரின் என்னும் எ.கா. பெயரெச்சம்; வராது, வராமை, வராமல், வராமே, வராக்கால், வராவிடின் என்னும் எ.ம. வினையெச்சங்கள் ஆகியவற்றில் வர் என்னும் வடிவம் நிலைத்துள்ளது.

இதை வரு என்று கொள்ளவும் இடமுண்டு.

**5.வரு**

வருதல், வருகை என்னும் வினைப்பெயர்கள்; வருமை (மறுபிறப்பு) என்னும் பண்புப்பெயர்; வருகின்றவன், வருகின்றான், வருமவன் (வருபவன்), வருவான் என்னும் வினையாலணையும் பெயர்கள்; வருகின்றான், வருவான் என்னும் வினைமுற்றுகள்; வருதி, வருதிர் என்னும் ஏவல் வினைகள்; வருக, வருதல் என்னும் வியங்கோள் வினைகள்; வருவி, வருத்து என்னும் பிறவினைகள்; வருகின்ற, வரும் என்னும் பெயரெச்சங்கள்; வருவாய் என்னும் வினைத் தொகை ஆகியவற்றில் வரு என்னும் வடிவம் நிலைத்துள்ளது.

இற்றைத் தமிழில் வா என்று திரிந்துள்ள அல்லது ஈறு கெட்டுள்ள வார் என்னும் மூலத்தமிழ் முதனிலை அல்லது ஒருமை யேவல், பிற திரவிட மொழிகளிற் பின்வருமாறு திரிந்துள்ளது.

வா – கோத்தம், கோலாமி.
வா, வரி(க) – மலையாளம்
வா, வாமு, வ – குய் (kui)
வா, வர் – கடபா.
வரா, வரட் – கோண்டி (g)
வர் – நாய்க்கீ.
வெர் – பர்சி (J)
பா (b) –கன்னடம், குடகு.
ப, பர் (b) - பிராகுவி (Brahui).
பர் (பினி), பா (b) – துளு.
பர் (b) - மாலதோ
பர்னா (b) - குருக்கு (ஓராஒன்).
ரா – தெலுங்கு.
ராவா – கொண்டா.
போ – துடவம் (Toda)

இத் திரிபுகளெல்லாம் மேற்காட்டிய தமிழ்த் திரிபுகளுள் அடங்கும்; அல்லது அவற்றால் விளக்கப்படும். இவற்றுள் முதன்மையானவை வா – பா (b), வர் → வ்ரா → ரா. வா–போ என்னும் மூன்றே.

1. கன்னடத்தில் வகரமுதற் சொற்கள் பெரும்பாலும் எடுப்பொலிப் பகரமுதலவாக (b) மாறிவிடுகின்றன.

எ–டு:

| தமிழ் | –கன்னடம் | தமிழ் | – கன்னடம் |
|---|---|---|---|
| வாங்கு | பங்கு (nk) | வழங்கு | பழகு(g) |
| வட்டம் | பட்ட | வழலிக்கை | பழல்கெ |
| வடுகு | படகு (g) | வழி | பளி |
| வணங்கு | பக்கு (gg) | வன்னம் | பள்ள |
| வயல் | பயல் | வளர் | பனெ |
| வயலை | பயலு | வளா | பளா(bh) |
| வயிறு | பசிறு | வளை | பளெ |
| வரை | பரெ | வற்று | பத்து |
| வலம் | பல | வற | பறு |
| வல்லாளன் | பல்லாள | வரகு | பரகு |

| | | | |
|---|---|---|---|
| வலை | பலெ | வறிது | பறிது |
| வாவல் | பாவல் | வறுகு | பறுகு(g) |

இங்ஙனமே சில ஏனைத் திரவிட மொழிகளிலும்.

2. தெலுங்கிற் சில சொற்களின் முதலீரெழுத்துகள் முன்பின்னாக முறைமாறி விடுகின்றன. அன்று, முதலெழுத்தாகிய உயிர்க்குறில் நீண்டு விடுகின்றது.

எ-கா:

| தமிழ் | தெலுங்கு | தமிழ் | தெலுங்கு |
|---|---|---|---|
| அறை | ராய் | உகிர் | கோரு (g) |
| இலது | லேது | உள் | லோ |
| உரல் | ரோலு | எழு | லேய் |

வரை (எழுது) என்னுஞ்சொல் இம்முறையில் வராயு என்று திரிந்தபின், ராயு என்று முதன்மெய் கெட்டும் வழங்குகின்றது. இவ்வகையினதே வர்-வ்ரா-ரா (வா) என்னுந் திரிபும்.

3. துடவ மொழியில் பல சொற்களின் ஆகார முதல் ஒகார முதலாகத் திரிந்துள்ளது.

| தமிழ் | துடவம் | தமிழ் | துடவம் |
|---|---|---|---|
| ஆடு | ஓட் | நாய் | நோய் |
| ஆறு | ஓற் | நாவு | நோவ் |
| கா | கோவ் | நான்கு | நோங்க் |
| காண் | கோண் | பாசி | போதி |
| காய் | கோய் | பாம்பு | போப் |
| கால் | கோல் | மார் (மார்பு) | மோர் |
| தாய் | தோய் | மான் | மோவ் |
| தான் | தோன் | வாய் | போய் |
| | | வாழ் | போத்க் |

ஆ-ஓ திரிபும், வ-ப திரிபும் சேர்ந்து வாய்-போய் என்று திரிந்தது போன்றதே, வா-போ திரிபும்.

குமரிநிலத் தமிழே திரவிட மொழிகட் கெல்லாந் தாயாதலின், இக்காலத் தமிழிலும் ஒருசில சொற்கள் திரிந்திருப்பினும், அவற்றின் திருந்திய வடிவத்தையும் ஆணிவேரையும் அறிந்துகொள்ள, போதிய சான்று அத் தமிழிலேயே உள்ளதென்று அறிதல் வேண்டும்.

*"எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே"*
(தொல்.பெய.1.).

*"பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும்*
*சொல்லி னாகும் என்மனார் புலவர்."*
(மேற்படி.2.)

*"தெரிபுவேறு நிலையலும் குறிப்பிற் றோன்றலும்*
*இருபாற் றென்ப பொருண்மை நிலையே."*
(மேற்படி.3.)

*"மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்றா"*
(தொல்.96.)

*"பயிலா தவற்றைப் பயின்றவை சார்த்தித்*
*தத்தம் மரபிற் சென்றுநிலை மருங்கின்*
*எச்சொல் லாயினும் பொருள்வேறு கிளத்தல்."*
(மேற்படி 1.)

*"முன்னும் பின்னும் வருபவை நாடி*
*ஒத்த மொழியாற் புணர்த்தன ருணர்த்தல்*
*தத்தம் மரபிற் றோன்றுமன் பொருளே."*
(தொல்.பெய.91.)

இங்ஙனம் வேறெவ்வகை மொழியிலுங் கூறப்படவில்லை. கூறவும் இயலாது, பிறமொழிகள் திரிமொழிகளாதலான். அத்தகைத் தன்னே ரில்லாதது இயன்மொழியான தமிழே.

வா என்னும் சொல்லிற்கு எதிர்ச்சொல் போ என்பது. அது புகு என்பதன் திரிபு. புகுதல் உள்ளே செல்லுதல். வருதல் உள்ளிருந்து வெளியே திரும்பி வருதல். இவ் விழை இவ் ஊசியின் காதிற்குள் போகுமா என்னும் வழக்கை நோக்குக. வணங்குதல் என்னுஞ் சொல், முதலில் உடம்பு வளைந்து அல்லது தலை குனிந்து கும்பிடுதலையே குறித்தது. இன்றோ. பொதுவாகக் கைகுவித்தலை மட்டுங் குறிக்கின்றது. இங்ஙனமே, முன்பு ஒன்றன் உட்புகுதலைக் குறித்த போ என்னுஞ் சொல், இன்று ஓரிடத்திற்குச் செல்லுதலை மட்டுங் குறிக்கின்றது. தொடக்கத்தில், ஒன்றைத் துளைத்து ஊடுருவிச் சென்றதைக் குறித்த துருவுதல் என்னும் சொல், இன்று 'நாடு துருவுதல்' 'வான் துருவுதல்' என்று திறந்த வெளியிடத்தைக் கடந்து செல்லுதலையுங் குறித்தல் காண்க. இதுபோன்றே, ஓரிடத்தினின்று திரும்பி வருதல் என்று முதற்கண் பொருள்பட்ட வார்தல் அல்லது வருதல் என்னும் வினைச்சொல், இன்று வருதல் என்றுமட்டும் பொருள் படுகின்றது.

இன்றும், தன் இடத்தினின்று புறப்படும் ஒருவன் தன்னையே நோக்கிச் செல்லின், போய் வருகிறேன் என்றுதான் சொல்வான். வந்து போகிறேன் எனின், அஃது அயன்மனையிற் சொல்வதாயிருத்தல் வேண்டும்; அல்லது தானே மீண்டும் தன்மனைக்கு வந்து போதலைக் குறித்ததாகல் வேண்டும்.

ஒருவனால், தன் இடத்தினின்று நீங்குவ தெல்லாம் செல்லுதல் வினையாலும் தன் இடத்தைச் சேர்வதெல்லாம் வருதல் வினையாலும் குறிக்கப்படுதலின், நீ வருக, அவன் வருக என்று, முன்னிலையானும் படர்க்கையானுமாகிய பிறர்

தன்னிடம் சேரும் வினையும் வருகை வினையாலேயே குறிக்கப்படும். அவ்வீரிடத்தாரும் அத்தன்மையானை முன்னிலைப்படுத்தின், நான் வருகிறேன், நான் வருகிறேன் என்று தனித்தனி சொல்லலாம். நான் செல்கிறேன் எனின், அது படர்க்கையானின் இடத்தை நோக்கியதாகவே யிருத்தல் கூடும்.

இனி, வார் அல்லது வா என்னும் வினைச்சொல் பல்வேறு வடிவில் திரவிட மொழிகளில் வழங்குவது மட்டுமன்றி, மேலை ஆரிய மொழியாகிய இலத்தீனிலும், சென்று மூலத்தை யொட்டி வழங்குவது வியக்கத் தக்கதாகும்.

ளகரமெய் தமிழிலும் திரவிடத்திலும் ணகரமெய்யாகவுந் திரியும்.

எ-டு: தெள்-தென்-தேன், தெளிவு, தேறல் என்னும் சொற்களை நோக்குக.

கொள்-தெ. கொன், கொனு, தெ. கொனி = கொண்டு.

வள்-வன்-வென்-L. ***veni*** to come. Veni என்னும் மூலத்தினின்று, advent, avenue, circumvent, convene, event, intervene, invent, prevent, revenue, subvent, supervene, venue முதலிய சொற்கள் திரிந்துள்ளன. இவற்றுள் ஒவ்வொன்றினின்றும் சில பல சொற்கள் கிளைத்துள்ளன.

எ-டு: convene-convent, conventual, convention, conventional, conventionary, conventicle, convenient, convenience முதலியன.

கலிபோர்னியாப் பல்கலைக்கழகச் சமற்கிருத மொழிநூற் பேராசிரியர் எம்.பி. எமெனோ (M.B. Emeneau) திரவிட மொழிநூலும் இன நூலும் நாட்டுப்புறக் கதைகளும்பற்றி எழுதி, அண்ணாமலை பல்கலைக் கழகம் வெளியிட்ட கட்டுரைத் தொகுதியில் (Collected Papers) 6ஆம் கட்டுரை 'வா' 'தா' என்னும் திராவிட வினைச்சொற்கள் (The Dravidian Verbs 'come' and give) என்பது.

அதில், அவர் தமக்குத் தமிழிற் சிறப்பறிவின்மையாலும் தமிழ்ப் பொத்தகங்கள் கிட்டாமையாலும் ஈ, தா, கொடுவென்னும் சொற்களின் நுண்பொருள் வேறுபாட்டைத் தெரிந்துகொள்ள முடியவில்லை யென்று எழுதியுள்ளதற் கொப்பவே, 'வா', 'தா' என்னும் வினைச்சொற்கள் பற்றிய அவர் ஆராய்ச்சி முடிபுகளும் உள்ளன.

அவை வருமாறு:

1. வ, த என்பன மூலத்திரவிட அடிகள் (Proto Dravidian stems).

2. அ, அர் என்பன அவ்வடிகள் தன்மை முன்னிலை வினைகளாகும் போது சேர்க்கப்படும் இடைமாற்ற ஈறுகள் (transition suffixes).

3. அ உடன்பாட்டு வடிவுகளிலும், அர் எதிர்மறை வடிவுகளிலும் ஆளப்பட்டன.

4. அ+அ=ஆ என்பது சொல்லொலியன் மறுநிலை மாற்று (Morphonemic alternation).

5. வ, வந்த் என்பன வா என்னும் வினைக்கும், த, தந்த் என்பன தா என்னும் வினைக்கும், உரிய இணையடிகள்.

6. பழந்தமிழில் வார் என்றிருந்த எதிர்மறையடி புதுத் தமிழில் வர் என்று குறுகிற்று.

7. குய்மொழி திரவிட மொழியாராய்ச்சிக்குத் தமிழினும் மிகத் துணைபுரிவது.

இவற்றின் பொருந்தாமையை ஈண்டு விளக்கின் விரியும். அறிஞர் கண்டுகொள்க.

தமிழின் தொன்மை முன்மை தாய்மை தலைமைத் தன்மைகளையும் வேர்ச்சொல் விளக்கத்தையும் தமிழரே அறியாதிருக்கும் போது, அயன்மொழி பேசும் வெளிநாட்டார் சமற்கிருத அடிப்படையில் திரவிட மூலமொழியின் அடிமுடி காண்பது, நால்வர் பாராதார் நால்வாய் கண்ட கதையே யொக்கும். (வேவ.க.4, பக்.110-118).

**வா³** *vā*, பெ.(n.) தாவுகை; leaping, galloping. *"வாச்செல விவுளியொடு" (புறநா.197).*

*[வாவு → வா]*

**வா⁴** *vā*, **18** செ.கு.வி. (v.i.) **1.** பெயர்தல்; come towards the speaker or the place mentioned by the speaker. *"அவர் என் அருகில் வந்து நின்றார்".* 2. பெய்தல்; come down. *"வானத்தைப் பார்த்தால் மழை வரும் போலிருக்கிறது".* 3. பாய்தல் அல்லது ஓட்டம் உடையதாக இருத்தல்; come, be restored. *"இரண்டு நாட்களாகக் குழாயில் தண்ணீர் வரவில்லை".* 4. கிடைத்தல்; arrive, come get. *"இன்று தான் எனக்கு ஊரிலிருந்து*

*பணம் வந்தது".* 5. போடப்பட்டிருத்தல்; run. *"மின்சாரக் கம்பி மொட்டை மாடியிலிருந்து வீட்டின் பின்பக்கமா வருகிறது".* 6. ஏற்படுத்தப்படுதல்; come up. *"அணுமின் நிலையம் வருவதை எதிர்த்துப் போராட்டம்".* 7. உட்படுதல்; feature, appear. *"ஏன் இந்தச் செலவு எந்தக் கணக்கிலும் வரவில்லை?"* 8. எழுதல், தோன்றுதல்; feel like. *"அவனுக்கு அடக்க முடியாமல் சிரிப்பு வந்தது".* 9. உண்டாதல்; get the feeling of *"இதைச் செய்தால் ஏதாவது சிக்கல் வருமா?"* 10. இயலுதல்; be able to *"அவருக்கு ஆங்கிலம் பேச வரும்".*

வா[5] *vā,* து.வி. (ad v.) ஒரு செயல் கடந்த காலத்தில் அல்லது சற்று முன்பு தொடங்கப்பட்டுக் குறிப்பிட்ட கால எல்லை வரை தொடர்வதையும் அல்லது இனியும் தொடரும் என்பதையும் காட்டப் பயன்படுத்தப் படும் துணை வினை; an auxiliary used to indicate the period during which the action is or has been going on. *"நீங்கள் கொடுத்த பொத்தகத்தைப் படித்து வருகிறேன்".*

வா[6] *vā,* பெ.(n.) அத்தி; fig tree - Ficus glamerta.

வாக்கத்தமூலி *vākkatta-mūli*, பெ.(n.) இலுப்பை; mohwa tree - Bassia tatifolia

வாக்கம்[1] *vākkam*, பெ.(n ) சரக்கொன்றை; a tree with beautiful hanging yellow flowers - Cassia fistulla.

வாக்கம்[2] *vākkam,* பெ.(n ) நெய்தல் நிலத்தூர்; a place name of coastal region. கத்திவாக்கம், வில்லிவாக்கம்

*[பாக்கம் → வாக்கம். (செல்வி.75. ஆனி.534)]*

வாக்கல் *vākkal*, பெ.(n.) வடிக்கப்பட்ட சோறு; boiled rice from which conjee has been strained. *"கவைக்கதிர் வரகி னவைப்புறு வாக்கல்" (புறநா.215).*

கொலா. வாக்; தோட. பாக்ஸ்; க. பாகு; குட. பாக்; தெ., க. வாஞ்சு; கோண்ட். வாங்னா; குய். வாங்க; குவி. (பெ.பா.) வ்வான்காலி.

*[ஒருகா: ஆக்கு → வாக்கு → வாக்கல்]*

வாக்கன் *vākkaṉ*, பெ.(n.) வாக்குக் கண்ணன் (யாழ்.அக.) பார்க்க; see *vākku-k-kaṇṇaṉ.*

*[வாக்கு = வளைவு, ஒழுங்கின்மை.]*

வாக்காட்டு-தல் *vā-k-kāṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.) ஏய்த்தல் (யாழ்.அக.); to disappoint, to deceive.

*[ஒருகா. அவா + காட்டு → வாக்காட்டு-,]*

வாக்காமூலி *vākkā-mūli* , பெ.(n.) பொன்னூமத்தை; a variety of dhatura with yellow flowers.

*[வாக்கா + மூலி]*

வாக்கி *vākki,* பெ.(n.) மாறுகண்ணுள்ளவள் (யாழ்.அக.); squint-eyed woman.

*[வாக்கன் → வாக்கி (பெண்பால்)]*

வாக்கியேசம் *vākki-yēšam*, பெ.(n.) சிறு நீலி என்னும் மூலிகை; a plant small variety of indigofera sumatrana.

வாக்கில் *vākkil,* இடை.(part) 1. நிலையில்; in the course of doing. *"நின்ற வாக்கில் பேசிவிட்டுப் போய் விட்டான்".* 2. நேரத்தை அல்லது காலத்தை ஒட்டி; about, around. *"எப்போதும் ஐந்து மணிவாக்கில் வீடுதிரும்புவார்".*

**வாக்கு**[1] *vākku*, பெ.(n.) 1. திருத்தம்; perfection, correctness. *"வாக்கணங்கார், மணிவீணை" (சீவக.1473).* 2. திருந்திய வடிவு; refined form, shape. *"வாக்கமை கடுவிசைவில்" (கலித்.137).*

தெ. பாக; ம., து. வாக.

*[வகு → வாகு → வாக்கு]*

**வாக்கு**[2] *vākku*, பெ.(n.) 1. வளைவு; bend. *"கோட்டிய வில்வாக் கறிந்து" (நாலடி.395).* 2. ஒழுங்கின்மை (வின்.); irregularity.

*[வாங்கு → வாக்கு]*

**வாக்கு**[3] *vākku*, இடை. (part.) ஒரு வினையெச்ச விகுதி; a participial suffix, signifying purpose. *"கொள்வாக்கு வந்தான்" (தொல்.சொல்.231.உரை).*

**வாக்கு**[4]**-தல்** *vākku-*, 5 செ.குன்றாவி. (v.t.) வார்த்தல்; to pour. *"அடர் பொற்சிரகத்தால் வாக்கி" (கலித்.51).*

தெ. வாக; க. வாகு; **Ko.** va-k, **To.** Po-x; **Kod.** ba-k; **Kol.** va-ng; **Ga.** van(g); **Go.** *wāngānā*, **Kui.** *vānga*, **Kuwi.** (f) *vwāngali.*

**வாக்கு**[5] *vākku*, பெ.(n.) 1. பக்கம்; side, direction. *"இரண்டு கைவாக்கு மியங்கலிப்ப" (திருவிளை.தடாதகை.26).* 2. இயங்குதிசை; *'காயப்போட்ட துணி காற்றுவாக்கில் பறந்துவிட்டது' (உ.வ.) (செல்வி1.75, ஆனி 534).*

*[வகு → வக்கு → வாக்கு]*

**வாக்கு**[6] *vākku*, பெ.(n.) வகை; manner, nature. *"ஏன் இன்னும் ஒருவாக்கா யிருக்கிறாய்" (பிரதாப. விலா.105).*

**வாக்குக்கண்** *vākku-k-kaṉ*, பெ.(n.) மாறுகண் (வின்.); squint eye.

மறுவ. ஒன்றரைக் கண்.

*[வாக்கு + கண். வாக்கு = ஒழுங்கின்மை]*

**வாக்குக்கண்ணன்** *vākku-k-kaṉṉaṉ*, பெ.(n.) மாறுகண்ணுள்ளவன் (வின்.); squint-eyed person.

மறுவ. ஒன்றரைக் கண்ணன்

*[வாக்குக்கண் → வாக்குக்கண்ணன்]*

**வாக்குப்பசப்பி** *vākku-p-paśappi*, பெ.(n.) சதகுப்பை; the dill or sowa A. peucedanum graveloens.

*[வாக்கு + பசப்பி]*

**வாக்குவடிவு** *vākku-vaḍivu*, பெ.(n.) வடிவழகு; shapeliness. *'வாக்கு வடிவுடைய பெண்' (உ.வ.).*

*[வாகு → வாக்கு + வடிவு]*

**வாக்கெடு-த்தல்** *vākkeḍu*, 2 செ.கு.வி. (v.i.) தலைமயிர் வகிர்தல் (வின்.); to part the hair down the middle.

*[வாகு → வாக்கு + எடு-,]*

**வாகசம்** *vāgaśam*, பெ.(n.) பெரும்பாம்பு; a big snake.

**வாகடநூல்** *vāgaḍa-nūl*, பெ.(n.) மருத்துவ நூல்; medical science.

*[வாகடம் + நூல்]*

**வாகடபாரி** *vāgaḍa-pāri*, பெ.(n.) பச்சோந்தி; green lizard-chameleon.

*[வாகடம் + பாரி]*

வாகடம் *vāgaḍam-*, பெ.(n.) மருத்துவ நூல் (தக்கயாகப்.553, உரை); medical science, medical treatise.

*[வாகு + அடம்]*

வாகடமுறை *vāgaḍa-muṟai*, பெ.(n.) மருத்துவ நூலில் சொல்லிய முறை; according to medical science-officinal.

*[வாகடம் + முறை]*

வாகடமுறையற்ற *vāgaḍa-muṟai-y-aṟṟa*, பெ.(n.) நூல் முறை சாராத; unofficinal.

*[வாகடம் + முறையற்ற]*

வாகடர் *vagaḍar*, பெ.(n.) மருத்துவர்; physicians *"வாகடர் தங்களை யிப்பிணி யகற்றுதி ரெனவோடும்" (பிரமோத்.10, 15).*

*[வாகடம் → வாகடர்]*

வாகடவிதி *vāgaḍa-vidi*, பெ.(n.) மருத்துவ நூலிலுள்ள நெறிமுறைகள்; rules of Pharmacopoeia.

*[வாகடம் +* **Skt.** *விதி]*

வாகணை *vāgaṇai*, பெ.(n.) ஆற்றை அறுத்துச் செல்லும் நீரோட்டத்தைத் தடுக்கக் கட்டும் மூங்கில் முதலியவற்றாலான அணை (தஞ்.); groyne, wooden break water

*[வாகு + அணை]*

வாகம்[1] *vāgam*, பெ.(n.) சக்கரவாகப் பறவை; cakra bird *"வாகப் புள்ளுடன்.... அளியுஞ் சூழுமே" (அரிசமய. 2,4).*

வாகம்[2] *vāgam*, பெ.(n.) 1. செங்கீரை; a red leaf plant. 2. பலண்டுறுகவிடம்; a kind of arsenic. 3. புயம்; shoulder. 4. கோமேதகம்; one of nava-mani stone

வாகரம் *vāgaram*, பெ.(n ) கோணாய்; wolf.



வாகவி *vāgavi*, பெ.(n.) செங்கீரை; red leaf.

வாகன் *vāgaṉ*, பெ.(n.) அழகன்; fair or handsome man *"வாகனைக்கண் டுருகுதையோ" (குற்றா.குற.25).*

ம., து. வாக.

*[வாகு → வாகன்]*

வாகனப்பாலி *vāgaṉappali*, பெ.(n.) திருகு கள்ளி; milky spurge - Euphorbia tiruchalli.

வாகனா *vāgaṉā*, பெ.(n.) பனிப்பயறு; dew gram - Phaseolus aconitifolius.

வாகி *vāgi*, பெ.(n.) அழகி (வின்.); fair, handsome woman).

*[வாகு → வாகி]*

வாகிடி *vāgiḍi*, பெ.(n.) பெருமீன்வகை (மூ.அ.); porpoise

மறுவ. கடற்பன்றி.

வாகியம் *vāgiyam*, பெ.(n.) 1. புறம்; outer part, exterior. *"ஆப்பியந்தரமே வாகியமென்ன" (பி.வி.12).* 2. வெளி (வின்.); open, plain.

*[வாகு → வாகியம்]*

வாகினி *vāgiṉi*, பெ.(n.) பாதிரிமரம் (மலை.); yellow flowered fragrant trumpt-flower tree.

**வாகினீபதி** *vāgiṉī-pati*, பெ.(n.) 1. பெருங் கடல்; ocean. 2. படைத்தலைவன்; commander of an army.

*[வாகினி → வாகினீ + பதி]*

**வாகு[1]** *vāgu*, பெ.(n.) 1. அழகு (சூடா.); beauty. *"வாகாரிப மினாள்" (திருப்பு.135).* 2. ஒளி; light, brightness. *"இந்து வாகை" (திருப்பு. 399).* 3. ஒழுங்கு; niceness, fitness, orderliness, propriety. *"வாகா நியாய வட்டி வாங்காமல்" (பணவிடு.238) (யாழ்.அக.).* 4.திறமை; skill. *"வாகு பெறு தேர்வலவனை" (கந்தபு.மூன்றாம்.யுத்.70).* 5. தொட்டால்வாடி (அரு.அக.); a sensitive plant.

மறுவ: தொட்டாற்சிணுங்கி.

தெ. பாகு; ம., துளு. வாக.

*[வகு → வாகு]*

**வாகு[2]** *vāku*, பெ.(n.) 1. தோள் (பிங்.); arm, shoulder. *"வாகுப் பிறங்கல்" (இரகு. கடிம. 64).* 2. நேர்கோண முக்கோணத்தின் அடிக்கோடு (யாழ்.அக.); the base of a right-angled triangle. 3. பக்கம்; side, direction 4. கை; hand. *'அவருடைய கைவாகே தனி" (உ.வ.).*

ம. வாகு; தெ. பாகு; து. வாகு (g).

*[பாகு → வாகு]*

**வாகுசம்** *vāguśam*, பெ.(n.) 1. எள்; seasamon seed. 2. குப்பைக்கீரை; some rubbish greens. 3. கிளி; parrot.

**வாகுசி** *vāguśi*, பெ.(n.) கார்போகவரிசி; a fragrant seed - Psoralea corylifolia

**வாகுசிவிரை** *vāguśi-virai*, பெ.(n.) வாகுசி பார்க்க; see *vāguśi*.

*[வாகுசி + விரை]*

**வாகுடையாள்** *vāguḍaiyāḷ*, பெ.(n.) வாலுளுவையரிசி; seeds of intellect plant - Celastrus paniculata.

*[வாகு + உடையாள்]*

**வாகுதம்** *vāgudam*, பெ.(n.) ஒரு பறவை; a bird.

**வாகுபுரி** *vāgu-puri*, பெ.(n.) 1. தோள்வளை; armlet. *"வாகுபுரி வயங்க" (காளத்-உலா,151).* 2. முப்புரி நூல் (வின்.); sacred thread worn over the left shoulder.

*[வாகு + புரி] (செல்வி. '75 ஆனி, 532)*



**வாகுமாலை** *vāgu-mālai*, பெ.(n.) பந்தரிற் கட்டும் அணியழகுத் தொங்கல் (யாழ்.அக.); ornamental hanging in a pavilion.

*[வகு → வாகு + மாலை]*

**வாகுமூலம்[1]** *vāgu-mūlam*, பெ.(n.) கமுக்கட்டு (பிங்.); arm-pit.

மறுவ. அக்குள், விலாக்குழி.

*[வாகு+மூலம்]*

**வாகுமூலம்[2]** *vāgu-mūlam*, பெ.(n.) 1. தோள்மூலம்; shoulder. 2. கைக்குழி; palm-curve.

*[வாகு + மூலம்]*

**வாகுயுத்தம்** *vāgu-yuttam*, பெ.(n.) மற்போர் (யாழ்.அக.); fencing, the art of wrestling.

*[வாகு + Skt. யுத்தம்]*

வாகுரம்[1] *vāguram*, பெ.(n.) வலை (யாழ்.அக.); net.

வாகுரம்[2] *vāguram*, பெ.(n.) வவ்வால் (நாமதீப.252); bat.



வாகுருடம் *vāgurudam*, பெ.(n.) எருக்கிலை; leaf of madar - Calotropis gigantia.

வாகுரை *vāgurai*, பெ.(n.) பறவை பிடிக்கும் சுருக்குக் கயிறு (யாழ்.அக.); noose, snare.

மறுவ. கண்ணி.



வாகுலம் *vāgulam*, பெ.(n.) மகிழங்கனி (அரு.அக.); the fruit of the tree - Mimusops elengi.

வாகுலிகன் *vāguligaṉ*, பெ.(n.) வெள்ளிலை மடித்துக் கொடுக்கும் வேலைக்காரன் (யாழ்.அக); attendant carrying bettle-pouch.

மறுவ. அடைப்பைக்காரன்.

வாகுலேயன் *vāgulēyaṉ*, பெ.(n.) முருகக்கடவுள் (வின்.); *Muruga-k-kaḍavuḷ*.

மறுவ. ஆறிரு கரத்தோன்.

*[வாகுலை → வாகுலேயன்]*

வாகுலை *vāgulai*, பெ.(n.) அறுமீனாகிய கார்த்திகைப் பெண்கள் (யாழ்.அக.); the six presiding female deities of the Pleiades.

வாகுவம் *vāguvam*, பெ.(n.) வஞ்சி; a creeping plant - Calamus rotang.

வாகுவலயம் *vāgu-valayam*, பெ.(n.) தோளணி; armlet. *"மேகலைகாஞ்சி வாகுவலயம்" (பரிபா.7,47).*

*[வாகு + வளையம் → வாகுவலையம்]*

வாகுவலையம் *vāgu-valaiyam*, பெ.(n.) தோள்வளை; armlet.

மறுவ. தோளணி.

வ. பாகுவலய (b).

*[வாகு + வளையம். (செல்வி. 75, ஆனி 532)]*

வாகுனி *vāguṉi*, பெ.(n.) 1. கீழ்க்காய் நெல்லி; a plant- phyll-anthus. 2. பெருங்காரை பார்க்க; see *peruṇkārai*.

வாகெடு-த்தல் *vākeḍu-*, 4 செ.குன்றாவி. (v.t.) தலைமயிர் வகிர்தல்; to part the hair down the middle.

*[வாக்கு → வாகு + எடு-.]*

வாகென்பு *vāgeṉbu*, பெ.(n.) தோள்பட்டை யெலும்பு; shoulder blade-Scapula.

*[வாகு + என்பு]*

**வாகை** *vāgai*, பெ.(n.) **1.** மரவகை; sirissa, Albizzia. **2.** கருவாகை; fragrant-sirissa. **3.** அகத்தி; West Indian pea-tree. *"புகழா வாகைப் பூவினென்ன வளை மருப்பேனம்" (பெரும்பாண்.109).* **4.** வெற்றியாளர் அணியும் மாலை (பிங்.); chaplet of sirissa flowers worn by victors. *"இலைபுனை வாகைசூடி" (பு.வெ. 8, 1, கொளு.).* **5.** வெற்றி; victory. *"வாக்கும் வாகையும் வண்மையு மாறிலான்" (இரகு.யாகப். 38) (பிங்.).* **6.** பகையரசரைக் கொன்று வாகைப் பூச்சூடி வெற்றியால் ஆரவாரிப்பதைக் கூறும் புறத்துறை (பு.வெ. 8,1); theme of a conquerer wearing a chaplet of sirissa flowers and celebrating his victory over royal enemies (Purap.). **7.** நான்கு வரணத்தாரும் முனிவரும் பிறரும் தத்தங் கூறுபாடுகளை மிகுதிப்படுத்தலைக் கூறும் புறத்திணை (தொல்.பொருள்.74.); (Purap) theme in which the members of the four castes, hermits and others exalt their characteristic attainments. **8.** நல்லொழுக்கம் (வின்.); good behaviour. **9.** ஈகை (வின்.); gift. **10.** மிகுதி (வின்.); plenty. **11.** பண்பு(வின்.); nature. **12.** தவம் (வின்.); penance.

க. பாகெ; ம. வாக; **Tu.** *bāge*-mara.

*வாகை வகைகள்:* 1. அடக்கு வாகை; Albizzia labbek. 2. காட்டு வாகை; common sirissa. 3. பெருவாகை; same as No.1 **4.** சிற்றிலை வாகை; fragrant sirissa - Albizza odoratissima. 5. கருவாகை; Mimosa marginata 6. மலைவாகை; hill sirissa-Albizzia procero alias pilhecolobium coriaceum 7. கொண்டை வாகை; same as No.6. 8. நல்ல வாகை; Albizza procera 9. சிலை வாகை; Albizza stipulata. **10.** பிலி வாகை, கல் துரிஞ்சில்; Albizza odoratissima. **11.** சாயல்வாகை; Albizzia amara. **12.** சீமை வாகை; Enterolobium saman.

இவ்வாகை மரம் மிகவேகமாக ஓங்கி உயர்ந்து வளர்ந்து கட்டட வேலைக்கும் விறகுக்கும் பயன்படுவதாக உள்ளது. கால் நடைகளின் உணவுப் பற்றாக்குறையை நீக்கவல்லது; மண் அரிப்பைத் தடுக்கும்; மணலிலும் வளரும்; இதன் இலை, பூ, பட்டை, பிசின் விதை அனைத்தும் மருத்துவப்பயன் உடையவை.

–(வளம் தரும் மரங்கள் பக்.236).



**வாகைத்திணை** *vāgai-t-tiṇai*, பெ.(n.) பகையரசரைக் கொன்று வாகைப் பூச்சூடி ஆரவாரிப்பதைக் கூறும் புறத்துறை; theme of conquerer wearing a chaplet of sirissa flowers and celebrating his victory over royal enemies. (purap.)

*வாகைத்திணையின் வகைகள்:*

*1. வாகை–*

"இலைபுனை வாகை சூடி இகல்கலைந்து
அலைகடல் தானை அரசட்டார்த்தன்று".
பகைவேற் றைக்கொன்று வாகைமாலை
சூடி ஆரவாரித்தது (பு.வெ.கொளு. 8–1).

*2. வாகையரவம் –*

"வெண்கண்ணியும் கருங்கழலும்
செங்கச்சும் தகை புனைந்தன்று".
போர் மறவர் பகைவென்று வாகைமாலை
சூடியது. (பு.வெ.கொளு.8–2).

*3. அரசவாகை –*

"பகலன்ன வாய்மொழி
இகல்வேந்தன் இயல்புரைத்தன்று",
செங்கோன்மை யுடைய அரசனது
இயல்பினைக் கூறியது. (பு.வெ.கொளு.8 – 3)

*4. முரசவாகை –*

"ஒலிகழலான் அகனகருட் பலிபெறு
முரசின் பண்புரைத் தன்று"
(பு.வெ.கொளு.8–4).

அரசனது வெற்றிமுரசின் தன்மையைக் கூறியது.

*5. மறக்களவழி –*

"முழுவுறழ் திணிதோளானை
உழவனாக உரைமலிந்தன்று"
(பு.வெ.கொளு.8–5).

செங்கோன் மன்னனை உழவனாக உருவகித்துப் பாராட்டியது மறக்களவழி என்னும் துறையாம்.

*6. களவேள்வி –*

"அடுதிறல் அணங்கார
விடுதிறலான் களம்வேட்டன்று"
(பு.வெ.கொளு.8–6).

வாகை சூடிய வேந்தன் களவேள்வி செய்தது.

*7. முன்தேர்க்குரவை –*

"வென்றேந்திய விறற்படையோன்
முன்தேர்க்கண் அணங்காடின்று"
(பு.வெ.கொளு.8–7).

*8. பின்தேர்க்குரவை –*

"பெய்கழலான் தேரின் பின்
மொய்வளை விறலியர் வயவரொ டாடின்று"

வென்ற மன்னனின் தேரின்பின் வீரரும் விறலியரும் கூத்தாடியது.

*9. பார்ப்பன வாகை –*

"கேள்வியாற் சிறப்பெய்தியானை
வேள்வியால் விறல்மிகுத்தன்று"

மறைகேட்டுச் சிறப்பெய்திய பார்ப்பனனுடைய வெற்றியைக் கூறுவது.

*10. வாணிக வாகை –*

"செறு தொழிலிற் சேணீங்கியான்
அறுதொழிலும் எடுத்துரைத்தன்று"
(பு.வெ.கொளு.8–2)

வணிகர்க்குரிய அறுவகைத் தொழிற் சிறப்பையும் விதந்து கூறியது. உழவு, நிரையோம்பல், வாணிபம், ஓதல், வேட்டல், ஈதல் என்னும் அறுவகைத் தொழிலினும் சிறந்தவன், வணி கருட் தலைசிறந்தவன் ஆவான்.

*11. வேளாண் வாகை –*

"மேல் மூவரும் மனம்புகல
வாய்மையான் வழியொழுகின்று"

அந்தணர் முதலிய மூவரும் விரும்பியபடி ஒழுகுதல் ஆயின் தொல்காப்பியர், வேளாளர்க்குரிய உழவு உழவொழிந்த தொழில், விருந்தோம்பல், பகடு புறந்தருதல், வழிபாடு, ஓதுதல் என்னும் அறுவகைத் தொழிலினும் அவர் சிறப்புடையராதல் அவர்க்கு வாகையாம் என்பது தோன்ற, "இரு மூன்று மரபின் ஏனோர் பக்கமும்" என வகுத்தனர். பு.வெ. நூலாசிரியர் வழிபாடொன்றை மட்டுமே விதந்து ஓதுகிறார்.

*12. பொருந வாகை –*

"புகழொடு பெருமை நோக்கி யாரையும்
இகழ்தல் ஓம்பென எடுத்துரைத்தன்று"

தன்னொடு எதிர்நின்று பொர வல்லவர் யாருமில்லை என்று கருதி – அவர்களது ஒப்பின்மை காரணமாக யாரையும் இகழாதே கொள் என அறிஞர்கள் கூறுவதாம்.

*13. அறிவன் வாகை –*

"புகழ்நுவல முக்காலமும்
நிகழ் பறிபவன் இயல்புரைத்தன்று",

இறந்தகாலம் நிகழ்காலம், எதிர்காலம் என்னும் முக்கால நிகழ்ச்சிகளையும் உணர்ந்து கூறும் அறிவனுடைய தன்மையைச் சொல்லியது. "மறுவில் செய்தி மூவகைக் காலமும், நெறியின் ஆற்றிய அறிவன் தேயமும்" என ஆசிரியர் தொல்காப்பியர் கூறியதும் இது.

*14. தாபத வாகை –*

"தாபத முனிவர் தவத்தொடு முயங்கி
ஒவுதல் அறியா ஒழுக்குரைத் தன்று"
(பு.வெ.கொளு–14)

தவ முனிவர்கள் தம் தவவொழுக்கத்தில் பிறழாது மேம்பட்டமை.

*15. கூதிர்ப்பாசறை –*

"கூற்றனையான் வியன்கட்டூர்க் கூதிர்வாள்
துளிவழங்க
ஆற்றாமை நனிபெருகவும் அயில்வேலோன்
அளிதுறந்தன்று"
(பு.வெ.கொளு.8–15).

காமம் வருத்தும் கூதிர்க் காலத்தும் மறமே நினைந்து மன்னன் பாசறையிடத்தே தங்கியது இது.

*16. வாடைப் பாசறை –*

"வெந்திறலான் வியன் பாசறை வேல்வயவர் விதிர்ப் பெய்த
வந்துலாய்த் துயர் செய்யும் வாடையது மலிபுரைத்தன்று"

வாடை நலியவும் மன்னன் காமம் துறந்து பாசறைக் கண் இருந்தது வாடைப் பாசறை என்பதாம்.

*17. அரசமுல்லை*

"செருமுனை உயற்றுஞ் செஞ்சுடர் நெடுவேல்
இருநிலங் காவலன் இயல்புரைத் தன்று"
(பு.வெ.8–17)

மன்னனது இயல்பு மிகுதியைக் கூறியது.

*18. பார்ப்பன முல்லை*

"கான் மலியும் நறுந்தெரியல் கழல்வேந்தர் இகலவிக்கும்
நான்மறையோ னலம்பெருகு நடுவுநிலை உரைத்தன்று"

வேந்தர்களின் மாறுபாட்டை விலக்கிச் சந்து செய்விக்கும் அந்தணனது செப்பத் தன்மையைச் சொல்லியதாம்.

*19. அவைய முல்லை*

"நவைநீங்க நடுவு கூறும்
அவை மாந்தர் இயல்புரைத்தன்று"

அறங்கூற வையத்துச் சான்றோர் இயல்பினைச் சொல்லியது. அவ்வியல்பினை யுடையார் அவையத்தில் வாகையுடையார் ஆவர்.

*20. கணிவன் முல்லை*

"துணிபுணரும் தொல்கேள்வி
கணிவனது புகழ் கிளந்தன்று"

காலக் கணிவனுடைய திறத்தைப் புகழ்ந்தது.

*21. மூதில் முல்லை*

"அடல்வேல் ஆடவர்க் கன்றியும் அவ்வில்
மடவரல் மகளிர்க்கு மறமிகுத்தன்று"

பழைய மறக்குடி மகளிரின் இயல்பு மிகுதியாகிய மறப்பண்பினைக் கூறியது இத்துறை.

*22. ஏறாண் முல்லை*

"மாறின்றி மறங்கனலும்
ஏறாண்குடி எடுத்துரைத்தன்று"

மறப்பண்பு மேலும் மேலும் வளரும் இயல்புடைய மறக்குடியின் ஒழுக்கத்தைக் கூறியது ஏராண்முல்லை.

*23. வல்லாண் முல்லை*

"இல்லும் பதியும் இயல்புங் கூறி
நல்லாண் மையை நலமிகுத் தன்று"

ஒரு மறவனுடைய குடி, ஊர், பண்பு முதலியவற்றைப் பாராட்டி அவனது ஆண்மையை விதந்து கூறியது இத்துறை.

*24. காவல்முல்லை – 1.*

"தவழ்திரை முழங்கும் தண்கடல் வேலிக்
கமழ்தார் மன்னவன் காவல் மிகுத்தன்று"

வேந்தனது உலகங் காக்கும் தொழிலைச் சிறப்பித்தது.

*25. காவல்முல்லை – 2.*

"தக்காங்கு பிறர் கூறினும்
அத்துறைக் குரித்தாகும்"

அரசனது காவலியல்பினைப் பிறர் பொருந்த எடுத்துக் கூறினும் முற்கூறப்பட்ட துறையேயாம் என்பது கருத்து.

*26. பேராண்முல்லை*

"உளம்புகல மறவேந்தன்
களங்கொண்ட சிறப்புரைத்தன்று"

மன்னன் போர்க்களத்தை வென்று கைப்பற்றிய சிறப்பைக் கூறுவது.

*27. மறமுல்லை*

"வெள்வாள் வேந்தன் வேண்டியது ஈயவும்
கொள்ளா மறவன் கொதிப்புரைத் தன்று"

மறவன், மன்னன் தனக்கு வழங்கும் பொருளிடத்தில் கருத்தின்றி பகைவெல்லலே குறிக்கோளாகக் கொண்டு சினக்கும் தன்மை.

*28. குடைமுல்லை*

"மொய்தாங்கிய முழுவலித் தோட்
கொய்தாரான் குடை புகழ்ந்தன்று"

மன்னன் குடையைப் புகழ்ந்தது இத்துறை.

*29. கண்படை நிலை*

"மண் கொண்ட மறவேந்தன்
கண்படை நிலை மலிந்தன்று"

வாகை கொண்ட மன்னனின் துயிலைப் பாராட்டியது இத்துறை.

*30. அவிப்பலி*

"வெள்வாள் அமருட் செஞ்சோ றல்லது
உள்ளா மைந்தர் உயிர்ப்பலி கொடுத்தன்று"

போர்க்களத்தில் தம் அரசனுக்குச் செஞ்சோற்றுக் கடன் நினைந்து மறவர் தம் உயிரையே வழங்குதலைக் கூறுதல் இத்துறை.

*31. சால்புமுல்லை*

"வான்றோயும் மலையன்ன
சான்றோர்தம் சால்புரைத்தன்று"

சான்றோரின் இயல்பு மிகுதியைச் சொல்லியது

இத்துறை.

*32. கிணை நிலை*

"தண்பணை வயலுழவனைத்
தெண்கிணைவன் திருந்துபுகழ் கிளந்தன்று"

வேளாளனைக் கிணைப்பறை கொட்டுபவன் புகழ்ந்தது இத்துறை.

*33. பொருளொடு புகறல்*

"வையகத்து விழைவறுத்து
மெய்யாய பொருள் நயந்தன்று"

(பு.வெ.8-33)

பொய்ப் பொருளின்கண் பற்றகற்றி மெய்ப்பொருளை விரும்பியது இத்துறை.

*34 அருளொடு நீங்கல்*

"ஒலிகடல் வையகத்து
நலிவுகண்டு நயப்பு அவிந்தன்று"

(பு.வெ.கொளு.8-34)

இவ்வுலக வாழ்க்கையில் நிகழும் துன்பத்தை உணர்ந்து அதன்கண் பற்று நீங்கியது இத்துறை.

அருட்பண்பே பற்றுக் கோடாக நீங்கலின் அருளொடு நீங்கல் என்று கூறினார். இதனையே "அருளொடு புணர்ந்த அகற்சி" என்றார் தொல்காப்பியர்.

வாகைசூடு-தல் *vāgai-šūḍu*, 18 செ.குன்றா.வி. (v t ) உரிய உயர்நிலையை அடைதல்; triumph, be crowned with success *"வெற்றி வாகை சூடினார்"*.

*[வாகை + சூடு-,]*

வாகைமாலை *vāgai-mālai*, பெ.(n.) 1. போர் கல்வி கேள்வி கொடைகளில் வென்றோர் அணியும் மாலை (பிங்.); garland worn by those who are victorious in war or who are superior to others in learning or munificence. 2. சிற்றிலக்கியம் தொண்ணூற்றாறனுள் வீரனது வெற்றியைப் புகழ்ந்து பாடும் சிற்றிலக்கிய வகை; a poem in praise of the victory of a warrior, describing him as crowned with a wreath of sirissa flowers, one of 96 pirabandam.

*[வாகை + மாலை]*

வாகைமேற்புல்லுருவி *vāgaimēṟ-pulluruvi*, பெ.(n.) 108 கற்ப மூலிகைகளில் ஒன்று; parasite of albizzia is one of the 108 rejuvenating drugs

*[வாகை + மேல் + புல்லுருவி]*

வாகையரவம் *vāgai-y-aravam*, பெ.(n.) வெற்றிக்குறியாக வெள்ளைமாலை வீரக்கழல் செங்கச்சு முதலியவற்றை வீரர் அணிதலைக் கூறும் புறத்துறை (பு.வெ.8,2); theme describing a warrior, as being decked with a wreath of white flowers and wearing a red girdle and anklets, in token of victory.

*[வாகை + அரவம்]*

வாகைவனத்தாலாட்டு *vāgai-vaṉa-t-tālāṭṭu*, பெ.(n.) கந்தப்பையரால் 18ஆம் நூற்றாண்டில் இயற்றப்பெற்ற நூல்; a book written by Kandappaiar in 18th century.

*[வாகைவனம் + தாலாட்டு]*

வாகைவில்லான் *vāgai-villāṉ*, பெ.(n.) காமன் (நாமதீப.59, உரை.); *kāmaṉ*.

*[வாகை + வல்லான்]*

வாங்கம் *vāṅgam*, பெ.(n.) கடல் (யாழ்.அக.); sea

*[வாங்கு → வாங்கம். வாங்கு = வளைவு]*

வாங்கரிவாள் *vāṅgarivāḷ* பெ.(n ) வளைந்த அரிவாள் வகை (இ.வ.); curved sickle.

*[வாங்கு + அரிவாள்]*



வாங்கல் *vāṅgal*, பெ.(n.) 1. பிறர் கொடுக்க ஏற்கை (சூடா); receiving, admitting 2. கடன் வாங்குகை; borrowing. *'கொடுக்கல் வாங்கல்'.* 3. விலைக்குக் கொள்கை; buying 4. வளைவு (சூடா.); bending crookedness, curve, inclination. *"மனை ஈசானிய வாங்கலா யிருக்கிறது (சூடா.)".* 5. மன வருத்தம்; displeasure, strained feeling. 6. தூரம்; distance. *"அவ்வூர் வாங்கலா யிருக்கிறது".* 7. ஒரு சிற்றூரை அடுத்துள்ள பகுதி (இ.வ.); outskirts of a village. 8. ஆழம்; depth. *"வாங்கலினாற் கடலி லிறங்கப் படாது" (வின்.).* 9. குறைவு; want, unsuitability. *"இத்தலையிலே வாங்கலா யிருக்கிறது (திவ். இயற். திருவித்.86, வ்யா. பக். 420).* 10. பொன், வெள்ளி முதலியன மாற்றுக் குறைவாயிருக்கை; Inferiority in quality of gold, silver,etc. 11. வழுக்கல்; slipperiness. *"இந்த நிலம் வாங்கலாயிருக்கிறது" (வின்.).*

ம. வாங்ஙுக.

*[வாங்கு → வாங்கல். (சு.வி.25)]*

வாங்கலோ *vāṅgalō*, பெ.(n.) மருக்காரை பார்க்க; see *marukkārai.*

வாங்கற்கழுத்து *vāṅgar-kaḻuttu*, பெ.(n) கோணற்கழுத்து; wry-neck.

*[வாங்கல் + கழுத்து]*

வாங்கற்காரன் *vāṅgar-kāran*, பெ.(n.) கடன் கொடுப்போன்; creditor *"வாங்கற் காரருக்கு வகை சொன்னான்" (வின்.).*

*[வாங்கல் + காரன்]*

வாங்கா[1] *vāṅgā*, பெ.(n.) வளைந்த நாரை; crooked neck stork.

*[வாங்கு → வாங்கா] (சு.வி.25)*



வாங்கா[2] *vāṅgā*, பெ.(n) ஊதுகொம்பு வகை (இ.வ.); a kind of trumpet horn.

மறுவ. தாரை.

*[வாங்கு → வாங்கா. (வ.மொ.வ. 2, பக்.75)]*

வாங்காணி *vāṅgāṇi*, பெ.(n.) மரவாணி (இ.வ.); wooden peg.

*[வாங்கு + ஆணி]*

வாங்காவில் *vāṅgāvil*, பெ.(n) போட்டி (யாழ்.அக.); rivalry.

*[வாங்கு + ஆ.(எ.ம.) + வில்]*

வாங்கிக்கட்டு-தல் *vāṅgi-k-kaṭṭu*, 10 செ.கு.வி. (v.i.) அடி, திட்டு முதலிய வற்றைப் பெறுதல்; to receive beating, scolding etc. *'பொய் சொல்லி என்னிடம் நன்றாக வாங்கிக்கட்டிக் கொண்டான்'.*

*[வாங்கி + கட்டு-, ]*

வாங்கி[1] *vāṅgi*, பெ.(n.) கூட்டிக்கொடுப்போன் (வின்.); pimp.

*[வாங்கு → வாங்கி]*

வாங்கி[2] *vāṅgi*, பெ.(n.) குழம்பு; sauce. *"ரசவாங்கி" (இ.வ.).*

*[வாங்கு → வாங்கி]*

வாங்கிசநாசி *vāṅgisa-nāśi*, பெ.(n) உதிரிமாரி என்னும் பெரியம்மை வகை; a kind of small pox in which the scabs fall off. (சா.அக.).

*[வாங்கிச + நாசி]*

வாங்கு[1]-தல் *vāṅgu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. வளைத்தல் (சூடா.); to bend. *"கொடுமரம் வாங்கி" (கல்லா.4).* 2. நாண்பூட்டுதல்; to string a bow. *"நாண் வாங்கலாது விற்கொண்டு" (இரகு. திக்குவி.231).* 3. இழுத்தல்; to carry away, as a flood, to draw, drag, pull *"மத்தமொலிப்ப வாங்கி" (பெரும்பாண்.156).* 4. மூச்சு முதலியன உட்கொள்ளுதல்; to take in, as breath *"மூச்சு வாங்குகிறான்".* 5. ஏற்றல்; to receive, take. *"வருக வென்றென்னை நின்பால் வாங்கிட வேண்டும்" (திருவாச.5, 68).* 6. விலைக்குக் கொள்ளுதல்; to buy *"மாதவி மாலை கோவலன் வாங்கி" (சிலப்.3,171).* 7. பெறுதல்; to get, obtain. *"எங்கு வாங்கிக் கொடுத்தாரிதழியே" (தேவா.456, 8).* 8. வரைதல்; to inscribe, indite. *"ககரத்துக்குக் கால் வாங்கினால் காவாகும்".* 9. ஒதுக்குதல்; to move to one side. *"இந்த வண்டி போம்படி அந்த வண்டியை வாங்கிக் கொள்".* 10. மீட்டும் பெறுதல்; to get back, take back *"கொடுத்ததை வாங்கினார்".* 11. செலுத்துதல்; to shoot, as an arrow; to send forth. *"வாங்கினார் மதிண் மேற்கணை" (தேவா.21, 2).* 12. தப்பும்படி உய்வித்தல்; to rescue, deliver. *"சமணர் பொய்யிற் புக்க முந்தி வீழாமே போத வாங்கி" (தேவா.658,7).* 13. தழுவுதல்; to embrace. *"வருமுலை பொதிர்ப்ப வாங்கி" (சீவக.584).* 14. ஒத்தல்; to resemble. *"தூணொடு பறம்பு வாங்கும் .....தோளான்" (பாரத. நிவாத. 145).* 15. அழைத்தல் (அக.நி.); to call. 16. நீக்குதல்; to remove, take away. *"வாங்குமின் மனத்துயர்" (கம்பரா. மீட்சிப். 278).* 17. பிரித்தெடுத்தல்; to seperate, eliminate. *"தானே என்றார், புறத்தினை பலவற்றுள் ஒன்றை வாங்குதலின்" (தொல். பொருள். 56, உரை).* 18. பெயர்த்தல்; to dig up, as the earth. *"புற்றம்.....வாங்கிக் குரும்பு கெண்டும்" (அகநா.72).* 19. முறித்தல்; to break off. *"வேழம்...கரும்பின் கழை வாங்கும்" (கலித்.40.).* 20. வெட்டுதல்; to cut off. *'கை கால்களை வாங்கிவிடுவேன்'.* 21. அடித்தல்; to strike. *'பிரம்பால் அவனை நாலு வாங்கு வாங்கினான்'.* 22. அழித்தல்; to destroy. *"விண்ணு மண்ணக முழுதும் யாவையும் வைச்சு வாங்குவாய்" (திருவாச.5, 96).* 23.வைதல்; to abuse, reproach. *'அவனை நல்ல வாங்கு வாங்கினான்'.*

தெ., ம. வங்கு; க. பாகு; து. பாகுணி; குட. பாங்; கொலா. வாக் (g); **To.** pa-g; **Kod.** *baŋ-g*, **Nk.** *vaaŋg*, **pa.** *vaŋg*, **Kuwi.** (f) vwangali; **Kur**. *beŋknā*.

*[வங்கு → வாங்கு-, (வே.க.109)]*

வாங்கு[2]-தல் *vāṅgu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. வளைதல்; to bend. *"வாங்குகதிர் வரகின்" (முல்லைப். 98).* 2. அலைதல்; to sway, wave. *"வளி வாங்கு சினைய மாமரம்" (பரிபா.7, 14).* 3. குலைதல்; to scatter, disperse. *"பகைவர் தண்டு வாங்கிப் போயிற்று".* 4. மெலிதல்; to become lean. *"உடம்பு வாங்கிப் போயிற்று".* 5. குறைதல்; to be

reduced. *"வீக்கம் வாங்கியிருக்கிறது".* 6. தாழ்தல்; to sink, subside. 7. களைத்துப் போதல்; to be exhausted. *"வாங்காமல் நீரை இறைத்துக் கொண்டிருந்தார்கள்" (வின்.).* 8. நீங்குதல்; to cease. நோவு வாங்கிப் போயிற்று. 9. ஒரு பக்கமாக ஒதுங்குதல்; to move to one side. 10. பின்வாங்குதல்; to withdraw, retreat. *"விரைவின் வாங்கி...பிழைத்த சேனை பின்வர" (திருவாலவா. 49, 50).* 11. திறந்திருத்தல்; to be opened. *"அந்தக் கடையின் கதவு வாங்கியிருந்தது".*

*[வணம் → வணங்கு → வாங்கு-, (வ.மொ.வ.245)]*

வாங்கு[3] *vāṅgu*, பெ.(n.) 1. வளைவு (நாமதீப. 768); bending. 2. அடி; blow. *'பிரம்பால் நாலு வாங்கு வாங்கினான்'.* 3. வசவு; abuse, rebuke. *'அவன் வாங்கின வாங்கு அவனுக்குப் போதும்'.*

க. பாகு.

வாங்கு[4] *vāṅgu*, பெ.(n.) பிச்சுவா; dagger (வளைந்த வடிவுடையதாதலின் 'பிச்சுவா' வாங்கு எனப்பட்டது).

வாங்கு – இ. (பாங்க்.) சு.வி.25.

*[வணம் → வணங்கு → வாங்கு] (சு.வி.25 வ.மொ.வ.245).*



வாங்கு[5] *vāṅgu*, பெ.(n.) அரிவாள்; bill-hook. *"கைகளில் வாங்கு பிடித்திருக்கின்றனர்" (எங்களுர்,32).*

மறுவ. வாங்கரிவாள்

வாங்குப்பலகை *vāṅgu-p-palagai*, பெ.(n.) கால்களுள்ள பலகையிருக்கை; bench, wooden seat.

*[வாங்கு + பலகை]*



வாங்கைநாராயணன் *vāṅgai-nārāyaṉaṉ*, பெ.(n.) நெல்வகை; a kind of paddy.

வாச்சி[1] *vācci*, பெ.(n.) 1. மரத்தைச் செதுக்கும் கருவி; adze 2. ஆடாதோடை (பரி.அக.) பார்க்க; see *āḍātōḍai*

தெ. வாடி; ம. வாச்சி; தோட. போடிசு; க. பாசி; து. பாசி, பாஜி.

*[வாய் → வாய்ச்சி → வாச்சி]*

வாச்சி[2] *vācci*, பெ.(n.) நூறு, ஆயிரம் உரூபாய்களைக் குறிப்பது; a term to denote the hundred and thousand rupees.

வாச்சிகேவுநெசுவு *vācci-kēvu-necuvu*, பெ.(n.) ஆயிரத்து நூற்று ஐம்பது உரூபாயைக் குறிப்பது; a term to denote thousand and hundred and fifty rupees.

**வாச்சியம்**[1] *vācciyam,* பெ.(n.) 1. வாசகத்தின் பொருள்; meaning of a word, signification of a term. *"வாதவூரன்...வாசக முதற்கு வாச்சியம்" (சிவப். பிரபந். நால்வர்.).* 2. வெளிப்படையானது (நன்.269, விருத்.); that which is manifest or clear. 3. சொல்லக் கூடியது; that which can be stated in words. 4. பழி (வின்.); blame, censure, reproach

**வாச்சியம்**[2] *vācciyam,* பெ.(n.) வாத்தியம்; musical instrument. *"கூத்து விகற்பங்களுக்கு அமைந்த வாச்சியக் கூறுகளும்" (சிலப். 3, 14, உரை).*

வகைகள்: 1. தோற் கருவி, 2. நரம்புக் கருவி, 3. கஞ்சக் கருவி, 4. துளைக் கருவி.

**வாச்சியமாராயன்** *vācciya-mārāyaṉ,* பெ.(n.) கோயிலின் தலைமை வாச்சியக் காரன்; head musician of a temple or palace [I M P Pd 146].

*[வாச்சியம் + மாராயன்]*

**வாச்சியார்த்தம்** *vācci-y-ārttam,* பெ.(n ) சொல்லுக்கு நேரே உரிய பொருள்; literal meaning, expressed meaning, *"வாச்சியார்த்தம், முக்கியார்த்தம், அபிதார்த்தம்" (வேதா.சூ.118).*

*[வாச்சியம் + அருத்தம் → அர்த்தம்]*

**Skt.** *arthā* > த. அருத்தம்.

**வாச்சியீடன்** *vācci-y-īḍaṉ,* பெ.(n.) வாச்சியிட்டு வெட்டினாற் போலக் கண்டிப்பாகப் பேசுபவன்; one with sharp tongue, as an adze. *"வாச்சியீடனாக நறுக்கறப் பேசவல்லேன்" (திவ். திருமாலை, 26, வ்யா, பக்.89).*

*[வாய் → வாய்ச்சி → வாச்சி + ஈடன்]*

**வாச்சிவாச்சி** *vācci-vācci,* பெ.(n.) ஆயிரத்து நூறு உருபாயைக் குறிப்பது; a term to denote the thousand and hundred rupees.

*[வாச்சி + வாச்சி]*

**வாசகசாலை** *vāšaga-šālai,* பெ.(n.) 1. படிப்பகம்; reading room. 2. நூலகம்; library.

*[வாசகம் + சாலை]*

**வாசககுரசம்** *vāsaga-šurašam,* பெ.(n.) ஆடாதோடை; juice of adathoda vasica.

**வாசகஞ்செய்-தல்** *vāšagañ-cey-,* 1 செ.குன்றாவி. (v.t.) புகழ்ந்துரை செய்தல்; to praise,eulogise. *"நீலகண்டனும் நான் முகனும்... வாசகஞ் செய்ய நின்ற திருமாலை" (திவ்.பெரியாழ். 4, 1, 5).*

*[வாசகம் + செய்]*

**வாசகஞானம்** *vāšaga-ñāṉam,* பெ.(n.) 1. போலியான அறிவுப் பேச்சு (வின்.); lip wisdom, profession of pious wisdom. 2. பட்டறிவின்றி வாயாற் பேசும் அறிவு (வின்.); speculative knowledge.

*[வாசகம் + **Skt.** ஞானம்]*

**வாசகதாட்டி** *vāšaga-tāṭṭi.* பெ.(n.) பேச்சுவன்மை; skill in speech. *"செய்ய வாசகதாட்டி யவதானவக் கணை சிறக்குமவனே ராயசன்" (திருவேங். சமத. 8).*

*[வாசகம் + தாட்டி]*

ஒருகா. நாவன்மை, சொல்வன்மை.

**வாசகதீட்சை** *vāšaga-dīṭcai*, பெ.(n.) குருவம் ஏழனுள் ஐந்தெழுத்தைப் பதினொரு மந்திரங்களுடன் பலுக்கும் முறையைக் குரு சீடனுக்கு அறிவுரை செய்யும் சடங்கு (சி.சி.8, 3, சிவாக்.); a way of initiation, in which the guru teaches his disciple how to pronounce the *pañšākṣara* mantra and its eleven accessories, one of seven *tīṭcai*.

*[வாசகம் + skt. dīksā > த. தீட்சை]*

**வாசகப்பா**[1] *vāšaga-p-pā*, பெ.(n.) நாடக இலக்கியம் (வின்.); drama.

*[வாசகம் + பா]*

**வாசகப்பா**[2] *vāšaga-p-pā*, பெ.(n.) நகையூட்டு நாடகம் (புதுவை.); comedy.

*[வாசகம் + பா]*

**வாசகப்பாங்கு** *vāšaga-p-pāṅgu*, பெ.(n.) நல்ல உரைநடை; good style. *"திருத்தமான வாசகப் பாங்காயும்" (மாலுமிசா.முகவுரை).*

*[வாசகம் + பாங்கு]*

**வாசகபதம்** *vāšaga-padam*, பெ.(n.) வழக்குச் சொல் (யாழ்.அக.); colloquial word.

*[வாசகம் + பதம்]*

**Skt.** *pada* > த. பதம்

**வாசகபுத்தகம்** *vāšaga-puttagam*, பெ.(n.) உரைநடையில் பாடங்கள் அமைந்த நூல் (வின்.); prose reader for learners.

*[வாசகம் + பொத்தகம் → புத்தகம்]*

**வாசகம்**[1] *vāšagam*, பெ.(n.) 1. பேச்சு; speech,word of mouth. *"சிறியோர்க் கருளிய வுயர்மொழி வாசகம்" (பெருங்.வத்தவ.13,116).* 2. செய்தி; message. *"மல்குநீர்க் கண்ணேறகோர் வாசகங் கொண்டருளாயே" (திவ். திருவாய். 1, 4, 5).* 3. சொற்றொடர்; sentence, composition. *"வடமொழி வாசகஞ் செய்த நல்லேடு"(சிலப். 15, 58).* 4. செய்யுள் (சிலப். 13, 93, உரை); poetical composition, verse. 5. பிறர் கேட்க முணுமுணுக்கை (சைவச. பொது. 152, உரை); audible muttering of a mantra. 6. உரைநடை (இக்.வ.); prose. 7. வாய்பாடு; form of speech, grammatical or otherwise. *"மூராரிகள் என்பது பன்மை வாசகம்" (தக்கயாகப். 79, உரை).* 8. கடிதம் (வின்.); letter, epistle. 9. புகழ்ந்துரை; words of praise. *"வாசகஞ் செய்ய நின்ற திருமாலை" (திவ். பெரியாழ். 4, 1, 5).* 10. திருவாசகம்; the celebrated poem in praise of sivan by *Māṇikka-vašagar*. *"வள்ளுவர் சீரன்பர் மொழி வாசகம்" (தனிப்பாடல்).*

*[வாசி → வாசகம் (வ்.மொ.வ.104.)]*

**வாசகம்**[2] *vāšagam*, பெ.(n.) வாசிக்கும் அல்லது வாசித்தற்குரிய பகுதி; வாசகப் பொத்தகம்; reader.

*[வாசி → வாசகம்]*

வடமொழியில் வாசக என்னும் சொற்குப் பேசுதல், சொல்லுதல், ஒப்பித்தல், வெளியிடுதல் என்னும் பொருள்களே; வாசித்தல் (reading) என்னும் பொருளில்லை. அதற்கு 'வாச்' என்பது மூலம்; 'வச்' என்பது அடிமூலம். அதனின்று வசனம் என்னும் சொல் தோன்றும். 'வாச்' என்பது 'வாக்' என்று திரிந்து 'வாக்ய' என்னும் சொல்லைப் பிறப்பிக்கும்.

வாசிப்பது வேறு; சொல்வது வேறு. வடசொல் வேறுவகையில் தோன்றியிருத்தல் வேண்டும்; அல்லது தென்சொல்லினின்று ஒலியும் பொருளும் திரிந்திருத்தல் வேண்டும்.

– வ. மொ. வ. பக்.164.

வாசகம்³ *vāšagam*, பெ.(n.) ஆடாதோடை; a shrub - Adathoda vasica.

வாசகன்¹ *vāšagaṉ*, பெ.(n.) 1. பேசுவோன் (வின்.); speaker,one who speaks. 2. அரசர் திருமுன் கடிதம் முதலியன படிப்போன்; one who reads letters etc., in the presence of a king. *"வாசகன் மற்றது வாசினை செய்த பின்" (சூளா. சீய. 90).* 3. தூதன் (யாழ்.அக.); messenger.

*[வாசகம் → வாசகன்]*

வாசகன்² *vāšagaṉ*, பெ.(n.) காகவிடம் என்னும் செய்ந்நஞ்சு வகை; a kind of arsenic.

வாசகி *vāšagi*, பெ.(n.) கொந்தான்; a twiggy plant - Cassyta filiformis

வாசகை *vāšagai*, பெ.(n.) அரக்காம்பல்; an aquatic plant.

வாசதம் *vāšadam*, பெ.(n.) கழுதை; an animal-ass.

வாசந்தி¹ *vāšandi*, பெ.(n.) 1. குருக்கத்தி; common delight of the woods. 2. சண்பகம் (சூடா.); champak 3. திப்பலி (சங்.அக.); long pepper.

வாசந்தி² *vāšandi*, பெ.(n.) ஆடாதோடை (யாழ்.அக.); malabar nut.

வாசந்திகட்டியிழு-த்தல் *vāšandi-kaṭṭi-y-iḻu-*, 4 செ.குன்றாவி. (v.t.) துன்புறுத்துதல்; to torment, afflict (loc.).

*[வாசந்தி + கட்டி + இழு-த்தல்.]*

வாசந்திரம் *vāšandiram*, பெ.(n.) கொத்தமல்லி; - coriander seed - Coriandrum sativum.

வாசபுட்பம் *vāša-puṭpam*, பெ.(n.) புங்கு பார்க்க; see *puṅgu.*

*[வாசம் + புட்பம்]*

வாசம் *vāšam*, பெ.(n.) 1. இறகு (பிங்.); feather, wing. 2. அம்பு (யாழ்.அக.); arrow. 3. நெய் (யாழ்.அக.); Ghee. 4. உணவு (யாழ்.அக.); food. 5. அரிசி (யாழ். அக.); rice. 6. நீர் (யாழ்.அக.); water. 7. மந்திர வகை (யாழ்.அக.); a mantra. 8. வேகம் (யாழ்.அக.); speed. 9. கை மரம் (தெ.வாசமு); rafter.

வாசமாலை¹ *vāša-mālai*, பெ.(n.) வாயினிலையிற் சுற்றி அமைந்த வேலைப்பாடு (இ.வ.); ornamental work on a door-frame.

*[வாசல்மாலை → வாசமாலை]*

வாசமாலை² *vāša-mālai*, பெ.(n.) பந்தல் முதலியவற்றின் முகப்பிற் கட்டும் அணியழகுத் தொங்கல்; hangings in front of a pavilion or pandal.

*[வாசம் + மாலை]*

வாசமாற்றம் *vāša-maṟṟam*, பெ.(n.) புறநாட்டில் குடியேறுகை (புதுவை); emigration.

*[வாசம் + மாற்றம்]*

வாசரம் *vāšaram*, பெ.(n.) நாள் (பிங்.); day.

வாசரி *vāšari*, பெ.(n.) 1. வாக்கால் கண்டிக்கை; rebuke. *"வாசரி சொல்லி அவர் முத்திரையை நிறுத்திப் போட்டார்" (கோயிலொ.15).* 2. அலப்பி வருத்துகை (நெல்லை); troubling with unnecessary speech.

வாசல் *vāšal*, பெ.(n.) **1.** கட்டடத்தின் முகப்பு வழி; gateway, portal, entrance. *"நல்ல மனைவாசலில்" (கலித். 97, உரை).* **2.** வீட்டினுள் உள்ள முற்றம்; open courtyard within a house. **3.** அரசவை (வின்.); King's court. *"சோழன் வாசலிலே தேவகானம் பாடுவாளொருத்தியும்" (குருபரம். பன்னீ. பக். 176).*

*"வாசலிது வாசலிது"*

**தெ.** வாகிலி; **க.** வாகில்.

வாசல்காரியம் *vāšal-kāriyam*, பெ.(n.) அரசன் கட்டளையை நிறைவேற்றும் அலுவலர் (M.E.R.33 of 1928-9); officer who carries out royal orders.

**Skt.** கார்ய > த. காரியம்.

*[வாசல் + காரியம்]*

வாசல்காவலாளன் *vāšal-kavalā-lan*, பெ.(n.) வீட்டு வாயிலிற் காவல் புரிபவன்; door keeper, sentry at the gate.

*[வாயில் → வாசல் + காவல் + ஆளன். ஆளன் = ஓர் ஆண்பாற் பெயரீறு.]*

வாசல்தெளி-த்தல் *vāšal-teli*, 4 செ.கு.வி. (v.i.) நீர் தெளித்து வாயிலைத் தூய்மை செய்தல்; sprinkle water on the floor of the courtyard as part of house work.

*[வாசல் + தெளி-,]*

வாசல்நிருவாகம் *vāšal-niruvāgam*, பெ.(n.) வாசல்காரியம் பார்க்க; see *vāšal-kāriyam*. *"திருநெல்வேலி வாசல் நிர்வாகம்... தொழிற்படுத்தி" (தெய்வச். விறலிவிடு. 77).*

*[வாசல் + நிருவாகம்]*

**Skt.** *nirvāha* > த. நிருவாகம்.

வாசல்பணம் *vāšal-panam*, பெ.(n.) பழைய வரி வகை; an ancient tax. *"வாசல் பணம் உள்பட்ட... கடமை"(S.I.I.i.93).*

*[வாசல் + பணம்]*

வாசல்முதலி *vāšal-mudali*, பெ.(n.) வாசல்காரியம் (M.E.R.293 of 1928-9.) பார்க்க; see *vāšal-kāriyam*.

*[வாசல் + முதலி]*

வாசல்வரி *vāšal-vari*, பெ.(n.) பழைய வரிவகை; an ancient tax (S.I.I.ii,115).

*[வாசல் + வரி]*

வாசல்வித்துவான் *vāšal-vitiuvān*, பெ.(n.) அரசவைப் புலவன்; court-poet, poet - laureate. *"சேதுபதி..... வாசல்வித்துவான் யான் கண்டாய்" (பெருந்தொ. 1788).*

*[வாசல் + **Skt.** vidvān > த. வித்துவான்]*

வாசல்வினியோகம் *vāšal-viniyōgam*, பெ.(n.) பழைய வரிவகை (S.I.I.ii.115); an ancient tax.

*[வாசல் + **Skt.** viniyōga > த. வினியோகம்]*

வாசவம் *vāšavam*, பெ.(n.) பகல் பதினைந்து முழுத்தங்களுள் ஐந்தாவது (விதான. குணாகுணா.73, உரை); the fifth of the 15 divisions of the day.

வாசவல் *vāšaval*, பெ.(n.) பாசவல்; fresh rice-flake. *"தேனெய் வாசவற் குவலி" (சீவக. 1562).*

*[பாசவல் → வாசவல்]*

வாசவிலை *vāša-vilai*, பெ.(n.) கிச்சிலி; citrus fruit, bitter orange.

*[வாசம் + விலை]*

வாசவுப்பு *vāša-v-uppu*, பெ.(n.) கல்லுப்பு (சித்.அக.); rock-salt.

*[வாசம் + உப்பு]*

வாசற்கணக்கன் *vāšar-kaṇakkaṉ*, பெ.(n.) அரண்மனைக் கணக்கன்; accountant in a palace.

*[வாசல் + கணக்கு → கணக்கன்]*

வாசற்கதவு *vāsar-kadavu*, பெ.(n.) வீட்டின் முகப்பு நிலைக் கதவு; front door, as of a house. *"திறம்பிற்று.....வானோார் கடி நகர வாசற் கதவு"(திவ். இயற். 2, 88).*

*[வாசல் + கதவு]*

வாசற்கால் *vāšar-kāl*, பெ.(n.) 1. வாயில் நிலை (இ.வ.); door - frame. 2. வாசல்; entrance. *'நல்ல நாளில் நல்ல முழுத்தத்தில் வாசற்கால் வைத்தார்கள்' (உ.வ.).*

*[வாசல் + கால்]*



வாசற்காவல் *vāšar-kāval*, பெ.(n.) வாயில் காப்பு; guarding, watching.

*[வாசல் + காவல்]*

வாசற்படி *vāšar-paḍi*, பெ.(n.) 1. வாயினிலையின் அடிப்பாகம்; door-sill,door - step. 2. வாசல்; doorway. 3. வாசனிலையின் மேற்பாகம்; lintel, shelf over the lintel. *'திறவுகோலை வீட்டு வாசற்படியில் வைத்திருக்கிறேன்', 'வீட்டுக்கு வீடு வாசப்படி' (பழ.).*

*[வாசல் + படி]*

வாசற்பீடம் *vāsar-pīḍam*, பெ.(n.) அல்குல்; genital organ of the female.

*[வாசல் + Skt. pīta > த. பீடம்]*

வாசனி *vāšaṉi*, பெ.(n.) 1. பாதிரி; a tree- Bignonia chelonoides. 2. குங்குமச் செவ்வந்தி பார்க்க; see *kuṅguma-c-cevvandi.* 3. பொற்றலைக் கையாந்தகரை; yellow flowering.

வாசனைக்கன்னி *vāšaṉai-k-kaṉṉi*, பெ.(n.) சாதிபத்திரி; mace.

*[வாசனை + கன்னி]*

வாசனைக்கெந்தி *vāšaṉai-k-kendi*, பெ.(n.) புன்னை; a tree.

வாசா *vāšā*, பெ.(n.) ஆடாதோடை; a shrub- adathoda vasica.

வாசாங்கம் *vāsāṅgam*, பெ.(n.) மூக்கரைச் சாரணை; a creeper.

வாசாங்கியம் *vāšāṅgiyam,* பெ.(n.) மிளகு (மலை); black-pepper.

வாசாணிமூலி *vāšāṇi-mūli*, பெ.(n.) செவ்வா மணக்கு; red variety of castor- Ricinus communis.

*[வாசாணி + மூலி]*

வாசாதி *vāsādi*, பெ.(n.) ஆடாதோடை; a shrub - Adathoda vasica.



வாசாப்பு[1] *vāšāppu*, பெ.(n.) வாசகப்பா (புதுவை) பார்க்க; see *vāšaga-p-pā*.

வாசாப்பு[2] *vāšāppu*, பெ.(n.) திட்டுதல்; scolding, a buse. *'அவனிடம் வாசாப்பு வாங்காதே'.*

*[வசவு → வாசாப்பு]*

வாசாமம் *vāsāmam* , பெ.(n.) பெருங் குறிஞ்சி பார்க்க; see *peruṅ-kuriñji*.



வாசாலகம் *vāšālagam*, பெ.(n.) பேச்சு வல்லமை; skill in speech. *"வாசாலகத்தி லுயர்மதியில்" (பிரபோத.11,94).*

மறுவ. சொல்வன்மை.

*[வாய் + சாலம் → வாசாலகம்]*

**Skt.** *Jāla* > த. சாலம்.

வாசாலகன் *vāšālagaṉ*, பெ.(n.) பேச்சுத் திறமையுள்ளோன்; persuasive speaker, man who is clever in speech.

*[வாய்ச்சாலகம் → வாசாலகன்]*

ஒருகா. நாவலன்.

**Skt.** *Jāla* > த. சால → சாலகன்.

வாசாலை *vāšālai*, பெ.(n.) பேச்சுத் திறமையுள்ளவள் (யாழ்.அக.); woman who is clever in speech.

*[வாய்சாலவன் → வாசாலை. வாசாலன் (ஆ.பா.) → வாசாலை (பெ.பா.)]*

**Skt.** *Jāla* > த. சால → சாலை.

வாசி[1] *vāši*, பெ.(n.) 1. வேறுபாடு; difference. *"ஈசனிலைமைக்கு மேனையிமையோர் நிலைக்கும் வாசியுரை" (ஏகாம்.உலா, 483).* 2. இயல்பு; quality, nature; characteristic. *"அரக்கனவன் குலத்துவாசி" (இராமநா. ஆரணி.25).* 3. தகுதி; fitness, propriety. *"ஏறினா னவ்வாசியை வாசியாக" (திருவாலவா.28,45).* 4. நல்ல நிலைமை; good, improved condition. *"அவனுக்குடம்பு வாசிதான்".* 5. நிமித்தம் (வின்.); ground, cause. *"நீ வாராத வாசி காரியங்கெட்டது".* 6. வீதம்; rate, as of interest, proportion. *"செலவளவு மாகாணிவாசியும் நாலுமா வாசியும் கழித்து" (S.I.I.iii.123).* 7. காசு வட்டம்; discount,in changing money. *"வாசி தீரவே காசு நல்குவீர்" (தேவா.572,1).*

தெ., க. வாசி.

வாசி[2]–த்தல் *vāši-*, 11 செ.குன்றாவி. (v.t.) 1. படித்தல்; to read. *"ஓலையை..... வாசியென்றனன்" (கம்பரா.எழுச்.3).* 2. கற்றல்; to learn. *"வாசித்துங் கேட்டும்" (திவ்.இயற். நான்மு.63).* 3. வீணை முதலியன

இசைக்க ஒலிப்பித்தல்; to play on a musical instrument. *“மாதவி தன் மனமகிழ வாசித்த றொடங்குமன்” (சிலப்.7, பக். 205).* 4. புல்லாங்குழல் போன்ற துளைக்கருவியியக்குதல்; to play.

*[வாய் → வாயி → வாசி → வாசி-த்தல்.]*

வாயாற்படித்தல், புல்லாங்குழல் போன்ற துளைக்கருவி இயக்குதல்.

வாசினை = வாசி → வாசினை = குழல் வாசிப்பு. வாசி→வாசகம் = வாசிக்கும் அல்லது வாசித்தற்குரிய பகுதி, வாசகப் பொத்தகம் (Reader).

வடமொழியில் வாசக என்னும் சொற்குப் பேசுதல், சொல்லுதல், ஒப்பித்தல், வெளியிடுதல் என்னும் பொருள்களே உள்ளன. வாசித்தல் (reading) என்னும் பொருளில்லை. அதற்கு 'வாச்' என்பது மூலம். வச் என்பது அடிமூலம் அதினின்று வசனம் என்னும் சொல் தோன்றும். வாச் என்பது வாக் என்று திரிந்து 'வாக்ய' என்னும் சொல்லைப் பிறப்பிக்கும்.

வாசிப்பது வேறு; சொல்வது வேறு. வடசொல் வேறு வகையில் தோன்றியிருத்தல் வேண்டும்; அல்லது தென்சொல்லினின்று ஒலியும் பொருளும் திரிந்திருத்தல் வேண்டும் (வ.மொ.வ.164).

வாசி[3] *vāśi,* பெ.(n.) 1. இசைக்குழல் (பிங்.); musical pipe. 2. இசைப்பாட்டு (யாழ்.அக.); tune, musical song.

வாசி[4] *vāśi,* பெ.(n ) 1. குதிரை (பிங்.); horse. *“ஏறினானவ் வாசியை” (திருவாலவா.28, 45).* 2. முதல் விண்மீன் (சூடா.); the first naksartra. 3. பறவை (யாழ்.அக.); bird. 4. அம்பு (யாழ்.அக.); arrow. 5. மூச்சு (யாழ்.அக.); breath. 6. நடுநிலை (யாழ்.அக.); justice. 7. அணிவளைவான திருவாசி; ornamental arch over the head of an idol. *"மாணிக்கவாசி முந்து சிங்காதனம்" (திருவாலவா.37:75).*

*[வாளி → வாசி. (செல்வி.77. மார்கழி 237)]*

வாசி[5] *vāśi,* பெ.(n.) வசிப்பவன்; dweller, inhabitant. *“காசிவாசி”.*

*[வதி → வசி → வாசி. (செல்வி. 77. மார்கழி 237)]*

வாசி[6] *vāśi,* பெ.(n.) குறியீட்டுச் சொல்; expression. *“சதம் என்பது அநந்த வாசி” (தக்கயாகப்.73,உரை).*

வாசி[7] *vāśi,* பெ.(n.) இருப்பிடம் (யாழ்.அக.); dwelling place.

வாசி[8] *vāsi*, பெ.(n.) 1. புல்லூரி; parasitic plant. 2. உயிர்ப்பு; breath.

வாசிக்கல் *vāśi-k-kal,* பெ.(n.) காந்தம் உள்ள ஒருவகை இரும்புக்கட்டி (வின்.); black load-stone.

வாசிக்கோவை *vāśi-k-kōvai,* பெ.(n.) குதிரைக்கிங்கிணி மாலை (சூடா.); a garland of small bells, round a horse's neck.

*[வாசி + கோவை.]*

வாசிககாரகம் *vāśika-kāragam,* பெ.(n.) கடிதம் (யாழ்.அக.); letter.

வாசிகட்டல் *vāśi-kaṭṭal*, பெ.(n.) மூச்சினைக் கட்டுப்படுத்தல்; to control the breath.

*[வாசி + கட்டு → கட்டல்]*

வாசிகந்தகம் *vāśi-kandagam*, பெ.(n.) ஓர் பூண்டு; a plant.

*[வாசி + கந்தகம்]*

வாசிகபத்திரம் *vācika-pattiram,* பெ.(n.) கடிதம் (யாழ்.அக.); letter.

*[வாசிகம் + **Skt.** Batra > த. பத்திரம்.]*

**வாசிகம்** *vāšikam,* பெ.(n.) வாக்காற் செய்யப்படுவது; that which is performed by the faculty of speech. *"மானதமே வாசிகமேகாயிகமேயென..... தவமூன்றாம்" (திருவிளை.எழுகட 6).* 2. வாய்ச் செய்தி (யாழ்.அக.); word of mouth, message. 3. செய்தி; news.

**வாசிகரணசிகிச்சை** *vāšikaraṇa-šigiccai*, பெ.(n.) வித்தமிழ்து (விந்து) வளரச் செய்து காமவிருப்பத்தை அதிகப்படுத்தும் உடல் வலிமை, ஆண்மை இவற்றைத் தருமருந்து; the art of increasing the secretion of semon to promote sexual desire-aphrodisiac treatment, one of the eight parts or tantrams describing the means of increasing the verite power by giving tone to the weakened organs of generation.

*[வாசி + கரணம் + **Skt.** சிகிச்சை]*

**வாசிகரணம்** *vāšikaraṇam,* பெ.(n.) 1. விந்தினை வளர்ச்சி அடையச் செய்தல்; developing virility. 2. அன்புடைக் காமம் (யாழ்.அக.); genuine love, ardent passion.

**வாசிகன்** *vāšigaṉ,* பெ.(n.) தூதன்; messenger.

*[வாசகன் → வாசிகன்]*

**வாசிகாண்(ணு)தல்** *vāši-kāṇu-,* 12 செ.கு.வி. (v.i.) 1. மதிப்புக்கு மேலாக அளவு காணுதல்; to be in excess; to yield more than the estimated quantity. 2. நல்ல நிலைமைக்கு வருதல்; to show improvement, as in health.

*[வாசி + காண்-,]*

**வாசிதம்**[1] *vāšidam,* பெ.(n.) புள் முதலியவற்றின் குரல் (யாழ்.அக.); cry of birds, beasts etc.

**வாசிதம்**[2] *vāšidam,* பெ.(n.) 1. அறிவு; knowledge. 2. குடியேற்றுகை; settling, peopling.

**வாசிப்பு** *vāšippu-,* பெ.(n.) 1. கல்வியறிவு; learning, knowledge. *'அவனுக்கு நல்ல வாசிப்புண்டு'.* 2. படிப்பு; reading. *'வாசிப்புச் சாலை'.* 3. தேசிக்கூத்துக்குரிய கால் அமைப்பு வகை (சிலப்.பக்.90, கீழ்க்குறிப்பு); a kind of movement of the legs in *tēši* dance.

*[வாய் → வாயி → வாசி → வாசிப்பு]*

**வாசியோகம்** *vāši-y-ōgam,* பெ.(n.) ஒக வகை; a kind of *yōga.* *"மூலக்கனலை வாசியோகத்தா லெழுப்பி" (கோபால கிருஷ்ணபாரதி 95).*

*[வாசி + ஒகம்]*

**வாசிரம்** *vāširam,* பெ.(n.) 1. நாற்சந்தி; junction where four streets meet. 2. வீடு; house. 3. பகல்; day.

**வாசிலிங்கரு** *vāšiliṅgaru,* பெ.(n.) தண்டு (மூ.அ.); stem of a plant.

**வாசிவாரியன்** *vāši-vāriyaṉ,* பெ.(n.) குதிரையைப் பழக்குவதில் வல்லவன்; one skilled in training horses. *"வாசிவாரியன் ஐந்து கதியையும் பதினெட்டுச் சாரியையும் பயிற்றுகையினாலே" (மதுரைக்.389, உரை).*

**வாசினி** *vāšiṉi,* பெ.(n.) பெண் குதிரை (யாழ்.அக.); mare.

*[வாசி → வாசினி]*

வாசினை *vāśiṉai,* பெ.(n.) 1. படிக்கை; reading. *"வாசகன் மற்றது வாசினை செய்தபின்" (சூளா. சீய. 90).* 2. யாழ் முதலியன இசைப்பிக்கை; playing on a musical instrument. *"குழலவளுடைய யாழ் வாசினையை" (சீவக.603, உரை).*

*[வாசி → வாசினை, வாசினை = குழல் வாசிப்பு. (வ.மொ.வ.164)]*

வாசுகன்மூச்சு *vāśugaṉ-mūccu,* பெ.(n.) கருமுகிற் செய்ந்நஞ்சு; a kind of arsenic.

*[வாசுகன் + மூச்சு]*

வாசுகி[1] *vāśugi,* பெ.(n.) வித்தமிழ்து (மூ.அ.); seed.

வாசுகி[2] *vāśuki,* பெ.(n.) 1. உயிர்த்துளி; semen. 2. ஆத்திமல்லிகை பார்க்க; see *āttimalligai.* 4. நாகமலை; zinc-ore

வாசுகிக்கொடி *vāśugi-k-koḍi,* பெ.(n.) நாகநஞ்சு; a kind of arsenic.

*[வாசுகி + கொடி]*

வாசுகிந்தன் *vāśu-kindaṉ,* பெ.(n.) எருமை முன்னை; a tree - Premna latifolia.

வாசுகிநாதன் *vāśugi-nādaṉ,* பெ.(n.) சூதநஞ்சு; a kind of arsenic.

வாசுடா *vāśuḍā,* பெ.(n.) பலகறை; cowri

வாசுதேவமூலிகை *vāśudēva-mūligai,* பெ.(n.) வெள்ளை நீர்முள்ளி, a thorny plant bearing white flowers

*[வாசு + தேவ + மூலிகை]*

வாசுபிகை *vāśu-pigai,* பெ.(n.) ஓர் பூடு; a herb - Pimpinella - in volucrata

*[வாசு + பிகை]*

வாசுரை *vāśurai,* பெ.(n.) 1. நிலம்; earth. 2. இரவு; night. 3. பெண்; woman. 4. பெண் யானை (யாழ்.அக.); female elephant.

வாசை *vāśai,* பெ.(n.) ஆடாதோடை பார்க்க; see *āḍādōḍai.*

வாஞ்சிக்கொடி *vāñji-k-koḍi,* பெ.(n.) முல்லை; a variety of Jasmine.

*[வாஞ்சி + கொடி]*

வாஞ்சிகம் *vāñjigam,* பெ.(n.) மூங்கிலரிசி; seeds - Concretions of bamboo.

வாஞ்சிமலை *vāñji-malai,* பெ.(n.) விடத்தாரி பார்க்க; see *viḍa-t-tāri.*

*[வாஞ்சி + மலை]*

வாட்காரன் *vāṭ-kāraṉ,* பெ.(n.) அரம்பத்தால் மரமறுப்பவன்; sawyer.

*[வாள் + காரன்]*

வாட்குடி *vāṭ-kuḍi,* பெ.(n.) மறக்குடி; race of warriors. *"வாட்குடி வன்கணவர்க்கு" (பு.வெ.4, 4).*

*[வாள் + குடி]*

வாட்கூத்து *vāṭ-kūttu,* பெ.(n.) வாளைப் பிடித்து ஆடுங்கூத்து; sword dance. *"உறையைக் கழித்து வாட்கூத்து ஆடிக் காட்டுவார்" (சீவக.783, உரை).*

*[வாள் + கூத்து]*

வாட்கோரை *vāṭ-kōrai,* பெ.(n.) ஒருவகைக் கோரை (பிங்.) (மதுரைக்.172, உரை); a kind of sedge.

*[வாள் + கோரை]*



**வாட்சி** *vāṭci*, பெ.(n.) மல்லிகை, இருவாட்சி; a variety of Jasmine.

*[வாள் → வாய் → வாய்ச்சி → வாட்சி]*



**வாட்சூலை** *vāṭ-šūlai*, பெ.(n.) ஒரு வகைச் சூலை நோய்; a kind rheumatic pain.

**வாட்டசாட்டம்** *vāṭṭa-šāṭṭam*, பெ.(n.) தோற்றப் பொலிவு (கொ.வ.); being stalwart and shapely. *'ஆள் வாட்டசாட்டமாய் இருக்கிறான்'.*

*[வாட்ட + சாட்டம்]*

**வாட்டப்பொலி** *vāṭṭa-p-poli*, பெ.(n.) களத்தில் அடித்துப் போடப்பட்டிருக்கும் நீண்ட நெற்பொலி (இ.வ.); long heap of paddy on the threshing-floor.

*[வாட்டம் + பொலி]*

**வாட்டம்**[1] *vāṭṭam*, பெ.(n.) 1. வாடுகை; fading, withering. 2. உலர்ச்சி; dryness. 3. மெலிவு; leanness. *"மானமங்கையர் வாட்டமும் பரிவும்..... தீர்ந்தொளி சிறந்தார்" (சீவக.2382).* 4. வருத்தம்; trouble, distress. *"வாட்டிய வாட்டஞ் சொல்லி" (அரிச்.பு.விவாக.32).*

*[வாடு → வாட்டம்]*

**வாட்டம்**[2] *vāṭṭam*, பெ.(n.) 1. ஒழுங்கான சாய்வு; slope, gradient. *"நீர்வாட்டம்".* 2. வடிவழகு; beauty of form. *'ஆள் வாட்டமாயிருக்கிறான்'.* 3. மனக்களிப்பு; sumptuousness. *'சோறு வாட்டமாய்க் கிடைத்தது'.* 4. தோற்றப் பொலிவு (கொ.வ.); being stalwart and shapely. 5. நீட்டம் (இ.வ.); length. 6. பயனுறுதல்; advantage, suitability. *'காற்று வாட்டமாயடிக்கிறது'.*

ம. வாட்டம்; க. வாட; தெ. வாடமு.

*[வாள் → வாடு → வாட்டம்]*

அங்கணம் வாட்ட சாட்டமாயிருந்தால் தண்ணீர் சரட்டென்று போகும் என்னும் வழக்கை நோக்குக – (வ.மொ.வ.2., பக். 85).

**வாட்டம்**[3] *vāṭṭam*, பெ.(n.) 1. தோட்டம் (வின்.); garden. 2. தெரு (யாழ்.அக.); street. 3. வழி (சது.); way, road.

*[வாள் → வாடு → வாட்டம்]*

**வாட்டரவு** *vāṭṭaravu*, பெ.(n.) 1. சோர்வு (யாழ்.அக.); weariness, fatigue. 2. உலர்கை (வின்.); withering, fading.

**வாட்டல்** *vāṭṭal*, பெ.(n.) வாட்டப்பட்ட பொருள்; roast, anything roasted.

[வாடு → வாட்டு → வாட்டல்]

வாட்டலை *vāṭṭalai*, பெ.(n.) வாட்டாளை பார்க்க (யாழ்.அக.); see *vāṭṭalai*.

வாட்டாங்கொடி *vāṭṭāṅ-koḍi*, பெ.(n.) சோமலதைக் கொடி; soma plant.

மறுவ. ஆட்டலாங்கொடி.

வாட்டாழை *vāṭṭāḻai*, பெ.(n.) கடற்கரையில் உண்டாம் பழச்செடி வகை (மலை.); a coastal plant yielding edible fruits.

மறுவ. கடற்றாழை.

[வாள் + தாழை]

வாட்டாளை *vāṭṭāḷai*, பெ.(n.) மெலிந்தவன் (யாழ்.அக.); emaciated man.

[வாடு → வாட்டு → ஆள்]

வாட்டாறு *vāṭṭāṟu*, பெ.(n.) மலைநாட்டுத் திருமால் திருப்பதிகளுள் ஒன்று; a *Visṇu* shrine in the Travancore state. *“வளநீர் வாட்டாற்றெழினியாதன்”* *(புறநா.396). “வாட்டாற்றா னடிவணங்கி” (திவ்.திருவாய்.10, 6, 2).*

[வாட்டம் + ஆறு]

வாட்டானை *vāṭṭāṉai*, பெ.(n.) அறுவகைத் தானைகளுள் ஒன்றான வாட்படை; company of swordsmen in an army, one of *aṟuvagai-t-tāṉai*. *“பொய்யா வாட்டானை .... தென்னவன்” (கலித்.98) (திவா.).*

[வாள் + தானை]

வாட்டி[1] *vāṭṭi*, பெ.(n.) தடவை; time, turn. *“மூன்று வாட்டி வந்து போனான்”.*

தெ. மாடு; க. மாட்டு.

[வள் → வாள் → வாட்டி (மு.தா.258)]

வாட்டி[2] *vāṭṭi*, பெ.(n.) களமடிக்கும் கடைசிப் பிணையல் மாடு (இ.வ.); the bull at the farthest end from the pole in the centre of the threshing-floor in treading corn.

வாட்டி[3] *vāṭṭi*, பெ.(n.) பருத்தி; cotton.

வாட்டிப்பிடிப்பான் *vāṭṭip-piḍippāṉ*, பெ.(n.) தழுதாழை; a shrub - a hedge tree- clerodendron phlomoides *koḍi*.

[வாட்டி + பிடிப்பான்]



வாட்டிப்பிழிதல் *vāṭṭi-p-piḻidal*, பெ.(n.) வெற்றிலையை அனலில் வாட்டிக் கசக்கிச் சாறு எடுக்கும் முறை; squeezing the juice after slight heating as in betel.

[வாட்டி + பிழிதல்]

வாட்டியபுட்பம் *vāṭṭiya-puṭpam*, பெ.(n.) 1. சந்தனம்; sandalwood. 2. மஞ்சள்; turmeric.

வாட்டியம் *vāṭṭiyam*, பெ.(n.) 1. தோட்டம்; garden. 2. வீடு (யாழ்.அக.); house.

வாட்டியாயினி *vāṭṭiyāyiṉi,* பெ.(n.) அதிபலை; species of Hibiscus.

மறுவ. பேராமுட்டி.

வாட்டு[1]-தல் *vāṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. உலர்த்துதல்; to cause to wither or fade; to dry; to scorch. 2. வதக்குதல்; to roast. 3. வருத்துதல்; to vex, afflict, mortify. *"எளியரை வலியர் வாட்டின் வலியரை... தெய்வம் வாட்டும்" (காஞ்சிப்பு.கடவுள் வா.7).* 4. கெடுத்தல்; to injure; to destroy. *"இனம் போக்கி நின்றாரிகல் வாட்டி" (பு.வெ.2, 5).* 5. ஆடை வெளுத்தல்; to wash, as cloth. *"ஸ்ரீவைஷ்ணவ வண்ணத்தான் திருப்பரிவட்டங்களை அழகிதாக வாட்டி" (ஈடு.5, 10, 6).*

க. பாடு; தெ. வாடு; ம. வாடுக; **Ko.** vaa-ṟ.

*[வாடு → வாட்டு → வாட்டு-,]*

வாட்டு[2] *vāṭṭu,* பெ.(n.) 1. பொரியல்; roasted or fried flesh or vegetable. *"மனைவாழளகின் வாட்டுடன் பெறுகுவிர்" (பெரும்பாண்.256).* 2. இடர்; affliction. *'அவனை நல்ல வாட்டு வாட்டினான்'.*

க. பாடு.

*[வாடு → வாட்டு.]*

வாட்டு[3] *vāṭṭu,* பெ.(n.) 1. ஒழுங்கான சாய்வு; slope, gradient. *"நீர்வாட்டுச் சரியா விருக்கிறது".* 2. அழகானது (இ.வ.); that which is handsome. 3. தகுதியானது (வின்.); that which is suitable. *'அந்தத் தொழில் எனக்கு வாட்டா யிருக்கவில்லை'.* 4. சார்பு; side, nearness. *'என் பக்கவாட்டி லிராதே'.* 5. பழக்கமிகுதியா லேற்படும் பயிற்சி; facility from frequent use, as of the right or the left hand. *'அவன் இடக்கை வாட்டுள்ளவன்'.* 6. மலிவு (வின்.); cheapness. *'அது எனக்கு வாட்டாய்க் கிடைத்தது'.*

வாட்டுசோகை *vāṭṭu-cōgai,* பெ.(n.) சோகைநோயால் உண்டாகும் வீக்க வகை; bright's disease.

வாட்படை *vāṭ-paḍai,* பெ.(n.) வாள்தாங்கிப் போர்செய்யும் வீரர்; army of soldiers armed with swords. *"வாட்படையை யோட்டி" (பட்டினப்.226, உரை).*

*[வாள் + படை.]*

வாட்படையாள் *vāṭ-paḍaiyāḷ,* பெ.(n.) கொற்றவை (பிங்.); Durga, as armed with sword.

*[வாட்படை → வாட்படையாள்]*

வாட்பல் *vāṭ-pal,* பெ.(n.) அரம்பம் போன்ற பல்லமைப்பு; serrated tooth, toothed like a saw.

*[வாள் + பல்]*

வாட்பல்விலக்கி *vāṭ-pal-vilakki,* பெ.(n.) 1. சிறிய அரவகை (செங்கை); tenon saw. 2. அரத்தின் பற்களை நேராக்கும் கருவி; saw-set.

*[வாள் + பல் + விலக்கி.]*

வாட்போக்கி *vāṭpōkki,* பெ.(n.) திருச்சி மாவட்டத்தில் அமைந்துள்ளதும் அப்பரால் பாடப்பட்டதுமான ஒரு சிவத்தலம்; one of the saiva places having the distinction of being sung by saint Appar. It is in Tiruchi District.

வாட்போக்கிக்கலம்பகம் *vāṭ-pōkki-k-kalambagam,* பெ.(n.) பெரும்புலவர் மீனாட்சி சுந்தரம் பிள்ளையால் கி.பி.19ஆம் நூற்றாண்டில் எழுதப் பெற்ற நூல்; a book

written by *mīṉāṭci-sundaram-piḷḷai* in 19th century.

*[வாட்போக்கி + கலம்பகம்]*

வாட்போக்கிநாதர்உலா *vāṭ-pōkki-nādar-ulā,* பெ.(n.) சேறை கவிராசப் பண்டிதர் என்பவரால் கி.பி.16ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட நூல்; a book written by *Sēṟai Kavirāsapanditar* in 20th century.

*[வாட்போக்கி + நாதர் + உலா. நாதர் = skt.]*

வாட்போர் *vāṭ-pōr,* பெ.(n.) வாளால் செய்யும் சண்டை; fight with the sword. *"வாட்போரான் மிகுகின்ற..... வீரருடைய" (மதுரைக்.53, உரை).*

*[வாள் + போர்]*

வாடகம் *vāḍagam*, பெ.(n.) வாடகை (இ.வ.); rent.

*[வாழ் → வாழகை → வாடகை → வாடகம்]*

வாடகை[1] *vāḍagai,* பெ.(n.) கூலி; rent, hire. *"வாடகைக் குதிரை" (திருவேங்.சத.85).*

*[வாழ் → (வாழகை) - வாடகை = வீட்டிற் குடியிருத்தற்குக் கட்டும் மாத அல்லது ஆட்டைக் கட்டணம். பின்பு இயங்குதிணைப் பொருள்களைப் பயன்படுதற்குக் கொடுக்கும் கட்டணமும் இப்பெயர் பெற்றது.]*

வடவர் பட் (bhat) என்னுஞ் சொல்லை மூலமாகக்காட்டி, அதையும் ப்ருத்த (*bhṛta*) என்பதன் திரிபாக்குவர். bhṛ = பொறு, bhṛta = தாங்கப் பெற்றவன், கூலிக்கு அமர்த்தப் பெற்ற வேலைக்காரன் அல்லது உழைப்பாளி அல்லது படைஞன். இவ்வகையிலும் மூலம் தமிழ்ச் சொல்லே. பொறு = bhṛ (வ.மொ.வ. 2., பக். 85).

வாடகை[2] *vāḍagai,* பெ.(n.) 1. சுற்றுவட்டம்; region, district. *"அரசூர் வாடகையில்" (S.I.I.iii.109).* 2. தெரு (யாழ்.அக.); street. 3. கொல்லை (யாழ்.அக.); garden. 4. வாகன சாலை (யாழ்.அக.); stable. 5. மண்சுவர் (யாழ்.அக.); mud wall.

வாடநாழி *vāḍanāḻi*, பெ.(n.) பேய்ப்புடலை; a bitter wild snake gourd, good for fever - Tricosanthes lacmiosa.

வாடபதி *vāḍa-padi*, பெ.(n.) உடம்பின் கொழுப்பு; fat of the body-adipose tissue.

வாடபூமாது *vāḍapūmādu*, பெ.(n.) 1. மூலி, கொட்டைப்பாசி; a kind of moss. 2. ஒருவகை வளி; a gas.

வாடல் *vāḍal,* பெ.(n.) 1. வாடுகை; withering; drying; becoming lean; fading. 2. வாடின பொருள்; that which is faded, or withered, that which is stale or not fresh, as vegetables. 3. உலர்ந்த பூ (பிங்.); faded flower.

*[வாடு → வாடல்]*

வாடவசி *vāḍavaśi*, பெ.(n.) தொட்டிவிடம்; a kind of arsenic-red orpiment.

*[வாட + வசி]*

வாடன்சம்பா *vāḍaṉ-cambā,* பெ.(n.) மட்டநெல்வகை; an inferior kind of paddy.

*[வாடன் + சம்பா]*

வாடாக்கடமை *vāḍā-k-kaḍamai,* பெ.(n.) திட்டமான வரி; permanently fixed tax. *"இவ்வாண்டு முதல் வாடாக்கடமையாக நிறுத்துவித்து" (S.I.I.V.120).*

*[வாடா + கடமை]*

**வாடாக்குறிஞ்சி** *vāḍā-k-kuriñji,* பெ.(n.) உலரும் நிலையினும் தன் இயற்கை நிறம் மாறாத பூ வகை (பிங்.); a plant whose flowers do not lose colour in withering.

மறுவ. குரவகம்.

*[வாடா + குறிஞ்சி]*

**வாடாத்தம்** *vāḍāttam,* பெ.(n.) ஆல்; banyan tree - ficus bengalensis.

*[வடம் + அத்தம்]*

**வாடாத்தாமரை** *vāḍā-t-tāmarai,* பெ.(n.) பண்டைக்கால அரசர் பாணர்க்கு அளிக்கும் பொற்றாமரைப்பூ; lotus-shaped ornament of gold, presented to bards by ancient kings. *"வாடாத் தாமரை சூட்டுவ னினக்கே" (புறநா.319).*

*[வாடு + ஆ + தாமரை]*

**வாடாப்பூ** *vāḍā-p-pū,* பெ.(n.) வாடா மல்லிகை, தென்னம்பூ, பனம்பூ, பறிக்காதபூ; unfaded and unplucked flowers.

*[வாடா + பூ]*

**வாடாமல்லி** *vāḍā-malli,* பெ.(n ) வாடா மல்லிகை (இ.வ.) பார்க்க; see *vāḍa-malligai.*

*[வாடு + 'ஆ' (எ.ம.இ.நி.) + மல்லி]*

**வாடாமல்லிகை** *vāḍā-malligai,* பெ.(n.) பூச்செடிவகை (வின்); bachelor's buttons.

*[வாடு + 'ஆ' (எ.ம.இ.நி.) + மல்லிகை]*

**வாடாமாலை** *vāḍā-mālai,* பெ.(n.) 1. பொன்னரி மாலை; gold necklace, as not fading like the garland of flowers. *(பூ மாலை போன்று வாடாது). "வாடாமாலை பாடினி யணிய" (புறநா.364).* 2. கிழி கிடை முதலியவற்றால் செய்யப்படும் மாலை (சிலப்.5, 33, உரை); garland made of rags, pith etc.,

*[வாடு + ஆ (எ.ம.) + மாலை]*

**வாடாமுட்செடி** *vāḍā-muṭšeḍi,* பெ.(n.) மஞ்சட்பூவுள்ள ஓர் செடி; a thorny plant with yellow flowers-Furze.

*[வாடா + முள் + செடி]*

**வாடாவஞ்சி** *vāḍā-vañji,* பெ.(n.) *கருவூர்* பார்க்க; see *karu-v-ūr. "வாடாவஞ்சி வாட்டு நின்.... நோன்றான்" (புறநா.39).*

*[வாடு + 'ஆ' (எ.ம.இ.நி.) + வஞ்சி]*

**வாடாவள்ளி** *vāḍā-vaḷḷi,* பெ.(n.) 1. ஒரு வகைக் கூத்து; a kind of dance. *"வாடா வள்ளியின் வளம்பல தரூஉ நாடு பல" (பெரும்பாண்.370).* 2. ஓவியம் (அக.நி.); painting, picture.

*[வாடு + 'ஆ' (எ.ம.இ.நி.) + வள்ளி]*

**வாடாவிளக்கு** *vāḍā-viḷakku,* பெ.(n.) நந்தாவிளக்கு (நெல்லை); perpetually burning lamp.

*[வாடு + ஆ (எ.ம.இ.நி.) + விளக்கு]*



**வாடாவூட்டு** *vāḍā-v-ūṭṭu,* பெ.(n.) திட்டமான வரி; permanently fixed tax.

வாடி[1] *vāḍi*, பெ.(n.) தொட்டாற்சுருங்குஞ் செடி வகை; a sensitive plant.

வாடி[2] *vāḍi*, பெ.(n.) 1. தோட்டம் (வின்.); garden. 2. மதில் (யாழ்.அக.); wall. 3. முற்றம் (யாழ்.அக.); courtyard. 4. வீடு (யாழ்.அக.); house. 5. மீனுலர்த்துமிடம் (இ.வ.); fish-curing yard. 6. பட்டி; village, hamlet. 7. சாவடி (வாடிவீடு); rest-house 8. காணிக்காரரின் புல் வேய்ந்த மூங்கிற் குடிசை; hut of bamboo and grass, of *kāṇi-k-kārar* (G.TnD 1, 7). 9. அடைப்பிடம் (வின்.); enlosure, fenced place 10. சூழ வேலி கோலிய விறகு, மரம் முதலியன விற்குமிடம் (விறகுவாடி, மரவாடி.); yard, shed, where firewood is stored for sale.

*[பாடி → வாடி (செல்வி.75, ஆடி, 606)]*

வாடிக்கை *vāḍikkai*, பெ.(n.) 1. வழக்கம்; habit *"வேதங்களைக் கிளி வாடிக்கையாற் கற்று" (இராமநா. அயோத், 22).* 2. வழக்கமாகப் பற்றுவரவு செய்கை; custom, as in dealing. 3. முறை; usage *"உலக வாடிக்கை நிசமல்லவோ" (குமரே. சத.69).* 4. வாடிக்கைக்காரன் பார்க்க; see *vāḍikkai-k-kāraṉ.*

க., து. வாடிகெ; தெ. வாடு, வாடுக.

*[பாடு → வாடுக்கை → வாடிக்கை (மு.தா.304)]*

வாடிக்கைக்காரன் *vāḍikkai-k-kāraṉ*, பெ.(n.) 1. வழக்கமாக ஓரிடத்துப் பற்றுவரவு செய்வோன்; customer. 2. பண்டங்களை வழக்கமாக ஓரிடத்து விலைக்குக் கொடுத்து வருவோன்; customary supplier of goods

*[வாடிக்கை + காரன்]*

வாடிகம் *vāḍigam*, பெ.(n.) பிரமி[2] (நாமதீப. 340) பார்க்க; see *pirami.*

வாடிகை *vāḍigai*, பெ.(n.) 1. வாடகை[2] 2, 3, 4 பார்க்க; see *vāḍagai.*

வாடிவாசல்[1] *vāḍi-vāšal*, பெ.(n.) அரண்மனைவாசல் (இ.வ.); entrance hall of a palace or mansion.

*[பாடிவாசல் → வாடிவாசல் (செல்வி.75, ஆடி. 006.)]*

வாடிவாசல்[2] *vāḍi-vāšal*, பெ.(n.) 1. முல்லை நில மாட்டுத் தொழுவ வாசல்; entrance of cowshed in mullai tract. 2. இடையர் குடியிருப்புவாசல்; entrance of yadhava's colony. 3. சல்லிக்கட்டுக் காளைகளை அடைத்து வைத்திருக்கும் தொழுவ வாசல்; small entrance in the narrow passage between the ground and the place where the bulls are kept in the sport of *jalli-k-kaṭṭu* 4. பாசறை வாசல்; entrance of encampment.

*[பாடிவாசல் → வாடிவாசல். (செல்வி.75, ஆடி. 006.)]*

வாடிவீடு *vāḍi-vīḍu*, பெ.(n.) 1. பாசறை; war camp. 2. அரசன் தங்கல்மனை; royal rest-house. 3. சாவடி; choultry.

*[பாடிவீடு → வாடிவீடு]*

வாடிவேலி *vāḍi-vēli*, பெ.(n.) சிற்றூரின் எல்லைக் குறி (கோவை.); the boundary line of a village

*[வாடி+வேலி]*

வாடு[1]-தல் *vāḍu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. உலர்தல்; to wither, fade, dry up. *"பொதியொடு பீள்வாட" (நாலடி, 269).* 2. மெலிதல்; to be emaciated, to become weak. *"எந்தோள் வாட" (கலித்.68.).* 3. மனமழிதல்; to pine away, grieve. *"வாடினேன் வாடி வருந்தினேன்"*

(திவ்.பெரியதி.1, 1, 1). 4. பொலிவழிதல்; to turn pale. "குழலியென் வாடிப் புலம்புவதே" (திருக்கோ.14). 5. தோல்வியடைதல்; to be defeated. "வாடாவஞ்சி தலைமலைந்து" (பு.வெ.3, 1, கொளு). 6. கெடுதல்; to perish. "காரிகை பெற்றதன் கவின் வாட" (கலித்.124). 7. நீங்குதல்; to be removed. "சூலமும்... கரத்தினில் வாடா திருத்தி" (கல்லா.87, 29). 8. குறைதல்; to diminish, decrease. "வாட்டருஞ் சீர்க்கண்ணகி நல்லாளுக்கு" (சிலப்.9, 40). 9. நிறை குறைதல் (இ.வ.); to fall short in weight.

க. பாடு; குட. பாட்; து. பாடுனி; தெ. வாடு; பார்ஜி. வாட்; குவி. வ்விராலி; ம. வாடுக; **Kod.** ba-d; **pa.** *vāḍ*

வாடு² *vāḍu,* பெ.(n.) வாடற்பூ; faded flower. "ஈங்கைவா டுதிர்புக" (கலித்.31).

*[வீ → வீடு → வாடு]*

வாடூன் *vāḍūṉ,* பெ.(n.) உப்புக்கண்டம்; dried flesh. "வாராதட்ட வாடூன் புழுக்கல்" (பெரும் பாண். 100).

*[வாடு + ஊன்]*

வாடை¹ *vāḍai,* பெ.(n.) 1. வடகாற்று (பிங்.); northwind. "வாடை நலிய வடிக்கணா டோணைசை" (பு.வெ.8, 16). 2. குளிர் காற்று (கொ.வ.); chill wind. 3. காற்று (பிங்.); wind. "வாடை யுயிர்ப்பின்" (கம்பரா. மிதிலைக். 66). 4. மணம்; fume, scent "சுகந்த வாடையின்" (திருப்பு.143). 5. வடவை பார்க்க; see *vaḍavai.* "வாடை யெரிகொள்வேலை" (திருப்பு.382).

ம. வாட; தெ. வாட; குருக். பார்னா.

வாடை² *vāḍai,* பெ.(n.) 1. தெருச்சிறகு (சூடா.); row of houses, as in a street. "கீழைவாடை மேலைவாடை" (சூடா.). 2. தெரு (பிங்.); street. 3. இடையர் அல்லது வேடர் வாழும் வீதி (வின்.); street where herdsmen or hunters reside. 4. குறுஞ் சிற்றூர்; village, hamlet. 5. வழி; direction. 'இதே வாடையாகப் போ'.

வாடை³ *vāḍai,* பெ.(n.) மருந்து (பிங்.); medicine.

வாடைக்கச்சான் *vāḍai-k-kaccāṉ,* பெ.(n.) வடமேல்காற்று (யாழ்.அக.); north-west wind.

*[வாடை + கச்சான். கச்சான் = மேல்காற்று, கோடைக்காற்று.]*

வாடைக்கொண்டல் *vāḍai-k-koṇḍal,* பெ.(n.) வடகீழ்க்காற்று (யாழ்.அக.); north-east wind.

*[வாடை + கொண்டல்]*

வாடைப்பாசறை *vāḍai-p-pāšaṟai,* பெ.(n.) பாசறைக்கண் வீரர் தம் காதன் மகளிரை நினைந்து துயருறும்படி செய்கின்ற வாடைக்காற்றின் மிகுதியைக் கூறும் புறத்துறை (பு.வெ.8,16.); theme describing the north wind which blows in the camp of soldiers and distresses them by reminding them of their lady-loves.

*[வாடை + பாசறை]*

வாடைப்பொடி *vāḍai-p-poḍi,* பெ.(n.) 1. நறுமணத்தூள் (இ.வ.); aromatic or scented powder. 2. வயப்படுத்தும் பொடி; medicated powder that charms a person and keeps him under, fascination. "வாடைப் பொடியிட்டான்" (விறலி விடு.823).

*[வாடை + பொடி. வாடை = நறுமணம்.]*

வாடையவலன் *vāḍaiyavalaṉ*, பெ.(n.) பேராமுட்டி; a plant - pavonia odorata.

*[வாடை + அவலன்]*

வாடையிலோடு-தல் *vāḍaiyil-ōḍu-*, 5 செ.கு.வி. (v.i.) வடகாற்றின் உதவியால் மரக்கலம் பாய் விரித்துச் செல்லுதல் (வின்.); to sail with the north wind

*[வாடையில் + ஓடு-,]*

வாடைவசியம் *vāḍai-vaśiam*, பெ.(n.) (in magic) enchanting, charming.

*[வாடை + வசியம்]*

வாண்டியம்[1] *vāṇḍiyam*, பெ.(n.) பேராமுட்டி; a plant - pavonia odorata.

வாண்டியம்[2] *vāṇḍiyam*, பெ.(n.) செடிவகை; pink-tinged white sticky mallow.

வாண்டு *vāṇḍu*, பெ.(n.) மிகவும் குறும்பு செய்கிற குழந்தை; mischievous child. *'விடுமுறை விட்டால் இந்த வாண்டுகளைச் சமாளிக்க முடியாது'.*

வாண்டைக்கன்று *vāṇḍaik-kaṉṟu*, பெ.(n.) மூன்று மாத அகவைக்கு மேற்படாத பல் முளைக்காத ஆடு; the lamb which has three months old and not sprouting of teeth.

*[வாண்டை + கன்று]*

வாண்டையான் *vāṇḍaiyāṉ*, பெ.(n.) கள்ளர் இனத்தவரின் பட்டப் பெயர்களுள் ஒன்று; a title of the *Kaḷḷar* caste.

வாண்மங்கலம் *vāṇ-maṅgalam*, பெ.(n.) 1. பகையரசை வென்ற வேந்தன் தன் வாளினைக் கொற்றவை மேல் நிறுத்தி நீராட்டு தலைக் கூறும் புறத்துறை (தொல்.பொருள்.68, உரை); theme which describes the sword of a victorious king being placed in the hands of *koṟṟavai* and given a ceremonial bath. 2. வீரனது வாள் வென்றியாற் பசிப்பிணி தீர்ந்த பேய்ச் சுற்றம் அவன் வாளினை வாழ்த்துதலைக் கூறும் புறத்துறை (தொல். பொருள். 91.); theme which describes a victor's sword being blessed by the devils whose hunger has been satisfied by its deeds of slaughter.

*[வாள் + மங்கலம்]*

வாண்மண்ணுநிலை *vāṇ-maṇṇu-nilai*, பெ.(n.) நன்னீராலே மஞ்சனமாட்டிய அரச வாளின் வீரத்தைக் கூறும் புறத்துறை (பு. வெ. 6, 27); theme which describes the ceremonial bath given to a king's sword and the heroic achievements of the king with that sword.

*[வாள் + மண்ணுநிலை]*

வாண்முகம் *vāṇ-mugam*, பெ.(n.) வாளின் வாய்; edge of sword. *"வாண்முகம் பொறித்த மாண்வரி யாக்கையர்" (பதிற்றுப்.58,3).*

*[வாள் + முகம்]*

வாண்முட்டி *vāṇ-muṭṭi*, பெ.(n.) வாளின் பிடி; handle or hilt of a sword. *'வாண்முட்டியை இடையறும்படி பிடித்த கையினர்' (சீவக. 2217, உரை).*

*[வாள் + முட்டி]*

வாணக்கந்தகம் *vāṇa-k-kandagam*, பெ.(n.) பொறிவாணம் முதலிய செய்தற்குரிய தனிம வகை (M.M.300.); stick-sulphur, roll sulphur, as used in fireworks.

[வாணம் + காந்து → காந்தகம் → கந்தகம்]

வாணக்கா *vāṇakkā*, பெ.(n.) நெல்லிப் பருப்பு; kernel of the fruit-Emblica-Indian goose berry.

வாணக்காரன் *vāṇa-k-kāran*, பெ.(n.) வாணவெடிகள் முதலியன செய்து விற்பவன்; one who manufactures and sells fireworks.

க. வாணகார.

*[வாணம் + காரன். காரன் = வினைமுதல் உடைமை முதலிய பொருளில் வரும் ஆண்பாற் பெயரீறு.]*

வாணக்குழல் *vāṇa-k-kuḻal*, பெ.(n.) அதிர்வேட்டுக்காகப் பொறிவாண மருந்து அடைக்கும் வெடிகுழாய்; metallic tube fixed in a block of wood, used for loading fireworks with gun powder.

*[வாணம் + குழல்]*

வாணகந்தி *vāṇa-kandi*, பெ.(n.) அரசமரம்; a sacred tree - Ficus religiosa.

*[வாண + கத்தி]*

வாணகந்தியுப்பு *vāṇa-kandi-yuppyu*, பெ.(n.) வெடியுப்பு; salt petre.

*[வாணகந்தி + உப்பு]*

வாணகம் *vāṇagam*, பெ.(n.) 1. வாணம் 1, 20 பார்க்க; see *vāṇam*. 2. ஆவின் மடி; cow's udder. 3. வேய்ங்குழல்; flute. 4. தனிமை; loneliness.

வாணகன் *vāṇagaṉ*, பெ.(n.) திருமால் (யாழ்.அக.); *visṇu*.

*[ஒருகா. (வான் → வானகன் → வாணகன்)]*

வாணகாந்திகம் *vāṇa-kāndigam*, பெ.(n.) சோதிப்புல்; *šōdi-p-pul*.

*[வாண + காந்திகம்]*

வாணகோப்பாடி *vāṇa-kō-p-pāḍi*, பெ.(n.) வாணவரசர் ஆண்டதும், மைசூர் அரசவை, கர்நூல் மாவட்டம், வட ஆற்காடு மாவட்டம் ஆகியவற்றின் பாகங்கள் அடங்கியதுமான நாடு; the country of the *Bāṇas*, an ancient Kingdom comprising portions of the mysore state, and of the karnool and north arcot districts (S.I.I.ii, preface.27).

*[வாண + கோப்பாடி]*

வாணதண்டம் *vāṇa-daṇḍam*, பெ.(n.) புடைவை நெய்யுங் கருவி வகை (யாழ்.அக.); apparatus for weaving sarees.

*[வாண + தண்டம்]*

வாணதீர்த்தம் *vāṇa-tirttam*, பெ.(n.) திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள ஓர் அருவி; a sacred waterfall in the Tirunelvelly District.

*[வாண +* **skt.** *tirtha > த. தீர்த்தம்]*

வாணபுரம் *vāṇa-puram*, பெ.(n.) வாணாசுரனது தலைநகர்; the capital of *Bāṇā's* Kingdom. "*வாணபுரம்புக்கு*" *(திவ்.திருவாய்.7,10,7)*.

*[வாண(ன்) + புரம்]*

வாணம் *vāṇam*, பெ.(n.) 1. அம்பு; arrow. 2. தீ; fire. "*பாயும் புகைவாணங் கொடு பாணம்*" *(இரகு.நகர.24)*. 3. வளைந்து செல்லும் வாணக்கட்டு முதலியன (யாழ்.அக.); rocket, fire works.

*[வாளம் → வாணம். வாணம் → வ. பாண. (சு.வி. 28)]*

வாணரம் *vāṇaram*, பெ.(n.) மூளையையும் முதுகந்தண்டங் கொடியையும் பற்றிய நோய்; inflammation of the brain and the spinal card-Meningitis.

வாணலி *vāṇali,* பெ.(n.) வறுக்குஞ்சட்டி; frying pan.

தெ., க. பாணலி.



வாணலிங்கம் *vāṇa-liṅgam,* பெ.(n.) வாணாசுரனாற் பூசிக்கப்பட்டதும், நருமதையில் அகப்படுவதுமான இலிங்க வகை; a form of *Liṅgam*, found in the *Narmadā* as worshipped by the Asura *Bāṇa* "*வாணனெனுமசுர ணர்சித்தான்... வாணலிங்கம்*" *(சைவச.பொது.85)*

*[வாண + லிங்கம் → இலங்கம்]*

வாணவாதம் *vāṇa-vādam*, பெ.(n.) கால் கையை சுருக்க வாங்கி இழுத்துக் கடுத்து நோயை யுண்டாக்கும் ஒரு வகை ஊதை நோய்; a kind of rheumatism.

*[வாணம் + வாதம். **Skt.** வாதம்.]*

வாணவுப்பு *vāṇa-v-uppu*, பெ.(n.) வெடியுப்பு; potassium nitrate.

*[வாணம் + உப்பு]*

வாணவெடி *vāṇa-veḍi*, பெ.(n.) வெடிவகை; a kind of rocket fire.

*[வாணம் + வெடி]*



வாணவேடிக்கை *vāṇa-vēḍikkai,* பெ.(n.) வாணங்களை வெடித்து நிகழ்த்தும் கண்கவர் காட்சி; display of fireworks.

*[வாள் → வாளம் → வாணம் + வேடிக்கை]*

வாணம்¹ *vāṇam*, பெ.(n.) 1. கடைகால் (நெல்லை.); excavation for laying foundation 2. வெடி; cracker.

*[வானம் → வாணம்]*

வாணம்² *vāṇam*, பெ.(n.) 1. அம்பு; arrow. 2. தீ; fire. *"பாயும் புகைவாணங் கொடு பாணம்" (இரகு. நகர. 24).* 3. வாணவெடி முதலியன (யாழ்.அக.); rocket fire works.

*[வாளம் → வாணம். வாணம் → வ.பாண.] (சு.வி.28)*

வாணன்¹ *vāṇaṉ*, பெ.(n.) நெல்வகை; a kind of paddy. *"மலை முண்டன் வாணன்" (நெல்விடு. 186).*

வாணன்² *vāṇaṉ,* பெ.(n.) 1. குடியிருப்பவன்; resident. "*அண்ட வாண ரமுதுண நஞ்சுண்டு*" (தேவா.644,6). 2. ஏதேனும் ஒரு தொழிலால் வாழ்பவன்; one who pursues

a profession or calling. "*பாவாணன்*". 3. நல்வாழ்வுள்ளவன் (வின்.); prosperous man.

*[வாழ் + ந் + அன் → வாணன். 'ந்' பெயரிடை நிலை.]*

வாணன்³ *vāṇaṉ,* பெ.(n.) 1. மாவலியின் மகனான ஓர் அரசன்; an asura, son of *Māvali.* "*வாணன் பேரூர்*" *(மணிமே.3.123).* 2. மாவலி தலைமுறையில் தோன்றிய அரசன்; King of a dynasty tracing its lineage from *Māvali.* "*வாண வித்தியாதரரான வாணராயர் மகா தேவியார்*" (S.I.I.iii,99). "*ஆறையர்கோன் வாணன்*" *(பெருந்தொ. 1185).* 3. பாண்டி நாட்டில் தஞ்சாக்கூர் என்ற நகரையாண்ட ஒரு தலைவன்; a chief of *Tañjakkūr,* a town in *Pāṇḍya* country. 4. மூன்றாவது விண்மீன் (திவா.); the third naksatra.

வாணன்கோவை *vāṇaṉ-kōvai,* பெ.(n.) தஞ்சைவாணன் மீது பொய்யா மொழிப் புலவரியற்றிய கோவைச் சிற்றிலக்கியம்; a *kōvai* trealise on *Tañjai-vāṇaṉ.*

வாணா *vāṇā,* பெ.(n.) வறுக்குஞ்சட்டி; frying pan.

*[வாணல் → வாணா]*

வாணாட்கோள் *vāṇāṭ-kōḷ,* பெ.(n.) பகைவனது அரணைக் கொள்ள நினைத்து வாளைப் புறவீடு விடுவதைக் கூறும் புறத்துறை (பு.வெ.6, 3); theme of a King sending his sword in advance at an auspicious moment, when setting out with the object of capturing the fort of his enemy.

*[வாழ் + நாள் + கோள்]*

வாணாத்தடி *vāṇā-t-taḍi,* பெ.(n.) சிலம்பக்கழி; zudgel used by Indian gymanasts in fencing.

வாணாய் *vāṇāy,* பெ.(n.) வாணலி பார்க்க; see *vāṇali.*

வாணாள் *vāṇāḷ,* பெ.(n.) 1. வாழுங்காலம்; life-time. 2. உயிர்; life. "*தெவ்வர்வாணாள் வீழ்ந்துக*" *(சீவக.3079).*

*[வாழ் + நாள்]*

வாணாளளப்போன் *vāṇāḷ-aḷappōṉ,* பெ.(n.) ஞாயிறு (நாமதீப.94); sun.

*[வாணாள் + அள → அளப்பு → அளப்போன்]*

வாணாளைவாங்கு-தல் *vāṇāḷai-vāṅgu-,* 5 செ.குன்றாவி. (v.t.) பெருந்தொந்தரவு பண்ணுதல்; to tease, worry to death. '*ஏன் என்னுடைய வாணாளை வாங்குகிறாய்?*'

*[வாணாள் + வாங்கு-.]*

வாணி¹ *vāṇi,* பெ.(n.) 1. சொல் (பிங்.); word, language, speech. "*நன்கல்ல வாணி கிளத்தலடக்கி*" *(பிரமோத். 22, 19).* 2. கல்வி; learning. "*துதி வாணி வீரம்*" (பெருந்தொ. 418). 3. கலைமகள் (பிங்.); Kalai-magal, as the Goddess of learning. "*வாணியு மல்லிமென் மலரையனும்*" *(சீகாளத். பு. நான்மு. 147).* 4. சரசுவதி நதி; the river Sarasvati. "*கங்கை காளிந்தி வாணி காவிரி... நதிகள்*" *(திரு.விளை.தல.11).* 5. ஒலி தோன்றும் இடம்; source of vocal sounds. "*நாபிக்கு நால்விரல் மேலே... வாணிக் கிருவிரலுள்ளே*" *(திருமந்.616).* 6. கூத்துவகை (பிங்.); a kind of dance.

வாணி² *vāṇi,* பெ.(n.) அம்பு (பிங்.); arrow.

வாணி³ *vāṇi,* பெ.(n.) அசமதாகம் (மலை.); bishop's weed.

வாணி[4] *vāṇi,* பெ.(n.) நீர் (வின்.); water.

வாணி[5]-த்தல் *vāṇi,* 11 செ.குன்றாவி. (v.t.) அமைத்தல்; to formmake. *"மன்னுதிரு வெண்மணலை வாணித்து" (இலஞ்சி. முருகனுலா,37).*

வாணி[6] *vāṇi,* பெ.(n.) 1. சாதிபத்திரி; mace. 2. ஓமவகை; a variety of omum. 3. வாணிகம் பார்க்க; see *vāṇigam.* 4. மனோசிலை; red orpiment. 5. கோழை நீர்; mucilage. 6. இந்துப்பு; epsom salt. 7. வாலுளுவையரிசி; seed of a plant-Celastrus paniculata. 8. முடிமாமிசம்; flesh of the head.

வாணிகச்சம் *vāṇikaccam,* பெ.(n.) வறட்சுண்டி; a species of sensitive plant-Mimosa tripuctra.

வாணிகச்சாத்து *vāṇiga-c-cāttu,* பெ.(n.) வாணிகர்திரள்; caravan of traders. *'வாணிகச் சாத்தோடு போந்து தனிமையால் யான் துயருழந்தேன்' (சிலப்.11,190,உரை).*

*[வாணிகம் + சார்த்து → சாத்து. (சாத்து = கூட்டம், வணிகக்கூட்டம்.)]*

வாணிகச்சி *vāṇigacci,* பெ.(n.) வணிக இனப் பெண்; woman of the trading caste.

*[வாணிகன் → வாணிகச்சி]*

வாணிகம்[1] *vāṇigam,* பெ.(n.) 1. கொண்டு கொடுத்தற் தொழில்; trade. *"வாணிகம் செய்வார்க்கு வாணிகம்" (குறள்.120).* 2. ஊதியம்; gain, profit. *"யானோர் வாணிகப் பரிசிலனல்லேன்" (புறநா.208).*

*[வணிகன் → வணிகம் → வாணிகம்]*

நாகரிக மக்கள் வாழ்க்கைக்கு, உணவு போன்றே உடை, கலம், உறையுள், ஊர்தி முதலிய பொருள்களும், பொன் வெள்ளி முதலிய செல்வமும் இன்றியமையாதிருப்பதால், பொருளாட்சித் துறையில், ஒரு நாட்டின் நல்வாழ்விற்கும் முன்னேற்றத்திற்கும் அடிப்படையானது உழவுத் தொழிலென்றும் அதற்கடுத்தவை இயற்கையும் செயற்கையுமான விளை பொருள்களால் செய்யப்படும் பல்வேறு கைத்தொழில்களென்றும், அவற்றிற்கடுத்தது நிலவழியும் நீர்வழியும் நடத்தப் பெறும் வணிகமென்றும், பண்டைத் தமிழர் நன்கு அறிந்திருந்தனர். அதனால் மூவேந்தரும் இருவகை வணிகத்தையும் ஊக்குதற்குச் சாலைகளும் துறைமுகங்களும் அமைத்தும் அவற்றைப் பாதுகாத்தும் வந்தனர்.

வணிகம் என்பது 'வணிஜ்' என்றும் வாணிகம் என்பது 'வாணிஜ்ய' என்றும் வடமொழியும் திரியும்.

நாட்டிற்கு உள்ளிருந்து ஆட்சியைச் செவ்வையாய்ச் செய்தற்கு ஒரு மருதநிலத் தலைநகரும், நாட்டோரத்தில் கடற்கரையிலிருந்து நீர்வாணிகத்தை ஊக்குதற்கு ஒரு நெய்தல் தலைநகருமாக, இரு தலைநகரை மூவேந்தரும் தொன்றுதொட்டுக் கொண்டிருந்தனர்.

| வேந்தன் | மருதத் தலைநகர் | நெய்தல் தலைநகர் |
|---|---|---|
| பாண்டியன் | மதுரை | கொற்கை |
| சோழன் | உறையூர் | புகார் (காவிரிப் பூம்பட்டினம்) |
| சேரன் | கருவூர்(கரூர்) | வஞ்சி. |

முதலிரு கழக நூல்களும் முற்றும் அழிந்து போனமையால், பாண்டியரின் இடைக்கழகக் கால மருதநிலத் தலைநகரும் தலைக்கழகக் கால நெய்தல்நிலத் தலைநகரும் அறியப்படவில்லை. சேரர் கொங்கு நாட்டை இழந்த பின்னர், வஞ்சிக்கே கருவூர்ப் பெயரை இட்டுக் கொண்டனர்.

கோநகர்களிலும் துறை நகர்களிலும் இருந்து, நில வணிகமும், நீர் வணிகமும் செய்து வந்த நகரத்தார் அல்லது நகரமாந்தர் என்னும் வகுப்பினரை, எண்பேராயங்களுள் ஓராயமாகக் கொண்டு, அவரை மன்னர் 'பின்னோர்' என்று சிறப்பித்தும் அவருள் தலைமையானவர்க்கு 'எட்டிப்பட்டம்' வழங்கியும், மூவேந்தரும் ஊக்கி வந்தனர்.

'எட்டிப்பட்ட'ச் சின்னமாக ஒரு பொற்பூ அளிக்கப்பெறும்.

"எட்டிப் பூப் பெற்று" (மணிமே.22 : 113)

எட்டிப்பட்டம், அதைப் பெற்றிட்ட வணிகனின்

மனைவிக்கும் அல்லது மகட்கும் மதிப்புரவுப் பட்டமாக (Title of courtesy) வழங்கி வந்ததாகப் பெருங்கதை கூறுகின்றது.

"எட்டி காவிதிப் பட்டம் தாங்கிய
மயிலியன் மாதர்" (பெருங். இலாவா. 3 : 144)

எட்டிப் பட்டத்தார்க்கு, எட்டிப் புரவு என்னும் நிலமானியமும் அளிக்கப் பட்டதாக மயிலைநாதர் உரை குறிக்கும் (நன். 158).

"கோடியும் தேடிக் கொடிமரமும் நட்டி " என்னும் உலகவழக்குத் தொடர் மொழியால் கோடிப் பொன் தேடிய செல்வர்க்குக் கொடியும் ஒன்று கொடுக்கப் பெற்றதாகத் தெரிகின்றது.

எட்டுதல் = உயர்தல். எட்டம் = உயரம். எட்டி = உயர்ந்தோன். எட்டி = செட்டி. (முதன் மெய்ப்பேறு)

ஒ.நோ : ஏண் – சேண்.
ஏமம் – சேமம்.

செட்டியின் தன்மை செட்டு.

சிரேஷ்டி என்னும் வடசொல், திரு என்னும் தமிழ்ச் சொல்லின் திரிபான ச்ரீ (ஸ்ரீ) என்பதன் உச்சத்தர (Superlative degree) வடிவினின்று திரிந்ததாகும்.

| ஒப்புத்தரம் | – உறழ்தரம் | – உச்சத்தரம் |
|---|---|---|
| ச்ரீ (ஸ்ரீ) | ச்ரேயஸ் | ச்ரேஷ்ட |

நிலவாணிகம்

நிலவாணிகர் வணிகப் பண்டங்களைக் குதிரைகள் மேலும் கோவேறு கழுதைகள் மேலும் ஏற்றிக் கொண்டு கூட்டம் கூட்டமாய்க் காட்டு வழியே தமிழகத்தை யடுத்த வடுக நாட்டிற்கும், நெடுந் தொலைவான வடநாட்டிற்கும் காவற் படையுடன் சென்று ஏராளமாய்ப் பொருளீட்டி வந்தனர். அவ்வணிகக் கூட்டங்களுக்குச் சாத்து என்று பெயர். சாத்து – கூட்டம். சார்த்து → சாத்து. சார்தல் – சேர்தல்.

சாத்து = 1. கூட்டம்.

"சுரிவளைச் சாத்து நிறைமதி தவழும்" (கல். 63 : 22).

2. வணிகக் கூட்டம்.

"சாத்தொடு போந்து தனித்துய ருழந்தேன்" (சிலப். 11 : 190). சாத்து என்பது வடமொழியில் ஸார்த்த என்ற திரியும்.

வணிகச் சாத்துகளின் காவல் தெய்வமாகிய ஐயனார்க்கு சாத்தன் என்று பெயர். அதனால் வணிகர்க்குச் சாத்தன், சாத்துவன் என்னும் பெயர்கள் இயற்பெயராய் வழங்கின. ஐயனார் கோயிலில் வணிகச் சாத்தைக் குறித்தற்கு மண்குதிரை யுருவங்கள் செய்து வைத்திருத்தலைக் காண்க. சாத்தன் என்னும் தெய்வப் பெயர் வடமொழியில் 'சாஸ்தா' எனத் திரியும்.

இனி, வணிகச் சாத்தின் தலைவனும் சாத்தன் எனப்படுவான். இப்பெயரும் 'ஸார்த்த' என்றே வடமொழியில் திரியும். இதனால் வடமொழியில் சாத்தைக் குறிக்கும் சொற்கும் சாத்தின் தலைவனைக் குறிக்கும் சொற்கும் வேறுபாடின்மையும், சாத்தன் என்னும் தெய்வத்தைக் குறிக்கும் சொல் வேறுபட்டிருப்பதும், கண்டு உண்மை தெளிக.

"குல்லைக் கண்ணி வடுகர் முனையது
பல்வேற் கட்டி நன்னாட் டும்பர்
மொழி பெயர் தேஎத்த ராயினும்
வழிபடல் சூழ்ந்திசின் அவருடை நாட்டே"
(குறுந். 11).

என்னும் குறுந்தொகைச் செய்யுள், வடுக நாட்டிற்கும்,

"நந்தன் வெறுக்கை எய்தினும் மற்றவண்
தங்கலர் வாழி தோழி !
.........................................
மாகெழு தானை வம்ப மோரியர்
புனைதேர் நேமி யுருளிய குறைத்த
இலங்குவெள் ளருவிய அறைவா யும்பர்
மாசில் வெண்கோட் டண்ணல் யானை
வாயுள் தப்பிய அருங்கேழ் வயப்புலி
மாநிலம் நெளியக் குத்திப் புகலொடு
காப்பில வைகும் தேக்கமல் சோலை
நிரம்பா நீளிடைப் போகி
அரம்போழ் அவ்வளை நிலை நெகிழ்த் தோரே"
(அகநா. 25).

என்னும் நெடுந்தொகைச் செய்யுள், விந்திய மலைக்கப்பாற்பட்ட வடநாட்டிற்கும், வாணிகச் சாத்துகள் போய் வந்தமையைக் குறிப்பாற் றெரிவித்தல் காண்க.

நீர்வாணிகம்

"உலகு கிளர்ந்தன்ன உருகெழு வங்கம்
புலவுத்திரைப் பெருங்கடல் நீரிடைப் போழ"
(அகம். 255 : 1–2)

என்பதால் கடலைப் பிளந்து செல்லும் மாபெரும்

கப்பல்கள் தமிழகத்திற் செய்யப்பட்டமை அறியப்படும்.

கப்பல்கள் தங்கும் துறைமுகத்தைச் சேர்ப்பு, கொண்கு என்பது இலக்கியவழக்கு.

கீழ்க் கடற்கரையில் கொற்கை, தொண்டி, புகார் (காவிரிப் பூம்பட்டினம்) என்னும் துறைநகர்களும், மேல் கடற்கரையில் வஞ்சி, முசிறி, தொண்டி என்னும் துறைநகர்களும் இருந்தன. இடைக் கழகக் காலத்தில் பாண்டியர் துறைநகர் குமரியாற்றின் கயவாயில் (estuary) அமைந்திருந்தது. அதன் தமிழ்ப்பெயர் (அலைவாயில்) மறைந்து அதன் மொழிபெயர்ப்பான கபாடபுரம் என்னும் வடசொல்லே இன்று இலக்கிய வழக்கிலிருக்கிறது.

இரவில் வழிதப்பிச் செல்லும் கலங்கட்கு வழிகாட்டுவற்கு, ஒவ்வொரு துறைநகரிலும் கலங்கரை விளக்கம் (light house) இருந்தது. *"இலங்குநீர் வரைப்பிற் கலங்கரை விளக்கமும்" (சிலப். 6 : 141).*

"வான மூன்றிய மதலை போல
ஏணி சாத்திய ஏற்றருஞ் சென்னி
விண்பொர நிவந்த வேயா மாடத்து
இரவில் மாட்டிய இலங்குசுடர் ஞெகிழி
உரவுநீர் அழுவத் தோடு கலங் கரையும்
துறை" (பெரும்பாண்.349-54).

கடற்கரை, உள்நாட்டை நோக்க மிகத் தாழ்ந்த மட்டத்திலிருப்பதால், துறை நகர்கள் எல்லாம் பட்டினம் எனப்பட்டன.

பதிதல் = தாழ்ந்திருத்தல். பள்ளமான நிலத்தைப் பதிந்த நிலம் என்பர். பதி + அனம் = பதனம் → பத்தனம் → பட்டனம் → பட்டினம்.

தகரம் டகரமாவது வழக்கு.

ஒ.நோ. கொத்து மண்வெட்டி → கொட்டு மண்வெட்டி.

களைக் கொத்து → களைக் கொட்டு
பொத்து → பொட்டு, பொருத்து.
வீரத்தானம் (வ.) → வீரட்டானம்
பதனம் - படனம் = நோயாளியைப் பாதுகாத்தல்.

இனி, பதனம் என்பது, கலங்கள் காற்றினாலும் கொள்ளைக்காரராலும் சேதமின்றிப் பாதுகாப்பாய் இருக்குமிடம் என்றுமாம்.

பதனம் = பாதுகாப்பு

பட்டினம் என்பதைப் பட்டணம் என்பது உலக வழக்கு. இக்காலத்திற் பட்டணம் என்பது சென்னையைச் சிறப்பாய்க் குறித்தல் போல, அக்காலத்தில் பட்டினம் என்பது புகாரைச் சிறப்பாய்க் குறித்தது. பட்டினப்பாலை, பட்டினத்துப் பிள்ளையார் என்னும் வழக்குகளை நோக்குக.

ஒரு திணைக்கும் சிறப்பாயுரியதன்றி நகரப் பொதுப் பெயராய் வழங்கும் பதி என்னும் சொல், மக்கள் பதிவாய் (நிலையாய்) இருக்கும் இடத்தைக் குறிக்கும். பதிதல் நிலையாய்க் குடியிருத்தல்.

கப்பல்கள் துறைமுகத்திற்கு வந்து சேரும்போதும் அதைவிட்டுப் புறப்படும்போதும் முரசங்கள் முழக்கப்பட்டன.

"இன்னிசை முரசமுழங்கப்
பொன் மலிந்த விழுப்பண்டம்
நாடார நன்கிழி தரும்
ஆடியற் பெருநாவாய்" (மதுரைக்.80-3).

கப்பலில் வந்த பொருள்கள் கழிகளில் இயங்கும் தோணிகளாற் கரை சேர்க்கப்பட்டன.

"கலந்தந்த பொற்பரிசம்
கழித் தோணியாற் கரை சேர்க்குந்து"
(புறநா. 343 : 5-6).

அக்காலத்தில் காவிரியாறு அகன்றும் ஆழ்ந்தும் இருந்ததால் பெருங் கப்பல்களும் கடலில் நிற்காது நேரே ஆற்றுமுகத்திற் புகுந்தன.

"........................ கூம்பொடு
மீப்பாய் களையாது மிசைப்பரந் தோண்டாது
புகாஅர்ப் புகுந்த பெருங்கலம்"
(புறநா. 30 : 10 - 2).

"பாய் களையாது பரந்தோண்டா தென்பதனால் துறை நன்மை கூறியவாறாம்" என்று பழைய வுரை கூறுதல் காண்க.

கரிகால் வளவன் காவிரிக்குக் கரை கட்டியது இங்குக் கருதத்தக்கது.

நீர் வணிகம் நிரம்ப நடைபெற்றதால், துறைமுகத்தில் எந்நேரமும் கப்பல்கள் நிறைந்திருந்தன.

"வெளி விளங்கும் களிறு போலத்
தீம்புகார்த் திரை முன்றுறைத்
தூங்கு நாவாய் துவன்றிருக்கை"
(பட்டினப். 172-4)

ஏற்றுமதியும் இறக்குமதியும் ஏராளமாய் இருந்ததால் நாள்தோறும் ஆயத்துறைக் கணக்கர் மூடைகளை நிறுத்து உல்கு (சுங்கம்) வாங்கி, வேந்தன் முத்திரையைப் பொறித்துக் குன்றுபோற் குவித்து வைத்திருந்தனர். அவற்றிற்குக்

கடுமையான காவலிருந்தது.

"வைகல் தொறும் அசைவின்றி
உல்குசெய் குறைபடாது
.........................................
நீரினின்று நிலத்தேற்றவும்
நிலத்தினின்று நீர் பரப்பவும்
அளந்தறியாப் பலபண்டம்
வரம்பறியாமை வந்தீண்டி
அருங்கடிப் பெருங்காப்பின்
வலியுடை வல்லணங்கினோன்
புலி பொறித்துப் புறம்போக்கி
மதி நிறைந்த மலிபண்டம்
பொதி மூடைப் போரேறி
மழையாடு சிமைய மால்வரைக் கவாஅன்
வரையாடு வருடைத் தோற்றம் போல"
(பட்டினப். 122–39).

பல நாடுகளிலிருந்து வந்த பல்வேறு பொருள்கள் காவிரிப்பூம்பட்டினக் கடை மறுகில் மண்டிக் கிடந்தன.

"நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்
காலின் வந்த கருங்கறி மூடையும்
வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்
குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்
தென்கடல் முத்தும் குணகடல் துகிரும்
கங்கை வாரியும் காவிரிப் பயனும்
ஈழத் துணவும் காழகத் தாக்கமும்
அரியவும் பெரியவும் நெரிய ஈண்டி
வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகின்"
(பட்டினப். 155–63)

நீர் வாணிகத்தின் பொருட்டு, பல்வேறு மொழிகள் பேசும் பல் வேறு நாட்டு மக்கள் காவிரிப் பூம்பட்டினத்தில் வந்து கலந்தினிது வாழ்ந்தனர்.

"மொழிபல பெருகிய பழிதீர் தேஎத்துப்
புலம்பெயர் மாக்கள் கலந்தினி துறையும்
முட்டாச் சிறப்பிற் பட்டினம்"
(பட்டினப். 216 – 8).

"கயவாய் மருங்கிற் காண்போர்த் தடுக்கும்
பயனற வறியா யவனர் இருக்கையும்
கலந்தரு திருவிற் புலம்பெயர் மாக்கள்
கலந்திருந் துறையும் இலங்கு நீர் வரைப்பும்"
(5 : 9–12).

யவனர் = கிரேக்கர். பின்பு உரோமரும் யவனர் எனப்பட்டார்.

மேலையாரியக் கலப்பெயர்கள்

கலங்கள் முதன் முதல் தமிழகத்திலேயே செய்யப்பட்டன. அதனால், பல கடல்துறைச் சொற்களும் கலத்துறைச் சொற்களும், மேலையாரியத்திலும், கீழையாரியத்திலும் தமிழாயிருக்கின்றன.

வாரி = நீர், பெரிய நீர் நிலையான கடல். L. mare, skt. வாரி, வாரணம் = கடல். L. marinus. E. marina **Skt.** varuna (வாருண) வார்தல் = நீள்தல். வார் – வாரி. ஒ.நோ. நீள்–நீர். வார் – வாரணம். பெரிய நீர்நிலை அல்லது வளைந்த நீர்நிலை. கரை = கடற்கரை.

"நாவாய் கரையலைக்கும் சேர்ப்ப" (நாலடி. 224)

E. shore = Land that skirts sea or large body of water. (C O.D)

c(k)-sh = ஒ.நோ : L. curtus - E. short.

படகு - LL barca, GK. baris. E. short, ML. barga, variation of barca. E barge

ட–ர. ஒ.நோ. பட்டடை – பட்டரை, அடுப்பங்கடை – அடுப்பங்கரை, படவர் – பரவர்.

கொடுக்கு – ME. croc = ON krokr,
E crook குடகு – E. coorg

நாவாய் – L. navis, GK naus skt. nau.
E. navy (கப்பற்படை)

நாவுதல் – கொழித்தல். நாவாய் கடல்நீரைக் கொழித்துச் செல்வது.

"வங்கம்........... நீரிடைப் போழ" (255 : 1–2) என்னும் அகப்பாட்டுப் பகுதியை நோக்குக.

கடலையும் கப்பலையும் காணாதவரும் நெடுகிலும் நிலவழியாய் ஆடுமாடுகளை ஓட்டிக் கொண்டு வந்தவருமாகிய இந்திய ஆரியர், நௌ என்னும் (படகைக் குறிக்கும்) வடசொல்லினின்று நாவாய்ச் சொல் வந்ததென்பது 'வாழைப்பழத் தொலியை நட்டால் வாழை முளைக்கும்' என்பது போன்றதே.

கப்பல் – **L.** seapha, **GK.** skaphos, **Ger.** schiff, **OHG** - scif.**os., ON., Ice** - Goth, skip. **OE.** Scip. **F.** esquif. **sp.**, port, esquife. IT schifo. **E.** skiff ship.

கப்புகள் (கிளைகள்) போன்ற பல பாய்மரங்களை யுடையது கப்பல்.

L. galea. Gk. galaia, E. galley, galleon முதலிய சொற்களும் கலம் என்னும் தென்சொல்லோடு ஒப்பு நோக்கத் தக்கன.

OS., OE. segal. OHG. segal. ON. segl E sail என்னும் சொற்களும் சேலை என்பதை ஒத்திருப்பது கவனிக்கத் தக்கது.

இங்ஙனம், கட்டுமரம் (E. catamaran) முதல் கப்பல் வரை, பலவகைக் கலப்பெயர்கள் மேலையாரிய மொழிகளில் தமிழாயுள்ளன.

நங்கூரம் = L.ancora Gk angkyra Fr ancre E anchor Pers langar.

கவடி – E. cowry

மேனாடுகட்கு ஏற்றுமதியான பொருட்பெயர்கள்

தோகை (மயில்) Heb tuki
Ar. tavus
L pavus, E pea
(cock,hen)

அரிசி – Gk , L. Oruza
It riso, OF. ris, E rice.

இஞ்சிவேர் – Gk - ziggiberis
L zingiber
OE gingiber
E ginger
Skt. Srungavera

இஞ்சிவேர் என்பது தெளிவாயிருக்கவும், வடமொழியாளர் (ச்ருங்ககொம்பு, வேர–வடிவம்) மான்கொம்பு போன்றது என்று தமிழரை ஏமாற்றியதுமன்றி, மேலையரையும் மயக்கியிருப்பது வியக்கத்தக்கதே.

இஞ்சுதல் = நீரை உள்ளிழுத்தல்

திப்பிலி = Gk peperi . ON, pipar OHG pfeffar L piper OE piper E pepper skt. pippali

பன்னல் (பருத்தி) – L punnus, cotton.
It panno, cloth.

கொட்டை (பஞ்சுச் சுருள்) – Ar. qutun, It,cotone. Fr coton, E cotton

கொட்டை நூற்றல் என்பது பாண்டி நாட்டு வழக்கு.

நாரந்தம் (நாரத்தை) – Ar pers naranj. Fr It, arancio, E orange

கட்டுமரம், கலிக்கோ (calico), தேக்கு (teak) பச்சிலை (pac houli) வெற்றிலை (betel) முதலிய சொற்கள் கிழக்கிந்தியக் குழும்பார் காலத்திற் சென்றனவாகும்.

கோழிக்கோட்டிலிருந்து (calicut) ஏற்றுமதியான துணி கலிக்கோ எனப்பட்டது.

குமரிக்கண்டத் தமிழக் கலவரும் கடலோடிகளும் உலக முழுவதும் கலத்திற் சுற்றினமை வடவை (Aurora Borealis) என்னும் சொல்லாலும், தமிழர் கடல் வணிகத் தொன்மை,

"முந்நீர் வழக்கம் மகடூஉ வோ டில்லை"
(தொல்.980)

என்னும் தொல்காப்பிய நூற்பாவாலும், அரபி நாட்டுக் குதிரையும் ஒட்டகமும் தொல்காப்பியத்திற் குறிக்கப்படுவதாலும், உணரப்படும்.

பேரா. நீலகண்ட சாத்திரியாரும் தாம் எழுதிய திருவிசய (Sri vijay) நாட்டு வரலாற்றுத் தோற்றுவாயில், "The more we learn the further goes back the history of eastern navigation and so far as we know, the Indian Ocean was the first centre of the oceanaic activity of man" என்று தமிழர் முதன்முதல் இந்துமாவாரியிற் கலஞ் செலுத்தியதையும் அவர் கடல் வாணிகத் தொன்மையையும் கூறாமற் கூறியிருத்தல் காண்க.

"யவனர் தந்த வினைமாண் நன்கலம்
பொன்னொடு வந்து கறியொடு பெயரும்"
(அகம்.149:9–10)

என்பது கிரேக்கரும் உரோமரும் பொன் கொண்டு வந்து மிளகு வாங்கிச் சென்றதையும்,

"விழுமிய நாவாய் பெருநீர் ஓச்சுநர்
நனந்தலைத் தேஎத்து நன்கலன் உய்ம்மார்
புணர்ந்துடன் கொணர்ந்த புரவியோ
டனைத்தும்" (–மதுரைக். 321–23)

என்பது அரபியரும் பிறரும் குதிரை கொண்டு வந்து அணிகலம் வாங்கிச் சென்றதையும் கூறும்.

–பாவாணர். (பண்டைத் தமிழர் நாக. பண். பக்.91–100)

மேலும்,

"கொடுமேழி நசையுழவர்
நெடுநுகத்துப் பகல்போல
நடுவு நின்ற நன்னெஞ்சினோர்
வடுவஞ்சி வாய்மொழிந்து
தமவும் பிறவும் ஒப்பநாடிக்
கொள்வதூஉம் மிகை கொளாது
கொடுப்பதூஉம் குறை கொடாது
பல் பண்டம் பகர்ந்து வீசும்" (பட்டினப். 205–21).

வாணிகம் கொள்வனையையும் விற்பனையையும் ஒப்பக் கருதுவதனாலும் பொய்க்கும் கொள்ளைக்கும் இடந்தராமையாலும்,

மொத்த வணிகர் சில்லறை வணிகர் கொள்வோர் ஆகிய முத்திறத்தார்க்கும் தீதுங்கேடு மில்லா நல்வாணிகமாம்".

–பாவாணர். திருக் .மரபு. பக்.103.

"வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம்பேணிப் பிறவுந் தமபோற் செயின்" (திருக். 120).

**pa.** *vaṇijja*; **pk.** *vaṇijja*; **Ku.** *paṇaj*; **or.** banija; **marathi.** *vaṇaj*.

**வாணிகம்[2]** *vāṇigam*, பெ.(n.) ஓமவகை; carum roxburghiana.

**வாணிகவென்றி** *vāṇiga-veṉṟi*, பெ.(n.) வாணிகத்தாற் சிறப்பெய்திய வணிகன் தனது பொருளிற் பற்றிலனாய்ப் பிறர் மிடியை நீக்கும் பெருந்தன்மையை எடுத்துக் கூறும் புறத்துறை (புற.வெ.12, ஒழிபு,2); theme describing the selfless benefactions of a merchant who has risen to prominence by his success in business.

*[வாணிகம் + வென்றி]*

**வாணிகன்** *vāṇigaṉ*, பெ.(n.) 1. பல பண்டங்களை விற்பவன்; merchant, trader. "*அறவிலை வாணிகன்*" *(புறநா.134)*. 2. வணிகன்; man of the trading caste. 3. துலாக்கோல் (பிங்.); scales, balance. 4. துலாவோரை (சூடா.); libra of the zodiac.

**or.** *baṇijjara*; **m.** vanijar.

*[பண்ணியம் → பண்ணியன் → பண்ணிகன் → பணிகன் → வணிகன் → வாணிகன் (பண்ணியம் = பண்ணப்பட்ட பொருள், விற்பனைப் பண்டம்). (த.வ.1., பக்.58)]*

**வாணிகேள்வன்** *vāṇi-kēḷvaṉ*, பெ.(n.) நான்முகன் (சூடா.); *Brahmā*.

*[வாணி + கேள்வன்]*

**வாணிச்சி** *vāṇicci*, பெ.(n.) 1. வாணிகச்சி பார்க்க; see *vāṇigacci*. *"மதுரையிற் பிட்டு வாணிச்சி மகற்கு" (தொல்.பொ.84, உரை) (நன்.144, மயிலை).* 2. வாணியச்சி பார்க்க; see *vāṇiyacci*.

*[வாணியன் → வாணிச்சி]*

**வாணிச்சிமேனி** *vāṇicci-mēṉi*, பெ.(n.) மாணிக்கம் (யாழ்.அக.); ruby.

*[வாணிச்சி + மேனி]*

**வாணிச்சியம்** *vāṇicciyam*, பெ.(n.) வணிகம் (வின்.); trade.

**வாணிதம்** *vāṇidam*, பெ.(n.) 1. கள்; toddy. 2. அகத்தி; a tree - Sesbania grandiflora alias coronilla grandiflora.

**வாணிதி[1]** *vāṇidi*, பெ.(n.) வாணினி, 1,2 (யாழ்.அக.) பார்க்க; see *vāṇiṉi*.

**வாணிதி[2]** *vāṇidi*, பெ.(n.) 1. மனோசிலை; red orpiment; red arsenic. 2. மூங்கில்; bamboo.

**வாணிபன்** *vāṇibaṉ*, பெ.(n.) வாணிகன், 1 பார்க்க; see *vāṇigaṉ*.

*[வாணிகன் → வாணிபன்]*

**வாணிமலர்** *vāṇi-malar*, பெ.(n.) வெண்டாமரை (மூ.அ.); white lotus.

*[வாணி + மலர்]*

**வாணிமன்** *vāṇi-maṉ*, பெ.(n.) நான்முகன்; *Brahmā*. *'பாணியாற் படைத்திலன் வாணிமன்' (பாகவத. 1, கண்ணபிரான் துவரை,25).*

*[வாணி + மன்]*

வாணியச்சி *vāṇiyacci,* பெ.(n.) செக்கார் இனப்பெண்; woman of the oil-monger caste.

*[வாணியன் (ஆ.பா.) → வாணியச்சி (பெ.பா.)]*

வாணியம் *vāṇiyam,* பெ.(n.) 1. வாணிகம், 1 (வின்.) பார்க்க; see *vāṇigam.* 2. வாணிகம், 2 பார்க்க; see *vāṇigam.* *"சிறுகாலை நாமுறுவாணியம்" (தேவா.259,3).*

வாணியன் *vāṇiyaṉ,* பெ.(n.) 1. வாணிகன். 1, 2 பார்க்க; see *vāṇigaṉ.* 2. செக்கான்; oil-monger.

வாணியன்தாதன் *vāṇiyaṉ-tādaṉ,* பெ.(n.) கம்பர் காலத்தில் அவர்க்கு எதிரியா யிருந்தவராகவும் செக்கார் குலத்தவராகவும் சொல்லப்படும் ஒரு புலவர் (தமிழ் நா.83.); a poet said to be of oil monger caste and a contemporary critic of Kampar.

வாணியன்பொருவா *vāṇiyaṉ-poruvā,* பெ.(n.) 1. வெண்மையில் பொன்வரியும் கருநீல வரியும் உள்ள கடல்மீன்; anchovy silvery, shot with gold and purple. 2. வெளிறின மஞ்சணிறமுள்ள கடல் மீன் வகை; anchory, bronze.

*[வாணியன் + பொருவா]*

வாணில் *vāṇil,* பெ.(n.) பலண்டுருக நஞ்சு; a kind of arsenic.

வாணிலை *vāṇilai,* பெ.(n.) பகைமேற் படையெடுத்தலை விரும்பி வேந்தன் வாளைப் புறவீடு விடுவதைக் கூறும் புறத்துறை (பு.வெ.3,4); theme of sending in advance at an auspicious moment the sword of a King who intends to advance against his enemies.

*[வாள் + நிலை]*

வாணினி *vāṇiṉi,* பெ.(n.) 1. நாடகக்கணிகை (வின்.); dancing woman. 2. நாணமற்றவள் (வின்.); immodest woman. 3. நுண்ணறிவு உள்ளவள் (யாழ்.அக.); clever woman.

வாணீகம் *vāṇigam,* பெ.(n.) மாழை நீர்மம்; metalic liquid.

வாணீசன் *vāṇīšaṉ,* பெ.(n.) நான்முகன் (யாழ்.அக.); *Brahmā.*

*[வாணி + ஈசன்]*

**Skt.** *īšā* > த. ஈசன்.

வாணுதல் *vāṇudal,* பெ.(n.) 1. ஒளி பொருந்திய நெற்றி; bright forehead. *"வாணுதல் விறலி" (புறநா.89).* 2. ஒள்ளிய நெற்றியுள்ள பெண்; woman with a bright forehead. *"வாணுதல் கணவ" (பதிற்றுப்.38,10).*

*[வள் → வாள் + நுதல்]*

வாத்தன்று *vāttaṉṟu,* பெ.(n.) எருக்கிலை; leaf of madar - calotrois gigantia.

வாத்தாட்டுப்பலகை *vāttāṭṭu-p-palagai,* பெ.(n.) வாய்த்தட்டுப்பலகை பார்க்க; see *vāy-t-taṭṭu-p-palagai.*

*[வாய்த்தாடு → வாத்தாடு + பலகை]*

வாத்தாடு *vāttāḍu,* பெ.(n.) கூரையின் ஓரம் (கட்டட.நாமா.20); eaves.

*[வாய்த்தடு → வாய்த்தாடு → வாத்தாடு]*

வாத்தியச்சுரை *vāddiya-c-curai,* பெ.(n.) கின்னரிச் சுரை; bottle gourd used for making musical instruments.

*[வாச்சியம் → வாத்தியம் + சுரை]*

# வாத்து வகை



கருவால் வாத்து



புள்ளிமூக்கு வாத்து



குள்ள வாத்து



செண்டு வாத்து



**வாத்தியப்பெட்டி** *vāddiya-p-peṭṭi,* பெ.(n.) 1. ஒத்தியப் பெட்டி; harmonium. 2. இசை மீட்டும் வடிவான கருவி; music-box as piano etc.

*[வாச்சியம் → வாத்தியம் + பெட்டி]*



**வாத்தியபாண்டம்** *vāddiya-pāṇḍam,* பெ.(n.) 1. இசைக்கருவி; musical instrument. 2. வீணை; lute.

*[வாச்சியம் → வாத்தியம் + பண்டம் → பாண்டம்]*

**வாத்தியம்** *vāddiyam,* பெ.(n.) இசைக்கருவி; musical instrument.

*[வாச்சியம் → வாத்தியம்]*

**வாத்தியம்பண்ணு–தல்** *vāddiyam-paṇṇu-,* 5 செ.கு.வி. (v.i.) நகராமுழக்குதல் (வின்.); to beat the kettle drum.

*[வாத்தியம் + பண்ணு–.]*

**வாத்தின்விந்து** *vāttiṉ-vindu,* பெ.(n.) கற்பூரச் சீலை; ammonia - Alum.

**வாத்து[1]–தல்** *vāttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. வாழ்த்து–, பார்க்க; see *vāḻttu-.* 2. கண்ணேறு கழிக்க மணமக்கள் முன் மஞ்சள் நீரால் ஆலத்தி சுற்றுதல் (இ.வ.); to wave saffron water before the bridel pair to ward off the evil eye.

**வாத்து[2]** *vāttu,* பெ.(n.) 1. தாரா (பதார்த்த. 873); duck. 2. பெருந்தாரா; goose.

க. பாது.

வகைகள் :–

1. செண்டு வாத்து, 2. கருவால் வாத்து, 3. புள்ளிமூக்கு வாத்து, 4. ஆண்டி வாத்து, 5. குள்ள வாத்து, 6. ஊசிவால் வாத்து.



**வாத்து[3]** *vāttu,* பெ.(n.) மரக்கொம்பு (வின்.); branch of a tree.

**வாத்துக்கறி** *vāttu-k-kaṟi,* பெ.(n.) நோயை அதிகரிக்கும் வாத்தின் கறி; flesh of goose not good for health, brings on several diseases.

*[வாத்து + கறி]*

**வாத்துக்கொழுப்பு** *vāttu-k-koḻuppu,* பெ.(n.) பெருந்தாராக் கொழுப்பு; adeps amserensis

[வாத்து + கொழுப்பு]

வாத்துகா *vāttugā*, பெ.(n.) மெழுகு பீர்க்கை; loofa-luffa aegyptiaca.

[வாத்து + கா]

வாத்துபோதம் *vāttu-bōdam,* பெ.(n.) சிற்ப நூல் முப்பத்திரண்டனுள் ஒன்று (இரு சமய. உலக வழக்க.சிற்ப.3.); a treatise on architecture, one of 32 *śirpa-nūl.*

[வாத்து + போதம்]

வாத்துமாதனம் *vāttu-mādanam,* பெ.(n.) இரு கால்களும் ஒருகையும் நீட்டி ஒரு முழங்கை யூன்றி தலைநிமிர்த்திக் கிடக்கும் இருக்கை வகை (யாழ்.அக.); a kind of posture, in which the body is supported on an elbow, the two legs and one arm being stretched out and the head held erect.

வாத்துமுட்டை *vāttu-muttai*, பெ.(n ) வாத்து இடும் முட்டை; egg of goose

[வாத்து + முட்டை]

வாதவூர் *vādavūr,* பெ.(n ) மதுரை மாவட்டத்தில் அமைந்துள்ளதும், மாணிக்க வாசகர் பிறந்தகமுமாகிய சிவத்தலம்; one of the saiva places having the distinction of being sung by saint *Manikkavāšagar*, and birth place of Manikkavasagar. It is in Madurai District. *“வாதவூரினிற் வந்தினி தருளிப் பாதச் சிலம்பொலி காட்டிய பண்பும்” (திரு.கீர்த்.52–53).*

வாதவூரர் *vāda-v-ūrar*, பெ.(n.) மாணிக்க வாசகர் பார்க்க; see *Māṇikka-vāšagar,* a saiva saint as born in *Tiru-vādavūr* in Madurai District. *“வாதவூர ரடியிணை போற்றி” (திருவாலவா.கடவுள்.21).*

[வாதவூர் → வாதவூரர்]



வாதவூரர்ஆனந்தக்களிப்பு *vādavūrar-ānanda-k-kalippu,* பெ.(n.) சுந்தர முதலியாரால் இயற்றப்பட்ட 20ஆம் நூற்றாண்டு நூல்; a book written by Sundaramudaliar in 20th century.

[வாதவூரர் + ஆனந்தம் + களிப்பு]

வாதினிலா *vādinilā*, பெ.(n.) சேவகனார் கிழங்கு பார்க்க; see *cēvaganār-kilañgu.*

வாது[1]–தல் *vādu-*, 5 செ.குன்றாவி. (v.t.) அறுத்தல்; to cut, tear open. *“வாது வல்வயிறே வாதுவல் வயிறே” (தொல். பொருள். 79, உரை, பக்.292).*

வாது[2] *vādu*, பெ.(n.) மரக்கிளை (இ.வ.); branch of a tree.

வாந்திசுரதாகநாசனி *vāndi-šuradāgā-nāšani*, பெ.(n.) வெட்டிவேர்; Khus Khus vetiveria, zizanioides.

[வாந்தி + சுரதாக (ம்) + நாசனி. **Skt.** = நாசனி]

வாந்திசோதினி *vāndi-šōdini*, பெ.(n.) கருஞ் சீரகம்; black cumin - Nigella sativa.

வாந்தியம் *vāndiyam*, பெ.(n.) தான்றி; a tree - Terminalia bellerica.

வாந்துதம் *vāndudam*, பெ.(n.) பெரு முத்தக்காசு பார்க்க; see *perumutta-k-kāšu*.

வாப்பியம் *vāppiyam*, பெ.(n.) கோட்டம்; arabian costus - costus speciosus.

வாம்பல் *vāmbal*, பெ.(n.) மூங்கில்; bamboo.



வாமடைவைக்கல்கட்டு *vāmaḍai-vaikkal-kaṭṭu*, பெ.(n.) நில உரிமையாளருக்குக் கொடுக்க வேண்டிய வைக்கோற்கட்டு; straw bundle given to the land holder.

*[வாய்மடை → வாமடை + வைக்கல் + கட்டு. வைக்கல் = நெற்பயிரின் உலர்தாள்.]*

வாய்¹-தல் *vāy-*, 4 செ.கு.வி. (v.i.) 1. நிறைவேறுதல்; to succeed, to be gained. *"கல்வி வாயுமே" (திவ்.திருவாய்.1, 10, 11).* 2. உறுதியாக நிகழ்தல்; to happen with certainty, to come true. *"வருதல் வாய்வது" (முல்லை.20).* 3. ஏற்றதாதல்; to be fit or suitable. *"வாய்ந்த மலையும்" (குறள். 737).* 4. நிறைதல்; to be full. *"வாய்ந்த புகழ் மறைவளருந் தோணிபுரம்" (தேவா.145,3).* 5. சிறத்தல் (வின்.); to excel, surpass. 6. *வாய்², 5,6,7* பார்க்க; see *vāy*.

*[வய் → வயி → வாயி → வாய்-,]*

வாய்²-தல் *vāy*, 3 செ.குன்றாவி. (v.t.) 1. பெறுதல்; to obtain, realise, possess. *"வாய்ந்த மேனியெரி வண்ணமே" (தேவா.582, 6).* 2. மனநேர்தல்; to consent to, agree to. *"கொய்தழை கைபற்றிச் செய்ததும் வாயாளோ" (பரிபா.6, 66).*

*[வய் → வயி → வாயி → வாய்-,]*

வாய்³-த்தல் *vāy-*, 11 செ.கு.வி. (v.i.) 1. செழித்தல்; to flourish; to be luxuriant. *"வாய்க்குங் கரும்பும்" (திவ்.திருவாய்.7, 10, 4).* 2. மதர்த்தல்; to be over luxuriant in growth. *'உரம் அதிகமாய் விட்டதினால் பயிர் வாய்த்துப் போய்விட்டது' (உ.வ.).* 3. சேர்தல்; to join, unite. *"வருடையைப் படிமகன் வாய்ப்ப" (பரிபா.11, 5).* 4. திரட்டுதல்; to gather into a mass. *"கஞ்சுகம் வாய்த்த கவளம்" (பு.வெ.ஒழிபு.8).*

*[வய் → வயி → வாயி → வாய்-,]*

வாய்⁴ *vāy*, பெ.(n.) 1. உதடு அல்லது அலகு இவற்றினிடையிலுள்ள உறுப்பு (பிங்.); mouth; beak of birds. *"கயவர்வா யின்னாச் சொல்" (நாலடி. 66).* 2. ஏனம் முதலியவற்றின் திறந்த மேற்பாகம்; mouth, as of cup, bag,ulcer etc. *"வாயில்லை நாமங்கள் செப்ப... முத்தி பெற்ற தென்னோ தயிர்த்தாழியுமே" (அஷ்டப். திருவரங். மாலை.53).* *"புண்வாய் கிழித்தன" (பெருந்தொ.701).* 3. வாய்கொண்ட வளவு; mouthful. *'நாலுவாய் உண்டான்'.* 4. உதடு; lip. *"வாய்மடித் துரறி" (புறநா.298) (நாமதீப. 587).* 5. விளிம்பு; edge, rim. *"பொன்னலங்கல் ..... வாயருகு வந்தொசிந்து" (சீவக.595).* 6. படைக்கலத்தின் முனை; edge, as of a knife. *"கூனிக் குயத்தின் வாய்நெல் லரிந்து" (பொரு.242).* 7. மொழி; word. *"வணங்கிய*

*வாயினராத லரிது" (குறள்.419).* 8. சொல் (அக.நி.); speech, utterance. *"பண்டேயுன் வாயறிதும்" (திவ்.திருப்பா.15).* 9. குரல்; voice, tone. *"வாயுடை-மறையவர்" (திவ்.நாய்ச்.1, 7).* 10. மெய்ம்மை; truth. *"பொய்சேணீங்கிய வாய் நட்பினையே" (மதுரைக். 198) (பிங்.).* 11. சிறப்பு; excellence. *"முறியினும் வாயது" (குறுந். 62).* 12. சிறப்புடைப் பொருள்; that which is excellent. *"மடவோன் காட்சி வாயன்று" (ஞானா.10).* 13. வாசல்; opening, gate. *"நரகவாய் கீண்டாயும் நீ" (திவ்.இயற்.3, 47).* 14. வழி; way, path. *"பெரியார் நூல் காலற்கு வாய் காப்புக் கோடல் வனப்பு" (ஏலா. 23).* 15. வழிமுறை; means. *"அது தணிக்கும் வாய்நாடி" (குறள்,948).* 16. மூலம்; agency, instrumentality. *"தூதர் வாயிலிட்டு நீட்டுகையு மன்றிக்கே" (ஈடு,10,10, ப்ர).* 17. இடம்; place. *"கொக்கின் மென்பறைத் தொழுதி... எவ்வாயுங்கவர" (நெடுநல்.17).* 18. துலாக்கோலின் வரை(G.Sm.D.I.i,284); graduated mark on a steelyard. 19. தழும்பு; scar. *"வாள்வாயுமின்றி வடிவெங்கணை வாயுமின்றி" (சீவக.454).* 20. துளை (யாழ்.அக.); hole, orifice. 21. இசைக் குழல் (சூடா.); flute, musical pipe.

தெ. வாயி; க. பாய்; ம. வாய்; **Kur.** *bāi;* **Br.** *bā;* **pa.** *vāy;* **Ko.** *vāy,* **To.** poy, **Kod.** ba-y, **Tu.** *bāyi.*

*[வய் → வயி → வாயி → வாய்]*

வாய்[5] *vāy,* இடை(part.) 1. ஏழனுருபு (நன். 302.); a sign of the locative case. *"கங்குல் வாய்" (திவ். திருவாய், 5, 4, 7).* 2. ஓர் உவம உருபு; a particle of comparison. *"தீவாய் செக்கர்" (கல்லா. 42, 20).*

*[வய் → வயி → வாயி → வாய்]*

வாய்க்கசப்பு[1] *vāy-k-kašappu,* பெ.(n.) 1. வாய் கசந்திருக்கை; bitterness in the mouth. 2. மாட்டுக்கு வரும் கோமாரி நோய்; a cattle-disease.

*[வாய் + கசப்பு]*

வாய்க்கசப்பு[2] *vāy-k-kašappu,* பெ.(n.) பித்தத்தினால் வாயில் உண்டாகும் கசப்பு; bitterness of taste owing to biliousness, disorders, fever etc.

*[வாய் + கசப்பு]*

வாய்க்கட்டு *vāy-k-kaṭṭu,* பெ.(n.) 1. கண்டதைத் தின்னாமலிருக்கை; restraint in food; abstaining from eating except at meal-time and confining oneself to the regular courses. 2. மந்திரத்தாற் பேச முடியாமலும் வாயைத் திறக்க முடியாமலுஞ் செய்கை; rendering one speechless; preventing by witchcraft, animals etc, from opening their mouths.

*[வாய் + கட்டு]*

வாய்க்கட்டை *vāy-k-kaṭṭai,* பெ.(n.) 1. சிறுவர்க்குரிய தின்பண்டம் (இ.வ); sweets for children. 2. கையூட்டு (வின்.); tribe, tip.

*[வாய் + கட்டை]*

வாய்க்கடைப்புகையிலை *vāy-k-kaḍai-p-pugai-y-ilai,* பெ.(n.) வாயிலே மென்று அடக்கிக் கொள்ளும் புகையிலை யுருண்டை (புதுவை.); quid.

*[வாய் + கடை + புகையிலை]*

வாய்க்கணக்கு *vāy-k-kaṇakku,* பெ.(n.) 1. மனக் கணக்கு; mental arithmetic, working out sums mentally. 2. வாயால்

சொல்லுங்கணக்கு; oral statement of account, not reduced to writting.

*[வாய் + கணக்கு]*

**வாய்க்கயிறு** *vāy-k-kayiṟu,* பெ.(n.) கடிவாளக் கயிறு; rein. *"வயமாப் பண்ணி வாய்க்கயிறு பிணித்து" (பெருங். இலாவாண. 18,17).*

*[வாய் + கயிறு]*

**வாய்க்கரிசி** *vāykkariši,* பெ.(n.) 1. எரியூட்டு முன் உறவுமுறையோராற் பிணத்தின் வாயிலிடும் அரிசி; handful of rice dropped into the mouth of a deceased person by sons and other relations, just before cremation. *"உனக்கு வாய்க்கரிசி தந்தேனுண்டிரு" (அரிச்.பு. காசிகா.62).* 2. கையூட்டு (கொ.வ.); bribe, tip. 3. மனமில்லாமற் கொடுப்பது (இ.வ); anything unwillingly parted with.

*[வாய் + கு = நான்கனுருபு → வாய்க்கு + அரிசி]*

**வாய்க்கருவி**[1] *vāy-k-karuvi,* பெ.(n.) கடிவாளம்; bit of a bridle. *"வாய்க்கருவியிற் கோத்து முடியுங் குசையிற்றலை" (நெடுநல். 178, உரை).*

*[வாய் + கருவி]*

**வாய்க்கருவி**[2] *vāy-k-karuvi,* பெ.(n.) வாய்க்குருவி (சொல்.இலக்.); a kind of bird.

*[வாய் + குருவி → கருவி]*

**வாய்க்கரை** *vāy-k-karai,* பெ.(n.) 1. கிணறு முதலியவற்றின் விளிம்பு; rim, brink or edge, as of a well. 2. உதடு; lip. *"வாய்க் கரையிலே எனக்கு ஜீவனத்தையிட்டு" (ஈடு, 6, 1, 1).*

*[வாய் + கரை]*

**வாய்க்கரைப்பற்று** *vāy-k-karai-p-paṟṟu,* பெ.(n.) 1. உதடு (ஈடு.4, 8, 8, ஜீ); lip. 2. நீர்நிலைக் கருகிலுள்ள வயல்; field near the head of a channel. *"வாய்க்கரைப் பற்றை அடுத்தூணாக வுடையவன்" (ஈடு.4,8,8).*

*[வாய்க்கரை + பற்று]*

**வாய்க்காசு** *vāy-k-kašu,* பெ.(n.) 1. பிணத்தின் வாயில் வாய்க்கரிசியுடன் வைக்கும் பணம் (வின்.); money placed on the mouth of a corpse with *vāykkariši* (w.). 2. கையூட்டு (கொ.வ); bribe, tip.

*[வாய் + காசு]*

**வாய்க்காடிவார்-த்தல்** *vāy-k-kaḍi-vār-,* 4 செ.கு.வி. (v.i.) மிக்க துயரத்துடனிருத்தல்; to be very sorrowful. *'அவன் வாய்க்காடி வார்த்துக் கொண்டிருக்கிறான்' (வின்.).*

*[வாய் + காடி + வார்-,]*

**வாய்க்காரன்** *vāy-k-kāraṉ,* பெ.(n.) 1. பேச்சில் வல்லவன் (இ.வ.); clever speaker, talkative man. 2. செருக்கால் மிதமிஞ்சிப் பேசுவோன் (யாழ்.அக.); man who is arrogant in speech. 3. பிறரைத் திட்டும் இயல்புள்ளவன்; man given to scandal mongering. 4. பள்ளருள் ஒரு வகை (G.Tj.D.I.90.); a sub-division of *paḷḷa* caste.

மறுவ. வாயாடி.

*[வாய் + காரன்]*

வாய்க்காரி *vāy-k-kāri,* பெ.(n.) 1. பேச்சில் வல்லவள் (இ.வ.); clever speaker, talkative woman. 2.செருக்கால் மிதமிஞ்சிப் பேசுபவள்; woman who is arrogant in speech. 3. பிறரைத் திட்டும் இயல்புள்ளவள் (இ.வ.); woman given to scandal-mongering.

மறுவ. வாயாடி.

*[வாய் + காரி]*

வாய்க்கால் *vāy-k-kāl,* பெ.(n.) 1. கால்வாய்; water-course, channel, canal. *"செய் விளைக்கும் வாய்க்காலனையார் தொடர்பு" (நாலடி.218).* 2. கொடு நுகம்; 10வது விண்மீன்; the 10th naksatra.

*[வாய் + கால்]*

வாய்க்காலுக்குப்போ-தல் *vāykkālukku-p-pō-,* 8 செ.கு.வி. (v.i.) மலங்கழித்தல் (வின்.); Lit, to go to a channel, to go to stool.

வாய்க்காற்சடைச்சி *vāykkār-šadaicci,* பெ.(n.) வெதுப்படக்கி என்னும் மூலிகை (சங்.அக.); malabar catamint.

மறுவ. பேய்மருட்டி.

*[வாய்க்கால் + சடைச்சி]*

இச்செடி, வாய்க்கால் வரப்பு முதலியவிடங்களில் முளைக்கும்.

வாய்க்கிரந்தி *vāy-k-kirandi,* பெ.(n.) வாய்ப்புண் (கடம்ப.பு. இலீலா.124); thrush, a disease, Althae ulcer in the mouth.

*[வாய் +* **Skt.** *grandhi > த. கிரந்தி.]*

வாய்க்கிலை *vāykkilai,* பெ.(n.) வெற்றிலை (சரவண.பணவிடு.304); betel - leaf

*[வாய் → வாய்க்கு + இலை]*

வாய்க்கிலைகெட்டவன் *vāykkilai-keṭṭavaṉ,* பெ.(n.) 1. வறிஞன்; very poor man, as being too poor to buy betal-leaf. 2. பயனிலி; useless person.

*[வாய் → வாய்க்கு + இலை + கெட்டவன்]*

வாய்க்கிறுது *vāy-k-kiṟudu,* பெ.(n.) 1. செருக்கான பேச்சு; arrogant speech. *'அவன் வாய்க்கிறுது பேசுகிறான்'.* 2. பொருத்தமற்ற சொல் (யாழ்.அக.); unsuitable, inappropriate word.

*[வாய் + கிறி + கிறிது]*

வாய்க்குட்பேசு-தல் *vāykkuṭ-pēšu-,* 10 செ.கு.வி. (v.i.) முணுமுணுத்தல்; to mumble, mutter, murmur.

*[வாய்க்குள் + பேசு-,]*

வாய்க்குடுமி *vāy-k-kuḍumi,* பெ.(n.) தாடி (கொ.வ.); beard.

*[வாய் + குடுமி]*



வாய்க்குருவி *vāy-k-kuruvi,* பெ.(n.) விளையாட்டு ஊது குழல் (இ.வ.); toy-whistle.

*[வாய்க்கருவி → வாய்க்குருவி]*

**வாய்க்குவந்தபடி** *vāikku-vanda-paḍi,* வி.எ.(adv.) வரன்முறை இல்லாமல் மனம் போனபடி பேசுதல்; speak without restraint. *'கோபம் வந்து விட்டால் வாய்க்கு வந்தபடி திட்டுவார்'.*

*[வாய்க்கு + வந்தபடி]*

**வாய்க்குவழங்காமை** *vāykku-vaḻaṅgāmai,* பெ.(n.) 1. சுவையற்றதாகை (வின்.); unpalatability. 2. இழிவாயிருக்கை; being unspeakably vulgar.

*[வாய்க்கு + வழங்காமை]*

**வாய்க்குவாய்** *vāikku-vāy,* வி.அ. (adv.) ஒரு செய்தியைப் பலமுறை பேசுவது; frequently. *'அவள் தன் குழந்தையின் திறமையை வாய்க்கு வாய் சொல்லி மகிழ்வாள்'.*

*[வாய்க்கு + வாய்]*

**வாய்க்குழிப்புண்** *vāy-k-kuḻippuṇ,* பெ.(n.) வாயின் உட்புறத்தே சிறு சிறு புள்ளி போன்று உண்டாகும் ஒருவகையான புண்; perforating, ulcer in mouth.

*[வாய் + குழிப்புண்]*

**வாய்க்குளறல்**[1] *vāy-k-kuḷaral,* பெ.(n.) நோயினால் உளறிப் பேசுகதல்; blabber, incoherancy of speech through to be checked. *'வாதத்திற் பித்தமாகில் வாயது குளறிப் போகும்'.*

*[வாய் + குளறல்]*

**வாய்க்குளறல்**[2] *vāy-k-kuḷaral,* பெ.(n.) பக்க ஊதையினாலாவது அண்ணத்தின் நோயினாலாவது ஏற்படும் பேச்சுக் குளறல்; impaired or lost articulation from paralysis of the part from local laryngeal disease. 2. பேச்சுத் தடுமாறலாகிய ஒரு இறப்புக்குறி; a death symptom accompanied by confused speech.

*[வாய் + குளரல்]*

**வாய்க்குற்றம்** *vāy-k-kuṟṟam,* பெ.(n.) 1. தன்னையறியாமற் பேச்சில் நேரும் பிழை (வின்.); slip of the tongue, lapsus linguae. 2. பேச்சுக்குற்றம் (யாழ்.அக.); error in speech.

மறுவ. சொற்குற்றம்.

*[வாய் + குற்றம்]*

**வாய்க்கூடு** *vāy-k-kūḍu,* பெ.(n.) விலங்கின் வாயின் மேலிடுங்கூடு (நெல்லை.); small basket or other contrivance for muzzling an animal.

*[வாய் + கூடு]*



**வாய்க்கூடை** *vāy-k-kūḍai,* பெ.(n.) வாய்க்கூடு (வின்.) பார்க்க; see *vāy-k-kūḍu.*

*[வாய் + கூடை]*

ஒருகா. வாய்க்கூடு → வாய்க்கூடை.

**வாய்க்கூலி** *vāy-k-kūli,* பெ.(n.) கையூட்டு (வின்.); bribe, hush-money.

[வாய் + கூலி]

வாய்க்கேட்பார் *vāy-k-kēṭpār,* பெ.(n.) அரசனின் வாய்மொழி ஏற்றுச் செயல்படும் அலுவலர்கள் (S.I.I.ii.353); personal secretary, as to a King.

[வாய் + கேட்பார்]

வாய்க்கேள்வி *vāy-k-kēḷvi,* பெ.(n.) 1. அரசனின் கட்டளை; royal command, proclamation. *"நிவந்தஞ்செய்த நம்வாய்க் கேள்விப்படி" (S.I.I.ii.306).* 2. பிறர் சொல்லக் கேட்டறிந்த செய்தி; hearsay.

[வாய் + கேள்வி]

வாய்க்கேள்வியர் *vāy-k-kēḷviyar,* பெ.(n.) அரசக் கட்டளைகளை நிறைவேற்றுவோர்; those who execute royal commands. *"மணிக்கையை வாங்கென்று வாய்க் கேள்வியர்க்கு வருதி செய்தான்" (தனிப்பா.).*

[வாய்க்கேள்வி → வாய்க்கேள்வியர்]

வாய்க்கொப்பளித்தல் *vāy-k-koppaḷittal,* பெ.(n.) வாயில் நீரூற்றிக் கொப்பளித்தல்; gargling with water or medicinal liquid.

[வாய் + கொப்பளித்தல்]

வாய்க்கொழுப்பு *vāy-k-koḻuppu,* பெ.(n.) மதியாது பேசுகை; arrogance in speech, insolence in language.

[வாய் + கொழுப்பு]

வாய்க்கொள்ளாபேச்சு *vāy-k-koḷḷā-pēccu,* பெ.(n.) இழிவழக்கு (யாழ்.அக.); unspeakably, vulgar talk.

[வாய் + கொள் + ஆ + பேச்சு]

வாய்க்கோணல் *vāy-k-kōṇal,* பெ.(n.) நோய்வகை (கடம்ப.பு,இலீலா.139); a kind of disease.

[வாய் + கோணல்]

வாய்க்கோமாரி *vāy-k-kōmāri,* பெ.(n.) மாட்டுக்கு வாயில் வரும் நோய்வகை (M.L.); a mouth-disease, in cattle.

[வாய் + கோமாரி]

கால்நடைகளுக்கு வெப்பக்காலத்தில் வாய்க்கு உள்ளும் புறமும் கொப்புளங்களைத் தோற்றுவிக்கும் நோய்

வாய்கட்டல் *vāykaṭṭal,* பெ.(n.) 1. பத்தியங் காத்தல்; to be on diet. *'வாய் கட்டினால் பிள்ளை'.* 2. இதளிய கற்பூரம் முதலிய மருந்தினால் வாய் வெந்து போதல்; inflammation of the mouth due to mercurial poisioning. 3. வாய் திறந்து இறந்து போனவர்களுக்கு வாயைக் கட்டுதல்; if the mouth remains opened after death a bandage is applied over the mandible closing it. 4. வாய் திறவாதபடி செய்தல்; by witchcraft the mouth is tied and cannot be opened (in magic).

[வாய் + கட்டல்]

வாய்கட்டு¹–தல் *vāy-k-kaṭṭu,* 8 செ.குன்றாவி. (v.t.) 1. பேசாதிருக்கச் செய்தல்; to silence. 2. மந்திரத்தால் நச்சுயிரிகளின் வாயைத் திறவாமற் பண்ணுதல்; to charm, as a snake or beast, so as to prevent its opening its mouth.

வாய்கட்டு²–தல் *vāy-kaṭṭu,* 5 செ.கு.வி. (v.i.) 1. வாயைக்கட்டு–, 1, 2 பார்க்க; see *vāyai-k-kaṭṭu.* 2. மதிப்புரவுக் குறிப்பாக

ஆடையால் வாயை மூடுதல் (யாழ்.அக.); to cover one's mouth with cloth, as a mark of respect. 3. உடலத்தின் வாயை ஆடையாற்கட்டுதல் (யாழ்.அக.); to bind the mouth and chin of a corpse with a piece of cloth.

*[வாய் + கட்டு-,]*

**வாய்கரை** *vāy-karai,* பெ.(n.) இறங்கு துறை; ghat, ford, landing place. *'நீஞ்சப்புக்கு வாய்கரையிலே தெப்பமிழப்பாரைப் போலே' (திவ்.திருக்குறுந். 10, வ்யா.)*

*[வாய் + கரை]*

**வாய்கரையர்** *vāy-karaiyar,* பெ.(n.) ஆழ்ந்தறிய மாட்டாது மேலோட்டமான அறிவுள்ளவர்கள்; men with superficial knowledge. *"ஈஸ்வரனரியனென்று ஜகத்தை வழியடித்துண்கிற வாய்கரை யரைப்போலன்றி" (திவ். இயற். 2, 60. அப்பிள்ளாருரை).*

**வாய்காட்டு-தல்** *vāy-k-kāṭṭu-,* 10 செ.கு.வி. (v.i.) 1. அதிகப்படியாகப் பேசுதல் (யாழ்.அக.); to wag one's tongue. 2. கெஞ்சுதல் (கொ.வ.); to cringe.

*[வாய் + காட்டு-,]*

**வாய்காய்தல்** *vāy-kāydal,* பெ.(n.) வாயுலர்தல்; drying or parching of the mouth.

*[வாய் + காய்தல்]*

**வாய்கிழிய** *vāikiḻia,* வி.எ.(adv.) வீண் பேச்சு; loudly without meaning. *'பெண்ணுரிமை பற்றி மணிக்கணக்கில் வாய்கிழியப் பேசினாலும் யாரும் மனம் மாறுவதாகக் காணோம்'.*

*[வாய் + கிழி → கிழிய]*

**வாய்குமட்டல்** *vāy-kumaṭṭal,* பெ.(n.) கக்கல் வரும்படியான நிகழ்வு; nausea.

*[வாய் + குமட்டல்]*

**வாய்குவிந்தகுப்பி** *vāy-kuvinda-kuppi,* பெ.(n.) சிறு கழுத்துப் புட்டி; narrow necked bottle.

*[வாய் + குவிந்த + குப்பி]*

**வாய்குளிரப்பேசு-தல்** *vāy-kuḷira-p-pēšu-,* 5 செ.கு.வி. (v.i.) மேலுக்கு இனிமையாகப் பேசுதல் (இ.வ.); to be honey-tongue.

*[வாய் + குளர் → குளிர + பேசு-,]*

**வாய்குளிறு-தல்** *vāy-kuḷiṟu-,* 2 செ.கு.வி. (v.i.) 1. கூச்சலிடுதல் (வின்.); to bawl out. 2. உறக்கத்தில் கனவு முதலியவற்றால் வாய் குழறுதல்; to cry out in sleep, as from fear.

*[வாய் + குளிறு-,]*

**வாய்கூசுதல்** *vāy-kūšudal,* பெ.(n.) தீச் சொற்கள் பேசுவதில் அருவருப்புக் கொள்ளுகை (கொ.வ); being ashamed to use indecent words.

*[வாய் + கூசுதல்]*

**வாய்கூப்பு-தல்** *vāy-kūppu-,* 5 செ.குன்றாவி. (v.t.) போற்றுதல்; to praise. *"மருதிடத்தா னென்றொருகால் வாய் கூப்ப" (பதினொ. திருவிடை.மும்மணி.29).*

*[வாய் + கூப்பு-,]*

**வாய்கூம்பு-தல்** *vāy-kūmbu-,* 5 செ.கு.வி. (v.i.) குவிதல்; to close, as petals of a flower. *"ஆம்பல்வாய் கூம்பினகாண்" (திவ். திருப்பா. 14).*

[வாய் + கூம்பு-,]

வாய்கொடு-த்தல்[1] *vāy-koḍu-,* 4 செ.கு.வி. (v.i.) உறுதிமொழி கூறுதல்; to give word, promise. 2. பேச்சுக் கொடுத்தல் (கொ.வ.); to engage one in talk. 3. வாய்ச்சண்டை வளர்த்தல் (வின்.); to kindle a quarrel; to bandy words.

[வாய் + கொடு-,]

வாய்கொடு-த்தல்[2] *vāi-koḍu-,* 4 செ.கு.வி. (v.i.) விளைவுகளை எண்ணிப் பார்க்காமல் தானாகப் போய்ப் பேசுதல்; enter into a conversation voluntarily. *'அந்த முரடனிடம் ஏன் வாய்கொடுத்தாய்?'*

[வாய் + கொடு-,]

வாய்ச்சப்பை *vāy-c-cappai,* பெ.(n.) 1. பேச்சுத் திறமற்றவ-ன்-ள் (இ.வ.); one who is not clever in speaking. 2. காற் சப்பை (Cm.M.247); foot and mouth disease in cattle.

[வாய் + சப்பை]

வாய்ச்சம்பிரதாயம் *vāy-c-cambiradāyam,* பெ.(n.) 1. பேச்சுத்திறமை (யாழ்.அக.); cleverness in talking. 2. தொன்றுதொட்டு வரும் வழக்கம்; oral tradition.

[வாய் + **Skt.** *sampra-dāya* > த. சம்பிரதாயம்.]

வாய்ச்சன்னி *vāy-c-canni,* பெ.(n.) முகத்தைக் கோணச்செய்து தோற்ற வேறுபாடு செய்யும் ஓர் இசிவு நோய்வகை; paralysis of the face.

[வாய் + **Skt.** *sanni* > த. சன்னி]

வாய்ச்சாலக்கு *vāy-c-cālakku,* பெ.(n.) வாய்ச்சாலகம் பார்க்க; see *vāy-c-cālagam.*

[வாய் + **U.** *cālak* > த. சாலக்கு]

வாய்ச்சாலகம் *vāy-c-cālagam,* பெ.(n.) சொல்வன்மை (வின்.); skill in speech, eloquence, fluency in speech.

[வாய் + **U.** *cālak* > த. சாலக்கு → சாலகம்.]

வாய்ச்சான்பிழைச்சான் *vāyccāṉ-piḻaiccāṉ,* பெ.(n.) நிலையுறுதியற்றது; precarious affair, matter of neck or nothing.

[வாய்ச்சான் + பிழைச்சான்]

வாய்ச்சி *vāycci,* பெ.(n.) 1. மரத்தைச் செதுக்கும் கருவி; adze. *"வாய்ச்சி வாயுறுத்தி மாந்தர் மயிர்தொறுஞ் செத்தினாலும்" (சீவக.2825).* 2. செங்கல் செதுக்குங் கருவி; instrument for cutting the surface of bricks. *"வாய்ச்சியா லிட்டிகை செத்து மாந்தர்" (சீவக.2689).*

[வாய் → வாய்சி → வாய்ச்சி]



வாய்ச்சித்தலை *vāycci-t-talai,* பெ.(n.) தட்டையான தலை (யாழ்.அக.); flattened head.

[வாய்ச்சி + தலை]

**வாய்ச்சுத்தம்** *vāy-c-cuttam,* பெ.(n.) உண்மையுடைமை; truthfulness.

*[வாய் + **Skt.** šuddha > த. சுத்தம்]*

**வாய்ச்சூலை** *vāy-c-cūlai,* பெ.(n.) இதளிய மருந்தினால் ஏற்பட்ட தசைபிடிப்பு, இதளிய வேக்காடு; inflammation of the mouth by mercurial poisoning.

*[வாய் + சூலை]*

ஒருகா. வாய்ப்பிடிப்பு.

**வாய்ச்செய்கையொலிச்சொற்கள்** *vāy-c-ceykaiyoli-c-coṟkaḷ,* பெ.(n.) மாந்தன் இயற்கையாகவும் செயற்கையாகவும் தன் வாயினாற் செய்யும் சில செய்கைகளும் சைகைகளும்; beckoning by mouth.

**வாய்ச்செய்கை**

சில வாய்ச் செய்கைகளால் ஏற்படும் வாய் நிலைகளை, அச் செய்கைகளைக் குறிக்குஞ் சொற்கள் முற்றுமாயினும் ஒரு மருங்காயினும் அமைக்குமாயின், அவை வாய்ச்செய்கை யொலியடிப் பிறந்தவையாம்.

எ–டு:

| செய்கை | செய்கைக்கேற்கும் ஒலி | சொல் |
|---|---|---|
| வாய் திறத்தல் | அ,ஆ | அங்கா |
| வாய் (பெருமூச்சிற்கும்) கொட்டாவிக்கும்) | ஆ | ஆவி |
| வாய்ப்பற்றுதல் | அவ் | அவ்வு–வவ்வு–கவ்வு |
| பல்லைக்காட்டுதல் | ஈ | இளி |
| காற்றை வாய்வழி முன்றள்ளல் | ஊ | ஊது |

'ஆ வென்று வாயைத் திறக்கிறான்', 'ஈ யென்று பல்லைக் காட்டுகிறான்' என்னும் வழக்கையும் அவ் என்று சொல்லும் போது கவ்வுகிற வாய்நிலை யமைவதையும் காண்க.

**(1) ஆவி**

ஆவித்தல் = வாய்திறத்தல்; வாய்திறந்து பெருமூச்சு விடுதல், கொட்டாவி விடுதல்.

ஆவி = வாய்வழிவரும் காற்று, மூச்சு (உயிர்ப்பு), உயிர் (ஆன்மா), உயிர்போன்ற தோற்றம்.

**(2) அவ்வு**

அவ்வு–வவ்வு–கவ்வு. இவை முறையே, ஔவு, வௌவு, கௌவு என்றும் வகைப்படும்.

*அகரத் திம்பர் வகரப் புள்ளியும்*
*ஔ என் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்.*

அவ்வு (ஔவு) தல் – வாயாற் பற்றுதல். கன்று புல்லை அவ்வி (ஔவி)த் தின்கிறது என்பது வழக்கு.

அவ்–அவ–அவா = வாயினாற் பற்றுதல் போல் மனத்தினாற் பற்றும் ஆசை.

அவ–அவவு–அவாவு. அவாவுதல் – ஆசைப்படுதல். அவாவு–ஆவு. ஆவுதல் = ஆசைப்படுதல். ஆவு–ஆவல். ஆர்வத்தோடணைத்தலை ஆவிச்சேர்ந்து கட்டுதல் என்பர்.

வவ்வுதல் = வாய்ப்பற்றுதல் போற் கைப்பற்றுதல், பறித்தல், வவ்வு.

வாவு – வாவல் = பெருவிருப்பம்.

கவ்வுதல் = வாயாற் பற்றுதல்.

கவ்–கவ–கவர். கவர்தல் = பற்றுதல், விரும்புதல்.

*கவர்வு விருப்பாகும் (தொல்.உயிரியல், 65)*

கவ–கா–காதல். கா–காம்–காமம்–காமர்.

காம் + உறு = காமுறு. காமம்–காமன்.

கவ்வுதல் = கல்வித்தின்னுதல், தின்னுதல்.

கவ்வு–கப்பு. கப்புதல் = கவளங்கவளமாக விழுங்குதல்.

கவ்வு–கவளம்=ஒருமுறை கவ்வும் அல்லது தின்னும் அளவான உணவு.

கவ்வு–கவியம்–கவிகம்=கறுழ் (bit)

கவ–கவவு = கவ்வுதல், கவ்வினாற்போல் அணைத்தல், அகப்படுத்தல், அகத்திடுதல்.

*கவவகத் திடுதல் (தொல். உயிரியல். 59).*

கவவுக்கை = அணைத்த கை.

கவர்தல் = பற்றுதல், அகப்படுத்துதல், வசப்படுத்துதல்.

கவர்–கவர்ச்சி. கவ்வு–கப்பு=கவர்ச்சி.

கவர்தல்=பற்றுதல். பறித்தல், கவா அன் = கவருங் கள்வன்.

கவர்–கவறு = கவறுஞ் சூதாட்டு, சூதாடு கருவி.

கவ்வு–கவுசனை–கவிசனை = அகத்திடும் உறை.

கவ்வு–கப்பு. கப்புதல் = அகத்திடுதல், மூடுதல்.

கவ–கவை. கவைத்தல்=அகத்திடுதல், இரு கையாலும் அணைத்தல்.

கவ்வு – (கவள்) – கவளி = கவ்வினாற் போல் மேலும் கீழும் சட்டம் வைத்துக்கட்டும் புத்தககக்கட்டு, கட்டு, வெற்றிலைக்கட்டு. கவளி–கவளிகை.

கவ்வு–கவுள் = கவ்வும் அலகு, கன்னம், உள்வாய். மேல்வாய் கீழ்வாயலகுகள் கவ்வுங் குறடு போலிருத்தலால், அலகு கொடிறு எனப்படுதல் காண்க. (கொறு–குறடு).

கவ–கவை = கவ்வும் அலகு போன்ற கவட்டை, கிளை.

கவ–கவவு=கவட்டை. கவர்தல் = கவ்வும் அலகு போற் பிரிதல்.

கவர்=பிரிவு. கவை,கிளை, கவராசம் = இரு கவருள்ள கருவி (Divider). கவ்வு–கப்பு=கிளை.

(கவள்)–கவடு = சுவை போன்ற தொடைச்சந்து, கவர், கவட்டை, கிளை. கவடு–கவட்டி = சுவை. தொடைச் சந்து, கவடு – கவட்டை = கவை, பிரிவு, கிளை, சுண்டுவில்.

(கவள்) – கவண் = கவட்டை போன்ற கயிற்றுக் கருவி. கவண்–கவணை. கவண்–கவண்டு–கவண்டி.

கவணை கவண்டு கவண்டி என்னும் மூன்றும் கவண் என்பதன் மறுவடிவங்களே.

கவ–கவான்=தொடைச்சந்து, தொடை, தொடைச் சந்துபோல் இருமலைக்குவடுகள் பொருந்திருக்கும் இடம்.

கவ–கவல். கவலுதல் = பல கவர்படுதல். பலகவர் படுதல் போலப் பல நினைவுகொண்டு கலங்குதல்.

கவல் – கவலை = கவை, கிளை, கவர்த்த வழி, பல நினைவுக் கலக்கம், அக்கறை.

கவல் – கவலி. கவலித்தல் = கவலைப்படுதல்.

கவ்–கவ்வை = கவலை, கவலைப்பட்டுச் செய்யுங்கருமம், கருமம், வேலை.

கவ்–கவை=காரியம். ஒரு கருமத்திற்கும் பயன் படாதவனைக் கவைக்குதவாதவன் என்பர்.

கவலி–கவனி. கவனித்தல் = கவலையோடு (கருத்தோடு) பார்த்தல். கவனி–கவனம். (மு.தா.).

வாய்ச்செய்கை யொலிச்சொற்கள்

மாந்தன் இயற்கையாகவும் செயற்கையாகவும் தன் வாயினாற் செய்யும் சில செய்கைகளும் சைகைகளும், ஒவ்வோர் ஒலியைப் பிறப்பித்தற் கேற்ற வாய்வடிவை யமைத்து, அவ் வொலிகளின் வாயிலாய் அச் செயல்களைக் குறிக்கும் சொற்களைப் பிறப்பித்திருக்கின்றன. அச் சொற்கட்கு மூலமான அவ்வொலிகள் வாய்ச் செய்கை யொலிகளாம்.

அவ்(வு)

ஒன்றைக் கவ்வுதலை யொத்த வாய்ச்செய்கைநிலை, அவ் என்னும் ஒலியைத் தோற்றுவித்தற் கேற்றதாதல் காண்க. மேல்வாய்ப் பல் கீழுதட்டொடு பொருந்துவதே கவ்வும் நிலையாம். இந்நிலை வகரமெய்யொலிப்பிற்கே ஏற்கும்.

*பல்லிதழ் இயைய வகாரம் பிறக்கும். (தொல்.98)*
*மேற்பல் விதழுற மேவிடும் வவ்வே. (நன்.85)*

அவ்–கவ்–வவ்.

அவ்–அவ்வு–கவ்வு–வவ்வு.

முதற்காலத்தில் அவ் என்னும் வடிவே வாயினாலும் கையினாலும் மனத்தாலும் பற்றும் மூவகைப் பற்றையும் குறித்தது. பிற்காலத்தில் அவ்வுதல் என்னுஞ் சொல் மனத்தினாற் பற்றுதலுக்கும், கவ்வுதல் என்னுஞ் சொல் வாயினாற் பற்றுதலுக்கும், வவ்வுதல் என்னுஞ் சொல் கையினாற் பற்றுதலுக்கும் வரையறுக்கப் பெற்றன. ஆயினும், இன்றும், அவ்வுதல் என்பது உலக வழக்கில் வாயினாற் பற்றுதலை உணர்த்தும்.

எ – கா:

கன்று புல்லை அவ்வித் தின்கிறது.

அவ்–ஔ, கவ்–கௌ, வ்–வௌ.

அவ்வு–ஔவு, கவ்வு–கௌவு, வவ்வு–வௌவு.

*அகரத் திம்பர் யகரப் புள்ளியும்*
*ஐயென் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்.*
(தொல். 56)

என்பதற் கொத்து,

அகரத் திம்பர் வகரப் புள்ளியும்
ஔஎன் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்

என்றொரு நூற்பாவும் இருந்திருத்தல் வேண்டும்.

கன்று புல்லை ஔவித் தின்கிறது.

*கூர்த்துநாய் கௌவிக் கொளக்கண்டும் (நாலடி. 70).*

தெ. கவியு

*வௌவிய வஞ்சி வலம்புனைய* (பு.வெ.3 : 2)

வாய் ஒன்றைக் கௌவும் போது மேல்வாயும் கீழ்வாயும் குறட்டின் ஈரலகு போன்று பற்றுவதால், கவ்வுதல் (அல்லது கௌவுதல்) என்னும் சொற்குக் குறடுபோற் கவைத்திருத்தல் என்னும் கருத்துத் தோன்றிற்று. வாயின் கவைத் தன்மையை, மாந்தன் வாயினும் விலங்கு மூஞ்சியும், விலங்கு மூஞ்சியினும் பறவை மூக்கும் தெளிவாய்க் காட்டும்.

அவ் என்னும் சொல்லினின்று, வாயினாற் பற்றுதலையும் மனத்தினாற் பற்றுதலையுங் குறிக்கும் சில சொற்கள் தோன்றியுள்ளன. அவக்கு என்பது விரைந்து கௌவுதலையும், அவக்காசி என்பது விரைந்து கௌவும் ஆசையையும் உணர்த்தும்.

அவ் – அவா – அவவு.

*அவவுக்கை விடுதலு முண்டு (கலித்.14)*

அவவு – அவாவு. அவாவுதல் = விரும்புதல்.

அவாய்நிலை = ஒரு சொல் தன்னொடு பொருந்திப்

பொருள் முடிதற்குரிய இன்னொரு சொல்லை அவாவி (வேண்டி) நிற்றல்.
அவாவு – ஆவு. ஆவுதல் = விரும்புதல்.

*செந்நெலங் கழனிச் செய்வேட் டாவிய*
*மறையோன்.* (உபதேசகா. சிவத்துரோ. 12)

ஆவிச் சேர்ந்து கட்டினான் என்பது உலக வழக்கு.
ஆவு – ஆவல். ம. ஆவல்.
கவ்வு என்னும் சொல்லினின்று, கௌவுதற் கருத்தை அடைப்படையாகக் கொண்ட சில சொற்களும், கவைத்தற் கருத்தை அடிப்படையாகக் கொண்ட பல சொற்களும், மனத்தால் அல்லது மனத்தைப் பற்றும் சில சொற்களும் தோன்றியுள்ளன.

கௌவுதல்

*கல்வித்தோல் தின்னும் குணுங்கர்நாய்.* (நாலடி.322).
*கவுள் = கன்னம். கண்ணீர் கவுளலைப்ப.* (சீவக. 2050)
கவளம் = கௌவும் அல்லது வாய்கொள்ளும் அளவான உணவுருண்டை.
கவளம் = கவழம்.

*கவழ மறியான் கைபுனை வேழம்* (கலித். 80)

கவ்வு – கப்பு.
கப்புதல் = கொள்ளுமளவு வாயிலிட்டு மொக்குதல் அல்லது விழுங்குதல்.

*அவல்பொரி கப்பிய கரிமுகன்* (திருப்பு.விநாயகர்.1)

கவியம் = கடிவாளம் (பிங்.). கவியம் – Pkt. kaviya.
கவிகம் = கடிவாள இரும்பு. கவிகம் – Skt. kavika.

கவைத்தல்

கவ் – கவல் – கவர். கவ்வு – கவட்டை.
கவர்தல் = பல காலாகப் பிரிதல்.

*காவிரி வந்து கவர்பூட்ட.* (புறம். 35 : 8)

கவர்த்தல் = 1. வழிகள் பிரிதல்.

*அறைவாய்ச் சூலத் தருநெறி கவர்க்கும்.* (சிலப்.11:73)

ம., தெ. கவ; க. கவலு.
2. கவர்படுதல்.
கவர் = 1. நீர்க்காற் கிளை.
தெற்குநோக்கி நீர்பாய்கிற கவருக்கு (S.I.I.iii,45)
3. பல்பிரிவு.

*மகளிர் நெஞ்சம்போற் பலகவர்களும் பட்டது.*
(சீவக. 1212).

4. மரக்கிளை. 5. சூலக்கிளையலகு.
ம., தெ., து. கவ; க. கவல்.
கவர்க்கால் (கவராயுள்ள முட்டுக்கட்டை, கவையுள்ள மரம், கிளை வாய்க்கால்), கவர்க் குளம்பு, கவர்ச்சுத்தியல், கவர்த்தடி, கவர்நெறி, கவராசம் (divider) முதலிய சொற்களை நோக்குக. கவர்படு பொருண்மொழி = பல்வேறு பொருள்தரும் சொல் அல்லது சொற்றொடர்.
கவர்கோடல் = பலவாறாகக் கருதி ஐயுறல்.

*கவர்கோடல் தோன்றாது.* (மணிமே. 27 : 22)

கவடு = 1. மரக்கிளை, கவருள்ள மரக்கிளை.

*காதலுங் களிப்பு மென்னுங் கவடுவிட்டு.* (சீவக.1389)

2. தொடைச்சந்து.
கவடு நுழைந்த பயல் என்பது உலக வழக்கு.
கவட்டி = ஓர் எட்டு. 3. பகுப்பு.

*கவடுபடக் கவைஇய...... உந்தி.* (மலைபடு.34)

தெ. கவட்ட.
கவட்டடி = மரக்கிளைக் கவர், கவை.
ம. கவ; க. கவத்த.
கவட்டை = கவை, கவண்.
கவண் = கவைபோல் இருபுறமும் கயிறு அல்லது வாருள்ள கல்லெறி கருவி.

*கடுவிசைக் கவணி னெறிந்த சிறுகல்.* (அகம். 292)

ம. கவண்; க., து. கவணெ.
கவண் – கவணை.

*கவணையிற் பூஞ்சினை யுதிர்க்கும்.* (கலித்.23)

கவண் – கவண்டு – கவண்டி.
கவணம் = சீலைத்துணியை இரண்டாகக் கவர்படக் கிழித்துக் கட்டும் காயக்கட்டு.
கவணி= கவணத்திற்கு குதவும் மெல்லிய சீலை.
ம. கவணி.
கவணை = கவைபோல் அமைக்கும் மாட்டுத்தொட்டி.
கவையணை – கவணை. தெ. கவணமு.
கவடு – கவடி = பிளவுபட்ட பலகறை.
ம., க. கவடி; தெ. கவ்வ (gavva).
கவடி – காடி = மாட்டுத்தொட்டி.
கவளி = 1. கவண்போல் அமைத்துத் தூக்கும் பொத்தகக் கட்டு.

*புத்தகக் கவளி யேந்தி.* (பெரியபு. மெய்ப். 7).

2. புத்தகக் கட்டுப்போன்ற வெற்றிலைக் கட்டு.
கவளி – கவளிகை = சிறு கவளி.

*புத்தகங் கட்டி யார்த்த கவளிகையே கொலோ.*
(சேதுபு. இராமதீர். 49)

கவளிகை – Skt. kavalika (கவலிக்கா).
கவான் = 1. கவைபோன்ற தொடைச்சந்து, தொடை.

*கழுமிய வுவகையிற் கவாற்கொண்ட டிருந்து.*
*(மணிமே. பதி. 27)*

2. தொடைச்சந்து போன்ற மலைப்பக்கம்.

*மால்வரைக் கவான்.* (பட்டினப். 138)

கவை = பிளவு, பிரிவு, கவர், கிளை, கவட்டை.

கவைக்கால், கவைக்குளம்பு, கவைக்கொம்பு, கவைக்கோல், கவைத்தாம்பு, கவைத்தாளலவன் (பெரும்பாண். 208). கவைநா, கவைமுட் கருவி, கவையடி முதலிய தொடர்ச்சொற்களை நோக்குக.
ம. கவ.
கவ்வு – கப்பு = கவர்கொம்பு, கிளை, பிளவு.
கப்புங் கவரும் என்பது உலக வழக்கு.
கப்பு – கப்பி. கப்பித்தல் = கவர்படுதல்.
கப்பித்த காலையுடைய ஞெண்டினது. (பெரும்பாண். 208, உரை)
கப்பு – கப்பை. கப்பைக்கால் = கவட்டுக்கால்.
கவ்வு – காவு. காவுதல் = 1. தண்டின் இருபுறமும் கவைபோற் கலத்தை அல்லது பொருளைத் தொங்கவிட்டுத் தோளிற் சுமத்தல்.

*காவினெங் கலனே.* (புறம். 206)

2. தோளிற் சுமத்தல், சுமத்தல்.

*ஊனைக் காவி யுழிதர்வர்* (தேவா. 338 ; 1)

காவு + அடி = காவடி = 1. காவுதடி. 2. முருகன் காவடி. 3. சோற்றுக் காவடி. 4. தண்ணீர்க் காவடி.
காவடி – காவட்டு = கள்ளுக் காவடி.
காவு – கா = 1. காவடித் தண்டு.

*காமமு நாணு முயிர்காவாத் தூங்கும்.* (குறள்.1163)

2. காவடி போன்ற துலாக்கோல்.
3. துலாம் போன்ற ஒரு நிறை.

*காவென் நிறையும்.* (தொல். எழுத்து 169)

கப்பு = காவுந்தோள்.

*கப்பா லாயர்கள் காவிற் கொணர்ந்த.*
(திவ். பெரியாழ். 3 : 1 : 5)

கவல் – கவலை = 1. மரக்கிளை (பிங்.)
2. கவர்த்த வழி, பல தெருக்கள் கூடுமிடம்.

*மன்றமுங் கவலையும் ......... திரிந்து.* (சிலப்.14 : 24).
*கவலை முற்றம்.* (முல்லைப். 30)

3. மனக்கவற்சி, மனவருத்தம் (கவர்த்த எண்ணம்).
ம. கவல.
4. அச்சத்தோடு கூடிய அக்கறை.
கவலுதல் = கவலாறாகக் கருதி வருந்துதல். க. கவலு.
கவல் – கவலம், கவலை. கவல் – கவலி. கவலித்தல் = கவலுதல். கவை = கரிசனை, அக்கறை.
கவ்வை = கவலை.

*கவ்வையாற் கலங்குமனம்.* (திருக்காளத். பு. 18:27)

கைப்பற்று
கவ – கவவு = 1. கையால் தழுவுதல்.

*கண்ணு நுகலுங் கவுளுங் கவவியார்க்கு.* (கலித்.83:17)

2. முயங்குதல்

*கவவிநாம் விடுத்தக்கால்.* (கலித். 35)
*கவவொடு மயங்கிய காலை யான்.*
(தொல்.பொருள். 173).

இரு கையாலும் தழுவுதல் ஈரலகாற் கவ்வுதல் போலித்தல் காண்க.

3. அகத்திடுதல்.

*கவவகத் திடுதல்.* (தொல். சொல். 357)
*செவ்வாய் கவவின வாணகை.* (திருக்கோ.108).

4. உள்ளீடு.

*கவவொடு பிடித்த வகையமை மோதகம்*
(மதுரைக். 626)

கவவுக்கை = அணைத்த கை.

*திங்கண் முகத்தாளைக் கவவுக்கை ஞெகிழ்ந்தனனாய்.* (சிலப். 7 : 52)

கவர்தல் = 1. முயங்குதல்.

*கவர்கணைச் சாமனார் தம்முன்* (கலித். 94:12)

3. பறித்தல், பறித்துண்ணுதல்.

*கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.* (குறள். 100)

4. கொள்ளையடித்தல்.

*வீடறக் கவர்ந்த வினைமொழிந் தன்று*
(புவெ. 3 : 15. கொளு)

5. பெறுதல்.

*வறியோர் கவர ....... எறிந்து* (தஞ்சைவா. 20)

கவர்ந்தூண் = அடித்துண்ணும் உணவு.

*பசியெருவை கவர்ந்தூ ணோதையும்.*
(மணிமே. 6 : 117)

கவைத்தல் = 1. அணைத்தல்.

*ஒவ்யெனப் பிரியவும் விடாஅன் கவைஇ*
(குறிஞ்சிப். 185)

2. அகத்திடுதல்.

*ஆரங் கவைஇய மார்பே* (புறம் 19 : 18)

கவறு = 1. பிறர் பொருளைக் கவரும் சூதாட்டம்.
.................... கள்ளுங் கவறுந் திருநீக்கப் பட்டார் தொடர்பு (குறள். 920)
2. சூதாடு கருவி.

*அரும்பொற் கவறங் குறள* (சீவக. 927)

மனப்பற்று
கவர்தல் = விரும்புதல்.

*கவர்வுவிருப் பாகும்* (தொல். சொல். 362).

கவவுதல் = விரும்புதல்.

*கலிங்கம் ....... கவவிக் கிடந்த குறங்கினாள்* (சீவக. 1058)

கவர்ச்சி = விருப்பம். கவர்ச்சி = மனத்தை இழுக்கை.
கப்பு = கவர்ச்சி.

கப்பின்றா மீசன் கழல் (சிவ. போ. 11, 5, வெண்.)
கவ – கா. காதல் = விரும்புதல், பேரன்பு கொள்ளுதல்.
கா – காவு. காவுதல் = நச்சுதல்.

*தேனைக் காவியுண் ணார்சில தெண்ணர்கள்* (தேவா. 338 : 1)

கா + அம் – காம் = விருப்பம், காதல்.
ஒ.நோ: ஏ + உம் = ஏம்–யாம் – நாம். காம் + உறு = காமுறு. காமுறுதல் = 1. விரும்புதல்.

*இன்பமே காமுறுவ ரேழையர்* (நாலடி. 60).

2. வேண்டுதல்.

*கனைகதிர்க் கனலியைக் காமுற லியைவதோ* (கலித். 16)

காம் – காமு – காமம்.
ஒ.நோ: விழு – விழும் – விழுமு – விழுமம். குழு – குழும் – குழுமு – குழுமம், பரு – பரும் – பருமு – பருமன்.
காமு – காமுகம் – காமுகன் – Skt. kamuka (காமுக்க).
காம் + மரு – காமரு – காமர் = விரும்பத்தக்க, அழகிய.

*காமர் கடும்புனல்* (கலித். 39)

காமர் கயல்புரள (நளவெ.)
காம் + அர் – காமர் = காமுகர்.
காம் + இ – காமி = காமுகன்.
களிமடி மானி காமி கள்வன் (நன். 38).
காமி – Skt. kamin (காமின்).
காமித்தல் = 1. விரும்புதல். ஒ.நோ: காதல் – காதலி.

*தப்புதி யறத்தை யேழாய் தருமத்தைக் காமி யாதே* (கம்பரா. நிந்த. 54)

2. காமங் கொள்ளுதல்.
காமம் = கள்வன் மனைவியரிடைப்பட்ட காதல், மணம், காமத்துப்பால் என்னும் திருக்குறட் பகுதிப் பெயரை நோக்குக. சிவகாமி = சிவனைக் காதலிக்கும் மலைமகள்.
ஒ.நோ: வேட்டல் = விரும்புதல், காதலித்தல், வேள் = திருமணம். காமம் – Gk. gamos (marriage), Skt. kama. (காம).
காமம் என்னும் சொல் முதற்காலத்திற் பொதுவான ஆசையையே குறித்தது.

*காமம் வெகுளி மயக்க மிவைமூன்றன்*
*நாமங் கெடக்கெடும் நோய். (குறள். 360)*
*நெடுநீர் மறவி மடிதுயில் நான்கும்*
*கெடுநீரார் காமக் கலன். (குறள். 605)*

என்னும் குறள்களை நோக்குக.

பிற்காலத்தில், அச்சொல் காதல் என்னும் சொற்போல் ஆடவரின் பெண்ணாசையையும் பெண்டிரின் ஆணாசையையும் சிறப்பாய்க் குறிக்கலாயிற்று. அப் பொருளிலும், உயரிய இருதலைக் காமத்தையும் ஒருமனை மணத்தையுமே குறிக்க அது திருவள்ளுவரால் ஆளப்பெற்றது. ஆயின், இன்று, அது இடங்கழியையும் இணைவிழைச்சு விருப்பத்தையுமே குறிக்குமளவு இழிபடைந்துள்ளது. காமம் – காமன் = மணக்காதல் உண்டாக்கும் தெய்வம். The Indian Cupid.
காமன் – Skt. kama (காம).
(–தேவநேயம் பக். 67–76).

**வாய்ச்சேதி** *vāy-c-cēdi,* பெ.(n.) 1. பேச்சுவாக்கு; casual mention. *“நாடியதை வாய்ச்சேதியா யுரைக்க வாயெடுக்க முந்தி” (பஞ்ச.திருமுக.1198).* 2. ஆள்வழிச் சொல்லியனுப்புஞ் செய்தி; oral communication.

*[வாய் + செய்தி → சேதி]*

**வாய்ச்சொல்** *vāy-c-col,* பெ.(n.) 1. பேச்சு; utterance, speech, word of mouth. *“வாய்ச் சொற்க ளென்ன பயனு மில” (குறள்.1100).* 2. காணாவொலி; utterance of an invisible speaker, considered as an omen. *"வாய்ச்சொல் வாவாவென் றிடல்" (அறப். சத. 63).* 3. வாய்ப்பேச்சு, 2 பார்க்க; see *vāy-p-pēccu. “வாய்ச் சொல்லில் வீரரடீ” (பாரதி. தேசிய. நடிப்பு.1).*

*[வாய் + சொல்]*

**வாய்ச்சொலவு** *vāy-c-colavu,* பெ.(n.) 1. குறி சொல்லுகை; prediction, augury. 2. பின் விளையுங் கேட்டினை முன்னெடுத்துக் கூறுகை; ominous utterance.

*[வாய் + சொல் → சொலவு]*

வாய்சலி-த்தல் *vāy-šali-,* 4 செ.கு.வி. (v.i.) பேசி வாயயர்தல்; to be tired of speaking. *"அவன் நெடுநேரம் பேசி வாய் சலித்தான்" (வின்.).*

*[வாய் + சலி-,]*

வாய்சவக்களி-த்தல் *vāy-šavakkaḷi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. சுவையற்றிருத்தல்; to be insipid. 2. வெறுப்புத் தட்டுதல்; to be distasteful.

*[வாய் + சவக்களி]*

வாய்சளப்பு-தல் *vāy-šaḷappu,* 10 செ.குவி. (v.i.) வீண்பேச்சுப் பேசுதல் (யாழ்.அக.); to chatter; to indulge in idle talk.

வாய்சளி-த்தல் *vāy-šaḷi-,*4 செ.கு.வி. (v.i.) வாய்சவக்களி-த்தல் (யாழ்.அக.) பார்க்க; see *vāy-šavakkaḷi-*

*[வாய்சலி-த்தல் → வாய்சளி-த்தல்]*

வாய்சுருங்கல் *vāy-šuruṅgal,* பெ.(n.) உணவுக் குழல்வாய் சுருங்கிப் போதல்; contraction of the lumen of a cannel.

*[வாய் + சுருங்கல்]*

வாய்சுருங்கியபாத்திரம் *vāy-šuruṅgiya-pāttiram,* பெ.(n.) வாய் சிறுத்த ஏனம்; a vessel with small mouth.

*[வாய் + சுருங்கிய + பாத்திரம்]*

**Skt.** *pātra > த. பாத்திரம்*

வாய்சோர்-தல் *vāy-šōr-,* 8 செ.கு.வி. (v.i.) 1. பிதற்றுதல்; to talk incoherently, as in delirium. *"வாய் சோர்ந் தாற்றா" (பெருங். வத்தவ. 7,25).* 2. வாய்தடுமாறு-, 2 (பெரிய பு.) பார்க்க; see *vāy-taḍumāṟu-.* 3. வாய்சலி (இ.வ) பார்க்க; see *vāy-šali.*

*[வாய் + சோர்-,]*

வாய்ஞானம்பேசல் *vāy-ñāṉam-pēšal,* பெ.(n.) முற்பழக்கமில்லா மூதுணர்வுப் பேச்சு; tall talk without experience.

*[வாய்ஞானம் + பேசல்]*

**Pkt.** *ñāna > த. ஞானம்.*

வாய்த்தட்டுப்பலகை *vāy-t-taṭṭu-p-palagai,* பெ.(n.) கூரையின் முகப்பில் தைக்கும் பலகை (இ.வ); eave-board, barge-board.

*[வாய் + தட்டு + பலகை]*

வாய்த்தல் *vāyttal,* பெ.(n.) வாய்தல்[2] (அரு.நி.) பார்க்க; see *vāydal.*

வாய்த்தலை *vāy-t-talai,* பெ.(n.) 1. வாய்க் காலின் தலைப்பு மதகு; head-sluice of a channel. *"சுதை செய் வாய்த்தலை" (சீவக.40).* 2.தொடங்கும் இடம்; source. *"நினைவுக்கு வாய்த்தலையான நெஞ்சிலே" (திவ். திருமாலை, 34, வ்யா. பக்.112).*

*[வாய் + தலை]*

வாய்த்தாரை *vāy-t-tārai,* பெ.(n.) 1. படைக்கலத்தின் நுனி; edge, as of a weapon. 2. வாய்க்கரை, 1 பார்க்க; see *vāy-k-karai.*

*[வாய் + தாரை]*

வாய்த்திட்டம் *vāy-t-tiṭṭam,* பெ.(n.) வாயளவு; upto the mouth.

*[வாய் + திட்டம்]*

வாய்த்திரம் *vāy-t-tiram,* பெ.(n.) சாரணை; a plant - Trianthema monogyna.

*[வாய் + திரம்]*

**வாய்த்தீர்த்தம்** *vāy-t-tirttam,* பெ.(n.) வாய்நீர் பார்க்க; see *vāy-nīr.* *"வாய்த்தீர்த்தம் பாய்ந்தாட வல்லாய் வலம்புரியே" (திவ்.நாய்ச்.7, 6).*

*[வாய் + தீர்த்தம்]*

**வாய்த்துடுக்கு[1]** *vāi-t-tuḍukku,* பெ.(n.) துடுக்கான பேச்சு; saucy or impertinent talk. *'இந்தச் சின்னப் பெண்ணுக்கு என்ன வாய்த்துடுக்கு !'.*

*[வாய் + துடுக்கு]*

**வாய்த்துடுக்கு[2]** *vāy-t-tuḍukku,* பெ.(n.) 1. பேச்சிற் காட்டும் விரைவு; rashness in speech. 2. பேச்சிற் காட்டும் செருக்கு; arrogance in speech.

*[வாய் + துடுக்கு]*

**வாய்தடுமாறு-தல்** *vāy-taḍumāru-,* 9 செ.கு.வி. (v.i.) 1. வாய் பதறுதல் (யாழ்.அக.); to stutter. 2. பேசுவதிற் பிழைபடுதல் (வின்.); to make a verbal mistake.

*[வாய் + தடுமாறு-.]*

**வாய்தல்[1]** *vāydal,* பெ.(n.) வாயில்; doorway, entrance. *"ஒழுகு மாடத்து ளொன்பது வாய்தலும்" (தேவா.338.7).*

*[வாய் → வாய்தல்]*

**வாய்தல்[2]** *vāydal,* பெ.(n.) நுணுக்கம் (அக.நி.); minuteness.

*[வாய் → வாய்தல்]*

**வாய்தற்கூடு** *vāydaṟ-kūḍu,* பெ.(n.) கதவினிலை (யாழ்.அக.); door-frame. மறுவ. வாசற்கால்.

*[வாய் → வாய்தல் + கூடு]*

**வாய்தற்படி** *vāydaṟ-paḍi,* பெ.(n.) வாயிற்படி (யாழ்.அக.); door-step.

*[வாய் → வாய்தல் + படி]*

**வாய்தித்திப்பு** *vāy-tittippu,* பெ.(n.) கோழையினால் வாய் நீரூறலில் ஏற்படும் இனிப்புச் சுவை; sweetness of the mouth caused by phlegm humour.

*[வாய் + தித்திப்பு]*

**வாய்திற[1]-த்தல்** *vāy-tiṟa-,* 3 செ.கு.வி. (v.i.) 1. வாயை யகல விரித்தல்; to open one's mouth. *'பணமென்றால் பிணமும் வாய் திறக்கும்'.* 2. மலர்தல்; to blossom; to open, as a flower. *"நறுமென்குவளை வாய் திறந்த" (பிரபுலிங்.பிரபு தே.54).* 3. புண் கட்டி உடைதல்; to break, as a boil. 4. வெள்ளம் கரையை உடைத்தல்; to make a breach, as a flood. *"பெரும்புனல் வாய் திறந்த பின்னும்" (பு.வெ.3,21).*

*[வாய் + திற-.]*

**வாய்திற[2]-த்தல்** *vāy-tiṟa-,* 3 செ.குன்றாவி. (v.t.) 1. மலர்த்துதல்; to cause to open, as the petals of a flower. *"வண்டு வாய் திறப்ப... மல்லிகை" (சிலப்.2,32).* 2. பேசுதல்; to speak. *"வாளா கிடந்துறங்கும் வாய்திறவான்" (திவ்.இயற் .நான்மு.35).*

*[வாய் + திற-.]*

**வாய்திறந்தகாயம்** *vāy-tiṟanda-kāyam,* பெ.(n.) நாட்படு பெரும்புண்; open wound.

*[வாய்திற → வாய்திறந்த + காயம்]*

வாய்திறப்பு *vāy-tiṟappu,* பெ.(n.) உணவு, நடை, தூக்கம் ஆகிய இக்குற்றத்தினால் நரம்புகளை ஏற்றிசைந்து (அனுசரித்து) வாயை மூடாமல் திறந்தபடியே இருக்கச் செய்யுமோர் வளிநோய்; a vatha disease marked by wide mouth which cannot be closed.

*[வாய் + திறப்பு]*

வாய்தீட்டு-தல் *vāy-tīṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t ) படைக்கல முதலியவற்றின் முனை தீட்டுதல்; to sharpen the edge as of a weapon. *"கன்மிசை யறிந்து வாய் தீட்டி" (பெருங்.இலாவாண.4,168).*

*[வாய் + தீட்டு-.]*

வாய்ந்துகொள்(ளு)-தல் *vāyndu-koḷ-,* 13 செ.குன்றா.வி. (v.t.) பகை வென்று கைப் பற்றுதல்; to obtain by conquest. *"வாய்ந்து கொண்டடையார் வைவேல்" (இரகு.குறைகூ.7).*

*[வாய்ந்து + கொள்-.]*

வாய்நாற்றம் *vāy-nāṟṟam,* பெ.(n.) 1. வாயின் மணம்; sweet smell in the mouth. 2. வாயிலிருந்து தோன்றுந் தீ நாற்றம் (பைஷஜ); bad smell in the mouth.

*[வாய் + நாற்றம்]*

வாய்நீர்[1] *vāy-nīr,* பெ.(n.) உமிழ் நீர் (யாழ்.அக.); saliva; spittle.

*[வாய் + நீர்]*

வாய்நீர்[2] *vāi-nīr,* பெ.(n.) (குழூஉ) வெடியுப்பு எரிநீர்; nitric acid.

மறுவ. தலைப்பிண்டச் செயநீர்.

*[வாய் + நீர்]*

வாய்நீர்சுரப்பு *vāy-nīr-šurappu,* பெ.(n.) உமிழ் நீர் ஊறிப் பெருகும் ஒருவகை நோய். இதற்கு வழுக்கைத் தேங்காயும் பனங்கற்கண்டும் காலையில் 2 நாள் சாப்பிடப் போம்; supersecretion of saliva- the remedy is given above.

*[வாய்நீர் + சுரப்பு]*

வாய்நீரொழுகல் *vāy-nīroḻugal,* பெ.(n.) உமிழ் நீர் கடைவாயினின்றும் வடிதல்; secretion of saliva or rheum.

*[வாய் + நீரொழுகல்]*

வாய்நீரோட்டம் *vāy-nīrōṭṭam,* பெ.(n.) ஒரு நோய்; a disease.

*[வாய்நீர் → வாய்நீரோட்டம்]*

வாய்நீளம் *vāy-nīḷam,* பெ.(n.) குறை கூறுந் தன்மை; caustic tongue.

*[வாய் + நீளம்]*

வாய்நெகிழ்-தல் *vāy-negiḻ-,* 3 செ.கு.வி. (v.i.) மலர்தல்; to open, as a flower. *"செங்கழுநீர் வாய்நெகிழ்ந்து" (திவ். திருப்பா. 14).*

*[வாய் + நெகிழ்-.]*

வாய்நேர்-தல் *vāy-nēr-,* 3 செ.குன்றாவி. (v.t.) 1. வழங்குவதாக உறுதிமொழியளித்தல்; to promise to give or bestow. *"அறைபறை மாயன் மணி வண்ணன் நென்னலே வாய்நேர்ந்தான்" (திவ்.திருப்பா. 16).* 2. நேர்த்திக் கடனைக் குறிப்பிட்டுச் சொல்லுதல்; to vow to make a specific offering. *"நூறுதடாவில் வெண்ணெய்*

*வாய்நேர்ந்து பராவி வைத்தேன்" (திவ்.நாய்ச்.9, 6).* 3. பேச்சால் உடன்படுதல்; to give one's consent orally. *"நெஞ்சு நேர்ந்தும் வாய்நேர்ந்துரையா" (பெருங். உஞ்சைக்.44,146).*

*[வாய் + நேர்-.]*

வாய்நோய் *vāy-nōy,* பெ.(n.) மாட்டுக்கு வாயில் வரும் நோய்; mouth disease, in cattle.

வாய்ப்பக்காட்டு-தல் *vāyppa-k-kāṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) விளங்க உணர்த்துதல்; to indicate clearly. *"வாய்ப்பக்காட்டல் பாயிரத் தியல்பே" (நன்.47).*

*[வாய் → வாய்ப்ப + காட்டு-.]*

வாய்ப்பட்சி *vāy-p-paṭci,* பெ.(n.) காக்கை; crow. *"தேமா வனந்தனிற் கூறுவாய்ப் பட்சியுறையும்" (திருவேங்.சத.90).*

*[வாய் + பட்சி.* **Skt.** *= பட்சி.]*

வாய்ப்பட்டி *vāy-p-paṭṭi,* பெ.(n.) 1. வாய்க்கு வந்தபடி பேசுவோ-ன்-ள்; chatter-box, babbler. *"வள்ளல் தெரியுமடி வாய்ப்பட்டி யென்றுரைத்தார்" (ஆதியூரவதானி).* 2. கண்டதைத் தின்பவன்-ள்; one who eats whatever comes to hand.

*[வாய் + பட்டி]*

ஒருகா. வாய்ப்படி → வாய்ப்பட்டி.

வாய்ப்பட்டை *vāy-p-paṭṭai-,* பெ.(n.) வாய்ப்பட்டைக்கழி பார்க்க; see *vāyppaṭṭai-k-kaḻi.*

*[வாய் + பட்டை]*

வாய்ப்பட்டைக்கழி *vāyppaṭṭai-k-kaḻi,* பெ.(n.) கூரைமுகப்பில் ஓடுதாங்குவதற்காக வைக்கும் மூங்கில் அல்லது மரக்கட்டை; bamboo or piece of timber for supporting the tiles at the edge of a roof.

*[வாய்ப்பட்டை + கழி]*

வாய்ப்படு-தல் *vāy-p-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. வழிப்படுதல்; to find a way. *"வந்தோர் வாய்ப்பட விறுத்த வேணி" (புறநா.343).* 2. நறுஞ்சுவைப்படுதல் (யாழ்.அக.); to be relished.

*[வாய் + படு]*

வாய்ப்பந்தல் *vāy-p-pandal,* பெ.(n.) பகட்டுரை; empty, ostentatious word, bombast. *"அந்திவண்ண ரென்றும்... வாய்ப்பந்தலிடுவ தன்றி" (அருட்பா. vi, தத்துவ. 10).*

*[வாய் + பந்தல்]*

வாய்ப்பரக்கூடம் *vāippara-k-kūḍam,* பெ.(n.) பல்; tooth.

*[வாய்ப்பரம் + கூடம்]*

வாய்ப்பலி *vāy-p-pali,* பெ.(n.) *வாய்க்கரிசி* (தக்கயாகப்.53, உரை) பார்க்க; see *vāykkariši.*

*[வாய் + பலி.* **Skt.** *bali > த. பலி.]*

வாய்ப்பறையறை-தல் *vāy-p-paṟai-y-aṟai-,* 3 செ.குன்றாவி. (v.t.) பலருமறிய வெளியிடுதல்; to proclaim, as by beat of drum or tomtom. *"வடுவுரை யாவர் பேர்ப்பார் வாய்ப்பறை யறைந்து தூற்றி" (சீவக.211).*

*[வாய் + பறையறை-.]*

**வாய்ப்பன்** *vāyppaṉ,* பெ.(n.) ஒருவகைப் பணியாரம்; a kind of cake.

*[வாய் + பன்]*

**வாய்ப்பன்சட்டி** *vāyppaṉ-šaṭṭi,* பெ.(n.) விளிம்புள்ள மட்கல வகை (யாழ்ப்.); a kind of earthen vessel with a rim.

*[வாய்ப்பன் + சட்டி]*



**வாய்ப்பாட்டு** *vāy-p-pāṭṭu,* பெ.(n.) வாயாற்பாடும் பாட்டு; vocal music.

*[வாய் + பாட்டு]*

**வாய்ப்பாடம்** *vāy-p-pāḍam,* பெ.(n.) 1. பாராமற் சொல்லும்படி நெட்டுருப் பண்ணிய பாடம்; lesson learnt by heart. 2. பொத்தகமின்றிக் கேள்வியாற் படித்த பாடம்; lesson taught orally.

*[வாய் + பாடம்]*

**வாய்ப்பாடு** *vāy-p-pāḍu,* பெ.(n.) 1. வாய்க்கிடும் உண்டி; anything to gratify the palate. *"வாய்ப்பாடு வயிற்றுப்பாடு தீர்ந்த பிறகு மற்றப்பாடு".* 2. வாய்பாடு1,2 (இ.வ) பார்க்க; see *vāy-pāḍu.*

*[வாய் + பாடு]*

**வாய்ப்பானை** *vāy-p-pāṉai,* பெ.(n.) அலப்புவோன் (வின்.); babbler.

மறுவ. உளறுவாயன்.

*[வாய் + பானை]*

**வாய்ப்பிடிப்பு** *vāy-p-piḍippu,* பெ.(n.) 1. வாய் திறக்க வொட்டாதபடி கிட்டுதல்; lock jaw. 2. மருந்தின் வேகத்தினால் வாய் வெந்து புண்ணாகி நீர் வடிந்து திறக்க வொட்டாம லிருத்தல்; inflammation of the mouth caused by irritant medicines or mercurial compounds-Mercurial ptyalism or stomatitis.

*[வாய் + பிடிப்பு]*

**வாய்ப்பிணி** *vāy-p-piṇi,* பெ.(n.) வாயிலுண்டாம் நோய்; mouth disease. *"வாய்ப்பிணியர்" (கடம்ப.பு.இலீலா.130).*

*[வாய் + பிணி]*

**வாய்ப்பியம்** *vāyppiyam,* பெ.(n.) வாய்ப்பியன் செய்த ஒரு தமிழிலக்கண நூல் (யாப்.வி.பக்.536); a treatise on Tamil grammar, now not extant, by *vāyppiyaṉ.*

**வாய்ப்பிரசங்கம்** *vāy-p-pirašaṅgam,* பெ.(n.) 1. உட்கருத்தின்றி உதட்டளவிற் செய்யும் சொற்பொழிவு (யாழ்.அக.); insincere, lip-deep talk. 2. திடீரென்று செய்யும் சொற்பொழிவு; extempore speech. 3. சொல்வன்மையுள்ள சொற் பொழிவு (வின்.); oratory.

*[வாய் + **Skt.** prasanga > த. பிரசங்கம்]*

**வாய்ப்பிறப்பு** *vāy-p-piṟappu,* பெ.(n.) வாயிலிருந்து வருஞ்சொல்; word of mouth, saying, declaration. *'அவன் வாய்ப் பிறப்பைக் கேள்'.*

*[வாய் + பிறப்பு. ஒ.நோ. வாய்ச்சொல்.]*

வாய்ப்பு *vāyppu*, பெ.(n.) 1. ஏற்புடை நிலைமை (ஈடு.1, 9, ப்ர); favourability, favourable, circumstance. 2. நேர்பாடு; good chance or opportunity. *"வாய்ப்போ விதுவொப்ப மற்றில்லை" (திவ். இயற். பெரிய திருவந். 40).* 3. நன்கமைந்தது; that which is appropriately formed or situated. *"நீர் வாய்ப்பும் சோலை வாய்ப்புங் கண்டு" (திவ்.திருமாலை, 24, வ்யா, பக்.83).* 4. பொருத்தம்; fitness, suitability. *'வாய்ப்புடைத் தாயிற்றோர் பொருளதி காரமாய்' (இறை.1, உரை, பக்.6).* 5. அழகு; beauty. *"மாதிரிகை யாகவுனும் வாய்ப்பினாள்" (சிவப். பிரபந். வெங்கையு.232).* 6. மிகு சிறப்பு (வின்.); surpassing excellence. 7. செல்வம்; wealth. *"எவ்வாய்ப்புமாகு மெமக்கு" (திருப்போ. சந். மாலை.73).* 8. செழிப்பு (நாமதீப.62.); fertility. 9. ஊதியம்; profit, gain. *'நமக்கு நல்ல வாய்ப்பாயிருந்தது' (ஈடு. 2, 10, 10).* 10. பேறு (இலக்.அக.); fortune.

*[வாய் → வாய்ப்பு]*

வாய்ப்புட்டில் *vāy-p-puṭṭil*, பெ.(n.) வாய்க்கூடு (வின்.) பார்க்க; see *vāy-k-kūḍu.*

வாய்ப்புண்[1] *vāy-p-puṇ*, பெ.(n.) 1. உள்வாயில் தோன்றும் புண்; ulcer in the mouth, stomatitis. 2. நாக்குப்புண்; inflammation of the tongue - Glossitis. 3. கடுஞ்சொல்லானுண்டாகும் மன வருத்தம்; wound caused by harsh words. *"தீப்புண் ஆறும், வாய்ப்புண் ஆறாது"*

*[வாய் + புண்]*

வாய்ப்புண்[2] *vāy-p-puṇ*, பெ.(n.) 1. வாய்க் கொப்புளம்; a disease thrush or aphthac. 2. பெண்ணின் கருவழியில் ஏற்படும் புண்; sore vagina.

*[வாய் + புண்]*

வாய்ப்புள் *vāy-p-puḷ*, பெ.(n.) நற்சொல்லாகிய குறி; chance-heard word, considered a good omen. *"நல்லோர் வாய்ப்புள்" (முல்லைப்.18).*

*[வாய் + புள்]*

வாய்ப்புற்று *vāy-p-puṟṟu*, பெ.(n.) வாயிலுண்டாம் நோய் வகை; a disease of the mouth. *"புழுச்செறி வாய்ப்புற்று நோயர்" (கடம்ப.பு.இலீலா.137).*

*[வாய் + புற்று]*

வாய்ப்புறம் *vāy-p-puṟam*, பெ.(n.) உதடு; lip. *"வாய்ப்புறம் வெளுத்து" (திவ்.நாய்ச்.1,8).*

*[வாய் + புறம்]*

வாய்ப்பூச்சு *vāy-p-pūccu*, பெ.(n.) 1. வாயை நீரால் துடைக்கை; cleansing or rinsing one's mouth with water. 2. சொல்லி மழுப்புகை; glossing over or varnishing with words. *'அவர் சொன்ன தெல்லாம் வாய்ப்பூச்சே'.*

*[வாய் + பூச்சு]*

வாய்ப்பூட்டு[1] *vāy-p-pūṭṭu*, பெ.(n.) 1. தாடையெலும்பின் பொருத்து; joint of the jaw bones. 2. வாய்க்கூடு (இ.வ.) பார்க்க; see *vāy-k-kūḍu.* 3. பேசாமற்றடுக்கை; prohibition from speaking. *"வாய்ப்பூட்டெனக்கு மிட்டான்" (விறலி விடு.823).* 4. கீழ்வாய் முகக் கட்டையில்

இரண்டு சுழியுள்ளதான மாட்டுக் குற்றவகை (பெரிய.மாட்20); a defect of cattle, consisting of two curls on the lower Jaw. 5. கையூட்டு; bribe. *"இது அவனுக்கு வாய்ப்பூட்டாகக் கொடுத்தது" (இ.வ).* 6. வாய்வாளாதிருந்து கொண்டு நாக்கை நீட்டிக் குத்தி அல்லது தாடைகளை ஊடுறுவக் குத்திப் பூணுங் கம்பி; pin pierced through the out-stretched tongue or run across the mouth from cheek to cheek of a person who is under a vow of silence.

*[வாய் + பூட்டு]*

வாய்ப்பூட்டு[2] *vāy-p-pūṭṭu,* பெ.(n.) வாய் திறக்கவொண்ணா ஓர் இசிவு நோய்; a condition of tetanic spasm of the jaw muscles causing them to be rigidly closed.

*[வாய் + பூட்டு]*

வாய்ப்பூட்டுக்காசு *vāyppūṭṭu-k-kāšu,* பெ.(n.) வாய்முட்டுக்காசு பார்க்க; see *vāymuṭṭu-k-kāšu.*

*[வாய்ப்பூட்டு + காசு]*

வாய்ப்பூட்டுச்சட்டம் *vāyppūṭṭu-c-caṭṭam,* பெ.(n.) பொதுக் கூட்டங்களிற் பேசுவதைத் தடுக்குஞ் சட்டம் (இக்.வ); law restraining or prohibiting public speech.

*[வாய்ப்பூட்டு + சட்டம்]*

வாய்ப்பெட்டி *vāy-p-peṭṭi,* பெ.(n.) வாய்க்கூடு (வின்.) பார்க்க; see *vāy-k-kūḍu.*

*[வாய் + பெட்டி]*

வாய்ப்பெய்–தல் *vāy-p-pey-,* 1 செ.குன்றாவி. (v.t.) வாயிலிட்டுத் தின்னுதல்; to take in, as food, to eat. *"நிணம் வாய்ப்பெய்த பேய் மகளிர்" (மதுரைக்.25).*

*[வாய் + பெய்–,]*

வாய்ப்பேச்சு *vāy-p-pēccu,* பெ.(n.) 1. வாய்ச்சொல்; utterance, word of mouth. *"பின்னை யொன்றும் வாய்ப்பேச்சி லீரானால்" (அருட்பா.ii, திருவிண்.3).* 2. வெறும் பேச்சு; mere words, vain utterance. *"வாய்ப்பேச்சில் வல்லானடி".*

*[வாய் + பேச்சு]*

வாய்ப்பை *vāyppai,* பெ.(n.) கடன் (நாமதீப.628); debt.

ம. வாய்ப

வாய்ப்பொய் *vāy-p-poy,* பெ.(n.) மெய்ம்மையின்பாற் படும் பொய்; white lie; lie uttered with a good intention. *"துன்ப மோட்டு வாய்ப்பொய்யலாற் பொய்யொன்றுஞ் சொல்லார்" (தணிகைப்பு.நாட்.48).*

*[வாய் + பொய்]*

வாய்ப்பொருத்து *vāy-p-poruttu,* பெ.(n.) மூட்டுவாய்; joint, as of two planks. *'கதவின் வாய்ப்பொருத்து விலகிவிட்டது'.*

*[வாய் + பொருத்து. பொருத்து = மூட்டுவாய்.]*

வாய்ப்பொன் *vāy-p-pon,* பெ.(n.) கடிவாளத்தின் ஒருறுப்பு; horse's bit. *"உன்னி வாய்ப்பொன் கறித்திட" (இரகு.நகர.51).*

*[வாய் + பொன்]*

வாய்பாடு *vāy-pāḍu,* பெ.(n.) 1. குறியீடு; formula, symbolic expression. 2. பெருக்கல் முதலியன காட்டும் அட்டவணை; table, as of multiplication.

3. மரபுச்சொல்; idiom, cant. *"தக்கதோர் வாய்பாட்டாற் கூறுதல்" (தொல்.சொல்.17, சேனா.).* 4. வழக்கம்; practice, custom, usage. *"எங்க ளுலக வாய்பாடு" (தாயு.சச்சிதா.8).* 5. சொல்வன்மை; skill in speech. *"கட்டுரை வாய்பாடும்" (பழமொ. 258).* 6. பேச்சிடையில் பயின்று வரும் தொடரியம் (இலக்.அக.); mannerism in discourses.

*[வாய் + பாடு]*

ஒரே இலக்கண இயல்பையுடைய நூற்றுக் கணக்கான சொற்களை ஒரே வகையில் அடக்கிக் கொண்டு அந்த வகையில் உள்ள சொல்லை அந்த வகைக்குக் குறியீடு போல ஆளும் வழக்கம் தமிழிலக்கணங்களில் நாம் தொன்றுதொட்டுக் காணும் மரபுகளில் ஒன்று. ஓடு, ஆடு, நில், கேள், செல் முதலாய வினையடிகள் எல்லாவற்றையும் 'செய்' என்ற சொல்லால் குறிப்பதும், ஓட, ஆட, பாட, நடக்க என வரும் எல்லாச் சொற்களையும் 'செய' என்னும் சொல்லால் குறிப்பதும் மேற்காட்டிய மரபுக்கு எடுத்துக் காட்டுகளாம். இங்கே விளக்கிய இந்த முறையினை வாய்பாட்டு முறை என்பர். ஒரே இலக்கண இயல்புடைய நூற்றுக்கணக்கான சொற்களைக் குறிக்கக் குறியீடாகப் பயன்படும் சொல்லினை வாய்பாட்டுச் சொல் என்பர்.

நில், கேள், செல், முதலாயவற்றைச் செய் வாய்பாட்டு வினைகள் என்றும் ஓட, பாட, ஆட முதலாயவற்றைச் செய வாய்பாட்டு வினைகள் என்றும் இலக்கணப் புலவர்கள் சுட்டுவது வழக்கம்.
– (இலக். கலைக். பக். 107.)

**வாய்பார்–த்தல்** *vāy-pār,* 4 செ.கு.வி. (v.i.) பிறருடைய பேச்சைக் கேட்டுக் கொண்டிருத்தல் (இ.வ.); to listen to a talk without taking part in it.

*[வாய் + பார்–.]*

**வாய்பாறு–தல்** *vāy-pāṟu-,* 9 செ.கு.வி. (v.i.) அலப்புதல்; to babble, to chatter. *"ஸாரதி ஸாரதி என்று வாய்பாறிக் கொண்டிரே பையல்கள் வருவது" (ஈடு,3,6,10).*

*[வாய் + பாறு–.]*

**வாய்பிடித்தல்** *vāy-piḍittal,* பெ.(n.) இதளிய மருந்துகளை உள்ளுக்குக் கொடுத்தலால் ஈறு வீங்கிப் புண்ணாகி உமிழ் நீர் அதிகமாய் வடிந்து வாயில் நாற்றமுண்டாகி திறக்க வொட்டாதபடி செய்தல்; swelling of the gums and inflammation of the mouth due to mercurial poisoning, it accompanied by excessive salivation and inability to open the mouth.

*[வாய் + பிடித்தல்]*

**வாய்பிதற்று–தல்** *vāy-pidaṟṟu-,* 10 செ.கு.வி. (v.i.) நாக்குழறிப் பேசுதல்; to speak incoherently.

*[வாய் + பிதற்று–.]*

**வாய்பிள–த்தல்** *vāy-piḷa-,* 3 செ.கு.வி. (v.i.) 1. அங்காத்தல் (நாமதீப.711); to open one's mouth wide; to gape. 2. திகைத்தல்; to be non-plussed. *'கேள்வி கேட்டால் வாய் பிளக்கிறான்'.* 3. முடியாதென்று கை விடுதல்; to plead inability. *'பணத்துக்கு அவனை நம்பியிருந்தேன், அவன் கடைசியில் வாய் பிளந்து விட்டான்'.* 4. இறத்தல் (கொ.வ.); to die, used in contempt.

*[வாய் + பிள–.]*

**வாய்பினற்று–தல்** *vāy-piṉaṟṟu-,* 10 செ.கு.வி. (v.i.) வாய் பிதற்று (யாழ்.அக.) பார்க்க; see *vāy-pidaṟṟu.*

**வாய்புதை–த்தல்** *vāy-pudai-,* 4 செ.கு.வி. (v.i.) பெரியோர் முன்னிலையில் மதிப்புரவுக் குறியாக வாயை வலக்கையால் மூடிக் கொள்ளுதல்; to cover one's mouth with

the palm of the right hand, as a mark of respect in the presence of one's superiors.

*[வாய் + புதை–,]*

வாய்புலற்று[1]–தல் *vāy-pularru-*, 5 செ.குன்றாவி. (v.t.) பலகாற் சொல்லுதல்; to repeat often. *"ஸத்துக்கள்..... வாய்புலற்றும் படியான தேசமானால்" (ஈடு,2,3,11).*

*[வாய் + புலம் → புலற்று–,]*

வாய்புலற்று[2]–தல் *vāy-pularru-*, 5 செ.கு.வி. (v.i.) வாய்பிதற்று பார்க்க; see *vāy-pidarru.*

வாய்பூசறு–த்தல் *vāy-pūšaru-*, 4 செ.கு.வி. (v.i.) வாய் பூசு–, 1. (யாழ்.அக.) பார்க்க; see *vāy-pūšu.*

*[வாய் + பூசறு]*

வாய்பூசு–தல் *vāy-pūšu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. வாய் கழுவுதல்; to wash or rinse one's mouth. *"புகுமதத்தால் வாய்பூசி" (திவ்.இயற்.3,70).* 2. தூய்மை (ஆசமனஞ்) செய்தல்; to sip water ceremonially, to perform *āšamañam*. *"நீராடிக் கால் கழுவி வாய் பூசி" (ஆசாரக்.19).* 3. வெறும்புகழ்ச்சி பேசுதல்; to flatter. 4. வாய்முட்டுப்போடு–, (வின்.) பார்க்க; see *vāy-muttu-p-pōdu-,*

*[வாய் + பூசு–.]*

வாய்பேசு–தல் *vāy-pēšu-*, 5 செ.கு.வி. (v.i.) தற்பெருமை பேசுதல்; to brag, boast. *"எங்களை முன்ன மெழுப்புவான் வாய்பேசு நங்காய்" (திவ்.திருப்பா.14).*

*[வாய் + பேசு–.]*

வாய்பொத்து–தல் *vāy-pottu-*, 10 செ.கு.வி. (v.i.) வாய்புதை பார்க்க; see *vāy-pudai.* *"கைகட்டி வாய்பொத்தி நிற்பாரை" (அருட்பா.VI, உறுதிகூறல்.9).*

*[வாய் + பொத்து–.]*

வாய்பொருத்து–தல் *vāy-poruttu-*, 10 செ.கு.வி. (v.i.) வாய்புதை (யாழ்.அக.) பார்க்க; *vāy-pudai.*

*[வாய் + பொருத்து–,]*

வாய்பொருமு–தல் *vāy-porumu-*, 5 செ.கு.வி. (v.i.) வாய்குளிறு (யாழ்.அக.) பார்க்க; see *vāy-kuḷiru.*

*[வாய் + பொருமு–.]*

வாய்போக்கு–தல் *vāy-pōkku-*, 9 செ.கு.வி. (v.i.) எளிதில் உறுதிமொழியளித்தல்; to give one's word lightly. *'பார்ப்பானுக்கு வாய் போக்காதே, ஆண்டிக்கு அதுதானும் சொல்லாதே'.*

*[வாய் + போக்கு–.]*

வாய்போடு–தல் *vāy-pōdu-*, 20 செ.கு.வி. (v.i.) ஒருவன் பேசுகையில் இடையிற் புகுந்து பேசுதல்; to interject or interrupt a person when talking.

*[வாய் + போடு–.]*

வாய்போத்திடு–தல் *vāy-pōttidudal,* 20 செ.கு.வி. (v.i.) மருந்துப் பாண்டத்தின் வாயை மூடுதல்; closing the mouth of the container of the medicine.

வாய்மட்டம் *vāy-mattam,* பெ.(n.) 1. ஏனம் முதலியவற்றின் மேல் மட்டம் (வின்.); top-level' up to the brim or mouth, as of a vessel. 2. பொன்னுருச் செய்யும் ஒருமுறை

(வின்.); a process in making golden beads. 3. ஏனத்தின் வாய் வளையம் (யாழ்.அக.); ring round the mouth of vessel.

*[வாய் + மட்டம்]*

வாய்மடி-தல் *vāy-madi-,* 4 செ.கு.வி. (v.i.) கூர்மழுங்குதல்; to become blunt-edged. *'ப்ருஹ்மாஸ்திரம் வாய்மடியச் செய்தே' (ஈடு.6, 1, ப்ர.).*

*[வாய் + மடி-.]*

வாய்மடு-த்தல் *vāy-madu-,* 4 செ.குன்றாவி. (v.i.) வாயினுட் கொள்ளுதல்; to put into one's mouth. *"அடியேன் வாய் மடுத்துப் பருகிக் களித்தேனே" (திவ். திருவாய். 2, 3, 9).*

*[வாய் + மடு-,]*

வாய்மடை *vāy-madai,* பெ.(n.) செய்வரப்பில் நீர்பாயும் வழி; opening in the ridge of a field for the passage of water.

*[வாய் + மடை]*

வாய்மண்போடு-தல் *vāy-man-pōdu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. பிழைப்பைக் கெடுத்தல்; to deprive a person of his means of livelihood. 2. கொடுமை செய்தல் (யாழ்.அக.); to do a wicked act.

*[வாய் + மண்போடு-,]*

வாய்மணியம் *vāy-maniyam,* பெ.(n.) 1. வேலை வாங்கத் திறமையின்றி வாயாற் செய்யும் அதிகாரம் (கொ.வ.); ordering persons about, without ability to extract work from them. 2. சாய்கால் (இ.வ.); authority, influence.

*[வாய் + மணியம்]*

பணி → மணி → மணியம். *'மணியம்'* பொ்சியன் சொல் என்று சென்னை பல்கலைகழக அகரமுதலியில் குறிக்கப்பெற்றுள்ளது.

வாய்மதம் *vāy-madam,* பெ.(n.) வாய்க் கொழுப்பு பார்க்க; see *vāy-k-koluppu. "வாய் மதமோ வித்தை மதமோ" (குற்றா. குற. 76,1).*

*[வாய் + மதம்]*

வாய்மருந்து *vāy-marundu,* பெ.(n.) நச்சுயிரி தீண்டப்பட்டோரின் வாயில் நச்சுமருந்தாக பண்டுவத்தாருமிழும் வாயெச்சில் (திவ். நாய்ச். 13, 5, அரும். பக். 313); spittle spit by the doctor into the mouth of a snake-bitten patient, as an antidote or poison.

*[வாய் + மருந்து, மரு → மருந்து = நலப்பொருள் தொகுதி]*

வாய்மலர்-தல் *vāy-malar-,* 3 செ.குன்றாவி. (v.t.) பேசுதல்; to speak. *"மைந்தனார் வாய்மலருங்குரல் கேட்டு" (திருவிளை. மண்சும. 19).*

*[வாய் + மலர்]*

வாய்முகூர்த்தம் *vāi-mugūrtam,* பெ.(n.) வெல்லும் பேச்சு, பேச்சு இயல்பு; casual utterance which proves true. *'அவர் வீட்டில் இருக்க மாட்டார் என்று சொன்னாய் உன் வாய்முகூர்த்தம் அவர் வீட்டில் இல்லை'.*

*[வாய் + முகூர்த்தம்]*

**Skt.** *muhūrta* > த. முகூர்த்தம். முழுத்தம் என்பது தனித்தமிழாம்.

வாய்முட்டுக்காசு *vāy-muttu-k-kāšu,* பெ.(n.) மந்தணத்தை வெளியிடா திருக்குமாறு கொடுக்கும் கையூட்டு; hush money.

*[வாய் + முட்டு +காசு]*

**வாய்முட்டுப்போடு-தல்** *vāy-muṭṭu-p-pōḍu-,* 20 செ.கு.வி. (v.i.) மந்தணத்தை வெளியிடாதிருக்குமாறு கையூட்டுக் கொடுத்தல்; to bride, to pay hush-money.

*[வாய் + முட்டு + போடு-.]*

**வாய்முத்தம்**[1] *vāy-muttam,* பெ.(n.) முத்தம்; kiss.

*[வாய் + முத்தம்]*

**வாய்முத்தம்**[2] *vāy-muttam,* பெ.(n.) பல்; tooth. *“வாய்முத்தஞ் சிந்திவிடுமோ நெல்வேலி வடிவம்மையே” (தனிப்பா.)*

*[வாய் + முத்தம்]*

**வாய்முத்து** *vāy-muttu,* பெ.(n.) *வாய்முத்தம்*[1] பார்க்க; see *vāy-muttam.* *“வாய்முத் தார்த்தி னல்லது தீரா துயிர்க்கென” (பெருங்.இலாவாண,16,59).*

*[வாய் + முத்து]*

**வாய்மூட்டு**[1] *vāy-mūṭṭu,* பெ.(n.) வாய்ப் பொருத்து பார்க்க; see *vāy-p-poruttu.*

*[வாய் + மூட்டு]*

**வாய்மூ-த்தல்** *vāy-mū-,* 19 செ.கு.வி. (v.i.) பேச்சில் சிறத்தல்; to excel in speech. *“வாய்மூத்த குடி” (வின்.)*

*[வாய் + மூ-,]*

**வாய்மூடு-தல்** *vāy-muḍu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. வாய் புதை-, (யாழ்.அக.) பார்க்க; see *vāy-pudai.* 2. பேச்சு, அழுகை முதலியன நிறுத்துதல்; to cease speaking, crying etc. *‘அவரதிகாரத்தில் அழுத பிள்ளையும் வாய்மூடும்’.* 3. குவிதல்; to close, as a flower. *“தொக்க கமலம் வாய்மூட” (பிரபுலிங்.பிரபுதே.54).*

*[வாய் + மூடு-,]*

**வாய்மூத்தவன்** *vāy-mūttavaṉ,* பெ.(n.) 1. பேச்சில் முந்துவோன் (யாழ்.அக.); one who is forward in speech. 2. சிறப்புச் சொற்பொழிவாளர் (வின்.); chief speaker.

*[வாய் + மூத்தவன்]*

**வாய்மூப்பன்** *vāy-mūppaṉ,* பெ.(n.) 1. பேச்சிற் சிறந்தவன்; excellent speaker. 2. பிறர் வழக்கையெடுத்து வழக்காடுவோன் (முகவை.); one who pleads the cause of another, advocate.

*[வாய் + மூ → மூப்பு → மூப்பன்]*

**வாய்மூழ்-த்தல்** *vāy-mūḻ-,* 9 செ.கு.வி. (v.i.) வாய்மூடு-, 1 பார்க்க; see *vāy-mūḍu-, 1.* *"ஒளிறுவேன் மறவரும் வாய்மூழ்த்தனரே" (புறநா. 336).*

**வாய்மூர்** *vāimūr,* பெ.(n.) தஞ்சாவூர் மாவட்டத்தில் காவிரியாற்றின் தென்கரையில் அமைந்துள்ளதும், அப்பர், சம்பந்தரால் பாடப்பட்டதுமான சிவத்தலம்; one of the saiva places having the distinction of being sung by Appar, Sampantar. It is on the south side of *Kāviri*-river bank in *tanjāvūr* District . *“திங்களொடருவரைப் பொழிற் சோலைத் தேனலங் காலைத் திருவாய்மூர்” (அப்.தேவா.247-11).*

*[வாய்மூர் → திருவாய்மூர்]*

**வாய்மை** *vāymai,* பெ.(n.) 1. சொல்; word. *“சேரமான் வாராயென வழைத்த வாய்மையும்” (தனிப்பா.i, 97, 19).* 2. தப்பாத மொழி; ever truthful word. *“பொருப்பன் வாய்மை யன்ன வைகலொடு” (கலித்.35).*

3. உண்மை; truth. *"வாய்மை யெனப்படுவ தியாதெனின்" (குறள்.291).* 4. துன்பம் (துக்கம்), துன்பம் ஏற்படல் (துக்கோற்பத்தி), துன்பமீட்சி (துக்க நிவாரணம்), துன்ப மீளல் நெறி (துக்க நிவாரண மார்க்கம்) என நால் வகைப்பட்ட புத்த மத உண்மைகள்; sublime truths numbering four viz., *tukkam, tukkōṟpatti, tukka-nivāraṇam, tukka-nivāraṇa-mārkkam.* *"ஒன்றிய வுரையே வாய்மை நான்காவது" (மணிமே. 30,188).* 5. வலிமை (சூடா.); strength.

"வாய்மையின் இலக்கணம் பிறர்க்கும் பிறவுயிர்கட்கும் தீங்குபயவாமை, 'வாய்மை' யதிகாரம் திருக்குறளை ஒப்புயர்வற்ற உலக அறநூலாக்கும் இயல்வரையறையாம். உண்மை, வாய்மை, மெய்ம்மை என்னும் ஒருபொருட்சொல் மூன்றும் முறையே உள்ளமும் வாயும் உடம்புமாகிய முக்கரணத்தொடு தொடர்புடையனவாகச் சொல்லப்பெறும். இனி, உள்ளது உண்மை, வாய்ப்பது வாய்மை, மெய் (substance) போன்றது மெய்ம்மை எனினுமாம்" எனப் பாவாணர் தரும் "வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றுந் தீமை யிலாத சொலல்" (குறள், 291) என்ற குறளுரையில் தரும் விளக்கம் கருதத் தக்கது.

*[வாய் → வாய்மை]*

**வாய்மொழி[1]-தல்** *vāy-moḻi-,* 2 செ.குன்றாவி. (v.t.) 1. கூறுதல்; to speak. *"வாய் மொழிந்துரைக்கலுற்றாள்" (சீவக.1707).* 2. தூய மந்திரங்களை யோதுதல்; to consecrate by uttering sacred hymns. *"வாய் மொழி மங்கலக் கருவி முன்னுறுத்தி" (சீவக. 2411).*

*[வாய் + மொழி-,]*

**வாய்மொழி[2]** *vāy-moḻi,* பெ.(n.) 1. பேச்சு; speech. 2. எழுத்து மூலமின்றி வாயாற் கூறுஞ்சொல்; unwritten oral declaration. 3. உண்மைமொழி; truth, true word. *"வாய்மொழி வாயர் நின்புக ழேத்த" (பதிற்றுப்.37,2).* 4. மறை; the vedas. *"மாயாவாய் மொழி யுரைதர" (பரிபா.3,11).* 5. திருவாய்மொழி; *Tiruvāymoḻi.* *"அவ்வாய் மொழியை யாரு மறையென்ப" (பெருந்தொ.1820).*

*[வாய் + மொழி]*

**வாய்மொழித்தேர்வு** *vāymoḻi-t-tērvu,* பெ.(n.) மாணவரை நேரடியாக வினவி தெரிவு செய்யும் நிகழ்ச்சி; viva-voce, oral examination.

*[வாய்மொழி + தேர்வு]*

**வாய்மோசம்** *vāy-mōšam,* பெ.(n.) 1. வாய்க்குற்றம், 1 (கொ.வ.) பார்க்க; see *vāy-k-kuṟṟam.* 2. சொன்ன சொல் தவறுகை; failing to keep one's word.

*[வாய் + மோசம்]*

**வாய்வட்டம்** *vāy-vaṭṭam,* பெ.(n.) வாய்க்கயிறு (பிங்.) பார்க்க; see *vāy-k-kayiṟu.*

*[வாய் + வடம் → வட்டம்]*

**வாய்வட்டமாகப்பேசு-தல்** *vāy-vaṭṭam-āga-p-pēšu-,* 5 செ.குன்றாவி. (v.t.) திறமையாகப் பேசுதல் (இ.வ.); to speak cleverly.

*[வாய் + வட்டமாக + பேசு-.]*

**வாய்வடம்** *vāy-vaḍam,* பெ.(n.) வாய்க் கயிறு (நாமதீப. 210) பார்க்க; see *vāy-k-kayiṟu.*

*[வாய் + வடம்]*

வாய்வயிறுகட்டல் *vāy-vayiṟu-kaṭṭal,* பெ.(n.) பத்தியமாக விருத்தல்; to keep on diet.

*[வாய்வயிறு + கட்டல்]*

வாய்வலம் *vāy-valam,* பெ.(n.) சொல் வன்மை; skill in speech. *"தம் வாய் வலத்தாற் பாழ்த்துதி செய்து" (திருநூற்.20).*

*[வாய் + வலம்]*

வாய்வலி *vāy-vali,* பெ.(n.) 1. வாய்வலம் பார்க்க; see *vāy-valam. 'தன் வாய் வலியாலே புக்கதாயிற்று'.* 2. அம்பு முதலியவற்றின் முனையுறுதி (ஈடு.4,2,8); strength of the tip, as of an arrow.

*[வாய் + வலி]*

வாய்வழிமூச்சு *vāyvaḻi-mūccu,* பெ.(n.) 1. வாய் வழியாக விடுமூச்சு; breathing through mouth. 2. வாய் குறித்து வரும் நோய்கள்; diseases of the mouth.

*[வாய்வழி + மூச்சு]*

வாய்வறட்சி *vāy-vaṟaṭci,* பெ.(n.) வாய் வறட்டல்; parching of the mouth-xerostomia.

*[வாய் + வறள் → வறட்சி]*

வாய்வழங்கு-தல் *vāy-vaḻaṅgu-,* 5 செ. குன்றாவி. (v.t.) உண்ணுதல் (யாழ்.அக.); to eat

*[வாய் + வழங்கு-,]*

வாய்வளையம் *vāy-vaḷaiyam,* பெ.(n.) மிடா முதலியவற்றின் விளிம்பிற் பற்றவைக்கும் வளையம்; ring fixed round the mouth of vessel.

*[வாய் + வளையம்]*

வாய்வாதம் *vāy-vādam,* பெ.(n.) வாய்கடுத்து அலகு கிட்டி வியர்த்துப் பேசக் கூடாதிருக்கும் நிலைமை; a diseases causing lock jaw and perspiration.

*[வாய் + **Skt.** vādha > த. வாதம்]*

வாய்வாதம்பேசல் *vāy-vādam-pēšal,* பெ.(n.) வழக்காட்டந் தெரியாமலே பொய்யாக வழக்காடுவதாகச் சொல்லிப் பிதற்றல்; an impostor bragging he knows alchemy.

*[வாய்வாதம் + பேசல்]*

வாய்வாயெனல் *vāy-vāy-eṉal,* பெ.(n.) அச்சமூட்டுதற்குறிப்பு; onom expr. of threatening. *"நமுசி ப்ரப்ருதிகளை வாய்வாயென்றது திருவாழி" (ஈடு.7, 4, 1).*

*[வாய் + வாய் + எனல்]*

வாய்வார்த்தை *vāy-vārttai,* பெ.(n.) 1. வாய்ப்பேச்சு; word of mouth. *"வாய் வார்த்தை நற்றுதி... அயிக்கிய ஞானிகட்கு" (சித்.சிகா.42,7).* 2. நயம் பொருந்திய சொல் (கொ.வ.); soft kind of words.

*[வாய் + வார்த்தை. வார்த்தை = Skt.]*

வாய்வாள் *vāy-vāḷ,* பெ.(n.) குறிதப்பாத வாள்; trusty sword, as aim - certain. *"வலம்படு வாய்வா ளேந்தி" (புறநா.91).*

வாய்வாளாமை *vāy-vāḷāmai,* பெ.(n.) பேசாதிருக்கை; keeping silent. *"வாய்வாளாமை... மாற்ற முரையாதிருத்தல்" (மணிமே. 30, 245–49).*

*[வாய் + வாளா → வாளாமை]*

வாய்வாளார் *vāy-vāḷār,* பெ.(n.) வாய் பேசாதார்; silent person. *"வலியாரைக் கண்டக்கால் வாய்வாளாராகி" (பழமொ.302).*

*[வாய் + வாளா → வாளார்]*

வாய்விசேடம் *vāy-vicēḍam,* பெ.(n.) 1. வாக்குச்சித்தி, 2 (யாழ்.அக.) பார்க்க; see *vākku-c-citti.* 2. வாய்மொழிச் செய்தி (இ.வ.); oral report.

*[வாய் + **Skt.** visēshā > த. விசேடம்]*

வாய்விட்டு *vāy-viṭṭu,* வி.எ.(adv.) 1. ஒளியெழுப்பி, வெளிப்படையாக; loudly. *'வலி தாங்காமல் வாய்விட்டு அரற்றினான்'.* 2. மனம் திறந்து; openly, frankly. *'துக்கத்தை யாரிடமாவது வாய்விட்டுக் சொல்'. 'வாய்விட்டுச் சிரித்தால் நோய்விட்டுப் போகும்'.*

*[வாய் + விட்டு]*

வாய்விடல் *vāy-viḍal,* பெ.(n.) கொட்டாவி விடல்; yawning.

*[வாய் + விடல்]*

வாய்விடாச்சாதி *vāy-viḍā-c-cādi,* பெ.(n.) விலங்கு (யாழ்.அக.); dumb animal.

*[வாய்விடு + 'ஆ' எ.ம.இ.நி. + **Skt.** jāti > த. சாதி]*

வாய்விடாப்புண் *vāyviḍā-p-puṇ,* பெ.(n.) வாயில் தொடர்ந்து இருந்து கொண்டே இருக்கும் புண்; chronic ulcer of the mouth.

*[வாய் + விடா + புண்]*

வாய்விடு[1]-தல் *vāy-viḍu,* 18 செ.குன்றாவி. (v.t.) 1. பேசுதல்; to speak. *"எனப்பல வாய்விடூஉ ந்தா னென்ப" (கலித்.46).* 2. வெளிவிட்டுத் தெளிவாகச் சொல்லுதல்; to speak openly and clearly without any reservation. *"அர்த்த ப்ராப்தமானது தன்னையே இங்கே வாய்விடுகிறார்" (ஈடு,10,4,9).* 3. வெளிப்படுத்துதல்; to divulge, as secrets. *'நம்மிருவர்க்கும் நடந்ததை வாய்விட வேண்டாம்'.*

*[வாய் + விடு-,]*

வாய்விடு[2]-தல் *vāy-viḍu-,* 20 செ.கு.வி.(v.i.) 1. மலர்தல்; to blossom, open, as a flower. *"நிரையிதழ் வாய்விட்ட கடிமலர்" (கலித்.29).* 2. உரக்கவொலியெழுப்புதல்; to lift up or raise the voice. *'குழந்தை வாய்விட் டழுதது'.* 3. சூளுரை கொள்ளுதல் (சீவக. 592); to vow. 4. கொட்டாவி விடுதல் (வின்.); to yawn. 5. கடித்த கடிப்பை விட்டிடுதல்; to leave off bitting. *'உதிரங் குடித்து வாய்விட்ட அட்டைபோல' (ஈடு,4,1,7).*

*[வாய் + விடு-,]*

வாய்விடு[3] *vāy-viḍu,* பெ.(n.) 1. சூளுறுதி; vow. *"வண்டுபடு தேறனற வாய் விடொடு பருகி" (சீவக.592).* 2. ஆரவாரம் (சீவக.592, உரை); tumult; uproar.

*[வாய் + விடு]*

வாய்விடு[4]-தல் *vāy-viḍu-,* 20 செ.கு.வி.(v.i.) ஒலித்தல்; to make noise. *"பொழிலுறு பறவையாவும் வாய்விடா தொழிந்த" (இரட்சணிய பக்.36).*

*[வாய் + விடு-.]*

வாய்விடை *vāy-viḍai,* பெ.(n.) கைம்மரத்தின் நுனிப்பகுதி (நெல்லை.); the extreme end of a rafter.

*[வாய் + விடு → விடை]*

வாய்விரணநீர் *vāy-viraṇa-nīr,* பெ.(n.) வாய்ப் புண்ணால் ஒழுகும் நீர்; salivation due to inflammation of the mouth.

*[வாய் + விரணம் + நீர்]*

**Skt.** *vraṇa* > த. விரணம்.

வாய்விரணம் *vāy-viraṇam,* பெ.(n.) 1. வாய் வெந்து புண்ணாதல்; inflammation of the mouth, cancrum oris. 2. கருவாய்ப் புண்; ulcer vagina. 3. எருவாய்ச் சீழ்ப்புண்; ulcer anus.

*[வாய் +* **Skt.** *vraṇa > த. விரணம்]*

வாய்விரணம்ஆற்றும்நீர் *vāy-viraṇam-āṟṟum-nīr,* பெ.(n.) 1. வாய் கொப்பளிக்கு மருந்து நீர்; decoction of some astringents for gorgling in stomatitis, ulcer mouth etc gorgle. 2. வாய்வேகம் பார்க்க; see *vāy-vēgam.*

*[வாய்விரணம் + ஆற்றும் + நீர்]*

வாய்விரி-தல் *vāy-viri-,* 4 செ.கு.வி. (v.i.) 1. அங்காத்தல்; to gape 2. அலப்புதல்; to be garrulous. *'அவன் வாய் விரிந்து கெட்டான்'.* 3. கெட்டாவி விடுதல் (வின்.); to yawn.

*[வாய் + விரி-,]*

வாய்விழுரத்தம் *vāy-viḻu-rattam,* பெ.(n.) வாய் வழியாகக் குருதி விழுதல்; hematemesis - haemoptysis.

*[வாய்விழு + (அ)ரத்தம்]*

வாய்விள்(ளு)-தல் *vāy-viḷ-,* 12 செ.கு.வி. (v.i.) 1. வாயைத் திறத்தல்; to open one's mouth. 2. மலர்தல்; to blossom. *"வாய் விள்ளு மென்மலர் மணமென" (பிரபுலிங். விமலை. 50).*

*[வாய் + விள்(ளு)-தல்.]*

வாய்விளங்கம் *vāy-viḷaṅgam,* பெ.(n.) 1. கொடிவகை (நாமதீப. 30); small elliptic leaved wind berry. 2. வாயுவிளங்கத்தின் அரிசி போன்ற மணி (வின்.); wind berry pepper-corn.

மறுவ. கேரளம், வாய்விடங்கம்.

(இதனால் சோகைநோய், வயிற்றுவலி, மிகுபருமநோய், ஊதை, பாம்புக்கடி முதலாகிய நஞ்சுகள், நுண்புழுக்கள், எருவாய்ப்புண் ஆகியன நீங்கும் என்பது தமிழ் மருத்துவம்)

தெ. வாயுவிளங்கமு; ம. விழலரி; க. வாயிவுளங்க.

வாய்வு *vāyvu,* பெ.(n.) கந்தவிடம்; a kind of arsenic.

வாய்வெட்டு *vāy-veṭṭu,* பெ.(n.) 1. பிறர் வியக்கும்படி பேசுகை (கொ.வ.); skilful, fascinating talk. 2. வாய்த்துடுக்கு 1 பார்க்க; see *vāy-t-tuḍukku.* 3. நெல் முதலியவற்றை அளக்கையிற் குவித்து அளக்காமல் தலை வழிக்கை (யாழ்.அக.); striking off the heaped up grain above the leave top of a measure, in measuring.

*[வாய் + வெட்டு]*

வாய்வெருவு[1]-தல் *vāy-veruvu-,* 5 செ. குன்றாவி.(v.t.) வாய் பிதற்றுதல்; to speak incoherently, as in delirium. *"அருவிசோர் வேங்கடம் நீர்மலை யென்று வாய் வெருவினாள்" (திவ். பெரியதி. 8, 2, 3). "வெருவாதாள் வாய்வெருவி" (திவ். பெரியதி, 5, 5, 1).*

*[வாய் + வெருவு-.]*

**வாய்வெருவு[2]–தல்** *vāy-veruvu-,* 10 செ.கு.வி. (v.i.) வாய்குளிறு, 2 பார்க்க; see *vāy-kuḷiṟu.*

*[வாய் + வெருவு–.]*

**வாய்வேக்காடு** *vāy-vēkkāḍu-,* பெ.(n.) வாய் முழுவதும் வெந்தாற் போலிருக்கும் நோய்வகை; (M.L.) thrush, a disease of the mouth, Aphthac.

*[வாய் + வேக்காடு]*

**வாய்வேக்காளம்** *vāy-vēkkāḷam,* பெ.(n.) வாய்ப்புண்; (M.L.) ulceration of the mouth - stomatitis.

*[வாய் + வேக்காளம்]*

**வாய்வை[1]–த்தல்** *vāy-vai-,* 4 செ.கு.வி. (v.i.) 1. உண்ணுதல்; to eat. *"சிவன் வாய்வைப்ப னோவாலத்தில்" (தனிப்பா.ii, 116,295).* 2. ஊதுதல்; to blow, as a wind - instrument. *"நேமியான் வாய் வைத்த வளைபோல" (கலித்.105).* 3. சுவைத்தல்; to taste. 4. தலையிடுதல்; to meddle or interfere. *'அவன் எல்லாவற்றிலும் வாய்வைக்கிறான்'.* 5. சிறிது பயிலுதல்; to learn a little, to have a desultory knowledge. *'எல்லாத் துறைகளிலும் வாய் வைத்தவன் அவன்'.*

*[வாய் + வை–த்தல்,]*

**வாய்வை[2]–த்தல்** *vāy-vai-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. கடித்தல் (யாழ்.அக.); to bite. 2. கேட்டல் (யாழ்.அக.); to hear.

*[வாய் + வை–,]*

**வாயகன்றகுப்பி** *vāyagaṉṟa-kuppi,* பெ.(n.) வாய் அகன்ற குடுவை; wide mouthed bottle.

*[வாய் + அகன்ற + குப்பி]*

**வாயகன்றபாண்டம்** *vāyagaṉṟa-pāṇḍam,* பெ.(n.) வாய் விரிந்த பாண்டம்; a wide mouthed earthern ware, basin.

*[வாய் + அகன்ற + பாண்டம்]*



**வாயச்சரம்** *vāya-c-caram,* பெ.(n.) வாயில் ஏற்படும் சிறுசிறு குழிப்புண்; sore in the month.

*[வாய் + அச்சரம்]*

**வாயசம்** *vāyaśam,* பெ.(n.) 1. காக்கை; crow. 2. காக்கை கொல்லி; a kind of medicinal herb.

**வாயசாராதி** *vāya-śārādi,* பெ.(n.) ஆந்தை (யாழ்.அக.); owl.

**வாயசி** *vāyaśi,* பெ.(n.) 1. பெண் காக்கை (இலக்.அக.); hen-crow. 2. செம்மணித் தக்காளி (தைலவ.); a variety of Indian houndsberry.

**வாயடி[1]** *vāy-aḍi,* பெ.(n.) வாயால் மருட்டுகை; over-bearing speech, brow beating by speech, bluff. *'வாயடி கையடி யடிக்காதே' (உ.வ.).*

*[வாய் + அடி]*

வாயடி[2]–த்தல் *vāy-aḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) வாயடியடி பார்க்க; see *vāyaḍi-y-aḍi.* *"திருவாய்ப்பாடியிற் பெண் பிள்ளைகளை வாயடித்துத் தம் திருவடிகளிலே வந்து விழும்படி வசீகரித்து" (திவ். திருவாய். 4, 2, 2, ஆறா.).*

*[வாய் + அடி–த்தல்,]*

வாயடி[3]–த்தல் *vāy-aḍi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. வாயிலே யடித்துக் கொள்ளுதல்; to beat one's mouth, as in a grief. *"மண்புரண்டு வாயடிப்பவர்" (பிரபுலிங்.சித்த.49).* 2. அலப்புதல்; to chatter.

வாயடியடி[1]–த்தல் *vāyaḍi-y-aḍi-,* 4 செ. குன்றாவி. (v.t.) வாய்ப்பேச்சால் மருட்டி வெல்லுதல்; to over power one's opponent by bluff.

*[வாயடி+அடி–,]*

வாயடியடி[2]–த்தல் *vāyaḍi-y-aḍi-,* 4 செ.கு.வி. (v.i.) மருட்டிப் பேசுதல்; to bluff.

*[வாயடி+அடி–,]*

வாயடை[1] *vāy-aḍai-,* பெ.(n.) உணவு; food. *"வாயடை யமிர்தம்" (பரிபா.2, 69).*

*[வாய் + அடு→அடை]*

வாயடை[2] *vāy-aḍai-,* பெ.(n.) தாட்கிட்டி சன்னி பார்க்க; see *tāḍkiṭṭi-šaṉṉi.*

*[வாய் + அடை]*

வாயடை[3]–த்தல் *vāy-aḍai-,* 4 செ.குன்றாவி. (v.t.) பேசவொட்டாதபடி செய்தல்; to silence, as an opponent by arguments.

*[வாய் + அடை–,]*

வாயடைப்பு *vā-y-aḍaippu,* பெ.(n.) 1. வாய்க் கட்டு; gag. 2. உணவு; food. 3. தூக்கம் நடை ஆகியவிக்குற்றங்களினாற் பிறந்து நரம்பு களில் சார்ந்து மூடிய வாயைத் திறக்க வொட்டாதபடி செய்யுமோர் ஊதை நோய்; a disease which prevents the opening of the mouth. This is generally caused by sleeping during the day which aggravates *vāyu.*

*[வாய் + அடைப்பு]*

வாயம் *vāyam,* பெ.(n.) 1. நீர் (யாழ்.அக.); water. 2. பெய்கை; pouring.

வாயமுதம் *vāy-amudam,* பெ.(n.) நன்னீர்; saliva.

*[வாய் + அமுதம்]*

வாயல் *vāyal,* பெ.(n.) 1. வாசல் (சங்.அக.); door, entrance. 2. பக்கம் (வின்); side.

*[வாசல் → வாயல்]*

வாயலம்பு–தல் *vāy-alambu,* 9 செ.கு.வி. (v.i.) உண்டபின் வாய் பூசுதல்; to wash or rinse one's mouth, as after a meal.

*[வாய் + அலம்புதல். (அலம்புதல் = கழுவுதல்)]*

வாயவன் *vāyavaṉ,* பெ.(n.) தூதன்; ambassador. *"சொல்லென வாயவன் விளம்பலும்" (புரூரவ.போர்புரி.5).*

*[வாய் → வாயவன்]*

வாயவியல் *vāy-aviyal,* பெ.(n.) வாய் வெந்து புண்ணாதல்; canker oris.

*[வாய் + அவி → அவியல்]*

வாயழற்சி *vāy-alarci,* பெ.(n.) வாய் வேக்காடு; inflammation of mouth.

மறுவ. வாய்ப்புண்.

*[வாய் + அழற்சி]*

வாயறியாமல்தின்னல் *vāy-ariyāmal-tinnal,* பெ.(n.) மிதமிஞ்சி தின்னுதல்; eating excessively, glutlony.

*[வாய் + அறியாமல் + தின்னல்]*

வாயன் *vāyan,* பெ.(n.) 1. தூதன்; messenger. 2. ஆயன்; shepherd.

*[வாய் → வாயன்]*

வாயனதானம் *vāyana-tānam,* பெ.(n.) இறைவனுக்குப் படைக்கப்பட்ட படையல் பண்டங்களைக் கொடையாகப் பார்ப்பனர் களுக்கு வழங்குகை; presentation to Brahmins of the naivettiyam at the end of a *pūjā.*

*[வாயனம் + தானம்]*

வாயனம் *vāyanam,* பெ.(n.) 1. ஒருவகை இனிப்பான தின்பண்டம்; a kind of sweet meat. 2. வாயனதானம் பார்க்க; see *vāyanatānam.*

வாயாகு-தல் *vāy-āgu-,* 5 செ.கு.வி. (v.i.) உண்மையாதல்; to be come true. *'யானறிந் தேனது வாயாகுதலே' (தொல். பொருள். 261, உரை).*

*[வாய் + ஆகு-,]*

வாயாடி *vāyādi,* பெ.(n.) 1. அலப்புவோன்; talkative, loquacious person; babbler; chatterbox. 2. நாநலமுடையான் (ஈடு. 4, 8, 8); eloquent or clever speaker.

*[வாயாடு → வாயாடி]*

வாயாடு-தல் *vāy-ādu-,* 5 செ.கு.வி. (v.i.) சொற்றிறமாய்ப் பேசுதல்; to speak cleverly or eloquently. 2. வீண்பேச்சுப் பேசுதல்; to speak frivolously; to fabble. *"நின்னுடனே வாயாடுவோர் பான் மருவி நில்லேன்" (அருட்பா.1, நெஞ்சறி.631).* 3. ஓயாது மென்று கொண்டிருத்தல்; to be contineously munching.

*[வாய் +ஆடு-,]*

வாயார *vāy-āra,* வி.எ.(adv.) 1. முழுக் குரலோடு; with a full voice. *"வாயார நாம் பாடி" (திருவாச.7, 15).* 2. வாய் நிரம்ப; with a full mouth. *"வாயார வுண்டபேர்" (தாயு. சச்சிதா. 8).*

*[வாய் + ஆர் → ஆர]*

வாயால்குதட்டுதல் *vāyāl-kudattu-,* பெ.(n.) வாயிலிட்டு அதக்குதல்; pressing softly after receiving into the mouth as done with penis or lips by a woman. (This is a kind of perverted sexual act).

*[வாய் + ஆல் + குதட்டு-,]*

வாயாலெடு-த்தல் *vāyāl-edu,* 4 செ.கு.வி. (v.i.) ஒக்காளித்தல் (நாமதீப.600); to vomit.

*[வாய் → வாயால் + எடு-,]*

வாயாலெரையுடன் *vāyālerai-y-udan,* பெ.(n.) தேவாங்கு; an animal, sloth.

வாயாவி *vāy-āvi,* பெ.(n.) 1. கொட்டாவி (வின்.); yawn. 2. மூச்சு (யாழ்.அக.); breath.

*[வாய் +ஆவி]*

வாயாவிபோக்கு-தல் *vāyāvi-pōkku-,* 9 செ.கு.வி. (v.i.) 1. கொட்டாவி விடுதல்; to yawn. 2. வீணே பேசுதல் (வின்.); to speak in vain, as wasting one's breath.

*[வாயாவி + போக்கு]*

**வாயித்தல்** *vāyittal,* 4 செ.கு.வி. (v.i.) வாயாற் படித்தல்; to read in loudly.

ஒ.நோ. கண் → கணி. கடைக்கணித்தல் = கடைக்கண்ணாடி பார்த்தல். மலையாளத்தில் வாயித்தல் என்னும் வடிவம் வழங்குகின்றது. (வ.மொ.வ.163).

**வாயில்**[1] *vāyil,* பெ.(n.) 1. ஐம்பொறி; the five sense organs. 2. ஒன்பான் துளை; the nine opening.

**வாயில்**[2] *vāyil,* பெ.(n.) 1. கட்டடத்துள் நுழையும் வாசல்; gate, portal, doorway, entrance to a building. *"அடையா வாயிலவ னருங்கடை" (சிறுபாண்.206).* 2. ஐம்பொறி (பிங்.); the five organs of sense, as avenues to the self. 3. ஐம்புலன் (பொரு.நி.); the five objects of sense. 4. வழி; way. *"புகழ்குறை படூஉம் வாயில்" (புறநா.196).* 5. துவாரம்; opening. *"வருந்து முயிரொன்பான் வாயிலுடம்பில்" (நன்னெறி. 12).* 6. இடம்; place. *"வாயில் கொள்ளா மைந்தினர்" (பதிற்றுப்.81, 9).* 7. காரணம் (பிங்.); cause. *"வாயிலோய் வாயி லிசை" (பு.வெ.9,2).* 8. வழிவகை; means. *"திருநலஞ் சேரும் வாயிறான்" (சீவக.2008).* 9. தீர்வு (ஞானா.34, 21); remedy. 10. அரசவை; King's court. *"பொன்னி நாடவன் வாயிலுள்ளா னொரு புலவன்" (திருவிளை. கான்மா.5).* 11. வாயில் காப்பான் பார்க்க; see *vāyil-kāppāṉ.* *"வாயில் விடாது கோயில் புக்கு" (புறநா. 67).* 12.தூதன்; messenger. *"வயந்தக குமரனை வாயிலாக" (பெருங். மகத. 18, 30).* 13. தலைவனையும் தலைவியையும் இடைநின்று கூட்டுந் தூது; one who mediates between lovers. *"வருந் தொழிற் கருமை வாயில் கூறினும்" (தொல். பொருள். 111).* 14. திறம் (பிங்.); ability. 15. கதவு; door. *"நீணெடு வாயி னெடுங்கடை கழிந்து" (சிலப்.10, 8).* 16. வரலாறு (இலக். அக.); origin, history.

ம. வாதில்; கோட. வாய்ல்; தோட. போஸ்; க. பாகில்; து. பாகிலு; தெ. வாகிலி; கொலா. வாகல், நாய்க். வாகல்; பார்ஜி. வால்.

**வாயில்காப்பான்** *vāyil-kāppāṉ,* பெ.(n.) வாசலிற் காவல் செய்வோன்; door keeper. *"வாயில் காப்பானே மணிக்கதவம் தாள் திறவாய்" (திவ். திருப்பா.16).*

ஒருகா. வாயிற்காவலன்

*[வாயில் + கா → காப்பான்]*

**வாயில்மண்போடு-தல்** *vāyil-maṇ-pōḍu,* 9 செ.கு.வி. (v.i.) கேடு விளைத்தல்; to cause ruin. *"அவர்கடம் வாயில்... மண் போட்டான்" (தனிப்பா.1, 238, 8).*

*[வாய் → வாயில் + மண் + போடு-.]*

**வாயில்மண்விழுதல்** *vāyil-maṇ-viḻudal,* பெ.(n.) முற்றுங் கேடுறுகை; being completely ruined.

*[வாய் → வாயில் + மண் + விழுதல்-.]*

**வாயில்லாப்பூச்சி** *vāillā-p-pūcci,* பெ.(n.) எதிர்த்துக் கேட்கும் திறன் இல்லாதவர்; people who would not speak up. *'பாவம் வாயில்லாப் பூச்சிகள்; அவர்களால் நிலக்கிழார்களை எதிர்த்து என்ன செய்ய முடியும் ?'*

*[வாயில்லா + பூச்சி]*

**வாயில்விழைச்சு** *vāyil-viḻaiccu,* பெ.(n.) உமிழ்நீர்; saliva, spittle. *"வாயில் விழைச்சிவை யெச்சில்" (ஆசாரக்.8).*

*[வாய் → வாயில் + விழை → விழைச்சு. (விழைச்சு = இளமை)]*

**வாயில்வேண்டல்** *vāyil-vēṇḍal,* பெ.(n.) தலைவனுக்கு முகங் கொடுக்குமாறு தலைவியைப் பாணன் முதலிய தூதுவர் வேண்டிக் கொள்வதைக் கூறும் அகப் பொருட்டுறை (நம்பியகப். 95); theme describing the request of a mediator to a heroine to give audience to her lover.

*[வாயில் + வேண்டல்]*

**வாயிலடக்கல்** *vāyil-aḍakkal,* பெ.(n.) வாயிலடக்குதல்; to keep in the mouth.

*[வாயில் + அடக்கல்]*

**வாயிலடித்தல்** *vāyil-aḍi,* 4 செ.குன்றாவி. (v.t.) முற்றுங்கெடுத்தல்; to ruin.

*[வாயில் + அடி-,]*

**வாயிலப்பு** *vāyil-appu,* பெ.(n.) 1. வாய் நீரூறல், ஒரு நோய்; excessive salivation, a disease. 2. வாய் நீர்; saliva. 3. அகட்டு நீர்க்கோவை; ascites.

*[வாய் + இல் → வாயில் + அப்பு. (இல் = ஏழனுருபு)]*

**வாயிலாக** *vāilāga,* வி.எ. (adv.) மூலம், through. *'நாம் வருவதை முன்கூட்டியே தொலைபேசி வாயிலாகத் தெரிவித்து விடலாம்'.*

*[வாய் → வாயில் + ஆக]*

**வாயிலாச்சீவன்** *vāy-ilā-c-cīvaṉ,* பெ.(n.) விலங்கு; animal, dumb creature.

*[வாய் + இல்லா → இலா + சீவன்]*

**Skt.** *jīva* > த. சீவன்.

**வாயிலார்நாயனார்** *vāyilār-nāyaṉār,* பெ.(n.) நாயன்மார் அறுபத்துமூவருள் ஒருவர் (பெரியபு.); a canonized *śaiva* saint, one of 63.

**வாயிலாளன்** *vāyil-āḷaṉ,* பெ.(n.) வாயிற்காவலன் (பிங்.); door-keeper.

*[வாயில் + ஆள் → ஆளன்]*

**வாயிலிற்கூட்டம்** *vāyiliṟ-kūṭṭam,* பெ.(n.) பாணன் முதலியோராற் கூடும் தலைவன் தலைவியரின் கூட்டம் (இலக்.வி.424.); reconciliation of lovers through the help of mediators.

*[வாயில்+கூட்டம்]*

**வாயிலெடுக்கல்** *vāyil-eḍukkal,* பெ.(n.) கக்கல்; vomitting.

*[வாயில் + எடுக்கல்]*

**வாயிலெட்டு** *vāyileṭṭu,* பெ.(n.) ஒரு ஊனானிப்பூடு; violaodorata a plant used in unani medicine.

*[வாயில் + எட்டு]*

**வாயிலெடு-த்தல்** *vāyil-eḍu-,* 4 செ. குன்றாவி. (v.t.) வாயாலெடு-, பார்க்க; see *vāyāl-eḍu.*

*[வாய் + ஆல் (ஆல் = மூன்றனுருபு) + எடு-,]*

**வாயிலேபோடு-தல்** *vāyil-ē-pōḍu-,* 10 செ.குன்றாவி. (v.t.) 1. பேச வொட்டாது குறுக்கிட்டுப் பேசித் தடை செய்தல்; to interrupt as a person, while speaking.

*'எது பேசினாலும் அவளை வாயிலே போடுகிறான்'.* 2.பிறர் பொருளைக் கையாடுதல்; to misappropriate. *'அவன் பிறர் பொருளை வாயிலே போட்டுக் கொள்ளுகிறவன்'.*

*[வாயில் + போடு-,]*

வாயிலைப்பு *vāy-ilaippu*, பெ.(n.) வாய் சுவையின்மை; bad taste in the mouth.

*[வாய் + இளைப்பு → இலைப்பு]*

வாயிலோர் *vāyilōr,* பெ.(n.) 1. வாயில் காப்போர்; door-keepers. *"வாயிலோயே வாயிலோயே" (சிலப். 20, 24).* 2. தூதுவர் (சங்.அக.); messengers, mediators. 3. ஒரு சார் தமிழ்க் கூத்தர் (பிங்.); a class of Tamizh dancers.

*[வாயில் → வாயிலார் → வாயிலோர்]*

வாயிழு-த்தல் *vāy-iḻu-*, 4 செ.கு.வி. (v.i.) சண்டை போடுதல் (Tp); to pick a quarrel.

*[வாய் + இழு-.]*

வாயிற்காட்சி *vāyiṟ-kāṭci*, பெ.(n.) ஐம்புலக் காட்சி (சி.சி.அளவை, 6, மறைஞா.); apprehending faculty of senses .

*[வாயில் + காட்சி]*

வாயிற்கூத்து *vāyiṟ-kūttu*, பெ.(n.) கூத்துவகை; a kind of dancing or acting. *"வாயிற் கூத்துஞ் சேரிப்பாடலும்" (பெருங். உஞ்சைக்.37, 88).*

*[வாயில் + கூத்து]*

வாயிற்படி *vāyiṟ-paḍi*, பெ.(n.) வீட்டு வாசலின் படி; door-step threshold. *"மிருதி பதினெட்டு முயர் திருவாயிற் படியாக" (குற்றா. தல. திருமால். 132). 'வீட்டுக்குவீடு வாசற்படி' (பழ.)*

*[வாயில் + படி]*

வாயின்மறுத்தல் *vāyiṉ-maṟu-*, பெ.(n.) தூது வந்த பாணன் முதலியவர்க்குத் தலைவி முகங்கொடுக்க மறுத்தலைக் கூறும் அகத் துறை (தொல். பொருள். 3, உரை); (akap.) theme describing the refusal of the heroine to grant interview to her lover's messengers.

*[வாயில் + மறு-,]*

வாயின்மாடம் *vāyiṉ-māḍam*, பெ.(n.) கோபுரம்; tower over the entrance, as of a temple. *"தீயழற் செல்வன் செலவுமிசை தவிர்க்கும் வாயின் மாடத்து" (பெருங். மகத. 3, 31).*

*[வாயில் + மாடம்]*

வாயினிப்பு *vāy-iṉippu*, பெ.(n.) உமிழ் நீரால் வாயில் உணரப்படும் இனிப்புணர்வு; sweetness of the mouth.

*[வாய் + இனிப்பு]*

வாயினிலை *vāyiṉilai*, பெ.(n.) அரசனிடத்துத் தன் வரவு கூறுமாறு வாயில் காப்போனுக்குப் புலவன் சொல்வதாகக் கூறும் புறத்துறை (பு. வெ. 9, 2); theme of a poet asking the gate-keeper at the palace to announce his arrival to the king.

*[வாயில்+நிலை]*

வாயினேர்வித்தல் *vāyiṉērvittal*, பெ.(n.) தலைவியிடம் தூது செல்லுமாறு தலைவன் தூதுவரை உடன்படுத்துவதைக் கூறும் அகத்துறை (நம்பியகப். 96); theme of a lover persuading his messenger to

deliver his love-message to his beloved.

*[வாயில் + நேர்வு → நேர்வித்தல்]*

வாயீளை *vāy-īḷai*, பெ.(n.) கோழையுடனாய வாயெச்சில்; saliva and mucus discharge from the mouth.

*[வாய் + ஈளை. ஈளை = கோழை.]*

வாயுதவி *vāy-udavi*, பெ.(n.) வாய்ச்சொல் அருளல்; help by words.

மறுவ. பரிந்துரை.

*[வாய் + உதவி]*

வாயும்வயிறுமாயிரு-த்தல் *vāyum-vaiyiṟumāiru-*, 18 செ.குன்றாவி. (v.t.) கருப்பமாக இருத்தல்; be in the state of pregnancy. *'நீ வாயும் வயிறுமாக இருக்கிற போது ஊட்டமான உணவு சாப்பிட வேண்டும்'.*

*[வாயும் + வயிறுமாய் + இரு-,]*

வாயுமேனி *vāyu-mēṉi*, பெ.(n.) பச்சைக்கல்; green stone.

வாயுருட்டு *vāy-uruṭṭu*, பெ.(n.) பேச்சால் மருட்டுகை (இ.வ.); browbeating.

*[வாய் + உருட்டு]*

வாயுள்ளவன் *vāy-uḷḷavaṉ*. பெ.(n.) உசாவி அறிந்து கொள்ளக் கூடியவன்; man of inquiring sprit, pushful man. *'வாயுள்ள பிள்ளை பிழைக்கும்'* (பழ.).

*[வாய் + உள்ளவன்]*

வாயுறு[1]-த்தல் *vāy-uṟu*. 5 செ.கு.வி. (v.i.) பேச்சினால் மெய்ம்மையை அறிவுறுத்தல்; to preach or expound the truth. *"வாயுறை வாழ்த்தே... வாயுறுத்தற்றே" (தொல். பொருள். 424).*

*[வாய்மை → வாய் + உறு-,]*

வாயுறு[2]-த்தல் *vāy-uṟu-*, 4 இசெ.குன்றாவி. (v.t.) வாயிலூட்டுதல்; to feed, to administer as medicine, by the mouth. *"மருந்தாகச் சிலநாட்கொண்டு வாயுறுத்தி" (சீவக. 2703, உரை).*

*[வாய் + உறு-,]*

வாயுறை *vāyuṟai*, பெ.(n.) 1. உண்கை; eating. *"வடுத்தீர் பகல் வாயுறை" (சிறுபஞ்.69).* 2. உணவு; food, fodder. *"பசுவுக்கொரு வாயுறை" (திருமந். 252).* 3. அறுகம்புல்; harialli grass. 4. சோறூட்டுதல்; ceremony of giving boiled rice to an infant for the first time. *"தாண்டு மதியிரு மூன்றில் வாயுறையின் சடங்கியற்றி" (குற்றா. தல. தருமு. 37).* 5. கவளம் (இலக்.அக.); bolus of cooked rice. 6. மருந்து; medicine. *"வாயுறை யென்பது மருந்தாகலான்" (தொல். பொருள். 423, உரை).* 7. வாயுறைமொழி (தொல். பொருள். 423, உரை) பார்க்க; see *vāyuṟai-moḻi*. 8. தாளுருவி என்னும் மகளிர் காதணி; a kind of ear-ring, worn by women. *"வாயுறை யழுத்திய வறிதுவீழ் காதின்" (நெடுநல். 140).*

*[வாய் + உறை]*

வாயுறைமொழி *vāyuṟai-moḻi*, பெ.(n.) கேட்கும் போது வெவ்வியதாய்ப் பின்பு உறுதி தருஞ் சொல் (சி. போ. பா. 2, 2, பக். 165.); harsh but salutary words of advice.

*[வாயுறை + மொழி]*

வாயுறைவாழ்த்து *vāyuṟai-vāḻttu,* பெ.(n.) 1. தலைவன் வேண்டானாயினும் அவற்கு உறுதிமொழிகளைச் சான்றோர் கூறும் புறத்துறை (தொல். பொருள். 90); theme of wise men giving salutary advice to a chief nolens volens. 2. சிற்றிலக்கிய வகை தொண்ணூற்றாறனுள் ஒன்று; a variety of descriptive poetry, one of 96 *šiṟṟilakkiyam.*

*[வாயுறை + வாழ்த்து]*

வாயூற்று *vāyūṟṟu,* பெ.(n.) வாயில் உமிழ் நீர் சுரக்கை (யாழ்.அக.); profuse secretion of saliva.

*[வாயூறு → வாயூற்று]*

வாயூறச்செய்தல் *vāyūṟa-c-ceydal,* பெ.(n.) மருந்தினால் வாயில் நீரூறும்படி செய்தல்; to produce an usual secretion and discharge of saliva in a person by using medicine.

*[வாயூறு → வாயூற + செய்தல்]*

வாயூறல் *vāy-ūṟal,* பெ.(n.) 1. வாயில் பித்த நீர் சுரத்தல்; secretion of fluid in the mouth. 2. வாய் நீர்; saliva.

*[வாய் + ஊறல்]*

வாயூறு[1]-தல் *vāy-ūṟu,* 5 செ.கு.வி. (v.i.) உணவை நினைந்து உமிழ்நீர் சுரத்தல்; secretion of idiva on seing food. *"அமரார் குழாம் வாயூற" (அழகர்கல.1).*

*[வாய் + ஊறு-,]*

வாயூறு[2]-தல் *vāy-ūṟu,* 5 செ.குன்றாவி. (v.t.) அவாவுதல்; to long for, as welth, fame, office, learning.

*[வாய் + ஊறு-,]*

வாயெச்சில் *vāyeccil,* பெ. (n.) வாய்மருந்து பார்க்க; see *vāy-marundu.*

*[வாய் + எஞ்சு → எச்சு → எச்சில். (எச்சில் = மீந்த உணவு, உமிழ்நீர்.]*

வாயெடு-த்தல் *vāy-eḍu-,* 4 செ.கு.வி. (v.i.) 1. பேசத் தொடங்குதல்; to begin to speak. 2. குரலெடுத்தல்; to speak aloud, to raise the voice. *"நன்னாடு வாயெடுத் தழைக்கும்" (மணிமே. 25, 237).*

*[வாய் + எடு-,]*

வாயெழு-தல் *vāy-eḻu-,* 5 செ.கு.வி. (v.i.) வாயெடு (இ.வ.) பார்க்க; see *vāy-eḍu .*

*[வாய் + எழு-, (எழு-தல் = தொடங்குதல்).]*

வாயைக்கட்டு[1]-தல் *vāyai-k-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. உணவிற் கட்டுப்பாடாக இருத்தல்; to observe restrictions of diet. 2. சிக்கனமாக உணவு கொள்ளுதல்; to stint oneself in the matter of food. *"வாயைக் கட்டி வயிற்றைக் கட்டிச் சேர்த்த பொருள்".* 3. வாய்கட்டு[1], 2, 3 பார்க்க; see *vāy-kaṭṭu.*

*[வாய் → வாயை + கட்டு-,]*

வாயைக்கட்டு[2]-தல் *vāyai-k-kaṭṭu-,* 5 செ. குன்றாவி.(v.t.) வாய்கட்டு-, 1, 2 பார்க்க; see *vāy-kaṭṭu.*

*[வாய் → வாயை + கட்டு-,]*

வாயைப்பிள-த்தல் *vāai-p-piḷa-,* 4 செ.கு.வி. (v.i) 1. வியப்பை வெளிப்படுத்தும் வகையில் வாயைத் திறத்தல்; gape at. *'பெண் மிதிவண்டி ஓட்டினாலே வாயைப் பிளக்கும் ஊர் இது'.* 2. இறத்தல்; to die. *'கிழவர் திடீரென்று வாயைப் பிளந்து விட்டார்'.*

*[வாய் → வாயை + பிள-,]*

**வாயொடுங்கு-தல்** *vāy-oḍuṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) பேச்சடங்குதல் (யாழ்.அக.); to be tongue-tied; to be rendered speechless.

*[வாய் + ஒடுங்கு-,]*

**வாயொலி** *vāy-oli,* பெ.(n.) பாடல்; poem. *"கலியன் வாயொலிகள்" (திவ். பெரியதி. 4, 5, 10).*

*[வாய் + ஒலி]*

**வாயோட்டல்** *vāy-ōṭṭal,* பிளத்தல்; raving.

*[வாய் + ஒட்டல்]*

**வாயோடு** *vāy-ōḍu,* பெ.(n.) 1. உடைந்த பானையின் வாய்ச் சில்லு (திவ். திருமாலை 5, வ்யா. பக். 29) ; neck of a broken pot. 2. குத்தும் அரிசி முதலியன சிதறாதபடி உரலின் மேல் வைக்கும் பானைக் கழுத்துப் போன்ற கருவி (கொ.வ.); circular piece like the neck of a broken pot placed at the mouth of a mortar, while pounding paddy to prevent the grain from scattering.

*[வாய் + ஒடு]*

**வாயோலை** *vāy-ōlai* பெ.(n.) 1. தவச வளவைக் குறிப்பிட்டுக் குவியலில் வைக்கும் அதன் கணக்குக் குறிப்பு; ola memorandum of account of grain in a heap, usually kept stuck in the heap. 2. ஒற்றி உரிமையை விலைசெய்வதைக் குறிக்கும் மூல ஆவணம் (நாஞ்.); document conveying the sale or assignment of one's mortgage right.

*[வாய் + ஓலை]*

**வார்¹-த்தல்** *vār-,* 11 செ.கு.வி. (v.i.) அம்மை நோயில் முத்து வெளிப்படுதல்; to appear, as pock in small-pox. *'அம்மை வார்த்த மூஞ்சி' (கொ.வ.).*

**வார்²-தல்** *vār-,* 4 செ.கு.வி. (v.i.) 1. ஒழுகுதல்; to flow, trickle. *"நெய் வார்ந்தனைய திண்கோல்" (சீவக.1697).* 2. வெளிவிடுதல்; to spread, overflow. *"நெடுநீர் வார்குழை" (நெடுநல்.139).* 3. நெடுமையாதல்; to be long. *"வார்மயி ருளரினள்" (அகநா.102.).* 4. நேராதல்; to be upright. *"வார்ந்திலங்கு வையெயிற்று"(குறுந்.14).* 5. உயர்தல் (பிங்.); to rise high. 6. ஒழுங்குபடுதல்; to be in order, to be arranged in order. *"மணல்வார் புறவில்" (மலைபடு.48).* 7. நென்மணி முதலியன பால் கட்டுதல்; to form milk, as grain. *"ஐவன வெண்ணெல் பால்வார்பு கெழீஇ" (மலைபடு.114).* 8. உரிதல்; to peel off. *"பீலி வார்ந்து" (அகநா.69).*

*[வள் → வரு → வா → வார்-,]*

**வார்³-தல்** *vār-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. மயிர் கோதுதல்; to comb, as hair. *"வாருறு வணரைம்பால்" (கலித்.58).* 2. தெரிதல் (சது.); to know.

ம. வாருக; தெ. வாரு; க. பார்; கோட. வாரி; பார்ஜி. வார்ஜாவா; குய். வாரு.

*[வழி → வடி → வார்-, (மு.தா.109)]*

**வார்⁴-த்தல்** *vār-,* 11 செ.குன்றாவி. (v.t.) 1. ஊற்றுதல்; to pour. *"கிண்ணத்தில் வார்த்தளிக்க" (சீவரக.கணபதியு.13).* 2. உருக்கி வார்த்தல்; to cast, as metal in a mould. 3. தோசை முதலிய பணியாரஞ் செய்தல்; to prepare cakes from dough. *'தோசை வார்த்தான்'.*

*[வள் → வரு → வார்-,]*

வார்[5] *vār,* பெ.(n.) 1. நெடுமை (சூடா.); length, elongation. 2. கடைகயறு; churning rope. *"இளமை வாராக்....... கலக்கி" (சீவக.711).* 3. நேர்மை (சூடா.); straightness. 4. வரிசை; row. *"வாரிட்டணி வகுத்து" (விறலிவிடு.75) (நாமதீப.768).* 5. உயர்ச்சி (நாமதீப.771); height

*[வள் → வரு → வார்]*

வார்[6] *vār,* பெ.(n.) 1. நீர் (சூடா.); water . *"வாராயிர முகமா நுகர்மஞ்சு" (பாரத. அருச்சுனன்றவ.159).* 2. மேகம் (அக.நி.); cloud.

*[வள் → வர் → வார்]*

வார்[7] *vār,* பெ.(n.) வா என்னும் ஏவல்; second person imperative of the verb. *"வந்திக்க வாரென" (பரிபா.20,70). "வாரடா வுனக்கியாது தானர்தம் மகளடுக்குமோ" (பாரத.வேத்திர.12).*

*[வரு → வா → வார்]*

வார் → வா. (ஏவல் ஒருமை)

வார் என்னும் ஒருமை ஏவலிலும் வாரும், வாருங்கள் என்னும் பன்மை ஏவலிலும், வார்தல், வாரானை என்னும் தொழிற்பெயர்களிலும் வார் என்பது பகுதியாயிருத்தலானும் 'வா' என்னும் ஏவல் ஒருமை வடிவினின்று வாதல் வாவு என ஏதேனும் ஒரு தொழிற்பெயர் பிறவாமையானும், வருதல் என்னம் வினைக்கு ருகரங்கூடிய வரு என்பதே பகுதியாம்.

வார் என்னும் அடியினின்று முதலாவது திரியக்கூடிய வள் → வர் → வரு என்பவையே.

இங்கு வருதல் வினைக்குக் கூறியதைத் தருதல் வினைக்குங் கொள்க கோர் என்னும் சொல் 'கோ' எனக் குறைந்தது போல. வரு என்பதன் திரிபான.

'வார்' என்னுஞ் சொல்லும் 'வா' எனக் குறைந்ததென்க. 'நோ' என்னும் வினை இறந்த காலத்திலும் ஏவலிலும் நொந்தான், நொம்மாடா எனக் குறுகியது போல வா, தா என்பனவும் வ, த எனக் குறுகின.

வார் = வா. (ஏவலொருமை) (மு.தா.79.).

வார்[8] *vār,* பெ.(n.) 1. தோல்வார்; strap of leather. *"வார்பிணி முரச நாண" (சீவக.2372).* 2. தோல் (நாமதீப. 595); skin. 3. முலைக்கச்சு; bodice. *"வாரடங்கு வனமுலையார்" (தேவா.1232,6) (பிங்.).*

வார்[9] *vār,* பெ.(n.) 1. துண்டம் (நாமதீப.457); bit, piece. 2. நுண்மை(வின்.); smallness.

வார்[10] *vār,* பெ.(n.) 1. சாறு; juice. 2. சாராயம்; arrack.

வார்க்கட்டு *vār-k-kaṭṭu,* பெ.(n.) 1. வாராற் கட்டப்பட்டது; that which is tied by thongs. 2. திவவு (திருமுரு. 140; உரை); bands of catgut in a *yāḻ.*

*[வார் + கட்டு]*

வார்க்கயிறு *vār-k-kayiṟu,* பெ.(n.) பின்னிய தோற்கயிறு (வின்.); braided leather thong.

*[வார் + கயிறு]*

வார்க்குத்தி *vār-k-kutti,* பெ.(n.) வார்க் குத்து (நெஞ்சு விடு. 22, உரை) பார்க்க; see *vār-k-kuttu.*

*[வார் + குத்தி]*

வார்க்குத்து *vār-k-kuttu,* பெ.(n.) நீர்ப் பெருக்கு சுழித்தோடும் இடம்; whirlpool. *"கொலைக்களம் வார்க்குத்து" (ஏலாதி,12).*

*[வார் + குத்து]*

வார்க்குதல் *vārkkudal,* பெ.(n.) மாழை முதலியவற்றை யுருக்கிச் சாய்த்தல்; to cast in mould.

**வார்காது** *vār-kādu,* பெ.(n.) வடிகாது; perforated ear lengthened by weighting the ear-lobes. *"வார்காது தாழப் பெருக்கி" (திவ். பெரியாழ்.2, 3, 13).*

*[வார் + காது. (வார்–தல் = நீளுதல்)]*

**வார்குடை** *vārkudai,* பெ.(n.) ஒரு வகை நெல்(A.); a kind of paddy.

**வார்கோல்** *vār-kōl,* பெ.(n.) விளக்குமாறு; broom.

மறுவ. துடைப்பம்.

*[வார் + கோல்]*

**வார்சிகி** *vār-šigi,* பெ.(n.) ஒரு வகைக் கொடி மல்லிகை; a climber-Jasminum sambac.

**வார்த்தகி** *vārttagi,* பெ.(n.) கற்றாழை; aloe.

**வார்த்தகு** *vārttagu,* பெ.(n.) முல்லை; a variety of Jasmine.

**வார்த்தம்** *vārttam,* பெ.(n.) நலம்; well being.

**வார்த்தரம்** *vārttaram,* பெ.(n.) தண்ணீர்; water.

**வார்த்தருகம்** *vārttarugam,* பெ.(n.) கத்தரிக் காய்; brinjal plant-solanum melongena.

*[வார் + தருகம்]*

**வார்த்தாகிகம்** *vārttāgigam,* பெ.(n.) 1. கண்டங்கத்திரி; a prostate thorny shrub. 2. சிறுவழுதலை; a small species of brinjal plant.

**வார்தேவி** *vār-dēvi,* பெ.(n.) வட்டத்திருப்பி; a twiner.

**வார்ப்படஇரும்பு** *vārppada-irumbu,* பெ.(n.) வார்த்து ஊற்றிய இரும்பு; cast iron.

*[வார்ப்படம் + இரும்பு]*

**வார்ப்படம்**[1] *vār-p-padam,* பெ.(n.) வார்ப்புவேலை (வின்.) பார்க்க; see *vārppu-vēlai.*

*[வார் → வார்ப்பு → வார்ப்படம்]*

**வார்ப்படம்**[2] *vār-p-padam,* பெ.(n.) மாழையை யுருக்கி வேண்டிய வடிவங்களில் வடித்தல்; to make things from foundary.

**வார்ப்படவேலைக்காரன்** *vārppada-vēlai-k-kāran,* பெ.(n.) வார்ப்புவேலை செய்வோன்; founder, caster.

*[வார்ப்படம் + வேலைக்காரன்]*

**வார்ப்பனை** *vār-p-panai,* பெ.(n.) கூந்தற்பனை பார்க்க; see *kūndar-panai.*



**வார்ப்பாலை** *vārppālai,* பெ.(n.) இரும்பு முதலியன உருக்கி வார்க்குமிடம் (புதுவை.); foundry.

*[வார் → வார்ப்பு + ஆலை]*

**வார்ப்பிரும்பு** *vārppirumbu,* பெ.(n.) பிற தனிமக் கலப்பு உடையதும் எளிதில் உடைந்து விடும் தன்மை கொண்டதுமான ஒரு வகை இரும்பு; pig iron.

*[வார்ப்பு + இரும்பு]*

வார்ப்பு[1] *vārppu,* பெ.(n.) 1. ஒழுக்குகை; pouring. 2. உருக்கி வார்க்கை; casting. *"வார்ப்பி னமைத்த யாப்பமை யரும்பொறி"* *(பெருங்.இலாவாண.18, 24).* 3. உருக்கி வார்க்கப்பட்டது; that which is cast. 4. வயிறு அகன்று வாய் கனமாகவுள்ள பாத்திர வகை (இ.வ.); a shallow, thick-liped vessel. 5. கைவளை (அக.நி.); bangle.

*[வார் → வார்ப்பு]*

வார்ப்பு[2] *vārppu,* பெ.(n.) 1. அருமந்த மணிகளில் எற்றின மேற்பூச்சு (திவ். பெரியாழ். 3, 3, 3, வ்யா. பக். 567.); encasing, as precious stones in an ornament. 2. மாழையை உருக்கி வார்த்தல்; to make things from foundary.

*[வார் → வார்ப்பு]*

வார்ப்புவேலை *vārppu-vēlai,* பெ.(n.) 1. உருக்கி வார்க்குந் தொழில்; work of casting metal 2. வார்ப்பு 1, 3 பார்க்க; see *vārppu.*

*[வார்ப்பு + வேலை]*

வார்ப்புருக்கு *vār-p-purukku,* பெ.(n.) வார்த்த எஃகு; cast steel.

*[வார்ப்பு + உருகு → உருக்கு]*

வார்ப்புலை *vārppulai,* பெ.(n.) வார்ப்பாலை (புதுவை) பார்க்க; see *vārppālai.*

*[வார்ப்பு + உலை]*

வார்ப்பூண்டு *vārppūṇḍu,* பெ.(n.) பூநீறு; salt extracted from the fuller's earth.

வார்பு *vārbu,* பெ.(n.) நீளவாக்கிற் சீவப்படுகை; being cut lengthwise. *"வார்புறு வள்பின்" (புறநா.50).*

*[வார் → வார்பு]*

வார்முதல் *vār-mudal,* பெ.(n.) உப்பளங்களிலிருந்து வாரியெடுக்கப்பட்ட உப்புக்குவியல்; heap of salt from salt-pans. *'அளத்தில் வார் முதல் அதிகமில்லை'.*

*[வார் + முதல்]*

ஒ.நோ. கண்டுமுதல்.

வார்மூலி *vār-mūli,* பெ.(n.) 1. பூநீறு; salt extracted from the fuller's earth. 2. வெடியுப்பு; salt petre.

*[வார் + மூலி]*

வார்மை *vārmai,* பெ.(n.) 1. ஒழுக்கம் (அரு.நி.); conduct. 2. நேர்மை (அரு.நி.); rectitude. 3. மதிப்புரவு; polite manners. *"வார்மை சீர்மை யறியாதவன்"* (வின்.).

*[வார் → வார்மை]*

வாரக்கட்டளை *vāra-k-kaṭṭaḷai,* பெ.(n.) வாரந்தோறும் வீட்டுக்கொரு நாளாக இரவலர்க்கு உணவளிக்கும் திட்டம்; system by which villagers undertake to feed mendicants etc. gratuitously in turn of one day in a week.

*[வாரம் + கட்டளை]*

வாரக்கட்டளைத்தம்பிரான் *vāra-k-kaṭṭaḷai-t-tambirāṉ,* பெ.(n.) வாரக் கட்டளையில் உண்ணும் சைவத்துறவி (வின்.); saiva-ascetic fed on *vāra-k-kaṭṭaḷai* .

*[வாரக்கட்டளை + தம்பிரான்]*

**வாரக்கம்** *vārakkam,* பெ.(n.) *வாரகம்*¹,1 பார்க்க; see *vāragam.* *"உன்றன் வாரக்கத்தைச் சீரக்கத்தை வாங்கிக் கொண்டேனோ" (குருகூர்ப்பள்ளு).* 2. பொருநராகப் பதிந்து கொள்வோர்க்குக் கொடுக்கும் முன்பணம் (வின்.); advance money paid to a soldier on enlisting.

தெ. வாரகமு.

**வாரக்காணம்** *vāra-k-kāṇam,* பெ.(n.) வரிவகை (S.I.I.vi.155); a tax.

*[வாரம் + காணம்]*

**வாரக்காரன்** *vāra-k-kāraṉ,* பெ.(n.) உழுங்குடியானவன் (வின்.); cultivator.

*[வாரம் + காரன். (காரன் = ஆண்பாற் பெயரீறு)]*

**வாரக்குடி** *vāra-k-kuḍi,* பெ.(n.) குடி வாரத்துக்குப் பயிரிடும் உழவன் (வின்.); tenant or cultivator who receives a fixed share of the produce.

*[வாரம் + குடி. (வாரம் = மேல்வாரம் குடிவாரங்களாகிய விளைச்சலின் பங்கு)]*

**வாரக்குடிச்சி** *vāra-k-kuḍicci,* பெ.(n.) வாரக்குடிப்பெண் (யாழ்.அக.); woman cultivator.

*[வாரக்குடி → வாரக்குடிச்சி]*

ஒ.நோ. வாரம் + குடி → குடிச்சி.

**வாரக்குன்னல்** *vāra-k-kuṉṉal,* பெ.(n.) ஒரு வகை மாட்டு நோய்; malarial fever affecting cattle.

*[வாரம் + குன்னல். குன்னல் = சளி, காய்ச்சலோடு வரும் நோய்]*

**வாரகக்கடன்** *vāraga-k-kaḍaṉ,* பெ.(n.) வேளாண்மை பொருட்டு உதவுங் கடன்; agricultural loan.

மறுவ. வேளாண்கடன்.

*[வாரகம் + கடன்]*

**வாரகசியம்** *vārakaśiyam,* பெ.(n.) கிழங்கு வகை (சங்.அக.); a kind of root.

**வாரகம்**¹ *vāragam,* பெ.(n.) பயிரிடுவோர்க்கு உதவியாகக் கொடுக்கும் முன் பணம்; advance given to cultivators to enable them to carry on cultivation. 2. நெல் வட்டிக்குக் கொடுக்கும் பணம் (யாழ்.அக.); money lent on agreement to pay interest in kind, i.e. paddy.

தெ. வாரகமு.

**வாரகம்**² *vāragam,* பெ.(n.) 1. குதிரை; horse. 2. குதிரை நடைவகை; a pace of horse.

**வாரகம்**³ *vāragam,* பெ.(n.) கடல் (அக.நி.); ocean or sea.

**வாரகம்**⁴ *vāragam,* பெ.(n.) நிலப்பனை (சங்.அக.); moosly root.

**வாரகிருமி** *vāra-kirumi,* பெ.(n.) வாரிகிருமி (சங்.அக.) பார்க்க; see *vārikirumi.*

**வாரகீரன்** *vāra-kīraṉ,* பெ.(n.) 1. அளியன் (மைத்துனன்); brother-in-law. 2. சுமையாள்; porter.

**வாரங்கம்**¹ *vāraṅgam,* பெ.(n.) ஆயுதப்பிடி (சங்.அக.); handle of weapon.

**வாரங்கம்**² *vāraṉgam,* பெ.(n.) பறவை (சங்.அக.); bird.

வாரச்சட்டம் *vāra-c-caṭṭam,* பெ.(n.) குடியானவனுக்குரிய விளை பங்கின் விளத்தம் குறிக்கும்பட்டி (W.G.); a register showing the cultivator's share of the crop.

*[வாரம் + சட்டம்]*

வாரசுந்தரி *vāra-šundari,* பெ.(n.) விலை மகள் (யாழ்.அக.); prostitute.

*[வாரம் + சுந்தரி. Skt. = சுந்தரி]*

வாரசேவை *vāra-šēvai,* பெ.(n.) பொருட் பெண்டிர் கூட்டம் (யாழ்.அக.); company of harlots.

*[வாரம் + சேவை. Skt. = சேவை]*

வாரஞ்சாரம் *vārañjāram,* பெ.(n.) வாரம்[2],6,7 (இ.வ.) பார்க்க; see *vāram.*

வாரட்டு *vāraṭṭu,* பெ.(n.) வாரப்பட்டை பார்க்க; see *vāra-p-paṭṭai.*

வாரட்டை *vāraṭṭai,* பெ.(n.) வாரவட்டை; beam supporting a roof.

*[வாரம் + அட்டை]*

வாரடகம் *vāraḍagam,* பெ.(n.) தாமரைக் காய்; heart.

வாரடம் *vāraḍam,* பெ.(n.) வயல் (சங்.அக.); field.

வாரடி[1]-த்தல் *vāraḍi-,* 4 செ.கு.வி. (v.i.) நீர் நிரவியோடுதல் (யாழ்.அக.); to spread out and flow, as water.

*[வார் + அடி -,]*

வாரடி[2] *vāraḍi-,* பெ.(n.) பலகறை (சங்.அக.); cowrie.

வாரடி[3] *vāraḍi,* பெ.(n.) சாட்டையடி (புதுவை.); whipping.

*[வார் + அடி]*

வாரடித்தல் *vāraḍittal,* பெ.(n.) கம்பியாக நீட்டுதல், வாரடித்துப் புடம் போடுதல் (போகர் 7000); to elongate as wire.

*[வார் + அடித்தல்]*

வாரடை[1] *vāraḍai,* பெ.(n.) பனை முதலியவற்றின் ஓலையீர்க்கு (வின்.); mid-rib, as of a palm leaf.

தெ. வரட; ம. வரிட.

*[வார் + அடு → அடை]*

வாரடை[2] *vāraḍai,* பெ.(n.) துலாக்கோலின் ஏற்றத் தாழ்வான நிலை; தராசின் ஏற்றத் தாழ்வான நிலை (C.G.); uneven state of the balance.

வாரடை[3] *vāraḍai,* பெ.(n.) வரடை பார்க்க; see *varaḍai.*

வாரடையோலை *vār-aḍaiyōlai,* பெ.(n.) குத்தகை ஆவணம்; deed of lease.

*[வார் + அடையோலை]*

வாரணக்கயிறு *vāraṇa-k-kayiṟu,* பெ.(n.) உழவுக்கயிறு; agricultural plough rope.

*[வாரணம் + கயிறு]*

வாரணத்தண்டம் *vāraṇa-t-taṇḍam,* பெ.(n.) கோழி முட்டை; fowl egg.

*[வாரணம் + தண்டம்]*

வாரப்புன்செய் *vāra-p-punšey,* பெ.(n.) வரியிடத்தக்க புன்செய்ப் பயிர் (P.T.L.); dry crops liable to be taxed.

*[வாரம் + புன்செய்]*

**வாரணபுசை** *vārana-pušai,* பெ.(n.) வாழை (சங்.அக.); plantain.

**வாரணம்¹** *vāranam,* பெ.(n.) 1. சங்கு (பிங்.); conch. *"வாரணத்து வாயடைப்ப" (இரகு. நாட்டு 43).* 2. யானை; elephant. *"புகர்முக வாரணம்" (மணிமே.7, 115).* 3. பன்றி (நன். 271, மயிலை.); pig. *"கனவாரணம் பயின்றிடுந் தகையால்" (அரிசமய. குலசேக.4).* 4. தடை (பிங்.); obstacle, obstruction. 5. மறைப்பு; screen, cover. *"வாரண மாயை" (பாரத. திரௌ.17).* 6. கவசம் (பிங்.); coat of mail. 7. சட்டை (சூடா.); shirt. 8. காப்பு (வின்.); protection. 9. கேடகம் (வின்.); shield. 10. நீங்குகை (வின்.); leaving off, removal. 11. உன்மத்தம் (அக.நி.); delirium tremens, madness. 12. கோழி; fowl. *"பொறி மயிர் வாரணங் குறுங்கூ விளிப்ப" (மணிமே.7,116).* 13. உறையூர்; *uṟaiyūr,* an ancient capital of the *cōḻas.* *"வைகறை யாமத்து வாரணங் கழிந்து" (சிலப்.11,11).*

**வாரணம்²** *vāranam,* பெ.(n.) மாவிலிங்கம் (வின்.); round berried cuspidate-leaved lingam tree.

**வாரணம்³** *vāranam,* பெ.(n.) 1. நிலத்தைச் சூழ்ந்திருக்கும் கடல் (பிங்.); sea. *"வாரணஞ் சூழ்புவி" (தனிப்பா.ii,167,414).* 2. கேடகம்; shield. 3. சங்கு; conch.

*[வள் → வர் → வார் + அணம். (வே.க.பக்.100)]*

**வாரணம்⁴** *vāranam,* பெ.(n.) 1. ஊமத்தம்; dhatura. 2. இலவங்கப் பட்டை; cinnamon bark.

**வாரணரேகை** *vārana-rēgai,* பெ.(n.) மக்களின் நல்வாழ்வைக் காட்டும் உள்ளங்கை வரை; a kind of auspicious mark on the palm of the hand. *"வள்ளி கையிற் கண்ட வாரண ரேகையீ தம்மே" (திருவாரூர்க் குறவஞ்சி).*

**வாரணவல்லபை** *vārana-vallabai,* பெ.(n.) *வாரணபுசை* (சங்.அக.) பார்க்க; see *vārana-pušai.*

**வாரணவல்லமை** *vārana-vallamai,* பெ.(n.) வாழை; plantain tree.

*[வாரணம் + வல்லமை]*

**வாரணன்¹** *vāranaṉ,* பெ.(n.) கணபதி; *Ganēša.* *"வாரணன் குமரன் வணங்குங் கழற் பூரணன்" (தேவா.785, 10).*

**வாரணன்²** *vāranaṉ,* பெ.(n.) கடற்றெய்வம்; god of the sea tract.

*[வாரணம் → வாரணன்]*

வடவர் வ்ரு (கவி, மறை, சூழ்,) என்பதை மூலமாகக் காட்டி அனைத்தையும் மூடும் வானம் (all-enveloping sky) என்று பொருள் கூறுவர். இது வருணனை மழைத் தெய்வமாகக் கொண்ட இடைக்காலத்திற்கு மட்டும் பொருந்துமேயன்றி, கடல் தெய்வமாகக் கொண்ட முற்கால, பிற்கால நிலைமைக்குப் பொருந்தாது.

தமிழர் வாரணனை என்றும் கடல் தெய்வமாகவே கொண்டனர்.

"வருணன் மேய பெருமண லுலகமும்" (தொல். 951).

இது 'வாரணன் மேய நீர்மணலுலகமும்' என்றிருத்தல் வேண்டும். தொல்காப்பியர் வருண என்னும் வடசொல் வடிவிற்கேற்ப வருணன் என்று திரித்துக் கொண்டார்.

வடவர் காட்டும் வ்ரு என்னும் மூலத்திற்குச் சூழ்தற் பொருளுமுள்ளது.

இனி, வரி என்னும் தமிழ்ச் சொற்கு மூடுதற் பொருளுமுள்ளது. வரிதல் = மூடுதல். "புண்ணை மறைய வரிந்து" (திவ். திருவாய். 5:1:5)

வளைவுக் கருத்தடிப்படையிலேயே, வாரணம் என்பது கேடகத்தையும் சங்கையும் குறிக்கும். (வ.மொ.வ.86).

வாரணை *vāraṇai,* பெ.(n.) தடை (பிங்.); obstruction.

வாரணையம் *vāraṇaiyam,* பெ.(n.) வாரணை (வின்.) பார்க்க; see *vāraṇai*.

வாரத்தண்டு[1] *vārattaṇḍu,* பெ.(n.) வாரத்தளகு (சங்.அக.) பார்க்க; see *vārattaḷagu.*

*[வாரம் + தண்டு]*

வாரத்தண்டு[2] *vāra-t-taṇḍu,* பெ.(n.) கறிமுள்ளி; a thorny-shrub-solamum jacquini.

வாரத்தளகு *vārattaḷagu,* பெ.(n.) கத்திரிவகை; Indian night shade.

வாரத்தி *vāratti,* பெ.(n.) வாத நாராயணன்; a tree-Delonix elata.

வாரத்திட்டம் *vāra-t-tiṭṭam,* பெ.(n.) 1. மேல்வாரங் குடிவாரங்களின் பிரிப்பொழுங்கு; adjustment of the shares of the produce, as *mēlvāram* and *kuḍivāram.* 2. மேல் வாரதார்க்கும் குடிவாரதார்க்கும் உரிய விளை பங்கின் விவரங்குறித்துக் ஊர் கணக்கன் வைக்கும் கணக்கு; a register kept by the village accountant of the respective shares of the produce assignable to the cultivators and proprietors.

*[வாரம் + திட்டம்]*

வாரத்துக்குவளர்-த்தல் *vārattukku-vaḷar,* 4 செ.குன்றாவி. (v.t.) விற்பதாற் கிடைக்கும் ஆதாயத்தைச் சொந்தக் காரனோடு பகுத்துக் கொள்வதாக ஒப்புக் கொண்டு கோழி, ஆடு, பன்றி முதலியன வளர்த்தல் (வின்.); to raise, as fowls, pigs, goats etc. on an agreement to share the proceeds of the sale with the owners.

*[வாரத்திற்கு + வளர்-,]*

வாரத்துண்டு *vāra-t-tuṇḍu,* பெ.(n.) 1. குடிவாரத்தினின்று கழித்துச் அரசு அல்லது நில உரிமையாளரின் மேல்வாரத்தோடு கூட்டும் சிறுபகுதி (R.T); deduction made from the cultivator's share and added to that of the land lord or the government (R.T). 2. நில உரிமையாளர்க்குரிய மேல் வாரத்தின் எச்சம் (வின்.); unrealised balance of the landlord's share of the produce.

*[வாரம் + துண்டு]*

வாரநாரி *vāra-nāri,* பெ.(n.) விலைமகள் (யாழ்.அக.); prostitute.

*[வாரம் + நாரி. நாரி = skt]*

வாரநாள் *vāra-nāḷ,* பெ.(n.) நாள்; a day of the weak.

*[வாரம் + நாள்]*

வாரப்பட்டா *vāra-p-paṭṭā,* பெ.(n.) தவசக்குத்தகையாகக் கொடுக்கும் பட்டா; rent-deed or *paṭṭā* fixing the amount of rent in kind.

*[வாரம் + பட்டா]*

வாரப்பட்டை *vāra-p-paṭṭai,* பெ.(n.) மேற் கூரை தாங்கும் உத்தரம்; bressummer, beam placed horizontally to support the roof above.

*[வாரம் + பட்டை]*

வாரப்படு-தல் *vāra-p-paḍu,* 4 செ.கு.வி. (v.i.) உருக்கங் கொள்ளுதல் (யாழ்.அக.); to show mercy; to pity.

வாரப்பதிகம் *vāra-p-padigam,* பெ.(n.) சிறுமணவூர் முனுசாமி முதலியார் என்பவரால் 19-20ஆம் நூற்றாண்டில் இயற்றப்பெற்ற நூல்; a book written by *Munusāmi-mudaliyār* cirumanavur in 19-20th century.

*[வாரம் + பதிகம்]*

வாரப்பற்று *vāra-p-paṟṟu,* பெ.(n.) அரசு அல்லது நில உரிமையாளர் வாரமாகத் தவசத்தைப் பெற்றுக் கொள்ளுமாறு விடும் நிலம் (C.G.); lands held on the sharing tenure, a share of the produce being received by the government or landlord in kind, op. to *tirvai-p-paṟṟu.*

வாரப்பாடு *vāra-p-pāḍu,* பெ.(n.) 1. அன்பு; love. *'அவனுக்கு அவளிடத்தில் வாரப்பாடு'.* 2. உருக்கம் (யாழ்.அக.); pity, mercy. 3. ஒருபுடைச் சார்பு; partiality, bias, prepossesion.

*[வாரம் + பாடு]*

வாரப்பிரிவு *vāra-p-piri vu,* பெ.(n.) மேல்வாரங் குடிவாரங்களின் பிரிவு; division of shares in cultivation.

*[வாரம் + பிரிவு]*

வாரப்புன்செய் *vāra-p-punšey,* பெ.(n.) வரியிடத்தக்க புன்செய்ப் பயிர் (P.T.L); dry crops liable to be taxed.

*[வாரம் + புன்செய்]*

வாரபுசை *vārapušai,* பெ.(n.) வாரணாபுசை (சங்.அக.) பார்க்க; see *vāraṇāpušai.*

வாரம்¹ *vāram,* பெ.(n.) 1. மலைச்சாரல் (பிங்.); mountain slope. *"வாரமதெங்கும்..... பண்டிகளூர" (இரகு. திக்கு. 258).* 2. தாழ் வாரம் (வின்.); verandah of a house. 3. பக்கம் (சிலப்.5,136, அரும்.); side. 4. சொல்லொழுக்கமும் இசையொழுக்கமு முடைய இசைப்பாட்டு (சிலப்.3,67,அரும்.); mellifluous song. 5. கலிப்பா உறுப்புக்களு ளொன்று (தொல். பொருள். 464.); a member of *Kali Verse.* 6. பின்பாட்டு; song of an accompanist sung as a relief to the chief singer. *"தோரிய மடந்தை வாரம் பாடலும்" (சிலப்.6,19).* 7. தெய்வப் பாடல்; song in praise of a deity. *"வாரமிரண்டும் வரிசையிற் பாட" (சிலப்.3, 136).* 8. கூத்து வகை (வின்.); *(Nāṭya)* a kind of dance.

**ma.** *vāram;* **ka.** *vāra, vāre.*

*[வார் → வாரம். (வே.க.பக்.108)]*

வாரம்² *vāram,* பெ.(n.) 1. உரிமை (யாழ்.அக.); proprietorship, ownership. 2. குடியிறை; tax. *"நடையல்லா வாரங்கொண்டார்" (கம்பரா.மாரீச.180).* 3. வாடகை (வின்.); hire, rent. *'நான் அதை வாரத்துக்கு வளர்க்கிறேன்'.* 4. தவசக் கட்டுக்குத்தகை; lease of land for a share of the produce. 5. மேல்வாரக் குடிவாரங்களாகிய விளைபங்கு; share of a crop or the produce of a field, of two kinds, viz. *mēlvāram, kuḍi vāram.*

6. பங்கு; share, portion. *"வல்லோன் புணரா வாரம் போன்றே" (தொல். பொருள். 622, உரை.).* 7. பாதி (தொல்.பொ.464, உரை); half, moiety. 8. அன்பு; love. *"தாளிணைக்கொரு வாரமாகுமென் னெஞ்சமே" (திவ். பெருமாள் 2, 7).* 9. ஒரு பக்கச் சார்பு; partiality. *"நட்டார்க்கு வாரம்" (சிறுபஞ்.85).* 10. தடை; impediment, obstacle. *"வாரமென்னினிப் பகர்வது" (கம்பரா. அயோத். மந்திரப். 39.).* 11. திரை (யாழ்.அக.); screen. 12. வாயில் (யாழ்.அக.); doorway. 13. திரள் (யாழ்.அக.); multitude, crowd. 14. கடல் (பிங்.); sea. 15. பாத்திரம் (யாழ்.அக.); vessel. 16. தடவை; turn, time. *"செபிக்க மிருத்துஞ் செய மேழு வாரம்" (சைவச. பொது. 287).* 17. வேதச் சந்தை; *vēdic* chant or recitatioin. *"வாரமோதும் பரிசு" (T.A.S.i,8). "மண்டப மொண்டொளி யனைத்தும் வாரமோத" (திவ். பெரியதி. 2, 10, 5).*

**ma.** *vāram*, **ka.** *vāra*; **Kod.** va-ra; **Te.** *vāra-kamu*

வாரம்[3] *vāram*, பெ.(n.) 1. வரம்பு; boundary, limit. 2. நீர்க்கரை; bank, shore.

*[வார் → வாரம்]*

வாரம்[4] *vāram*, பெ.(n.) தூண் (பெருங். உஞ்சைக். 58, 46); post, pillar.

*[வார் → வாரம்]*

வாரம்[5] *vāram*, பெ.(n.) யானை; elephant.

வாரம்படு-தல் *vāram-paḍu*, 4 செ.கு.வி. (v.i.) ஒரு பக்கஞ் சாருதல்; to be prejudiced or biassed, to show partiality. *"வாரம்பட்டுழித் தீயவு நல்லவாம்" (சீவக.888).*

*[வாரம் + படு-,]*

வாரம்பாடு-தல் *vāram-pāḍu*, 4 செ.கு.வி. (v.i.) பின்பாட்டுப் பாடுதல்; to sing in accompaniment. *"வாரம்பாடுந் தோரிய மடந்தையும்" (சிலப்.14,155).*

"வாரம் பாடுதல் என்பது பாடலைப் பாடும் ஒருமுறையாகும். வாரம் பாடுதல் மிகத் தொன்மைக் காலத்திலிருந்து தொடர்ந்து வருகிறது. நாயன்மார்கள் வாரம் பாடும் முறையைப் பெரிதும் வளர்த்துப் பேணியவர்கள்.

வாரம்பாடும்முறை

பாடுதுறையிலே முதலில் ஒருவர் அமைத்துக் கொண்டு பாடும் பாடலின் தடைவேகத்தைப் பின்னர் பாடும்போது இரட்டிப்பு வேகத்தில் பாடுவது வாரம் பாடுதல் எனப்பட்டது. அது வாரம் புணர்த்தல் என்றும் அழைக்கப்பட்டது. இன்று நடைமுறையில் அது 'ஒன்றாங்காலம் பாடுதல்', 'இரண்டாங்காலம் பாடுதல்' என்று கூறப்படுகிறது. ஒரு எ-டு. தாள எண்ணிக்கைகள் எட்டுக்குள் பாடிய ஒரு பாட்டு வரியை நாலு எண்ணிக்கைக்குள் பாடி முடிப்பது வாரம் பாடுதல் ஆகும்.

தொல்காப்பிய விளக்கம்

முதல் நூல் இயற்றியுள்ளதை நன்கு அறிந்து கொண்டு அம்முதல் நூலினின்றும் வழிநூல் செய்பவன் கைக்கொள்ளவேண்டிய நெறிகளைத் தொல்காப்பியர் வாரம் புணர்த்தும் நெறிகளுடன் ஒப்பிட்டுக் காட்டியுள்ளார். ஒன்றை விளக்குவதற்குக் கூறப்படும் உவமையானது அனைவர்க்கும் தெரிந்ததாய் இருத்தல் வேண்டும். எனவே தொல்காப்பியர் காலத்தில் வாரம் புணர்த்திப் பாடும் முறை அனைவர்க்கும் தெரிந்ததாய், நடைமுறையில் இருந்ததாய் பெரும் வழக்குப் பெற்றுப் பரவியதாய்த் திகழ்ந்தது." - இசையறிஞர் வீ.ப.கா.சுந்தரம். செந்தமிழ்ச் செல்வி. சிலம்பு 60 ஆனி - பரல் 11 பக்கம். 473-475.

வாரம்பிரி-த்தல் *vāram-piri-*, 18 செ. குன்றாவி. (v.t.) விளைபடி நெல் முதலியவற்றைக் குடிவார மேல்வார முதலிய பங்குப்படி பிரித்தல்; to divide the harvest between the cultivator and the landlord.

**வாரம்வை-த்தல்** *vāram-vai-,* 4 செ.கு.வி. (v.i.) விருப்பப்படுதல்; to be attached to, to have a strong liking for, to show concern. *"என் கண்ணே வாரம் வைத்துக் காத்தனை" (தாயு.பராபர.227).*

**வாரமரக்கலம்** *vāra-marakkalam,* பெ.(n.) ஒரு வகை வரி (புதுக்.கல்.149); a kind of tax.

**வாரமாதர்** *vāra-mādar,* பெ.(n.) பொது மகள்; harlot, prostitute. *"வாரமாதர் போன்ற" (மேரு மந்.வைசயந்.17).*

**வாரமிருத்தல்** *vāram-iruttal,* பெ.(n.) வேதத் தேர்விற்காக கூடும் வேத வித்துக்களின் அவை (நாஞ்.); gathering of *vēdic* scholars for being examined in the *vēdās.*

**வாரமிழந்தான்** *vāram-iḻandān,* பெ.(n.) வடமேற்கில் உண்டாம் மின்னல் (J.N.); lightning on the north-west.

*[வாரம் + இழந்தான்]*

**வாரமுச்சலிக்கை** *vāramuccalikkai,* பெ.(n.) நிலத்திற்குரியவர் பயிரிடுபவரிடம் எழுதி வாங்கிக் கொள்ளும் உடன்படிக்கை; a written agreement executed by tenant to the landlord.

*[வாரம் + முச்சலிக்கை]*

**வாரமூலி** *vāra-mūli,* பெ.(n.) 1. வாரத்திற் கொருமுறை வயிற்றுத் தீ தணிதற்காக வேண்டி சித்தர்கள் சாப்பிடும் மூலிகை; a medicinal drug taken by siddhars once a week to appease their hunger.

*[வாரம் + மூலிகை → மூலி]*

**வாரயம்** *vārayam,* பெ.(n.) பூடுவகை (சங்.அக.); a prostrate herb.

**வாரல்வலை** *vāral-valai,* பெ.(n.) வலை வகை; a kind of net.

*[வாரல் + வலை. (வலைஉயிரிகளைச் சூழ்ந்து அகப்படுத்தும் கயிற்றுக் கருவி)]*

**வாரவட்டை**[1] *vāra-vaṭṭai,* பெ.(n.) வாரை[1],3 பார்க்க; see *vārai.*

**வாரவட்டை**[2] *vāravaṭṭai,* பெ.(n.) பாம்புச்சட்டம்; bressummer.

*[வாரம் + வட்டை]*

**வாரவாணம்** *vāra-vāṇam,* பெ.(n.) 1. பஞ்சு பெய்து தைத்த மெய்ச் சட்டை (வின்.); quilted Jacket. 2. மார்க்கவசம் (யாழ்.அக.); breast-plate.

**வாரவாணி**[1] *vāra-vāṇi,* பெ.(n.) பொதுமகள் (யாழ்.அக.); harlot.

*[வாரம் + வாணி]*

**வாரவாணி**[2] *vāra-vāṇi,* பெ.(n.) விறலி பார்க்க; see *viṟali.*

*[வாரம் + வாணி]*

**வாரவாரம்**[1] *vāra-varam,* பெ.(n.) கவசம் (சது.); armour.

**வாரவிலாசினி** *vāra-vilāśiṇi,* பெ.(n.) வாரமாதர் பார்க்க; see *vāra-mādar.*

*[வாரம் + விலாசினி]*

**வாரளமதாடி** *vāraḷa-madāḍi,* பெ.(n.) வெள்ளூமத்தை; white dhatura-Dhatura bearing white flowers - Dhatura alba.

**வாராக்கதி** *vāra-k-kadi,* பெ.(n.) வீடுபேறு, வானுலகு; heaven, as the place from which there is no return. *"வாராக்கதி யுரைத்த வாமன்" (சீவக. 1247).*

வாராக்காலம் *vārā-k-kālam,* பெ.(n.) எதிர்காலம்; future tense. *"வாராக் காலத்தும் நிகழுங் காலத்தும், ஓராங்கு வரூஉம் வினைச்சொற்கிளவி, இறந்த காலத்துக் குறிப்பொடு கிளத்தல், விரைந்த பொருள என்மனார் புலவர்" (தொல். சொல். வினை. 44).*

*[வாரா + காலம்]*

வாராகரம் *vār-āgaram,* பெ.(n.) கடல்; sea. *"வாராகர மேழுங்குடித்து" (திருப்பு.1035).*

வாராகி *vārāgi,* பெ.(n.) ஓர் கிழங்கு; a tuber.

வாராங்கனை *vārāṅganai,* பெ.(n.) பொதுமகள்; harlot, prostitute.

வாராசனம் *vārāšanam,* பெ.(n.) நீர்க்குடம் (யாழ்.அக.); water-pot.

வாராடை *vārāḍai,* பெ.(n.) தோல்வார்; leather strap.

*[வார் + ஆடை]*

வாராததனால்வந்ததுமுடித்தல் *vārā-dadanāl-vandadu-muḍittal,* பெ.(n.) ஒரு பொருண்மைக்கு வேண்டும் இலக்கணம் நிரம்ப வாராததோர் நூற்பாலானே அங்ஙனம் வந்த பொருண்மைக்கு வேண்டும் முடிபு கொள்ளுந் தந்திர வுத்திவகை (தொல். பொருள். 666); a literary device by which the sense of a *šūtra* defectively expressed is rendered complete.

வாராந்தர *vārāndara,* பெ.(n.) கிழமைக்கு ஒரு முறையான; weekly. '*வாராந்தரப் பரிசுச் சீட்டு*'.

வாராந்தரி *vārāndari,* பெ.(n.) கிழமைத் தாளிகை; weekly journal.

வாராமற்பண்ணு-தல் *vāramar-paṇṇu,* 5 செ.குன்றாவி. (v.t.) மனப்பாடஞ் செய்தல் (கொ.வ.); to get by heart.

வாராவதி *vārā-vadi,* பெ.(n.) ஆற்றின் குறுக்காக நீண்ட வாரையால் அமைக்கப் பெற்ற பாலம்; bridge.

தெ. வாரதி; க. வாராவதி.

*[வாரைவதி → வாராவதி. (மு.தா.பக். 110)]*

வாராவந்தி *vārā-vandi,* பெ.(n.) கட்டாயமாய் வருவது (சங்.அக.); that which comes or occurs of necessity.

வாராவரத்து *vārā-varattu,* பெ.(n.) நேர்மைக்கேடாய் வந்தது (யாழ்.அக.); unjust or inequitable acquisition or income.

வாராவரவு *vārā-varavu,* பெ.(n.) அருமையான வருகை; rare visits. *"வாராவரவாக வந்தருளு மோனருக்கு" (தாயு. பைங்கிளி. 51).*

வாராவாரி *vārā-vāri,* பெ.(n.) மிகுதி (யாழ்.அக.); plenty.

வாராவுலகம் *vāra-v-ulagam,* பெ.(n.) 1. வாராக்கதி பார்க்க; see *vārā-k-kadi.* 2. வீரர் முதலியோர் அடைதற்குரிய விண்ணுலகம்; heaven, hero's heaven. *"வாராவுலகம் புகுத லொன்றென" (புறநா.341).*

வாராவுலகு *vārā-vulagu,* பெ.(n.) வாராக்கதி பார்க்க; see *vārākkadi.* *"வாரா வுலகருள வல்லாய் நீயே" (தேவா. 300, 9).*

வாரானை *vāraṉai,* பெ.(n.) பிள்ளைத் தமிழில் ஆண் அல்லது பெண் குழந்தையைத் தன்னிடம் வருக என்று தாய் முதலியோர் அழைப்பதைக் கூறும் பருவம் (பிங்.); a section of *piḷḷai-t-tamil,* in which an one year old child is described as being invited by its mother and others to come to them, one of ten *āṉ-paṟ-piḷḷai-t-tamil* or *peṇ-pāṟ-pillai-t-tamil.* *"மாற்றரிய முத்தமே வாரானை" (வச்சணந். செய்.8).*

வாரானைப்பருவம் *vāraṉai-p-paruvam,* பெ.(n.) வாரானை பார்க்க; see *vāraṉai.*

*[வாரானை + பருவம்]*

வாரி[1] *vāri,* பெ.(n.) 1. வருவாய் (பிங்.); income, resources. *"புயலென்னும் வாரி" (குறள். 14).* 2. விளைவு; produce. *"மாரிபொய்ப்பினும் வாரி குன்றினும்" (புறநா.35).* 3. தவசம் (யாழ்.அக.); grain. 4.செல்வம் (பிங்.); wealth.

*[வார் → வாரி]*

வாரி[2] *vāri,* பெ.(n.) 1. மூட்டைகளை இறுக்கிக் கட்ட உதவும் கழி (இ.வ.); pole for tightening a package or pack. 2. கூரை முனையில் வைத்துக் கட்டுங் குறுக்குக் கழி; lath tied lengthwise at the edge of a thatched roof. 3. கூரையினின்று வடியும் நீரைக் கொண்டு செல்லுங் கால்; channel for draining off the rain water from a roof, water way. 4. தோணிப் பலகை (வின்.); plank across a dhoney. 5. மடை (வின்.); sluice.

**ma.** *vāri,* **Tu.** *bāri.*

*[வார் → வாரி]*

வாரி[3] *vāri,* பெ.(n.) 1. சீப்பு; comb. 2. குப்பை வாருங் கருவி; rake.

*[வார் → வாரி]*

ஒ.நோ: சிக்குவாரி, சிணுக்குவாரி.

வாரி[4]-த்தல் *vāri,* 11 செ.குன்றாவி. (v.t.) 1. தடுத்தல் (சூடா.); to hinder, obstruct. 2. ஆணையிட்டுக் கூறுதல் (யாழ்.அக.); to asseverate, swear. 3. நடத்துதல்; to conduct, drive, as a horse. *"பரிமா வாரித்த கோமான்" (இறை.13, உரை, பக். 91).*

வாரி[5] *vāri,* பெ.(n.) 1. தடை (சூடா.); impediment, obstruction. 2. மதிற்சுற்று (பிங்.); wall, fortification. *"வடவரை நிவப்பிற் சூழ வாரியாப் புரிவித்து" (கந்தபு.அசுரர் யாக.36).* 3. செண்டு வெளி; stadium. *"குஞ்சரம் வாரியுள் வளைத்தவே" (சீவக.275).* 4. பகுதி (பிங்.); portion.

*[வார் → வாரி]*

வாரி[6] *vāri,* பெ.(n.) 1. நீர் (பிங்.) (தக்கயாகப்.67, உரை); water. 2. வெள்ளம்(பிங்.); flood. *"வணிக மாக்களை யொத்ததவ் வாரியே" (கம்பரா. ஆற்றுப்.7).* 3. கடல் (பிங்.) (தக்கயாப். 67, உரை); sea. 4. நீர் நிலை (பிங்.); reservoir of water. 5. நூல் (அக.நி.); literary work. 6. கலைமகள் (யாழ்.அக.); *śarasvatī.* 7. வீணை வகை (சூடா.); a kind of lute. 8. இசைக் குழல் (பிங்.); flute, pipe. 9. யானையகப்படுத்துமிடம்; kheddha. *"வாரிக்கொள்ளா... வேழம்" (மலைபடு.572).* 10. யானை கட்டுங் கயிறு (யாழ்.அக.); rope for tying an elephant. 11. யானைக் கோட்டம்; elephant stable. *"குஞ்சரம்... மதிட்புடை நிலை வாரிகள்" (சீவக.81).*

வார்தல் = ஒழுகுதல். "வார்தல் போகல் ஒழுகல் மூன்றும் நேர்பும் நெடுமையும் செய்யும் பொருள" (தொல்.20).

*[வார் → வாரி = நீர், வெள்ளம், கடல், நீர்நிலை. வார் = நீர்.]*

*"வாராயிர முகமா நுகர்மஞ்சு" (பாரத. அருச்சுனன்றவ. 159) – (பாவாணரின் வ.மொ.வ.85).*

வாரி[7] *vāri*, பெ.(n.) 1. வாயில் (பிங்.); entrance. 2. கதவு (உரி.நி.); door. 3. வழி (பிங்.); path.

வாரி[8] *vāri*, பெ.(n.) முறையில் என்னும் பொருளில் வருஞ் சொல்; suffix meaning according to. *"வகுப்புவாரி".*

வாரி[9] *vāri*, பெ.(n.) 1. உட்காதிலுள்ள ஓர் குழி; vastibule.

வாரிக்காய்ச்சல் *vāri-k-kāyccal*, பெ.(n.) கொள்ளை நோயாகிய காய்ச்சல் (யாழ்.அக.); epidemic fever.

*[வாரி + காய்ச்சல்]*

வாரிக்காலன் *vāri-k-kālaṉ*, பெ.(n.) கால்நடை (இ.வ.); cattle.

வாரிக்கொண்டுபோ–தல் *vārikkoṇḍu-pō*, 8 செ.குன்றாவி. (v.t.) ஒரு சேர அழித்தல்; to sweep away; to destroy wholesale, as an epidemic.

*[வாரி + கொண்டு + போ–,]*

வாரிக்கொண்டுபோதல் *vāri-k-koṇḍu-pōdal*, பெ.(n.) கொள்ளை நோயால் இறத்தல்; to be carried away in pestilence.

*[வாரி + கொண்டு + போதல்]*

வாரிகம்[1] *vārigam*, பெ.(n.) பொன்முசுட்டை (நாமதீப.291.) ; buckler-leaved moon-seed.

வாரிகம்[2] *vārigam*, பெ.(n.) தாமரை; lotus.

*[வார் → வாரிகம்]*

வாரிகிருமி *vāri-kirumi*, பெ.(n.) அட்டை (யாழ்.அக.); leech.

*[வாரி + கிருமி. **Skt.** = கிருமி.]*

வாரிகேசம் *vāri-kēšam*, பெ.(n.) வெட்டிவேர்; khus-khus-vetiveria zizanioides alias andropogon muricatus.

வாரிச்சி *váricci*, பெ.(n.) வரிக்கூத்து வகை (சிலப். 3, 13, உரை, பக். 88.); a kind of masquerade dance.

*[வரி → வாரி → வாரிச்சி]*

வாரிசரம் *vāri-šaram*, பெ.(n.) மீன் (யாழ்.அக.); fish.

*[வாரி + சரம்]*

வாரிசன் *vārišaṉ*, பெ.(n.) திருமால் (யாழ்.அக.); *Visṇu.*

*[வாரி + ஈசன் → வாரீசன் → வாரிசன்]*

வாரிசாதம் *vārišādam*, பெ.(n.) தாமரை; lotus. *"வாரிசாதக் காலை மலரென மலர்ந்த முகமும்" (பாரத. பதினேழா. 247).*

வாரிசாமரம் *vāri-šāmaram*, பெ.(n.) நீர்ப்பாசி (சங்.அக.); moss.

வாரிசாலயன் *vārišālayaṉ*, பெ.(n.) நான்முகன் (தக்கயாகப். 67,–பி.ம்); *Brahmā.*

வாரிசாலையன் *vāri-šāl-aiyaṉ,* பெ.(n.) வருணன் (தக்கயாகப். 67) ; *Varuṇa.*

வாரிசை *vārišai,* பெ.(n.) செந்நாய்; a ferocious dog.

வாரிசோளி *vāri-šōḷi,* பெ.(n.) கதிர்க் காந்தக் கல்; sun magnetic stone.

*[வாரி + சோரி]*

வாரித்திரம்[1] *vārittiram,* பெ.(n.) சகோரப்புள் (யாழ்.அக.); shepherd koel.

வாரித்திரம்[2] *vārittiram,* பெ.(n.) ஓலைக்குடை (சங்.அக.); Umbrella of palm leaves.

வாரித்துறை *vāri-t-turai,* பெ.(n.) கடற்றுறை; sea-port.

*[கடல் + துறை]*

வாரிதம்[1] *vāridam,* பெ.(n.) மேகம்; rain-cloud, as giving water. *"வாரிதத்தின் மலர்ந்த கொடைக்கரன்" (யாசோதா. 1, 4).*

வாரிதம்[2] *vāridam,* பெ.(n.) தடை (யாழ்.அக.); obstacle.

வாரிதி[1] *vāridi,* பெ.(n.) கடல்; ocean. *"எழுவாரிதி கழியப்பாய" (தக்கயாகப். 269).*

வாரிதி[2] *vāridi,* பெ.(n.) அமுரி; urine.

வாரிதித்தண்டு *vāridi-t-taṇḍu,* பெ.(n.) பவளம் (சங்.அக.); coral.

*[வாரிதி + தண்டு]*

வாரிதிநஞ்சு *vāridi-nañju,* பெ.(n.) கடல் நுரை; bone of cuttle fish.

*[வாரிதி + நஞ்சு]*

வாரிதிநாதம் *vāridi-nādam,* பெ.(n.) 1. சங்கு; conch. 2. கல்லுப்பு; rock salt.

*[வாரிதி + நாதம்]*

வாரிதிவிந்து *vāridi-vindu,* பெ.(n.) கடனுரை (யாழ்.அக.); cuttle-bone.

வாரிநாதம் *vāri-nādam,* பெ.(n.) 1. கடல்; ocean. 2. கீழுலகம்; the nether world. 3. மேகம்; cloud.

வாரிநாதன் *vāri-nādaṉ,* பெ.(n.) வருணன் (யாழ்.அக.); *Varuṇa.*

வாரிநிதி *vāri-nidi,* பெ.(n.) கடல் (யாழ்.அக.); ocean.

*[வாரி + நிதி.* ***Skt.*** *= நிதி.]*

வாரிப்போதல் *vāri-p-pōdal,* பெ.(n.) கொள்ளை நோயில் சாதல்; to die in epidemic diseases such as cholea, plague etc.

*[வாரி + போதல்]*

வாரிப்பிரசாதம் *vāri-p-pirašādam,* பெ.(n.) தேற்றா (சங்.அக.); clearing-nut-tree.

*[வாரி +* ***Skt.*** *prašādha > த. பிரசாதம்]*

வாரிப்பிரவாகம் *vāri-p-piravāgam,* பெ.(n.) 1. நீர்ப்பெருக்கு (யாழ்.அக.); flood. 2. அருவி; waterfall.

*[வாரி +* ***Skt.*** *pravāha > த. பிரவாகம்]*

வாரிபர்ணி *vāriparṇi,* பெ.(n.) வள்ளை (சங்.அக.); creeping bindweed.

வாரிபாணி *vāri-pāṇi,* பெ.(n.) வள்ளைக் கீரை; a variety of greens-convolvulus ripens.

*[வாரி + பாணி]*

வாரியப்பெருமக்கள் *vāriya-p-perumakkaḷ,* பெ.(n.) ஊராளும் அவையோர்; members of a village assembly. *"ஊரமை செய்யும் வாரியப் பெருமக்களோம்" (S.I.I.i.117).*

*[வாரியம் + பெருமக்கள்]*

வாரியம்[1] *vāriyam,* பெ.(n.) வங்கமலை; mountain containing lead ore.

வாரியம்[2] *vāriyam,* பெ.(n.) மேல் உசாவுகைச் செய்யும் அலுவல்; office of supervision. *"ஸ்ரீ வைஷ்ணவ வாரியஞ்செய்கிற அரட்ட முக்கிதாசனும்" (S I.I.iii.80).*

வாரியன்[1] *vāriyan,* பெ.(n.) 1. மேல் உசாவுகைச் செய்வோன்; supervisor. *"வாரியர் இருவரும் கரணத்தானுங்கூடி" (T.A.S II,i,7). "வாரியர் விரைவிற் சென்று" (திருவாத. பு. மண். 19).* 2. களத்து நெல்லைச் சரியாகக் குவித்துச் சாணிப்பாற் குறியிடச் செய்து மேற்பார்க்கும் அலுவலர் (Rd.M.305); supervising officer who sees that the grain at the threshing-floor is properly heaped up and sealed with cowdung marks. 3. களத்தில் நெல்லளப்பதற்காக அதனைக் குவித்துக் கொடுப்பவன்; one who heaps up grain on the threshing-floor for measuring, Rd. 4. பள்ளரிற் சாதி நிகழ்ச்சிகளுக்கு இனத்தாரை அழைப்பவன் (இ.வ.); *palla* messenger who summons the people of his caste to attend caste meeting, festival, funerals etc.

*[வாரியம் → வாரியன்]*

வாரியன்[2] *vāriyan,* பெ.(n.) குதிரைப்பாகன்; horseman. *"அப்புரத்தை குதிரையாக நீ அரசவாரியனாய்" (கலித்.31, உரை).*

வாரியிறை-த்தல் *vāri-y-iṟai-,* 4 செ. குன்றாவி.(v.t.) 1. சிதறச் செய்தல்; to scatter. 2. வீணாக்குதல்; to waste. 3. மிகுதியாகக் கொடுத்தல்; to give liberally.

*[வாரி → இறை-,]*

வாரியுளுயர்நிலம் *vāriyuḷ-uyar-nilam,* பெ.(n.) கோட்டை மதிலின் உள்ளிடமாகச் சுற்றி வருவதற்குரிய மேடான ஒடுக்கு வழி (பிங்.); high ground within the fort, adjoining its walls.

*[வாரியுள் + உயர்நிலம்]*

வாரியுற்பவம் *vāri-y-uṟpavam,* பெ.(n.) தாமரை (யாழ்.அக.); lotus.

*[வாரி + **Skt.** urphava > த. உற்பவம்]*

வாரியோட்டு *vāri-y-ōṭṭu,* பெ.(n.) நீரோடை; stream, canal. *"வாரியோட்டில் வலாகரித் திட்ட போல்" (மேருமந்.652).*

*[வாரி + ஒடு → ஒட்டு]*

வாரிரசிதம் *vāri-rašidam,* பெ.(n.) வெள்ளிமணல் (சங்.அக.); silvery sand.

*[வாரி + **Skt.** racithā > த. ரசிதம்]*

வாரிரதம் *vāri-radam,* பெ.(n.) தெப்பம் (யாழ்.அக.); raft, as in a floating, boat festival.

*[வாரி + **Skt.** rathā > த. ரதம்]*

வாரிராசி *vāri-rāši,* பெ.(n.) கடல் (யாழ்.அக.); ocean.

*[வாரி + **Skt.** rāsi > த. ராசி]*

வாரிருகம் *vārirugam,* பெ.(n.) தாமரை (சங்.அக.); lotus.

**வாரிவளை-த்தல்** *vāri-vaḷai-,* 4 செ. குன்றாவி. (v.t.) ஒருசேரத் திரட்டுதல்; to encompass, to gather togather, to take in a sweep. *'வாரி வளைத்துச் சாப்பிடுகிறான்'.*

*[வாரு + வளை-,]*

**வாரிவாகம்** *vāri-vāgam,* பெ.(n.) மேகம் (சங்.அக.); cloud.

*[வாரி + **Skt.** vāha > த. வாகம்]*

**வாரிவிடு[1]-தல்** *vāri-viḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) வாரியிறை-, 3 பார்க்க; see *vāri-y-iṟai.*

*[வாரு + விடு-,]*

**வாரிவிடு[2]-தல்** *vāri-viḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) மிகுதியாகப் புனைந்துரைத்தல்; exaggiration.

*[வாரி + விடு-,]*

**வாரிழை** *vāriḻai,* பெ.(n.) அடையாள இழை; identification thread.

**வாரீசம்[1]** *vārīšam,* பெ.(n.) 1. வாரிசாதம் (சங்.அக.) பார்க்க; see *vāri-šādam.* 2. சிந்தாமணி (நாமதீப.385); a mythical gem.

*[வார் + **Skt.** ešhā > த. ஈசம்]*

**வாரீசம்[2]** *vārīšam,* பெ.(n.) கடல் (சங்.அக.); ocean.

**வாரு[1]-தல்** *vāru,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. அள்ளுதல்; to take by handfuls, to take in a sweep; to scoop. *"உறியொடு வாரியுண்டு" (கம்பரா. ஆற்றுப். 15).* 2. ஆவலோடு கொள்ளுதல்; to take in or grasp with avidity. *"வாரிக் கொண்டுன்னை விழுங்குவன் காணில்" (திவ். திருவாய். 9, 6, 10).* 3. தொகுத்தல்; to gather. *"கைவளம் வாரினை கொண்டு வரற்கு" (பு, வெ.9, 29).* 4. மிகுதியாகக் கொண்டு செல்லுதல்; to remove, carry off in great numbers, as plague, flood, etc. 5. கவர்தல் (திவா.); to snatch away. *"மாதர் வனைதுகில் வாரு நீரால்" (கம்பரா. ஆற்றுப். 15).* 6. திருடுதல் (யாழ்.அக.); to rob, steal. 7. தோண்டி யெடுத்தல்; to dig and take up. *"வள்ளி வாரிய குழியின்" (சீவக.1565).* 8. கொழித்தல் (திவா.); to winnow. 9. அரித்தல்; to sift, as with a sieve or by immersing in water. *"வாராதட்ட வாடூன் புழுக்கல்" (பெரும்பாண். 100).* 10. மயிர் முதலியன சீவுதல்; to comb, as the hair. *"கோதி வாரி முடித்த பாரிய கொண்டை" (அரிச்.பு.இந்திர.16).* 11. யாழ் நரம்பைத் தடவுதல்; to play upon, as the strings of a lute. *"வாரியும் வடித்து முந்தியு முறழ்ந்தும்" (பொருந.23).* 12. ஓலையை எழுதுதற்குரிய இதழாகச் செம்மை செய்தல்; to trim, as a palmyra leaf to write on. 13. பூசுதல் (நெடுநல்.110, உரை); to plaster, smear.

க. பாரு, பதசு; ம. வாருக; து. பார்சுனி, பாசுனி, பார்குனி; குருக். பார்னா.

மால்ட். bare.

**வாரு** *vāru,* பெ.(n.) திரளாய் மக்கள் பெருவாரியில் சாதல்; to sweep off or remove people in large numbers out of the world.

**வாருக்கதிரோன்** *vāru-k-kadirōṉ,* பெ.(n.) ஆகாச கருடன்; a twiner sky root-bryonia epigea.

*[வாரு + கதிரோன்]*

வாருகம் *vārugam,* பெ.(n.) 1. வெள்ளரி (மலை.); cucumber. 2. பேய்க் கொம்மட்டி (தைலவ.); colocynth.

வாருகல் *vārukal,* பெ.(n.) வாருகோல் பார்க்க; see *vāru-kōl.*

வாருகோல் *vāru-kōl,* பெ.(n.) துடைப்பம் (பிங்.); broom. *"வங்காள மேறுகினும் வாருகோ லொருகாசு மட்டன்றி யதிக மாமோ" (குமரே. சத. 46).*

*[வாரு + கோல்]*



வாருசி *vāruśi,* பெ.(n.) மொச்சை; field bean-dolichos lap.

வாருண்டம்[1] *vārundam,* பெ.(n.) எண்காற்புள் (பிங்.); a fabulous eight-legged bird.

வாருண்டம்[2] *vārundam,* பெ.(n.) 1. பீளை; excretion from the eyes. 2. குறும்பி; excretion from the ears, wax.

வாருணம்[1] *vāruṇam,* பெ.(n.) 1. வருணனுக் குரியது; that which realates to Varuna. 2. மேற்கு (பிங்.); west. 3. பகல் பதினைந்து முழுத்தத்துள் பதின்மூன்றாவது (விதான. குணாகுண 73, உரை) ; the 13th of the 15 divisions of a day. 4. துணைத்தொன்மம் பதினெட்டனுள் ஒன்று (பிங்.); a secondary *Purana*, one of 18 *upa-purāṇam* (Q.V.). 5. கடல் (பிங்.); sea. 6. மார்பிலேனும் வயிற்றிலேனும் வெண்மை நிறமமைந்த குதிரை வகை; a species of horse whose chest or belly is white in colour. *"அந்த மை வண்ணப் பரியின்பேர் வாருணமாம்" (திருவிளை. நரிபரி. 115).* 7. மாவிலிங்கம்; round-berried cuspidate-leaved lingam tree. *"வாருண மென்போதில்" (காஞ்சிப்பு. சிவ. 61).*

வாருணம்[2] *vāruṇam,* பெ.(n.) கள் (பிங்.); spirituous liquor.

வாருணி[1] *vāruṇi,* பெ.(n.) அகத்திய முனிவன் (அபி.சிந்.); sage Agastya.

வாருணி[2] *vāruṇi,* பெ.(n.) 1. வருணன் மகள்; the daughter of *Varuṇa.* *"வருணனாருனை வாருணியென்ன" (காஞ்சிப்பு. வீராட். 44).* 2. வருணனது தேவி; the consort of *Varuṇa.* 3. வாருணம்[2] பார்க்க; see *Vāruṇam.* 4. ஆட்டாங்கொடி (தைலவ.); the *sōma* plant. 5. சதயம் (வின்.); the 24th naksatra. 6. வாருணம்[1] 2 பார்க்க; see *Vāruṇam.*

வாருணி[3] *vāruṇi,* பெ.(n.) பம்பந்திராய் பார்க்க; see *pambañdi-rāy.*

வாருதி *vārudi,* பெ.(n.) நவச்சாரம் (சங்.அக.); sal ammoniac.

வாருதிக்கெங்கை *vārudi-k-keṅgai,* பெ.(n.) கெண்டகச் சீலை; a sacred stone found in Gandaha river.

*[வாருதி + கெங்கை]*

வாருதித்தண்டு *vārudi-t-taṇḍu,* பெ.(n.) பவளம்; coral.

*[வாருதி + தண்டு]*

வாருதிநாதம் *vārudi-nādam,* பெ.(n.) சங்கு; conch.

*[வாருதி + நாதம்]*

வாருதிப்பாசி *vārudi-p-pāśi,* பெ.(n.) கடற்பாசி; sea weeds gracilaris confervoides.

*[வாருதி + பாசி]*

வாருதியோரக்குடிச்சி *vārudi-yōra-k-kuḍicci,* பெ.(n.) சாதிக்காய்; rutmeg, myristica fragrans.

*[வாருதியோரம் + குடிச்சி]*

வாருதிவிந்து *vārudi-vindu,* பெ.(n.) கடல் நுரை; bone of cuttle fish.

*[வாருதி + விந்து]*

வாருவகை *vāru-vagai,* பெ.(n.) தண்ணீர் (சங்.அக.); water.

*[வாரு + வகை]*

வாருளம் *vāruḷam,* பெ.(n.) இலவங்கப் பூ; clove.

வாரூணி *vārūṇi,* பெ.(n.) 1. வாருணி[1] பார்க்க; see *Vāruṇi.* 2. முற்கொழுங்கால் (பூரட்டாதி); the 25th naksatra.

வாரெழுத்தாணி *vār-eḻuttāṇi,* பெ.(n.) எழுத்தாணி வகை (வின்.); a kind of iron style for writing.

வாரை[1] *vārai,* பெ.(n.) 1. மூங்கில்; bamboo. *"வாரை கான்ற நித்திலம்" (கந்தபு.ஆற்று. 5).* 2. காவுதடி (வின்.); pole for carrying loads. 3. வாரி[2] 1, 2 பார்க்க; see *vāri.* 4. கைமரம் (வின்.); rafter, beam. 5. நீண்டு ஒடுக்கமானது; anything long and narrow. 6. கருஞ்சிவப்பு நிறமும் 16 அங்குல வளர்ச்சியுமுள்ள மீன் வகை; flat fish brownish or purplish black attaining 16 in. in length.

*[வார் → வாரை]*

வாரை[2] *vārai,* பெ.(n.) ஆவிரை (சங்.அக.); tanner's senna.

வாரை[3] *vārai,* பெ.(n.) காய் காத்து வாரை, கடம்பு, குளம்புளன் (தேரை–1001).

வாரொழுக்கு–தல் *vār-oḻukku-,* 9 செ.கு.வி. (v.i.) கயிற்றுவலைக் கட்டுதல்; to set nets. *"ஒடியெறிந்து வாரொழுக்கி" (பெரியபு. கண்ணப்ப.75).*

*[வார் + ஒழுக்கு]*

வால்[1] *vāl,* பெ.(n.) 1. இளமை; youth, tenderness. *"தாலப் புல்லின் வால் வெண்டோட்டு" (சிலப். 16, 35).* 2. தூய்மை (பிங்.); purity. *"ஊர்தி வால்வெள் ளேறே" (புறநா. 1).* 3. வெண்மை; whiteness. *"பணிமொழி வாலெயிறு" (குறள். 1121).* 4. நன்மை; goodness. *"வாலிதை யெடுத்த வளிதரு வங்கம்" (மதுரைக். 536).* 5. பெருமை (பிங்.); greatness. *"அரக்கர்தம் வாலிய புரமூன்று மெரித்தான்" (தேவா. 1049, 9).* 6. மிகுதி (சூடா.); abundance. *"வாலிதின் விளைந்தன வைவனம் வெண்ணெல்" (மலைபடு. 115).*

ம. வால்.

*[விள் → வாள் → வால்]*

வால்[2] *vāl,* பெ.(n.) 1. விலங்குகளின் பின்புறம் நீண்டு தொங்கும் உறுப்பு; tail. *"எறிந்தவேல்*

*மெய்யதா வால் குழைக்கு நாய்" (நாலடி, 213).*

2. நீளமானது; anything long or elongated.
3. குறும்ப-ன்-ள்; mischievous person.
4. குறும்பு (இ.வ.); mischief.

மறுவ. வாலம்.

ம. வால்; கோத. வால்ம்; தோட. போச்ம்; க. பால; குட. பாலி; தெ. வாலமு.

வால்³ *vāl,* பெ.(n.) வாலுழுவை பார்க்க; see *vāluluvai.* *"வட்டவாலுடனே கூட்டி" (பாலவா. 774.).*

வால்கரண்டி *vāl-karaṇḍi,* பெ.(n.) வாற்கிண்ணம் (இ.வ.) பார்க்க; see *vaṟ-kiṇṇam.*

வால்கனி *vālkaṉi,* பெ.(n.) மேன் மாடத்தில் முன்புறமாக நீண்டுள்ள அட்டாலை; balcony.

வால்காக்கை *vāl-kākkai,* பெ.(n.) காக்கையினப் பறவையில் ஒருவகை; a kind of crow.

காக்கை இனத்துடன் ஒருவிதத்தில் தொடர்பு இருப்பதால், இது இப்பெயர் கொண்டது. ஆங்கிலத்தில் மாக்பை (magpie) எனப்படும் பறவை வகைக்கு இது நெருங்கின உறவு. வால் காக்கையின் அலகு, காக்கையின் அலகைப் போல் தடித்துக் கறுத்திருக்கும். இது கருந்தலையும், வெள்ளைப் பட்டையுள்ள இறக்கையும், கருமுனை கொண்ட நீண்ட சாம்பல் நிற வாலும், சிவலை உடலும் வாய்ந்தது. அளவில், ஓரடி நீண்டகாலுட்பட ஒரு முழமிருக்கும். காட்டுப் புறங்களிலும் தோப்புக்களிலும் வால்காக்கைகளை இணைகளாகவும், சிறு கூட்டங்களாகவும் காணலாம். இவை பழங்களையும், பூச்சிகளையும், சிறு பல்லிகளையும் மரங்களில் தேடியுண்ணும். பிற பறவைகளின் முட்டைகளைத் திருடித் தின்னும். ரி-ரி-ரி என்ற கரகரப்பும் வெண்கலத்தின் இனிய ஓசையும் கலந்த குரலில் வால் காக்கைகள் சில விதமாக ஒலிக்கும் - கலைக்களஞ்.7.)

மறுவ. அரிகாடை, மூக்குறுணி.

வகைகள் :
1. வால் காக்கை.
2. வெள்ளை வயிற்று வால்காக்கை.



வால்கிண்ணம் *vāl-kiṇṇam,* பெ.(n.) வாற்கிண்ணம் பார்க்க (இ.வ.); see *vaṟ-kiṇṇam.*

வால்சிப்பி *vāl-šippi,* பெ.(n.) சிப்பி முத்து; oyster pearl.

*[வால் + சிப்பி]*

வால்தரகு *vāl-taragu,* பெ.(n.) கால்-நடைகளுக்கு இடும் வரி (இ.வ.); tax on cattle, as calculated at so much per tail.

வால்நட்சத்திரம் *vāl-naṭcattiram,* பெ.(n.) வால்வெள்ளி; comet.

*[வால் +* **Skt.** *nakshatrā > த. நட்சத்திரம்]*



**வால்நறுக்கு** *vāl-naṟukku,* பெ.(n.) ஓலையின் அடிப்புறத்துண்டு (வின்.); ola slip cut off from the lower end of a palm-leaf.

*[வால் + நறுக்கு]*

**வால்நீளம்** *vāl-nīḷam,* பெ.(n.) வால்வீச்சு[2] (S.I.I.iv,86) பார்க்க; see *vāl-vīccu*[2]. *"புழைக்கடை வால்நீளமும்".*

*[வால் + நீளம்]*

**வால்பேரி** *vāl-pēri,* பெ.(n.) காம்பை உடைய மேல் பகுதி பெரிதாகவும் கீழ்ப்பகுதி சிறியதாகவும் இருக்கும் ஒரு வகைப் பேரிக்காய்; pear.

*[வால் + பேரி]*



**வால்மரக்கால்** *vāl-marakkāl,* பெ.(n.) நீண்டு உயரமான அளவில் உள்ள பெரிய மரக்கால், 4 படி; a elevated measure of four small measures capacity.

*[வால் + மரக்கால்]*

**வால்மரம்** *vāl-maram,* பெ.(n.) சுண்ணாம் பரைக்கும் உருளை கோத்த மரம் (கட்டட சா.15) ; long pole attached to the pivot, used in a mill for grinding lime-mortar.

*[வால் + மரம்]*

**வால்மிளகு** *vāl-miḷagu,* பெ.(n.) கொடி வகை (பதார்த்த.953); piper cubeb.

இரட்டை விதையிலைத் தாவரங்களிலே பைப்பரேசியீ என்னும் மிளகுக் குடும்பத்தைச் (த.க.) சேர்ந்த பைப்பர் க்யூபெபா (piper cubeba) என்னும் இனம். இது போர்னியோ, சுமத்ரா, ஜாவா முதலிய தீவுகளில் வளரும் ஒரு கொடி. இதன் கனியை அது முற்றிலும் முதிர்வதற்கு முன்பே பறித்துவிடுவார்கள். அந்தக் காயுடன் அதன் காம்பும் ஒட்டிக் கொண்டிருக்கும். அது வால் போன்றிருப்பதனால் இந்த மிளகு வால் மிளகு எனப்படும். வால் மிளகு சற்றுக் காரமும், சிறிது கசப்பும், நறுமணமும் உள்ளது. இதன் சுவையும் மணமும் நெடுநேரம் நாவிலும் வாயிலும் நிலைத்திருக்கும். இதை வெற்றிலையோடு நறுமணப் பொருளாகப் பயன்படுத்துவதேயன்றி மருந்தாகவும் கையாள் வார்கள். இதை நீரில் வாலை வடித்து எண்ணெய் எடுக்கின்றனர். வால்மிளகை மூச்சு நோய் களுக்கும், நாட்பட்ட தொண்டை வேக்காடு ஆகியவற்றிற்கும் புகை மருந்தாகப் பயன்படுத்து கின்றனர்.

*[வால் + மிளகு]*



**வால்முளைத்தல்** *vāl-muḷaittal,* பெ.(n.) குறும்பு செய்கை; becoming mischievous, as resembling a monkey.

*[வால் + முளைத்தல்]*

வால்முறுக்கு-தல் *vāl-murukku-,* 5 செ. குன்றாவி. (v.t.) தூண்டிவிடுதல்; to provoke, irritate, as an animal twisting its tail.

*[வால் + முறுக்கு-,]*

வால்வரிக்கொடுங்காய் *vāl-vari-k-koḍuṅgāy,* பெ.(n.) வெள்ளரிக்காய் (சிலப். 16, 25, அரும்.); cucumber.

*[வால் + வரி +கொடுங்காய்]*



வால்வீச்சு *vāl-viccu,* பெ.(n.) 1. வாசல் முதல் கொல்லையினெல்லை வரையுள்ள வீட்டின் நீட்சியளவு; measurement from front to rear, as of a house. 2. அகலக் கட்டையாய் நீண்டிருப்பது; that which is long and narrow.

*[வால் + வீச்சு]*

வால்வீச்சுநிலம் *vāl-viccu-nilam,* பெ.(n.) நீளமான வரப்பினை உடைய நிலம்; land with long bund.

*[வால் + வீச்சு + நிலம்]*

வால்வெடி-த்தல் *vāl-veḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) கடுஞ்சினத்தினால் வாலைத் தூக்கி அடித்தல்; to lash the tail in rage, as a beast. *"வால் வெடிப்பனவாகிய சிங்கம்" (சீவக.1902, உரை).*

*[வால் + வெடி-,]*

வால்வெள்ளி *vāl-veḷḷi,* பெ.(n.) வால் நட்சத்திரம் பார்க்க (சங்.அக.); see *vāl-naṭcattiram.*

மறுவ. வால்மீன்.

*[வால் + வெள்ளி]*

வால்வை-த்தல் *vāl-vāi,* 4 செ.கு.வி. (v.i.) 1. வேண்டிய உறுப்புக்களைச் சேர்த்து நிறைவு செய்தல்; to add details, to give finishing touches. 2. மிகுத்துக் கூறுதல்; to exaggerate.

*[வால் + வை-,]*

வாலகம் *vālagam,* பெ.(n.) விலங்கின் வால் (வின்.); tail.

*[வால் + அகம்]*

வாலகரப்பன் *vāla-karappaṉ,* பெ.(n.) குழந்தை அல்லது சிறுவர்களுக்கு வரும் ஒரு வகைத் தோல்நோய்; a skin disease affecting infants and children.

*[வால + கரப்பன்]*

வாலகருப்பிணி *vāla-karuppiṇi,* பெ.(n.) கன்னி வயதில் கருக்கொண்டவள்; pregnancy in teenage.

*[வால + கருப்பிணி]*

வாலகாரம் *vāla-kāram,* பெ.(n.) கரு விழியில் புகை படிந்தது போல் உண்டாகும் ஒரு வகைக் கண்ணோய்; an eye disease.

*[வால + காரம்]*

வாலகாசம் *vāla-kāšam,* பெ.(n.) காலையில் பார்வைப் புகைச்சலுண்டாகி சாமம் கழிந்து நீங்கி, ஒரு தருணம் பார்வை நீல நிறமாகவும், பிறகு வேறுவிதமாயும் காணப்படும் வெள்விழி சதை வளர்ந்து பார்வை நீர் நிறமாகவும் தோற்றுமோர் வகைக் கண்ணோய்; an eye disease in which the vision in the morning will be dim but becomes clear with in three hours, fleshy growth appears in the white coat, the colour of the vision changes, it affects the youth and hence the name.

*[வால + காசம்]*

வாலசண்டக்காய் *vāla-šaṇḍa-k-kāy* பெ.(n.) பெருந்தும்மட்டி; a large variety of melon-water melon.

*[வால + சண்டக்காய்]*

வாலசத்து *vāla-šattu,* பெ.(n.) சிலாசத்து; mineral said to be oozing out from mountain.

*[வால + சத்து]*

வாலசூரா *vālašūra,* பெ.(n.) 1. மரவகை; fish-poison cedar, walsura. 2. மலை விராலி; ochre flowered fish-poison cedar.

தெ. வாலரசி.

வாலடித்தண்டன் *vālaḍi-t-taṇḍaṉ,* பெ.(n.) சாரைப் பாம்பு; rat snake.

*[வாலடி + தண்டன்]*

வாலதந்திரம் *vāla-tandiram,* பெ.(n.) மருத்துவ நூல்; mid wifery.

*[வால + தந்திரம்]*

வாலதி *vāladi,* பெ.(n.) 1. வால்(பிங்.); tail. *"விரியுரோம வாலதிகளில்" (பாரத. காண்டவ. 18).* 2. யானை வால் (திவா.); tail of an elephant.

வாலதிப்போளம் *vāladi-p-pōḷam,* பெ.(n.) சாம்பிராணி வகை (யாழ்ப்.); gum-myrrh.

வாலநட்டகம் *vāla-naṭṭagam,* பெ.(n.) முசுமுசுக்கை; a climber-bryoni-scabra.

*[வால + நட்டகம்]*



வாலநாள் *vāla-nāḷ,* பெ.(n.) இளமைக்காலம்; younger days.

*[வால + நாள்]*

வாலபாகிகம் *vāla-pāgigam,* பெ.(n.) மொந்தன் வாழை; a variety of plantain.

*[வால + பாகிகம்]*

வாலப்பருதி *vāla-p-parudi,* பெ.(n.) குப்பை மேனி; rubbish plant- acalypha-indica.

*[வால + பகுதி]*

வாலபத்திரம் *vāla-pattiram,* பெ.(n.) கருங்காலி (மூ.அ); ceylon ebony.

வாலபுட்பி *vāla-puṭpi,* பெ.(n.) முல்லை (மலை.); arabian Jasmine.

*[வால + புட்பி. புட்பி = skt.]*

வாலம்[1] *vālam,* பெ.(n.) 1. வால்; tail. *"கட்செவி வாலமும் பணமு மிருங்கையிற் பற்றி" (காஞ்சிப்பு. மணி கண் 14).* 2. தலை மயிர் (வின்.); hair of head. 3. நீண்டு அகலம் குறுகிய துண்டு; long narrow strip. 4. கந்தைத்துணி (யாழ்ப்.); rags, tatters.

*[வார் → வால் → வாலம்]*

ஒ.நோ. நீர் → நீல் (வ.மொ.வ.86)

வாலம்[2] *vālam,* பெ.(n.) எறிபடைவகை; short javelin. *"வாலமுத லாயுதம்" (கம்பரா. ஊர்தே. 69).*

வாலம்[3] *vālam,* பெ.(n.) 1. கந்தை; rag. 2. தலை மயிர்; hair.

வாலமஞ்சாடி *vālamañjāḍi,* பெ.(n.) பழைய வரிவகை (S.I.I.i.108.); an ancient tax .

வாலமனை *vāla-maṉai* , பெ.(n.) அகப்புறத்தமைந்த சிறுவீடு; out house. *"வாலமனை யகத்துச் சார்ந்தான் தலைமகன்" (இறை. 21, உரை, பக். 112).*

*[வாலம் + மனை]*

வாலமாதரை *vāla-mādarai,* பெ.(n.) கொட்டைக் கரந்தை; a porstate plant-sphoeranthus indicus.

*[வால + மாதரை]*

வாலமாலம் *vālamālam,* பெ.(n.) அரிதாரம் (மூ.அ.); yellow orpiment.

வாலமூடிகம் *vālamūḍigam,* பெ.(n.) எலி (சிவதரு. பரிகார. 70); rat,mouse.

வாலரசம் *vāla-racam,* பெ.(n.) சாதி லிங்கத்தின் வடித்த சாறு (வின்.); essence of Vermillon.

*[வாலை + ரசம். ரசம் = skt.]*

வாலரிக்கொடுங்காய் *vālari-koḍuṅ-kāy,* பெ.(n.) வெள்ளரி (சிலப். 16, 25, உரை); cucumber.

*[வால் + அரி + கொடுங்காய்]*

வாலரியுரி *vālari-y-uri,* பெ.(n.) *கிளியூறற் பட்டை* (தைலவ.) பார்க்க; see *kiḷiyūṟaṟ-paṭṭai.*

*[வால் + அரி + உரி]*

வாலருவி *vāl-aruvi,* பெ.(n.) வெண்ணிலை ஊழ்கம் (தியானம்); a form of meditation. *"வாலருவி வாமன்" (சீவக.291).*

*[வால் = வெள்ளை. வால் + அருவி.]*

வாலவாய் *vāla-vāy,* பெ.(n.) மதுரை; Madura, as encircled by a serpent. *"வாலவாய் பொதிந்த மதிமுடித் தனிமுதல்" (கல்லா.48).*

*[ஒருகா. ஆலவாய் → வாலவாய்]*

வாலறிவன் *vāl-aṟivaṉ,* பெ.(n.) கடவுள்; God, as pure intelligence. *"வாலறிவன் நற்றாள் தொழாஅர் எனின்" (குறள். 2).*

*[வால் + அறிவன்]*

வாலன்[1] *vālaṉ,* பெ.(n.) 1. குறும்பன்; mischievous fellow. 2. ஒருவகை நெல் (இ.வ.); a species of paddy.

*[வால் + வாலன்]*

வாலன்கண்டல் *vālaṉ-kaṇḍal,* பெ.(n.) வெண்மை நிறமுள்ள கடல் மீன்வகை; sea-fish, silvery.

*[வாலன் + கண்டல்]*

# வாலாட்டி வகை



கருஞ்சாம்பல் வாலாட்டி



கருப்பு வெள்ளை வாலாட்டி



கொடிக்கால் வாலாட்டி

**வாலாசம்** *vālāšam,* பெ.(n.) மாட்டின் பின்வார் (வின்.); crupper for a bullock.

**வாலாட்டிக்குருவி** *vālātti-k-kuruvi,* பெ.(n.) 1. கரிக்குருவி; King-crow. 2. வலியான்; red-wagtail.

இந்தியாவில் காணக்கூடிய வாலாட்டிக் குருவிகளுள் *'கோட்டைக்கரிச்சான்'* (pied wagtail) என்ற குருவியே வலிசை போகாமல் ஆண்டு முழுவதும் இங்குத் தங்கி வாபம். இது கறுப்பும் வெள்ளையுமாக, நீண்ட வால் கொண்டிருக்கும். அளவில் மைனாவைவிடச் சிறியதாகவும் மெல்லியதாகவுமிருக்கும். வண்ணான் துறைகளிலும் ஆற்றங் கரைகளிலும் இந்தக் குருவிகளை இணைகளாகக் காணலாம். சென்னையில் இவற்றைப் பலவிடங்களில் பார்க்கலாம். அடிக்கடி இக்குருவி தன் நீண்டவாலைப் பக்கவாட்டமாக அசைப்பதிலிருந்தும் மேலும் கீழுமாக குலுக்குவதிலிருந்தும் இது வாலாட்டிக் குருவி என்று புலப்படும். ஆண் கோட்டைக்கரிச்சான் உயர்ந்த சீழ்க்கையடிக்கும் குரலில் இனிமையாகப் பாடும்.

வகைகள் :

1. கருப்பு வெள்ளை வாலாட்டிக் குருவி
2. கருஞ்சாம்பல் வாலாட்டிக் குருவி
3. கொடிக்கால் வாலாட்டிக் குருவி



**வாலாட்டு[1]-தல்** *vāl-āttu-,* 47 செ.கு.வி. (v.i.) 1. குறும்பு செய்தல்; to do mischief, as wagging one's tail. 2. வீண் பெருமை காட்டுதல்; to put on airs.

*[வால் + ஆடு → ஆட்டு]*

**வாலாட்டு[2]** *vālāttu,* பெ.(n.) 1. சேட்டை; mischief. 2. செருக்கான செயல்; arrogant deed. *"எத்தேவர் வாலாட்டும்" (திவ். இயற். நான்மு. 38).*

*[வால் + ஆட்டம் → ஆட்டு]*

**வாலாதி** *vālādi,* பெ.(n.) பந்தயவோட்டத் திற்குப் பழக்கப்பட்ட குதிரை (வின்.); horse trained for racing.

*[வாலாயம் → வாலாதி]*

**வாலாதிகம்** *vālādigam,* பெ.(n.) பேராமணக்கு; castor plant yielding big seeds,-ricinus communis.

**வாலாமை** *vālāmai,* பெ.(n.) 1. தூய்மை யின்மை (உரி.நி); uncleanliness, impurity. 2. தீட்டு; ceremonial impurity or pollution. *"வாலாமைந்நா ணீங்கிய பின்னா்" (சிலப். 15, 24). "வாலாமை பாா்ப்பா ரிலங்குநூலோ தாத நாள்" (ஆசாரக். 48).* 3. மகளிர் தீட்டு (சூடா.); menstrual impurity.

**வாலாயம்[1]** *vālāyam,* பெ.(n.) 1. நடைமுறை யொழுங்கு; routine or commonness. *"வாலாயமாகவும் பழகியறியேன்" (தாயு. பரிபூரண. 1).* 2. வழக்கம்; custom. *'நான் வாலாயமாய்க் காலையில் கோயிலுக்குச் செல்பவன்'.* 3. மிகுபழக்கம்; familiarity. *"வாலாயமாய்ப் போய் விருந்துண" (அறப்.சத.68).*

தெ. வாலாயமு.

**வாலாவி** *vālāvi,* பெ.(n.) கருநிறக் குன்றிமணி; a black species of crab's eye.

வாலாளி *vāḷāḷi,* பெ.(n.) ஏலரிசி; cardamom seed.

வாலான்[1] *vālāṉ,* பெ.(n.) குட்டத்தைப் போக்கும் ஓர் நெல்; a variety of rice said to cure leprosy. 2. வீரியத்தரிசி; rice which have much vitamin. 3. வாலுளுவையரிசி பார்க்க; see *vāluḷuvai-y-ariši.*

வாலான்[2] *vālāṉ,* பெ.(n.) ஒரு வகை நெல் (பதார்த்த 800.); a kind of paddy.

வாலி[1] *vāli,* பெ.(n.) 1. ஒரு குரக்கு வேந்தன்; வானரர் தலைவன், கிட்கிந்தை மன்னன் (கம்பரா. வாலிவதை.); *vāli* a monkey chief. 2. வாலுடையது; that which has a tail. 3. கரிக்குருவி (சங்.அக.); king-crow.

வாலி[2] *vāli,* பெ.(n.) நிலவின்கலை தோன்றும் காருவாநாள் (அரு.நி.); the first day after the new moon.

வாலி[3] *vāli,* பெ.(n.) மழைத் தூறல் (அரு.நி.); drizzle.

ம. வாலுக; து. பாலுனி.

*[ஆலி → வாலி]*

வாலி[4] *vāli,* பெ.(n.) ஒருவகைப் புன்செய்ப் பயிர்; horse tail millet.

மறுவ. குதிரைவாலி.

வாலி[5] *vāli,* பெ.(n.) திருவாலியமுதனார்; the author of a portion of *Tiru-v-šaippā.* *"அமுத வாலி சொன்ன தமிழ்மாலை" (திருவிசைப். திருவாலி. 3, 11).*

வாலிகை *vāligai,* பெ.(n.) மணல் (சங்.அக.); sand.

*[வால் = வெள்ளை. வால் → வாலிகை]*

வாலிசை[1] *vāliša̋i,* பெ.(n.) 1. மணல்; sand. 2. கொடிக்காசரைக் கீரை; a kind of edible greens.

*[வால் + இசை]*

வாலிசை[2] *vālišai,* பெ.(n.) இளம்பெண்; a young girl.

*[வால் + இசை]*

வாலிது[1] *vālidu,* பெ.(n.) 1. தூயது; that which is pure. 2. வெண்மையானது; that which is white. *"வாலிதாம் பக்க மிருந்தைக் கிருந்தன்று" (நாலடி, 258).* 3. நன்மையானது; that which is good or excellent. *"வாலி தன்றெனக் கூறி" (சீவக.251).*

*[வால் → வாலிது]*

வாலிது[2] *vālidu,* பெ.(n.) வலி (அக.நி.); strength.

*[வலிது → வாலிது]*

வாலிந்தி *vālindi,* பெ.(n.) மகப்பேறு பெற்ற மாதமே மாதவிடாய்க் கண்டு கணவனுடன் சேர்ந்து மறு கருப்பத்தைக் கொண்ட பெண்; a woman conceiving within a month or two after delivery.

வாலிமை[1] *vālimai,* பெ.(n.) வன்மை (ஈடு. 7, 7, 2); strength.

*[வலி–மை → வாலிமை]*

வாலிமை[2] *vālimai,* பெ.(n.) பெருமை (ஈடு.7, 7, 2); greatness.

*[வால் → வாலிமை]*

வாலியக்காரன் *vāliya-k-kāraṉ,* பெ.(n.) வேலைக்காரன்; servant.

வாலியன்[1] *vāliyaṉ,* பெ.(n.) தூய்மை யுடையவன்; holy person. *"வாலியனல் லாதோன் றவஞ் செய்தல் பொய்" (முது. காஞ். 80).*

ம. வால்.

வாலில்லாப்புச்சம் *vāl-illā-p-puccam,* பெ.(n.) குறும்புசெய் குழந்தை (இ.வ.); mischievous child.

வாலு *vālu,* பெ.(n.) வாலுளுவையரிசி (மூ.அ.); seed of the climbing staff plant.

*[வால் → வாலு]*

வாலுகம்[1] *vālugam,* பெ.(n.) 1. மணல்; sand. 2. வெண்மணல் (பிங்.); white sand. *"வேலை வாலுகத்து விரிதிரைப் பரப்பின்" (சிலப்.6,131).*

*[வால் → வாலுகம்]*

*வால் = வெள்ளை. மா.அ.வி. "of doubtful derivation" என்று குறித்திருத்தல் காண்க. (வ.மொ.வ.86]*

வாலுகம்[2] *vālugam,* பெ.(n.) 1. ஒரு வகையுப்பு; a kind of unidentified salt. 2. ஏலாவாலுகம்; a kind of cardamom. 3. வெள்ளைக்குங்கிலியம் பார்க்க; see *veḷḷai-k-kuṅgiliyam.*

வாலுகாப்பிரபை *vālugā-p-pirabai,* பெ.(n.) எழுவகை நிரயங்களுள் பெருமணல் வட்ட முடையதாகக் கருதப்படும் நிரயம் (சீவக. 2817, உரை); a hell, said to contain sand, one of eḻu-narakam (Q.V.).

*[வாலுகம் + **Skt.** prabhā > த. பிரபை]*

வாலுகாயந்திரம் *vālukā-yandiram,* பெ.(n.) மருந்திட்ட குப்பியைச் சூடேற்றுவதற்குப் பதித்துவைக்குஞ் சுடுமணல் நிரப்பிய பாண்டவகை (இ.வ.); sand bath, vessel of heated sand, in which a cup containing medicinal drugs is placed and heated.

*[வாலுகம் + **Skt.** yantrā > த. இயந்திரம்]*

வாலுகி *vālugi,* பெ.(n.) கக்கரி (புதுவை.); kakri melon.

*[வால் → வாலுகி]*

வாலுகை[1] *vālugai,* பெ.(n.) 1. குப்பி; bottle. 2. வாலுளுவை பார்க்க; see *vāl-uḷuvai.* 3. அடுப்பு; oven.

வாலுகை[2] *vālugai,* பெ.(n.) வாலுளுவை பார்க்க (சங்.அக.); see *vāluḷuvai.*

வாலுங்கி[1] *vāluṅgi,* பெ.(n.) கக்கரி (சூடா.); kakrimelon.

வாலுங்கி[2] *vāluṅgi,* பெ.(n.) வாலுளுவை பார்க்க (சங்.அக.); see *vāluḷuvai .*

வாலுந்தி *vālundi,* பெ.(n.) முள்வெள்ளரி; Kakri-melon.

வாலுருவிவிடு-தல் *vāl-uruvi-viḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) துன்பஞ் செய்யத் தூண்டி விடுதல்; to stir one to activity, to provoke, as by stroking the tail of an animal. *"வயப்புலியை வாலுருவி விடுகின்றீரே" (பாரத. சூது. 265).*

*[வால் + உருவு + விடு-,]*

வாலுவநூல் *vāluva-nūl,* பெ.(n.) பாக நூல்; science of cookery. *"வாலுவ நூல் போய்த் திருந்தினார்களும் வியப்பன" (கந்தபு. குமார, 69).*

வாலுவன் *vāluvaṉ,* பெ.(n.) சமைப்போன்; cook. *"நெறியறிந்த கடிவாலுவன்" (மதுரைக். 36).*

மறுவ. மடையன்.

வாலுவி *vāluvi,* பெ.(n.) ஒருவகைத் தேக்கு; a kind of teak.

*[வால் → வாலுவி]*

வாலுளுவை *vāl-uḷuvai,* பெ.(n.) 1. கொடி வகை; climbing staff plant. 2. முள்வேல் வகை; (L.) thorny-staff-tree.

தெ. வாலுது.

*[வால் + உளுவை]*

வாலுறை *vāluṟai,* பெ.(n.) அடுப்பு (சங்.அக.); oven.

*[வால் + உறை]*

வாலூகம்[1] *vālūgam,* பெ.(n.) முசு முசுக்கை; a climber-bryonia scabra.

வாலூகம்[2] *vālūgam,* பெ.(n.) நஞ்சு (விடம்) (சங்.அக.); poison.

வாலேந்திரபோளம் *vālēndira-pōḷam,* பெ.(n.) வெள்ளைப்போளம் (பதார்த்த. 1052.); myrrh.

*[வாலதிப்போளம் → வாலேந்திரபோளம்]*

வாலேபம் *vālēbam,* பெ.(n.) வாலேயம் பார்க்க (பிங்.); see *vālēyam.*

வாலேயம் *vālēyam,* பெ.(n.) கழுதை (திவா.); ass.

வாலை[1] *vālai,* பெ.(n.) எரிநீர் வடிக்கும் பாண்டம்; still, alembic, retort. *"மருந்து வாலையிலேறுகிறது".*

*[வால் → வாலை]*

வாலை[2] *vālai,* பெ.(n.) 1. தூய்மை; purity. 2. இதளியம் (சங்.அக.); mercury.

*[வால் + வாலை]*

வாலை[3] *vālai,* பெ.(n.) 1. எரிநீர்; acid. 2. இளம்பெண்; young girl. 3. சத்தி; the goddess sakti in a girl's form. 4. கற்பூர சிலாசத்து சாரம்; essence of ammonium-alum.

வாலை[4] *vālai,* பெ.(n.) சித்திரை நதி (நாமதீப. 528); the cittira river, a tributary of the Tamiraparuni.

வாலைக்கடுக்காய் *vālai-k-kaḍukkāy,* பெ.(n.) பிஞ்சுக் கடுக்காய்; tender gall nut.

*[வாலை + கடுக்காய்]*

வாலைக்காட்டு-தல் *vālai-k-kāṭṭu-,* 15 செ.கு.வி. (v.i.) வாலைக்கிளப்பு-, பார்க்க; see *vālai-k-kiḷappu.*

*[வால் + ஐ + காட்டு-,]*

வாலைக்கிண்ணம் *vālai-k-kiṇṇam,* பெ.(n.) வடிப்பதற்காகப் பயன்படுத்தும் வாயகன்ற கலம்; a vessel used for distillation alembic.

*[வாலை + கிண்ணம்]*

வாலைக்கிளப்பு-தல் *vālai-k-kiḷappu-,* 5 செ.கு.வி. (v.i.) குறும்பு செய்தல் (வின்.); to become mischievous.

*[வால் + ஐ + கிளப்பு-,]*

**வாலைக்கும்மி[1]** *vālai-k-kummi,* பெ.(n.) கொங்கணநாயனார் என்பவரால் கி.பி.15ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட நூல் வகை; a book written by *Koṅgaṇa-nāyaṉār* in 15th century.

*[வாலை + கும்மி]*

**வாலைக்கும்மி[2]** *vālai-k-kummi,* பெ.(n.) வாலையர் என்பவரால் கி.பி.15ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட நூல்; a book written by *vālaiyar* in 15th century.

*[வாலை + கும்மி]*

**வாலைக்குமரி** *vālai-k-kumari,* பெ.(n.) இளம் பெண்; young girl.

*[வாலை + குமரி]*

**வாலைக்குறம்** *vālai-k-kuṟam,* பெ.(n.) மனோசிலை என்னும் மருந்துப்பு; a kind of salt.

*[வாலை + குறம்]*

**வாலைகலை** *vālai-kalai,* பெ.(n.) ஞாயிற்றின் கலை; vital air passing through the right nostril.

மறுவ. பிங்கலை.

*[வாலை + கலை]*

**வாலைசாரம்** *vālai-šāram,* பெ.(n.) சத்திசாரம் (மூ.அ.); a salt.

*[வாலை + சாரம்]*

**வாலைசெயநீர்** *vālai-šeya-nīr,* பெ.(n.) வழலையுப்பு, செயநீர், மதிசெயநீர்; a pungent liquid preparation from salt.

*[வாலை + செயநீர்]*

**வாலைநீர்[1]** *vālai-nīr,* பெ.(n.) வெடியுப்பு எரிநீர்; nitric acid.

*[வாலை + நீர்]*

**வாலைநீர்[2]** *vālai-nīr,* பெ.(n.) வாலையிட்டு வடித்தெடுத்த நன்னீர்; water purified by distillation, distilled water.

*[வாலை + நீர்]*

**வாலைப்பெண்** *vālai-p-peṇ,* பெ.(n.) செவ்வாமணக்கு; red variety of castor-ricinus communis.

*[வாலை + பெண்]*

**வாலைப்பெண்போகம்** *vālai-p-peṇ-bōgam,* பெ.(n.) இதனால் உடம்பிற்கு வெப்பம், மனமகிழ்ச்சி, பசி, உடம்பு வலிவு, ஒளி உண்டாம்; intercourse with young woman will cause strength, good complexion good hunger and happiness.

*[வாலை + பெண் + போகம்]*

**வாலைமெழுகு** *vālai-meḻugu,* பெ.(n.) ஒரு வகை மருந்து (யாழ்.அக.); a kind of medicinal punguent.

*[வாலை + மெழுகு]*

**வாலையாட்டு–தல்** *vālai-y-āṭṭudal-,* 7 செ.கு.வி. (v.i.) வாலைக்கிளப்பு–, (கொ.வ.) பார்க்க; see *vālai-k-kiḷappu-,*

*[வால் + ஆட்டு–.]*

**வாலையுப்பு** *vālai-yuppu,* பெ.(n.) நஞ்சுக் கொடி; placental card.

*[வாலை + உப்பு]*

வாலைரகுபதிகாரம் *vālai-ragupadikāram,* பெ.(n.) *சீனக்காரம்* (அரு.நி.); alum.

வாலைரசம் *vālai-racam,* பெ.(n.) இதளிய கருப்பூரம் (மூ.அ.); sublimate of mercury.

வாலைவடி-த்தல் *vālai-vadi-,* 20 செ.கு.வி. (v.i.) ஒரு பொருளைச் சூடு செய்து, ஆவியாக மாற்றி, அந்த ஆவியைக் குளிரவிட்டுப் பொருளைத் திரும்பவும் பழைய நிலையில் அடைவது வாலை வடித்தல் எனப்படும்; distillation.

பொதுவாக நீர்மங்களையே இம்முறைக்கு உள்ளாக்குகிறோம், சில திடப் பொருள்களையும் இதற்கு உள்ளாக்கலாம். ஆவியாக மாறாத கரைபொருளைக் கரைத்து, அதை நீர்மத்திலிருந்து பிரிப்பதற்கும், வெவ்வேறு கொதிநிலையுள்ள நீர்மங்களை அவற்றின் கலவையினின்று பிரிப்பதற்கும், பொருள்களைத் தூய்மை செய்வதற்கும் இம்முறை பயன்படும்.

வாலைவயது *vālai-vayadu,* பெ.(n.) 1. இளம் பருவம்; young age. 2. கற்பத்தினால் முதுமையிலிருந்து இளமையாதல்; rejuvenated body.

*[வாலை + வயது]*

வாவயம் *vāvayam,* பெ.(n.) துளசி; sacred basil.

வாவரசி *vāvaraśi,* பெ.(n.) வாழ்வரசி; married woman. *'அவள் வாவரசியாகப் பல்லாண்டு வாழ, வாழ்த்துகிறேன்'.*

*[வாழ்வரசி → வாவரசி]*

வாவரியுரி *vāvariyuri,* பெ.(n.) கிளியூறற் பட்டை (சங்.அக.); a medicinal bark.

வாவல்[1] *vāval,* பெ.(n.) 1. தாண்டுகை (பிங்.); jumping over. 2. கூத்து (பொரு.நி.); dance.

வாவல்[2] *vāval,* பெ.(n.) 1. வௌவால்; bat. *"விளவினை வாவல் குறுகா" (நாலடி, 261).*

ம. வாவல்; க. பாவலி; குட. பாபாக்கி; து. பாவலி; குவி. பாப்ல; கொலா. வெலபெ.

வாவல்[3] *vāval,* பெ.(n.) 1. பழுப்பு நிறமுள்ளதும் 2 அடி நீளம் வளர்வதுமான கடல் மீன் வகை; black pomfret brown attaining 2 ft. in length.

*[வாவு → வாவல்]*

வாவல்[4] *vāval,* பெ.(n.) வயா (பொரு.நி.); great desire languor during pregnancy.

*[வவ்வு → வாவு → வாவல். (மு.த.பக்.23)]*

வாவன்ஞாற்று *vāvaṉ-ñāṟṟu,* பெ.(n.) சித்திரப்பா வகை (பிங்.); a verse in which the words or letters are fancifully arranged.

வாவனாற்றி *vāvaṉāṟṟi,* பெ.(n.) வாவன் ஞாற்று (யாப். வி. பக். 502); a kind of verse.

*[வாவல் + நால்-]*

வாவி *vāvi,* பெ.(n.) 1. நீர் நிலை (பிங்.); tank, reservoir of water. *"மன்னு தண்பொழிலும் வாவியும்" (திவ். பெரியதி. 2, 3, 10).* 2. நடைக் கிணறு; well with a flight of steps down to the water. 3. ஆற்றிலோடை; stream of water running in a river bed. *"வண்டார் குவளைய வாவியும்" (சீவக. 337.).*

வாவிப்புள் *vāvi-p-pul,* பெ.(n.) எகினம் (அன்னம்) (இலக்.அக.); swan.

*[வாவி + புள்]*



வாவியோகம் *vāvi-y-ōgam,* பெ.(n.) தடாகயோகம் (சாதக சிந். 2036); an inauspicious *yōgam.*

வாவு[1]-தல் *vāvu-,* 5 செ.கு.வி. (v.i.) தாண்டுதல்; to jump over, gallop, leap. *"குன்றிடை வாவுறு கோளரி போல" (கம்பரா.பஞ்சசே, 63).*

வாவு[2] *vāvu,* பெ.(n.) 1. காருவா; the new moon day. 2. வெள்ளுவா, the full moon day. 3. விடுமுறை நாள்; holidays, school holiday, vocation, as given especially on the new moon and the full moon days.

*[உவவு → வாவு]*

வாவுக்காசு *vāvu-k-kāšu,* பெ.(n.) சிற்றூர்ப் பள்ளிக் கூடங்களில் வாவு நாட்களில் மாணவர்கள் ஆசிரியர்க்கு உதவும் பணம்; holidays gift of coin of small value presented by the pupil to the teacher on the new moon and full moon day in village schools.

*[உவவு → வாவு → காசு]*

வாவுத்தன் *vāvuttaṉ,* பெ.(n.) தோணியின் முன்பக்கம் (வின்.); prow of a vessel.

வாவுமுறை *vāvu-muṟai,* பெ.(n.) விடுமுறை (இ.வ.); vacation.

*[வாவு + முறை]*

வாவொட்டான் *vāvoṭṭāṉ,* பெ.(n.) கொட்டைப் பாக்கு; areca nut.

வாழ்[1]-தல் *vāḻ-,* 4 செ.கு.வி. (v.i.) 1. இருத்தல்; to be exist. 2. வாழ்ந்திருத்தல்; to live. *"வாழ்த லுயிர்க்கன்ன ளாயிழை" (குறள், 1124).* 3. செழித்திருத்தல்; to flourish, prosper. *"வாழ்க வந்தணர் வானவ ரானினம்" (தேவா. 1177, 1).* 4. மகிழ்தல்; to be happy. *"செம்பொற் குன்றினைக் கண்டு வாழ்ந்து" (திருவாலவா. 61, 18).* 5. மனைக் கிழத்தியாக இருத்தல் (கொ.வ.); to live the life of a married woman (colloq). 6. விதிப்படி ஒழுகுதல்; to shape one's life according to a definite set of rules. *"தந்திரத்து வாழ்து மென்பார்" (ஆசாரக். 35), "வாழ்வாருக்குச் சீதேவி வாயிலே" (பழ.).*

தெ., ம., து. வாளு; **Ko.** *va-ḻ;* **Kod.** *ba-ḻ;* **Tu.** *baḷani;* **Nk.** batt; **Go.** *badaktōr;* **Kui.** *bārti.*

வாழ்[2] *vāḻ,* பெ.(n.) முறைமை (பிங்.); regularity, order.

தெ., க. வாளி.

வாழ்க்கை *vāḻkkai,* பெ.(n.) 1. சீவிக்கை; livelihood, living. *"வரு முன்னர்க் காவாதான் வாழ்க்கை" (குறள், 435).* 2. வாழ் நாள்; life-time, career. *"நெடுவாழ்க்கை" ஆசாரக். 3).* 3. இல்வாழ்க்கை; married life. *"பழியஞ்சிப் பாத்தூ ணுடைத் தாயின் வாழ்க்கை" (குறள், 44).* 4. மனைவி (யாழ்அக.); wife. 5. நல்வாழ்வு நிலை (யாழ்.அக.); happy state. 6. செல்வ நிலை (பிங்.); wealth, felicity, prosperity. 7. ஊர்

(சூடா.); village, town. 8. மருதநிலத்தூர் (திவா.); agricultural town. *'வாழ்க்கை கொடுத்தவன் கையில் வாழ்நாள் அடைக்கலம்' (பழ.).*

*[வாழ் → வாழ்க்கை]*

வாழ்க்கைக்குறிப்பு *vāḻkkai-k-kuṟippu,* பெ.(n.) ஒருவரின் வாழ்க்கையைப் பற்றிய குறிப்பிடத் தக்க விளத்தங்கள்; biographical details.

*[வாழ்க்கை + குறிப்பு]*

வாழ்க்கைத்துணை *vāḻkkai-t-tuṇai,* பெ.(n.) மனையாள்; wife. *"தற்கொண்டான் வளத் தக்காள் வாழ்க்கைத் துணை" (குறள்,51).*

*[வாழ்க்கை + துணை]*

வாழ்க்கைப்படு-தல் *vāḻkkai-p-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) திருமணமாதல்; to be married, to become a wife. *"வாழ்க்கைப் பட்டாள் கயற்கண்ணியே" (தனிப்பா. ii, 1, 1).*

*[வாழ்க்கை + படு-,]*

வாழ்க்கைப்படுத்து-தல் *vāḻkkai-p-paḍūttu-,* 4 செ.குன்றாவி. (v.t.) திருமணம் செய்து கொடுத்தல் (சீவக. 1490, உரை); to give in marriage.

*[வாழ்க்கைப்பூடு → வாழ்க்கைப்படுத்து-,]*

வாழ்க *vāḻga,* வி.மு.(v.) வாழ்த்திக் கூறும் போது பயன்படுத்தும் வினைவடிவம்; an optative form meaning live.

*[வாழ் + க. க-வியங்கோள் வினைமுற்று விகுதி]*

வாழ்கிறவள் *vāḻgiravaḷ,* பெ.(n.) 1. கணவனோடு வாழ்பவள் (கொ.வ.); married woman living with her husband. 2. வாழ்வரசி; married woman.

*[வாழ் → வாழ்கிறவள்]*

வாழ்குண்டம் *vāḻ-kuṇḍam,* பெ.(n.) மூலாதாரம்; one of the six centres of the human body situated in the anal region. Its God is vigneswarar and Goddess is *kuṇḍaliṇi,* literally means root of or source of *āthāram.*

வாழ்கொளிபுத்தூர் *vāḻkoḷi-puttūr,* பெ.(n.) தஞ்சை மாவட்டத்தில் சுந்தரரால் பாடல் பெற்ற சிவத்தலம்; a saiva place, having the distinction of being sung by saint Sundarar. *"மலைத்த செந்நெல் வயல் வாழ்கொளி புத்தூர்" (57).*

*[வாழ்கொளிபுத்தூர் → புத்தூர் → புற்றூர்]*

வாழ்ச்சி *vāḻcci,* பெ.(n.) 1. வாழ்க்கை; living. *"நிலையின் வாழ்ச்சியின்" (தொல். சொல். 80). "நின் தாளிணைக் கீழ் வாழ்ச்சி (திவ். திருவாய். 3, 2, 4).* 2. செல்வநிலை; prosperity, wealth, felicity. 3. வெற்றியாகிய செல்வம்; felicity of victory. *"வேந்து மெய்ம் மறந்த வாழ்ச்சி" (பதிற்றுப். 56, 7).*

*[வாழ் → வாழ்ச்சி]*

வாழ்ச்சிப்படுத்து-தல் *vāḻcci-p-paḍuttu,* 4 செ.குன்றாவி. (v.t.) வாழ வைத்தல்; to cause to prosper. *"வாய்மொழி மருங்கினான் அவனை வாழ்ச்சிப்படுத்தலின்" (தொல். பொ. 90, உரை).*

*[வாழ் → வாழ்ச்சி + படுத்து-,]*

வாழ்செடிப்பூண்டு *vāḻ-ceḍi-p-pūṇḍu,* பெ.(n.) பொற்றலைக் கையாந்தகரை என்னும் மூலிகை; a variety of eclypta prostata bearing yellow flowers. (சா.அக.).



வாழ்த்தணி *vāḻttaṇi,* பெ.(n.) இன்னார்க்கு இன்ன நன்மை இயைக வென்று முன்னியது விரிக்கும் அணி வகை (தண்டி. 88); figure of speech expressing benediction of special benefits desired by the poet for particular persons.

*[வாழ்த்து + அணி]*

*"இன்னார்க் கின்னது இயைக என்றுதா*
*முன்னியது கிளத்தல் வாழ்த்தென மொழிப"*
*(தண்டி.88).*

*(எ-டு)*
*மூவாத் தமிழ்பயந்த முன்னூல் முனிவாழி*
*ஆ வாழி வாழி யருமறையோர்–காவிரிநாட்*
*டண்ண லனபாயன் வாழி யவன்குடைக்கீழ்*
*மண்ணுலகில் வாழி மழை.*

வாழ்த்தாரம் *vāḻttāram,* பெ.(n.) வாழ்த்து (இ.வ.); benediction, used in irony.

*[வாழ்த்து + ஆர் → ஆரம்]*

வாழ்த்தியல் *vāḻttiyal,* பெ.(n.) தலைவனைப் புலவன் வாழ்த்தும் புறத்துறை (புறநா.2, துறைக்குறிப்பு); theme describing the praise bestowed on a chief by a bard.

வாழ்த்தியல் எ–டு,
*"மண்டிணிந்த நிலனும்*
*நிலனேந்திய விசும்பும்*
*விசும்புதைவரு வளியும்*
*வளித்தலைஇய தீயும்*
*தீமுரணிய நீரு மென்றாங்கு*
*ஐம்பெரும் பூதத் தியற்கை போலப்*
*போற்றார்ப் பொறுத்தலும் சூழ்ச்சியது அகலமும்*
*வலியும் தெறலும் அளியும் உடையோய்"*
*(புறநா.2.1–8).*

*[வாழ்த்து + இயல்]*

வாழ்த்து[1]–தல் *vāḻttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. பாராட்டுதல்; to felicitate, congratulate, bless. 2. போற்றுதல்; to praise, applaud. "*வாழ்த்த வாயு நினைக்க மடநெஞ்சம்*" *(தேவா. 1203, 7).* 3. மங்கலம் பாடுதல் (யாழ்.அக.); to sing songs of benediction.

க. பாழிசு.

*[வாழ் → வாழ்த்து]*

வாழ்த்து[2] *vāḻttu,* பெ.(n.) 1. நல்வாழ்த்து; benediction, felicitation. 2. போற்றி; praise. "*அவளுயிரை மாய்த்தானை வாழ்த்தே வலி*" *(திவ். இயற். பெரிய திருவந். 40).* 3. நூலின் தொடக்கத்துக் கூறப்படும் மங்களாசணை மூன்றனுட் கடவுளை வாழ்த்துகை; invocation or praise of the deity at the begining of a religious or literary work; one of three *maṅgaḷāšaraṇai.* (Q.V.). "*வாழ்த்து வணக்கம் வருபொருளிவற்றி னொன்று ஏற்புடைத்தாகி*" *(தண்டி.7). (தொல். பொ. 421, உரை.).* 4. மங்களம் பாடுகை (சங்.அக.); singing songs of benediction. 5. வாழ்த்தணி பார்க்க (தண்டி.86); see *vāḻttaṇi.*

க. பாழிசு

*[வாழ் → வாழ்த்து]*

வாழ்த்துரை *vāḻtturai,* பெ.(n.) பாராட்டுரை; benediction. "*மூத்தவர் பின்னவர்க்கு வாழ்த்துரை பேசல் வேண்டும்*" *(கரஞ்சிப்பு.*

*ஒழுக்கப். 12).*

*[வாழ்த்து + உரை]*

வாழ்த்துரை வகைகள் :

இயன்மொழி வாழ்த்து, புறநிலை வாழ்த்து, வாயுறை வாழ்த்து என வாழ்த்துரை மூவகைப்படும்.

ஒருவருடைய சிறந்த பண்புகளையும் அரிய ஆற்றல்களையும் எடுத்துரைத்துப் புகழ்வது அல்லது வாழ்த்துவது, இயன்மொழி வாழ்த்து.

*அடுத்தூர்ந் தேத்திய இயன்மொழி வாழ்த்தும்.*
*(தொல்.புறத்.:35)*

*மயலறு சீர்த்தி மான்றோர் மன்னவன்.*
*இயல்பே மொழியினும் அத்துறை யாகும்.*
*(பு.வெ.9:195)*

கடவுள் (அல்லது நீ வணங்கும் தெய்வம்) உன்னைப் பாதுகாக்க, நீ வழிவழி செல்வத்தோடு சிறந்து விளங்குக என்று, ஒருவரை வாழ்த்துவது புறநிலை வாழ்த்து.

*வழிபடு தெய்வம் நிற்புறங் காப்பப்*
*பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து*
*பொலிமின் என்னும் புறநிலை வாழ்த்தே.....*
(தொல்.செய்.109)

நோயாளிக்கு முன்பு கசப்பாகவும் காரமாகவுமிருந்து வருத்தினும், பின்பு நலம் பயக்கும் மருந்து, போன்று நெறி தவறியவருக்கு அல்லது அறியாதவருக்கு முன்பு கேட்பதற்கு வெறுப்பாக இருப்பினும், பின்பு நன்மை பயக்கும் நல்லறிவுரை கூறுவது வாயுறை வாழ்த்து.

வாயுறை, மருந்து.

*வாயுறை வாழ்த்தே வயங்க நாடின்*
*வேம்புங் கடுவும் போல வெஞ்சொல்*
*தாங்குதல் இன்றி வழிநனி பயக்குமென்(று)*
*ஓம்படைக் கிளவியின் வாயுறுத் தற்றே.*
(தொல்.செய்.111)

வாழ்த்துதல் என்பது ஒருவரை நலமாக நீடு வாழவைத்தல், அது. முற்றத் துறந்த முழு முனிவரான நிறைமொழி மாந்தர் அல்லது ஆன்றவிந் தடங்கிய சான்றோர் "நீடு வாழ்க" என்று சொல்வதனாலும், மூதறிஞர் கூறும் அறவுரை அல்லது அறிவுரையாலும் நிகழும். தனிப்பட்டவர்க்கு இவ்விரு வழியும் இயலும்: ஒரு தொகுதியார்க்கோ பின்னதே ஏற்கும்.

திருவள்ளுவர், உலகினர் அனைவர்க்கும், சிறப்பாகத் தமிழர்க்கு, உரைத்த அறவுரையும் அறிவுரையுமான திருக்குறள், திருவள்ளுவ மாலையில் மதுரை யறுவை வாணிகன் இளவட்டனார் என்னும் புலவர் பெயரிலுள்ள.

*இன்பமுந் துன்பமும் என்னும் இவையிரண்டும்*
*மன்பதைக் கெல்லாம் மனமகிழ – அன்பொழியா*
*துள்ளி யுணர வுரைத்தாரே யோதுசீர்*
*வள்ளுவர் வாயுறை வாழ்த்து.*

என்னும் வெண்பாவின்படி, 'வாயுறை வாழ்த்து' எனப்படினும் உண்மையிற் 'புறநிலை வாழ்த்து'ங் கலந்ததேயாகும்.

இயன்மொழி வாழ்த்திற் கடவுள் வாழ்த்தும் அடங்குவதனாலும், கடவுளை ஒருவர் புகழ்வதன்றி வாழவைத்தல் என்பது பொருந்தாமையாலும், மாந்தரைப் புகழ்வதற்கும் கடவுளைப் புகழ்வதற்கும் வேறுபாடுண்மையாலும், கடவுள் வாழ்த்திலுள்ள சிறப்பான அச்சத்தோடு கூடிய அன்பு வணக்கத்தைக் குறித்தற்கு. வாழ்த்து என்னும் சொல்லின்று வழுத்து (வ.ஸ்துதி) என்னும் சொல் திரிக்கப்பட்டது.

*வழுத்தினாள் தும்மினே னாக அழித்தழுதாள்*
*யாருள்ளித் தும்மினீ ரென்று.* (குறள்.1317).

என்னும் திருக்குறளில், வழுத்தினாள் என்னுஞ் சொல்லை வாழ்த்தினாள் என்னும் பொருளில் திருவள்ளுவர் ஆண்டிருப்பினும், அதைப் பாவலன் உரிமை (poetic licence) யென்றே அமைத்தல் வேண்டும்.

கடவுளை வழுத்தும் சிறப்பான கலிப்பா வகைகள் தேவபாணியெனப்படும். ஆரியர் தமிழகம் வந்தபின் "வருணப் பூதர் நால்வகைப் பாணியும்" (சிலப்.6,35–6) எனச் சிறுதெய்வ வழுத்தும் தேவபாணியெனப்பட்டமையால், முத்தொழில் புரிவோன் என்னுங் கொள்கைபற்றிக் கடவுளையொத்த சிவன் அல்லது திருமால் வழுத்துகள் பெருந்தேவபாணியெனப்பட்டன.

– தேவநேயம். 13.78 – 79.

**வாழ்த்தெடு-த்தல்** *vāḻtteḍu-*, 4 செ. குன்றாவி. (v.t.) 1. பராவுதல்; to praise. *"சுரிசங்கம்... யாதென்று வாழ்த்தெடுப்பேன்" (குலோத். கோ. 321).*

*[வாழ்த்து + எடு-.]*

**வாழ்நர்** *vāḻnar*, பெ.(n.) வாழ்வோர்; inhabitants, residents. *"தென்புல*

*வாழ்நர்க் கருங்கட னிறுக்கும் பொன்போற் புதல்வர்" (புறநா.9).*

*[வாழும் → வாழுமர் → வாழுநர்]*

**வாழ்நாள்** *vāḷ-nāḷ*, பெ.(n.) ஆயுட்காலம்; lifetime. *"வாழ்நாட் கலகா வயங்கொளி மண்டலம்" (நாலடி.22).*

*[வாழ் + நாள்]*

வாழ்நாட் பல்லாண்டு வரம்பு விழாக்கள்

மக்களின் மண்ணுலக வாழ்நாட் பேரெல்லை வரவரக் குறைந்து, இன்று நூறாண்டாகக் கொள்ளப்படுகின்றது.

"மாந்தர்க்கு வயது நூறல்ல தில்லை" என்பது கபிலரகவல். ஒருவர் தாம் நினைத்தவுடன் எதிர்வந்து நிற்கும் உறவினரையோ நண்பரையோ பார்த்து, உங்கட்கு அகவை நூறு (நூறாண்டு) என்பது உலக வழக்கு. 'மக்கள் நூறாண்டு வாழ்க்கை' என்று ஒரு நூலும் மறைமலையடிகள் எழுதி வெளியிட்டுள்ளார்கள்.

"ஆறிலும் சாவு நூறிலும் சாவு" என்னும் உண்மையினாலும், பிள்ளை பிறந்து ஓராண் டிருப்பதும் உறுதியன்மையாலும், கருவிலேயே இறந்து சாப்பிள்ளையும் வெளிப்படுவதனாலும், கால் நூற்றாண்டு, அரை நூற்றாண்டு, முக்கால் நூற்றாண்டு, நூற்றாண்டு முதலிய பல்லாண்டு வாழ்வுகள் மட்டுமின்றி, பிறந்த நாளும் ஆண்டு நிறைவு நாட்களும் பெரும்பாலும் செல்வப் பெற்றோரால் அல்லது உற்றோராற் கொண்டாடப் படுகின்றன.

குழவியோ பிள்ளையோ இளந்தையரோ வளர்ச்சி முற்றிய ஆளோ சேதமின்றிக் காக்கப்பட்டு வந்தமைபற்றி, இறைவனுக்கு நன்றியொடு காணிக்கை செலுத்துவதும், இயன்றளவு பணஞ் செலவிட்டு உற்றார் உறவினருடன் உண்டாடி மகிழ்வதும், இக் கொண்டாட்டங்களின் நோக்கமாகும்.

அரசன் அல்லது அரசி பிறந்தநாள் ஆட்டை விழா, நாண் மங்கலம் என்றும், வெள்ளணி விழா என்றும் சொல்லப்பெறும்.

மேனாடுகளில் தோன்றிய கால் நூற்றாண்டு விழா (Silver Jubilee) வெள்ளிவிழா என்றும், அரை நூற்றாண்டு விழா பொன் விழா (Golden Jubilee) எனப்படும். விகத்தோரியா (Victoria) அரசியார் ஆட்சியின் அறுபான் ஆட்டை விழா 1987 ஆம் ஆண்டு கொண்டாடப்பட்டது. வயிர விழாவை மணிவிழா என்றுங் கூறலாம்.

அறுபது நாழிகை ஒரு நாளென்றும், அறுபது நாள் ஒரு பெரும்பொழுது என்றும் காலக் கணிப்புண்மையும் 'அறுபதிற்கு மேற் கிறுகிறுப்பு' என்னும் கீழ்நாட்டுக் கொள்கையும், வலுவிறக்கத் (Climacteric) தொடக்கம் அறுபதாமாண் டென்னும், மேனாட்டுக் கொள்கையும் கி.மு.57-ல் தொடங்கிய விக்கிரம சகாத்தம் என்னும் அறுபானாண்டு மானத்திற்கும், அறுபானாட்டை விழாவிற்கும் கரணியமா யிருந்திருக்கலாம்.

முக்கால் நூற்றாண்டிற்கும் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட எண்பான் ஆட்டை விழாவைக் கதிரிய விழா (Radium Jubilee) என்னலாம்.

நூற்றாண்டிற்கு மேற்பட்ட கால விழாவை அருட்கதிர் விழா எனல் தகும். இரசிய தேசச் சாக்சியா நாட்டு சிராலி மிசிலிமோவ் (Shirali Mislimov) என்பவர் 168 ஆண்டுகளும் அவருடைய துணைவியார் பக்கு தாழி (Baku Tadzhi) என்பார் 107 ஆண்டுகளும் வாழ்ந்தனர்.

–தேவநேயம்.13. பக்.81-82.

**வாழ்மகி** *vāḷ-magi*, பெ.(n.) புண்ணிய வரசு; holy tree, ficus religiosa.

*[வாழ் + மகி]*

**வாழ்மடந்தை** *vāḷ-maḍandai*, பெ.(n.) வைப்பரிதாரம்; a prepared orpiment.

*[வாழ் + மடந்தை]*

**வாழ்முதல்** *vāḷ-mudal*, பெ.(n.) கடவுள் (வாழ்வுக்கு முதற்காரணன்); God, as the source or first cause of existence. *"மற்றடியேன்றன்னைத் தாங்கு நரில்லை யென் வாழ் முதலே" (திருவாச. 6, 23).*

*[வாழ் + முதல்]*

**வாழ்மூலம்பாலி** *vāḷ-mūlam-pāli*, பெ.(n.) புத்தான் பவளம்; one of 120 kinds of natural substances in the tamil medical science.

*[வாழ் + மூலம் + பாலி]*

வாழ்வரசி *vāḻ-varaši*, பெ.(n.) வாழ்கிறவள் (இ.வ.) பார்க்க; see *vāḻgiṟaval*.

*[வாழ்வு + அரசி]*

*'மனைக் கிழத்தியை வாழ்வரசி என்பது நெல்லை நாட்டு வழக்கு' (த. தி. முன். vi)*

வாழ்வாட்டி *vāḻ-v-āṭṭi*, பெ.(n.) வாழ்கிறவள் (சங்.அக.) பார்க்க; see *vāḻgiṟaval*.

*[வாழ்வு + ஆள் → ஆட்டி]*

வாழ்வாடிச்சி *vāḻ-v-āḍicci*, பெ.(n.) வாழ்கிறவள் (யாழ்.அக.) பார்க்க; see *vāḻgiṟaval*.

*[வாழ்வு + ஆடு → வாழ்வாடு → வாழ்வாடிச்சி]*

வாழ்வி-த்தல் *vāḻvi-*, 11 செ.குன்றாவி. (v.t.) 1. வாழ வைத்தல்; to cause or help one to live. *"வாழ்விப்பா னெண்ணமோ" (அஷ்டப். நூற்றெட். 47).* 2. முறைமன்றம் மூலமாகச் சொத்தை உரியவனுக்கு ஒப்படைத்தல் (நெல்லை.); (legal) to deliver possession through court.

*[வாழ் → வாழ்வி]*

வாழ்விப்பு *vāḻvippu*, பெ.(n.) முறைமன்றம் மூலமாகச் சொத்தை உரியவனிடம் ஒப்படைக்கை; (legal) delivery of possession through court.

*[வாழ்வி → வாழ்விப்பு]*

வாழ்விழ-த்தல் *vāḻviḻa-*, 4 செ.கு.வி. (v.i.) 1. கைம்பெண்ணாதல்; to be widowed. 2. மனைவியை இழத்தல் (இ.வ.); to become a widower.

*[வாழ்வு + இழ-.]*

வாழ்விழந்தவள் *vāḻviḻandavaḷ*, பெ.(n.) அறுதலி (யாழ்.அக.); widow.

மறுவ. கைம்பெண்

*[வாழ்வு + இழந்தவள்]*

வாழ்வினை *vāḻ-viṉai*, பெ.(n.) ஆதனால் (ஆன்மா) அடையப்பெறும் நயன்மை முதலான ஐவகைப்பேறு; objectives of human pursuit. *"ஊழ்வினையும் வாழ்வினையு மோதுங் குருகையர்கோன்... வேதத்தியல்" (திவ். திருவாய். தனியன்).*

வாழ்வு *vāḻvu-*, பெ.(n.) 1. நல்வாழ்க்கை; prosperity, happiness, felicity, happy life. *"என்னிதன் மேலவட் செய்தும் வாழ் வென்றாள்" (கம்பரா. மந்தரை. 49).* 2. பிழைப்பு; livelihood, living, career. *"வாழ்வின் வரை பாய்த னன்று" (நாலடி. 369).* 3. வாழ்க்கைச் செலவுக்காக விடப்படும் இறையிலி நிலம்; endowment of land for maintenance. *"மன்னிங்கு வாழ்வு தருதும்" (சீவக. 2347).* 4. உறை (பொரு. நி.); residing. 5. உறைவிடம்; residence. *"மதியொன்ற வுதைத்தவர் வாழ்வு" (தேவா. 276, 2).* 6. ஊர் (பொரு.நி.); town. 7. உயர்ந்த பதவி; high state or position. *"கொள்ளேன் புரந்தான் மாலயன் வாழ்வு" (திருவாச. 6, 5).* 8. செல்வம்; wealth. *"ஏத்தி வந்தார்க்கு வந்தீயும் வாழ்வு" (பு. வெ. 4, 12).* 9. முறைமை (யாழ்.அக.); course, system.

*'வாழ்வும் சிலகாலம்; தாழ்வும் சிலகாலம்' (பழ.)*
*'வாழ்வைத் தள்ளினாலும் சாவைத் தள்ளப்படாது' (பழ.)*

*[வாழ் → வாழ்வு]*

வாழ்வுதாழ்வு *vāḻvu-tāḻvu*, பெ.(n.) ஒருவன் வாழ்க்கையில் ஏற்படும் செல்வ நிலையும் வறுமை நிலையும்; prosperity and adversity.

*[வாழ்வு + தாழ்வு]*

வாழ்னாதி *vāḻ-ṉādi,* பெ.(n.) தூதுவளை; a thorny climber.

வாழகம் *vāḻagam,* பெ.(n.) வெள்ளைக் குங்கிலியம் (மலை.); konkany resin.

வாழபுட்பி *vāḻapuṭpi,* பெ.(n.) முல்லை (மலை); arabian Jasmine.

*[வாலபுட்பி → வாழபுட்பி. புஷ்பம் → புட்பம் → புட்பி]*

வாழமணத்தாள் *vāḻā-maṇattāḷ,* பெ.(n.) பூநீர்; salt obtained from fuller's earth or from the efforessence grown on the soil of fuller's earth.

*[வாழ + மணத்தாள்]*

வாழாக்குடி *vāḻā-k-kuḍi,* பெ.(n.) வாழா வெட்டி (யாழ்.அக.) பார்க்க ; see *vāḻā-veṭṭi.*

*[வாழ் + ஆ + குடி. 'ஆ' எ.ம.இ.நி.]*

வாழாக்கேடி *vāḻā-k-kēḍi,* பெ.(n.) மணமாகாதிருப்பவள் (யாழ்.அக.); unmarried woman, spinster.

*[வாழ் + ஆ + கேடி. 'ஆ' எ.ம.இ.நி.]*

வாழாக்கொடி *vāḻā-k-koḍi,* பெ.(n.) வாழா வெட்டி (இ.வ.) பார்க்க; see *vāḻā-veṭṭi.*

*[வாழ் + ஆ + கொடி]*

வாழாண்டி *vāḻāṇḍi,* பெ.(n.) புளி; tamarind.

வாழாத்திப்போளம் *vāḻātti-p-pōḷam,* பெ.(n.) சுறாலை (சாம்பிராணி) வகை (யாழ்ப்.); gum-myrrh.

*[வாலதிப்போளம் → வாழாத்திப்போளம்]*

வாழாதவள் *vāḻādavaḷ,* பெ.(n.) 1. வாழா வெட்டி பார்க்க; see *vāḻā-veṭṭi.* 2. கைம் பெண்; widow.

*[வாழ் + ஆ + (த்) அவள். 'ஆ' எ.ம.இ.நி.]*

வாழாவெட்டி *vāḻā-veṭṭi,* பெ.(n.) கணவனோடு சேர்ந்து வாழப்பெறாதவள் (இ.வ.); married woman not living with her husband, grass widow.

*[வாழ் + ஆ + வெட்டி. வெற்று → வெட்டு → வெட்டி. 'ஆ' எ.ம.இ.நி.]*

வாழி[1] *vāḻi,* வி.(v.opt.) வாழ்க என்னும் பொருளில் வரும் வியங்கோட் சொல் (நன். 168); optative meaning 'may you prosper'. *"தடமலர்த்தாள் வாழ" (திருவாச. 24, 6).*

*[வாழ் → வாழி]*

வாழி[2] *vāḻi,* அசைச். (exp.) ஓர் அசைச்சொல் (சூடா. 10, 16); an expletive.

*[வாழ் → வாழி]*

வாழி[3]-த்தல் *vāḻi-,* 11 செ.கு.வி.(v.i.) மதர்த்துப்போதல் (யாழ்.அக.); to be over luxuriant in growth and unproductive.

*[வாழி → வாழி-,]*

வாழிகூறு-தல் *vāḻi-kūṟu-,* 5 செ.கு.வி. (v.i.) அனைவரும் நலமுடன் வாழுமாறு வாழ்த்துதல்; wish every-body good luck.

*[வாழி + கூறு-,]*

வாழித்திருநாமம் *vāḻi-t-tirunāmam,* பெ.(n.) ஆசிரியரை வாழ்த்தும் பாடல்; poem of solutation to the *ācāryas.*

*[வாழி + திரு + நாமம். நாமம் = skt.]*

வாழிப்பு *vāḻippu*, பெ.(n.) மதர்ப்பு (யாழ்.அக.); over-luxuriant growth. *'வாழிப்பான ஆள்'* (இ.வ.).

*[வாழி → வாழிப்பு]*

வாழிய *vāḻiya*, வி.(v.opt.) 1. வாழி பார்க்க; see *vāḻi*. 2. ஓர் அசைச்சொல் (நன். 440); an expletive.

*[வாழ் → வாழி]*

வாழும்பாம்பு *vāḻum-pāmbu*, பெ.(n.) அகவை மிகுதியால் குட்டையாய்த் தேய்ந்து வீடுகளில் வாழும் என்று நம்பப்படுகின்ற நல்ல பாம்பு; cobra believed to grow short with age and live in houses or house-sites.

*[வாழ் + பாம்பு → வாழும்பாம்பு]*

வாழும்புடை *vāḻum-puḍai*, பெ.(n.) பாம்புப் புற்று (நாஞ்.); ant-hill, snakehole.

*[வாழும் + புடை]*

வாழுமோர் *vāḻumōr*, பெ.(n.) வாழ்பவர்; those who live in prosperity. *"யாரிவ ணெடுந்தகை வாழுமோரே" (பதிற்றுப். 71, 27).*

*[வாழ் → வாழ்வோர் → வாழுமோர்]*

வாழை *vāḻai*, பெ.(n.) வாழையின் மரவகை; Plantain - Musa Paradisiaca. *"கொழு மடற் குமரி வாழை" (சீவக.2716).*

க.பாலெ; ம. வால; து.வாரெ; **ma.** *vara*; **Ko.** va-g; **To.** pa-w; **Ka.** *bāre*; **Kod.** *ba-le*; **Tu.** *bāre*.

*[வாழ் → வாழை]*

*'வாழைக்குத் தானீன்ற காய் கூற்றம்' (பழ.)*
*'வாழ்கிற வீட்டுக்கு வாழை வைத்துப் பார்' (பழ.)*

வாழை வகை

1. அக்கினிசுவர வாழை; 2. அடுக்கு மொந்தன்; 3. அடுக்கு வாழை; 4. அடைக்காக் குன்னன்; 5. அணில் வாழை; 6. அமிழ்த சாகரம்; 7. அமிருத பாணி; 8. அனுப்பன்; 9. ஆட்டுக் கொம்பன்; 10. ஆட்டு நேந்திரன்; 11. ஆயிரங்காய்ப் பூவன்; 12. ஆயிரங்காய் வெண்கதலி; 13. ஆனைக் கொம்பன்; 14. இலைவாழை; 15. ஈனா வாழை; 16. எரிச்சி வாழை; 17. என்னபனியன்; 18. ஏத்தசிங்கன்; 19. ஏலக்கிபாளை; 20. கப்பூர்; 21. கரிவாழை; 22. கல் வாழை; 23. கருங்கதலி; 24. கருவாழை; 25. கல்மொந்தன்; 26. கற்பூரவாழை; 27. கனயல்; 28. காஞ்சக்கேல; 29. காட்டா வாழை; 30. காட்டிலவு; 31. காட்டு இருப்பை; 32. காட்டு வாழை; 33. காபூலி வாழை; 34. காளி வாழை; 35. கானாம் வாழை (கொட்டை வாழை); 36. குழிப்பூவன்; 37. குள்ள வாழை; 38. குறி பொந்தா; 39. கொம்பு வாழை; 40. கொம்மரட்டி; 41. சக்கரக்கேளி; 42. சப்பீடவெல்சி; 43. சம்பா; 44. சாம்பல் மொந்தன்; 45. சாம்பல் மொந்தன்; 46. சாம்பிராணி மொந்தன்; 47. சிங்கன் வாழை; 48. சிச்சூ வாழை; 49. சிறுப்பு வாழை; 50. சிறுமலை வாழை; 51. சின்னச் செங்கதலி; 52. சின்ன மொந்தன்; 53. சினாலி; 54. சூரியப் பாளை; 55. செவ்வாழை; 56. சோனேரி; 57. தட்டில்லாக் குன்னன்; 58. துரை வாழை; 59. தேன் குன்னன்; 60. நவரை வாழை; 61. நாங்குநேரிப்பேயன்; 62. நாட்டு வாழை; 63. நாளிப்பூவன்; 64. நெடுநேந்திரன்; 65. நெய்ப்பூவன்; 66. நெய் மன்னன்; 67. நெய்வாழை; 68. நெல்லி வாழை; 69. நேத்திரப் பள்ளி; 70. நேத்திரப் படத்தி; 71. நேந்திரன் வாழை; 72. பச்சை நாடன்; 73. பச்சைப் பந்தீசா; 74. பச்சை யரட்டி; 75. பச்சை வாழை; 76. பசராய்; 77. படத்தி; 78. பம்பாய்ப்பச்சை; 79. பன்றி வாழை; 80. பிடிமொந்தன்; 81. புட்டு வாழை; 82. பூதிப்பாளை; 83. பூநாவல்; 84. பூவன் வாழை; 85. பூவில்லாச் சுந்தன்; 86. பேய் லாடன்; 87. பேயன் வாழை; 88. பொந்தையரட்டி; 89. மகர வாழை; 90. மட்டி; 91. மதுரங்கபாவெ; 92. மயில் வாழை; 93. மர வாழை; 94. மலை மொந்தன்; 95. மலை

வாழை; 96. மனோரஞ்சிதம்; 97. மான் சுமேரி; 98. மிந்தோலி; 99. மூங்கில் வாழை; 100. பொட்ட பூவன்; 101. மொந்தன்; 102. வெள் வாழை.

ஒற்றை விதையிலை நிலைத் திணைகளில் (ஸ்கைட்டாமினியீ) என்னும் வாழைக் குடும்பத்து மூசேசியீ என்னும் உட்குடும்பத்தைச் சார்ந்த மூசா என்னும் இனம். இதிலே 80 இனங்கள் உண்டு.

வாழை மரம் ஒரு தடவையே பூக்கும்; காய்க்கும். குலைபோட்டு அது முற்றிய பிறகு மரம் பட்டுப் போகும். அதனால் குலையை வெட்டின பிறகு மரத்தையும் அடிவரையில் வெட்டி விடுவார்கள். கீழ்க் கன்று விடப்பட்டு வந்தது வளர்ந்து பெரிய மரமாகிக் குலைபோடும். அடுத்த தலைமுறையாக அதன் கீழ்க் கன்று வளர்ந்துவரும். அதற்கு மேல் வருபவை செழிப்பாக வளர்வது மில்லை. காய் நன்றாகவோ அதிகமாகவோ விடுவதுமில்லை. அப்போது வேறு இடங்களில் கன்றுகளை நட்டுப் புதிய பயிர் வளர்ப்பார்கள்.

வாழைப் பயிர் பல வகைகளில் பயன்தருகிறது. வாழைக்காய், வாழைப்பழம், வாழையிலை, வாழைச்சருகு, வாழைப்பட்டை, வாழை நார் போன்ற அனைத்துப் பாகங்களும் மக்களுக்குப் பயன்படுவனவாய் உள்ளன.

வாழைக்கச்சல் *vāḻāi-k-kaccal,* பெ.(n.) வாழையின் இளங்காய்; very young, unripe plantain fruit.

*[வாழை + கச்சல். கச்சல் = வாழையிளங்காய்]*

வாழைக்கட்டை *vāḻai-k-kaṭṭai,* பெ.(n.) 1. வாழைக்கிழங்கு (வின்.); large bulbous root of the plantain tree. 2. வாழைத் தண்டு (இ.வ.) பார்க்க ; see *vāḻai-t-taṇḍu.*

*[வாழை + கட்டை]*

வாழைக்கன்று *vāḻāi-k-kaṉṟu,* பெ.(n.) வாழை மரத்தின் கிழங்கினின்று உண்டாகும் இளவாழை; plantain sucker or shoot.

*[வாழை + கன்று]*



வாழைக்காய்[1] *vāḻāi-k-kāy,* பெ.(n.) துவர்ப்புச் சுவையுடைய வாழையின் காய்; fruit of plantain it is used as vegetable. *'வாழைக்காய்ப் பொரியல்'.*

*[வாழை + காய்]*

*'வாழைக்காய் உப்புறைத்தல் இல்' (பழ.)*

வாழைக்காய்[2] *vāḻai-k-kāy,* பெ.(n.) அரையாப்புக் கட்டி; bubo.

*[வாழை + காய்]*

வாழைக்காய்த்தட்டுவாணி *vāḻāi-k-kāy-t-taṭṭuvāṇi,* பெ.(n.) குட்டையான குதிரை வகை (இ.வ.); a kind of short horse, pony.

*[வாழை + காய் + தட்டுவாணி]*

வாழைக்குட்டி *vāḻāi-k-kuṭṭi,* பெ.(n.) வாழைக்கன்று (யாழ்.அக.) பார்க்க; see *vāḻai-k-kaṉṟu.*

*[வாழை + குட்டி]*

வாழைக்கொல்லை *vāḻāi-k-kollai,* பெ.(n.) வாழைத்தோட்டம் (இ.வ.); plantain tope.

*[வாழை + கொல்லை]*

வாழைத்தடல் *vāḻāi-t-taḍal,* பெ.(n.) வாழை மரத்தின் பட்டை (இ.வ.); sheathing petiole of the plantain, plantain bark.

*[வாழை + தடல்]*

**வாழைத்தடை** *vāḻāi-t-taḍai,* பெ.(n.) வாழைத்தடல் பார்க்க; see *vāḻai-t-taḍal.*

*[வாழை + தடை]*

**வாழைத்தண்டு** *vāḻāi-t-tanḍu,* பெ.(n.) 1. வாழை மரத்தின் தலைப்பகுதி நீங்கிய நடுத்தண்டு; stem of the plantain tree. *"வாளை... வாழைத் தண்டிற் பல துஞ்சும்" (சீவக. 2601).* 2. வாழை மரத்தின் பட்டையை உரித்த பின் உட்புறத்திருப்பதும் சமைத்துண்டற்குரியதுமான உறுப்பு (கொ.வ.); internal edible spadix of the plantain tree.

*[வாழை + தண்டு]*



**வாழைநீர்** *vāḻai-nīr,* பெ.(n.) எலும் புருக்கியைப் போக்கும் வாழை மரத்தண்டை இடித்து எடுக்கும் நீர், வாழைக் கிழங்கில் சுரக்கும் நீர்; liquid squeezed or it from the plantain stalk, if a pit is made in the stump of the plantain tree fluid will accumulate in it and it can be drawn out, it is diuretic.

*[வாழை + நீர்]*

**வாழைப்பட்டை** *vāḻāi-p-paṭṭai,* பெ.(n.) வாழைத்தடல் பார்க்க; see *vāḻai-t-taḍal.*

*[வாழை + பட்டை]*

**வாழைப்பழத்தி** *vāḻāi-p-paḻatti,* பெ.(n.) சனகிப்பூண்டு (யாழ்.அக.); buffalo-tongue milk-hedge.

மறுவ. எருமை நாக்கிப் பூண்டு.

*[வாழை + பழத்தி]*

**வாழைப்பழம்** *vāḻai-p-paḻam,* பெ.(n.) முக்கனியுள் ஒன்றான பழுத்திருக்கும் வாழையின் காய்; banana. *'வாழைப் பழத்தில் ஊசியேற்றினாற் போல' (பழ.)*

*[வாழை + பழம்]*



**வாழைப்பிஞ்சு** *vāḻāi-p-piñju,* பெ.(n.) வாழைக்கச்சல் பார்க்க; see *vāḻai-k-kaccal.*

*[வாழை + பிஞ்சு. பிஞ்சு = இளங்காய்]*

வாழைப் பிஞ்சினால் அரத்தக் கடுப்பு, அரத்த மூலம், அதிமூத்திரம், வயிற்றுப்புண் ஆகியன போகும் எனச் சாம்பசிவம் பிள்ளை மருத்துவ அகரமுதலி கூறும்.

**வாழைப்புருதி** *vāḻai-p-purudi,* பெ.(n.) வைடூரியம்; one of nine gems.

*[வாழை + புருதி]*

**வாழைப்பூ**[1] *vāḻai-p-pū,* பெ.(n.) மீன் (மதி.க.ii,38); a cant term for fish.

*[வாழை + பூ]*

**வாழைப்பூ**[2] *vāḻāi-p-pū,* பெ.(n.) வாழையின் பூ; Plantain flower clusters sheathed in spathes.

*[வாழை + பூ]*



**வாழைப்பூவிளக்கு** *vāḻāi-p-pū-viḷakku,* பெ.(n.) குத்து விளக்கு வகை (இ.வ.); lamp with a bowl shaped like a sheathing spathe of a plantain flower.

*[வாழைப்பூ + விளக்கு]*

**வாழைமட்டம்** *vāḻāi-maṭṭam,* பெ.(n.) வாழைக்கன்று (யாழ்.அக.) பார்க்க; see *vāḻai-k-kaṉṟu.*

*[வாழை + மட்டம்]*

**வாழைமடல்** *vāḻāi-maḍal,* பெ.(n.) 1. வாழைத்தடல் பார்க்க; see *vāḻai-t-taḍal.* 2. வாழைப்பூவின் மடல்; sheath of a bunch of plantain flowers.

*[வாழை + மடல்]*

**வாழைமலடி** *vāḻāi-malaḍi,* பெ.(n.) ஒரே பிள்ளையைப் பெற்றவள்; woman who has borne a single child, considered barren. *"அவள் வாழை மலடியாதலால் – புத்திரவதி யல்லள்" (குருபரம். பக். 198, கீழ்க்குறிப்பு).*

ஒ.நோ. கதலிமலடு.

*[வாழை + மலடி]*

**வாழைமுகை** *vāḻāi-mugai,* பெ.(n.) வாழையின் பூ (சீவக. 74, உரை); flower of plantain.

*[வாழை + முகை]*

**வாழையடிவாழை** *vāḻāi-y-aḍi-vāḻai,* பெ.(n.) இடையறாது தொடர்ந்து வரும் வழிமரபு; unbroken lineage as plantain suckers from one root. *"வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபினில்" (அருட்பா. Vi, பிரியே. 4).*

மறுவ. கால்வழி.

*[வாழை + அடி + வாழை]*

*"தந்தை மகன் வழிமுறையாக அல்லது ஆசிரிய மாணவ வழிமுறையாகத் தொடர்ந்து வரும் வரன்முறையை வாழையடி வாழை முறை என்பர்"*
*– (தேவநேயம் 13. பக்.82)*

**வாழைவலை** *vāḻāi-valai,* பெ.(n.) சிறு கண்களையுடைய வலை (இ.வ.); net of small mesh.

*[வாழை + வலை]*

**வாழைவெட்டிக்கலியாணம்** *vāḻāi-veṭṭi-k-kaliyāṇam,* பெ.(n.) மூத்த மகனுக்குத் திருமணம் ஆகாதிருக்கும் பொழுது இளையவனுக்கு ஏற்பாடானால் வாழை மரத்தை முதல் மகனுக்குக் கட்டுவிக்கும் திருமணம்; fictitious marriage of an elder brother with a plantain tree adorned as

his bride, in order to enable his younger brother to marry.

*[வாழை + வெட்டு + கலியாணம்]*

வாள்[1] *vāḷ*, பெ.(n.) 1. ஒளி (தொல். சொல். 367); lustre, light, splendour. *"வாண்முகம்" (புறநா. 6).* 2. விளக்கம்; brightness. *"மாலை வாள் கொளா" (கலித். 119).* 3. புகழ்; fame. *'வலைய வாளராமீது' (தக்கயாகப். iii, உரை).* 4. கூர்மை (அரு.நி.); sharpness, fineness. 5. கொல்லுகை (தொல். எழுத். 401, உரை); killing. 6. கொடுமை; cruelty. *"வாளரக்கி".* 7. கத்தி; sword, scimitar. 8. ஈர்வாள்; saw. *"நாளென வொன்றுபோற் காட்டி யுயிரீரும் வாள துணர்வார்ப் பெறின்" (குறள், 334).* 9. கலப்பை (நாமதீப. 470); plough. 10. உழுபடையின் கொழு; ploughshare. 11. கத்திரிக்கோல்; scissors. *"வாளிடைப்படுத்த வயங்கீரோதி" (கலித்.36).*

தெ. வாலு; **ma.** *vāḷ*, **To.** *po-l*, **Ka.** *bālu*, **Kod.** *ba-ḷikatti*, **Tu.** *bāḷu*, **Te.** *vālu.*

*'வாளுக்கு ஆயிரம் தோளுக்கு ஆயிரம் சம்பாரித்தாலும் மட்டாய்ச் செலவிடு' (பழ.).*

*[வள் → வாள்]*



வாள்[2] *vāḷ*, பெ.(n.) கயிறு (அக.நி.); string.

வாள்[3] *vāḷ*, பெ.(n.) நீர் (அக.நி); water.

வாள்[4] *vāḷ*, பெ.(n.) கச்சு (அக.நி.); bodice.

வாள்அலங்காரம் *vāḷ-alaṅgāram*, பெ.(n.) தண்டபாணி அடிகளால் கி.பி.19 ஆம் நூற்றாண்டில் எழுதப்பெற்ற நூல்; a book written by *Taṇḍabāṇi swami* in 19th century.

*[வாள் + அலங்காரம்]*

வாள்கைக்கொண்டாள் *vāḷ-kai-k-koṇḍāḷ*, பெ.(n.) கொற்றவை (சூடா.); *durgā.*

*[வாள் + கை + கொண்டாள்]*

வாள்செலவு *vāḷ-šelavu*, பெ.(n.) எதிர்த்து வந்த அரசனது பொருபடையிடத்து எதிரூன்றும் வேந்தன் தன் அரசவாளை முன்னதாக விடுத்தலைக் கூறும் புறத்துறை (பு.வெ.4, 7); (purap.) theme which describes a king sending his sword in advance while commencing action against an invading enemy.

*(கொளு.) "அருமுனையான் அறைகூவினபின்*
*செருமுனைமேல் வாள்சென்றன்று"*
*(பு.வெ.4 – 7).*

வஞ்சியார் போர்க்கழைத்தபின் அவர் படையிடத்தே காஞ்சியரசன் வாளினைப் போகவிடுதல் வாள்செலவு என்னும் துறையாம்.

எ–டு:

*"உணங்கு புலவறா ஒன்னார குரம்பை*
*நுணங்கரில் வெம்முனைநோக்கி – அணங்கிய*
*குந்த மலியும் புரவியான் கூடாதார்*
*வந்தபின் செல்கென்றான் வாள்"*

*[வாள் + செலவு]*

வாள்மங்கலம் *vāḷ-maṅkalam*, பெ.(n.) அரசனுடைய வாளைப் புகழ்ந்து உரைக்கும் புறத்துறை; (purap.) theme which

describes a king's sword.

*"கயக்கருங் கடற்றானை*
*வயக்களிற்றான் வான்புகழ்ந்தன்று"*
*(பு.வெ. கொளு. 9–35).*
*"கொங்கவிழ் ஐம்பால் மடவார் வியன்கோயில்*
*மங்கலங் கூற மறங்கனலும் – செங்கோல்*
*நிலந்தரிய செல்லும் நிரைதண்தார்ச் சேரன்*
*வலந்தரிய ஏந்திய வாள்".*
*(பு.வெ.9–35 எ–டு)*

*[வாள் + மங்கலம்]*

வாள்மாது *vāḷ-mādu,* பெ.(n.) கொற்றவை; a Goddess.

*[வாள் + மாது]*

வாள்மீன் *vāḷ-mīṉ,* பெ.(n.) ஒரு கடல் மீன்; sword fish.

மறுவ. ஏமங்கோலா

*[வாள் + மீன்]*



வாள்வட்டணை *vāḷ-vaṭṭaṇai,* பெ.(n.) வாட் போரில் இட வலமாகச் சுற்றுகை; moving to the right and left in sword play or fight. *"மன்னர்விடு சரங்க ளெல்லாம்..... வாள் வட்டணையிலே துணித்து" (பாரதவெண். 803).*

*[வாள் + வட்டணை]*



வாள்வரி *vāḷ-vari,* பெ.(n.) புலி; tiger, as marked with curved, brilliant stripes. *"மதகரிக் களபமும் வாள்வரிப் பறழும்" (சிலப். 25, 49).*

*[வாள் + வரி]*

வாள்வரிக்கொடுங்காய் *vāḷ-vari-k-koḍuṅgāi,* பெ.(n.) வெள்ளரிக்காய்; cucumber melon, as stripes. *"வாள்வரிக் கொடுங்காய் மாதுளம் பசுங்காய்" (சிலப்.16,25).*

*[வாலரிக்கொடுங்காய் → வாள்வரிக் கொடுங்காய்]*

வாள்வலம் *vāḷ-valam,* பெ.(n.) *வாள்வீரம்* பார்க்க; see *vāḷ-vīram.* *"விடலை வாள்வலங் கொண்டு காவலோம்ப" (பெருங். உஞ்சைக். 54, 141).*

*[வாள் + வலம்]*

வாள்வாளெனல் *vāḷ-vāḷ-eṉal,* பெ.(n.) அழுது கதறுதற்குறிப்பு; of howling, as of a dog. *"குழந்தை வாள்வாளென்கிறது".*

*[வாள் + வாள் + எனல்]*

வாள்வீச்சு *vāḷ-vīccu,* பெ.(n.) 1. வாளைச் சுழற்றுகை; brandishing of a sword, sword-play. 2. பரவர் நடத்தும் வாள்

விளையாட்டு; sword game, as practised among paravas.

*[வாள் + வீச்சு. வீசு→வீச்சு]*

வாள்வீரம்[1] *vāḷ-vīram,* பெ.(n.) வாட்போர்த் திறமை; swordsmanship, skill in the use of the sword.

*[வாள் + வீரம்.ஒருகா. வால்வலம்]*

வாள்வீரம்[2] *vāḷ-vīram,* பெ.(n.) வில்வம்; bael. *"வாள்வீரம்" (பரிபா. 11, 19).*

*[மாலூர → வாள்வீரம்]*

வாளகச்சிகை *vāḷa-kaccigai,* பெ.(n.) சித்திரமூலம் என்னும் மூலிகை; a shrub.

வாளகம்[1] *vāḷagam,* பெ.(n.) குந்துருக்கம்; frankincense.

வாளகம்[2] *vāḷagam,* பெ.(n.) வெட்டிவேர் (நாமதீப. 327); cuscuss grass.

வாளகிரி *vāḷa-giri,* பெ.(n.) உட்புறம் ஒளியும் வெளிப்புறம் கருளுங்கொண்டு நிலவுலகைச் சூழ்ந்துள்ளதாகக் கருதப்படும் மலை (சக்கரவாளம்); a mythical range of mountains. *"வாளகிரியை... நிகர்க்கு மெயிலும்" (திருவாலவா. திருநகர. 4).*

வாளத்தேலம் *vāḷa-t-tēlam,* பெ.(n.) நேர்வாளத் தெண்ணெய்; croton oil.

*[வாள + தேலம்]*

வாளநாதிகாமம் *vāḷanādi-kāmam,* பெ.(n.) வெள்ளை நாயுருவி; ordinary white indian burr-achyranthus aspera.

*[வாள + நாதி + காமம்]*

வாளப்பருப்பு *vāḷa-p-paruppu,* பெ.(n.) நேர் வாளப் பருப்பு; croton seed pulp.

*[வாள + பருப்பு]*

வாளப்பன் *vāḷ-appaṉ,* பெ.(n.) பழனி மலையிலுள்ள குன்றுவர் வணங்கும் ஒரு சிறு தெய்வம் (E.T.iv.122); a deity worshipped by the *Kuṉṟuvar* of the palani hills.

வாளயம் *vāḷayam,* பெ.(n.) பிரமி; a prostate plant - Gratiola moniera.

வாளம்[1] *vāḷam,* பெ.(n.) வாள்; sword. *"கையொடு புகர்வாளமும்... விழ" (பாரத. பதின்மூன். 113).*

*[வாள் + அம். அம் = பெருமைப்பொருட் பின்னொட்டு]*

வாளம்[2] *vāḷam,* பெ.(n.) யாளி (நாமதீப. 199); a mythical animal.



வாளம்[3] *vāḷam,* பெ.(n.) 1. வட்டம்; circle. *"வாளமாகவோர் பவளமால்வரை... வளைந்தென்ன" (பாரத. காண்டவ. 11).* 2. சக்கரவாளம் (யாழ்.அக.); a mythical range of mountains. 3. சக்கரவாகப் பறவை; the cakra bird. *"மங்கைமார் தடமுலையெனப் பொலிவன வாளம்" (கம்பரா. பம்பை. 21).*

[வள் → வாள் → வாளம். (வ.மொ.வ.258).]

வாளம்[4] *vāḷam,* பெ.(n.) நேர்வாளம்; croton.

[வாள் → வாளம்]

வாளமலை *vāḷa-malai,* பெ.(n.) வாள்வீச்சு பார்க்க; see *vāl-viccu.* *"கழித்து வாளமலையாடி" (சீவக. 783).*

[வாள் + அமலை]

வாளரம் *vāḷ-aram,* பெ.(n.) 1. ஈர்வாளைக் கூர்மையாக்க வுதவும் அரவகை; two - edged file to sharpen the teeth of a saw. *"வாளரந் துடைத்த வைவேல்" (சீவக. 461) (வின்.).* 2. மரமறுக்கும் வாள்; saw. *'வேம்பினுடைய வாளரத்தின் வாய்போலும் விளிம்பினையுடைய அழகிய தளிரால்' (பொருந. 144, உரை).*

[வாள் + அரம்]

வாளரி *vāḷ-ari,* பெ.(n.) அரிமா (பிங்.); lion.

[வாள் + அரி]



வாளவரை *vāḷ-avarai,* பெ.(n.) கொடிவகை (பதார்த்த 707); sword-bean(m) cl, canavalia ensiformis.

மறுவ. தம்பட்டங்காய், வெள்ளையவரை.

[வாள் + அவரை]



வாளா *vāḷā,* கு.வி.எ. (adv.) 1. பேசாமல்; silently, quietly. *"வயப்பட்டான் வாளா விருப்பானேல்" (நாலடி, 325).* 2. புறக் கணிப்பாய்; indifferently. 3. பயனின்றி; uselessly, fruitlessly, vainly. *"தீவிளி விளிவன் வாளா" (திவ். திருமாலை. 30).*

வாளாகம் *vāḷāgam,* பெ.(n.) முல்லைக் கொடி; a variety of jasmine creeper.

வாளாங்கு *vāḷāṅgu,* கு.வி.எ.(adv.) *வாளா* பார்க்க; see *vāḷā.* *"வாளாங்கிருப்பீர்" (தேவா. 745, 1).*

வாளாண் *vāḷāṇ.* பெ.(n.) வாளாண்மை பார்க்க; see *vāḷāṇmai.* *"வாளா ணெதிரும் பிரிவினானும்" (தொல். பொ. 107).*

ஒ.நோ. வேளாண் முகத்த களிறு (குறள்.)

[வாள் + ஆள் → ஆண்]

வாளாண்மை *vāḷ-āṇmai,* பெ.(n.) வாள்வீரம் பார்க்க; see *vāḷ-viram.* *"வாளாண்மை செய்தற்கொத்த பிரிவு தோன்றியவழியும்" (தொல். பொருள். 107, உரை).*

[வாள் + (ஆள் → ஆண் → ஆண்மை = ஆளுந்தன்மை) ஆண்மை (குறள்.)]

வாளாது *vāḷādu,* கு.வி.எ. (adv.) வாளா பார்க்க; see *vāḷā.* *"வாளாதே போவரான் மாந்தர்கள்" (நாலடி. 30).*

வாளாமை *vāḷāmai,* பெ.(n.) பேசாதிருத்தல்; silence, quietness. *"வாய்வாளாமை... புகல்வான்" (மணிமே. 30, 245).* 2. புறக் கணிப்பு (வின்.); indifference. 3. பயனின்மை; uselessness. 4. உள் ளீடின்மை (வின்.); emptiness.

*[வாளா → வாளாமை]*

வாளால்வழிதிறந்தான் *vāḷāl-vaḻi-tiṟandāṉ,* பெ.(n.) பாண்டியவரசர் சிலரது பட்டப்பெயர் (I.M.P.Mr.79); appellation of certain *Pāṇḍya* Kings.

*[வாள் + ஆல் + வழி + திறந்தான்]*

வாளால்வழிதிறந்தான்குளிகை *vāḷāl-vaḻi-tiṟandāṉ-kuḷigai,* பெ.(n.) பழைய நாணய வகை (புதுக். கல். 325); a *Pāṇḍya* coin of ancient times.

*[வாள் + ஆல் + வழி + திறந்தான் + குளிகை]*

வாளால்வழிதிறந்தான்பணம் *vāḷāl-vaḻitiṟandāṉ-paṇam,* பெ.(n.) காசு வகை (புதுக்கல். 767); a kind of coin.

*[வாளால் + வழி + திறந்தான் + பணம்]*

வாளாவிரை *vāḷā-virai,* பெ.(n.) வாளவரை (M.M.875) பார்க்க; see *vāḷ-avarai.*

*[வாளவரை → வாளவிரை]*

வாளாளன் *vāḷāḷaṉ,* பெ.(n.) வாளுழவன் (பிங்.) பார்க்க; see *vāḷ-uḻavaṉ.*

*[வாள் + ஆளன்]*

வாளி[1] *vāḷi,* பெ.(n.) 1. வாள் வீரன்; swordsman. *"வாளிக ணிலை பெற மறலுவார்" (பரிபா. 9, 54).* 2. அம்பு; arrow. *"மார்புற வாங்குவார் வாளி" (பரிபா. 9, 54).*

தெ. வாலி.

*[வாள் → வாளி]*

வாளி[2] *vāḷi,* பெ.(n.) வட்டமாயோடுகை; circular course, as of a horse. *"வாளிவெம்பரி" (பாரத. குரு. 108.). "மாதிர முறப்பல வாளிபோதுமால்" (பாரத. சூது. 121). "மா.வி.அ. சுற்றளவு (Circumference) என்று மட்டும் குறித்துள்ளது" (தேவநேயம். 13, பக். 82).*

*[வள் → வாள் → வாளி]*

வாளி[3] *vāḷi,* பெ.(n.) ஒருவகைக் காதணி; a kind of ear-stud or ear-ring. *"வாளிமுத்தும்" (குமர. பிர. முத்து. பிள். 11) (S.I.I.ii.16).*

*[வாள் → வாளி (வே.க.109)]*

வாளி[4] *vāḷi,* பெ.(n.) நீர்ச்சால் வகை (இக்.வ.); bucket.

*[வாள் → வாளி (வே.க.109, வ.மொ.வ. 258)]*

வாளிகை *vāḷigai,* பெ.(n.) வாளி[3] பார்க்க; see *vāḷi.* *"சுட்டிகையும் வாளிகையும்" (பதினொ. திருக்கைலாய. 68).*

*[வாளி → **Skt.** vālikā > த. வாளிகை. (வ.மொ.வ.258)]*

வாளிச்சிமேனி *vāḷicci-mēṉi,* பெ.(n.) மாணிக்கம் (யாழ்.அக.); ruby.

*[வாளிச்சி + மேனி]*

வாளிச்சூத்திரம் *vāḷi-c-cūttiram,* பெ.(n.) நீர் இறைப்பதற்காக வாளிகள் அடுக்கடுக்காகக் கோத்த இயந்திரம் (இ.வ.); the persian wheel.

*[வாளி + **Skt.** sūdhrā > த. சூத்திரம்.]*

வாளிப்பு *vāḷippu,* பெ.(n.) உருட்சி திரட்சி; youthfulness. "*வாளிப்பான தோள்கள்*".

வாளிபோ-தல் *vāḷi-pō-,* 13 செ.கு.வி. (v.i.) குதிரை முதலியன வட்டமாயோடுதல்; to run in a circle, as a horse. "*மாதிர முறப்பல வாளிபோதுமால்*" *(பாரத. சூது. 121).*

வ. பாலி.

*[வாளி + போ-.]*

வாளியம்பு *vāḷi-y-ambu,* பெ.(n.) அலகம்பு; a kind of arrow, having a blade at its head. "*வாளியம்பன வாட்டங் கண்ணி*" *(அகநா. 67).*

*[வாள் → வாளி + அம்பு]*

வாளீரல் *vāḷ-īral,* பெ.(n.) ஈரல் வகை (யாழ்.அக.); spleen.

*[வாள் + ஈரல்]*

வாளுச்சம் *vāḷuccam,* பெ.(n.) கறுப்புக் கடலை; black bengal gram.

*[வாள் + உச்சம்]*

வாளுழத்தி *vāḷ-uḷatti,* பெ.(n.) கொற்றவை (சிலப். 12, உரை, பக். 329); Goddess of victory.

*[வாள் + உழத்தி]*

வாளுழவன் *vāḷ-uḷavaṉ,* பெ.(n.) 1. வாள் வீரன்; swordsman. 2. படைவீரன் (திவா.); soldier. 3. தானைத்தலைவன் (சூடா.); commander.

*[வாள் + உழவன்]*

வாளெடுப்பான் *vāḷ-eḍuppāṉ,* பெ.(n.) அரசனின் முன் வாளேந்தி செல்வோன் (நெடுநல். 182, உரை); sword-bearer of a King.

*[வாள் + எடு - வாளெடு → வாளெடுப்பான்]*

வாளேந்தி *vāḷ-ēndi,* பெ.(n.) 1. வாளேந்து வீரன் (வின்.); warrior armed with a sword. 2. கொற்றவை (யாழ்.அக.); *durgā.*

*[வாள் + ஏந்து→ஏந்தி]*

வாளேறு *vāḷ-ēṟu,* பெ.(n.) 1. வாட்புண்; sword-cut. '*வாளேறு காணத் தேளேறு மாயுமா போலே*' *(ஈடு. 3, 9, ப்ர.).* 2. ஒளி யெறிகை (தக்கயாகப். 106, உரை); dazzling.

*[வாள் + ஏறு. ஏறு = எறிந்ததனாலான புண் - வடு]*

வாளை[1] *vāḷai,* பெ.(n.) மூளையின் சதைப்பகுதி; a part of brain.

வாளை[2] *vāḷai,* பெ.(n.) 16 விரலம் வளர்வதும் வெண்ணிற முள்ளதுமான மீன் வகை; scabbard-fish, silvery attaining 16 inch. in length, Trichiurs haumela. "*வாளை வாயுறைப்ப நக்கி*" *(சீவக. 1198).* 2. 6 அடி வளர்வதான ஏரிவாளை; fresh water shark, attaining 6 ft. in length, wallago attu. 3. நீலங்கலந்த பச்சை வண்ணமுடையதும் 12 அடி வளர்வதுமான முள்வாளை; a sea-fish, bluish green, attaining 12 ft. in length, chirocentrus dorab.

தெ. வாலுக; க. பாளெ; ம. வாளமீன்; **Kod.** பாளெமீனி; து. பாளெமீனு.

*[வாள் → வாளை]*

எலும்புச் சட்டகம் உள்ள மீன் இனம். கடலின் மேற்பரப்புக்கு அருகில் பெருங் கூட்டங்களாக வாழ்பவை. இம் மீன்களின் உடல் தட்டையாக, அகலமின்றி, மிக நீளமாக, வால்புறம் கூராகவெள்ளி போல மிளிரும் வெண்ணிற முடையதாக, வாள்போல அல்லது நாடாப்போல இருக்கும். வாலில் துடுப்பு இல்லாமல் மயிர் நீண்டிருக்கும். இதனால் இம் மீன்கள் ட்ரிக்கிகூரஸ் (trichiurus) அதாவது மயிர்வால் எனப் பெயர் பெறும். உடலில் செதில்கள் இருப்பதில்லை. முதுகு நெடுகிலும் ஒரே நீண்ட துடுப்பு இருக்கும். வாயில் பற்கள் பல கூராகவும், பலமாகவும் வடிவு நன்றாக அமைந்தவையாகவும் இருக்கும். இவை இம்மீன்களுக்கு உணவாகிய சிறுமீன்களையும் இறால் முதலியவற்றையும் பிடித்துத் தின்பதற்கு ஏற்றவை.

வாளைக்கடியன் *vāḷai-k-kaḍiyaṉ,* பெ.(n.) 4 அடி வளர்வதும் நச்சு உள்ளதுமான கடற்பாம்பு வகை (யாழ்.அக.); sea-snake, attaining 4 ft. in length Enhydrinon bengalensis.

*[வாளை + கடியன்]*

[கடற்பாம்புகளுக்கு வழங்கும் பெயர். இவற்றின் வால் பக்கவாட்டிலே மிகவும் அழுந்தித் தட்டையாக இருக்கும். பல இனங்களிலே வால் மட்டுமன்றி வாலுக்கு முன்னே உள்ள உடம்பும் தட்டையாக இருக்கும். இவ்வித வாலும் உடம்பும் நீரில் நீந்துவதற்கு மிகவும் ஏற்றவை. இவற்றின் உடல் வாளை மீனின் உடல்போல நீண்டு தட்டையாக இருக்கின்றது. இக்காரணங்களால் வாளைக்கடியன் என்னும் பெயர் மிகவும் பொருத்தமாக அமைந்துள்ளது.

கடற்பாம்புகளின் உடலைப் போர்த்துள்ள செதில்கள் சிறியவையாக இருக்கும். உடலின் அடிப்பக்கத்திலுள்ள செதில்களும் உடலின் மற்றப் பாகங்களில் இருப்பவை போன்ற சிறிய செதில்களே. தலையில் கேடகங்கள் ஒழுங்காக அமைந்திருக்கும்.

கடற்பாம்புகளெல்லாம் மிகக் கொடிய நஞ்சுள்ளவை. இவற்றின் நஞ்சு நாகத்தின் நஞ்சினும் கொடுமையுடையது. கடற்பாம்புகள் மீன்களைப் பிடித்துத் தின்னும்]



வாளைக்கப்பல் *vāḷai-k-kappal,* பெ.(n.) புகையிலை வகை (இ.வ.); a variety of tobacco.

*[வாளை + கப்பல்]*

வாளைகம் *vāḷaigam,* பெ.(n.) பித்தளை; brass.

வாற்கரண்டி *vāṟkaraṇḍi,* பெ.(n.) வாற்கிண்ணம் பார்க்க; see *vāṟ-kiṇṇam.*

*[வால் + கரண்டி]*

வாற்கிண்ணம் *vāṟ-kiṇṇam,* பெ.(n.) எண்ணெய் முதலியன வைத்தற்குரியதும் கைப்பிடியுள்ளதுமான கிண்ண வகை; a kind of cup with a tail-like handle, to hold oil, etc.

*[வால் + கிண்ணம்]*



வாற்குறுவை *vāṟ-kuṟuvai,* பெ.(n.) ஒரு வகை நெல்; a kind of paddy.

*[வால் + குறுவை]*

வாற்கொடி *vāṟ-koḍi,* பெ.(n.) கப்பலின் பாய்மரத்திற் கட்டும் ஒரு வகைக் கொடி (வின்.); pennon for the mizen mast.

*[வால் + கொடி]*

வாற்கொண்டலாத்தி *vāṟ-koṇḍalātti,* பெ.(n.) இராப்பாடிக்குருவி; paradise fly-catcher.

*[வால் + கொண்டலாத்தி]*



வாற்கோதும்பை *vāṟ-kōdumbai,* பெ.(n.) வாற்கோதுமை (யாழ்.அக.) பார்க்க; see *vāṟ-kōdumai.*

*[வால் + கோதும்பை]*

வாற்கோதுமை *vāṟ-kōdumai,* பெ.(n.) கோதுமை வகை; barley cereal.

*[வால் + கோதுமை]*

வாற்சகம் *vāṟšagam,* பெ.(n.) 1. கன்றுக் கூட்டம் (யாழ்.அக.); herd of calves. 2. ஆநிரை; herd of cows.

*[வால் + சகம். சகம் = skt.]*

வாற்படம் *vāṟ-paḍam,* பெ.(n.) நவச்சாரம்; sal tammoniac.

*[வால் + படம்]*

வாற்பேத்தை *vāṟ-pēttai,* பெ.(n.) தவளைக் குஞ்சு; tadpole.

*[வால் + பேத்தை]*

வாற்றரகு *vāṟṟaragu,* பெ.(n.) வால்தரகு பார்க்க; see *vāl-taragu.*

*[வால் + தரகு]*

வாறன்விளை *vāṟaṉ-viḷai,* பெ.(n.) கேரள மாநிலம் கொல்லம் அருகில் அமைந்துள்ள திருமால் பாடல் பெற்ற வைணவத் தலம்; நம்மாழ்வார் இத்தலத்தை சிறப்பித்துப் பாடியுள்ளார்; a vaishnava place having the distinction of being sung by saint N*ammāḻvār.* It is in Kerala state near *Kollam. "மாகம்திகள் கொடி மாடங்கள் நீடும் மதிள் திருவாறன் விளை" (நாலா–2844).*

*[வாறன்விளை → திருவாறன்விளை]*

வாறான் *vāṟāṉ,* பெ.(n.) கப்பற்பாய் கட்டுங்கயிறு; (Naut) small stay to the leeward of the sail to keep it in place.

தெ. வார.

வாறியுளடு *vāṟiyuḷaḍu,* பெ.(n.) மாறுபாடான அம்மை; modified small pox.

*[வாரி → வாறி + உளடு]*

வாறு¹ *vāṟu,* பெ.(n.) 1. வகை; manner. *"சேர்ந்துணரும் வாறின்று சேர்ந்திடீர்" (மதுரைச். உலா, 328).* 2. அடையத்தக்க பேறு; objective, goal. *"வாறாராயாதே" (திருப்பு. 993).*

*[ஆறு → வாறு]*

வாறு[2] *vāṟu,* பெ.(n.) வலிமை (யாழ்.அக.); strength.

*[ஆற்று → ஆறு → வாறு]*

வாறு[3] *vāṟu,* பெ.(n.) வரலாறு; history. *"வன்சூழியற் புலவன் வாறு சொல்வேன்" (பஞ்ச. திருமுக. 870).*

*[ஆறு → வாறு]*

வாறுகோ *vāṟugō,* பெ.(n.) கொம்மட்டி; a variety of melon.

*[வாறு + கோ]*

வாறோசுசூடன் *vāṟōšu-cūḍaṉ,* பெ.(n.) கருப்பூரவகை (சிலப். 14, 109, உரை); a kind of camphor, as probably from the forest in Baros or Fansur in the celebes.

வான்[1] *vāṉ,* பெ.(n.) 1. வானம்; sky, the visible heavens. *"வானுயர் தோற்றம்" (குறள், 272).* 2. மூலமுதற்பொருள் பிரகிருதி; primordial matter. *"வானின் றிழிந்து வரம்பிகந்த மாபூதத்தின்" (கம்பரா. அயோத். மந்திர. 1).* 3. மேகம்; cloud. *"ஏறொடு வான் ஞெமிர்ந்து" (மதுரைக். 243).* 4. மழை; rain *"வான்மடி பொழுதில்" (பெரும்பாண். 107).* 5. தேவருலகு; celestial world. *"வான்பொரு நெடுவரை" (சிறுபாண். 128).* 6. அமுதம்; ambrosia. *"வான் சொட்டச் சொட்ட நின்றட்டும் வளர்மதி" (தேவா. 586, 1).* 7. தேவருலகம்; heaven. *"வானேற வழி தந்த" (திவ். திருவாய். 10, 6, 5).* 8. நன்மை; goodness. *"வரியணி சுடர்வான் பொய்கை" (பட்டினப். 38).* 9. பெருமை (பிங்.); greatness, largeness. *"இருடுங்கு வான்முழை" (காசிக. காசியின் சிறப். 13).* 10. அழகு; beauty. *"வான்பொறி பரந்த புள்ளி வெள்ளையும்" (கலித். 103).* 11. வலிமை (பிங்.); strength. 12. நேர்மை; regularity. *"வானிரை வெண்பல்" (கலித். 14).* 13. மரவகை (பிங்.); a kind of tree.

தெ. வாந; க. பாந; **ma.** *vāṉ, māṉam*; **Ko.** *vānm*; **To.** po-n; **Kol.** va-na; **Nk.** *vāna*; **pa.** *vāni*; **Ga.** vayin.

*[மால் → மான் → வான். (வே.க.38)]*

*'வான் செய்த உதவிக்கு வையகம்*
*என்ன செய்யும்'* – *(பழ.)*

வான்[2] *vāṉ,* இடை(part.) ஒரு வினையெச்ச ஈறு (நன். 343); an ending of verbal participle.

வான்[3] *vāṉ,* இடை(part.) உடைமைப் பொருள் காட்டும் ஒரு வடமொழி ஈறு; a sanskrit suffix meaning 'possessor of '. *"கிரியாவான்" (சி.சி.12,5).*

வான்கண் *vāṉ-kaṇ,* பெ.(n.) கதிரவன்; sun. *"வான்கண் விழியா வைகறை யாமத்து" (சிலப். 10, 1, அரும்.)*

வான்கல்லு *vāṉ-kallu,* பெ.(n.) வான் மீன்; meteorite.

*[வான் + கல்லு]*

வான்கழி *vāṉ-kaḻi,* பெ.(n.) துறக்கம் (திருக்கோ. 85, உரை); the highest heaven.

வான்கொடி[1] *vāṉ-koḍi,* பெ.(n.) மின்னற் கொடி; streak of lightning. *"வான்கொடி யன்னாள்" (சிலப். 1, 24).*

*[வான் + கொடி]*

வான்கொடி[2] *vāṉ-koḍi,* பெ.(n.) ஆகாய வல்லி; a running plant.

*[வான் + கொடி]*

வான்கோழி *vāṉ-kōḻi*, பெ.(n.) கோழிவகை; turkey. *"கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி... ஆடினாற் போலுமே" (மூதுரை. 14).*

*[வான் + கோழி]*



வான்பதம் *vāṉ-padam*, பெ.(n.) முத்தி; final emancipation. *"எனக்கே வான் பதமளிக்க" (அருட்பா. VI, அருட்பெருஞ். அ. 1181).*

*[வான் + பதம்]*

வான்பயிர் *vāṉ-payir*, பெ.(n.) நன்செய், புன்செய்ப் பயிரல்லாத கொடிக்கால் வாழை, கரும்பு முதலிய தோட்டப் பயிர்; garden crops and fruit trees, especially valuable kinds of produce raised on wet land, as betel, plantains, sugarcane. *"வான் பயிருக்கும் நஞ்சை புஞ்சைக்கும்... ஒன்று முக்கால் கொள்ளக் கடவோமாகவும்" (S.I.I.iv.105).*

*[வான் + பயிர்]*

வான்பயிரம்பலம் *vāṉpayir-ambalam*, பெ.(n.) வான் பயிர்க்குரிய வரிதண்டும் அலுவல் (M.M.357); office for the collection of assessment on garden lands.

*[வான்பயிர் + அம்பலம். அம்பலம் = அலுவல்]*

வான்பிரயோசனம் *vāṉ-pirayōšaṉam*, பெ.(n.) மரக்கறி (யாழ்.அக.); vegetable curry.

*[வான் + **Skt.** prayōjaṉā > த. பிரயோசனம்]*

வான்புலம் *vāṉ-pulam*, பெ.(n.) உண்மை யறிவு (சீவக. 793, உரை.); true knowledge.

*[வான் + புலம்]*

வான்புலவு *vāṉ-pulavu*, பெ.(n.) வான்கோழிப் புலவு (இக்.வ.); pulau made of turkey.

*[வான்கோழி + புலவு→வான்புலவு]*

வான்மகள் *vāṉ-magaḷ*, பெ.(n.) இந்திராணி; *Indrāṇi*. *"மண்மகளு நாமகளும் வான்மகளும்" (திருவாரூ. 114).*

*[வான் + மகள்]*

வான்மணி *vāṉ-maṇi*, பெ.(n.) ஞாயிறு; sun. *"ஓராயிர மகல் வான்மணியொக்கும்" (பாரத. அருச்சுனன்றவ. 159).*

*[வான் + மணி]*

வான்மியூர் *vāṉmiyūr*, பெ.(n.) சென்னை மாவட்டத்தில் அலைவாயி லமைந்ததோரூர்; திருஞானசம்பந்தரால் பாடல் பெற்ற தலம்; one of the saiva sea shore places having the distinction of being sung by saint. Sampandar. It is in Chennai District. *"கரையுலாங் கடலிற் பொலி சங்கம் வெள்ளிப்பிவள் திரையுலாங் கழி மீன் உகளுந்திரு வான்மியூர்" (140–1)*

*[வான்மியூர் → திருவான்மியூர்]*

வான்மிளகு vāṉ-miḷagu, பெ.(n.) வால் மிளகு; cubeb.

[வால் + மிளகு]

க. பாலமிணசு.

வான்மீகபலம் vāṉmīga-palam, பெ.(n.) எலுமிச்சை (சங்.அக.); lime.

[வான்மீகம் + **Skt.** pala > த. பலம்]

வான்மீகம்[1] vāṉmīgam, பெ.(n.) வால்மீகம்; the *Rāmāyana* of *Vālmīgi.*

வான்மீகம்[2] vāṉmīgam, பெ.(n.) குங்குமப்பூ (தைலவ.); saffron flower.

வான்மீகம்[3] vāṉ-mīgam, பெ.(n.) புற்றாஞ் சோறு; mother white ant.

வான்மீன்[1] vāṉ-mīṉ, பெ.(n.) விண்மீன் (புறநா. அரும்.); star.

ஒருகா. விண்மீன்.

[வான் + மீன்]

வான்மீன்[2] vāṉ-mīṉ, பெ.(n.) வால்விண்மீன் (பிங்.) பார்க்க; see *vāl-naṭšattiram.*

[வால் → வான் + மீன்]

வான்மெழுகு vāṉ-meḻugu, பெ.(n.) ஊதை நோய்களுக்காக கல்லாடத்தில் சொல்லிய ஒரு மருந்து; a medicine described in the Tamil medical book named Kalladam.

[வான் + மெழுகு]

வான்மேனி vāṉ-mēṉi, பெ.(n.) கொட்டான்; a tree.

[வான் + மேனி]

வான்மை vāṉmai, பெ.(n.) 1. தூய்மை; purity. *"வான்மையின் மிக்கார் வழக்கு" (அறநெறி.2).* 2. வெண்மை; whiteness. *"வாசியிதனிலாங் கூலம் வான்மையதோ நீன்மையதோ" (சேதுபு. கத்துரு. 8).*

[புல் → பல் → பால் → வால் → வான்மை]

வான்மைந்தன் vāṉ-maindaṉ, பெ.(n.) (வாயு) வளித் தேவன் (பாரத. நச்–17); *vāyu.*

[வான் + மைந்தன்]

வான்மொழி vāṉ-moḻi, பெ.(n.) வானொலி; voice from the heavens. *"வான்மொழி புகன்ற வாறும்" (பாரத. திரௌ. 2).*

[வான் + மொழி]

வான்வளம் vāṉ-vaḷam, பெ.(n.) மழை; rain. *"வான்வளஞ் சுரத்தலும்"* (மாறனலங். 176, உதா. 402)

[வான் + வளம்]

வான்விளக்கம் vāṉ-viḷakkam, பெ.(n.) ஞாயிறு (நாமதீப. 93); sun.

[வான் + விளக்கம்]

வான்றரு vāṉṟaru, பெ.(n.) கற்பகமரம்; celestial tree. *"வான்றரு மாரி வண்கை" (சீவக. 1091).*

[வான் + தரு. தரு = skt.]

வானக்கோளமண்டலம் vāṉa-k-kōḷa-maṇḍalam, பெ.(n.) கோள உருண்டை (புதுவை.); circle of a sphere.

[வானம் + கோளம் + மண்டலம்]

வானத்தீ vāṉa-t-tī, பெ.(n.) இடி (புதுவை.); thunder.

[வானம் + தீ]

**வான்றேர்ப்பாகன்** *vāṉṟēr-p-pāgaṉ*, பெ.(n.) காமன் (வானத்திலுலவுந் தென்றலாகிய தேரைச் செலுத்துவோன்); *Kāma*, as riding on the south-wind through the sky. *“வான்றேர்ப் பாகனை மீன்றிகழ் கொடியனை” (மணிமே. 20, 91).*

*[வான் + தேர்+ பாகன்]*

**வானக்கல்**[1] *vāṉa-k-kal*, பெ.(n.) அடிமனைக் கல் (சங்.அக.); foundation stone.

மறுவ. கடைக்கால்.

*[வானம் + கல்]*

**வானக்கல்**[2] *vāṉa-k-kal*, பெ.(n.) காகச்சிலை (யாழ்.அக.); black loadstone.

*[வானம் + கல்]*

**வானக்குழலாள்** *vāṉa-k-kuḻalaḷ*, பெ.(n.) வெள்ளாடு; goat.

*[வானம் + குழலாள்]*

**வானகப்புதைச்சி**[1] *vāṉaga-p-pudaicci*, பெ.(n.) கருவண்டு (யாழ்.அக.); black beetle.

*[வானகம் + புதை → புதைச்சி]*

**வானகப்புதைச்சி**[2] *vāṉaga-p-pudaicci*, பெ.(n.) கதண்டுக் கல்; a kind of mineral stone.

*[வானகம் + புதைச்சி]*

**வானகம்** *vāṉagam*, பெ.(n.) 1. வானம்; sky. *“வானகத்தில் வளர் முகிலை” (தேவா. 1078, 2).* 2. விண்ணுலகு; heaven. *“இடமுடை வானகங் கையுறினும் வேண்டார்” (நாலடி, 300).* 3. செம்மரம்; red-wood. 4. *மஞ்சாடி 1* (மலை.) பார்க்க; see *mañjāḍi*[1].

*[வான் + அகம்]*

**வானகவிநாயகர்மாலை** *vāṉaga-vināyagar-mālai*, பெ.(n.) ஆறுமுகம் பிள்ளை என்பவரால் கி.பி.20ஆம் நூற்றாண்டில் எழுதப்பெற்ற நூல்; a book written by *aṟumugam-piḷḷai* in 20th century.

*[வானகம் + விநாயகர் + மாலை]*

**வானகிநீர்** *vāṉagi-nīr*, பெ.(n.) மோர்; butter milk.

*[வானகி + நீர்]*

**வானகுலாலி** *vāṉa-kulāli*, பெ.(n.) கருங்கொள்; black horse gram, a creeper bearing black seeds-Dolichos biflorus - black variety.

*[வானம் + குலாலி]*

**வானச்செடங்கி** *vāṉa-c-ceḍaṅgi*, பெ.(n.) தேள் கொடுக்கியிலை; the leaf of a plant-Heletropium indicum.

*[வானம் + செடங்கி]*

**வானசாத்திரம்** *vāṉa-šāttiram*, பெ.(n.) வானூல்; astronomy.

*[வானம் + **Skt.** sāstra > த. சாத்திரம்]*

**வானசோதி** *vāṉašōdi*, பெ.(n.) கோள் முதலிய ஒளி மண்டலம் (யாழ்.அக.); heavenly body.

*[வானம் + **Skt.** jyoti > த. சோதி]*

**வானட்சத்திரம்** *vāṉaṭšattiram*, பெ.(n.) வால்வெள்ளி (யாழ்.அக.); comet.

*[வானம் + **Skt.** naksatra > த. நட்சத்திரம்]*

வானத்தாசி *vāṉa-t-tāśi,* பெ.(n.) கழுதை; an animal, Ass.

*[வானம் + தாசி]*

வானத்திமிரி *vāṉa-t-timiri,* பெ.(n.) தையிலம்; medicated oil.

*[வானம் + திமிரி]*

வானத்தின்மீன் *vāṉattiṉ-mīṉ,* பெ.(n.) சரிகை வெள்ளி; lace silver.

*[வானத்தின் + மீன்]*

வானதி *vāṉadi,* பெ.(n.) கங்கை (பிங்.); the Ganges, as celestial.

*[வான் +* **Skt.** nathi > *த. நதி]*

வானநாடன் *vāṉa-nāḍaṉ,* பெ.(n.) 1. வானுலகத்திற்குத் தலைவன்; lord of the celestial world. *"வானநாடனே வழித்துணை மருந்தே" (தேவா. 486, 9).* 2. வானுலகில் வாழ்வோர்; inhabitant of heaven.

*[வானம் + நாடன்]*

வானநாடி[1] *vāṉanāḍi,* பெ.(n.) துறக்க உலகத்தவள்; she who resides in svarga. *"மையறு சிறப்பின் வானநாடி" (சிலப். 11, 215).*

*[வானம் + நாடி]*

வானநாடி[2] *vāṉanāḍi,* பெ.(n.) பொன்னாங் காணி (கரு.அக.); a plant growing in damp places.

*[வானநாடு → வானநாடி]*

வானநாடு *vāṉa-nāḍu,* பெ.(n.) 1. வானுலகம்; heaven. 2. தேவருலகம்; celestial world. *"வான நாடுடைய மன்னன்" (திருவிளை. இந்திரன்முடி. 38).* 3. *வானநாடி[2]* (தைலவ.) பார்க்க; see *vāṉanāḍi[2]*.

*[வானம் + நாடு]*

வானப்பத்தியம் *vāṉa-p-pattiyam,* பெ.(n.) பூத்தோன்றாது காய்க்கும் மரம் (நாமதீப. 372); tree, bearing fruit without outwardly blossoming.

*[வானம் + பத்தியம்]*

வானப்பாம்பு *vāṉa-p-pāmbu,* பெ.(n.) பாம்புவகை (M.M); rain snake.

*[வானம் + பாம்பு]*

வானபத்தி *vāṉa-patti,* பெ.(n.) பூவாது காய்க்கும் மரம்; a tree yileding fruits without visible flowers or blossoming.

*[வானம் + பத்தி]*

வானம்[1] *vāṉam,* பெ.(n.) 1. வானம்; firmament. *"வானத் தரவின் வாய்க்கோட் பட்டு" (கலித். 105).* 2. வானுலகம்; celestial world. *"வான மூன்றிய மதலை போல" (பெரும்பாண். 346).* 3. நெருப்பு (அரு.நி.); fire. 4. முகில்; cloud. *"ஒல்லாது வானம் பெயல்" (குறள், 559).* 5. மழை; rain. *"சிறப்பொடு பூசனை செல்லாது வானம் வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு" (குறள், 18), "தானம் தவம் இரண்டும் தங்கா வியன் உலகம் வானம் வழங்காது எனின்" (குறள், 19), "வானம் வாய்க்க மண்வளம் பெருகுக" (மணிமே. 19, 149).*

தெ. வான; க. பான (b). என்றுமாம் (மு.தா.198).

*[வால் → வான் → வானம். (சு.வி.பக்.18.)]*

*'வானத்தை வில்லாய், வளைப்பான்; மணலைக் கயிறாய்த் திரிப்பான்' (பழ.). 'வானம் சுரக்கத் தானம் சிறக்கும்' (பழ.).*

ஞாலத்தைச் சுற்றிலும் வெகு தொலைவு வரையுமுள்ள வெற்றிடம். இது உண்மையில் மையிருட்டானது. ஆயினும் உலகைச் சுற்றிலும் காற்றுமண்டல மிருப்பதனால் நமக்கு வானம் ஒளி பெற்றுத் தோன்றுகிறது. கதிரவன் புவியை ஒளி பெறச் செய்வதுடன், காற்று மண்டலத்திலுள்ள மூலக்கூறுகளின் மீதும் தன் கதிர்களை வீசி ஒளிபெறச் செய்கின்றது. நாம் மேலே வானத்தை நோக்கும்பொழுது இவ்வாறு ஒளிரும் மூலக் கூறுகளையே பார்க்கின்றோம். இவை நீல நிறக் கதிர்களையே சிறப்பாகச் சிதறுகின்ற பண்புடையனவா யிருத்தலின் வானம் நமக்கு நீலநிறமாகப் புலனாகின்றது.

காற்றில் தூசு அதிகமாயிருக்கும் பொழுது வானம் நமக்கு வெண்மையாகத் தெரிகின்றது. ஏனெனில் தூசுத் துகள்கள் எவ்வளவு நுண்மையானவையாக இருந்தபோதிலும், மூலக்கூறுகளைவிடப் பல மடங்கு பெரியவை; அதனால் இவை கதிரவனுடைய கதிரிலுள்ள நிறக்கதிர்களைச் சிதறச் செய்யாமல், கதிரவனுடைய வெண்மை ஒளியையே தோன்றச் செய்கின்றன. நாம் காற்று மண்டலத்திற்கு அப்பால் சென்று வானத்தை நோக்கின், அது மையிருட்டாகப் புலனாகும். பகலில் கூட வானில் விண்மீன்கள் புலனாகும். (கலைக்–9, பக்–251)

வானம்² *vāṉam*, பெ.(n.) 1. உலர்ந்த மரம் (பிங்.); dry tree, seasoned wood. *“வானங் கொண்டு வளர்த்தல்” (பிரபுலிங். முனிவரா். 17).* 2. மரக்கனி (பிங்.); fruit of a tree. 3. உலர்ந்த காய் (யாழ்.அக.); dry fruit. 4. உலர்ச்சி (யாழ்.அக.); withering. 5. உயிரோடிருக்கை (யாழ்.அக.); being alive. 6. போகை (யாழ்.அக.); going. 7. நறுமணம் (யாழ்.அக.); fragrance. 8. நீர்த்திரை (யாழ்.அக.); wave. 9. புற்பாய் (யாழ்.அக.); mat of straw. 10. சுவரில் பண்டங்கள் வைப்பதற்காகக் கட்டப்பட்ட மாடம் (யாழ்.அக.); cellar or shelf in the wall. 11. அடிமனைக்குழி; excavation for laying foundations. 12. கோபுரத்தின் ஒருறுப்பு (யாழ்ப்.); one of the ornamental sections of a tower.

*[வான் → வானம்]*

வானம்பறி–த்தல் *vāṉam-paṟi-*, 4 செ.கு.வி. (v.i.) அடிமனைக் குழி தோண்டுதல்; to dig for laying foundation.

*[வானம் + பறி–.]*

வானம்பாடி *vāṉam-pāḍi*, பெ.(n.) 1. புள் வகை; Indian skylark, Alauda, gulgula. 2. சகோரப்புள் (திவா.); shepherd koel. *“வானம்பாடி... அழிதுளி தலைஇய புறவில்” (ஐங்குறு. 418).* 3. வானம்பாடியாதனம் பார்க்க; see *vāṉambāḍi-ādaṉam*. *“நமஸ்காரஞ் சானுவானம்பாடி நகழ்வே” (தத்துவப். 107).*

க. பானாடி.

இதன் பெயரே இதன் இயல்பை எடுத்துரைக்கிறது. வயல்களிலும் வெளிப் பாங்கான நிலங்களிலும் வாழும் இச்சிறு பறவைகள் கபில நிறமாகத் தரையுடன் ஒத்துக் கண்ணைக் கவராது மங்கியிருக்கும். ஆனால், வேனிற் காலத்திலும், பிறகு சிறிது காலமும், ஆண் வானம்பாடி பாடிக்கொண்டே சுற்றிச் சுழன்று வானத்தில் செங்குத்தாக எழும்பும். பறவை கண்ணுக்கெட்டாத உயரத்தை அடைந்த பின்னும் வானத்திலேயே மிதந்து, இனிய குரலில் சில நிமிடங்கள் பாடும். பறவை பார்வைக்குப் புலப்படாதிருந்தும் அதன் தெளிவான இசை நம்காதுக்கெட்டும். பிறகு, தன் இறக்கைகளை மடக்கி வானிலிருந்து கல்லைப் போல் கீழ் நோக்கிப் பாயும். சிறிது தூரம் வந்தபின் இறக்கையை

விரித்துத் தன் கீழ்ப் போக்கை நிறுத்தும். பின், மறுபடியும் இறக்கை மடித்து நிலம் நோக்கிப் பாயும். மறுபடியும் இறக்கை விரித்துத் தன் வீழ்ச்சியை நிறுத்தும். இப்படிப் படிப்படியாகக் கீழிறங்கி, முடிவில் வயலில் இருக்கும் தன் பெட்டையின் அருகில் வந்திறங்கும். வானம்பாடிகள் வயற் காடுகளில் பூச்சிகளை வேட்டையாடியும், தவசங்களைத் தின்றும் வாழும். வட இந்திய வானம்பாடிக்குக் கொண்டையுண்டு.

(கலைக்.-9.பக்.-251)

வகைகள் :

1. சிறந்த இறக்கை வானம்பாடி, 2. புதர் வானம்பாடி, 3. சாம்பல் தலை வானம்பாடி, 4. சிகப்பு வால் வானம்பாடி, 5. கொண்டை வானம்பாடி, 6. சின்ன வானம்பாடி.



**வானம்பாடியாதனம்** *vāṉambāḍi-y-ādaṉam*, பெ.(n.) நெஞ்சு நிலத்திற்படக் கையுங்காலு மடக்கித் தரையிற் படாமற் பறக்கத் தொடங்குவது போல இருக்கும் இருக்கை வகை (தத்துவப். 107, உரை); a posture which consists in lying on the ground with face downwards and arms and legs bent as if about to fly.

*[வானம்பாடி + ஆதனம்]*

**வானம்பார்த்தகதிர்** *vāṉam-pārtta-kadir*, பெ.(n.) கொப்புத் தாழாத கதிர் (யாழ்.அக.); ear of immature grain, standing erect.

*[வானம் + பார்த்த + கதிர்]*

**வானம்பார்த்தசீமை** *vāṉam-pārtta-cīmai*, பெ.(n.) பாசன வசதியின்றிப் பருவ மழையையே நம்பியிருக்கும் நிலப்பரப்பு; rain-fed region, as depending for cultivation on seasonal rains and having no other source of irrigation.

மறுவ. புன்செய் நிலம்

*[வானம் + பார்த்த + சீமை. சேய்மை → சீமை]*

**வானம்பார்த்தபயிர்** *vāṉam-pārtta-payir*, பெ.(n.) பாசன வசதியின்றிப் பருவ மழையினு தவியாற் புன்செய் நிலத்தில் விளையும் தவசம் (தஞ்சை.); crops grown on dry lands with the help of seasonal rains and without any irrigational facilities.

*[வானம் + பார்த்த + பயிர்]*

**வானம்பார்த்தபிறவி** *vāṉam-pārtta-piṟavi*, பெ.(n.) மரஞ்செடி கொடி முதலியன (யாழ்.அக.); vegetable kingdom, as depending on rains.

*[வானம் + பார்த்த + பிறவி]*

**வானம்பார்த்தபூமி** *vāṉam-pārtta-būmi*, பெ.(n.) பாசன வசதியில்லாது மழையால் விளையும் நிலம்; rain-fed cultivable land.

மறுவ. புன்செய்நிலம்

*[வானம் + பார். + பூமி. பூமி = Skt.]*

**வானம்பாரி** *vāṉam-pāri*, பெ.(n.) வானம் பார்த்தபூமி (இ.வ.) பார்க்க; see *vāṉam-pārtta-būmi*.

# வானம்பாடி வகை



சாம்பல்தலை வானம்பாடி



புதர் வானம்பாடி



சிகப்புவால் வானம்பாடி



சின்ன வானம்பாடி



சிவந்த இறக்கை வானம்பாடி



கொண்டை வானம்பாடி

*[வானம் + பார் → பாரி]*

**வானமடை** *vāṉamaḍai*, பெ.(n.) கவுரிச் செய்ந்நஞ்சு (யாழ்.அக.); a prepared arsenic.

*[வானம் + மடை]*

**வானமண்டலம்** *vāṉa-maṇḍalam*, பெ.(n.) ககோளம்; vault of the heavens.

*[வானம் + மண்டலம்]*

**வானமாமலை** *vāṉa-mā-malai*, பெ.(n.) 1. நாங்குநேரியில் கோயில் கொண்டுள்ள திருமால்; the *viṣṇu* shrine at *Nāṅgunēri*. *"வானமா மலையே யடியேன்றொழ வந்தருளே" (திவ். திருவாய். 5, 7, 6).* 2. திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள நாங்குநேரி; *Naṅgunēri* in Tirunelvelly Dt.

*[வானம் + மா + மலை]*

சிறந்த (வைணவ) மாலியத் திருப்பதி. தமிழகத்தில், திருநெல்வேலி மாவட்டத்தில், திருநெல்வேலியிலிருந்து நாகர்கோயிலுக்குப் போகும் வழியில் 18 மைலில் இருக்கிறது. இது நான்குநேரி வட்டத்தின் தலைநகர். இதற்கு நாங்குநேரி என்ற பெயருண்டு. நம்மாழ்வார் பாடல்களில் 'சிரீவர மங்கல நகர்' என்று இவ்வூர் குறிப்பிடப் பெற்றுள்ளது.

கி.பி.1447 வரையில் நம்பூதிரிகள் வயமிருந்த இத்திருப்பதி பிறகு மாலியத் துறவிகள் கைக்கு வந்தது என்று ஒரு செப்பேடு கூறுகிறது.

வானமாமலை மடம் தென்கலை வைணவர் களுடையது. இதன் சீயர் தென் கலையாரின் ஆச்சாரியார். இது தோத்தாத்திரி மடம் என்றும் பெயர் பெற்றது. நாங்குநேரி ஏரிக்கரைக்குப் பின்னால் திருமால் கோயிலிருக்கிறது. கோயில் மிகப்பெரியது. வானமாமலை மடம் கோயில் மதிலுக்குள் உள்ளது. இது வடமொழிப் பாடசாலை ஒன்றை நடத்தி வருகிறது. திருமால் திருமுன்னரைச் சுற்றியுள்ள மண்டபத்திற்குச் சிவிலி மண்டபம் என்று பெயர். திருமாலுக்குத் தெய்வநாயகன், தோத்தாத்திரி பெருமாள், வானமாமலைப் பெருமாள் என்று பெயர்கள் வழங்குகின்றன. இவர் கிழக்கு முகமாக வீற்றிருந்த கோலத்தில் எழுந்தருளியிருக்கிறார். தாயார் சிரீவர மங்கை நாச்சியார். மூலவர் பெருமாளுக்கு நாள் தோறும் எண்ணெய் முழுக்குண்டு. இந்த எண்ணெய் திறந்த வெளியில் ஒரு காரைத் தொட்டியில் சேர்கிறது. இதற்கு மருந்தின் குணம் உண்டென்பர். விமானத்தின் பெயர் நந்தவர்த்தனம். கோயில் குளத்தின் பெயர் குணத்தின் இந்திர புட்கரணி. தேவேந்திரனுக்கும் பிரமனுக்கும் அருள் செய்ததாக வரலாறு. இத்திருப்பதி நம்மாழ்வாரின் மங்களாசாசனம் பெற்றது.

**வானமாமலைஅலங்காரக்கொம்மைப் பாடல்** *vāṉamāmalai-alaṅgāra-k-kommai-p-pāḍal*, பெ.(n.) தெய்வப் பெருமாள் நாயர் என்பவரால் 15ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட நூல்; a book written by *Deiva-p-perumaḷ-nāyar* in 15th century.

*[வானமாமலை + அலங்காரம் + கொம்மை + பாடல். அலங்காரம் = Skt.]*

**வானமாமலைசதகம்** *vāṉamāmalai-cadagam*, பெ.(n.) தெய்வநாயகப் பெருமாள் நாவலரால் கி.பி.19ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட நூல்; a book written by *Teivanāyaga-p-perumāl-nāvalar* in 19th century.

*[வானமாமலை + சதகம். சதகம் = Skt.]*

வானமாமலைபஞ்சரத்தினம் *vāṉa-māmalai-pañja-rattiṉam,* பெ.(n.) அப்பு வையங்கார் என்பவரால் கி.பி.20ஆம் நூற்றாண்டில் எழுதப்பெற்ற நூல்; a book written by *Appuvaiyaṅgār* in 20th century.

*[வானமாமலை + பஞ்சரத்தினம்]*

வானமால் *vāṉa-māl,* பெ.(n.) ஈ; fly.

*[வானம் + மால்]*

வானமிருகம் *vāṉamirugam,* பெ.(n.) கத்தூரி யெலும்பு (யாழ்.அக.); bone of the musk-rat.

*[வானம் + **Skt.** mirugha > த. மிருகம்]*

வானமுட்டி *vāṉa-muṭṭi,* பெ.(n.) நெட்டி லிங்கம்; a tree.

*[வானம் + முட்டி]*

வானமெழுகு *vāṉa-meḻugu,* பெ.(n.) பக்க ஊதைக்கும் அழுகிராந்திக்கும் கொடுக்கும் ஒரு மருந்து; a siddha medicine given for paralysis, gangrene etc.

*[வானம் + மெழுகு]*

வானலம் *vāṉalam,* பெ.(n.) துளசி; holy basil - ocimum sanctum.

வானர் *vāṉar,* பெ.(n.) தேவர்; celestials. *"மான்முதல் வானர்க்கு" (திருக்கோ. 155).*

*[வான் → வானர்]*

வானரக்கொடியோன் *vāṉara-k-koḍiyōṉ,* பெ.(n.) அருச்சுனன் (குரங்குக் கொடியை யுடையவன்) (பிங்.); Arjuna, as having a monkey banner.

*[வானரம் + கொடியோன்]*

வானரகதி *vāṉaragadi,* பெ.(n.) குதிரை நடை ஐந்தனுள் குரங்கைப் போல நடக்கும் நடை (திவா.); monkey-like pace of a horse, one of five aśvagadi. (Q.V.)

*[வானரம் + கதி = குதிரைநடை]*

வானரநேயம் *vāṉara-nēyam,* பெ.(n.) பழமுண்ணிப்பாலை (மலை.); silvery - leaved ape-flower.

*[வானர + நேயம்]*

வானரப்பகை *vāṉara-p-pagai,* பெ.(n.) நண்டு (சங்.அக.); crab.

*[வானர + பகை]*

வானரம் *vāṉaram,* பெ.(n.) குரங்கு; monkey. *"வானர முகள" (சீவக. 1168.).*

வானரம் = வாலுள்ள மாந்தன் போன்ற விலங்காகிய குரங்கு. வடவர் வனர் (வனம்) என்னும் சொல்லை மூலமாகக் கொண்டு காட்டு விலங்கு என்றும், நரஏவ என்பதை மூலமாகக் கொண்டு மாந்தனைப் போன்றது என்றும், பொருள் கூறுவர். முன்னதற்குப் பொருட் பொருத்தமும் பின்னதற்குச் சொற்பொருத்தமும் இன்மை காண்க.

வடமொழியில் இச்சொற்கு மூலமில்லை.

நரம் அல்லது நரன் என்னும் சொல் நரல் என்பதினின்று திரிந்திருக்கலாம். நரலுதல் = ஒலித்தல். மாந்தனுக்கு மொழி சிறப்பான ஒலியமைப்பாய் இருத்தல் காண்க.

*[வால் + நரம் + வானரம். (வ.மொ.வ.280)]*

வானரமகள்[1] *vāṉara-magaḷ,* பெ.(n.) பெண்குரங்கு; female monkey. *"வானரமகளிரெல்லாம் வானவர் மகளிராய்*

*வந்து" (கம்பரா. திருமுடி. 7).*

*[வானரம் + மகள்]*

வானரமகள்[2] *vāṉ-aramagaḷ*, பெ.(n.) வானுலகத்துப் பெண்; celestial damsel. *'வானர மகள் கொல்லோ' (இறை. 2, உரை, பக். 32).*

*[வான் + அரமகள் (அரமகள் = தெய்வப்பெண்).]*

வானரமங்கை *vāṉara-maṅgai*, பெ.(n.) வானரமகள்[2] பார்க்க; see *vāṉara-magaḷ*. *"வானர மங்கையரென வந்தணுகு மவள்" (திருக்கோ. 371).*

*[வான் + அரமங்கை (அரமங்கை = தெய்வப்பெண்).]*

வானரமதுரைத்தலபுராணம் *vāṉara-madurai-t-tala-purāṇam*, பெ.(n.) இளைய பெருமாள் பிள்ளை என்பவரால் கி.பி.19ஆம் நூற்றாண்டில் எழுதப்பெற்ற நூல்; a book written by *Eḷaiya-perumāḷ-piḷḷai* in 19th century.

*[வானர + மதுரை + தல + புராணம்]*

வானரேந்திரன் *vāṉarēndiraṉ*, பெ.(n.) 1. அனுமன்; *hanumāṉ*. 2. சுக்கிரீவன்; sugiriva.

*[வானர + இந்திரன்]*

வானலம் *vāṉalam*, பெ.(n.) துளசி (யாழ்.அக.); basil.

*[வான் + அலம்]*

வானவர்கோன் *vāṉavar-kōṉ*, பெ.(n.) இந்திரன்; Indra, as king of the gods. *"வானவர்கோன்............ வணங்குந் தொழிலானை" (திவ். இயற். 2, 17).*

*[வானவர் + கோன்]*

வானவர்நாடி *vāṉavar-nāḍi*, பெ.(n.) வானரமகள்[2] (திருமந். 1058) பார்க்க; see *vāṉara-magaḷ*.

*[வானவர் + நாடி]*

வானவர்முதல்வன் *vāṉavar-mudalvaṉ*, பெ.(n.) நான்முகன் (திவா.); *brahmā*, as the first among the gods.

*[வானவர் + முதல்வன்]*

வானவர்முதுவன் *vāṉavar-muduvaṉ*, பெ.(n.) 1. நான்முகன் (பிங்.); *brahmā*. 2. சேரன் (யாழ்.அக.); *śēra* king.

*[வானவர் + முதுவன்]*

வானவரம்பன் *vāṉa-varambaṉ*, பெ.(n.) சேரன்; *śēra*-King. *"வானவரம்பனை நீயோ பெரும" (புறநா. 2).*

*[வானம் + வரம்பு]*

வானவருறையுள் *vāṉavar-uṟaiyuḷ*, பெ.(n.) கோயில் (திவா.); temple.

*[வானவர் + உறையுள்]*

வானவல்லி *vāṉa-valli*, பெ.(n.) மின்னற் கொடி (சங்.அக.); streak or flash of lightning.

*[வானம் + வல்லி]*

வானவன் *vāṉavaṉ*, பெ.(n.) 1. தேவன்; celestial being. *"நான்முகன் முதலா வானவர் தொழுதெழ" (திருவாச. 4, 1).*

2. நான்முகன் (அக.நி.); *brahmā*. 3. இந்திரன் (பிங்.); Indra. 4. ஞாயிறு; sun. *"வானவன் குலத்தொடர்" (கம்பரா. எழுச். 7).* 5. சேரவரசன் (சிலப். 6, 73); *šēra* king. *"சினமிகு தானை வானவன்" (புறநா. 126).*

*[வான் → வானவன்]*

**வானவன்மாதேவி பெரியம்மைபத்து** *vāṉavaṉ-mādēvi-periyammai-pattu,* பெ.(n.) கனகசபை முதலியாரால் 19–20ஆம் நூற்றாண்டில் எழுதப்பெற்ற நூல்; a book written by *Kaṉagasabai-mudaliyār* in 19-20th century.

*[வானவன் + மாதேவி + பெரியம்மை + பத்து]*

**வானவன்மாதேவி வானசுந்தரர்பத்து** *vāṉavaṉ-mādēvi-vāṉa-sundarar-pattu,* பெ.(n.) கனகசபை முதலியாரால் 19–20ஆம் நூற்றாண்டில் எழுதப்பெற்ற நூல்; a book written by *kaṉagasabai-mudaliyār* in 19-20th century.

*[வானவன் + மாதேவி + வானசுந்தரர் + பத்து]*

**வானவன்விடுதூது[1]** *vāṉavaṉ-viḍu-tūdu,* பெ.(n.) ஞானப்பிரகாச முதலியார் என்பவரால் 20ஆம் நூற்றாண்டில் எழுதப் பட்ட நூல்; a book written by *ñāṉa-p-piragāsa-mudaliyār* in 20th century.

*[வானவன் + விடு + தூது]*

**வானவன்விடுதூது[2]** *vāṉavaṉ-viḍu-tūdu,* பெ.(n.) யாகப்பப்பிள்ளை என்பவரால் 19ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட நூல்; a book written by *yāgappa-p-piḷḷai* in 19th century.

*[வானவன் + விடு + தூது]*

**வானவியல்[1]** *vāṉaviyal,* பெ.(n.) வான்கோள்களைப் பற்றிய அறிவியல்; astrology.

**வானவியல்[2]** *vāṉaviyal,* பெ.(n.) விண்ணில் உள்ள விண்மீன்கள், கோள்கள், முதலியவற்றைப் பற்றி விவரிக்கும் துறை; astronomy.

*[வானம் + இயல்]*

இவ்வுலகம் மிகப்பெரிய ஐந்தாவது கோளாகும். அது கதிரவனிடமிருந்து 92,870,000 கல் தொலைவில் கதிரவனைச் சுற்றி வருகிறது. புவி கதிரவனை ஒரு தடவை சுற்றிவர ஏறக்குறைய 3651/4 நாட்களாகின்றன. புவியின் அச்சு, துருவ விண்மீனை நோக்கி உள்ளது. புவி அந்த அச்சின் மீது தனக்குத் தானே சூழல்வதால் பகலும் இரவும் உண்டாகின்றன. புவி கதிரவனைச் சுற்றி வருவதால் வேனில், கோடை, இலையுதிர்காலம், குளிர்காலம் என நான்கு பருவங்கள் உண்டாகின்றன. இந்தப் பருவங்களில் ஞாலம் கதிரவனை நோக்கியுள்ள நிலையின் காரணமாகவே தட்பவெப்பநிலை உண்டாகின்றது.

இரவில் வானம் தெளிவாக உள்ளபோது கூட நாம் மூவாயிரம் விண்மீன்களுக்கு அதிகமாக வெறுங்கண்ணால் பார்க்க முடியாது. ஆனால் 200 விரல விட்டமுடைய கண்ணாடி வில்லை (lens) உள்ள மிகப்பெரிய தொலைநோக்கி வாயிலாகப் பார்த்தால் கதிரவனைப் போன்ற பல கோடி கோளங்களையும் அவை ஒவ்வொன்றையும் பல கோளங்கள் சுற்றி வருவதையும் காணலாம். நம்முடைய கதிரவன் பல விண்மீன்களை விட மிகச் சிறியது என்று தெரியும். அது பெரியதாகவும் ஒளி மிக்கதாகவும் நம்முடைய கண்களுக்குத் தெரிவதற்குக் காரணம் அது நமக்கு அண்மையில் இருப்பதேயாகும். பலவிதமான

கோளங்களையும் பற்றிய அறிவியலே வானவியல் என்பதாகும்.

**வானவில்** *vāṉa-vil*, பெ.(n.) 1. இந்திரவில் எனப்படும் வானில் மழைக்காலத்தில் ஏற்படும் வில் போன்ற தோற்றம்; rain-bow. *"மதிப்புறங் கவைஇய வானவிற் போல" (பெருங். இலாவாண. 19, 81).* 2. சமவ சரணத்துள் தூளி சாலமென்னும் பெயருடையதும் இந்திர வில்லின் ஒளியுடையதும் முதலாவதுமான சமணக் கோயிலின் வெளிமதில்; (Jaina) the first outer wall of the temple of Arhat in *šamava-šaraṉam*, known as *tūḷišālam*, and having the splendour of a rainbow. *"வானவிற் கடந்து" (மேருமந். 60).*

*[வானம் + வில்]*

(கீழிறங்கி வரும் மழைத் துளிகளின் மேலும், அருவியின் அருகே தோன்றும் நுண்ணிய துளிகளின் மீதும் கதிர் ஒளி விழுவதால் வானவில் தோன்றுகிறது. காண்பவரது முதுகு கதிரவனை நோக்கி இருந்தால்தான் வானவில்லைக் காணமுடியும். சில சமயங்களில் ஒன்றுக்கு மேற்பட்ட வானவில்கள் காணப்படுவதுண்டு.

நீர்த் துளிகளிற் புகும் கதிரொளி கோட்டமடைவதாலும், மீளுவதாலும் வானவில்கள் தோன்றுகின்றன.)



**வானவீதியொளி** *vāṉa-vēdiyoḷi*, பெ.(n.) வானில் வைகறையிலும் அந்தியிலும் தோன்றும் வெளிச்சம்; twilight in dawn and dusk.

கதிரவன் தோன்றுமுன் கிழக்கு வானிலும், கதிரவன் மறைவிற்குப் பின் மேற்கு வானிலும் தெரியும் ஒரு மங்கலான ஒளி. வான வெளியில் புலப்படுகின்ற இந்த ஒளியானது கதிரவனுக்கு அருகில் ஒளியதிகமாகவும் தொலைவில் செல்லச் செல்ல மங்கலாகவும் காணும். இது ஆப்பு வடிவில் தெரியும். இவ்வொளியைக் கார்முகில் இல்லாத நாட்களில் தான் காணக்கூடும். திங்கள் அண்மையிலிருப்பின் இது கண்ணுக்குப் புலப்படாது. வடகோளத்திலுள்ளோர், இதனைக் கும்ப, மீன மாதங்களில் தெளிவாகக் காணலாம். நில நடுக்கோட்டின் அருகிலுள்ளோர் ஆண்டு முழுவதிலும் இதைக் காணக்கூடும். கதிரவனுடைய ஒளி, மிதந்து கொண்டிருக்கும் மிகச்சிறிய துகள்களின் மீது பட்டு எதிரொளிப்பதுதான் இதற்குக் காரணமென்பர்.

*[வானம் + வீதியொளி]*

**வானவுப்பு** *vāṉavuppu*, பெ.(n.) வெடியுப்பு; potassium nitrate.

*[வானம் + உப்பு]*

**வானவூர்தி** *vāṉa-v-ūrdi*, பெ.(n.) வானூர்தி; aerial car. *"வலவனேவா வானவூர்தி" (புறநா. 27).*

*[வானம் + ஊர்தி]*

**வானவெளி** *vāṉa-veḷi*, பெ.(n.) திறந்த வெளியாயிருக்கும் வீட்டின் உள்முற்றம் (இ.வ); open quadrangle in a house.

*[வானம் + வெளி] (செல்வி. 77 ஆடி. 591)*

வானளாவி vāṉa-ḷāvi, பெ.(n.) வானுயர்ந்த கட்டடங்கள்; skyscrapers.

மற்றக் கட்டடங்களை விட மிகவும் உயர்ந்த மிகப் பல நிலைகளைக் கொண்ட கட்டடங்களுக்கு வானளாவி என்ற பெயர் அமெரிக்காவில் வழங்குகிறது. இக்காலத்தில் தொழிற்சாலையும் வாணிகமும் இணைந்து மிக விரைவாக முன்னேறியதால் அவற்றின் தேவைக்கேற்பப் புதுக் கட்டடச் சிற்பம் தோன்றியது. இதனால் பெரிய அலுவலகங்கள், பெரிய தொழிற்சாலைகள், பெரிய வைப்பகங்கள், பெரிய தொடர்வண்டி நிலையங்கள், பெரிய உணவு விடுதிகள் முதலியன பேரளவில் தோன்றின. இடஏந்துக் குறைவும், சிறிய நிலத்தில் பேரளவு பயன்பெறும் வாய்ப்பும், வாணிகத்தின் உயர்ந்த திறனும் வானளாவித் தோன்றக் காரணமாயின எனலாம்.

வானாசி vāṉāśi, பெ.(n.) கார்போகரிசி (மலை.); seed of scurfypea.

வானாசிப்பூ vāṉāśi-p-pū, பெ.(n.) பனி மலர்ப்பூ; rose flower.

*[வானாசி + பூ]*

வானாடு vāṉāḍu, பெ.(n.) 1. துறக்கம்: svarga. *"வானாடும் மண்ணாடும்" (திவ். பெரியதி. 4, 1, 3).* 2. வானுலகு; heaven. *"கல்லும் கனை கடலும் வைகுந்த வானாடும்" (திவ். இயற் பெரிய திருவந். 68).*

*[வான் + நாடு]*

வானி[1] vāṉi, பெ.(n.) 1. மேற்கட்டி (பிங்.); canopy. 2. துகிற்கொடி; large banner, flag. *"வானிவியன் கை நாலாயிரமுள" (இரகு. நகர. 35).* 3. கூடாரம் (யாழ்.அக.); tent. 4. ஆன் பொருநை (பிங்.); the river *amrāvadi*. 5. பவானி; the river *Bhavāni*. *"வானி நீரினுந் தீந்தண் சாயலன்" (பதிற்றுப். 86). "வட கொங்கில் வானியாற்றின்" (தேசிகப். பிர. பரமத. 53).* 6. மரவகை; a tree. *"பயினி வானி பல்லிணர்க் குரவம்" (குறிஞ்சிப். 69).* 7. காற்றாடிப்பட்டம்; paper kite. *"வானிக ளோச்சினர் வானில்" (கந்தபு. அசமுகி. நகர் காண். 9).* 8. இடிக்கொடி; streak of lightning. *"நெருப்பெழ வீழ்ந்த வானி" (இரகு. யாகப். 84.)*

*[வான் → வானி]*

வானி[2] vāṉi, பெ.(n.) படை (பிங்.); army. *"பாண்டவர் வானி குலைந்த வே" (சேதுபு. இராமதீ. 34).*

*[வான் → வானி]*

வானி[3] vāṉi, பெ.(n.) 1. ஓமம் பார்க்க; see *ōmam*, Bishop's weed.

*[வான் → வானி]*

வானிதம்[1] vāṉidam, பெ.(n.) மணல் போன்று நுண்ணிதாயிருக்குஞ் சருக்கரை (நாமதீப. 409); fine sugar.

வானிதம்[2] vāṉidam, பெ.(n.) கள்; toddy.

வானிதி vāṉidi, பெ.(n.) மனோசிலை (சங்.அக.); realgar.

வானியம் vāṉiyam, பெ.(n.) மரம் (யாழ்.அக.); tree.

வானிரியம் vāṉiriyam, பெ.(n.) பேராமுட்டி (சங்.அக.); pink-tinged white sticky mallow.

வானிலை *vāṉilai*, பெ.(n.) காற்று, ஈரப்பதம், மழை போன்றவற்றால் அமையும் நிலை; weather. "*வானிலை அறிவுப்பு*".

*[வான் + நிலை]*

வானிலைஅறிவிப்பு *vāṉilai-aṟivippu*, பெ.(n.) கானாவொலி; voice from heaven.

ஒரு குறிப்பிட்ட இடத்தில் ஒரு குறிப்பிட்ட காலத்தில் வானிலை எவ்வாறிருக்கும் என்று முன் கூட்டி அறிவதற்கு மக்கள் வரலாற்று முன்கால முதல் முயன்று வந்துள்ளனர். பண்டைக்காலத்தில் மக்கள் காற்று, மழை முதலிய வானிலை நிகழ்ச்சிகள் எல்லாம் இயற்கைக்கு அப்பாற்பட்ட ஆற்றல்களால் உண்டாவன என்று எண்ணி, அந் நிகழ்ச்சிகளை முன்கூட்டி அறிவதற்கு முயலாதிருந்தனர். ஆயினும் உழவர்களும் கால் நடைகளை மேய்ப்பவர்களும் தத்தம் பகுதியில் ஏற்படும் வானிலை நிகழ்ச்சிகளைக் கவனித்து வந்தார்கள், மழை எந்தக் காலம் பெய்கின்றது, எந்தக் காலம் பெய்வது நிற்கின்றது என்பவற்றிற்கான அறிகுறிகளையும் கவனித்தார்கள். அவற்றை வைத்து வானிலை அறிவை வளர்த்து வந்தனர். இத்தகைய அறிவு பண்டைக் காலத்தில் தமிழ் நாட்டிலும், கேரளத்திலும், உத்தரப் பைதிரத்திலும் உண்டாகியிருந்ததாகத் தெரிகிறது. கீழ்கண்ட பழமொழிகள் அதன் உண்மையைக் கூறும்.
1. *"மாரி அடைக்கில் ஏரி உடைக்கும்" (பழ.).*
2. *"மீனமும் கொம்பும் எதிர்த்து மின்னினால், குட்டியைத் தூக்கி மேட்டிற் போடு" (பழ.).*

வானிழல் *vāṉiḻal*, பெ.(n.) காணாவொலி; voice from heaven. *"வெருளின் மெய்ம்மொழி வானிழல் கூறிய பொருளி னாகும்" (பெரியபு. பாயி. 19).*

*[வான் + நிழல்]*

வானிற்கெற்பத்தி *vāṉiṟ-keṟpatti*, பெ.(n.) முத்துச்சிப்பி (யாழ்.அக.); pearl oyster.

வானிறை *vāṉiṟai*, பெ.(n.) நீர் நிறைந்த முகில்; rain-laden cloud. *"சாய னினது வானிறை யென்னும்" (பரிபா. 2, 56).*

மறுவ. கார்மேகம்.

*[வான் + நிறை]*

வானீர் *vāṉīr*, பெ.(n.) நன்னீர்; pure water or liquor amni.

*[வான் + ஈரம்]*

வானீரம் *vāṉīram*, பெ.(n.) வஞ்சிக்கொடி (பிங்.); common rattan of South India.

வானீளம் *vāṉīḷam*, பெ.(n.) வால் வீச்சு; length of a house or house-site. *"மனை வானீளத்துக்குக் கிழக்கும்" (S.I.I.iii.214).*

*[வால் + நீளம்]*

வானுலகம் *vāṉ-ulagam*, பெ.(n.) வானுலகு பார்க்க; see *vāṉ-ulagu*. *"போரிலிறந்தவர் வானுலகம் புகுவர்"* – 26–ஆம் புறப்பாடல் இக்கருத்துப் பற்றியதே.

*[வான் + உலகம்]*

வானுலகு *vāṉ-ulagu*, பெ.(n.) 1. துறக்கம் (பிங்.); celestial world, *śvarga*. 2. உம்ப ருலகம்; heaven. *"பாடாதார் வானுலகு நண்ணாரே" (சீவக. 1468).*

*[வான் + உலகு]*

வானேறு *vāṉēṟu*, பெ.(n.) இடியேறு; thunderbolt. *"வானேறு புரையுநின்" (புறநா. 265).*

*[வான் + ஏறு]*

வானைநிமிளை *vāṉai-nimiḷai,* பெ.(n.) அஞ்சனக்கல்; sulphurate of antimony.

*[வானை + நிமிளை]*

வானொலி *vāṉoli,* பெ.(n.) ஒலிவாங்கிக் கருவி; radio.

*[வான் + ஒலி]*

தற்கால நாகரிக வாழ்க்கையில் இன்றி யமையாத இடம் பெற்றுள்ளது. வேறு எந்தப் புத்தமைப்பையும் விட இது மக்களால் பெரிதும் விரும்பிப் பயன்படுத்தப்படுகிறது. ஏழைகள் முதல் பணக்காரர்கள் வரை யாவரும் வானொலி மூலம் பாடல்களையும், நாடகங்களையும், அறிவுரை களையும், செய்திகளையும் மற்ற நிகழ்ச்சிகளையும் கேட்டு மகிழ்கிறார்கள்.



வானோங்கி *vāṉ-ōṅgi,* பெ.(n.) ஆல்; banyan.

*[வான் + ஒங்கு → ஓங்கி]*

வானோதயம் *vāṉōdayam,* பெ.(n.) கொடி மாதளை; a kind of citrus fruit-citrus medica.

வானோர் *vāṉōr,* பெ.(n.) தேவர்; celestials.

*[வான் → வானோர்]*

வானோர்க்கிறை *vāṉōrkkiṟai,* பெ.(n.) வானோர்கோமான் (உரி.நி.) பார்க்க; see *vāṉōr-kōmāṉ.*

*[வானோர் + இறை]*

வானோர்கிழவன் *vāṉōrkkiḻavaṉ,* பெ.(n.) வானோர்கோமான் பார்க்க; see *vāṉōr-kōmāṉ.* *"வானோர் கிழவனின் வரம்பின்று பொலிய" (பெருங். நரவாண. 4, 55).*

*[வானோர் + கிழவன்]*

வானோர்கோமான் *vāṉōr-kōmaṉ,* பெ.(n.) இந்திரன் (சூடா.); Indra.

*[வானோர் + கோமான்]*

வானோர்மாற்றலர் *vāṉōr-māṟṟalar,* பெ.(n.) 1. அசுரர்; *asurās.* 2. இராக்கதர்; *rāksasas.*

*[வானோர் + மாற்றவர்]*

வானோர்முதல்வன் *vāṉōr-mudalvaṉ,* பெ.(n.) 1. நான்முகன் (சூடா.); brahma, as first among the celestials. 2. வானோர் கோமான் பார்க்க; see *vāṉōr-kōmāṉ.*

*[வானோர் + முதல்வன்]*

வானோர்முதுவன் *vāṉōr-muduvaṉ,* பெ.(n.) 1. வானவர்முதுவன்[1] (நாமதீப. 55) பார்க்க; see *vāṉavar-muduvaṉ.* 2. சேரன் (யாழ்.அக.); *šēra.*

*[வானோர் + முதுவன்]*

# வி

**வி[1]** *vi,* வகர மெய்யும் இகரவுயிரும் சேர்ந்தியைந்து பிறக்கும் எழுத்து (வ் + இ); the comound of வ் and இ.

**வி[2]** *vi,* 1. தொழிற்பெயர் விகுதி; ending of the verbal noun. 2. பிறவினை விகுதி (நன். 138); suffix indicating form of a causative verb.

**வி[3]** *vi,* 1. விசும்பு (யாழ்.அக.); heaven. 2. பறவை (இலக்.அக.); bird. 3. காற்று (யாழ்.அக.); wind. 4. கண் (யாழ்.அக.); eye. 5. திசை (யாழ்.அக.); direction. 6. அழகு (தக்கயாகப். 506, உரை); beauty. 7. வேறாக; to separate.

*[விள் → வி] (வ.மொ.வ.316)*

**வி[4]** *vi,* இடைச்சொல். (part.) இன்மை, எதிரிடை, மாறுபாடு, மிகுதி முதலிய பொருளுணர்த்தும் ஒரு முன்னொட்டு; prefix signifying privation, change, abundance, etc. *"விராகம், விசயம், விலட்சணம்" (இலக். கொத். 100).*

**விக்கல்** *vikkal,* பெ.(n.) தொண்டை விக்குகை; hiccup. *"நெஞ்சே விக்கல் வராது கண்டாய்" (அருட்பா, vi, நெஞ்சொடுகிள. 10). "உண்ணுநீர் விக்கினானென்றேனா" (கலித். 51). "நாச்செற்று விக்குள்மேல் வாராமுன்" (குறள், 335).*

*[இக்(கு) → விக்கு → விக்குள் → விக்கல்.]*

தெ. வெக்கில்லு; க. பிக்கலு (b); ம. எக்கில், விக்குக; து. பிக்குனி; குய். வெக; குர். பெகனா; **TO.** pik; **Ma.** vikkuka; **To.** pik, piky; **Ka.** bikku; **Tu.** Bikkuni; **Te.** vekku, vegacu, vekkili; **Kui.** veka; **Kur.** *bekkhnā*, **malt.** bege.

**E.** hicket, hiccup, hiccough; **Skt.** ஹிக்கா.

இது ஒலிக்குறிப்புச் சொல்லாயினும், ஆரிய இனத்தினும் தமிழ் இனம் முந்தியதாகலின், இது தமிழ்ச் சொல்லேயெனத் தெளிக (வ.மொ.வ.87).

**விக்கல்மாந்தம்** *vikkal-māndam,* பெ.(n.) குழந்தைகளுக்கு விக்கலுடன் வரும் ஒருவகை மாந்த நோய்; a kind of convulsion attended with hiccup, common among children.

*[விக்கல் + மாந்தம்]*

**விக்கிள்** *vikkiḷ,* பெ.(n.) விக்கல் (யாழ்.அக.) பார்க்க; see *vikkal.*

*[விக்கல் → விக்கிள்]*

**விக்கு[1]-தல்** *vikku-,* 5 செ.கு.வி. (v.i.) 1. விக்கலெடுத்தல்; to hiccup. 2. விம்மி நிறைதல்; to be superabundant, chokeful. *"வயல் விக்கின பொதியும் கதிருமாயிருக்கிறது" (நாஞ்.).*

*[இக்கு → விக்கு]*

**விக்கு[2]-தல்** *vikku-,* 5 செ.குன்றாவி. (v.t.) விக்கி வெளித்தள்ளுதல்; to hiccup, bring out with interruptions of hiccups. *"உண்ணுநீர் விக்கினானென்றேனா" (கலித். 51).*

க. பிக்கு.

*[இக்கு → விக்கு]*

**விக்கு[3]** *vikku,* பெ.(n.) விக்குள் (நிகண்டு.311) பார்க்க; see *vikkuḷ.*

*[இக்கு → விக்கு]*

விக்குள் *vikkuḷ,* பெ.(n.) விக்கல்; hiccup. *"நாச்செற்று விக்குண்மேல் வாராமுன்" (குறள், 335).*

க. பிக்குள்.

*[விக்கல் → விக்குள்]*

விகண்டி[1]-த்தல் *vigaṇḍi-,* 11 செ.கு.வி. (v.i.) 1. குணக்காய்ப் பேசுதல் (யாழ்ப்.); to raise frivolous or fallacious objections. 2. மறுத்துரைத்தல் (வின்.); to refute.

*[விதண்டை → விகண்டை → விகண்டி-,]*

விகண்டி[2]-த்தல் *vigaṇḍi-,* 11 செ.கு.வி. (v.i.) வேறுபடுதல் (யாழ்.அக.); to differ.

*[விதண்டை → விகண்டை → விகண்டி-,]*

விகண்டிதம் *vigaṇḍidam,* பெ.(n.) 1. பிரிவு (யாழ்.அக.); division. 2. வேறுபாடு (யாழ்.அக.); difference. 3. கண்டிப்பின்மை (சங்.அக.); lack of strictness.

*[விதண்டை → விகண்டை → விகண்டி → விகண்டிதம்.]*

விகண்டை[1] *vigaṇḍai,* பெ.(n.) 1. விதண்டை; frivolous or fallacious objection. 2. எதிர்ப்பு (வின்.); refutation. 3. கெட்ட எண்ணம் (யாழ்.அக.); wicked thought.

*[விதண்டை → விகண்டை]*

விகண்டை[2] *vigaṇḍai,* பெ.(n.) 1. பகைமை; hostility. 2. மனவுறுதி (யாழ்.அக.); absence of attachment, firmness.

*[வெகுள் → விகண்டை.]*

விகவெனல் *viga-v-eṉal,* பெ.(n.) விரைந்து செல்லுதற் குறிப்பு; expr., of swift movement. *'விகவென்று வந்தான்' (இ.வ.).*

விகாய் *vigāi* பெ.(n.) ஒரு மரம் (சங்.அக.); a tree.

*[ஒருகா. உகாய் → விகாய்]*

விகு-த்தல் *vigu-,* 11 செ.கு.வி. (v.i.) செருக்காதல்; to be tight, stiff or hardened. *"வயிறு வில்லைப்போல விகுத்துக் கொள்ளல்" (சீவரட். 118).*

**ma.** *viṉṉuka*; **Ko.** vigu; **To.** pixy; **Ka.** bigi; **Tu.** bigi, bigu, biguta; **Te.** bigi, bigutu, biguvu; **Kui.** bija.

*[மிகு → விகு-,]*

விகுணம் *viguṇam,* பெ.(n.) குணக்கேடு (யாழ்.அக.); bad nature.

விகுணி *viguṇi,* பெ.(n.) 1. குணங்கெட்ட-வன்-வள்-து (சங்.அக.); person or thing destitute of merit. 2. கள் (திவா.); intoxicating drink.

விகுரம் *viguram,* பெ.(n.) வெள்ளெருக்கு (சங்.அக.); white madar.

விங்களம் *viṅgaḷam,* பெ.(n.) 1. குறைவு; deficiency, deformity, imperfection. 2. திரிவு (வின்.); difference, diversity. 3. நட்பின்மை (வின்.); want of cordiality, coolness in friendship. 4. இரண்டகம்; guile, deception, treachery, tergiversation. *"இவ்விங்கள மேன் செய்தீர்" (தனிப்பா. i, 18, 30).* 5. உதவி புரியப் பின் வாங்குகை (வின்.); with holding proper aid. 6. களிம்பு (வின்.); adulteration, alloy.

தெ. விங்களமு; க. விங்கட.

*[பங்கு → பங்கம் → பிங்கம் → பிங்களம் → விங்களம்.]*

**விங்களி–த்தல்** *vingaḷi-,* 11 செ.கு.வி. (v.i.) 1. நட்பில் மனம் வேறுபடுதல்; to be wanting in cordiality or co-operation. 2. கீழறுப்பாய் நடத்தல்; to be treacherous, deceptive, to tergiversate. 3. நிலையற்றிருத்தல்; to be unsteady. 4. பிரித்தல் (வின்.); to sift, separate.

*[விங்களம் → விங்களி-.]*

**விங்களிப்பு** *vingaḷippu,* பெ.(n.) விங்களம் பார்க்க; see *vingaḷam.*

*[விங்களி → விங்களிப்பு]*

**விங்கு¹–தல்** *vingu-,* 5 செ.கு.வி. (v.i.) மிகுதல்; to be abundant. *"திங்கள் ............ ஒளி விங்கி" (தேவா. 1157, 3).*

*[வீங்கு → விங்கு]*

**விங்கு²–தல்** *vingu-,* 5 செ.கு.வி. (v.i.) துளைத்தல் (இலக்.அக.); to drill, pierce.

**விச்சதையன்** *viccadaiyaṉ,* பெ.(n.) புல்லுருவி (மலை.); honeysuckle mistletoe.

**விச்சந்தா** *viccandā,* பெ.(n.) வெள்ளெருக்கு (மலை); white madar.

**விச்சம்** *viccam,* பெ.(n.) தாமரை வகை (மலை); a kind of lotus.

**விச்சல்லி** *viccalli,* பெ.(n.) கொடிவகை (யாழ்.அக.); colocynth.

மறுவ. பேய்க்கொம்மட்டி

**விச்சா¹** *viccā,* வி.எ.(adv.) 1. சும்மா; without purpose. *'நான் விச்சா வந்தேன்'.* 2. தொழிலின்றி; without occupation. *'அவன் விச்சா இருக்கிறான்'.* 3. அமைதியாய்; quietly. *'பேசாதே, விச்சா இரு'.* 4. நலமாக; healthy, in good health. *'விச்சாயிருக்கிறாயா?'*

தெ. வித்ச; க. விதெ; து. விச்சு.

**விச்சா²** *viccā,* வி.எ.(adv.) அடிக்கடி; repeatedly. *'அவன் விச்சா பேசுகிறான்'.*

**Pkt.** viccha.

**விச்சிக்கோன்** *vicci-k-kōṉ,* பெ.(n.) கடைக் கழகக் காலச் சிற்றரசருள் ஒருவன்; a king of sangam period.

இவன் ஒரு மலைநாட்டுத் தலைவனாக இருக்கலாம் என்பதைக் கபிலர் இவனைக் 'கல்லக வெற்ப' என்பதனாற் கொள்ளலாம். கபிலர் பாரி மகளிரை இவனிடம் அழைத்துச் சென்று மணந்துகொள்ள வேண்டினாரென்று இவனை அவர் பாடிய புறநானூற்றுச் செய்யுள் (200) குறிப்பு அறிவிக்கின்றது. இவன் சேரமான் குடக்கோச் சேரலிரும்பொறையால் வெல்லப் பட்டான் என்பதைப் பதிற்றுப்பத்தில் ஒன்பதாம் பத்தின் பதிகம் அறிவிக்கின்றது. இவனை 'வில்பெருதானை விச்சியர் பெருமகன்' என்றும், இவன் குறும்பூர் என்னுமிடத்தில் வேந்தர்களோடு பொருதான் என்றும் பரணர் குறிப்பிடுகின்றார் (குறுந். 328).

**விச்சிரல்** *vicciral,* பெ.(n.) விச்சிறல் பார்க்க (பச்.மூ.); see *vicciṟal.*

**விச்சிரிப்பு** *viccirippu,* பெ.(n.) விச்சிலுப்பை (வின்.) பார்க்க; see *vicciluppai.*

**விச்சிரும்பி–த்தல்** *viccirumbi-,* 11 செ.கு.வி. (v.i.) கிளர்தல்; to burst out. *'அவன் சினத்தினால் விச்சிரும்பித்தான்'.*

**விச்சிலுப்பை** *vicciluppai,* பெ.(n.) அம்மை நோய்வகை (இ.வ); chicken-pox or measles.

மறுவ. சிச்சிலுப்பை.

விச்சிறல் *vicciṟal,* பெ.(n.) கோரைவகை (மலை.); a kind of sedge.

விச்சு[1]-தல் *viccu-,* 5 செ.கு.வி. (v.i.) வித்து-, பார்க்க; see *vittu.* *"நமவென்று நாமத்தை விச்சுமின்" (திருமந். 1850).*

விச்சு[2] *viccu,* பெ.(n.) விதை; seed. *"விச்சின்றி நாறுசெய்வானும்" (தேவா. 696, 2) (பிங்.).*

து. viija / viijo.

*[வித்து → விச்சு]*

விச்சு[3] *viccu,* பெ.(n.) மிகுதி (வின்.); abundance.

*[விஞ்சு → விச்சு]*

விச்சுக்கொட்டு-தல் *viccu-k-koṭṭu-,* 9 செ.கு.வி. (v.i.) வெறுப்புக்குறியாக ஒருவகை யொலி செய்தல் (வின்.); to make a peculiar sound, expressive of aversion.

*[விச்சு + கொட்டு-,.]*

விச்செனல்[1] *viccenal,* பெ.(n.) வெறுப்பைக் குறிக்கும் ஓர் ஒலிக் குறிப்பு; an expr. of aversion.

விச்செனல்[2] *viccenal,* பெ.(n.) வெரிச்செனல் என்பதன் மறுவழக்கு; corr. of *vericcenal.*

விச்செனல்[3] *viccenal,* பெ.(n.) அமைதியாயிருப்பதைக் குறிக்குஞ் சொல் (இ.வ); expression denoting silence.

விச்சை[1] *viccai,* பெ.(n.) 1. கல்வி; learning, education. *"விச்சைக்கட் டப்பித்தான் பொருளேபோல்" (கலித். 149).* 2. அறிவு (யாழ்.அக.); knowledge. 3. மாயவித்தை; magic power, miracle. *"எம்பெருமான் செய்திட்ட விச்சைதானே" (திருவாச. 5, 28).* 4. மந்திரம்; mantra, incantation. *"விச்சையின் மெலிந்து" (பெருங். உஞ்சைக். 53, 62).* 5. தத்துவப் பகுதியில் ஒன்று; a section of tattuvam. *"அடையா விச்சை யடையத் தடையில் விடையப்பகுதி" (ஞானா. 1, 15).*

**pkt.** *vijjā.*

*[வித்தை → விச்சை]*

விச்சை[2] *viccai,* பெ.(n.) தெரு (பிங்.); street.

விச்சை[3] *viccai,* பெ.(n.) வெள்ளெருக்கு (மலை.); white madar.

விச்சைக்கோலம் *viccai-k-kōlam,* பெ.(n.) மாயக்கோலம்; magic illusion.

*[விஞ்சு → விச்சு → விச்சை + கோலம்.]*

விச்சைமன்னன் *viccai-mannan,* பெ.(n.) விஞ்சையர் அரசன்; *vidhyādara* king. *"விச்சை மன்ன னச்சுவ னாகி" (பெருங். நரவாண. 9, 66).*

விச்சோடி *viccōḍi,* பெ.(n.) விச்சோடு பார்க்க; see *viccōḍu.*

*[பிச்சு → விச்சு + சுவடி → சோடி]*

விச்சோடு *viccōḍu,* பெ.(n.) இரட்டை யாயுள்ளவற்றுள் ஒன்றோடு மற்றொன்று ஒவ்வாதது (கொ.வ.); that which does not match or equal.

தெ. விட்சொடு.

*[விச்சோடி → விச்சோடு]*

விசக்காணம் *viśakkāṇam,* பெ.(n.) நாட்டுப் புற விளைவில் ஊர்த்தலைவற்குரிய பங்கு (S.I.I.ii.352); share if the chief of head man in the produce of a village.

*[விழ → விச + காணம்]*

விசகலி *viśa-kali,* பெ.(n.) மல்லிகை (நாமதீப. 308); jasmine.

விசத்தம் *viśattam,* பெ.(n.) புடல் (மலை.); snake gourd.

விசத்துரு *viśatturu,* பெ.(n.) அடப்பங்கொடி (மலை.); hare -leaf.

*[விடத்துரு → விசத்துரு]*

விசம் *viśam,* பெ.(n.) 1. வீதம்; rate. *"மார்கழித் திருவாதிரைக்கும் வைகாசி விசாகத்துக்கும் திருவிழாவிசம் ஒரு ஆட்டைக்கு நெல்" (S.I.I.iii, 314).* 2. செலவு (S.I.I.V.307); expense. 3. படித்தரம் (நாஞ்.); allowance; batta.

*[விசை → விசம்.]*

விசயம்[1] *viśayam,* பெ.(n.) 1. கருப்பஞ்சாறு; juice of the sugarcane. *"விசயமடுஉம் புகைசூழாலை தொறும்" (பெரும்பாண். 261).* 2. கருப்புக்கட்டி; jaggery. *"விசயங் கொழித்த பூழி யன்ன" (மலைபடு. 444).* 3. பாகு; treacle. *"அயிருருப் புற்ற வாடமை விசயம்" (மதுரைக். 625).*

தெ. வெட்ச, வெட்சு; க., து. விசி, விசில், விசு; ம. வெய்கில்.

*[விசை → விசையம்.]*

விசயன்கடுக்காய் *viśayaṉ-kaḍukkāy* பெ.(n.) கடுக்காய் வகை (பதார்த்த. 964); species of chebulic myrobalan.

விசரம் *viśaram,* பெ.(n.) 1. இரும்பிலி என்னும் செடிவகை (L.); box leaved satin ebony, supposed to be used in alchemy to convert iron into gold. 2. முதிரை என்னும் மரவகை (வின்.); East Indian satin wood, m.tr., chloroxylon swietenia.

விசரி *viśari,* பெ.(n.) தும்பை (சங்.அக.); white dead nettle.

விசல்லியகரணி *viśalliya-karaṇi,* பெ.(n.) போர்க் கருவிகளினால் ஏற்பட்ட புண்ணை ஆற்றும் மருந்து (திவா.); medicament which heals wounds, caused by weapons.

விசலம் *viśalam,* பெ.(n.) தளிர் (யாழ்.அக.); sprout.

விசலி *viśali,* பெ.(n.) படர் கொடிவகை; gulancha. *"வீழ் என்பது ஆல்..... சீந்தில்கட் குரித்து" (நன். 387, மயிலை).*

மறுவ. சீந்தில்.

விசலிகை *viśaligai,* பெ.(n.) கொடிமல்லிகை (பிங்.); malabar Jasmine.

விசவல்லி *viśavalli,* பெ.(n.) கீழாநெல்லி (மலை.); a small plant with slender green main branches.

விசாக்கோட்டி *viśā-k-kōṭṭi,* பெ.(n.) வயா நடுக்கம் (இ.வ.); morning sickness and morbid longings of a pregnant woman.

விசாதி *viśādi,* பெ.(n.) நோய்; disease. *"கொன்றுயிருண்ணும் விசாதி பசிபகை தீயன வெல்லாம்" (திவ். திருவாய். 5, 2, 6).* *'விசாதி' (உ.வ.).*

**Skt.** வியாதி.

விசாரத்தகடு *viśāra-t-tagaḍu,* பெ.(n.) இரும்புவளையம் (வின்.); iron hoop.

விசாலம் *viśālam,* பெ.(n.) 1. பேய்க் கொம்மட்டி (மலை.); colocynth. 2. கடம்பம்[1],1 (அக.நி.);common cadamba. 3. வெண் கடம்பு (திவா.); seaside, Indian oak. 4. பறவைவகை (யாழ்.அக.); a kind of bird. 5. மான்வகை (யாழ்.அக.); a kind of deer. 6. ஒரு நாடு (அபி.சிந்.); a country.

விசாலி–த்தல் *viśāli-,* 11 செ.கு.வி. (v.i.) விரிவு பெறுதல்; to extend, spread out, to become wide. *'படித்தால் அறிவு விசாலிக்கும்'.*

*[விசாலம் → விசாலி–,]*

விசி[1]–த்தல் *viśi-,* 11 செ.குன்றாவி. (v.t.) இறுகக் கட்டுதல்; to fasten, bind, tie tightly. *"திண்வார் விசித்த முழவு" (மலைபடு. 3).*

*[விசி → விசி–,]*

விசி[2]–த்தல் *viśi-,* 4 செ.கு.வி. (v.i.) விம்முதல்; to become swollen, over-stretched, as the abdomen from over-eating. *"விலாப்புடை மருங்கு விசிப்ப மாந்தி" (புறநா. 61).*

*[விசி → விசி–,]*

விசி[3]–தல் *viśi,* 4 செ.குன்றாவி. (v.t.) விசி[1] பார்க்க; see *viśi. "பசும்பொற் பலவார் விசிந்து பிணியுறீஇ..... ஏற்றுரிபோர்த்த..... கொற்றமுரசம்" (பெருங். இலாவாண. 2, 26).*

விசி[4] *viśi,* பெ.(n.) 1. கட்டு; fastening, tie. *"விசிவீங் கின்னியங் கடுப்ப" (பெரும்பாண். 56).* 2. பறையிறுக்கும் வார் (யாழ்.அக.); leather strap for drums. 3. விசிப்பலகை (திவா.); bench. 4. கட்டில் (யாழ்.அக.); cot.

தெ. பிசி.

விசி[5] *viśi,* பெ.(n.) தாமரைத்தண்டு (பிங்.); lotus stalk.

விசி[6] *viśi,* பெ.(n.) அலை (யாழ்.அக.); wave.

விசிகக்கோல் *viśiga-k-kōl,* பெ.(n.) அம்பு; arrow. *"விசிகக்கோல் செல்வன சத கோடிகள்" (கம்பரா. மூலபல. 104).*

*[விசிகம் + கோல்]*

விசிகிலம் *viśigilam,* பெ.(n.) மல்லிகை (யாழ்.அக.); jasmine.

விசிகை *viśigai,* பெ.(n.) 1. முலைக்கச்சு (பிங்.); bodice. 2. கருத்து (யாழ்.அக.); thought.

*[விசி → விசிகை]*

விசித்தி *viśitti,* பெ.(n.) கடுகு (மலை.); mustard.

விசித்துக்கட்டு–தல் *viśittu-k-kaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) இறுகக் கட்டுதல்; to bind tightly.

*[விசித்து + கட்டு]*

விசிப்பலகை *viśi-p-palagai,* பெ.(n.) ஊஞ்சற்பலகை (கொ.வ.); a board thick plank used as a swing etc.

தெ. விசிப்பலக.

*[விசி[3] + பலகை]*



விசிப்பு *višippu,* பெ.(n.) விசிப்பலகை (நாமதீப. 470) பார்க்க; see *viši-p-palagai.*

*[விசி → விசிப்பு]*

விசிமந்தம் *viši-mandam,* பெ.(n.) வேம்பு (மலை.); neem.

விசியுழி *viši-y-uḻi,* பெ.(n.) உண்மையில் நோக்கமின்றி வெற்றியே விழைவோன் செய்யும் சொற்போர்வகை (சங்கற்ப. பாயி. 2, உரை); a form of polemical discussion, the sole aim of which is victory over one's opponent and not the ascertainment of truth.

விசிரகந்தி *višira-kandi,* பெ.(n.) பொன்னரிதாரம் (யாழ்.அக.); yellow orpiment.

விசிலம் *višilam,* பெ.(n.) கஞ்சி (யாழ்.அக.); gruel.

விசிறி *viširi,* பெ.(n.) 1. உடம்பு முதலியவற்றிற் படும்படி காற்றை அசைவிக்குங் கருவி (திவா.); fan. 2. உயிர்மெய்களில் இகர ஈகாரங்களின் குறியாக எழுதப்படும் மேல் வளையுங் கோடு; curves appended to the consonants as symbols of vowels i and *ī.* 3. செடிவகை (வின்.); box-leaved ivory wood, m.sh., chretia buxita. 4. வண்ணக் கோடுள்ள சீலை வகை (இ.வ); a saree with coloured stripes.

*[விசு → விசிறு → விசிறி. (மு.தா.பக்.68)]*

வெயில் கடுமையாக உள்ள கோடை காலத்தில் செயற்கை முறையில் காற்றோட்டத்தையுண்டாக்கிக் கொள்ளுவதற்குப் பயன்படும் எளிய கருவி. இயல்பாக விசிறி இருவகைப்படும். மடிக்க முடியாதவாறு எப்போதும் விரிந்த நிலையிலேயே இருப்பது ஒருவகை. தேவையான போது மட்டும் விரித்துப் பயன்படுத்திக் கொண்டு தேவையற்ற போது மடித்து வைத்துக் கொள்ளக்கூடியது, இரண்டாம் வகை. பனையோலை, தென்னையோலை, தாள் அட்டை, மூங்கில் சிம்புகள், மருப்பு, சந்தனக் கட்டை, பட்டுப் போன்ற துணி, தோல், வெட்டிவேர், மயில் இறகு போன்ற இறகுகள் ஆகிய பல பொருள்கள் விசிறி செய்யப் பயன்படுகின்றன. பலவகையான மின்விசிறிகளும் தற்போது புழக்கத்திலுள்ளன.

*[விசிறு → விசிறி]*



விசிறிக்கிளிஞ்சில் *viširi-k-kiliñjil,* பெ.(n.) விசிறி வடிவாகக் காணப்படும் கிளிஞ்சில் வகை; a kind of a bivalve.

மெல்லுடலிகளிலே இரண்டு ஒடுகளுள்ள வனவாகிய தகட்டுச் செவுள் வகுப்பிலே ஒருவகைக்

கிளிஞ்சில் (pecton). இது கடலில் வாழ்வது. இந்தக் கிளிஞ்சலின் ஓடுகள் வட்டமாகவும், வெளிப்புறத்திலே பழு (rib) போன்ற வரம்புகளும், அவவற்றிற்கு இடையே பள்ளங்களும் மாறி மாறி இரண்டு ஓடுகளும் பொருத்தப் பெற்றிருக்கும். இணைப்பு முனையிலிருந்து ஓட்டின் விளிம்பை நோக்கி ஆரங்கள்போலச் சென்றிருப்பதும், இணைப்பின் முன்னும் பின்னும் ஒடுகள், செவிகள் (ears) என்னும் சிறு நீட்சிகள் பிடிகள் போல இருப்பதும் ஆகிய இயல்புகளால் இந்தக் கிளிஞ்சல்கள் விசிறி போலவே காண்கின்றன. சீப்பு போலவும் இவை காண்பதால் அப்பொருள்படும் பெக்ட்டென் என்னும் பெயர் இவற்றிற்கு இடம் பெற்றுள்ளது.

விசிறிக் கிளிஞ்சலின் ஓடுகள் பெரும்பாலும் சற்றுக் குவிவாக (convex) இருக்கும். இரண்டு ஓடுகளும் இயல்பாக ஒரே சமமாக, ஒரு பொருளும் கண்ணாடியில் காணும் அதன் நிழலும் போல ஒத்திருப்பதில்லை. ஓர் ஓட்டைவிட மற்றொன்று தாழ்வான குவிவாக அல்லது தட்டையாகவே இருக்கலாம். ஒட்டுக்குள்ளிருக்கும் போர்வை மடிப்புக்களின் (mantle folds) விளிம்பிலே உணர் நீட்சிகளும் (tentacles) கண்களும் அமைந்திருக்கும்.

*[விசிறி + கிளிஞ்சல்]*



**விசிறிக்குருவி** *viśiṟi-k-kuruvi,* பெ.(n.) விசிறி போன்ற வாலுடைய குருவி வகை; white-browed fantail, leucocerca albofrontata.

மறுவ. ஈப்பிடிப்பான். இனம் : வெண்புள்ளி விசிறிக்குருவி வெண்புருவ விசிறிக்குருவி.

*[விசிறி + குருவி]*



**விசிறிகட்டிநட-த்தல்** *viśiṟi-kaṭṭi-naḍa-,* 3 செ.கு.வி.(v.i.) 1. ஆடிநடத்தல்; to walk with a swinging motion. 2. கை வீசுதல்; to swing the hands.

**விசிறிமடிப்பு** *viśiṟi-maḍippu,* பெ.(n.) மேற்துண்டில் விசிறிப்போல மடிப்புக்கள் ஒன்றன்மேல் ஒன்று அமையும்படி மடிக்கை; a kind of fan-like narrow folding of washed clothes.

*[விசிறி + மடிப்பு]*

**விசிறிமுருகு** *viśiṟi-murugu,* பெ.(n.) மேற்காதிலணியும் காதணி வகை (வின்.); fan-shaped ear-ring of gold, worn on the upper part of the ear.

*[விசிறி + முருகு]*

**விசிறியெறி-தல்** *viśiṟi-y-eṟi-,* 2 செ.குன்றாவி.(v.t.) கழற்றி வீசுதல்; to cast away, to throw away. *'அவள் நகைகளை வீசியெறிந்தாள்'.*

*[விசுறு + எறி – விசிறியெறி-.]*

**விசிறிவாழை** *viśiṟi-vāḻai,* பெ.(n.) நீர்வாழை; traveller's palm.

இது ஒரு வியப்பான மரம்; ஒற்றை விதையிலை நிலைத்திணைகளிலே ஒருவகை வாழைக் குடும்பத்தைச் (musaceae) சேர்ந்த பல பருவ மரம். இதில் இரண்டு இனங்கள் உண்டு. ஒன்று தென் அமெரிக்காவிற்குரியது. மற்றோர் இனம் மடகாசுகர், இரீயூனியன் ஆகிய தீவுகளில் வாழ்வது. இந்த இரண்டாவது இனத்தையே வழிப்போக்கர் மரம் (traveller's tree) என்பார்கள். நீர் வேட்கையால் வருந்தும் வழிப்போக்கர்கள் இதன் இலையின் அடியில் சேர்ந்திருக்கும் நீரைக் குடித்து நாவறட்சி தவிர்வார்கள், ஆதலின் இம்மரம் இப்பெயர் பெற்றுள்ளது.

வாழை மரத்திலே தண்டு போலத் தோன்றும் பாகம் இலைகளின் அடிகள் (leaf bases) ஒன்றையொன்று தழுவல் முறையில் அடுக்கியிருக்கும் பச்சைத் தூண் போன்ற பாகமாகும். உண்மையான தண்டு, தரையின் கீழே இருக்கும் கிழங்கே ஆகும். இவ்வகை மரத்தின் உண்மையான தண்டு தரைக்குமேலே, தென்னை, பனை முதலியவற்றின் தண்டைப்போலத் தூண்போல நிற்கும் கெட்டியான பாகமே. இந்தத் தண்டு 20–30 அடி உயரம் வளரும். தண்டின் நுனியில் நீண்ட காம்புகள் உள்ள பல மிகப்பெரிய இலைகள் இரண்டு செங்குத்தான வரிசைகளிலே ஒரே தளத்திலே (plane) நெருக்கமான, ஒழுங்கான அடுக்காக அழகாக வளர்ந்திருக்கும். இதனால் மரம் ஒரு பெரிய விசிறிப் போலத் தோன்றும். இவ்விலைகள் வாழை இலையை ஒத்திருக்கும். இலைக்காம்பின் அடிப்பாகம் உறைபோலப் பள்ளமாக இருக்கும். அந்தப் பள்ளங்களில் நீர் சேர்ந்திருக்கும். அது குடிப்பதற்கு ஏற்றது. தாராளமாகப் போதுமான அளவில் கிடைக்கும். கத்தியினால் காம்பின் அடியில் குத்தினால் நீர் வெளியே ஓடிவரும். பூக்கள் மடல் கொத்தாக மேலேயுள்ள இலைகளின் கக்கங்களிலிருந்து உண்டாகும். பூக்காம்பிலைகள் (bracts) படகு வடிவில் இருக்கும்; அவை மிகக் கூராக நுனியில் முடியும். கனி வெடிக்கனி.

இம்மரம் அழகுக்காகப் பூங்காக்களிலும் தோட்டங்களிலும் வளர்க்கப்படுகிறது.

*[விசிறி + வாழை]*



**விசிறு[1]–தல்** *viśiṟu-,* 5 செ.கு.வி. (v.i.)
1. விசிறியாற் காற்றெழுப்புதல்; to fan. 2. வாள் முதலியவற்றை வீசுதல்; to wave to and fro, brandish. *"நாந்தகம் விசிறு நம்புருடோத்தமன்" (திவ். பெரியாழ். 4, 7, 4).* 3. வலை முதலியவற்றை விரித்தெறிதல்; to fling, hurl, cast, as a net. *"அலைகடல்வாய் மீன்விசிறும்" (திருவாச. 8, 2).* 4. சுழற்றுதல்; to whirl round. *"விளங்கனிக் கிளங்கன்று விசிறி" (திவ். பெரியதி. 9, 8, 6).* 5. சொரிதல்; to pour forth, to sprinkle. 6. வெளித் தள்ளுதல்; to eject, discharge. *'கிடாரி கருவை விசிறி விட்டது'.* 7. போக்குதல்; to remove. *"பிறவியுமற விசிறுவர்" (தேவா. 618, 4).* 8. கை முதலியன வீசுதல்; to swing, as the arms in walking. *"வேயன தோள்விசிறி" (திவ். பெரியதி. 3, 7, 5).* 9. உயிர்மெய்களுள் இகர ஈகாரங்களின் குறியாக மேல் வளைவுக் கோடிடுதல்; to append the symbols of i and ī to the consonants.

தெ. விசரு; க. பிசுடு; ம. விசருக.

*[விசு → விசிறு–,]*

**விசிறு[2]–தல்** *viśiṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) விசிறியாற் காற்றடிக்கச் செய்தல்; to fan.

*[விசு → விசிறு–,]*

விசு *višu,* பெ.(n.) ஒரு மருந்துச் சரக்கு; a bazzar drug called Indian atees.

மறுவ. அதிவிடயம்.

விசுக்கிடு-தல் *višukkiḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. வெறுப்புக்கொள்ளுதல் (யாழ்.அக.); to become displeased. 2. மன வருத்தங் கொள்ளுதல் (வின்.); to be pained at heart.

தெ. விசுகுகொனு, விசுகு, விசுவு.

*[விசுக்கு + இடு-,]*

விசுக்கு[1]-தல் *višukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) விரைந்து கைவீசுதல், விசிறுதல்; to fan. *'விசுக்கு விசுக்கென்று நடக்கிறாள்' (இ.வ.).*

*[விசு → விசுக்கு → விசுக்கு-, (மு.தா.பக்.68)]*

விசுக்கு[2] *višukku,* பெ.(n.) வெறுப்பு; displeasure, dislike. *'அந்தச் சொல்லைக் கேட்கவும் அவனுக்கு விசுக்கு வந்து விட்டது'.*

*[சிவிட்கு → விசுக்கு]*

விசுக்குணி *višukkuṇi,* பெ.(n.) சிறியது, சிறுதுண்டு; small, small piece.

மறுவ. விசுக்காணி.

*[பிசுக்கு → விசுக்கு → விசுக்குணி]*

விசுக்கெனல் *višukkeṉal,* பெ.(n.) விரைந்து செல்லுதற்குறிப்பு; expr. of quick movement. *'விசுக்கென்று புறப்பட்டு விட்டான்' (நெல்லை.).*

*[விசுக்கு + என → எனல்]*

விசுதம் *višudam,* பெ.(n.) 1. கொடிவகை; snake-gourd. 2. பேய்ப்புடல்; wild snake-gourd.

மறுவ. புடல்.

விசுப்பலகை *višu-p-palagai,* பெ.(n.) விசிப்பலகை பார்க்க; see *viši-p-palagai.*

*[விசு + பலகை]*

விசும்பாளர் *višumbāḷar,* பெ.(n.) தேவர்; celestials. *"படைவிடா விசும்பாளரைப் பறித்து" (தக்கயாகப். 352).*

*[விசும்பு + ஆள் + அர்]*

விசும்பு[1] *višumbu,* பெ.(n.) 1. வானம்; visible heavens, sky. *"விசும்பு தைவரு வளியும்" (புறநா. 2).* 2. தேவருலகம் (திவா.); Svarga; heaven. *"அங்கண் விசும்பி னமரர்" (நாலடி, 373).* 3. முகில் (திவா.); cloud. *"விசும்பிற் றுளிவீழி னல்லால்" (குறள், 16).* 4. திசை (பிங்.); direction.

*[விள் → (விசு) → விசும்பு. (மு.தா.பக்.153)]*

விசும்பு[2]-தல் *višumbu,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. வெறுப்புடன் விலக்குதல் (வின்.); to throw away in contempt, to toss aside, to cast away. 2. கயிறு முதலியவற்றைச் சுண்டியிழுத்தல் (தஞ்சை.); to draw tight, as a rope. 3. தேம்பி அழுதல்; to sob, cry.

விசும்பு[3] *višumbu,* பெ.(n.) 1. வீம்பு; obstinacy. *'விசும்புக்கு வேட்டையாடு கிறான்'.* 2. செருக்கு (இ.வ.); pride; arragance.

*[வீம்பு → விசும்பு]*

விசும்பு[4]-தல் *višumbu-,* 5 செ.குன்றாவி. (v.t.) மீறுதல் (இ.வ.); to transgress.

விசும்பு[5]-தல் *višumbu-,* 5 செ.கு.வி. (v.i.) செருக்குக் கொண்டிருத்தல்; to be proud or haughty. *'மாப்பிள்ளை மிக விசும்புகிறான்'.*

**விசும்புவில்** *viśumbu-vil,* பெ.(n.) ஒளிவட்டம்; the sphere of celestial luminaries. *"காமனார் சேமவில்லென விசும்புவில் வெருவு தெய்வமாதர்" (தக்கயாகப். 23).*

*[விசும்பு + வில்]*

**விசும்பேற்று-தல்** *viśumbēṟṟu-,* 5 செ. குன்றாவி.(v.t.) மானங்காரணமாக ஒருவனை அலுவலில் முனையச் செய்தல் (நெல்லை.); to appeal to one's pride, prestige, etc. and urge one to action.

*[விசும்பு + ஏற்று-,]*

**விசும்பேறு** *viśumbēṟu,* பெ.(n.) இடியேறு (இலக்.அக.); thunder bolt.

*[விசும்பு + ஏறு]*

**விசுமந்தச்சூரணம்** *viśumanda-c-cūraṇam,* பெ.(n.) எலுமிச்சையிலை, நாரத்தையிலை, கறிவேப்பிலை முதலியன சேர்த்து இடித்துச் செய்த மருந்துப்பொடி; a relish made of citron leaves, sweet neem and spices.

*[விசுமந்தம் + **Skt.** chūrṇa > த. சூரணம்]*

**விசுமிகினி** *viśumigiṉi,* பெ.(n.) வேம்ப (மலை.); neem.

**விசுவநாக்கரம்** *viśuva-nākkaram,* பெ.(n.) சுக்கு (சங்.அக.); dried ginger.

**விசுவநாதசெட்டிவெட்டு** *viśuvanāda-ceṭṭi-veṭṭu,* பெ.(n.) பழைய காசுவகை (பணவிடு. 144); an old coin probably so named after the person who minted it.

**விசுவபேடசம்** *viśuva-pēḍaśam,* பெ.(n.) சுக்கு (மலை.); dried ginger, as a general remedy.

**விசுவம்[1]** *viśuvam,* பெ.(n.) சுக்கு (நாமதீப. 356); dried ginger.

**விசுவம்[2]** *viśuvam,* பெ.(n.) அதிவிடை என்னும் மருந்துச் செடி; atis.

**விசுளி** *viśuḷi,* பெ.(n.) கள் (யாழ்.அக); toddy.

**விசூகை** *viśūgai,* பெ.(n.) தலைச்சுழற்சியை மிகச் செய்யும் நோய்வகை (சங்.அக.); a disease causing severe dizziness.

**விசை[1]** *viśai,* பெ.(n.) 1. வேகம்; haste, speed, impetus. *"வருவிசைப் புனலைக் கற்சிறை போல" (தொல். பொ. 63).* 2. நீண்டு சுருங்குந் தன்மை; elasticity, spiring. 3. விரைவு; force. 4. எந்திரம்; contrivance, as a trap, mechanism, mechanical instrument, as a lever. 5. பக்கம்; side. *"முதற் பிரகாரத்து வடக்கு விசையிற் புறவாயிலே கல்வெட்டு விப்பது" (சோழவமி. 63).* 6. பற்றுக்கோடு (வின்.); stay, prop. 7. மரவகை; a tree. *"விசைமரக்கிளவியும்" (தொல். எழுத். 282).*

தெ. செ ச: விசெ; ம. விச.

*[ ...ஸை. (மு.தா.பக். 67)]*

**விசை[2]-த்தல்** *viśai-,* 11 செ.கு.வி. (v.i.) 1. விரைவு பண்ணுதல்; to hasten, to cause to move swifly. 2. வீசுதல்; to swing. *"கால்விசைத் தோடி" (திருவாசக. 2, 135).* 3. துள்ளுதல்; to leap, hop. *"நறுநெய்க்கடலை விசைப்ப" (புறநா. 120).* 4. சிதறுதல்; to burst, split. *"கண்டொறும் விசைத்த கருப்புத் தாளமும்" (கல்லா. 59,16).* 5. கடுமையாதல்; to be forceful. *"இரும்பு விசைத் தெறிந்த கூடம்" (பெரும்பாண். 437).* 6. சினமுறுதல் (வின்.); to become angry.

**விசை[3]** *viśai,* பெ.(n.) வெற்றி (அரு.நி.); victory.

விசை[4] *višai,* பெ.(n.) தடவை; turn, time. *"புழைக்கை ஒருவிசை தடிந்தும்" (கல்லா. 13).*

ம. பிராவசியம்.

விசைக்கம்பு *višai-k-kambu,* பெ.(n.) நெய்வார் கருவியிலொன்று (யாழ்.அக.); a weaver's instrument.

*[விசை[1] + கம்பு[1]]*



விசைக்கால்[1] *višai-k-kāl,* பெ.(n.) விசைக்கம்பு பார்க்க; see *višai-k-kambu*

*[விசை + கால்[1]]*

விசைக்கால்[2] *višai-k-kāl,* பெ.(n.) விசைக்காற்று பார்க்க; see *višai-k-kāṟṟu*

*[விசை + கால்[3]]*

விசைக்காற்று *višai-k-kāṟṟu,* பெ.(n.) ஒருவன் விரைந்து செல்லும் வேகத்தால் உண்டாகும் காற்று (யாழ்.அக.); wind or movement of air caused by a person walking swiftly.

*[விசை + காற்று]*

விசைக்கொம்பு *višai-k-kombu,* பெ.(n.) தாழவளைத்துவிட்டதும் மீண்டும் மேற் கிளம்பும் மரக்கிளை; elastic branch of a tree, which when bent down and released springs back to its original position. *"ஈசுவரனாகிறான் பெரியா னொருவனன்றோ, அவன் விசைக் கொம்பு" (ஈடு, 3, 6, ப்ர.).*

*[விசை + கொம்பு]*

விசைகொள்(ளு)-தல் *višai-koḷ-,* 16 செ.கு.வி. (v.i.) 1. விரைதல்; to make haste. 2. நீண்டு சுருங்குந் தன்மையாதல்; to be elastic.

*[விசை + கொள்ளு-தல்]*

விசைத்தடி *višai-t-taḍi,* பெ.(n.) 1. விசைக்கம்பு (யாழ்.அக.) பார்க்க; see *višai-k-kambu.* 2. சிற்றுயிர்களைப் பிடிக்கும் பொறியின் ஒருப்பகுதி (வின்.); a part of a trap.

*[விசை + தடி]*

விசைதிற-த்தல் *višai-tiṟa-,* 3 செ.கு.வி. (v.i.) வேகமாக வெளிப்படுதல்; to burst out. *"விசைதிறந் துருமுவீழ்ந்த தென்ன" (கம்பரா. இரணிய. 127).*

*[விசை + திற-த்தல்]*

விசையம்[1] *višaiyam,* பெ.(n.) விசயம்[1] (பிங்.) பார்க்க; see *višayam.*

விசையம்[2] *višaiyam,* பெ.(n.) விசயம்[2] (பிங்.) பார்க்க; see *višayam.* *"அசைவி றானை விசைய வெண்குடை..... மன்னர்" (பெருங். இலாவாண. 8, 15).*

விசையம்[3] *višaiyam,* பெ.(n.) 1. விசயம்[3] 1 பார்க்க; see *višayam.* 2. விசயம்[3], 2, 3 (பிங்.) பார்க்க; see *višayam.* 3. வையம் (அரு.நி.); the earth.

**விசையேற்று-தல்** *viśai-y-ēṟṟu-*, 5 செ. குன்றாவி. (v.t.) 1. பொறி முதலியவற்றைத் தொழிற்படுத்த அணியமாக்கி வைத்தல் (யாழ்.அக.); to set up, as a spring or trap, to put in action, to set in motion. 2. முட்டி விடுதல்; to egg on.

*[விசை + ஏற்று-,]*

**விஞ்சு[1]-தல்** *viñju-*, 5 செ.குன்றாவி. (v.t.) மேலாதல் (பிங்.); to excel, surpass. *"விஞ்சிய ஞானம் விளங்கும்" (தாயு. பராபர. 154).*

தெ. மிந்த்சு; ம. மிஞ்சு; க., து. மிஞ்சு.

*[மிஞ்சு → விஞ்சு-, (வே.க. 17)].*

**விஞ்சு[2]-தல்** *viñju-*, 9 செ.கு.வி. (v.i.) மிகுதியாதல்; to be excessive. *"விஞ்சு குளிர்ப் பல்லவ மனுங்க" (கம்பரா. சூர்ப்ப. 31).*

*[மீ → மிஞ்சு-, → விஞ்சு-, (சு.வி.பக்.57)]*

**விஞ்சை** *viñjai*, பெ.(n.) 1. கலை; art, science. *"ஈரேழ் விஞ்சைத் திறனும்" (பாரத. வாரணா. 33).* 2. கல்வி (திவா.); learning, knowledge. 3. மிகப்பெரியதைப் பற்றின மெய்யுணர்வு; spiritual knowledge. *"விஞ்சைதனை யறிந்து மறியா தான்போல்" (கம்பரா. பிணிவிட். 122).* 4. வியத்தகு கலை; magic art. *"விஞ்சைகள் வல்லேன் விளிந்தநின் றோழரொடு... தருகுவன்" (சீவக. 520).* 5. மறைமொழி; incantation. *"விஞ்சைக ளிரண்டு மவ்வழி யூக்கினன்" (கம்பரா. தாடகை. 18).* 6. விஞ்சைப்பதி பார்க்க; see *viñjai-p-padi*. *"விஞ்சை வேந்தர்" (சீவக. 816).*

*[மிஞ்சு → விஞ்சு → விஞ்சை]*

**விஞ்சைப்பதி** *viñjai-p-padi*, பெ.(n.) மேலுலகம்; the world f the *vidyādharās*.

*[விஞ்சை + பதி]*

**விஞ்சைமகள்** *viñjai-magaḷ*, பெ.(n.) மேலுலகப் பெண்; *vidyādara* woman. *"விஞ்சை மகளவ் விழைபிடியாகி" (பெருங். நாவண. 5, 43).*

*[விஞ்சை + மகள்]*

**விஞ்சையர்** *viñjaiyar*, பெ.(n.) பதினெண் கணத்துள் ஒரு சாரார் (பிங்.); a class of demigods, one of *padiṉeṉ-kaṇam*,q.v. *"வரைமார்பர் ...... விஞ்சையர் போற் கிடந்தார்" (சீவக. 2241).*

**விஞ்சையன்** *viñjaiyaṉ*, பெ.(n.) புலவன்; learned man; a poet. *"வாதிமைந்த வடபுல விஞ்சையன்" (கல்லா. 42, 25).*

*[வித்தை → விச்சை → விஞ்சை → விஞ்சையன்]*

**விட்சி** *viṭci*, பெ.(n.) வெட்சி (சங்.அக.) என்பதன் மறுவழக்கு; corr. of *veṭci*.

**விட்டக்கோல்** *viṭṭa-k-kōl*, பெ.(n.) விட்டம்[1], 2 (வின்) பார்க்க; see *viṭṭam*, diameter.

*[விட்டம்[1] + கோல்[1]]*

**விட்டகுதிரையார்** *viṭṭa-kudiraiyār*, பெ.(n.) பாடல் வரியினால் பெயர் பெற்ற கடைக் கழகப் புலவர்; a sangam poet. *"யானையாற் பற்றி விடப்பட்ட மூங்கில், போர்க்களத்திற் செலுத்திவிடப்பட்ட குதிரையைப் போல மேலே எழும் என்று உவமையை அமைத்த சிறப்பினால் இப்பெயர் பெற்றாரென்பர்" (குறுந். 74).*

*[விட்ட + குதிரையார்]*

விட்டகுறை *viṭṭa-kuṟai*, பெ.(n.) முற்பிறவியில் செய்துவந்த வினையை முற்றமுடியாமல் இடையே விட்டுவிட்டதால் இப்பிறப்பில் முன்னேற்றத்திற்குக் காரணமாகும் வினைப் பயன்; karma resulting from acts left incompletely performed in a previous birth, considered as the cause of progress in the present birth, dist. fr. *toṭṭa-kuṟai*. *"புவிமேல் விட்டகுறை தொட்டகுறை யிரண்டு நிறைந்தனன்" (அருட்பா. VI, சிவதரிசன. 9).*

*[விடு → விட்ட + குறை]*

விட்டடி[1]-த்தல் *viṭṭaḍi-*, 3 செ.குன்றாவி. (v.t.) 1. கைவிட்டுப்போதல்; to desert. 2. வெருட்டி யடித்தல்; to drive out, chase. 3. பந்து முதலியவற்றை வெகுதூரஞ் செல்லும்படி அடித்தல் (இ.வ); to strike a long distance, as a ball.

*[விடு → விட்டு + அடி-.]*

விட்டடி[2] *viṭṭaḍi*, பெ.(n.) படித்து நிறுத்திய பாட்டின் இறுதியடி; the line last read or recited, as the place from which the reading or the recitation is to continue. *"விட்டடியுந் தொட்டடியும் அவனுக்குத் தெரியாது" (வின்.).*

*[விடு → விட்டு + அடி]*

விட்டதுறை *viṭṭa-tuṟai*, பெ.(n.) முன்னிகழ்த்திய பேச்சு செயல் முதலியவற்றில் நிறுத்தி வைத்த இடம்; place where one stopped, as in singing, reading or explaining verse.

*[விடு → விட்ட + துறை]*

விட்டபட்டினி *viṭṭa-paṭṭiṉi*, பெ.(n.) தொடர்ந்து பல நாட்களாகக் கிடக்கும் உண்ணாநோன்பு; fast continued for several days. *"விரதங்களால் விட்ட பட்டினியால்" (திருமுரு. 128–36, உரை).*

*[விடு → விட்ட + பட்டினி]*

விட்டபம் *viṭṭapam*, பெ.(n.) நிலம் (இலக்.அக.); earth.

விட்டபிறப்பு *viṭṭa-piṟappu*, பெ.(n.) முற்பிறப்பு; former or previous birth. *"விட்ட பிறப்பில் யான் விரும்பிய காதலன் திட்டிவிடமுண" (மணிமே. 11, 99).*

*[விடு → விட்ட + பிறப்பு]*

விட்டம் *viṭṭam*, பெ.(n.) 1. தலைக்கு மேலுள்ள முகட்டு உத்தரம்; beam or cross-beam in a building. *"இட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தென" (அகநா. 167).* 2. வட்டத்தின் குறுக்களவு; diameter. 3. குறுக்காக இடப்பட்டது (வின்.); anything put across. 4. உடல்; human body. *"விட்டத்தி னுள்ளே விளங்க வல்லார்" (திருமந். 2904).*

ம. விட்டம்.

*[முள் → முடு → முட்டு → (முட்டம்) → விட்டம். (மு.தா.பக்.100)]*

விள்ளுதல் = பிரிதல், விடுதல் = பிரித்தல்.

விட்டம் = 1. குறுக்காகச் சென்று வட்டத்தை இரண்டாகப் பிரிக்கும் கோடு. 2. குறுக்குத்தரம். *"இட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தென" (அகம். 167), "குருட்டுப் பூனை விட்டத்திற் பாய்ந்தது போல" (பழமொழி).*

விட்டரம் *viṭṭaram*, பெ.(n.) 1. தவத்தோர் இருக்கும்மேடை (பிங்.); seat for the use of

ascetics. 2. இருக்கை (நாமதீப. 445); seat. 3. கொள்கலம் (சது.); receptacle. 4. மரம் (யாழ்.அக.); tree. 5. ஒரு பிடி நாணல் (யாழ்.அக.); a handful of *kuśa* grass.

*[வி(ட்)டு + அரம்.]*

விட்டரி *viṭṭari*, பெ.(n.) அகத்தி (மலை.); west Indian pea-tree.

*[விட்டு + அரம் → அரி]*

விட்டல் *viṭṭal*, பெ.(n.) விடுகை (இலக்.அக.); leaving; abandoning.

*[விடு → விடல் → விட்டல்]*

விட்டலக்கணை *viṭṭalakkaṇai*, பெ.(n.) இலக்கணை மூன்றனுள் சொல்லப்பட்ட கிளவியத்தின் பொருளை இயைபின்மையாற் கைவிட்டு அக்கிளவியத்திற்கு வேறுபொருள் கொள்ளுமாறு நிற்பது (இலக்.அக.); a variety of *ilakkaṇai*, in which a word is used in its secondary sense, its primary sense having been lost, one of three *ilakkaṇai*, q.v.

*[விடு → விட்ட + இலக்கணை]*

**Skt.** *Laksaṇa* > த. இலக்கணை.

விட்டவர் *viṭṭavar*, பெ.(n.) 1. பகைவர் (திவா.); enemies. 2. துறந்தோர் (சங்.அக.); ascetics.

*[விடு → விட்டவர்]*

விட்டவன்விழக்காடு *viṭṭavaṉ-viḻakkāḍu*, பெ.(n.) விட்டவிழுக்காடு பார்க்க; see *vitta-viḻukkāḍu.* *"விட்டவன் விழக் காட்டுக்குக் கற்பித்த தளிகையொன்று"* (S.I.I.iv.142).

*[விட்டவன் + விழுக்காடு]*

விட்டவாக்கச்சொல் *viṭṭa-v-ākka-c-col*, பெ.(n.) விட்டவிலக்கணையாக வருஞ்சொல் (யாழ்.அக.); word used in its secondary sense, its primary sense having been lost.

*[விடு → விட்ட + ஆக்கச்சொல்]*

விட்டவாகுபெயர் *viṭṭa-v-āgu-peyar*, பெ.(n.) விட்டலக்கணை (வின்.) பார்க்க; see *viṭṭa-lakkaṇai.*

*[விட்ட + ஆகுபெயர்]*

விட்டவாகுபெயர்

பொருத்தமில்லாத கூற்றான் நின்று ஒரு பெயர் பிறிது பொருளை உணர்த்துமானால் அதனை விட்டவாகுபெயர் என்பர்.

"இந்தப் புடவை காஞ்சிபுரம்" என்பதில் காஞ்சிபுரம் என்ற ஊரின் பெயர் விட்ட ஆகுபெயராய் புடவையை உணர்த்திற்று. 'இப்பட்டு சீனம்' என்பதும் அதுவே. (இலக். கலைக். பக். 108).

விட்டவாசல் *viṭṭa-vāšal*, பெ.(n.) சிறப்புக் காலங்களில் அரசர் முதலியோர் சென்று வரும் கோயில்வாயில்; gate open only on special occasions, as in temples, palaces etc, *"சவரிப் பெருமாள் ..... விட்டவாசலாலே புறப்பட்டு எதிரே வந்து"* *(திவ். பெரியதி. 8, 2, 1, வ்யா).*

*[விடு → விட்ட + வாசல்]*

விட்டவிலக்கணை *viṭṭa-v-ilakkaṇai*, பெ.(n.) விட்டலக்கணை (வேதா.சூ.120, உரை) பார்க்க; see *viṭṭa-lakkaṇai.*

*[விடு → விட்ட + இலக்கணை]*

**Skt.** *Laksaṇa* > த. இலக்கணை.

விட்டவிழுக்காடு *viṭṭa-viḻukkāḍu*, பெ.(n.) கோயிலிற் பெரியோர்க்கு மதிப்புரவுக்காக ஏற்படுத்தப்பட்ட படையல் முதலியன; special share of the offerings, etc., in a temple, set apart for a person, as an honour. *"கோயிற் கந்தாடை யண்ணனுக்கும் வாதூல ரங்காசாரியருக்கும் விட்ட விழுக்காடுகளுண்டு" (இ.வ.).*

*[விடு → விட்ட + விழுக்காடு]*

விட்டாடி *viṭṭāḍi*, பெ.(n.) தனிமையான–வன்–வள்–து (யாழ்.அக.); lonely person or object.

*[விடு → விட்ட + ஆள் → ஆளி → ஆடி]*

விட்டார் *viṭṭār*, பெ.(n.) பகைவர்; enemies. *"இன்று நாமவர்க்கு விட்டார்சொல்" (சீகாழி. கோ. 519).*

*[விடு → விட்டார்]*

விட்டார்த்தம் *viṭṭārttam*, பெ.(n.) பாதிவிட்டம் (வின்.); radius, semi-diameter.

*[விட்டம்[1] + அர்த்தம்[2]]*

விட்டாற்றி *viṭṭāṟṟi*, பெ.(n.) இளைப்பாறுகை (நெல்லை.) (வின்.); rest, repose.

*[விடு[1] + ஆற்றி]*

விட்டாற்று–தல் *viṭṭāṟṟu-*, 5 செ.கு.வி. (v.i.) துக்கத்தை வெளியிட்டாற்றுதல்; to give vent to one's grief.

*[விடு → விட்டு + ஆற்று–,]*

விட்டி[1]–த்தல் *viṭṭi-*, 11 செ.கு.வி. (v.i.) மலங்கழித்தல்; to evacuate the bowels.

விட்டி[2] *viṭṭi*, பெ.(n.) 1. நறுவிலி, 4 பார்க்க; see *naṟuvili* 4. common sebestan (Nels.). 2. கோழி (யாழ்.அக.); cock. 3. முன் தள்ளிய வயிறு; pot-belly. *'சவலைப் பிள்ளைக்கு விட்டி பாய்ந்திருக்கிறது'.*

விட்டி[3] *viṭṭi*, பெ.(n.) செடி கொடிகளின் இலை காய்களை வெட்டும் சிறுவிட்டி (வே.க.152); a kind of small variety of moth.

*[வெட்டி → விட்டி]*

விட்டிகை *viṭṭigai*, பெ.(n.) விட்டில்; moth. *"தீப்பட்ட விட்டிகை போல்" (திருவிசைப். கருவூ. 10, 8).*

*[விட்டில் → விட்டிகை. (வே.க.152)]*

விட்டிசை *viṭṭišai*, பெ.(n.) 1. அசையுள் எழுத்து முதலியன பிரிந்திசைக்கை (தொல். பொ. 411, உரை, பக். 340); break occuring after a letter of an acai (pros.). 2. பாட்டில் வருந்தனிச்சொல் (காரிகை, செய். 10, உரை.); detached word in a verse (pros.).

*[விடு → விட்டு + இசை]*

விட்டிசை–த்தல் *viṭṭišai-*, 4 செ.கு.வி. (v.i.) அசை முதலியன பிரிந்திசைத்தல்; (Pros.) to pronounce acai, etc., with breakes. *"விட்டிசைத்து விந்த குற்றெழுத்து நேரசையாம்" (காரிகை. ஒழிபி. 2, பக். 136, உரை)*

*[விடு → விட்டு + இசை–,]*

விட்டிரு–த்தல் *viṭṭiru-*, 3 செ.கு.வி. (v.i.) பகைமேற் சென்றோர் பாசறையிற் றங்குதல்; to live in camp, as on a military expedition. *"விட்டிருக்கும் பாசறையினது" (பு.வெ.3, 18, கொளு. உரை.).*

*[விடு → விட்டு + இரு–,]*

விட்டில் *viṭṭil*, பெ.(n.) 1. பெரிய வெட்டுக்கிளி; locust. *"விட்டில்கிளி நால்வாய்" (சீவக. 64,*

*உரை).* 2. சிறு பூச்சி வகை; moth. *"செழிகின்ற தீப்புகு விட்டிலின்" (திருவாச. 6, 5).* 3. கொலை (அரு.நி.); murder. 4. பிராய் (சூடா.); paper tree. 5. நீண்ட மரவகை (மலை.); medium-papery ovate-to-oblong-acute-leaved kokra laurel.

*[வெட்டி → விட்டி → விட்டில்]*

*'இல்' ஒரு சிறுமைப் பொருட் பின்னொட்டு. வே.க.152. 'விட்டிற்பூச்சியைப் போல் பறந்து திரிகிறான்' (பழ.), 'விளக்கில் விழுந்த விட்டில் பூச்சியைப் போல' (பழ.)*

விட்டு[1] *viṭṭu*, பெ.(n.) திருமால்; *Tirumāl*. *"விட்டுவே நீயிங்கே வாராய்" (திவ். பெரியாழ். 2, 3, 5).*

*[விண்டு → விட்டு]*

விட்டு[2] *viṭṭu*, பெ.(n.) விசும்பு; sky.

*[விண் → விட்டு]*

விட்டுக்காட்டு-தல் *viṭṭu-k-kāṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) மங்குதல்; to fade, as colour. *'நிறம் விட்டுக்காட்டாது மிக வழுத்தம்' (பஞ்ச. திருமுக. 1157).*

*[விடு → விட்டு + காட்டு]*

விட்டுக்கொடு[1]-த்தல் *viṭṭu-k-koḍu-*, 4 செ. குன்றாவி.(v.t.) 1. காட்டிக் கொடுத்தல் (யாழ்ப்.); to betray, as a person, to disclose, as secrets. 2. கூட்டிக்கொடுத்தல் (யாழ்ப்.); to procure, as a woman, for the gratification of lust. 3. அடிப்பதற்குப் பந்தயத் தேங்காய் உருட்டிவிடுதல் (யாழ்ப்.); to bowl a coconut to the striker in a new year's game.

*[விடு → விட்டு + கொடு-.]*

விட்டுக்கொடு[2]-த்தல் *viṭṭu-k-koḍu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. இணக்கங்காட்டுதல்; to yield, consent, make concession. *"ஒருவர்க்கொருவர் விட்டுக்கொடார் களிறே" (ஈடு. 7, 4, 1).* 2. பிறனைக் கருவியாகக் கொண்டு ஒரு செயலை அறிதல் (வின்.); to use a person as a tool and see how a matter will develop.

*[விடு → விட்டு + கொடு-,]*

விட்டுச்சொல்(லு)-தல் *viṭṭ-c-col-*, 8 செ. குன்றாவி.(v.t.) மனத்திலுள்ளதை வெளியிட்டுக் கூறுதல்; to speak frankly or openly. *'அவள் அவனிடம் மனம்விட்டுச் சொன்னாள்'.*

*[விட்டு + சொல்-,]*

விட்டுசித்தர் *viṭṭu-cittar*, பெ.(n.) பன்னிரு ஆழ்வார்களுள் ஒருவரான பெரியாழ்வார்; a vaisnava saint and hymnist one of 12 *Aḷvārs*. *"விட்டுசித்தர் தங்கள் தேவரை.... வருவிப்பரேல்" (திவ். நாய்ச். 10, 10).*

*[விண்டு → விட்டு + சித்தர்]*

விட்டுணுகரந்தை *viṭṭuṇu-karandai*, பெ.(n.) விட்டுணுகரந்தை என்னும் மூலிகை (M.M.); Indian globe thistle.

*[விட்டுணு + கரந்தை]*



விட்டுணுதந்தி *viṭṭuṇu-tandi*, பெ.(n.) மூங்கில் (சங்.அக.); bamboo.

விட்டுப்பாடு-தல் *viṭṭu-p-pāḍu*, 5 செ. குன்றாவி.(v.t.) குரலை அடக்காது முழக்குவதுடன் பாடுதல்; to sing uninterruptedly with full voice.

*[விடு → விட்டு + பாடு-,]*

விட்டுப்பிடி-த்தல் *viṭṭu-p-piḍi-*, 4 செ. குன்றாவி. (v.t.) 1. ஒரு செயலைச் சிறிது காலம் விட்டிருந்து மீண்டுந் தொடங்குதல்; to abandon a job temporarily and begin again. *"அக்காரியந்தன்னை விட்டுப்பிடிக்க அமையும்" (திவ். இயற். திருவிருத். 46, வ்யா. பக். 264).* 2. கண்டிக்காமற் சிறிது இடங் கொடுத்தல்; to allow some degree of latitude. *'பையனிடம் கண்டிப்பாயிராமல் கொஞ்சம் விட்டுப்பிடிக்க வேண்டும்'.* 3. சற்றுப் பொறுத்து மறுபடியும் தொடர்தல்; to pause a little and resume, as in reading etc. 4. துளைக்கருவியை விரலால் தடவி இசைத்தல்; (MUS.) to run one's fingers over the keys or stops of a holed musical instrument. *"தர்ச்சனி முதலாக விட்டுப்பிடிப்பது ஆரோகணம்" (சிலப். 3, 58, அரும்.).*

*[விடு → விட்டு + பிடி-,]*

விட்டுப்போ-தல் *viṭṭu-p-pō-*, 8 செ.கு.வி. (v.i.) 1. நீங்கிவிடுதல்; to be left, to be abandoned. 2. மிக்க நோவாயிருத்தல்; to have smarting pain. *'கை கால்கள் விட்டுப் போகின்றன'.*

*[விடு → விட்டு + போதல்]*

விட்டும்விடாதவாக்கச்சொல் *viṭṭum-viḍāda-v-ākka-c-col*, பெ.(n.) விட்டும் விடாதவிலக்கணையாக வருஞ்சொல் (யாழ்.அக.); (gram.) word in which the primary sense is partly retained and partly discarded.

விட்டும்விடாதவாகுபெயர் *viṭṭumviḍāda-v-āgupeyar*, பெ.(n.) விட்டும்விடாத விலக்கணை (வின்.) பார்க்க; see *viṭṭumviḍāda-vilakkaṇai.*

விட்டும்விடாதவிலக்கணை *viṭṭum-viḍāda- vilakkaṇai*, பெ.(n.) இலக்கணை மூன்றனுள் ஒரு சொல்லிலே ஒரு பாகத்தின் பொருளை விட்டு மற்றைப்பாகத்தின் பொருள் இயைபு பெற நிற்கும் ஆகுபொருளி (இலக்கணை) (வேதா.சூ.119) (இலக்.அக.); (gram.) a variety of *ilakkaṇai*, inwhich the primary sense of a word is partly discarded and partly retained, one of three *ilakkaṇai*, q.v.

*[விட்டும் + விடாத + இலக்கணை]*

**Skt.** *Lakshṇa* > த. இலக்கணை.

விட்டுமாறு[1]-தல் *viṭṭu-māṟu-*, 9 செ.கு.வி. (v.i.) வேறுவழியில் திரும்புதல்; to change course, to deviate.

*[விடு → விட்டு + மாறு-தல்]*

விட்டுமாறு[2]-தல் *viṭṭu-māṟu-*, 5 செ. குன்றாவி.(v.t.) விட்டுப்பிடி-,3 பார்க்க; see *viṭṭu-p-piḍi.*

*[விடு → விட்டு + மாறு-,]*

விட்டுரை-த்தல் *viṭṭurai-*, 4 செ.குன்றாவி. (v.t.) விட்டுச்சொல் (திருக்கோ. 391, உரை) பார்க்க; see *viṭṭu-c-col.*

*[விடு → விட்டு + உரை-த்தல்]*

விட்டுவாங்கி *viṭṭu-vāṅgi*, பெ.(n.) தன் மனைவியைப் பிறனுக்குக் கொடுப்போன்

(யாழ்ப்.); one who prostitutes his wife for gain.

*[விடு → விட்டு + வாங்கி]*

**விட்டுவிட்டுமின்னு-தல்** *viṭṭu-viṭṭu-minnu-*, 15 செ.கு.வி.(v.i.) விண்மீன்போல ஒளி வீசுதல்; to twinkle.

*[விட்டு + விட்டு + மின்னு-தல்]*

**விட்டுவிடு-தல்** *viṭṭu-viḍu*, 18 செ.குன்றாவி. (v.t.) 1. பிடிப்பு விடுதல்; to let go, to loose one's hold upon. 2. விலகி விடுதல்; to forego, resign, relinquish, give up, abandon.

**விட்டுவிளங்கு-தல்** *viṭṭu-viḷaṅgu-*, 10 செ.கு.வி. (v.i.) நன்றாக ஒளிர்தல்; to shine with added lustre.

*[விடு → விட்டு + விளங்கு-தல்]*

**விட்டெறி-தல்** *viṭṭeṟi*, 2 செ.குன்றாவி. (v.t.) 1. தூர விழும்படி எறிதல்; to throw away, to fling. *"ஒருவரை யொருவர் விட்டெறிவர்" (கம்பரா. வாலிவ. 47.).* 2. நீக்குதல்; to leave, abandon.

*[விடு → விட்டு + எறி-தல்]*

**விட்டேற்றாளன்** *viṭṭēṟṟāḷaṉ*, பெ.(n.) விட்டேற்றி, 1 பார்க்க; see *viṭṭēṟṟi*. *"விடருந் தூர்த்தரும் விட்டேற் றாளரும்" (மணிமே. 14, 61, அரும்.).*

*[விட்டேறு→விட்டேற்று + ஆள் → ஆளன்]*

**விட்டேற்றி** *viṭṭēṟṟi*, பெ.(n.) 1. சுற்றத்தினின்று நீங்கிப் பிறரையும் அவ்வாறு செய்விப்போன் (மணிமே. 14, 61, அரும்.); one who forsakes his relations and induces others to do likewise. 2. தொடர்பற்றவ-ன்-ள்; one who is unconnected or unconcerned. *'அந்த செய்தியில் விட்டேற் றியா யிருப்பது நலம்'.*

மறுவ. விட்டேத்தி.

*[விட்டேறு → விட்டேற்றி]*

**விட்டேறரணம்** *viṭṭēṟaraṇam*, பெ.(n.) விட்டேறு 1, 2 (சது.) பார்க்க; see *viṭṭēṟu*.

*[விட்டேறு + அரணம்]*

**விட்டேறு** *viṭṭēṟu*, பெ.(n.) 1. எறிகோல் (பிங்.) (சிலப். 15, 216, உரை); missile weapon. 2. வேல் (பிங்.); Javelin. *"புயமறவே விட்டேறு" (இரகு. நகர. 28).* 3. இகழ்ந்து கூறுங் கடுஞ்சொல்; harsh work of ridicule. *"விடருந் தூர்த்தரும் விட்டேறுரைப்ப" (பெருங். உஞ்சைக். 35, 226).*

க. புட்டேறு.

*[விடு → விட்டு + ஏறு]*

**விட்டை** *viṭṭai*, பெ.(n.) விலங்குகளின் சாணம் (நாமதீப. 599); dung of animals or cattle.

விள்ளுதல் = நீங்குதல், வெளிப்படுத்துதல்.

*[விள் → விட்டை]*

*'கழுதை விட்டையைக் கைநிறைய ஏந்தினாற் போல' (பழ.)*

வடவர் 'விக்ஷ்' என்பதை மூலமாகக் காட்டி அதன் புணர்ப்புத் திரிபாக விட், விண் என இரு வடிவுகளைக் குறிப்பர்.

விள் → விக்ஷ் (மலம்)

ஒ.நோ. உள் → உஷ், சுள் → சுஷ்

விள் → விண். பிள் → விள். பிள் → (பிய்) – பீ. பிள் → பீள் → பீளை = கண்மலம்.

**Skt.** விஷ்டா (வ.மொ.வ.88)

**விட்டோசை** *viṭṭōšai*, பெ.(n.) சொல்லின் எழுத்துக்களைப் பிரித்துப் பலுக்குகை (வின்.); (gram.) pronouncing the letters of a word with a pause after each.

*[விடு → விட்டு + ஓசை]*

**விட்புலம்** *viṭpulam*, பெ.(n.) விண்ணுலகம்; heaven. *"எங்கட் புலங்காண் விட்புலம் போயது" (சிலப்பதி. 8).*

*[விண் + புலம் – விட்புலம்]*

ஒ.நோ. மண் + கலம் – மட்கலம்

**விட** *viḍa*, து.வி.(adv.) 1. மிகவும்; exceedingly, very. *"விடக்களியா நம் விழுநகர்" (திருக்கோ. 297).* 2. இடைச்சொல் (prep.) காட்டிலும்; than, compared with. *'அதைவிட இது நல்லது' (உ.வ.).*

**விடக்கு** *viḍakku*, பெ.(n.) 1. இறைச்சி; flesh, meat. *"மீன்றடிந்து விடக்கறுத்து" (பட்டினப். 176).* 2. பிணம்; carcass. *"பரு விடக்கைப்பற்றி இரண்டு பதார்த்தம் விவாதம் ஒண்ணுமா போலே" (திவ். திருமாலை, 27, வ்யா. பக். 4).*

க., து. பிக்கு; ம.விடக்கு.

*[விடுதல் = நீத்தல், உயிர்விடுதல். விடு → விடக்கு]*

**விடங்கம்** *viḍaṅgam*, பெ.(n.) 1. புறாக்கூடு (யாழ்.அக.); dove-cot. 2. கொடுங்கை (பிங்.); curved cornice or projection. *"துப்பினால் விடங்கம்...செய்து" (திருவிளை. திருமணப். 70).* 3. சுவர்ப்புறத்து வெளி வந்துள்ள உத்திரக் கட்டை (வின்.); projection of a beam or joist outside the wall of a house. 4. வீட்டின் முகடு (பிங்.); ridge of a roof. *"வெந்நிற் றண்டென் விடங்கத்து" (ஞானா. 9, 2).* 5. வீதிக்கொடி (பிங்.); banner hoisted in a building and projecting into the street. 6. உளியினாற் செய்யப்படாது இயற்கையாமைந்த இலிங்கம்; the naturally formed lingam, as unchiselled. *"சோதி விடங்கமே யாயினும்..... மேவினான்" (திருவாரு. 26).* 7. அழகு (பிங்.); beauty. 8. ஆண்மை (பிங்.); manliness, ability, bravery. 9. இளமை (அரு.நி); youth.

*[விடு →விடர் = பிளவு. விடு → விடுதல் = தோன்றுதல். விள் → விடு (விடங்கு) → விடங்கம்.]*

**விடங்கர்[1]** *viḍaṅgar*, பெ.(n.) சிறுவழி (பிங்.); narrow way.

*[ஒருகா. இடங்கர்[3] → விடங்கர். இடங்கர் = சிறுவழி]*

**விடங்கர்[2]** *viḍaṅgar*, பெ.(n.) முதலை; crocodile. *"விடங்கரான் மெலியுறுங் குலத் தின்னக மலை யழைப்ப" (வரத. பாகவத. நாரசிங். 133).*

*[இடக்கு → இடங்கர்[1] → விடங்கர்]*



**விடங்கன்[1]** *viḍaṅgaṉ*, பெ.(n.) 1. உளியினாற் செதுக்கப்படாது, தானேயுண்டான இலிங்கம்; the naturally formed lingam, as unchiselled. *"விடங்கப் பெம்மான்" (தியாக. லீலை. கடவுள்.17).* 2. நல்லுருவ

முடையவன்; person of beauteous-form, handsome person. *"வேளென வந்த நாய்கர் சுந்தர விடங்கரானால்" (திருவிளை. மாணிக். 89).*

விடுதல் = தோன்றுதல். முளைவிடுதல், பிஞ்சுவிடுதல் என்னும் வழக்கை நோக்குக. விடங்கன் = தான்றோன்றி.

*[விள் → விடு → (விடங்கு) → விடங்கன்]*

விடங்கன்[2] *viḍaṅgaṉ*, பெ.(n.) 1. காமுகன்; person of dissolute habits, voluptuary. *"மனைகடோறும்... விடங்க ராகித் திரிவ தென்னே" (தேவா. 56, 1).* 2. வம்பளப்பவன்; gossiper, newsmonger. *'வாருங்காணும் விடங்கரே' (இ.வ.).*

விடுதல் = நீத்தல், கட்டுப்பாடின்மை.

*[விடு → (விடங்கு) → விடங்கன்]*

விடங்கு[1] *viḍaṅgu*, பெ.(n.) 1. அழகு; beauty. *"விடங்கினான் மிகுவிசயன்" (பாரத. அருச்சுனன்றீர். 77) (இலக்.அக.).* 2. அரைப் பட்டிகை முதலிய அணி கலன்களின் உறுப்பு; a part of girdle and other ornaments. *"திருப்பட்டிகை யொன்றில் ..... மொட்டு ஒன்றும் விடங்கு நாலும்" (S.I.I.ii,184).*

தெ., க., து. பெடங்கு.

விடங்கு[2] *viḍaṅgu*, பெ.(n.) சிற்றின்ப நடத்தை (சிருங்கார விலாசம்); gallantry. *"விடங்குபடக் குறிபல பாடி" (பதினொ. திருவேக. திருவ. 53).*

*[விடங்கன்[2] → விடங்கு]*

விடத்தர் *viḍattar*, பெ.(n.) விடத்தேரை பார்க்க; see *viḍattērai*. *"திரிகாய் விடத்தரொடு" (பதிற்றுப். 13, 14).*

விடத்தல் *viḍattal*, பெ.(n.) விடத்தேரை (இலக்.அக.) பார்க்க; see *viḍattērai*.

விடத்தலை *viḍattalai*, பெ.(n.) விடத்தேரை பார்க்க; see *viḍattērai*.

க. எடத்தர; ம., து. இடத்தர; தெ. வெனுத்துரு.

விடத்தாலம் *viḍa-t-tālam*, பெ.(n.) மருந்து வகை (சங்.அக.); a medicine.

*[விடம் + தாலம்]*

விடத்தாளி *viḍa-t-tāḷi*, பெ.(n.) விடத்தேரை (சங்.அக.) பார்க்க; see *viḍa-t-tērai*.

*[விடம் + தாளி]*

விடத்துக்கரசன் *viḍattu-k-karašaṉ*, பெ.(n.) கருடக்கல் (சங்.அக.); a medicinal stone.

*[விடத்துக்கு + அரசன்]*

விடத்தேதொடரி *viḍattē-toḍari*, பெ.(n.) விடத்தேரை பார்க்க; see *viḍa-t-tērai*. *"முள்ளுத்தன்னிடத்தே சூழ்ந்தெழுகின்ற விடத்தே தொடரி" (பெரும்பாண். 184, உரை).*

*[விடத்தே + தொடரி]*

விடத்தேர் *viḍa-t-tēr*, பெ.(n.) விடத்தேரை பார்க்க; see *viḍa-t-tērai*. *"தள்ளா விடத்தேர் தடந்தா மரையடைய" (தண்டி. 75, 2, உதா.)*

கோடாலி, மண்வெட்டி போன்ற கருவிகளுக்கு வழவழப்பும் வலுவும் கொண்ட பிடிகள் கோடுவதற்குரிய மரம். தானாகவே வேர்ச் செடிகளின் மூலம் படர்ந்து கொள்ளும் இயலுடைய விடத்தேர் ஆடுகளுக்குத் தீவனமாகவும். குதிரைகளின் வயிற்றுப் புழுக்களையும் நீக்கவும்

பயன்படுவது. மாந்தர்களின் கண்ணோய்க்கும், சிறுநீரகக் கல்லடைப்புக்கும் பயன்படும் குறுமரம்; ஆனால் பயன் தரும் ஒரு குறுமரம்; பயன்களோ பலப்பல.

– (மரம் தரும் வளங்கள் பக்.260.)

தெ. வெனுதுரு; ம. விடத்தேரி; க. எடத்தரி; **Skt.** விவ்ரிக்ஷன

விடத்தேரை *viḍa-t-tērai*, பெ.(n.) முள்ளையுடைய மரவகை (பதார்த்த. 245); ashy babool.

மறுவ. விடதாரி, விடத்தார், விடத்தல், விடதலை, விடதாளி.

விடதம் *viḍadam*, பெ.(n.) 1. முகில்; cloud. 2. துரிசு; verdigris.

விடதாரி *viḍadāri*, பெ.(n.) நச்சுமுறி மருத்துவன்; physician who treats cases of poisoning or toxicity. *"வேங்கை வரிப்புலி நோய் தீர்த்த விடதாரி யாங்கதனுக் காகார மானாற்போல்" (வாக்குண். 15, பி–ம்.)*

விடதாலி *viḍadāli*, பெ.(n.) பூரான் (நாமதீப. 264); centipede.

*[விடம் + தாலி]*



விடந்தீஞ்சான் *viḍan-tīñšāṉ*, பெ.(n.) கொல்லைப் பல்லி என்னும் மூலிகை (மூ.அ.); a parasitic plant.

*[விடம் + தீய்ந்தான் → தீஞ்சான்]*

விடப்பு *viḍappu*, பெ.(n.) விடர்[1], 1 (சது.) பார்க்க; see *viḍar.*

*[விடு[1] → விடப்பு]*

விடபகதி *viḍapa-kaḍi*, பெ.(n.) குதிரைநடை ஐந்தனுள் காளையின் பெருநடை போன்ற நடை; bull-like pace of the horse, one of five acuva-kati, q.v.

*[விடப + கதி]*

விடம்[1] *viḍam*, பெ.(n.) அதிவிடையம் (மலை.); atis.

விடம்[2] *viḍam*, பெ.(n.) மரக்கொம்பு (பிங்.); branch of a tree.

விடம்[3] *viḍam*, பெ.(n.) மலை; mountain.

விடம்[4] *viḍam*, பெ.(n.) இடம் என்பதன் மருவிய வழக்கு; corr. of place.

விடம்பம் *viḍambam*, பெ.(n.) 1. உள்ளொன்று புறம்பொன்றான தன்மை; hypocrisy, pretence. *"விடம்ப முளைத்துள் விரவினனும்" (சிவதரு. பாவ 36.).* 2. வேடம் பூணுகை (இலக்.அக.); wearing actor's dress.

விடம்பன் *viḍambaṉ*, பெ.(n.) உள்ளொன்று புறம்பொன்றான தன்மையுடையவன் (சைவச. பொது. 552); hypocrite, pretender.

*[விடம்பம் → விடம்பன்]*

விடம்பனம் *viḍambaṉam*, பெ.(n.) 1. நடிப்பு; imitation, imposture, disguise. 2. நிந்தை; ridicule, mockery. 3. இடர் (யாழ்.அக.); distress.

*[விடம்பம் → விடம்பனம்]*

**விடம்பு** *viḍambu*, பெ.(n.) விடர்[1],1 (வின்.) பார்க்க; see *viḍar, 1.*

**விடம்பை** *viḍambai*, பெ.(n.) பிளப்பு; cleft. *"இந்த விடம்பை நாத்தோய்க்கின்" (கலிங். 541.)*

**விடயி[1]-த்தல்** *viḍayi-*, 11 செ.குன்றாவி. (v.t.) பொறிகள் புலனைப் பற்றுதல்; to perceive, to apprehend through the senses. *"அவையொன்றையும் விடயியா வாகலான்" (சி.போ.பா.5, 1, பக். 106, சுவாமிநா.)*

**விடயி[2]** *viḍayi*, பெ.(n.) 1. ஐம்பொறி (இலக். அக.); five organs of sense. 2. அரசன்; king.

**விடர்[1]** *viḍar*, பெ.(n.) 1. நிலப்பிளப்பு (பிங்.); fissure, cleft. *"கூரெரி விடர் முகை யடுக்கம் பாய்தலின்" (அகநா. 47, 6) (பிங்.).* 2. மலைப்பிளப்பு; cleft in a mountain. *"நெடுவரை யருவிடர்" (புறநா. 135).* 3. மலைக்குகை; mountain cave. *"பெருமலை விடரகத்து" (புறநா. 37).* 4. முனிவரிருப்பிடம் (சூடா.); abode of a sage. 5. காடு (சூடா.); forest.

*[விள் → விடு → விடர்] (மு.தா. 100)*

**விடர்[2]** *viḍar*, பெ.(n.) பெருச்சாளி (உரி.நி.); bandicoot.

**விடர்வு** *viḍarvu*, பெ.(n.) நிலப்பிளப்பு (பிங்.); fissure, cleft.

*[விடு → விடர் → விடர்வு. (வே.க.149)]*

**விடரகம்** *viḍaragam*, பெ.(n.) 1. மலைக்குகை; mountain cave. *"விடரகமுகந்து" (மதுரைக். 308).* 2. மலை; mountain. *"விடரக நீயொன்று பாடித்தை" (கலித். 40).*

*[விள் → விடு → விடர் + அகம்] (மு.தா.100)*

**விடரவன்** *viḍaravaṉ*, பெ.(n.) பகலிற் கண் பிளவுள்ள பூனை (யாழ்.அக.); cat.

*[விடர் → விடரவன்] (செல்வி. 77. ஆனி. 549)*

**விடரளை** *viḍaraḷai*, பெ.(n.) மலைப்பிளப்பிடம்; cleft in a mountain. *"நறும்பழ மிருங்கல் விடரளை வீழ்ந்தென" (ஐங்குறு. 214).*

*[விள் → விடு → விடர் → விடரளை. (வே.க.149)]*

**விடரி** *viḍari*, பெ.(n.) மலை; mountain. *"விடரியங் கண்ணிப் பொதுவனை" (கலித். 101).*

*[விள் → விடு → விடர் → விடரி]*

**விடரு** *viḍaru*, பெ.(n.) அதிவிடையம் (மலை.); atis.

**விடருகம்[1]** *viḍarugam*, பெ.(n.) பூனை (நாமதீப. 223); cat.

*[விடரகம் → விடருகம்] (வே.க.149)*



**விடல்** *viḍal*, பெ.(n.) 1. முற்றும் நீங்குகை; leaving, renunciation. *"சமந்தமம் விடல்" (கைவல் தத்துவ. 9). "வெல்வது வேண்டின் வெகுளி விடல்" (நான்மணி.).* 2. ஊற்றுகை (நாமதீப. 695.); pouring. 3. குற்றம் (சது.); fault.

*[விள் → விடு[1] → விடல். (வே.க.பக்.113.)]*

விடலம் *viḍalam*, பெ.(n.) 1. உள்ளி (சங்.அக.); garlic. 2. குதிரை (யாழ்.அக.); horse.

விடலி[1] *viḍali*, பெ.(n.) 1. அடங்காச் சிற்றின்ப வேட்கையுடையவள்; lustful woman. *"தடவிடலிதலையும்" (சிவதரு. பரிகார. 16).* 2. திருமணத்திற்கு முன்னர்ப் பூப்படைந்த பெண்; girl whose menstruation commences before she is married. 3. பன்னீராட்டைப் பிராயத்தாள்; girl of 12 years of age. 4. பூப்புடையாள்; woman in her periods. 5. மலடி (யாழ்.அக.); barren woman.

விடலி[2] *viḍali*, பெ.(n.) கூரை வேய்வதற்குரிய புல் வகை; a kind of grass used for thatching.

*[விழல் → விடல் → விடலி]*

விழல் = பெரும்புல் வகை; கோரைவகை.

ஒ.நோ: குழல் = குடல், புழல் = புடல்.

விடலிபதி *viḍalipadi*, பெ.(n.) ஒழுக்கமற்ற மனைவியொடு வாழ்பவன்; a man living with his wife, whose secret intimacy with another is in jeopardy; one's wife who leans with her paramour.

*[விடு → விடுதல் = நீத்தல், கட்டுப்பாடின்மை. விடல் → விடலி + பதி]*

**Skt.** pathy > த. பதி.

விடலை[1] *viḍalai*, பெ.(n.) தைக்காத விடுதியிலை; loose, unstitched leaf.

*[விடு[1] + இலை]*

விடலை[2] *viḍalai*, பெ.(n.) 1. பதினாறு முதல் முப்பதாண்டு வரையுள்ள அகவையுடையவன் (பன்னிருபா.232); youth from 16 to 30. 2. திண்ணியோன் (பிங்.); strong, powerful man. *"விறல் கெழுபோர் விடலையை" (கம்பரா. இந்திரசித். 21.).* 3. பெருமையிற் சிறந்தோன் (பிங்.); great man. 4. வீரன்; warrior. *"முதியாள் விடலைக்கு வெங்கள் விடும்" (பு.வெ.4, 21).* 5. பாலை நிலத் தலைவன் (பிங்.); chief of a desert tract. 6. மருதநிலத் தலைவன்; chief of an agricultural tract. *"விடலை நீ" (கலித். 95).* 7. மணவாளன் (சூடா.); bridegroom. 8. ஆண்மகன் (நாமதீப. 119); man. 9. இளங் காளைமாடு (நெல்லை); steer, young bull.

**L.** vitulas; **GK.** italos, a calf; **E.** virgin from Gr. orgao, to swell.

*[விடை → விடலை]*

விடலை[3] *viḍalai*, பெ.(n.) 1. சூறைத் தேங்காய் (நெல்லை); coconut smashed on the ground before an idol. 2. இளநீர்; tender coconut.

ம. விடல.

*[விடு[1] → விடலை]*

விடவி *viḍavi*, பெ.(n.) மரம்; tree. *"பாங்கர் நின்றதோர் விடவியைப் பிடுங்குவான்" (பாரத. கீசக. 34).*

விடவிடெனல் *viḍaviḍeṉal*, பெ.(n.) 1. குளிர் முதலியவை பற்றி யுண்டாம் நடுக்கக்குறிப்பு; expr.signifying trembling, as from cold ehe. *'குளிர் அவனை விடவிடென்று குலுக்கி விட்டது'* 2. மெலிவுக்குறிப்பு; being lean, thin or flimsy. *'அவன் விடவிடென் றிருக்கிறான்'.* 3. சுரு சுருப்பாயிருத்தற் குறிப்பு; being active.

*[விடுவிடு + எனல்]*

விடவு[1] *viḍavu*, பெ.(n.) விடர்[1],1 (வின்.) பார்க்க; see *viḍar*.

விடவு[2] *viḍavu*, பெ.(n.) இழிகாமமுடைமை; licentiousness. *"ஆய்ச்சியர் கண்ணினுள் விடவே செய்து" (திவ். திருவாய். 1, 7, 5).*

விடளி *viḍaḷi*, பெ.(n.) பன்னீராட்டை அகவையாள்; girl of 12 years of age. *"மேலுறு மீராண்டினை யுடையாள் விடளி" (திருவானைக். கோச்செங். 139).*

*[விடலி→விடளி.]*

விடன்[1] *viḍaṉ*, பெ.(n.) 1. இழிகாமமுடையவன் (ஞானா. 35); voluptuary, sensualist. 2. கள்ளக்காதலன் (இலக்.அக.); paramour.

விடன்[2] *viḍaṉ*, பெ.(n.) வீரன்; warrior. *"விடர் கடலை மலை வான்வளர்ந்தன" (கலிங். 432).*

விடாக்கண்டன் *viḍā-k-kaṇḍaṉ*, பெ.(n.) ஒட்டாரமாக நின்று ஒன்றை நிறை வேற்றுபவன்; pertinacious, stubborn, unyielding man.

*[விடு[1] + ஆ (எதிர்மறை) + கள் → கண்டு → கண்டகன் → கண்டன். கண்டன் = பிறர்க்குத் தீங்கு விளைவிப்பவன்.]*

விடாக்காய்ச்சல் *viḍā-k-kāyccal*, பெ.(n.) விடாச்சுரம் (இங்.வை.157) பார்க்க; see *viḍā-c-curam*. *'விடாக்காய்ச்சலுக்கு விட்டுணு கரந்தை' (பழ.).*

*[விடு[1] + ஆ (எதிர்மறை) + காய்ச்சல்]*

விடாச்சுரம் *viḍā-c-curam*, பெ.(n.) தொடர்ந்து வரும் காய்ச்சல்; continuous fever, pyrexia. *'விடாச்சுரத்துக்கு விட்டுணு கரந்தை'.*

*[விடு + ஆ (எதிர்மறை) + சுரம்]*

விடாணம் *viḍāṇam*, பெ.(n.) விலங்கின் கொம்பு (சூடா.); horn, tusk.

விடாணி *viḍāṇi*, பெ.(n.) 1. கொம்புடைய விலங்கு; horned-animal. 2. யானை; elephant, as tusked.

விடாதகண்டன் *viḍāda-kaṇḍaṉ*, பெ.(n.) விடாக்கண்டன் (வின்.) பார்க்க; see *viḍā-k-kaṇḍaṉ*.

விடாதம் *viḍādam*, பெ.(n.) மயக்கம் (இலக்.அக.); lassitude, languor.

விடாதவாக்கச்சொல் *viḍāda-v-ākka-c-col*, பெ.(n.) விடாதவிலக்கணையாக வருஞ் சொல் (யாழ்.அக.); word which without losing its primary sense, has also a secondary sense.

*[விடு[1] + ஆ (எதிர்மறை) + ஆக்கச் + சொல்]*

விடாதவாகுபெயர் *viḍāda-vāgu-peyar*, பெ.(n.) விடாதவிலக்கணை (வின்.) பார்க்க; see *viḍāda-v-ilakkaṇai*.

*[விடாத + ஆகுபெயர்]*

தத்தம் பொருளின் நீங்காது நின்று தம் பொருளின் வேறல்லாத பொருளோடு புணரும் பெயர்களை விடாததவாகுகுபெயர் என்பர்.

மஞ்சள் என்பது தனக்குரிய பொருளை விடாமலே மஞ்சள் கிழங்கைக் குறிக்கும்போது அது விடாத ஆகுபெயராம். இனிப்புத் தின்றான் என்பதும் அது.

– (இலக்.கலைக்.பக்.108.)

விடாதவிலக்கணை *viḍāda-v-ilakkaṇai*, பெ.(n.) இலக்கணை மூன்றனுள் சொல்லின் பொருட்கும் இயைபுற நிற்கும் இலக்கணை (வேதா.சூ.120) (இலக்.அக.); a variety of *ilakkaṇai*, in which the primary sense of a word is retained along with its secondary

sense, one of three *ilakkaṇai*, q.v.

*[விடாத + இலக்கணை. இலக்கணை = ஒரு பொருளைக் காட்டற்குரிய சொல்லை மற்றொரு பொருட்கு தந்துரைப்பது.]*

**Skt.** Laksana > த. இலக்கணை.

விடாதுபேசு–தல் *viḍādu-pēšu-*, 9 செ.கு.வி. (n.) பிதற்றுதல் (திவா. 1925); to blabber, to chatter interminably.

*[விடாது + பேசு–,]*

விடாதுரை–த்தல் *viḍādurai-*, 4 செ.கு.வி. (v.i.) விடாதுபேசு–, (நாநார்த்த. 673) பார்க்க; see *viḍādu-pēšu-*.

விடாப்படை *viḍā-p-paḍai*, பெ.(n.) கையினின்றும் விடுபடாத வாள் குந்தம் போன்ற படைக்கலன் (நாமதீப. 426); weapon held in hand and used, nonmissile weapon.

*[விடா + படை]*

விடாப்பிடி *viḍā-p-piḍi*, பெ.(n.) 1. உறுதியாகப் பற்றுகை; firm hold or grasp. 2. உறுதியாக நிற்கை; tenacity, pertinacity. 3. தன் முரண்டு; obstinacy. 4. மாறாமல் ஒரே நிலையி லிருக்கை; unchange-ableness.

*[விடா + பிடி]*

விடாப்பிடியாக *viḍā-p-piḍiyāga*, வி.எ. (adv.) தன்னிலையிலிருந்து சிறிதும் மாறாமல், சிறிதும் விட்டுக் கொடுக்காமல்; tenaciously. *'அந்தச் செய்தியாளர் விடாப்பிடியாக ஒரே கேள்வியை மாற்றி மாற்றிக் கேட்டுக் கொண்டிருந்தார்' (உ.வ.).*

*[விடாப்பிடி + ஆக]*

விடாப்பூட்டு *viḍā-p-pūṭṭu*, பெ.(n.) ஓய்வில்லாமை (யாழ்.அக.); being always in harness; having no rest or leisure.

*[விடா + பூட்டு]*

விடாமல் *viḍāmal*, வி.எ. (adv.) இடையீடின்றி; without obstruction. *'விட்டுவிட்டுப் பெய்கிற மழையினும் விடாமற் பெய்கிற தூவானம் நல்லது" (பழ.).*

விடாமழை *viḍā-maḻai*, பெ.(n.) இடையீடின்றிப் பெய்யு மழை (நாமதீப. 84); continuous rain.

மறுவ. அடைமொழி.

*[விடா + மழை]*

விடாமுயற்சி *viḍā-muyaṟši*, பெ.(n.) ஒன்றை அடைவதற்குத் தொடர்ந்து செய்யும் முயற்சி; perseverance. *'விடாமுயற்சி எப்படிப் பட்டவர்களையும் வெற்றி அடையச் செய்யும்'.* 'perseverance is the key to the success' (pro.).

*[விடா + முயற்சி]*

விடாய்¹ *viḍāi*, பெ.(n.) 1. நீர்வேட்கை; thirst. *"தண்ணீர் விடாயெடுத்தால்" (இராமநா. யுத்த. 59).* 2. களைப்பு (நாமதீப. 633); lassitude, weariness. 3. விருப்பம்; longing, craving.

*[விழை → விழாய் → விடாய்] (சு.வி. 37)*

விடாய்² *viḍāi*, பெ.(n.) வெப்பம்; heat. *"விண்ணும் புவியும் விடாயாற்ற" (சொக்க. உலா. 59).*

விடாய்³–த்தல் *viḍāi-*, 11 செ.கு.வி. (v.i.) 1. நீர்வேட்கையெடுத்தல்; to thirst. *"விடாய்த்த காலத்திலே வாய் நீருறுதற்கு" (மலைபடு. 136, உரை).* 2. களைப்படைதல்; to

grow faint and weary, to be tired out. 'எருது உழுகிறது, உண்ணிவிடாய்க்கிறது'. 3. விருப்பப்படுதல்; to long for.

[விடை → விடாய் → விடாய்-, (வே.க.120)]

[ஒருகா. விழை → விழாய் → விடாய்-, (செல்வி. செப்பிடெம்பர். 47)]

விடாய்[4] *viḍāi*, பெ.(n.) விடுமுறைநாள் (வின்.); holiday.

[விடு → விடை → விடாய்]

விடாய்[4]-த்தல் *viḍāy-*, 11 செ.கு.வி. (v.i.) செருக்குக் கொள்ளுதல் (இ.வ); to be haughty, to be stiff with pride.

[விடை → விடாய் → விடாய்-,]

விடாய்ப்பு *viḍāippu*, பெ.(n.) 1. நீர்வேட்கை; thirsting. 2. களைத்திருக்கை; being tired. 3. விருப்பம்; desire, longing.

[விழை → விழாய் → விடாய் → விடாய்ப்பு]

விடாயன் *viḍāyaṉ*, பெ.(n.) 1. நீர்வேட்கை யுள்ளவன்; thirsty person. *"விடாயன் தண்ணீர்ப் பந்தலிலே வரக்கொள்ளச் சாலுருண்டு கிடந்தாற் போலே" (ஈடு. 1, 4, 4).* 2. களைப்புற்றவன்; man faint with fatigue. *"சில தார்மிகர் ஏரிகல்லினால் ..... விடாயர் அதிலே மூழ்கி விடாய் தீர்ந்து போகா நிற்பர்கள்" (ஈடு. 1, 3, ப்ர.).* 3. காமுகன்; sensualist, voluptuary.

[விடாய் → விடாயன்]

விடாயாற்றி *viḍāyāṟṟi*, பெ.(n.) 1. இளைப்பாறல்; rest, repose, as relief from weariness. 2. இளைப்பாற்றுவது; that which affords rest or relief. *"இந்திரனது விடாயாற்றி மலை" (தக்க யாகப். 419, உரை).* 3. பெரிய திருவிழாவை யடுத்து தலைவனுக்கு (சுவாமி) இளைப் பாறலாகக் கோயிலுக்குள் நடைபெறும் திருநாள்; festivities within the temple following the main festival, when the moveable image of the deity is supposed to take rest.

[விடாய் → விடாயாற்றி]

[ஒருகா. விடாய் + ஆற்று → ஆற்றி]

விடாயெடு-த்தல் *viḍāyeḍu-*, 4 செ.கு.வி. (v.i.) விடாய்[2] பார்க்க; see *viḍāi*. *"தண்ணீர் விடாயெடுத்தால்" (இராமநா. யுத்த. 59).*

[விடாய் + எடு-.]

விடாரகம் *viḍāragam*, பெ.(n.) விடாலகம் (யாழ்.அக.) பார்க்க; see *viḍalagam*.

வ. விடாரக.

[விடரகம் → விடாரகம்] (வே.க.149)

விடாரம் *viḍāram*, பெ.(n.) பூனை; cat. (வே.க.149).

[விடாலம் → விடாரம்]

விடாலகம் *viḍālagam*, பெ.(n.) 1. பூனை (சூடா.); cat. 2. பொன்னரிதாரம் (யாழ்.அக.); yellow orpiment.

[விடாரகம் → விடாலகம். (வே.க.149)]

விடாலம் *viḍālam*, பெ.(n.) 1. விடாலகம்,1 (சங்.அக.) பார்க்க; see *viḍālagam*. 2. கண்மணி (யாழ்.அக.); eye-ball.

[விடாலகம் → விடாலம்] (வே.க.149)

த. விடாலம் > வ. வைடால = பூனை

விடானி *viḍāṉi*, பெ.(n.) சதுரக்கள்ளி (சங்.அக.); square spurge.



**விடி[1]–தல்** *viḍi-*, 4 செ.கு.வி. (v.i.) 1. தோற்ற மாதல்; to dawn, to break, as the day. *"வெஞ்சுடர் தோன்றி விடிந்ததை யன்றே" (சீவக. 219).* 2. முடிவு பெறுதல்; to come to an end, to be ended or finished. *"வழிநடப்பதென்று விடியுமெமக் கெங்கோவே" (தனிப்பா. i, 212, 5).* 3. நற் காலத்தால் துன்பம் நீங்கி யின்புறுதல். (பரிபா. 7, 85); to see better days.

வெள் → வெளு. வெளுத்தல் = 1. வெண்மையாதல். 2. விடிதல். கிழக்கு வெளுத்தது (உ.வ.).

வெள் → வெளி → வெளித்தல் = 1. வெண்ணிறங் கொள்ளுதல் –2. விடிதல்.

வெளி → வெடி. ஒ.நோ. வெளி → வெடி = திறந்த வெளி (பிங்.) களிறு – கடிறு.

கெளிறு → ரகடிறு.

வெடிதல் = விடிதல். *"என்றூழ் வெடியாத போதிற்கொய்தான்" (செவ்வந்திப்பு. உறையூரதி.47)*

வெடி = விடிவெள்ளி (பிங்.)

வெடியல் = விடியல். வெடிவு → விடிவு

வெடி → விடி → விடிதல் = கதிரொளி தோன்றுதல்

*"வெஞ்சுடர் தோன்றி விடிந்ததை யன்றே" (சீவக.219).*

விடி = விடிகாலை.

*"விடிபக லிரவென் றரிவரி தாய" (திவ். பெரிய.4:10:2)*

விடி → விடியல். "வைகுறு விடியல்" (தொல். பொருள். 8).

*"விடியல் வைகறை யிடூஉ மூர" (அகம். 196).*

விடி → விடிவு → விடிவை.

*"விடிவை சங்கொலிக்கும்" (திவ். திருவாய். 6 : 1 : 9)*

மா.வி.அ. அல்லது வடவர் காட்டும் மூலம் வருமாறு

வ்யுஷ் (ப்யுஷ்) = 1. எரி. 2. பிரி. 3. தள், வெளிவிடு.

வி + வஸ்[2](ஒளிர்) = வ்யுஸ் (vyus) = விடியல் (ச.வே.)

= வ்யுஷ் (இ.வ.) > ஆம் வேற். (இ.வே.).

வ்யுஷித – (7ஆம் வேற்) = விடியல் வ்யுஷ்ட = விடிந்து வ்யுஷ்டி = விடியல் (இ.வே.).

இதை நோக்கும்போது, விடி என்னும் சொல்லையே *'வ்யுஷ்'* என்று திரித்து அதற்கேற்ப இங்ஙனம் தித்திருக்குச் செய்திருக்கின்றனர் என்பது தெரிய வருகின்றது (பாவாணர்.வ.மொ.வ.)

*'விடிந்தும் பெண்ணுக்கு முட்டாக்கோ?' (பழ.)*

வ்யுங்டி = skt. (வ.மொ.வ.)

தெ. விடியு.

*[விள் → விளி → விடி → விடி–, (வே.க.பக்.136)]*

**விடி[2]** *viḍi*, பெ.(n.) விடிகாலை பார்க்க; see *viḍi-kālai. "விடி பகலிரவென் றறிவரிதாய" (திவ். பெரியதி. 4, 10, 8).*

*[விள் → விளி → விடி] (செல்வி. 77. வைகாசி பக். 498)*

**விடி[3]** *viḍi*, பெ.(n.) 1. தனிப்பட்டது (C.G.); odd item, not one of a set, single article. 2. திரைச்சீலை (சது.); curtain.

தெ. விடி; க., து. பிடி; ம. விடு.

**விடி[4]–த்தல்** *viḍi-*, 11 செ.கு.வி. (v.i.) மலங் கழித்தல்; to void excrement.

*[விட்டித்தல் → விடி–,]*

விடி[5] *viḍi*, பெ.(n.) நறுவிலி (M.M.802); sebestan.

ம. விடி.

விடிகாலை *viḍi-kālai*, பெ.(n.) பொழுது விடிகின்ற நேரம் (கொ.வ.); break of day, early morning.

*[விடி[1] + காலை[1]]*

விடிகுண்டு *viḍi-kuṇḍu*, பெ.(n.) விடிதற் குறியாக இடும் அதிர்வெடி; gun fired at the break of day, as time-signal.

*[விடி[2] + குண்டு[1]]*

விடிகோழி *viḍi-kōḻi*, பெ.(n.) விடியற் காலத்திற் கூவுஞ் சேவற் கோழி; cock crowing at dawn. *"விடிகோழி கூவுறது" (கோவ. க. 64).*

*[விடி + கோழி]*

விடிசங்கு *viḍi-śaṅgu*, பெ.(n.) சிலை (மார்கழி) மாதத்துப் புலர் பொழுது ஊதப்படும் சங்கம்; conch blown at the dawn of day, especially in the tamil month of *mārkaḻi*.

*[விடி + சங்கு]*

விடிநிலா *viḍi-nilā*, பெ.(n.) பின்னிரவில் தோன்றும் நிலவு (வின்.); moon that arose in the small hours of the morning.

*[விடி + நிலா]*

விடிமீன் *viḍi-mīṉ*, பெ.(n.) விடிவெள்ளி பார்க்க; see *viḍi-veḷḷi*. *"விடிமீன் முளைத்த தாளம்" (கல்லா.17, 12).*

*[விடி + மீன்]*

விடியங்காட்டி *viḍiyaṅ-kāṭṭi*, பெ.(n.) விடிகாலை; dawn. *'தம்பி இன்று விடியங்காட்டி வந்தான்' (உ.வ.). 'காட்டில்'* என்பது ஓர் உறழ்தர உருபு. (sign of comparative degree).

அது உலக வழக்கிற் காட்டி என்று திரிந்து காலப் பொருளில் வழங்கும்போது உறழ் தரத்தை மட்டுமின்றி ஒப்புத்தரத்தையும் (positive degree) குறிக்கும்.

இனி, விடியல்காட்டி விடியங்காட்டி என்று கொள்ளவும் இடமுண்டு, இதில், 'காட்டி' என்பது உறழ்தரவுருபல்லாத இறந்தகால வினையெச்சம்.

'காட்டில்' என்னும் உறழ்தர உருபு 'காட்டிலும்' என்று 'உம்' ஏற்கவும் செய்யும். அது உலக வழக்கில் 'காட்டியும்' என்று திரியும்.

விடியற்கருக்கல் = விடியும் பொழுதுள்ள இருட்டு. விடியற்காலம், விடியா மூஞ்சி, விடியா வழக்கு, விடியாவிளக்கு – நந்தா விளக்கு. *"விடியா விளக்கென்று மேவி நின்றேனே" (திருமந். 48)* விடியா வீடு, விடிவிளக்கு (விடியும் வரை எரிவது) விடிவெள்ளி, விடிவேளை என்பன பெருவழக்கான கூட்டுச் சொற்கள். (செல்வி. 77, வைகாசி, 498).

விடியல்[1] *viḍiyal*, பெ.(n.) விடியற்காலை, பொழுது விடிகின்ற நேரம்; break of day, dawn. *"வைகுறு விடியன் மருதம்" (தொல். பொருள். 8.).*

*[விள் → விடி → விடியல். (சு.வி.பக்.17)]*

விடியல்[2] *viḍiyal*, பெ.(n.) 1. மலங்கழிக்கை; voiding excrement. 2. வயிற்றுப்போக்கு; purging.

*[விடி → விடியல்]*

விடியல்[3] *viḍiyal*, பெ.(n.) வெளியிடம் (பிங்.); open space or place.

*[வெளி → வெடி → விடி → விடியல். (வ.மொ.வ.88)]*

விடியல்வைகறை *viḍiyal-vaikaṟai*, பெ.(n.) பொழுது விடிதற்கு முன்னர்த்தாகிய வைகறை; twilight before break of day. *"பிரம்பின் றிரள்கனி பெய்து விடியல்*

வைகறை யீடுஉ மூர" (அகநா. 196).

[விடியல் + வைகறை]

விடியவிடிய *viḍiya-viḍiya*, பெ.(n.) இரவு முழுவதும் (கொ.வ.); all through the night. *'தென் மாவட்டங்களில் விடிய விடியத் தெருக்கூத்து நடக்கும்' (உ.வ.). 'விடியவிடிய கதை கேட்டு இராமனுக்குச் சீதை என்ன உறவு என்று கேட்டாற்போல' (பழ.).*

விடியற்கருக்கல் *viḍiyaṟ-karukkal*, பெ.(n.) விடிதற்கு முன்னுள்ள இருட்பொழுது; darkness preceeding break of day. *'விடியற்கருக்கலில் ஏர் பூட்டச் சென்றான்' (உ.வ.).*

[விடியல் + கரு → கருகு → கருக்கு → கருக்கல்]

விடியற்காலம் *viḍiyar-kālam*, பெ.(n.) வைகறை; break of day, dawn. *"விடியற் காலத்தே வந்து" (மதுரைக். 223, உரை). 'விடியற் காலத்தில் படிப்பது மனத்தில் நன்கு பதியும்' (உ.வ.). 'விடியற் காலம் கலியாணம், பிடியடா தம்பலம்' (பழ.). 'விடியு மட்டும் இறைத்தவனும் விடிந்த பின்பு சாலை உடைத்தவனும் சரி' (பழ.). 'விடியுமட்டும் மழை பெய்தாலும் ஓட்டாங் கிளிஞ்சில் முளைக்காது' (பழ.).*

[விடியல் + காலம்]

விடியற்பண் *viḍiyar-paṇ*, பெ.(n.) 1. விடியற்காலம் (வின்.) பார்க்க; see *viḍiyar-kālam*. 2. பூபாளம் என்னும் புறநீர்மைப் பண்; a melody type to be sung at dawn (mus ).

[விடியல் + பண்]

விடியற்புறம் *viḍiyaṟ-puṟam*, பெ.(n.) விடியற்காலம் பார்க்க; see *vidiyaṟ-kālam*.

[விடியல் + புறம்']

விடியற்றரம் *viḍiyaṟṟaram*, பெ.(n.) விடியற்காலம் (வின்.) பார்க்க; see *viḍiyaṟ-kālam*.

[விடியல் + தரம்]

விடியாப்பானை *viḍiyā-p-pāṉai*, பெ.(n.) 1. பொந்திகையற்றவ–ன்–ள். (வின்.); one who is never satisfied. 2. விடியாமூஞ்சி பார்க்க; see *viḍiyā-mūñji*.

[விடியா + பானை]

விடியாமூஞ்சி *viḍiyā-mūñji*, பெ.(n.) தொடர்ந்து வரும் நல்வினைப்பயன் அற்றவ–ள்–ன் (வின்.); unlucky person, one who never sees the end of ones troubles, inherited by bad action or karma. *'விடியாமூஞ்சிக்கு வேலை அகப்பட்டாலும் கூலி அகப்படாது' (பழ.)*

[விடியா + மூஞ்சி]

விடியாலை *viḍiyālai*, பெ.(n.) விடிகாலை என்பதன் கொச்சைவழக்கு; corr. of *viḍi-kālai*.

[விடிகாலை → விடியாலை]

விடியாவழக்கு *viḍiyā-vaḻakku*, பெ.(n.) ஒரு பொழுதும் முடிவுபெறாத வழக்கு (இ.வ.); never-ending dispute.

[விடியா + வழக்கு. விடியா = ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.]

விடியாவிளக்கு *viḍiyā-viḷakku*, பெ.(n.) நந்தாவிளக்கு; ever-burning lamp. *"விடியாவிளக்கென்று மேவி நின்றேனே" (திருமந். 48.)*

மறுவ. விடிவிளக்கு.

*[விடியா + விளக்கு]*



**விடியாவீடு** *viḍiyā-vīḍu*, பெ.(n.) தொடர்ந்து வரும் தீவினைப் பயனுள்ள வீடு; a house with continuous bad *'karma'*.

*[விடியா + வீடு]*

இதன் மூலம், துன்பம் தொலைந்து இன்பங் கூடுதற்கியலாமை வெளிப்படுத்தப்பட்டது.

**விடிவு¹** *viḍivu*, பெ.(n.) 1. விடிகாலை பார்க்க; see *viḍi-kālai*. *"விடபியிதன்கண் விடிவளவு மிருவே மிருத்தும்" (சேதுபு. தரும. 13).* 2. துன்பம் நீங்கியின்பம் வருகை; approach of good times, dawn of happiness. *நிற்பயம்பாடி விடிவுற் றேமாக்க" (பரிபா. 7, 85).* 3. ஒழிவு வேளை; leisure.

க. பிடவு (b).

*[விடி → விடிவு] (செல்வி 77. வைகாசி 499)*

**விடிவு²** *viḍivu*, பெ.(n.) விடியல்³ (அக.நி.) பார்க்க; see *viḍiyal*.

*[விடி → விடிவு]*

**விடிவு³** *viḍivu*, பெ.(n.) 1. அச்சம்; fear. 2. நறும்புகை; incense.

*[விடி → விடிவு]*

**விடிவெட்டியாள்** *viḍi-veṭṭiyāḷ*, பெ.(n.) விடுதியாள் (இ.வ.) பார்க்க; see *viḍudi-y-āḷ*.

*[விடி + வெட்டியாள்]*

**விடிவெள்ளி** *viḍi-veḷḷi*, பெ.(n.) பின்னிரவில் தோன்றும் வெள்ளி மீன் (சுக்கிரன்) (வின்.); venus, as the morning star.

*[விடி² + வெள்ளி]*

**விடிவேளை** *viḍi-vēḷai*, பெ.(n.) விடியற் காலம் பார்க்க; see *viḍiyaṟ-kālam*.

*[விடி + வேளை]*

**விடிவை** *viḍivai*, பெ.(n.) விடியற்காலம் பார்க்க; see *viḍiyaṟ-kālam*. *"விடிவை சங் கொலிக்கும்" (திவ். திருவாய். 6, 1, 9).*

*[விடி → விடிவு → விடிவை. (வ.மொ.வ.88)]*

**விடிவோரை** *viḍi-vōrai*, பெ.(n.) அதிகாலை; early hours of the morning. *"விடிவோரை நட்டு" (திவ். திருப்பா. 3, வ்யா).*

*[விடிவு¹ + ஓரை²]*

**விடு¹–தல்** *viḍu-*, 6 செ.குன்றாவி. (v.t.) 1. நீங்குதல்; to leave, quit, part with. *"தவ்வையைக் காட்டி விடும்" (குறள், 167), 'அவன் சென்ற ஆண்டே பள்ளியை விட்டுவிட்டான்; சம்பளம் போதாதென்று வேலையை விட்டு விட்டான்'.* 2. விலக்குதல்; to remove. *'அவன் காசிக்குச் சென்று வந்ததும் கத்தரிக்காயை விட்டுவிட்டான்'.* 3. நீக்குதல்; to get rid of. *"தூற்றாதே தூரவிடல்" (நாலடி, 75).* 4. பிரித்தல்; to split, separate; to disentangle, as hair. 5. கைவிடுதல்; to abandon, forsake. *'அவன் புதுமணஞ் செய்தவுடன் பழைய*

*மனைவியை விட்டுவிட்டான்'.* 6. போக விடுதல்; to let go. 7. அனுப்புதல்; to despatch, send away. *"தவமுது மகளை விட்டு" (குறள். 501, உரை).* 8. தொடர்பு விடுத்தல்; to liberate, set free, release. *'அவனுக்கும் எனக்கும் நீண்ட நாட்களாகத் தொடர்பு விட்டுப் போயிற்று'.* 9. நிறுத்துதல்; to give up, to leave off, discontinue. *'அந்த பழக்கத்தை விடு', 'வண்டியை விட்ட இடத்திலிருந்து ஓட்டி வந்தான்'.* 10. ஒழித்து விடுதல்; to omit, leave out. *'அந்தப் பகுதியை விட்டுப் படித்தான்'.* 11. முடித்தல்; to end, finish, conclude. 12. வெளி விடுதல்; to emit, issue, to give out, let out. 13. செலுத்துதல்; to send forth, discharge. *"எம்மம்பு கடிவிடுதும்" (புறநா. 9).* 14. எறிதல் (பிங்.); to throw. *"விடும் விடுங் கரதலத்து" (தக்கயாகப். 413.).* 15. சொரிதல்; to pour. *"கதிர் விடு தன்மையும்" (கலித். 100).* 16. கொடுத்தல்; to give, bestow. *"திருப்பணிக்கு விட்டேன்" (S. I. I. iii. 121.).* 17. சொல்லுதல்; to say, tell. *"வேலைகடப்பன் மீளமிடுக்கின் றெனவிட்டான்" (கம்பரா. மகேந்திர. 4).* 18. விளத்தமாகக் கூறுதல்; to describe in detail, to elucidate. 19. வெளிப்படக் கூறுதல்; to publish, expose, tell openly. 20. அனுமதி தருதல்; to permit, let allow. *'அவனை உள்ளே செல்ல விட்டான்'.* 21. காட்டித்தருதல்; to indicate, point out. *"கெடுதியும் விடீராயின்" (குறிஞ்சிப். 144).* 22. வெளிப்படுத்துதல்; to express, give out. *"மறைகாவா விட்டவன் புலம்பு விடு குரலோடு" (நெடுநல். 93, 4). 'மனத்தி லுள்ளதை விட்டுச் சொல்' (உ.வ.).* 23. பிதிர் விள்ளுதல்; to solve, as a riddle. 24. உண்டாக்குதல்; to form. *"துளைகள் விடுகழை" (திருப்பு. 51).* 25. பிடி நெகிழச் செய்தல்; to become loose. *'பணப்பையை எங்கோ விட்டுவிட்டான்'.* 26. இடத்தினின்று நீங்குதல்; to depart, leave. *'ஊரை விட்டுவிட்டான்' (விரும்பி நீங்குதல்) 'கோட்டையை விட்டுவிட்டான்' (அஞ்சி நீங்குதல்)* 27. விடுதலை செய்தல்; to release from the prison. *'அரசரின் முடிசூட்டு விழாவன்று சிறையாளியரை யெல்லாம் விட்டு விட்டனர்'.* 28. விடுமுறை யளித்தல்; to give holiday. *'வேனிற் காலத்தில் கல்வி நிலையங்களுக்கெல்லாம் விடுமுறை விடப்படும்'.* 29. இசைதல்; to consult, agree. *'காசு கொடுத்தபின் ஏவலன் உள்ளே போகவிட்டான்'.* 30. பிறருக்காக இழத்தல்; to loss for somebody. *'பொதுநலத்திற்காகத் தன்னலத்தை விட்டுக் கொடுத்தல் வேண்டும்'.* 31. ஏவுதல்; to set on. *'நாயை விட்டுக் கடிக்கச் செய்தான்'.* 32. அடித்தல்; to beat. *'கன்னத்தில் விட்டான் இரண்டு'.* 33. வினைக்கமர்த்தல்; to employ, to appoint. *'தண்ணீருக்கென்று நாலாளை விட்டிருக் கிறார்கள்'. 'காடுகெட ஆடுவிடு' (பழ.).* 34. அமைத்தல்; to make. *'வீட்டிற்கு நாற்புறமும் வாசல் விட்டுக் கட்டியிருக் கின்றனர்'.* 35. ஒளிவீசுதல்; to emit light. *'பட்டை தீர்ந்த கல் நன்றாய் ஒளிவிடும்'.* 36. புகுத்துதல்; to put in. *'பாம்புப் புற்றிற்குள் கையை விட்டான்'.* 37. இடையில் ஏடு தள்ளுதல்; to slip or miss a leaf in reading or copying. *'கள்ளேடு விட்டுப் படிக்கிறான்'.* 38. இடையில் இடம் விடுதல்; to give space. *'ஒற்றை யிடைவெளி விட்டுத் தட்டச்சடித்தல் வேண்டும்'.* 39. பொறுத்தல்; forbearing. *'கீரையை வளரவிட்டு அறுத்தல் வேண்டும்', 'கொதிக்கின்ற நீரை ஆறவிட்டுக் குடித்தல் வேண்டும்'.* 40. ஒழித்தல்; to cause to

cease. *'குடியை விட்டு விடு'.* 41. ஒதுக்குதல்; to allot. *'புதிய நகரமைப்பிற் கல்விச் சாலைக்குப் போதிய நிலம் விடப்பட்டிருக்கின்றது'. 'விட்டதடா ஆசை விளாம்பழத்து ஓட்டோடே' (பழ.).*

விடு[2]–தல் *vidu-*, 6 செ.கு.வி. (v.i.) 1. பிரிதல்; to be separated, divided. 2. விள்ளுதல், திறத்தல் (இலக்.அக.); to be opened. *'ஒரு விடுகதை போடு'.* 3. கட்டு அவிழ்தல்; to loosen, release. *"தளைவிட்ட தாமரை" (கலித். 77).* 4. மலர்தல்; to blossom. *"தாது பொதி போது விட" (தேவா. 1157, 6).* 5. உண்டாகுதல்; to appear; to be formed. *'மரத்தில் தளிர்விட்டிருக்கிறது'.* 6. மிகுதல்; to increase. *"ஒளிர்விட்ட வாக்கினை" (கலித். 72).* 7. தங்குதல்; to stay. *"காவினு ணயந்து விட்டார்களே" (சீவக. 1905).* 8. தவிர்தல்; to cease, stop. *'மழைவிட்டும் தூவானம் விடவில்லை' (பழ.).* 9. பிளந்திருத்தல்; to be split, broken or cracked. *'அந்தச்சுவர் விட்டுப் போயிற்று' (வின்.).* 10. நிறுத்தல்; to be let off, to be discontinued. *'அது விட்டது தெரியவில்லை'.* 11. இடைவெளி விடுதல்; to leave interspace, as in writing. *'இடைவெளி விட்டு எழுத வேண்டும்'.* 12. படிக்கையில் நிறுத்துதல்; to pause, as in reading. *'விட்டு விட்டுப் படிக்க வேண்டும்'.* 13. வலுக்குறைதல்; to lose strength. 14. விலகுதல் (இலக்.அக.); to become loose, disjointed. *'மூட்டு விட்டுப் போயிற்று'.* 15. அறுபடுதல்; to be cut. *'நூல் விட்டுப் போயிற்று'.*

**Ma.** *viṭuka*; **Ko.** *viṟ-*; **To.** pir; **Ka.** *biḍu*; **Kod.** *buḍ*; **Tu.** *buḍupuni*; **Te.** *viḍu*, vidusu; **Go.** *biṟsānā*; **Br.** biting.

*[விள் → விடு → விடு–,]*

விடு[3]–தல் *vidu-*, து.வி. (aux.) ஒரு துணை வினை; an auxiliary verb having the force of certainty, intensity, etc. *'வந்து விட்டான்'.*

விடு[4]–த்தல் *vidu-*, 11 செ.குன்றாவி. (v.t.) 1. அனுப்புதல்; to send away, despatch. *"போக்கற் கண்ணும் விடுத்தற் கண்ணும்" (தொல். பொ. 39.).* 2. போகவிடுதல்; to let go. *"உயிர் விடுத்தலின்" (கல்லா. கணபதி).* 3. தொடர்பு (பந்தம்) விடுவித்தல்; to free, liberate, release. *"பூவலர் கொடியனாரை விடுக்கிய கோயில் புக்கான்" (சீவக. 2917).* 4. நெகிழ்த்துதல்; to loosen. 5. பிரித்தல்; to split, separate, to disentangle, as the hair. *'புரை விடுத்துரைமோ' (சீவக. 1732). "உன்னல் காலே ஊன்றல் அரையே முறுக்கல் முக்கால் விடுத்த லொன்றே". 'தலைமயிர் விடுத்துக் கொண்டிருந்தாள்'.* 6. பிதிர் விள்ளுதல்; to slove, as a riddle. 7. செலுத்துதல்; to send forth, discharge. *"ஒருட லிரண்டு கூறுபட விடுத்த... வேலோய்" (கல்லா. முருகன்றுதி.).* 8. சொல்லுதல்; to stay, tell. *"செல்கென விடுத்தன்று" (பு.வெ.12, பெண்பாற். 19.).* 9. வெளிப்படக் கூறுதல்; to publish, to expose, as a secret, to say openly. 10. வெளிவிடுதல்; to emit, issue, to let out, give out. *"பெருங்காற்று விடுத்த" (கல்லா. கணபதி).* 11. விளத்தமாகக் கூறுதல்; to elucidate, to describe in detail. 12. விடை தருதல்; to answer, reply. *"வினாயவை விடுத்தல்" (நன். 40).*

*[விள் → விடு → விடு–த்தல், (மு.தா. 165)]*

விடு[5]–த்தல் *vidu*, 4 செ.கு.வி. (v.i.) 1. விடை பெறுதல்; to receive permission, as from a superior. *"விடுத்தேன் வாழிய குரிசில்"*

*(புறநா. 210).* 2. தங்குதல்; to remain. *"விடுத்தான் விடுத்தற் கிடங்கூறி" (திருவாலவா. 54, 5).*

விடு[6] *vidu*, பெ.(n.) பகலிரவுகள் நாழிகை யளவில் ஒத்தநாள் (வின்.); equinox. *"நிகரில் விடுக்களில்" (திருகாளத். பு. தல விசிட். 33).*

விடுக்கு[1] *vidukku*, பெ.(n.) சிற்றளவான குடிநீர்; small amount of drinking water.

*[முடுக்கு → விடுக்கு (செல்வி. செப். 78-10)]*

விடுக்கு[2] *vidukku*, பெ.(n.) மடக்கு; a mouthful water.

*[விழுங்கு → விழுக்கு → விடுக்கு (மு.தா.322)]*

விடுகதை *vidu-kadai*, பெ.(n.) புதிர்; riddle, enigma.

*[விடு[2]- + கதை[1]]*

விடுகவி *vidu-kavi*, பெ.(n ) விடுபாட்டு பார்க்க; see *vidu-pāttu*.

*[விடு[1]- + கவி]*

**Skt.** kavi > த. கவி.

விடுகாசு[1] *vidu-kāšu*, பெ.(n.) சில்லறைப் பணம் (வின்.); change, lower denomination of coins, petty cash.

*[விடு + காசு]*

விடுகாசு[2] *vidu-kāšu*, பெ.(n.) விடுகாசு வளையல் (வின்.) பார்க்க; see *vidukāšu-valaiyal*.

தெ. காசு (gāzu)

*[விடு + காசு]*

விடுகாசுவளையல் *vidu-kāšu-valaiyal*, பெ.(n.) கண்ணாடி வளையல் வகை (வின்.); a glass armlet or bangle, bracelet.

*[விடுகாசு[2] + வளையல்]*

விடுகாது *vidu-kādu*, பெ.(n.) வளர்த்துத் தொங்கவிடும் தொள்ளைக் காது; perforated ear- lobe hanging loose without any jewel. *"விடுகாதானாலும் தோடிட்டு வளர்ந்த காதென்று தெரியுங்காண்" (ஈடு. 10, 1, 1).*

*[விடு + காது]*



விடுகாலி *vidu-kāli*, பெ.(n.) 1. பட்டி மாடு; cattle allowed to roam at large. 2. கட்டுக் கடங்காதவ-ன்-ள்; person under no moral restraint.

*[விடு + காலி]*

விடுகாலிவிளைவு *vidu-kāli-viļaivu*, பெ.(n.) பின்னறுவடை (யாழ்.அக.); belated harvest.

*[விடுகாலி + விளைவு]*

விடுகு *vidugu*, பெ.(n.) 1. பிள்ளை; son. 2. துண்டு; piece.

*[பிடுகு → விடுகு (சு.வி.பக்.15)]*

விடுகுதிரை *vidu-kudirai*, பெ.(n.) பகைவர் மேல் விடுங் குதிரைப் பொறி; horse-shaped

engine of war. *"விற்பொறிகள் வெய்ய விடுகுதிரை" (சீவக. 102).*

*[விடு + குதிரை]*

விடுகுறை[1] *viḍu-kuṟai*, பெ.(n.) விட்டகுறை (வின்.) பார்க்க; see *viṭṭa-kuṟai.*

*[விடு + குறை]*

விடுகுறை[2] *viḍu-kuṟai*, பெ.(n.) விடுதுறை (வின்.) பார்க்க; see *viḍu-tuṟai.*

*[விடு + குறை]*

விடுகோலெருது *viḍu-kōl-eṟudu*, பெ.(n.) சமயத்திலுதவும் பொருட்டு உடன் கொண்டு செல்லும் எருது (வின்.); spare bullock.

*[விடு + கோல்[1] + எருது]*

விடுத்தம்[1] *viḍuttam*, பெ.(n.) தடவை (வின்.); turn, times. *"எங்களூரையும் இரண்டு விடுத்தமாக அழித்து ஆளும்படி வெட்டி" (புதுக். கல். 799).*

*[விடு → விடுத்தம்] (வே.க.149)*

விடுத்தம்[2] *viḍuttam*, பெ.(n.) 1. மரவகை; strychnine tree. 2. எட்டி (மலை.) பார்க்க; see *eṭṭi.*

விடுத்துவிடுத்து *viḍuttu-viḍuttu*, து.வி. (adv.) அடிக்கடி (வின்.); very often, frequently.

*[விடுத்து + விடுத்து]*

விடுதயிர் *viḍu-tayir*, பெ.(n.) நீர்கலந்த தயிர் (இ.வ.); curd mixed with water, loose curds.

*[விடு + தயிர்]*

விடுதல் *viḍudal*, பெ.(n.) விடுதலை (புதுவை.); release.

*[விடு → விடுதல்]*

விடுதலம் *viḍu-talam*, பெ.(n.) 1. நிலாமுற்றம்; open terrace. *"தன்கோயின் மீமிசை விடுதலத்து" (திருவாலவா. 16, 1).* 2. பொது மக்களின் பயன்பாட்டிற்காக விடப்பெற்ற வெற்றுநிலம்; unoccupied or vacant site set apart for the use of the public.

தெ. விடுதல; க. பிடடெ.

*[விடு + தளம் → தலம்]*

**Skt.** ஸ்தலம் (முன்மெய்ச் சேர்பு)

விடுதலை *viḍu-talai*, பெ.(n.) 1. ஓய்வு; rest, retirement. 2. தொடர்பு நீக்கம்; release, deliverance. 3. தன்னுரிமை; liberty. *"புலையருக்கும் விடுதலை" (பாரதி. தேசீய. விடுதலை. 2).*

தெ. விடுதல.

விடுதலைப்பத்திரம் *viḍutalai-p-pattiram*, பெ.(n.) சொத்திற் பிறர்க்கு உரிமையில்லை யென்பதை உறுதிப்படுத்தும் உறுதி ஆவணம்; release deed, deed of discharge, as of mortgage, etc.

*[விடுதலை + **Skt.** patra > த. பத்திரம்]*

விடுதா-தல் (விடுதருதல்) *viḍu-tā-*, 4 செ. குன்றாவி. (v.t.) கொடுத்தனுப்புதல்; to send, as a present. *"சிறு தொட்டில்..... உனக்குப் பிரமன் விடுதந்தான்" (திவ். பெரியாழ். 1, 3, 1).*

*[விடு + தா (தரு)-.]*

விடுதா-தல் (விடுதருதல்) *viḍu-tā-*, 4 செ.கு.வி. (v.i.) தடையின்றி முன் செல்லுதல்; to advance unchecked. *"வெஞ்சின வேந்தன் விடுதர" (பு.வெ.4, 1, கொளு.).*

*[விடு + தா (தரு)-,]*

விடுதாள் *viḍu-tāḷ*, பெ.(n.) தனித்தாள் (இ.வ.); loose sheet of paper.

*[விடு + தாள்]*

விடுதி *viḍudi*, பெ.(n.) 1. தங்குமிடம்; lodging place, place of temporary residence; choultry. *"விடுதியே நடக்கவென்று நவிலுவீர்" (பாரத. சூது. 165).* 2. விடுதலம், 2 (இ.வ.) பார்க்க; see *viḍu-talam*. 3. தனித்த–வன்–வள்–து; that which is solitary or lonely, separated or companionless. *'விடுதியாள்', 'விடுதி மாடு', 'விடுதிப்பூ'.* 4. இசைவு; leave, permission. *'எனக்கு விடுதி தர வேண்டும்'.*

தெ. விட்டி; க. பிடதி; ம. விடுதி.

*[விடு → விடுதி]*

விடுதிப்பூ *viḍudi-p-pū*, பெ.(n.) விடுபூ பார்க்க; see *viḍu-pū*.

*[விடுதி + பூ[3]]*

விடுதிமாடு *viḍudi-māḍu*, பெ.(n.) விடுகோலெருது பார்க்க; see *viḍu-kōl-erudu*.

*[விடுதி + மாடு]*

விடுதியாள் *viḍudi-y-āḷ*, பெ.(n.) வேலையில்லாதவன் (கொ.வ.); unemployed person. 2. குடும்ப அலுவலில்லாத ஆள்; single man, man without any domestic ties or duties.

*[விடுதி + ஆள்[2]]*

விடுதீட்டு[1] *viḍu-tīṭṭu*, பெ.(n.) கொடை ஆவணம்; gift deed. *"நாயனார் பண்டாரத் தார்க்கு விடுதீட்டுக் குடுத்த பரிசாவது" (S.I.I. V. 105).*

*[விடு[1] + தீட்டு[2]]*

விடுதீட்டு[2] *viḍu-tīṭṭu*, பெ.(n.) விடுதலை ஆவணம் (பத்திரம்) (ரகஸ்ய. 281); release deed.

*[விடு + தீட்டு]*

விடுது *viḍudu*, பெ.(n.) 1. ஆலம் விழுது; aerial root falling down from branch of banyan tree. 2. ஆழம் பார்ப்பதற்காக ஒரு முனையில் ஈயவுருண்டை கட்டிய கயிறு; sounding lead. *'கடலில் விடுது விட்டுப் பார்க்கிறது'* (naut.) *(வின்.).* 3. தூக்குருண்டை (இ.வ.); plumb-line.

*[விழுது → விடுது]*

விடுதுறை *viḍu-tuṟai*, பெ.(n.) படிக்கும் போது நிறுத்திப் படிக்கும் இடம் (யாழ்.அக.); place for pause in reading, singing, etc.

*[விடு + துறை]*

விடுதோல் *viḍu-tōl*, பெ.(n.) மேற்றோல்; epidermis. *"நரம்பொடு விடுதோல் ..... கழன்று" (மணிமே. 20, 59).*

*[விடு + தோல்[3]]*

விடுந்தலைப்பு *viḍun-talaippu*, பெ.(n.) சீலையின் முன்றானை (வின்.); front end of a cloth, the ornamented end of a saree.

*[விடு + தலைப்பு]*

விடுநகம் *viḍu-nagam*, பெ.(n.) கிட்டிக்கோல்; clamp consisting of two sticks, an instrument of torture. *"கேளாதாரை வடுக விடுநக மிட்டு" (ஈடு. 4, 8, 6).*

*[விடு + நகம்[2]]*

விடுநாண்[1] *viḍu-nāṉ*, பெ.(n.) இடுப்பிற் கட்டும் அரைஞாண் கொடி, கயிறு (ஈடு. 2, 5, 5); girdle, cord for the waist.

*[விடு + நாண்[2]]*

விடுநாண்[2] *viḍu-nāṉ*, பெ.(n.) கழுத்திலிருந்து இடைவரை தொங்கும் நாணணிவகை; a neclet ornament hanging down to the waist. *"திருக்கழுத்திற் சாத்தின விடுநாணானது திருவுந்தியளவும் தாழ" (திவ்.பெரியாழ். 2, 10, 2, வ்யா, பக். 488).*

*[விடு + நாண்]*

விடுநிலம் *viḍu-nilam*, பெ.(n.) வெற்று நிலம்; waste land. *"விடுநில மருங்கிற் படுபுல லார்ந்து" (மணிமே. 13, 51).*

*[விடு + நிலம்]*

விடுப்பு *viḍuppu*, பெ.(n.) 1. நீக்கம்; separation. *"விடுப்பில் குணகுணி" (வேதா. சூ. 127).* 2. துருவியறியுந் தன்மை (வின்.); inquisitiveness. 3. புதுமையானது; that which is strange or curious. *'அவன் விடுப்புக் காட்டுகிறான்' (வின்.).* 4. விருப்பம் (யாழ்.அக.); desire. 5. தானாக எடுக்கும் விடுப்பு; leave

*[விடு → விடுப்பு] (செல்வி. 77, ஆடி.பக். 488)*

விடுப்புக்காட்டு-தல் *viḍuppu-k-kāṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.) புதுமைக்காட்சி காட்டுதல் (வின்.); to present a curious or strange spectacle or show.

*[விடுப்பு + காட்டு-,]*

விடுபடு-தல் *viḍu-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) 1. நீக்கப்படுதல்; to be left, to be abandoned, relinquished. 2. விடுதலையடைதல்; to be released, liberated, as from bondage or prison.

*[விடு + படு-,]*

விடுபடை *viḍu-paḍai*, பெ.(n.) எறியப்படும் படை (சுக்கிர நீதி. 328); missile.

*[விடு + படை]*

விடுபதி *viḍu-pati*, பெ:(n.) மருமகன் (யாழ்.அக.); son-in-law.

*[விடு + பதி]*

விடுபாட்டு *viḍu-pāṭṭu*, பெ.(n.) தனிப்பாடல்: stray, occasional verse.

மறுவ. விடுகவி

*[விடு[1] + பாட்டு]*

விடுபாடு *viḍu-pāḍu*, பெ.(n.) இலக்கண வரையறை, மற்றும் தொகைப்படுத்துதல் ஆகியவற்றில் சொல்லவேண்டிய ஒன்று சொல்லப்படாதிருத்தல்; be left out, be omitted, be left undone.

*[விடுபடு → விடுபாடு]*

விடுபூ *viḍu-pū*, பெ.(n.) தொடுக்காத பூ; loose flower, as not strung in a garland. *"விடுபூத் தொடைப்பூக் கட்டுப்பூ" (சிலப். 5, 14, உரை).*

*[விடு + பூ[3]]*

விடுபேறு *viḍu-pēṟu*, பெ.(n.) பிறர்க்கு உரிமையாய் விடப்பட்ட நிலம் முதலியன (Insc.); endowment, as of lands, money, etc.

*[விடு + பேறு]*

விடுமலர் *viḍu-malar*, பெ.(n.) 1. மலர்ந்த பூ; blossom. *"விடுமலர்ப் பூங்கொடி போல நுடங்கி" (பரிபா. 12, 89).* 2. விடுபூ பார்க்க; see *viḍu-pū*.

*[விடு + மலர்]*

விடுமனை *viḍu-maṉai*, பெ.(n.) வெற்று மனையிடம் (இ.வ.); vacant house-site.

[விடு + மனை]

விடுமுதல் *viḍu-mudal*, பெ.(n.) வாணிகத் திற்கு வைத்த முதல் (இ.வ.); capital.

[விடு + முதல்]

விடுமுறி *viḍu-muṟi*, பெ.(n.) 1. விடுதலைப் பத்திரம் (இ.வ.) பார்க்க; see *viḍutalai-p-pattiram.* 2. மணமுறிப்பு செய்து கொண்டதைக் குறிக்கும் ஆவணம் (நாஞ்.); divorce deed. *(nāñ).*

[விடு + முறி]

விடுமுறை *viḍu-muṟai*, பெ.(n.) 1. அலுவலகம், கல்வி நிறுவனம் முதலியவற்றில் முறையாக அளிக்கும் ஓய்வுநாள் (இ.வ.); holiday, vocation. 2. கோடை விடுமுறை; summer holiday. 3. கிழமை விடுமுறை; weekly holiday.

[விடு + முறை]

விடுவம் *viḍuvam*, பெ.(n.) பகலிரவுகள் நாழிகையளவில் ஒத்தநாள்; equinox. *"அயனமே விடுவந்திங்கட் பிறப்பு" (வேதாரணி. தோற்ற. 82).*

[விடு → விடுவம்]

விடுவாய் *viḍuvāi*, பெ.(n.) நிலப்பிளப்பு; cleft, crevice in the surface of the earth. *"கருங்கதிரெறித்த விடுவாய் நிறைய" (அகநா. 53).*

[விடு + வாய்]

விடுவாய்செய்–தல் *viḍuvāy-šey-*, 1 செ. குன்றாவி. (v.t.) அரிதல்; to cut up, slice up, mince, as vegetables. *"கொடுவாய்க் குயத்து விடுவாய் செய்ய" (சிலப். 16, 30).*

[விடுவாய் + செய்–,]

விடுவி–த்தல் *viḍuvi-*, 11 செ.குன்றாவி. (v.t.) 1. விடுதலை செய்தல்; to liberate, set free, release. 2. உட்பொருளைக் கண்டு கூறுதல்; to explain, interpret, to solve, as a riddle.

*[விடு → விடுவி → விடுவி–,] (செல்வி. 77, ஆடி,589)*

விடுவிடெனல் *viḍuviḍeṉal*, பெ.(n.) 1. சுருசுருப்பாயிருத்தற் குறிப்பு; onom, expr. of being active, busy. 2. அச்சம் முதலிய வற்றால் மெய்ந் நடுங்குதற் குறிப்பு (இ); expr. of shivering of body out of fear etc. 3. சினங்கொள்ளுதற் குறிப்பு; being angry.

[விடுவிடு + எனல்]

விடுவெட்டி *viḍu-veṭṭi*, பெ.(n.) விடுதியாள் (இ.வ.) பார்க்க; see *viḍudi-y-āḷ.*

[விடு + வெட்டி]

விடூசி *viḍūši*, பெ.(n.) அம்பு; arrow. *"விடய மெனும் விடவிடூசி" (ஞானவா. முமுட். 13).*

[விடு + ஊசி]

விடேல்விடுகு *viḍēl-viḍugu*, பெ.(n.) பல்லவரசர் சிலரின் சிறப்புப் பெயர் (I.M.P.Tj.669); a creditable title of certain pallava kings. *"விடேல்விடுகு நீகடவும் வீதிதோறும்" (நந்திக். 74).*

[விடேல் + விடுகு]

விடேல்விடேலெனல் *viḍēl-viḍēl-eṉal*, பெ.(n.) ஈரடுக் கொலிக்குறிப்பு; an imitative sound or echo. *"மாவடு விடேல்விடேலென் றோசையும்" (பெரியபு. அரிவாட். 18).*

[விடேல் + விடேல் + எனல்]

விடேலெனல் *viḍēl-eṉal*, பெ.(n.) ஓசைக்குறிப்பு (சூடா.); an imitative sound.

*"மாவின் வரிவடு விடேலெனாமுன்" (பெரியபு. அரிவாட். 22).*

*[விடேல் + எனல்]*

விடை[1] *viḍai*, பெ.(n.) 1. மறுமொழி (நன். 386, உரை); answer, reply. 2. அனுமதி; liberty, leave, licence, permission. *"கானமின்றே போகின்றேன் விடையுங் கொண்டேன்" (கம்பரா. கைகேசி. 110).* 3. விடைக்கோழி (வின்.) பார்க்க; see *viḍai-k-kōḻi*. 4. அசைவு; movement, shaking. *"பெயர்த்திட்டானது விடைதந்தில தணுவும்" (சேதுபு. இராமனருச். 158).*

க., து. பிடெ.

*[விடு[2] → விடை (வே.க.149)]*

விடை[2] *viḍai*, பெ.(n.) மிகுதி; abundance, surplus. *"விடையரவ மன்றங் கறங்க" (பு.வெ.12. ஒழிவு. 5).*

விடை[3]-த்தல் *viḍai-*, 11 செ.குன்றாவி.(v.t.) 1. வேறுபடுத்துதல்; to seperate or alter. *"விடைப்பருந்தானை வேந்தன்" (சீவக. 555).* 2. அடித்தல்; to strike. *"விடைப்பரே மனிதருந் தம்மில் வெல்லவே" (சிவதரு. சனன. 63).* 3. கண்டித்தல் (வின்.); to reprove. 4. வெளிப்படுத்துதல் (வின்.); to reveal or expose.

*[விடு → விடை → விடை-,] (சு.வி.28)*

விடை[4]-த்தல் *viḍai-*, 11 செ.கு.வி.(v.i.) 1. மிகுதல்; to abound; *"புன்னை மலர் நாற்றம் விடைத்தே வருதென்றல்" (தேவா. 69, 2).* 2. கடுகுதல்; to be in haste. *"விடைத்துத் தவரை வெகுள்வானும்" (சிவதரு. பாவ. 36).*

விடை[5]-த்தல் *viḍai-*, 11 செ.குன்றாவி.(v.t.) 1. தடுத்தல்; to prevent, abstruct, parry. *"அவன் புடைத்த கைகளை விடைத்தன னகற்றி" (பாரத. கீசக. 79).* 2. வருந்துதல்; to affict, cause pain. *"விடையா வடந்தை செய் வெள்ளியம் பொருப்பினும்" (கல்லா. 51).*

விடை[6]-த்தல் *viḍai-*, 4 செ.கு.வி.(v.i.) 1. சோர்தல்; to droop, languish. *"விடையா விடையாசரணம்" (தணிகைப்பு. வீராட்ட. 12).* 2. விம்முதல்; to sob. *'விடைக்க விடைக்க அழுகிறான்'.* 3. பெருஞ் சினங் கொள்ளுதல் (சூடா.); to be very angry, to burst into a rage. *"விடைத்துவரு மிலங்கைக் கோன்" (தேவா. 159, 10).* 4. வலிப்புக் கொள்ளுதல் (வின்.); to twitch, as the legs of a beast when dying. 5. விரைத்து நிற்றல்; to stiffen up, straighten out. *'அவன் விடைத்து நிற்கிறான்'.* 6. செருக்குக் கொள்ளுதல்; to be haughty.

விடை[7] *viḍai*, பெ.(n.) வருத்தம் (யாழ்.அக.); distress, woe.

*[விடை[5] → விடை]*

விடை[8]-தல் *viḍai-*, 3 செ.கு.வி. (v.i.) 1. பிரிதல் (வின்.); to become disjointed, to split. 2. சினங் கொள்ளுதல் (வின்.); to be angry. 3. குற்றஞ்சொல்லுதல் (யாழ்.அக.); to find fault, to prick holes.

க. பிடய; ம. வெடியுக.

*[விடு → விடை-,] (வே.க. 149)*

விடை[9] *viḍai*, பெ.(n.) 1. எருது (பிங்.); bull. *"பீடுடைய போர்விடையன்" (தேவா. 539, 2). "தோடுடைய செவியன் விடையேறியோர்" (தேவா.)* 2. எருது ஓரை (இடபவிராசி) (பிங்.); taurus of the zodiac. 3. எருமைக்கடா; buffalo bull. *"மதர்விடையிற் சீறி" (பு.வெ.7, 14).* 4. மரையின் ஆண்; male of the bison.

*"மரையான் கதழ்விடை" (மலைபடு. 331).* 5. ஆட்டுக்கடா; ram. *"விடையும் வீழ்மின்" (புறநா.262).* 6. வெருகு (தொல். பொ. 623, உரை); tom-cat. 7. குதிரை (யாழ்.அக.); horse.

கூடற்கேற்ற நிலையில் எல்லா உயிரினங்களும் அதற்கேற்றவாறு பருத்திருத்தல் இயல்வு. இதனாலேயே, ஆடு மாடு சில விலங்கினங்களும் கோழி மயில் முதலிய பறவையினங்களும் பருத்த இளமை நிலையில் விடையெனப்படும். (த.வ.பக்.46).

விடைத்தல் = விம்முதல், பருத்தல், விறைத்தல், செருக்குதல்.

விலங்கினத்தில் பெரும்பாலும் ஆண் பருத்திருப்பதால், விடை என்னும் சொல் விலங்கின் ஆண்பாலை உணர்த்தும்.

விடை → விடலை = இளங்காளை, காளை போன்ற மறவன், பாலைநிலத் தலைவன்.

விடலை = L. Vitula. Gk italos-skt vatsa.

விடை என்பது விலங்கினத்தின் ஆண்பாலைக் குறிக்கும் பொதுச் சொல்லாயினும், வழக்கு மிகுதிபற்றிச் சிறப்பாகக் காளையையே உணர்த்தும்.

வடவர் காட்டும் மூலம் வ்ருஷ் (மழைபெய்) என்பதே. மழைக் கருத்தினின்று, ஆண்மைக் கருத்தை இருவேறு வகையில் கடுகளவும் பகுத்தறிவிற்கொவ்வாதவாறு வலிந்து வருத்தி யிருக்கின்றனர்.

வ்ருஷ் = மழைபெய் (இ.வே.) மழைபோல் அம்பைப் பொழி, ஆண்மைகொள், பிறப்பிப்பு ஆற்றல் பெறு.

வ்ருஷன் = (ஒருகால், முதலில் பெய்கின்ற, தெளிக்கின்ற, சினைப்பிக்கின்ற) ஆண்மையுள்ள வலிமையுள்ள, மைந்துள்ள (இ.வே.) ஆடவன், ஆண், ஆண்விலங்கு, காளை, ஆண்குதிரை, தலைவன்.

வ்ருஷ = ஆடவன், ஆண், கணவன், ஆண் விலங்கு, காளை, விடையோரை, தலைவன் தலைசிறந்தது.

வ்ருஷப(bh.) = வ்ருஷன் (இ.வே.)

வ்ருஷப–ருஷப = காளை (இ.வே.)

வ்ருஷப என்பதன் முதற்குறையே ருஷப என்பது. ஆயினும் வடவர் அதுவந்த வழியை அறியாமலோ, வடசொல்லாகக் காட்டல் வேண்டி வேண்டுமென்றோ, ருஷ்[2] என்பதை ருஷப என்னும் வடிவிற்கு மூலமாகக் காட்டுவர்.

ருஷ்[2] = செல், இயங்கு; குத்து, கொல்; உந்து, தள்.

விடை என்னும் சொல்லின் திரிபாதலாலேயே, வ்ருஷ என்பதில் வகரம் உள்ளது. ஆயின், வ்ருஷ் (மழைபெய்) என்னுஞ் சொல்லொடு அதைத் தொடர்புபடுத்தி உத்திக் கொவ்வா முறையில் பொருள் தொடர்பு காட்டினர். அதனோடமையாது, ருஷப என்னும் முதற்குறைத் திரிபையும் வேறுசொல்லாகக் கொண்டு அதற்கும் பொருள் பொருந்தா முறையிற் பொருள் பொருத்தினர்.

'விடை' என்பது கொச்சை வடிவில் 'விட' என்று நிற்கும். இடையின விடைச் செருகல் வழக்கப்படி வி → வ்ரு என்றும், மெய்த்திரிபு மரபுப்படி ட → ஷ என்றும், திரிந்தனவென உண்மையறிக. (வ.மொ.வ.89–90).

*[விள் → விடு → விட → விடை (சு.வி.பக். 17]*

**விடை[10]** *viḍai*, பெ.(n.) இளம்பாம்பு (திவ். பெரியதி. 2, 9, 6, வ்யா.); young cobra.

**விடைக்கந்தம்** *viḍai-k-kandam*, பெ.(n.) செம்மணித்தக்காளி (தைலவ.); black nightshade.

*[விடை + கந்தம்]*

**விடைக்குறி** *viḍai-k-kuṟi*, பெ.(n.) காளை முத்திரை; seal with the mark of shiva's bull. *"திருக்கடையை விடைக்குறியிட்டு" (திருவாலவா. பதி. 4).*

*[விடை[9] + குறி]*

**விடைக்கோழி** *viḍai-k-kōḻi*, பெ.(n.) தாயைவிட்டுப் பிரிந்து திரியக் கூடிய பருவத்துள்ள கோழிக்குஞ்சு (யாழ்.அக.); chicken old enough to roam about away from its mother hen.

[விடை[1] + கோழி]

மறுவ. கோழிச் சேவல்.

**விடைகாலெறி-தல்** *vidai-kāleri-*, 21 செ.கு.வி. (v.i.) 1. இறக்குங்காலத்தில் கால்கள் வலித்திழுத்தல்; to twitch the legs, as a beast or person when dying. 2. கால் மடங்குதல்; to bend the legs backward.

[விடை[5] + காலெறிதல்]

**விடைகொடு-த்தல்** *vidai-kodu-*, 4 செ.கு.வி. (v.i.) 1. மறுமொழி சொல்லுதல்; to answer. 2. அனுமதி கொடுத்தல்; to grant leave or permission. *"வினைக்கு விடை கொடுப்பாம்" (பிரபுலிங். துதி. 1).*

[விடை[1] + கொடு]

**விடைகொள்(ளு)-தல்** *vidai-kol-*, 16 செ.கு.வி. (v.i.) 1. வெளியேற அனுமதி பெறுதல்; to get permission, to take leave of, as when departing. *"யானும் விடைகொள்ளத் தந்தருளுகென்றனள்" (தக்கயாகப். 288).* 2. வந்து சேர்தல்; to arrive. *'இன்றைக்குத்தான் திருவல்லிக் கேணிக்கு விடை கொண்டேன்'.*

[விடை + கொள்(ளு)-,]

**விடைகோள்** *vidai-kōl*, பெ.(n.) விடைதழால் பார்க்க; see *vidai-talāl*. *"கதழ்விடை கோட் காண்மார்" (கலித். 103).*

[விடை[8] + கோள்]

**விடைதழால்** *vidai-talāl*, பெ.(n.) ஏறு தழுவதற்குரிய முல்லை நிலப்பாறையறை வித்து சினமூட்டி விடப்பட்ட ஏற்றினைத் தழுவிப்பிடிக்கை; grappling and subduing enraged bulls, as by a suitor in a test of bravery. *"தழாஅல் வேண்டும்" (தொல். பொருள். 644).*

[விடை + தழுவு → தழால். (தழால் = தழுவுகை)]

**விடைதுரத்துதல்** *vidai-turattudal*, பெ.(n.) வளர்ந்து பெரிதான குட்டி அல்லது குஞ்சைத் தாய்விலங்கு அல்லது பறவை தன்னினின்று அகற்றுகை; sending or driving away of the young ones by the mother animal or bird after their tutelage is over.

[விடை + துரத்துதல்]

**விடைப்பாகன்** *vidai-p-pāgan*, பெ.(n.) சிவ பிரான்; *śiva*, as riding the bull Nandi. *"மெய்யா விமலா விடைப்பாகா" (திருவாச. 1, 34).*

[விடை + பாகன்[3]]

**விடைப்பு[1]** *vidaippu*, பெ.(n.) 1. வேறு படுத்துகை; separating, dividing. *"விடைப் பருந்தானை வேந்தன்" (சீவக. 555).* 2. நீக்குகை; removal. *"விடைப்பரு வினையினாக்கம்" (தணிகைப்பு. சீபரி. 603).*

[விடை[3] → விடைப்பு]

**விடைப்பு[2]** *vidaippu*, பெ.(n.) 1. சினங் காட்டுகை; mani-festation of anger, wrath. 2. திமிர்; arrogance. *'அவன் மிகவும் விடைப்பாயிருக்கிறான்'.*

[விடை[4] → விடைப்பு]

**விடைப்பு[3]** *vidaippu*, பெ.(n.) குற்றம் (யாழ்.அக.); fault, error.

[விடை[6] → விடைப்பு]

**விடைப்பேர்** *vidai-p-pēr*, பெ.(n.) வரிவகை (S.I.I.vii.403); a tax.

[விடை + பேறு → விடைப்பேர்]

**விடைப்பேறு** *viḍai-p-pēṟu,* பெ.(n.) பழைய வரி வகை (S.I.I.ii.115); an ancient tax.

*[விடை + பேறு]*

**விடைமுகன்** *viḍai-mugaṉ,* பெ.(n.) நந்தி; Nandi, as having the face of a bull. *"விடைமுக னுரைத்தசொல் வினவி" (கந்தபு. விடை. 23).*

*[விடை + முகம் → முகன்]*

**விடைமுரிப்பு** *viḍai-murippu,* பெ.(n.) எருத்தின் திமில் (திவா); hump of an ox.

*[விடை + முரிப்பு]*

**விடையதிகாரி** *viḍai-y-adigāri* பெ.(n.) விடையிலதிகாரி பார்க்க; see *viḍayil-adigāri. "இப்படிக்கு விடையதிகாரி உய்யக் கொண்டான் எழுத்து" (S.I.I.iii.36).*

*[விடை[1] + அதிகாரி]*

**விடையம்[1]** *viḍaiyam,* பெ.(n.) 1. காட்சிப்பொருள்; objects of sense. *"விடையமறுத்து" (காசிக. அக. விந். 14).* 2. விடயம்[1], 1, 4 பார்க்க; see *viḍayam.* 3. நாடு; country, nation. *"விடையமொன்றின்றி வென்ற" (சூளா. மந்திர. 62).*

*[விடு → விடை → விடையம்] (சுவி.28)*

**விடையம்[2]** *viḍaiyam,* பெ.(n.) அதிவிடையம் (அரு.அக.); atis.

**விடையவன்** *viḍai-y-avaṉ,* பெ.(n.) 1. சிவபிரான் பார்க்க; see *sivapirāṉ. "விடையவனே விட்டிடுதி கண்டாய்" (திருவாச. 6, 1).* 2. வருணன்; *varuṇa. "நெடுந்தேருடை மீளிதானும் விடையவனாதலால்" (பாரத. குருகுல. 108, அரும். பக். 12).*

*[விடை → விடையவன்]*

**விடையன்[1]** *viḍaiyaṉ,* பெ.(n.) விடையவன்,1 பார்க்க; see *viḍai-y-avaṉ. "ஒற்றை விடையனு நான்முகனும்" (திவ். பெரியாழ். 4, 10, 4).*

*[விழை → விடை → விடையன் (வே.க.120)]*

**விடையன்[2]** *viḍaiyaṉ,* பெ.(n.) மிகு சிற்றின்ப வெறியன், காமுகன்; sensualist.

*[விழை → விடை → விடையன் (வே.க.120)]*

**விடையாத்தி** *viḍai-y-ātti,* பெ.(n.) விடாயாற்றி பார்க்க; see *viḍā-y-āṟṟi.*

*[விடையாற்றி → விடையாத்தி]*

**விடையாயம்** *viḍai-y-āyam,* பெ.(n.) ஏற்றையுடைய ஆனிரை; herd of cows with a bull in their midst. *"வேற்காளை விடையாயங் கொள்கென்றான் வேந்து" (பு.வெ.1, 1).*

*[விடை[7] + ஆயம்[4] (ஆயம் = ஆக்களின் மந்தை)]*

**விடையாற்றி** *viḍai-y-āṟṟi,* பெ.(n.) விடாயாற்றி பார்க்க; see *viḍā-y-āṟṟi.*

**விடையான்** *viḍaiyāṉ,* பெ.(n.) சிவன்; Sivan. *"விடையாயெனுமால்" (தேவா. திருமரு. 1).*

*[விடையன் → விடையான்]*

**விடையிலதிகாரி** *viḍaiyil-adigāri,* பெ.(n.) அரசாணை விடுக்கும் அதிகாரி; officer, who issues the royal orders. *"விடையிலதிகாரிகள் உய்யக் கொண்டானும்" (S.I.I.iii.36) (T.A.S.i.166).*

*[விடை → விடையில் + அதிகாரி → விடையிலதிகாரி] (செல்வி 77, ஆடி, 588)*

**விடையுச்சன்** *viḍai-y-uccaṉ,* பெ.(n.) திங்கள் (நாமதீப. 97); moon.

*[விடை[7] + உச்சன்]*

**விடையூர்தி** *viḍai-y-ūrdi* பெ.(n.) சிவபிரான்; šiva as riding with the bull Nandi. *"விடையூர்தி யருளா லுலவுவீர்" (தாயு. சித்தர், 3).*

*[விடை + ஊர்தி]*

**விடையோன்** *viḍaiyōṉ,* பெ.(n.) விடையவன், 1 பார்க்க; see *viḍai-y-avaṉ 1. "விடையோன் யாகசாலை புக" (தக்கயாகப். 728).*

*[விடையன் → விடையோன்]*

**விண்[1]** *viṉ,* பெ.(n.) 1. விரிந்த அல்லது வெளியாகிய வானம்; sky. *"விண்பொரு புகழ் விறல்வஞ்சி" (புறநா. 11).* 2. மேலுலகம்; heaven. *"விண்மீதிருப்பாய்" (திவ். திருவாய். 6, 9, 5).* 3. வானத்திலுள்ள முகில் (திவா.); cloud. *'விண்பொய்த்தால் மண்பொய்க்கும்' (பழ.). 'விண் வலிதோ மண் வலிதோ' (பழ.)*

தெ., ம. விண்ணு; து. பின்னு; மால்ட். பின்யெ.

**விண்[2]** *viṉ,* பெ.(n.) காற்றாடிப் பட்டத்தின் ஒரு கருவி (யாழ்.அக.); a contrivance in a paper kite.

**விண்கொள்ளி** *viṉ-koḷḷi,* பெ.(n.) விண்வீழ்கொள்ளி (நாமதீப. 76) பார்க்க; see *viṉ-vīḻ-koḷḷi.*

*[விண்[1] + கொள்ளி]*

**விண்கோ** *viṉkō,* பெ.(n.) வானவர் தலைவன் (நாமதீப. 60); Indra.

*[விண் + கோ[3]]*

**விண்சுகம்** *viṉ-šugam,* பெ.(n.) தகரை (பச்.மூ.); fetid cassia.

*[விண்டுகம் → விண்சுகம்]*

**விண்டபூரகம்** *viṇḍa-pūragam,* பெ.(n.) மாதுளை (மலை); pomegranate.

**விண்டல்** *viṇḍal,* பெ.(n.) மூங்கில்; bamboo. *"விண்டலை..... விசும்புற நீட்டிய நெறியும்" (பெருங். மகத. 15, 7) (பிங்.).*

*[விண்டு[2] → விண்டல்]*

**விண்டலம்** *viṇḍalam,* பெ.(n.) 1. வானம் (சூடா.); sky. 2. மேலுலகம்; svarga, heaven.

*[விண்[1] + தலம்[1]]*

**விண்டவர்** *viṇḍavar,* பெ.(n.) விண்டார் பார்க்க; see *viṇḍār. "விண்டவர்பட" (திவ். பெரியதி. 8, 7, 5).*

*[விள் → விண்டவர்]*

**விண்டாண்டு** *viṇṇaṇḍu,* பெ.(n.) ஊஞ்சல் (சூடா.); swing.

*[விண்டு[2] + ஆண்டு → விண்டாண்டு]*

**விண்டார்** *viṇḍār,* பெ.(n.) பகைவர்; separated or estranged persons, enemies, foes. *"விண்டார் பட" (இறை. 3, பக். 47).*

*[விள் → விண்டார்]*

**விண்டு[1]** *viṇḍu,* பெ.(n.) 1. திருமால் (பிங்.); visnu. 2. அறநூல் பதினெட்டனுளொன்று; a sanskrit text-book of Hindu Law ascribed to visṇu, one of 18 *tarumanūl,* q.v.

*[விள் → விண்டு]*

**விண்டு**[2] *vinḍu,* பெ.(n.) 1. வானம் (சூடா.); sky. *"விண்டுலாய் நிமிர்கிரவுஞ்சகிரி" (கந்தபு. தாரக. 2).* 2. மேலுலகம்; svarga, heaven. *"விண்டுறை தேவரும் விலகிப் போயினார்" (கம்பரா. கிளைகண்டு. 138).* 3. முகில் (பிங்.); cloud. 4. காற்று (பிங்.); wind, air. 5. மலை; mountain. *"தென்புல மருங்கின் விண்டு நிறைய வாணன் வைத்த விழுநிதி" (மதுரைக். 202).* 6. மூங்கில் (பிங்.); bamboo. 7. விரிந்தது; to spread.

விள்ளுதல் = விரிதல், வெளியாதல்

விள் → வெள் → வெளி

விள் → விண். விரிந்த அல்லது வெளியாகிய வானம்

"விண்பொரு புகழ் விறல் வஞ்சி" (புறம் 11)

விள் → விண் → விண்டு. விண்டு = வானம். (மு.தா.153).

குமரிக்கண்ட முல்லை நிலத்து மக்கள் தங்கட்கும், தங்கள் ஆடுமாடுகட்கும் இன்றியமையாத மழையைத் தரும் தெய்வமென்று கருதியே, கரிய வானத்தை அல்லது முகிலை மாயோன் (கரியோன்) என்னும் பெயரால் வணங்கி வந்தனர்.

ஒ.நோ. மால் = முகில், மாயோன். இச்சொல்லே திரு என்னும் அடைமொழி பெற்றுத் திருமால் எனத் தெய்வப் பெயராய் வழங்கி வருகின்றது. ஆரியர் வேதக் காலத்தில் கதிரவனையே விஷ்ணு என்றழைத்தனர். பின்னர் தமிழரொடு தொடர்பு கொண்டு தமிழ் மதத்தை மேற்கொண்ட பின்பே 'விஷ்ணு' என்னும் சொல் திருமாலைக் குறிக்கலாயிற்று.

வடவர் காட்டும் மூலம் விஷ்[1] = வேலைசெய், ஓடு, மேம்படு, மூடு, உண். மா.வி.அகரமுதலி "Prob. for vish, 'All - pervader' or worker" என்று கருதும்.

எங்கும் நிறைந்திருப்பது என்னும் கருத்தில், 'விஷ்' என்பது 'விள்' என்பதன் திரிபே. ஒ.நோ: உள் – உஷ். சுள் = சுஷ் (வ.மொ.வ.90–91).

**விண்டு**[3] *vinḍu,* பெ.(n.) விட்டுணுகாந்தி[2] (மலை.) பார்க்க; see *viṭṭuṇu-kāndi.*

மறுவ. விட்டுணுகரந்தை.

**விண்டு**[4] *vinḍu,* பெ.(n.) விண்டுகம் (மூ.அ.) பார்க்க; see *vinḍugam.*

*[விள் → விண்டு]*

**விண்டுகம்** *vinḍugam,* பெ.(n.) 1. தகரை, 1 (மலை.) பார்க்க; see *tagarai,1.* 2. தாமரை (சங்.அக.); lotus.

**விண்டுசித்தன்** *vinḍu-šittaṉ,* பெ.(n.) விட்டுசித்தர் (சங்.அக.) பார்க்க; *viṭṭu-šittar.*

*[விண்டு + சித்தன்]*

**விண்டுசொல்(லு)–தல்** *vinḍu-šol-,* 8 செ. குன்றாவி. (v.t.) வெளிப்படக்கூறுதல்; to speak freely and openly; to speak without any restraint or occult.

*[விள் → விண்டு + சொல்–,]*

**விண்டுநதி** *vinḍu-nadi,* பெ.(n.) 1. மந்தாகினி என்னும் ஆறு; the celestial Ganges. 2. பால்வீதி மண்டலம்; the milky way.

*[விண்டு + நதி]*

**Skt.** Nadi > த. நதி.

**விண்டுபதம்** *vinḍu-padam,* பெ.(n.) வானம்; sky. *"விண்டுபதத் தேறு மேனி" (குமர. பிர. முத்துக். 24).*

*[விண்டு + பதம்]*

**விண்டுபலி** *vinḍu-pali,* பெ.(n.) கருவுற்ற பெண்டிர்க்கு அக்கரு நிலைத்தற் பொருட்டுச் செய்யும் சடங்கு (திருவானைக். கோச்செங். 15); a religious ceremony, performed

when a woman is pregnant, with a view to sustaining the embryo in her womb.

*[விண்டு[1] + பலி[3]]*

**விண்டுபுரம்** *vinḍupuram,* பெ.(n.) காஞ்சிபுரத்தின் வேறு பெயர்; other name of *kāñjipuram.*

**விண்டுராதன்** *vinḍurādan,* பெ.(n.) அபிமன்னுவின் மகனான பரீட்சித்து (பாகவத. மாயவ. 41); king *parikšit,* son of Abhimanyu.

**விண்டேர்** *vinḍēr,* பெ.(n.) கானல்; mirage, as an air-chariot. *"விண்டேர் திரிந்து வெளிப்பட்டு" (திவ். இயற். பெரிய. ம. 48).*

*[விண்[1] + தேர்[3]]*

**விண்ணகர்[1]** *vinnagar,* பெ.(n.) திருமாலுலகு; vaikuntha, visnu's heaven. *"வேங்கடமும் விண்ணகரும் வெஃகாவும்" (திவ். இயற். 1, 77).*

*[விண்டு[1] + நகர்]*

**விண்ணகர்[2]** *vinnagar,* பெ.(n.) விண்ணகரம் **(S.I.I.i.87)** பார்க்க; see *vinnagaram.*

*[விண்டுநகர் → விண்ணகர்]*

**விண்ணகரம்** *vinnagaram,* பெ.(n.) 1. திருமால் கோயில்; temple of *visnu.* *'பரமேச்சுர விண்ணகரம்'.* 2. தஞ்சாவூர் மாவட்டத்தில் உப்பிலியப்பன் கோயில் என வழங்கும் திருமால் கோயில்; *uppili-y-appan* koil, a place sacred to *visnu*, in the Tanjore district.

*[விண் + நகரம்]*

ஒருகா. விண்டு + நகரம் → விண்ணகரம்.

**விண்ணதிர்ப்பு** *vin-n-adirppu,* பெ.(n.) இடி முழக்கம்; rumbling of the heavens, thunder. *"விண்ணதிர்ப்பும்... பார்ப்பா ரிலங்குநூ லோதாத நாள்" (ஆசாரக். 48).*

*[விண்[1] + அதிர்ப்பு]*

**விண்ணப்பக்கடுதாசி** *vinnappa-k-kaḍudāši,* பெ.(n.) எழுத்து மூல விண்ணப்பம் (புதுவை.); petition or written application.

*[விண்ணப்பம் + கடிதம் → கடுதாசி]*

**விண்ணப்பக்காரன்** *vinnappa-k-kāran,* பெ.(n.) 1. விண்ணப்பஞ்செய்வான் பார்க்க; see *vinnappañ-šeyvān.* 2. விண்ணப்பம் செய்வோர் (இக்.வ.); petitioner. 3. அரண்மனை முதலியவற்றில் காண வருபவர்களின் வரவைத் தெரிவிக்கும் வாயிலோன் (இ.வ.); Usher, as in a court, whose duty is to announce visitors.

*[விண்ணப்பம் + காரன்[1] (காரன் : வினை முதலில் வந்த ஆண்பாற் பெயரீறு)]*

**விண்ணப்பஞ்செய்வான்** *vinnappañ-šeyvān,* பெ.(n.) கடவுள் திருமுன்பு செய்யுள் முதலியன ஓது முரிமையுள்ளவன் (ஈடு. 6, 9, 3); person who has the right to sing sacred hymns in the presence of the deity.

*[விண்ணப்பம் + செய்வான்]*

**விண்ணப்பதார்** *vinnappa-dār,* பெ.(n.) விண்ணப்பம் செய்பவர்; petitioner.

*[விண்ணப்பம் + **Skt.** dhar > த. தார்]*

**விண்ணப்பப்பத்திரம்** *vinnappa-p-pattiram,* பெ.(n.) எழுத்து மூலமான வேண்டுகோள்; written application or petition.

*[விண்ணப்பம் + **Skt.** bhadrā > த. பத்திரம்]*

**விண்ணப்பம்** *viṇṇappam,* பெ.(n.) 1. பெரியோர்முன் பணிந்து கூறும் அறிவிப்பு; supplication, respectful, or humble representation. *"அடியேன் செய்யும் விண்ணப்பமே" (திவ். இயற். திருவிருத். 1.). "ஐமேலுந்து மன்றையில் விண்ணப்பமின்றே யடியிட்டேன்" (மதுரைப் பதிற்றுப்.).* 2. கடவுள் திருமுன்பு செய்யுள் முதலியன ஓதுகை; recitation of sacred hymns in the presence of the deity. *"திருப்பதியம் விண்ணப்பஞ் செய்யவும்" (S.I.I.ii.254, 4).* 3. மனு (இக்.வ.); petition.

**விண்ணப்பி-த்தல்** *viṇṇappi-,* 11 செ.கு.வி. (v.i.) 1. பெரியோர்முன் பணிந்தறிவித்தல்; to supplicate. *"என் பிழையன்றென..... நின்னடிக்கே விண்ணப்பித்திருந்தேன்" (அருட்பா. vi, பிள்ளைப்பெரு. 92).* 2. செய்புளைக் கடவுள் திருமுன்பு ஓதுதல்; to sing sacred hymns in the presence of deity, almighty 3. விண்ணப்பம் செய்தல்; to petition.

*[விண்ணப்பம் → விண்ணப்பி-.]*

**விண்ணபத்திரம்** *viṇṇa-pattiram,* பெ.(n.) விண்ணப்பப்பத்திரம் (யாழ்.அக.) பார்க்க; see *viṇṇappa-p-pattiram*

*[விண்ணப்பப்பத்திரம் → விண்ணபத்திரம்]*

**விண்ணமங்கலம்** *viṇṇamaṅgalam,* பெ.(n.) குலத்தினின்று விலக்கப்பட்ட பறையர் இறந்தபின் செல்வதாகக் கருதப்படும் இடம் (E.T vi,92), a region to which excommunicated paraiyas are said to go when they die.

**விண்ணல்** *viṇṇal,* பெ.(n.) காவட்டம்புல் (மலை.); citronella-grass.

மறுவ. சாமாட்சிப் புல்.

**விண்ணவன்** *viṇṇavaṉ,* பெ.(n.) 1. தேவன் (சிலப்.10, 189); celestial being. 2. அருகன் (சூடா.); arhat.

*[விண்[1] → விண்ணவன்]*

**விண்ணவிணை-த்தல்** *viṇṇaviṇai-,* 11 செ.கு.வி. (v.i.) மிக்க ஒளியால் கண் தெறித்தல் (தொல். எழுத்து. 482, உரை); to throb, as the eye, to be dazzled by the light.

*[விண்விணை → விண்ணவிணை]*

**விண்ணா** *viṇṇā,* பெ.(n.) கடுரோகிணி (மலை.); chiristmas rose.

மறுவ. கடுகுரோகிணி.

**விண்ணாங்கு** *viṇṇāṅgu,* பெ.(n.) மரவகை (யாழ்.அக.); a kind of tree.

**விண்ணாணம்** *viṇṇāṇam,* பெ.(n.) நாணம் (யாழ்.அக.); shame; bashfulness.

**விண்ணு** *viṇṇu,* பெ.(n.) திருமால்; *visṇu.* *"விரிந்தெங்குஞ் சென்றமையால் விண்ணுவுமாய்" (யாப். வி. 84).*

*[விண்டு → விண்ணு.]*

**விண்ணுகம்** *viṇṇugam,* பெ.(n.) முள்ளி (மலை.); Indian nightshade.

மறுவ. கறிமுள்ளி.

**விண்ணுலகம்** *viṇ-ṇ-ulagam,* பெ.(n.) 1. வானுலகு (பு.வெ.10. காஞ்சிப். 4, உரை); svarga. 2. மேலுலகம்; heaven. *"விண்ணுலகந் தருந்தேவனை" (திவ். திருவாய். 9, 3, 4.).*

*[விண்[1] + உலகம்]*

**விண்ணுலகு** *vinnulagu,* பெ.(n.) விண்ணுலகம் (பிங்.) பார்க்க; see *vin-n-ulagam.* *"விண்ணுலகே யொக்கும் விழைவிற்றால்" (நாலடி, 233).*

*[விண் + உலகு]*

**விண்ணெனல்** *vinnenal,* பெ.(n.) 1. ஓசைக்குறிப்பு; onom.expr.signifying tinkling, as of a bell. *"விண்ணெனத் தார்மணி யார்ப்ப" (திருவாலவா. 28, 29). "நரம்பு விண்ணென இசைத்தது" (நன். பொதுவிய. 9, உரை).* 2. வெளியாதற் குறிப்பு (இலக்.அக.); being made public. 3. கண் முதலியன தெறித்தற்குறிப்பு (தொல். எழுத்து. 482, உரை); throbbing, as the eye etc. 4. விரைவுக் குறிப்பு; great speed. 5. இறுகியிருத்தற் குறிப்பு; tightness.

*[விண் + எனல்]*

**விண்ணேறு** *vinnēru,* பெ.(n.) இடி (பிங்.); thunder. *'விண்ணேறு தப்பினாலும் கண்ணேறு தப்பாது' (பழ.).*

*[விண்[1] + ஏறு[3]]*

**விண்ணோர்** *vinnōr,* பெ.(n.) தேவர்; celestials. *"விண்ணோர் பாவை" (சிலப். 11, 214). "வெள்ளந்தாழ் விரிசடையாய் விடையாய் விண்ணோர் பெருமானே" (திருவாச. சதகம்).*

*[விண் → விண்ணோர்]*

**விண்பகல்** *vin-pagal,* பெ.(n.) விண்ணளவு வளர் மூங்கில் (மலை.); bamboo, as piercing the sky.

*[விண் + பகு → பகல்]*

**விண்பல்** *vin-pal,* பெ.(n.) விண்டல் (சங்.அக.) பார்க்க; see *vindal.*

**விண்மணி** *vin-mani,* பெ.(n.) ஞாயிறு (பிங்.); Sun, as the gem of the sky. *"விண்மணி பொய்ப்பினும் பொய்யாநின் வாய்மை" (வெங்கைக்கோ. 283).*

*[விண் + மணி]*

**விண்மருந்து** *vin-marundu,* பெ.(n.) இதளியம் (M.N.); mercury.

*[விண் + மருந்து]*

**விண்மீன்** *vin-min,* பெ.(n.) வான்வெள்ளி (சூடா.); star.

*[விண் + மீன்[1]]*

**விண்முழுதாளி** *vin-muludāli,* பெ.(n.) தேவர்களின் தலைவனான இந்திரன் (பிங்.); Indra, as ruling the entire svarga.

*[விண் + முழுது + ஆளி[2] (ஆளி = ஆள்வோன்)]*

**விண்மூத்திரம்** *vin-mūttiram,* பெ.(n.) நிரய வகை (சி.போ.2, 3, புதுப். பக். 204); a hell.

*[விண் + மூத்திரம்]*

**விண்விண்ணெனல்** *vin-vin-n-enal,* பெ.(n.) 1. யாழ் நரம்பு முதலியன இசைத்தற் குறிப்பு; onom. expr. signifying, the sound of thrumming, as of the strings of a lute. 2. புண் முதலியன தெறித்து நோவெடுத்தற் குறிப்பு; throbbing pain, as of a boil.

*[விள் → விண் + விண் + எனல்]*

**விண்விணை-த்தல்** *vin-vinai-,* 11 செ.கு.வி. (v.i) கண் முதலியன தெறித்தல் (தொல். எழுத்து. 482, உரை); to throb, as the eye.

*[விண்ணவிணை → விண்விணை-,]*

விண்வீழ்கொள்ளி *viṇ-vīḻ-koḷḷi,* பெ.(n.) விண்ணினின்று விழும் விண்மீன் போன்ற சுடர் (சூடா.); meteor, shooting star.

*[விண்[1] + வீழ் + கொள்ளி]*

வித்தகம்[1] *vittagam,* பெ.(n.) 1. அறிவு; knowledge, wisdom, intellect. 2. கல்வி (அரு.நி.); learning. 3. *வித்தம்[1], 3* (பிங்.) பார்க்க; see *vittam.* 4. அருண்மொழிக் கையடையாளம் (சின்முத்திரை); a hand-pose. *"வித்தகந் தரித்த செங்கை விமலையை" (கம்பரா. காப்பு.).*

வித்தகம்[2] *vittagam,* பெ.(n.) 1. திறமை; skill, ability, capability. *"வித்தகமும் விதிவசமும் வெவ்வேறே புறங்கிடப்ப" (கம்பரா. கார்முக. 19).* 2. திருத்தம்; accomplishment, perfection. *"வித்தகத் தும்பை விளைத்ததால்" (பரிபா. 9, 68).* 3. புதுமை (நாமதீப. 643); wonder, strangeness, unusuals 4. பெருமை (அரு.நி.); greatness. 5. நன்மை (யாழ்.அக.); goodness 6. வடிவின் செம்மை; regularity, as of form; symmetry. *"நூல் புடைத்தாற் போற்கிடந்த வித்தகஞ் சேர் வரிகள்" (சீவக. 1044).* 7. சிற்பம் முதலிய சிறந்த கைத்தொழில்; fine, artistic work; minute workmanship. *"குத்துமுளை செறித்த வித்தக விதானத்து" (பெருங். இலாவண. 5, 24).*

வித்தகன்[1] *vittagaṉ,* பெ.(n.) பேரறிவாளன்; wise and knowledgeable person; a great scholar.

*[வித்தகம் → வித்தகன்]*

வித்தகன்[2] *vittagaṉ,* பெ.(n.) 1. வல்லவன்; skilful, able person; adept *"வித்தகர் நேர்விட்ட கோழிப் புறங்கண்டும்" (பு.வெ.12, வென்றிப். 6).* 2. புதுமைத் தன்மை யுடையவன்; mysterious person. *"பத்துடையடியவர்க் கெளியவன் பிறர்களுக் கரிய வித்தகன்" (திவ். திருவாய். 1, 3, 1).* 3. வயிரவன் (சூடா.); bhairava. 4. கம்மாளன் (திவா.); artificer.

*[வித்தகம் → வித்தகன்]*

வித்தகன்[3] *vittagaṉ,* பெ.(n.) 1. தூதன் (சூடா.); messenger. 2. இடையன் (அக.நி.); shepherd.

வித்தம்[1] *vittam,* பெ.(n.) 1. அறிவு (சூடா.); wisdom, knowledge. *"வித்தமிலா நாயேற்கும்" (அருட்பா, i, சிவநேச. 64).* 2. பொருள் (சூடா.); wealth, money. 3. பொன் (திவா.); gold. 4. நல்வினை (யாழ்.அக.); good fortune.

*[வித்து → வித்தம்]*

வித்தம்[2] *vittam,* பெ.(n.) பழிப்பு (சூடா.); derision, mockery.

வித்தம்[3] *vittam,* பெ.(n.) கூட்டம் (உரி.நி.); company, crowd.

வித்தம்[4] *vittam,* பெ.(n.) சூதிற் சிறுதாயம்; a cast in dice play. *"வித்தத்தாற் றோற்றான் போல்" (கலித். 136, 8).*

வித்தரம் *vittaram,* பெ.(n.) 1. அகலம்; extension, expansion, enlargement, width. *"நீளம் வித்தரமொ டுயர்ச்சி" (பாரத. இராசசூ. 8).* 2. நிரயம் (சிவதரு. சுவர்க்க நரக. 121); a hell.

வித்தரி-த்தல் *vittari-,* 11 செ.குன்றாவி. (v.t.) 1. பெருக்குதல்; to expand, to enlarge. 2. விரித்துச் சொல்லுதல்; to expound, to narrate in greater detail.

**வித்தன்**[1] *vittaṉ,* பெ.(n.) 1. புலவன்; learned man, man of knowledge. 2. புரவலர்; benefactor.

*[வித்தகன் → வித்தன்]*

**வித்தன்**[2] *vittaṉ,* பெ.(n.) ஈடுபாடுடையன் (ஈடு.); one who is absorbingly interested or involved.

**வித்தன்**[3] *vittaṉ,* பெ.(n.) துறவி (யாழ்.அக.); ascetic, one who performs penance.

**வித்தாண்மை** *vittāṇmai,* பெ.(n.) புலமை (யாழ்.அக.); wisdom, scholarship.

*[வித்தகம் → வித்தம் + ஆண்மை]*

**வித்தாயம்** *vittāyam,* பெ.(n.) வித்தம்[4] பார்க்க; see *vittam.* *"வித்தாய மிடைத்தங்கக் கண்டவன்" (கலித். 136, 9).*

*[வித்தம்[4] + ஆயம்[3]]*

**வித்தி** *vitti,* பெ.(n.) 1. அறிவு; knowledge. 2. ஆராய்ச்சி; investigation, research. 3. வருவாய்; earning, acquisition, income.

**வித்திகம்** *vittigam,* பெ.(n.) இந்துப்பு (சங்.அக.); salt petre.

**வித்து**[1]**-தல்** *vittu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. விதைத்தல்; to sow. *"வித்திய வுழவர் நெல்லொடு பெயரும்" (ஐங்குறு. 3).* 2. பரப்புதல்; to spread, broadcast. *"அண்ண லிவனேல் விளியாக் குணத்துதி நாம் வித்தாவா றென்னே" (சீவக. 1611).* 3. பிறர் மனத்துப் பதியவைத்தல்; to impress or imprint on one's mind. *"செவிமுதல் வயங்குமொழி வித்தி" (புறநா. 206).*

**Ma.** vittu; **Ko.** vit,vity; **To.** pit; **Ka.** bittu, **Kod.** bitt; **Tu.** bittuni; **Te.** vittu, vittanama; **Kol.** vitanam; **Nk.** vit; **Pa.** vit; **Go.** *witānā,* *Konḍa.* vit; **Kuwi.** vicanga; **Malt.** bici.

**வித்து**[2] *vittu,* பெ.(n.) 1. விதை[1], 1 பார்க்க; see *vidai.* *"சுரைவித்துப் போலுந்தம் பல்" (நாலடி, 315).* 2. வித்தமிழ்து (நாமதீப. 601); semen, virile. 3. தலைமுறை(வின்.); race, lineage. 4. வழிவழி (இ.வ.); posterity. 5. கருவி; means, instrument. *"முத்திக்கு வித்து முதல்வன்றன் ஞானமே" (திருமந். 2506).* 6. காரணம்; cause, reason. *"நன்றிக்கு வித்தாகு நல்லொழுக்கம்" (குறள், 138).*

தெ., ம., து. வித்து; க. பித்து.

**Skt.** பீஜ.

மா.வி.அ.'of doubtful origin' என்று குறித்திருத்தல் காண்க. ஆங்கிலர் மதுரையை 'மெஜூரா' என ஒலித்தலையும் நோக்குக. (வ.மொ.வ.91).

**வித்துக்காளை** *vittu-k-kāḷai,* பெ.(n.) ஆனேறு (நாஞ். நா.); breeding bull.

மறுவ. பொலியெருது, பொலிகாளை.

*[வித்து + காளை]*

**வித்துசம்** *vittuśam,* பெ.(n.) கொடி வகை; hedge bind-weed.

**வித்துத்து** *vittuttu,* பெ.(n.) மின்னல் (சூடா.); lightning.

**வித்துத்தெளி-த்தல்** *vittu-t-teḷi-,* 4 செ.கு.வி. (v.i.) விதையைத் தூவுதல்; to scatter seeds, to sow.

மறுவ. விதைத்தல்.

*[வித்து + தெளி-த்தல்]*

வித்துப்பாடு *vittu-p-pāḍu,* பெ.(n.) விதைப்பிற்குரிய நிலம்; land seasoned for sowing standard area for a specified quantity of seed. *"பதினாழிக் காலால் எண்கல வித்துப்பாடும்" (T.A.S.i,7).*

*[வித்து + பாடு]*

வித்துரு[1] *vitturu,* பெ.(n.) வித்துருமம், 1 பார்க்க; see *vitturumam. "வித்துருவின் கொத்தொப்பானை" (தேவா. 682, 4).*

வித்துரு[2] *vitturu,* பெ.(n ) வித்துத்து (பிங்.) பார்க்க; see *vittuttu.*

வித்துருமம் *vitturumam,* பெ.(n.) 1. பவளம் (திவா.); coral. *"வாங்குகடல் வித்துரும மாலையொளி கால" (திருவிளை. தடாதகை. 17).* 2. இளந்தளிர் (யாழ்.அக.); sprout, tender shoot

*[வித்துரு → வித்துருமம்]*

வித்துவஞ்சம் *vittu-vañjam,* பெ.(n )
1. மதிப்புரவின்மை; insult, disrespect.
2. பகை; enmity, hostility, antagonism.
3. வெறுப்பு; dislike; undesirability.

*[வித்து + வஞ்சம்]*

வித்துவேடம் *vittu-vēḍam,* பெ.(n.) பகைமை (யாழ்.அக.); enmity, hostility, nivalry.

*[வித்து + வேடம்]*

வித்தூகம் *vittūgam,* பெ.(n.) சாதிலிங்கம் (அரு.அக.) பார்க்க; see *šādi-lingam.*

வித்தெறி-தல் *vitteri-,* 3 செ.கு.வி.(v.i.) விதை விதைத்தல் (வின்.); to sow seeds.

*[வித்து + எறி-.]*

வித[1]-த்தல் *viḍa-,* 3 செ.குன்றாவி. (v.t.) சிறப்பாகப் பிரித்து எடுத்துரைத்தல்; to make a specific mention of, to indicate specially. *"கசதப மிகும் விதவாதன மன்னே" (நன். 164).*

வித[2]-த்தல் *viḍa-,* 4 செ.கு.வி. (v.i.) மிகுதல் (சூடா.); to be excessive, abundant. *"விதந்து பாட்டயர்ந்து" (காசிக. திரிலோசன. சிறப். 19).*

*[மித → வித-,]*

விதண்டம் *vidaṇḍam,* பெ.(n.) விதண்டை பார்க்க; see *vidaṇḍai.*

விதண்டவாதி *vidaṇḍa-vādi,* பெ.(n.) விதண்டாவாதி பார்க்க; see *vidaṇḍā-vādi. "வேறு வேறாகக் கூறும் விதண்ட வாதிகளை யெல்லாம்......... ஈடுறுப் புரிவ னென்றான்" (பிரபோத. 26, 104.)*

விதண்டாவாதம் *vidaṇḍā-vādam,* பெ.(n.) விதண்டை பார்க்க; see *vidaṇḍai.*

விதண்டாவாதி *vidaṇḍā-vādi,* பெ.(n.) விதண்டை செய்பவன்; captious objector, caviller.

*[விதண்டை → விதண்டா + வாதி]*

விதண்டை *vidaṇḍai,* பெ.(n.) 1. பிறர் கூறுவதை மறுத்துத் தன் கொள்கையை நாட்டாது வீணே கூறும் வாதம்; cavil, captious objection, idle objections against another's statement without attempting to disprove them and establishing one's own position. *"பூதங்கள் பேய்க்கோலமாய் விதண்டை பேசுமோ" (தாயு. எங்குநிறை. 7).* 2. பகை (வின்.); hostility.

**விதந்தோது-தல்** *vidandōdu-,* 5 செ. குன்றாவி.(v.t.) சிறப்பாக எடுத்துச் சொல்லுதல் (நன். 108, உரை); to make a specific mention of.

*[விதந்து + ஓது-,]*

**விதப்பு**[1] *vidappu,* பெ.(n.) 1. சிறப்பித்து எடுத்துச் சொல்லுகை; specific or special mention. *"விதந்து கட்டிய வழக்கு" (திவா.).* 2. விதப்புவிதி *(நன்.165, சங்கர. நமச்.)* பார்க்க; see *vidappu-vidi.* 3. விளத்தம் (பிங்.); detail. 4. புதுமை (யாழ்.அக.); wonder. 5. மதிலுறுப்புளொன்று (பிங்.); a component part of a fortification.

ம. விதம்ப்புக; தெ. veda; க. Bede; **Kod.** bede.

*[வித[1] → விதப்பு]*

**விதப்பு**[2] *vidappu,* பெ.(n.) மிகுதி (திவா.); abundance, surplus.

*[வித[2] → விதப்பு]*

**விதப்பு**[3] *vidappu,* பெ.(n.) 1. விரைவு (நாமதீப. 562); haste. 2. நடுக்கம் (பிங்.); trembling, agitation. 3. ஆசை (அரு.நி.); desire.

**Ma.** vitukkuka; **Ka.** bidar; **Tu.** bedaru; **Kuwi.** *peḍrali* ; **Te.** bedaru.

*[விதுப்பு → விதப்பு]*

**விதப்புவிதி** *vidappu-vidi,* பெ.(n.) சிறப்பு விதி (நன். 165, சங்கரநமச்.); special rule (gram.).

*[விதப்பு[1] + **Skt.** vidhi > த. விதி]*

**விதம்பம்** *vidambam,* பெ.(n.) பிறவி நஞ்சு வகை (மூ.அ.) (யாழ்.அக.); a mineral poison.

**விதர்ப்பு** *vidarppu,* பெ.(n.) 1. அச்சம் (யாழ்.அக.); fear. 2. நெருக்கம் (யாழ்.அக.); closeness, intimacy. 3. மல்லாட்டம் (யாழ்.அக.); battle, fight. 4. வெற்றி (சது.); victory, success.

*[விதிர்ப்பு → விதர்ப்பு]*

**விதரம்** *vidaram,* பெ.(n.) பிளப்பு (சங்.அக.); cleavage.

*[விடர் → விடரம் → விதரம்]*

**விதலம்** *vidalam,* பெ.(n.) கீழேழுலகத் தொன்று (திவா.); a nether world, one of *kiḻ-ēḻ-ulagam,* q.v

**விதலை**[1] *vidalai,* பெ.(n ) நடுக்கம்; trembling, shivering. *"பனிப்படு பைதல் விதலைப் பருவத்து" (பரிபா. 11, 75).*

தெ. விதலு; க., து. பெடெ; ம. விதரு.

**விதலை**[2] *vidalai,* பெ.(n.) புவி; the earth. *"விதலையின் விழுந்த மேவலனை..... பிடித்து" (பாரத. இராசசூ. 26).*

**விதலையாப்பு** *vidalai-y-āppu,* பெ.(n.) செய்யுளின் முதலும் இடையும் கடையும் பொருள்கொள்ளு முறை (இறை. 56, உரை); a mode of construction in which the central idea is conveyed by the words at the beginning, middle and end of a stanza.

*[விதலை[1] + யாப்பு]*

**விதவிடு-தல்** *vida-viḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) சிறப்பித்துரைத்தல்; to extol. *"இளைஞர்கள் விதவிடு கயலாலும்" (திருப்பு. 694.)*

*[வித[1] + இடு – விதவிடு-,]*

விதவிதெனல் *vidavi-deṉal,* பெ.(n.) சிறுசுடுகைக் குறிப்பு (வின்.); onom. expr. of being luke warm.

மறுவ: வெதவெதவெனல்

விதறு[1]-தல் *vidaṟu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. நடுங்குதல்; to tremble, to be agitated, to be shaky. *"விதறாவகை யாம்பற்றி" (ஞானவா. மனத். 8.) (திருப்பு. 162).* 2. பதறுதல் (வின்.); to be over hasty.

தெ., க., து. பெடரு.

*[விதிர் → விதறு-,]*

விதறு[2] *vidaṟu,* பெ.(n.) நடுக்கம்; trembling, shaking, agitation. *"விதறு படாவண்ணம் வேறிருந் தாய்ந்து" (திருமந். 2948).*

க. பெதுறு.

விதா *vidā,* பெ.(n.) மரவகை (பதார்த்த. 212); battle of plassey tree.

மறுவ. புரசு.

விதி *vidi,* பெ.(n.) குதிரை முதலியவற்றி னுணவு; food of horses etc.

விதிப்பாள் *vidippāḷ,* பெ.(n.) மகள் (யாழ்.அக.); daughter.

விதிமாண்டுநெல் *vidimāṇḍu-nel,* பெ.(n.) நெல்வகை (A.); a kind of paddy

விதிர்[1]-தல் *vidir-,* 4 செ.கு.வி. (v.i.) நடுங்குதல்; to shake, shiver, remble. *"விதிர்ந்தன வமரர் கைகள்" (கம்பரா. நாகபாக. 93).*

க. பிதிர்.

*[விது → விதிர்-.]*

விதிர்[2]-த்தல் *vidir,* 11 செ.கு.வி. (v.i.) 1. நடுங்குதல்; to tremble, quiver. *"மைபுரை மடப்பிடி மடநல்லார் விதிர்ப்புற" (பரிபா. 10, 47).* 2. அஞ்சுதல் (வின்.); to be afraid, to fear.

*[விது → விதிர் → விதிர்-,]*

விதிர்[3]-த்தல் *vidir-,* 11 செ.குன்றாவி. (v.t.) 1. சிதறுதல்; to scatter, throw about. *"நெய்யுடை யடிசின் மெய்பெற விதிர்த்தும்" (புறநா. 188).* 2.தெறித்தல்; to sprinkle. *"விதிர்த்த புள்ளியன்" (சீவக. 2010.).* 3. அசைத்தல்; to shake, to brandish, as a sword. *"கையிற்றிருவாழியை விதிர்த்தான்" (ஈடு. 2, 4, 9.).* 4. உதறுதல்; to shake out, throw off. *"கலிமா..... எறிதுளி விதிர்ப்ப" (நெடுநல். 180).* 5. பலவாகப் போகடுதல்; to cut into pieces, to reduce to fragments. *"கொக்கி னறுவடி விதிர்த்த..... காடி" (பெரும்பாண். 309).* 6. சொரிதல்; to pour, as ghee in a sacrifice. *"நெய் விதிர்ப்ப நந்து நெருப்பழல்" (நான்மணி. 62).*

தெ., து. வெதரு, விதுரு; க. பிதிரு; ம. *vitaṟuku*; கொலா. vid, vidy; குர். *bidraānā*; குய். viti, **malt.** bidrare.

விதிர்க்குவிதிர்க்கெனல் *vidirkku-vidirk-eṉal,* பெ.(n.) படபடத்தற் குறிப்பு (யாழ்.அக.); expr.of trepidation.

*[விது → விதிர் → விதிர்க்குவிதிர்க்கு → விதிர்க்குவிதிர்க்கெனல்]*

விதிர்ப்பு[1] *vidirppu,* பெ.(n.) 1. நடுக்கம்; trembling, shivering, shaking from fear. *"அதிர்வும் விதிர்ப்பும் நடுக்கம் செய்யும்" (தொல். 799), "என்போற் பெருவிதிர்ப்புறுக" (புறநா. 255).* 2. அச்சம் (திவா.); tremor, fear.

தெ. விதுர்பு.

*[விது → விதிர் → விதிர்ப்பு. (மு.தா.67)]*

விதிர்ப்பு[2] *vidirppu,* பெ.(n.) மிகுதி (பிங்.); abundance.

*[விதப்பு → விதிர்ப்பு]*

விதிர்விதிர்–த்தல் *vidir-vidir-,* 11 செ.கு.வி. (v.i.) 1. நடுங்குதல்; to throb, flutter, quiver with intensity of feeling, to be tremulous. *"மெய்யெரி துயரின் மூழ்கி விதிர்விதிர்த்து (சீவக. 1540).* 2. ஆர்வங் கொள்ளுதல்; to be eager, to be agitated with to be ardour, anxiety. *"செங்கனகங்கண்டான் விதிர் விதிர்த்தான் சிவனடியார்க் கிடுவா னெண்ணி" (திருவாலவா. 39, 5).*

*[விதிர்ப்பு → விதிர்விதிர்ப்பு] (வ.மொ.வ.315)*

விதிர்விதிர்ப்பு *vidir-vidirppu,* பெ.(n.) நடுக்கம்; to throb.

*[விது → விதிர் → விதிர்விதிர் → விதிர்விதிர்ப்பு (மு.தா.67)]*

விதுக்குவிதுக்கெனல் *vidukku-vidu-k-kenal,* பெ.(n.) அச்சத்தால் நெஞ்சாங்குலை படபடவென்று அடித்தற் குறிப்பு; onom. expr. of palpitation of heart due to fear or shock.

*[விது → விதுக்கு → விதுக்குவிதுக்கு → விதுக்குவிதுக்கெனல்]*

உடலும் நெஞ்சாங்குலையும் விரைந்து அசைவது அச்சத்தைக் குறிக்குமாதலால், விரைவுக் கருத்தில் அச்சக் கருத்துப் பிறந்தது.

இங்ஙனம் அடித்துக் கொள்ளுதலை வெருக்கு வெருக்கென்றிருக்கின்றது என்பர்.

விதுப்பு *viduppu,* பெ.(n.) 1. நடுக்கம்; trembling, tremor. *"பிறைநுதல் பசப்பூரப் பெரு விதுப்புற்றாள்" (கலித். 99).* 2. விரைவு; haste. *"ஆன்றவர் விதிப்புறு விழுப்பொடு விருந்தெதிர் கொளற்கே" (புறநா. 213).* 3. பரபரப்பு; hurly-burly. *"விதிப்புறு நடுக்கமொடு விம்முவன ளாகி" (பெருங். உஞ்சைக். 36, 61).* 4. வேட்கை; desire, longing. *"மைந்தர் விதுப்புற நோக்கும்" (கம்பரா. நாட்டுப். 11).*

*[விது → விதும்பு → விதுப்பு (மு.தா.66)]*

விதும்பு[1]–தல் *vidumbu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. நடுங்குதல்; to tremble. *"மகளிர் வீழ்பூம் பொதும்பருள் விதும்பினாரே" (சீவக. 2718).* 2. விரைதல்; to hasten. *"அவர் வயின் விதும்பல்" (குறள். 127–ஆம் அதி.).* 3. ஆசைப் படுதல்; to desire, long for, hanker after. *"பேதையர் விதும்பி நின்றார்" (சீவக. 2530).*

*[விது → விதும்பு–,]*

*"அவர்வயின் விதும்புதல்"* என்னும் திருக்குறள் அதிகாரப் பெயரை நோக்குக.

விதும்பு[2] *vidumbu,* பெ.(n.) நடுக்கம்; trembling, tremor. *"எனை விதும்புற வதுக்கி" (தணிகைப்பு. நாரதனருள். 8).*

*[விது → விதும்பு]*

விதுவிது–த்தல் *vidu-vidu-,* 11 செ.கு.வி. (v.i.) மகிழ்ச்சியுறுதல்; to rejoice. *"திணியுலகம் விது விதுப்ப" (காஞ்சிப்பு. திருநகரே. 145).*

விதுவிதுப்பு *vidu-viduppu,* பெ.(n.) 1. விருப்பம்; longing, desire. 2. உடலின் குத்துநோவு; throbbing pain. *"விதுவிதுப் பாற்ற லுற்றான்" (கம்பரா. நாகபாச. 188).* 3. நடுக்கம் (இலக்.அக.); trembling.

*[(முது) → விது → விதுவிது → விதுவிதுப்பு. (மு.தா.66)]*

விதுளநீர் *vidu|a-nir,* பெ.(n.) வாயுவிளங்கம் (சங்.அக.); wind berry.

*[விதுள + நீர்]*

**விதை[1]–த்தல்** *vidai-,* 11 செ.குன்றாவி. (v.t.) 1. விதை தெளித்தல்; to sow seed. 2. பரப்புதல் (இ.வ.); to publish, make public, to spread abroad. 3. செலுத்துதல்; to deliver, throw, discharge. *"விதைக்கு மப்பகழிவிற் பொருநன்" (தக்கயாகப். 726).*

**விதை[2]** *vidai,* பெ.(n.) 1. மரஞ்செடி கொடிகளின் பழங்களிலுள்ளதாய் அம்மரஞ் செடி கொடிகள் முளைப்பதற்குக் காரணமா யிருக்கும் வித்து; seed. *"விதைத்த விதை" (மதுரைக். 11, உரை).* 2. முளை (நாமதீப. 579); testicle. 3. தன்மாத்திரை; the subtle, primary element (phil.). *"பரிசவிதை யிரதத்தி லெழுவதாங் காற்றசைவை" (ஞானவா. தாகு. 34).*

இந்த உலகத்தில் உள்ள உயிர்களெல்லாம் நம்மைச் சுற்றிலும் காணும் பச்சை நிலைத் திணைகளை (தாவரங்களை) தமக்கு பற்றுக் கோடாகக் கொண்டு வாழ்ந்து வருகின்றன. பச்சை நிலைத் திணை உயிரிகள் காற்று மண்டலத்திலுள்ள கரிவளியையும், மண்ணி லிருந்து எடுத்துக் கொண்ட நீரையும் கூட்டி, மாந்தன் உட்பட எல்லா விலங்குகளுக்கும் அடிப்படை உணவுப் பொருளான மாவுப்பொருளை விளைவு செய்கின்றன. இந்தப் பொருளியைபுக் கூட்டுச் செயலுக்கு வேண்டிய மிகவும் ஏராளமான ஆற்றலானது கதிரவனுடைய ஒளிக்கதிர் களினின்றும் பெறப்படுகின்றது. தன் உணவின் பொருட்டு, மாந்தன் நிலைத் திணைகளைப் பாதுகாத்து வளர்க்கத் தொடங்கிய கால முதல், மிகச் சிறியதும், பார்ப்பதற்கு உயிரில்லாதது போலக் காண்பதுமான விதையானது எவ்வாறு மண்ணினின்றும், கதிரொளியினின்றும் தனக்குப் பற்றுக் கோடாகிய உணவைப் பெறுகின்றது; எவ்வாறு தரமுள்ள நிலைத் திணை தழைத்து வளர்கின்றது; எவ்வாறு அது தன் இனத்தைப் பெருக்குவதற்கான எண்ணிறந்த விதைகளை உண்டாக்குகின்றது என்று வியப்படையலானான். தொடக்கக் காலங்களிலே, மாந்தன் விலங்குகளிலே 'உயிர்' என்னும் ஒரு கொள்கை இருப்பது போல, விதைகளிலும் அந்தக் கொள்கை இருக்கிறது என்று உணர்ந்திருந்தானோ என்பது தெளிவாவதில்லை. ஆயினும் மாந்தனுடைய வரலாற்றிலே, அவனுடைய வாழ்க்கையின் சின்னங்களும் சான்றுகளும் அகப்படும் தொன்மைக் காலந்தொட்டு, மாந்தன் நிலைத்திணைகளின் விதையைப் பாதுகாப்பது மிகவும் இன்றியமையாதது எனக் கருதி வந்தான் எனத் தெரிகின்றது. (கலைக்களஞ்சியம்)

தெ.வெத; க., து. பெதெ; ம. வித.

*[வித்து → விதை]*

**விதை[3]** *vidai,* பெ.(n.) பெருமை (சது.); largeness, greatness, nobility.

**விதைக்காய்ச்சல்** *vidai-k-kāyccal,* பெ.(n.) விதைப் பக்குவம் அடையும்படி தவசத்தை உலர்த்துகை; drying of seed-grain.

*[விதை[1] + காய் → காய்ச்சல். காய்ச்சல் = உலர்ச்சி.]*

**விதைக்கொட்டை** *vidai-k-koṭṭai,* பெ.(n.) விதை; testicle.

*[விதை + கொட்டை]*

**விதைக்கொடி** *vidai-k-koḍi,* பெ.(n.) விதைப்பையிலிருக்கும் நரம்பு வகை (M.L.); spermatic cord.

*[விதை + கொடி]*

**விதைக்கோட்டை** *vidai-k-kōṭṭai,* பெ.(n.) 1. ஒரு கோட்டை விதைப்பாடுள்ள நிலவளவு (M.M.968); superficial measure = 1.62 acres, as requiring a *kōṭṭai* of seeds. 2. கைக்கோற் புரியிற் கட்டிய விதைநெல்; seed-grain of paddy bundled in straw.

*[விதை + கோட்டை]*



**விதைகட்டு-தல்** *vidai-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) விதைக்கென்று தவசம் தனியே கட்டி வைத்தல்; to store seed-grain by bundling it up in straw.

*[விதை + கட்டு-,]*

**விதைத்துப்பாழ்** *vidaittu-p-pāḻ,* பெ.(n.) தண்ணீர்த்தட்டால் விதை செவ்வனே முளைக்காமலேனும் கதிர் பிடிக்காமலேனும் கெட்டுப் பயிரின்றிப் போகை (S.I.I.vii.279); total failure of crop due either to the seeds not sprouting properly or the seedlings not maturing on account of scanty supply of water.

*[விதை → விரைத்து + + பாழ்]*

**விதைநெல்** *vidai-nel,* பெ.(n.) விதைப் பதற்காக வைக்கப்பட்ட நென்மணி; seed-grain of paddy.

மறுவ. விதைமுதல்.

*[விதை' + நெல்]*

**விதைநெல்லெறி-தல்** *vidainel-l-eṟi-,* 3 செ.கு.வி. (v.i.) வித்திடுதற்கான நென் மணிகளை கழனியிற் தூவுதல் (வின்.); to sow seeds of paddy.

*[விதைநெல் + எறி-,]*

**விதைப்பாடு** *vidai-p-pāḍu,* பெ.(n.) 1. குறிப்பிட்ட அளவுள்ள நிலத்தில் விதைத்தற்கு வேண்டிய நென்மணியளவு (M.M); quantity of seed required to sow in a specified extent of land. 2. கலம், கோட்டை முதலிய அளவு கொண்ட விதைகளை விதைத்தற்குரிய நிலம்; standard area for sowing a specified quantity of seed, as kalam etc. 3. விதை நெல்லிலுண்டாகும் குறைவு (இ.வ.); shortage allowed for, in paddy seeds.

*[விதை' + பாடு]*

**விதைப்பு** *vidaippu,* பெ.(n.) வித்திடுகை; sowing. *'விதைப்புக் காலம்'.*

*[விதை → விதைப்பு]*

**விதைப்புக்காலம்** *vidaippu-k-kālam,* பெ.(n.) வித்திடும் பருவம்; sowing season, seed-time

*[விதைப்பு + காலம்]*

ஒருகா. ஆடிப்பட்டம்.

**விதைப்புனம்** *vidai-p-puṉam,* பெ.(n.) இதைப்புனம் (யாழ்.அக.); plot of land newly cultivated.

*[இதைப்புனம் → விதைப்புனம்]*

**விதைப்பை** *vidai-p-pai,* பெ.(n ) உயிரின மூலப்பை (இ.வ.); scrotum.

*[விதை' + பை']*

**விதைமணி** *vidai-maṇi,* பெ.(n ) விதைப்பதற்குரிய தவசம்; seed-grain.

*[விதை + மணி]*

விதைமுளை-த்தல் *vidai-mulai-,* 4 செ.கு.வி. (v.i.) முதிர்ந்த விதை அதற்குத் தகவான சூழ்நிலையில் முளைத்தல்; sprouting.

விதை முதிரும்போது ஒருவித உறக்க நிலையை அடைகின்றது. விதையானது புதிய உயிர் பரவு வதற்கு அமைந்துள்ள உறுப்பு. ஆதலால் கருவின் உயிர்ச் செயல்கள் சில காலத்திற்கு நடைபெறாமல் தடைபட்டிருப்பது தேவையாகயிருக்கின்றது.

முளைத்தலுக்கு வேண்டிய நிலைமைகள் சிறிது காலமோ நெடுங்காலமோ இவ்வித உறக்க நிலையிலிருந்த விதைக்குத் தக்க நிலைகள் வந்து உதவும்போது, அவ்விதை முளைக்கத் தொடங்கும். உடற் செயல்கள் அடங்கிக் கிடந்த கருவிலே அச்செயல்கள் நடக்கத் தொடங்கிக் கருவின் வளர்ச்சி முன்னுக்குச் செல்லும். இந்த வளர்ச்சி நடத்தற்கு மூன்று ஆதாரங்கள் தேவை. 1. வெப்பநிலை ஏற்றதாக இருக்கவேண்டும், 2. போதுமான நீர் கிடைக்க வேண்டும், 3. உயிர்வளி தக்க அளவிற்குக் கிடைக்க வேண்டும். இம்மூன்று நிலைமைகளில் ஏதேனும் ஒன்று சரிவரக் கிடையாவிடின் கருவின் வளர்ச்சி தொடர்ந்து நடக்க முடியாது.

*[விதை + முளை-,]*

விதையடி-த்தல் *vidai-y-adi-,* 4 செ. குன்றாவி.(v.t ) ஆடு மாடு முதலான கால்நடைகளின் மூலப்பையிலுள்ள விதையை நசுக்கி இல்லாமற் செய்தல்; to castrate; to emasculate

*[விதை + அடி -,]*

விதையெடு-த்தல் *vidai-y-edu-,* 18 செ. குன்றாவி.(v.t.) விதையடி-, பார்க்க; see *vidai-y-adi-.*

*[விதை' + எடு-,]*

விதைவீக்கம் *vidai-vikkam,* பெ.(n.) விதை வீங்குகை (M L ), swelling of the testicle, orchitis

*[விதை + வீக்கம்]*

விந்தம்[1] *vindam,* பெ.(n.) 1. அறுபத்து நான்கு கோடி கொண்ட ஒரு பேரெண் (பிங்.); the number 64,00,00,000. 2. காடு (பிங்.); jungle, forest.

விந்தம்[2] *vindam,* பெ.(n.) 1. குதிரைப்பற் செய்ந்நஞ்சு (யாழ்.அக.); a mineral poison. 2. பச்சைக்கருப்பூரம் (அரு.அக.); purified camphor.

விந்தம்[3] *vindam,* பெ.(n.) தரக்குறைவான மாணிக்க வகை (சிலப். 14, 186, உரை); infarior kind of ruby. *"புதுமமு நீலமும் விந்தமும் படிதமும்" (சிலப். 14, 186).*

விந்தம்[4] *vindam,* பெ.(n.) தாமரை; lotus. *"விந்தமாப் பிண்டி முல்லை ........ நீலங்கோலலற்கு" (நாமதீப. 59).*

விந்தாக்கினி *vindā-k-kiṇi,* பெ.(n.) விந்துத்தீ (யாழ்.அக.) பார்க்க; see *vindu-t-ti.*

*[விந்து + அக்கினி. **Skt.** அக்னி.]*

விந்து *vindu,* பெ.(n.) 1. புள்ளி (உரி.நி.); dot, point. 2. துளி; drop, globule. 3. நீர்த் துளியளவு (இலக்.அக.); drop of water, as a liquid measure. 4. விழியம் (நாமதீப. 601); semen, sperm. 5. இதளியம் (நாமதீப. 395); mercury. 6. வயிரக் குற்றங்களுள் ஒன்று (சிலப். 14, 180, உரை); a flaw in diamond. 7. குறி (யாழ்.அக.); mark. 8. நெற்றிப் பொட்டு (யாழ்.அக.); tilaka. 9. நென்மூக்கு; sharp edge of grains of paddy. *"பலரதன் வாலிய விந்துவு மருவாதோரே" (ஞானா. 1, 3).* 10. புருவ நடு (யாழ்.அக.); the middle portion of the forehead between the eye-brows. 11. வட்டம் (நாமதீப. 766); circle. 12. சிவதத்துவம் பார்க்க; see *śiva-*

*tattuvam.* "*அலரைம்பூத மூர்தர விந்துவி னேர்தர வியைந்த*" (*ஞானா. 56, 19*). 13. தூயமாயை; (Saiva) pure maya. "*விந்துவின் மாயையாகி*" (*சி.சி. 1, 19*). 14. பதினாறு வகை ஓகக் கலையுள் ஒன்று; (Saiva) a mystic centre in the body, one of *cōṭaca-k-kalai.* "*விடகலைமேல் விந்து*" (*பிரசாதமாலை, 1*).

*[வித்து → விந்து (வ.மொ.வ.91).]*

விந்துசம் *vinduśam,* பெ.(n.) தாளி[3], 3 (சங்.அக.) பார்க்க; see *tāḷi* ; a medicinal plant.

விந்துடைவு *vinduḍaivu,* பெ.(n.) விரை விழிய வொழுக்கு; quick flow of semen.

*[விந்து + உடை → உடைவு]*

விந்துத்தீ *vindu-t-tī,* பெ.(n.) காமத்தீ (சூடா.); sexual heat.

*[விந்து + தீ]*

விந்துதத்துவம் *vindu-tattuvam,* பெ.(n.) சத்துதத்துவம் (சி.போ.பா. 2, 2, பக். 139. புதுப்.); a category.

*[விந்து +* **Skt.** *tattuva > த. தத்துவம்]*

விந்துநட்டம் *vindu-naṭṭam,* பெ.(n.) வித்தமிழ்தின் விரைவொழுக்கு; quick flow of semen. '*விந்து விட்டவன் நொந்து கெட்டான்*' (*பழ.*).

*[விந்து + நட்டம்]*

**Skt.** நஷ்டம்.

விந்தையம் *vindaiyam,* பெ.(n.) மயிலடிக்குருந்து என்னும் மரம் (மலை.); false peacock's foot tree.

விநாடி *vināḍi,* பெ.(n.) விநாடிகை பார்க்க; see *vināḍigai.*

விநாடிகை *vināḍigai,* பெ.(n.) ஒரு காலநுட்பம் (யாழ்.அக.); minute portion of time = 1/60th *nāḍi*=24 seconds.

விம்பி-த்தல் *vimbi-,* 11 செ.கு.வி. (v.i.) எதிர்தோன்றல் (வின்.); to be reflected, as an image.

விம்பிகை *vimbigai,* பெ.(n.) கொவ்வை (மலை.); a common creeper of the hedges.

விம்மம் *vimmam,* பெ.(n.) 1. விம்மல், 1 பார்க்க; see *vimmal.* "*விம்ம முறுதல் வீனாவது முடைத்தோ*" (*பெருங். வத்தவ. 6, 37*). 2. விம்மல், 2 பார்க்க; see *vimmal.* "*விம்ம முறுமவள்*" (*பெருங். இலாவாண. 16, 99*).

*[விம்மு → விம்மம்]*

விம்மல் *vimmal,* பெ.(n.) 1. தேம்பியழுகை (பிங்.); sobbing. 2. துன்பம்; distress. "*இன்னதோர் விம்மனோவ*" (*கம்பரா. உருக் காட்டுப். 88*). 3. ஏக்கம்; despondency. "*நெஞ்சிற் சிறியதோர் விம்மல் கொண்டான்*" (*கம்பரா. பாசப். 17*). 4. வீங்குகை; being puffed up or swollen. "*உவகை பொங்க விம்ம லானிமிர்ந்த நெஞ்சர்*" (*கம்பரா. திருவடிதொ. 8*). 5. உள்ளப் பூரிப்பு; elation of spirits. "*வீடின ரரக்க ரென்றுவக்கும் விம்மலால்*" (*கம்பரா. திருவவ. 15*). 6. ஒலிக்கை (பிங்.); sounding. 7. யாழ்நரம் போசை (பிங்.); sound of lute strings.

*[விம்மு → விம்மல்]*

விம்மல்பொருமல் *vimmal-porumal,* பெ.(n.) 1. இன்பதுன்ப மேலீட்டால் உண்டாம் உடல் வேறுபாடு; change in the body due

to great joy or sorrow. 2. வருத்த மிகுதி; in expressible grief. *"விம்மல் பொருமலாய்ப் படுகிறாயாகாதே" (ஈடு. 2, 1, 3).*

*[விம்மல் + பொருமல்]*

**விம்மா-த்தல்** *vimmā-,* 12 செ.கு.வி. (v.i.) விம்மு 1, 2, 3 பார்க்க; see *vimmu-.* *"விம்மாந்தி யான்வீழ" (சீவக. 1801).*

*[விம்மு → விம்மா-,]*

**விம்மிட்டம்** *vimmiṭṭam,* பெ.(n.) புழுக்கம்; feeling of suffocation, feeling close and sultry. *"இரவு முழுவதும் இச்சிறு அறையுட் கிடந்து விம்மிட்டப் பட்டேன்" (நாஞ்.).*

*[விம்மு → விம்மிட்டம்]*

**விம்மிதம்**[1] *vimmidam,* பெ.(n ) உடல் (பிங்.); body.

**விம்மிதம்**[2] *vimmidam,* பெ.(n.) 1. வியப்பு (திவா.); admiration. *"விம்மித மென்னென் றிசைக்குவ மற்றோ" (ஞானா. 49, 9).* 2. உவகை; delight *"ஐயையுந் தவ்வையும் விம்மித மெய்தி" (சிலப். 16, 52).* 3. அச்சம் (வின்.); fear.

**விம்மீன்** *vimmīṉ,* பெ.(n.) விண்மீன் (இ.வ); star.

*[விண்மீன் → விம்மீன்]*

**விம்மு**[1]**-தல்** *vimmu,* 5 செ.கு.வி. (v.i ) 1. தேம்பியழுதல் (பிங்.); to heave a sob, as a child. *"சிதரரிக்கண் கொண்டநீர் மெல்விரலூழ் தெறியா விம்மி" (நாலடி. 394).* 2. வருந்துதல்; to be in distress, agony *"கொடியாள் விளைவித்த வினைக்கு விம்மி" (கம்பரா. நகர்நீங்கு. 124).* 3. மகிழ்வுறுதல் (வின்.); to rejoice. 4. பருத்தல்; to swell, to become enlarged *"வார்செலச் செல்ல விம்மும் வனமுலை" (சீவக. 469).* 5. மிகுதல்; to extend, expand, to increase. *"விம்மகிற் புகையின் மேவி" (சீவக. 2667).* 6. நிறைதல்; to be full. *"விம்ம வங்கமரார்க் கமுதளித்த வமரர் கோவே" (திவ். பெரியாழ். 2, 2, 9).* 7. மலர்தல்; to open, as a flower. *"விம்மிய பெருமலர்" (கல்லா. 22, 48).* 8. ஒலித்தல்; to sound. *"கண்மகிழ்ந்து துடிவிம்ம" (பு.வெ. 2, 8, கொளு).*

க. பிம்மு; ம. விம்முக; து. பிம்மகெ.

**விம்மு**[2]**-தல்** *vimmu-,* 5 செ.குன்றாவி. (v.t.) ஈனுதல்; to bring forth. *"சங்குவிம்மு நித்திலம்" (சீவக. 145).*

**விம்மு**[2] *vimmu,* பெ.(n.) எடை (நாமதீப. 794); weight, burden.

**விம்முட்டம்** *vimmuṭṭam,* பெ.(n.) விம்மிட்டம் (நாஞ்.) பார்க்க; see *vimmiṭṭam.*

*[விம்மிட்டம் → விம்முட்டம்]*

**விம்முயிர்-த்தல்** *vimmuyir-,* 11 செ.கு.வி. (v.i.) பெருமூச்சு விடுதல்; to heave a sigh, as from grief *"விம்முயிர்த் தினையை யாத லொண்டொடி தகுவ தன்றால்" (சீவக. 271).*

*[விம்மு + உயிர்-,]*

**விம்முறவு** *vimmuṟavu,* பெ.(n.) துன்பம்; trouble, grief, suffering, distress. *"வேட்கையூர்தர விம்முற வெய்திய மாட்சி யுள்ளத்தை மாற்றி" (சீவக. 1634).*

*[விம்மு → விம்முறு → விம்முறவு]*

**விம்முறு-தல்** *vimmuṟu-,* 1 செ.கு.வி. (v.i.) வருந்துதல்; to be in distress. *"விம்முறு நுசுப்பு நைய" (சீவக. 606).*

*[விம்மு + உறு-,]*

**விம்மெனல்** *vim-m-enal,* பெ.(n.) இறுகிய தாதற் குறிப்பு; onom. expr. of becoming tight. *"கட்டு விம்மென்றிருந்தது".*

*[விம்மு → விம்மெனல்]*

**விய[1]-த்தல்** *viya-,* 12 செ.கு.வி. (v.i.) 1. வியப்படைதல்; to wonder. *"கேட்டவர் வியப்பவும்" (திருவாச. 3, 154).* 2. செருக்குறுதல்; to be proud. *"செல்வமெய்தி வியந்தனை யுதவி கொன்றாய" (கம்பரா. கிட்கிந். 81).*

து. bediyuni.

**விய[2]-த்தல்** *viya-,* 3 செ.குன்றாவி. (v.t.) 1. வியத்தல்; to wonder at. 2. நன்கு மதித்தல்; to esteem, admire, honour. *"வம்பமள்ளரை வியந்தன்று மிழிந்தன்று மிலனே" (புறநா. 77).* 3. பாராட்டுதல்; to praise, extol, compliment, felicitate. *"விழைந்தொருவர் தம்மை வியப்ப" (நாலடி,339).*

**விய[3]-த்தல்** *viya-,* 2 செ.கு.வி. (v.i.) 1. கொடுத்தல் (ஈடு. 1, 1, 8, பக். 57); to give. 2. கடத்தல் (ஈடு. 1, 1, 8, பக். 57); to transcend.

**வியக்கம்** *viyakkam,* பெ.(n.) பெருமை (வின்.); greatness, pride, highness, nobility.

**வியக்களை** *viyakkaḷai,* பெ.(n.) குடிக்கூலி (யாழ்.அக.); house rent.

*[வாழுகை → வியக்களை]*

**வியங்கொள்[1](ளு)-தல்** *viyaṅ-koḷ-,* 12 செ.கு.வி. (v.i.) ஏவலைக்கொள்ளுதல்; to obey orders or command; to submit. *"வினைகடைக் கூட்ட வியங்கொண்டான்" (சிலப். 9, 78).*

*[வியம் + கொள்-,]*

**வியங்கொள்[2](ளு)-தல்** *viyaṅ-koḷ-,* 12 செ. குன்றாவி.(v.t.) செலுத்துதல்; to drive, as a chariot. *"தேர்வியங் கொண்ட பத்து" (ஐங்குறு. பக். 139).*

*[ஒய் → உய் → உயம் → வியம் + கொள்-, (ஒய் = செலுத்து), (உய் = செலுத்து) வியம் = ஏவல்.]*

ஒ.நோ: ஏ-ஏவு = ஏகு.

'ஏவு' பிறவினைப் பொருளிலும் 'ஏகு' தன்வினைப் பொருளிலும் வழங்குகின்றன. ஆனால், இவற்றுள் ஒவ்வொன்றுக்கும் அவ் இருபொருளும் உள. உயம் → வியம். ஏவல் குறித்த 'வியம்' என்னும் சொல் மதிப்பான ஏவலுக்குப் பெயராயிற்று. "தேர்வியங்கொண்ட பத்து" என்னும் சொற்றொடரில் 'வியங்கொள்' என்னுஞ் சொல் செலுத்தற் பொருளில் வந்திருத்தல் காண்க. (ஒ.மொ.2,பக்.142)

**வியங்கோள்** *viyaṅ-kōḷ,* பெ.(n.) 1. ஏவல் (சூடா.); command. 2. வினைமுற்று வகை; optative mood of verbs (Gram.). *"முன்னிலை வியங்கோள் வினையெஞ்சு கிளவி" (தொல். சொல். 224).*

மறுவ. வியங்கோள் கிளவி.

*[வியங்கொள் → வியங்கோள்]*

தன்மை, முன்னிலை, படர்க்கை ஆகிய மூன்றிடத்தும் உரைப்போனின் விருப்பத்தை வெளிப் படுத்தி ஏவல் போல வரும் கிளவிகளை வியங்கோட் கிளவி என்பர் (வியங்கோள் எனினும் ஒக்கும்)

எ-டு. நான் வாழ்க!
நீ வாழ்க!
அவன் வாழ்க! (இலக்.கலைக்.பக்.109).

**வியங்கோளசை** *viyaṅ-kōḷaśai,* பெ.(n.) வியங்கோள் பொருளில் வரும் அசைச் சொற்கள்; expletive words with the meanings of command. *"மாவென் கிளவி வியங்கோள் அசைச்சொல்" (தொல் காப்பியம்) (இலக். கலைக். பக். 109).*

வியநெறி *viya-neṟi,* பெ.(n.) பெரும்பாதை (வின்.); highway, main street, avenue, broad road.

*[வியம்¹ + நெறி]*

வியஞ்சனம் *viyañjaṉam,* பெ.(n.) 1. உணவுக்குப் பக்கத்துணையாம் கறி முதலியன (கொ.வ.); curry, as a relish for rice, sidedish. 2. கறிக்குதவும் பொருள்கள்; condiments

*[வெந்த + ஆனம் = வெந்தானம் → வெஞ்சனம் → வியஞ்சனம்]*

வியப்ப *viyappa,* பெ.(n.) ஓர் உவம வாய்பாடு; a particle of comparison. *"நேர வியப்ப" (தொல். பொ. 291).*

வியப்பணி *viya-p-paṇi,* பெ.(n.) வியப்பு¹, 2 (அணியி. 40) பார்க்க; see *viyappu*

*[வியப்பு + அணி]*

வியப்பம் *viyappam,* பெ.(n.) வியப்பு¹,1 பார்க்க; see *viyappu.* *"வேம்பணி தோளினான் வியப்ப மெய்தியே" (திருவிளை. நரிபரி. 97).*

*[வியப்பு → வியப்பம்]*

வியப்பு¹ *viyappu,* பெ.(n.) 1. புதுமை; amazement, surprise. *"வியப்புஞ் சால்புஞ் செம்மை சான்றோர்" (மதுரைக். 764).* 2. ஒரு பயனைக் கருதி அதற்கு மாறாகிய முயற்சி செய்வதாகக் கூறும் அணி (அணியி. 40); a figure of speech which describes the efforts taken for the achievement of an object other than the one intended. 3. பாராட்டு (யாழ்.அக.); admiration. 4. மேம்பாடு; greatness, excellance. *"சால்பும் வியப்பு மியல்புங் குன்றின்" (குறிஞ்சிப். 15).* 5. அளவு; measurement. *"இசைத்த மூன்றின் வியப்பற விறந்த" (ஞானா. 18).*

**Tu.** *beḍiyuni.*

*[விய → வியப்பு]*

வியப்பு² *viyappu,* பெ.(n.) வியர்ப்பு 2, 3 (பிங்.) பார்க்க; see *viyappu.*

வியம்¹ *viyam,* பெ.(n.) 1. ஏவல்; command, order. *"வியங்கொள்வருதல்" (தொல். சொல். 67).* 2. உடல் (பிங்.); body. 3. போக்கு (சீவக. 1886, உரை); sending a person on his way. 4. வழி; way. *"ஆங்குவியங் கொண்மின்" (மலைபடு. 427).*

**Ka.** besa, besasu, besana.

வியம்² *viyam,* பெ.(n.) 1. விரிவு; extensiveness. *"வியம்பெறு தோற்றமும்" (திருக்காளத். பு. ஞானோப. 62).* 2. உயரம் (திவ். பெரியதி. 8, 7, 1, வ்யா.); height.

**Ma.** viyam.

வியமம் *viyamam,* பெ.(n.) பாராட்டத் தக்கது; that which is worthy of admiration. *"வியமே வாழிகுதிரை" (கலித். 96).*

*[விய → வியமம்]*

வியர்¹-த்தல் *viyar-,* 11 செ.கு.வி. (v.i.) 1. உடலின் மேற்புறத்து நீர்த்துளி தோன்றுதல்; to sweat, perspire. *"முயங்க யான் வியர்த்தன னென்றனள்" (குறுந். 84).* 2. பொறாமை முதலியவற்றால் மனம் புழுங்குதல்; to feel irritated, as from envy. *"வியர்த்த லைய மிகை நடுக் கெனாஅ" (தொல். பொ. 260).* 3. சினங் கொள்ளுதல் (பிங்.); to be angry.

க. பெமர்.

*[விள் → விளர் → வியர்-,] (வெம்மைக் கருத்து, வே.க. 129)*

வியர்² *viyar,* பெ.(n.) 1. உடலின் மேற்புறத்துத் தோன்றும் நீர்த்துளி; perspiration. *"குறுவியர் பொடித்த கோலவாண் முகத்தள்" (மணிமே. 18, 40).* 2. இளைப்பு; weariness, exhaustion. *"பந்தெறிந்த வியர்விட..... ஆடுபவே" (கலித். 40).*

*[விள் → விளர் → வியர்]*

வியர்ப்பு *viyarppu,* பெ.(n.) 1. வியர்வை பார்க்க; see *viyarvai.* *"வெய்துண்ட வியர்ப்பல்லது" (புறநா. 387).* 2. சினம் (திவா.); anger. 3. சினக்குறிப்பு (திவா.); mark of anger.

*[வியர் → வியர்ப்பு]*

வியர்வு *viyarvu,* பெ.(n.) வியர்வை பார்க்க; see *viyarvai.*

*[வியர் → வியர்வு]*

வியர்வை *viyarvai,* பெ.(n.) 1. வியர், 1, 2 பார்க்க; see *viyar.* 2. சினக்குறிப்பு (பிங்.); mark or indication of wrath.

*[வியர் → வியர்வு → வியர்வை]*

வியர்வைக்கட்டி *viyarvai-k-kaṭṭi,* பெ.(n.) கோடையில் வேர்வையால் உண்டாம் புண்கட்டி (M.L.); summer boil.

*[வியர்வை + கட்டி]*

வியல்¹ *viyal,* கு.பெ.எ.(adv.) அகன்ற, பரந்த; extansiveness. *"விழவு வீற்றிருந்த வியலுளாங்கண்" (பதிற். 53:1), "இருநீர் வியனுலகம் வன்சொலா லென்றும் மகிழாதே" (நன்னெறி. 18) வே.க.146.*

வியல்² *viyal,* பெ.(n.) 1. பெருமை; greatness. *"மூழ்த்திறுத்த வியன்றானை" (பதிற்றுப். 33, 5).* 2. அகலம்; width, expansion, extension, vastness. *"வியலென் கிளவி யகலப் பொருட்டே" (தொல். சொல். 364).* 3. மிகுதி (சிலப். 5, 7, உரை); abundance. 4. பொன் (சங்.அக.); gold. 5. காடு (பிங்.); forest, jungle. 6. மரத்தட்டு (அக.நி.); wooden tray.

*[விள் → (விய்) → வியம் → வியன் → வியல்] (மு.தா.100)*

வியல்² *viyal,* பெ.(n.) பலதிறப்படுகை; diversity. *"வியன்கல விருக்கையும்" (சிலப். 5, 7).*

*[வியம் → வியல்]*

வியல்கனா *viyal-kaṉā,* பெ.(n.) திப்பிலி (மலை.) பார்க்க; see *tippili,* long pepper.

*[வியல்' + கனா]*

வியல்பூதி *viyal-pūdi.* பெ.(n.) வில்வம் (மலை.); beal.

வியலகம் *viyal-agam,* பெ.(n.) வியலிடம், 1 பார்க்க; see *viyal-iḍam.* *"விரிகடல் வேலி வியலகம் விளங்க" (சிறுபாண். 114).*

*[வியல் + அகம்]*

வியலிகை *viyaligai,* பெ.(n.) பெருமை (யாழ்.அக.); greatness.

*[வியல் → வியலிகை] (வே.க.146)*

வியலிடம் *viyaliḍam,* பெ.(n.) 1. உலகம்; the wide world. *"இவ்வியலிடத்தே" (திருக்கோ. 277).* 2. அகலம் (சூடா.); breadth.

*[வியல் + இடம்]*

வியலுள் *viyaluḷ,* பெ.(n.) அகன்ற இடம்; wide, open space. *"விழவுவீற் றிருந்த வியலு ளாங்கண்" (பதிற்றுப். 56, 1).*

*[வியல் + உள்]*

வியவன் *viyavaṉ,* பெ.(n.) 1. ஏவல் செய்வோன்; servant. *"இளையரை வியவரின் விடவே" (சீவக. 601).* 2. ஏவுவான் (பிங்.); commander, person in authority. 3. தலைவன்; headman, leader. *"நாட்டுவியவன் சொல்லிய எல்லை போய்" (S.I.I.ii, 352).* 4. திண்ணியன் (பிங்.); strong, bold man. 5. வழிச்செல்வோன் (பிங்.); traveller, wayfare.

க. பெசதவன

*[வியம் → வியவன்]*

வியவு *viyavu,* பெ.(n.) வேறுபாடு; diversity, variation. *"ஒண்பொருள்க ளுலப்பில்லனவாய் வியவாய்" (திவ். திருவாய். 7, 8, 3).*

*[வியம் → வியவு]*

வியன்[1] *viyaṉ,* பெ.(n.) 1. வானம்; sky. *"வியனிடை முழுவதுகெட" (தேவா. 833, 7).* 2. பெருமை (திவா.); greatness. 3. சிறப்பு (ஈடு, 8, 10, 1); excellence, speciality. 4. வியப்பு (ஈடு, 8, 10); wonderfulness. 5. அகலம் (வின்.); vastness.

*[வியம் → வியன்]*

வியன்[2] *viyaṉ,* பெ.(n.) எண்ணின் ஒற்றை (சினேந். 178); oddness of numbers

வியனிடை *viyaṉiḍai,* பெ.(n.) பரந்த வெளி, விசும்பு, வானம்; sky. *"வியனிடை முழுவதுகெட" (தேவா. 833 : 7).* (வியலகம், வியலிடம் என்பன பரந்த ஞாலத்தைக் குறித்தாற் போன்று, வியனிடை என்பது பரந்த வெளியாகிய வானத்தைக் குறித்தது. (இடைவெளி) (வே.க.142).

*[வியன் + இடை]*

வியனிலைமருட்பா *viyaṉilai-maruṭpā,* பெ.(n.) வெண்பாவடியும் ஆசிரியவடியும் ஒவ்வாது வரும் மருட்பாவகை (இலக். வி. 749, உரை); (Pros.) a kind of *maruṭpā* in which the lines of *veṇbā* and *āśiriyappā* are found confusedly mixed up.

*[வியன் + நிலை + மருட்பா]*

வியனிலைவஞ்சி *viyaṉilai-vañji,* பெ.(n.) மூச்சீரடி வஞ்சிப்பா (தொல். பொருள். 350, உரை); a kind of *vañji* verse with three metrical feet in each line.

*[வியன் + நிலை + வஞ்சி]*

வியனுலகம் *viyaṉ-ulagam,* பெ.(n.) விண்ணுலகம் (சூடா.); celestial world.

*[வியன்[1] + உலகம்]*

வியாவிருத்தி *viyāvirutti,* பெ.(n.) தள்ளுகை (யாழ்.அக.); exclusion, rejection.

*[வியா + **Skt.** vṛddhi > த. விருத்தி]*

வியாழக்கிழமை *viyāḻa-k-kiḻamai,* பெ.(n.) கிழமையின் ஐந்தாவது நாள்; thursday.

*[வியாழன் + கிழமை]*

வியாழக்குறிஞ்சி *viyāḻa-k-kuṟiñji,* பெ.(n.) குறிஞ்சியாழ்த்திறத் தொன்று (பிங்.); (mus.) a secondary melody type of *kuṟiñji* class.

*[வியாழம்[2] + குறிஞ்சி]*

**வியாழச்சக்கரம்** *viyāḻa-c-cakkaram,* பெ.(n.) அறுபது ஆண்டு வட்டம் (வின்.); the jupiter cycle of 60 years.

*[வியாழன் + சக்கரம்]*

**வியாழசினேகன்** *viyāḻa-śiṉēkaṉ,* பெ.(n.) கதிரவன் (நாமதீப. 94); sun.

*[வியாழன் + **Skt.** snēha > த. சினேகன்]*

**வியாழநோக்கம்** *viyāḻa-nōkkam,* பெ.(n.) 1. பிறப்பியச் சக்கரத்திற் காணப்படும் குருநோக்கம்; (Astral.) aspect of the planet jupiter, in an horoscope. 2. வியாழானுகூலம் பார்க்க; see *viyāḻāṉu-kūlam.*

*[வியாழன் + நோக்கம்]*

**வியாழம்**[1] *viyāḻam,* பெ.(n.) 1. தேவகுரு; brahaspati, the preceptor of the gods. *"வியாழத்தோடு மறைவழக் கன்று வென்ற" (திருவாலவா. திருநகரப். 13).* 2. ஒரு கோள்; jupiter, planet. *"முந்நீர்த் திரையிடை வியாழந் தோன்ற" (சீவக. 2467).* 3. வியாழக் கிழமை; thursday. *"வியாழத்தின் மிக்க சம்பத்தி னொடு சிறுவரைப் பெற்றெடுப்பான்" (அறப். சத. 69).*

*[வியல் → வியலன்) → வியாழன் - கதிரவனைச் சுற்றும் கோள்கள் எல்லாவற்றிலும் பெரியது. "வியல்என் கிளவி அகலப் பொருட்டே" (தொல்.உரி.66) வியல் → வியலம் → வியாழம்]*

**வியாழம்**[2] *viyāḻam,* பெ.(n.) பாம்பு; serpent. *"வெள்ளிவிடையில் வியாழம் புனைந்தாரைக் கண்டு" (குற்றா. குற. 35, 5).*

*[வியல் → வியலம் → வியாழம்] (வே.க.146)*

**வியாழமாலை** *viyāḻa-mālai,* பெ.(n.) வியாழமாலையகவல் (சிலப். உரைப்பா.) பார்க்க; see *viyāḻamālai-y-agaval.*

*[வியாழம் + மாலை]*

**வியாழமாலையகவல்** *viyāḻamālai-y-agaval,* பெ.(n.) இடைச்சங்கத்து நூல்களுள் ஒன்று (இறை. 1, பக். 5); a literary piece or poem of the middle *saṅgam,* not now extant.

*[வியாழமாலை + அகவல்]*

**வியாழவட்டம்**[1] *viyāḻa-vaṭṭam,* பெ.(n.) 1. வானமண்டலத்தில் குரு ஒருமுறை சுற்றிவருங் காலமாகிய பன்னீராண்டு (சங்.அக.); the period of 12 years, being the time taken by jupiter for one revolution or rotation in the universe. 2. வியாழச்சக்கரம் (வின்.) பார்க்க; see *viyāḻa-c-cakkaram.*

*[வியாழ + வட்டம்]*

**வியாழவட்டம்**[2] *viyāḻa-vaṭṭam,* வி.எ.(adv.) வியாழக்கிழமை தோறும் (வின்.); every thursday.

*[வியாழ + வட்டம்]*

**வியாழன்** *viyāḻaṉ,* பெ.(n.) வியாழம்[1] பார்க்க; see *viyāḻam.*

கோள்களுள் வியாழன் பெரிதா யிருப்பதும், வடமொழியில் அது பிருகஸ்பதி என்று பெயர் பெற்றிருப்பதும் கவனிக்கத் தக்கன. பொன் என்பது வியாழனுக்கொரு பெயராதலால் வியல் என்னும் சொல்லிற்கு பொன்னென்னும் பொருளும் தோன்றிற்றுப் போலும் (வே.க.146)

**வியாழானுகூலம்** *viyāḻāṉu-kūlam,* பெ.(n.) திருமணம் முதலிய நல்ல பயன்களைக் குறிக்கும் குருநோக்கம் (இ.வ.); beneficent aspect of the plant jupiter, as conducive to matrimonial happiness, etc.

*[வியாழ + **Skt.** anukūla > த. அனுகூலம்.]*

வியாளம் *viyāḷam,* பெ.(n.) 1. பாம்பு (சூடா.); snake. 2. புலி (சூடா.); tiger. 3. யாளி[1] 1 பார்க்க; see *yāḷi* a mythological animal. 4. கெட்ட குணமுள்ள யானை (வின்.); vicious elephant.

வியாளவரி *viyāḷa-vari,* பெ.(n.) கோயிற் கருவறை மதிலின் உச்சியில் யாளியுருவி லமைந்த அழகு வரி; (Arch.) a line of carbel stones having *yāḷi* images, in the inner shrine of a temple.

*[வியாள + வரி]*

விரகதம் *viragadam,* பெ.(n.) விரகறம் (மலை.) பார்க்க; see *viragaṟam.*

விரகறம் *viragaṟam,* பெ.(n.) வெள்ளைச் சாரணை (மலை.); horse purslane.

*[விரகதம் → விரகறம்]*

விரகறியாளன் *viragaṟi-y-āḷaṉ,* பெ.(n.) அறிவுடையோன்; wiseman. *"நறும்பூங் கரந்தை விரகறியாளர் மரபிற் சூட்ட" (புறநா.289).*

*[விறகு + அறி + ஆள்]*

விரகன் *viragaṉ,* பெ.(n.) 1. திறமையுள்ளவன்; skilful, clever person. *"விரகர் நெடுஞ்சுவர் தள்ளுமாபோலே போக்கி" (ஈடு.1, 5, 10).* 2. வல்லவன்; expert. *"தமிழ்விரகன மொழிகள்" (தேவா.132, 11).* 3. சுற்றத்தான்; kinsman. *"விரகர்கட் கெல்லாம் வெறுப்பனவே செய்யும்" (பழமொ. 123).*

விரகு *viragu,* பெ.(n.) 1. வழிவகை; means, expedient, contrivance. *"கண்ணாலே கண்டாலல்லது பஜிக்க விரகில்லை" (ஈடு. 1, 3, ப்ர).* 2. திறமை; cleverness, prudence, tact. *"விரகி னீட்டினான்" (சீவக. 328).* 3. உத்தி; cunning. *"காமம் விற்கின்ற விரகிற்றோலாப் பொய்வினை மகளிர்" (கம்பரா. இந்திர சித்துவதை. 28).* 4. நுண்ணறிவு; discretion, discriminative knowledge, sharpness. *"விரகினரில்லா வவைபோல்" (திருவானைக். சம்புமு. 41).* 5. உணர்ச்சிக் கனிவு; enthusiasm. *"வனஞ்சென்று விரகிற் புக்கான்" (மேருமந். 342).* 6. பண்ணியாரம்; confectionery. *"வேறுபல் லுருவின் விரகு தந்திரீஇ" (பொருந. 108).*

தெ. வெரவு; க. பெரகு.

விரகுளி *viraguḷi,* வி.எ.(adv.) முறையாக; in order. *"விரகுளி யெழுந்த போழ்தில்" (மேரு மந். 719).*

*[விரகு + உளி]*

விரசல் *virašal,* பெ.(n.) விரசு[4] பார்க்க; see *virašu.* *"விரசலாய் நட".*

*[விரை → விரைசு → விரசு → விரசல்.]*

விரசு[1]-தல் *virašu,* 5 செ.கு.வி. (v.i.) செறிதல்; to crowd closely or compactly together. *"விரசுமகிழ்சோலை" (பதினொ. விநாயகர். இரட். 1).*

**Ma.** virakkuka, **Ka.** berasu; **Tu.** biravuni; **Te.** berayu; **Kur.** *birkhnā*; **Malt.** birge.

*[விரவு → விரசு]*

விரசு²-தல் *virašu-,* 5 செ.குன்றாவி. (v.t.) பொருந்துதல்; to join, unite. *"அகிலம் யாவையும் விரசுறு தனிக்குடை" (கம்பரா. திருவவ. 138).* *"விரசு கோலங்கள் காண விதியிலேன்" (கம்பரா. சூளா. 36).*

விரசு[3] *virašu,* பெ.(n.) விரசுகணக்கு (இ.வ.) பார்க்க; see *virašu-kaṇakku.*

விரசு[4]–தல் *virašu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. மிகவும் விரைவுப்படுத்தல்; to press hard, to urge vehemently, to hasten. 2. சொல்லாற் கடிந்து வெருட்டுதல்; to repel by words of rebuke.

*[விரை → விரைசு → விரசு–,]*

விரசு[5] *virašu,* பெ.(n.) விரைவு; swiftness. *'கைவிரசு' (வின்.).*

*[விரை → விரைசு → விரசு–,]*

விரசு[6] *virašu,* பெ.(n.) மரவகை (M.M.802); large sebestan.

மறுவ. விரிச, விருசு.

**Ma.** virisu; **Te.** virigi.

விரசுகணக்கு *virašu-kaṇakku,* பெ.(n.) விளக்கமான கணக்கு (இ.வ.); detailed or elaborate account.

*[விரசு[2] + கணக்கு]*

விரசை *virašai,* பெ.(n.) மாட்டுத்தொழுவம் (இலக்.அக.); shed for cattle.

விரட்டடைப்பன் *viraṭṭaḍaippaṉ,* பெ.(n.) மாட்டு நோய் வகை (பெ.மாட்.); a kind of cattle-disease.

*[வரட்டடைப்பன் → விரட்டடைப்பன்]*

விரட்டு–தல் *viraṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. துரத்துதல்; to chase, to drive away. 2. அச்சுறுத்துதல்; to frighten, to intimidate. 3. மிகவும் விரைவுப்படுத்துதல்; to urge vehemently.

*[வெருட்டு → விரட்டு–,]*

விரணகம் *viraṇagam,* பெ.(n.) ஆமணக்கு (சங்.அக.); castor plant.

விரல் *viral,* பெ.(n.) 1. கைகால்களினிறுதியில் ஐந்தாகப் பிரியும் உறுப்பு; finger, toe. *"விரலுளர் நரம்பின்" (பொருந. 17).* 2. விரற்கிடை பார்க்க; see *virar-kiḍai.* *"பாதாதி கேசாந்தம் முக்காலே நால்விரலே ஆறுதோரை உசரமும்"* (S.I.I.ii, 395). *'விரலுக்குத் தக்க வீக்கம்' (பழ.), 'விரல் உதவி விருந்தினர் உதவார்' (பழ.), 'விரல் உரலானால் உரல் என்ன ஆகும்' (பழ.), 'விரல் போகாத இடத்திலே உரல் போகுமா' (பழ.).*

தெ. வ்ரேலு; ம. விரல்; க., து. பெரெல்; **Ko.** verl; **To.** *Peṭ*; **Kod.** bera; **Kol.** vende; **Nk.** Vende; **Go.** Wirinj; **Kui.** Vanju; **Kuwi (F).** *Vwānjū.*

*[விள் → விரி → விரல்]*

விரல்கொடு–த்தல் *viral-koḍu-,* 4 செ.கு.வி. (v.i.) திருமணஞ் செய்தல்; to marry. *"வேசியவள் நானிருக்க விரல் கொடுத்தா ளாசையென்ன" (கோ.வ.க.33).*

*[விரல் + கொடு–,]*

விரல்நொடி[1] *viral-noḍi,* பெ.(n.) விரலைச் சொடக்குகை; snapping the fingers. *'ஒரு விரல் நொடி இடாது' (பழ.).*

*[விரல் + நொடி]*

விரல்நொடி[2] *viral-noḍi,* பெ.(n.) பூடுவகை (திவா.); a plant growing in hedges and thickets.

*[விரல் + நொடி]*

**விரல்மொழி** *viral-moḻi,* பெ.(n.) விரல்களின் சந்துப் பொருத்து (வி ன்.); knuckle, finger-joint.

*[விரல் + மொழி]*

**விரல்வரியடையாளம்** *viral-vari-aḍaiyāḷam,* பெ.(n.) உள்ளங்கையில் அமைந்திருக்கும் கைவரி (ரேகை); line on the palm.

ஒவ்வொரு விரலின் நுனியிலும் வரிகள் குழந்தை, கருவிலிருக்கும் போதே உண்டாகி குழந்தை தொண்டு கிழவனாகும் காலத்திலும் ஒரு சிறிதும் மாறாமல் இருந்து கொண்டிருக்கின்றன. அதுமட்டுமன்று, உலகில் பலகோடி மக்களுக்கும் ஒவ்வொருவருடைய விரல் வரியும் தனிப்பட்டது. ஒருவருடையதைப் போல வேறு யாருக்கும் இருப்பதில்லை. இரட்டைக் குழந்தைகளுடைய விரல் கைவரி (ரேகை)களும் வேறுவேறாகவே காணப்படும். விரல் வரியின் தனிப்பட்ட தன்மை, மாறாத தன்மை என்ற இந்த இரண்டு இயல்புகளையும் வைத்து ஆள் அடையாளம் கண்டுபிடிக்க இயலும்.

*[விரல் + வரி + அடையாளம்]*

**விரல்விடு-தல்** *viral-viḍu-,* 20 செ.கு.வி. (v.i.) கைவிரலை விட்டு எண்ணுதல் (இக்.வ.); to count with one's fingers.

*[விரல் + விடு-.]*

**விரல்வை-த்தல்** *viral-vai-,* 4 செ.கு.வி. (v.i.) குறும்பு செய்தல் (இ.வ.); to do or attempt mischief

*[விரல் + வை-.]*

**விரலணி** *viralaṇi,* பெ.(n.) விரலாழி (சூடா.) பார்க்க; see *viral-āḻi.*

*[விரல் + அணி]*



**விரலம்** *viralam,* பெ.(n.) விரலின் அளவு; the tamil term of angulam. *'ஐவிரலம் வளரும் ஆற்று மீன்களுண்டு' (உ.வ.).*

**விரலாழி** *viralāḻi,* பெ.(n.) கணையாழி (மோதிரம்); finger-ring. *"விரலாழிக்கண் பல்விதக் கண்கள் சேர்த்து" (திருவாலவா. 22,13).*

*[விரல் + ஆழி]*

**விரலி** *virali,* பெ.(n.) 1. விரலிமஞ்சள் (கொ.வ.) பார்க்க; see *virali-mañjaḷ.* 2. வெள்ளரி (மலை.); cucumber.

**Ma.** virali; **Ko.** valary; **To.** Paso.

*[விரல் → விரலி]*

**விரலிப்பச்சை** *virali-p-paccai,* பெ.(n.) பச்சைக்கருப்பூரம் (சங்.அக.); purified camphor.

*[விரவு + பச்சை]*

**விரலிமஞ்சள்** *virali-mañjaḷ,* பெ.(n.) மஞ்சள் வகை; a kind of turmeric.

*[விரலி + மஞ்சள்]*

**விரலேறு** *viral-ēṟu,* பெ.(n.) ஒருவகைத் தோற்கருவி (சிலப். 3, 27, உரை, பக். 106); hand-drum.

*[விரல் + எறி-.]*

**விரவல்** *viraval* பெ.(n.) கலப்பு; mixing, mixture.

*[விரவு → விரவல்]*

**விரவலர்** *viravalar,* பெ.(n.) விரவார் பார்க்க; see *viravār.* *"மெலியோர் வலிய விரவலரை யஞ்சார்" (நன்னெறி. 9).*

*[விரவு + அல் + அர்]*

**விரவார்** *viravār,* பெ.(n.) பகைவர்; enemies. *"விரவாருணாணுப் படலஞ்சி" (நாலடி, 88).*

**விரவி** *viravi,* பெ.(n.) வெள்ளரி (சங்.அக.); cucumber.

*[விரலி → விரவி]*

**விரவியல்** *viraviyal,* பெ.(n.) 1. சங்கீரணம் என்னும் கலவையணி (வீரசோ. அலங். 34, உரை); (Rhet) a figure of speech are blended. 2. வடவெழுத்து விரவிவரும் சொல்; (Gram.) word in which letters peculiar to sanskrit occur. *"இடையே வடவெழுத் தெய்தில் விரவியல்" (வீரசோ. அலங். 40).*

*[விரவு + இயல்]*

**விரவு[1]-தல்** *viravu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. கலத்தல்; to mix, mingle, to join, unite. *"விரவுமலர் வியன்கா" (நெடுநல். 27).* 2. அடைதல்; to approach, draw near. *"விரவினோர் தணக்க லாற்றா" (காஞ்சிப்பு. தக்கீ. 1).* 3. ஒத்தல்; to be similar, *akin.* *"மலைவிரவு நீண்மார்வின் மைந்தன்" (சீவக. 1885).*

க., து. பெரசு; ம. விரகுக.

**விரவு[2]-தல்** *viravu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. பொருந்துதல்; to be united, joined, to be mingled, mixed. *"புலியுரி விரவிய வரையினர்" (தேவா. 450, 1).* 2. நட்புக் கொள்ளுதல்; to cultivate friendship, to keep company. *"பணிவாரொடே விரவுமின்" (தேவா. 469, 5).*

க., து. பெரசு; ம. விரகுக.

**விரவு[3]** *viravu,* பெ.(n.) கலப்பு; mixture.

**விரவு[4]** *viravu,* பெ.(n.) விரகு 4 (வின்.) பார்க்க; see *viragu.*

**விரவுத்திணை** *viravu-t-tiṇai,* பெ.(n.) உயர்திணைக்கும் அஃறிணைக்கும் பொதுவாக வருஞ் சொல்லின் திணை (யாழ்.அக.); (Gram.) *tiṇai* of a word comman to both *uyar-tiṇai* and *agriṇai.*

*[விரவு[2] + திணை]*

**விரவுநெல்** *viravu-nel,* பெ.(n.) கலப்பு நெல்; mixed paddy.

*[விரவு + நெல்]*

**விரவுப்பெயர்** *viravu-p-peyar,* பெ.(n.) இருதிணைக்கும் அல்லது அஃறிணை யிருபாற்கும் பொதுவாக வரும் பெயர் (நன்.281–282); (Gram.) noun common to both *uyar-tiṇai* and *agriṇai.* *"விரவுப் பெயரின் விரிந்து நின்றும்" (நன். 255).*

*[விரவு + பெயர்]*

பெயர்களை உயர்திணைப் பெயர் என்றும் அஃறிணைப் பெயர் என்றும் தமிழிலக்கணங்கள் இரண்டு வகையாகப் பிரிக்கும். சில பெயர்கள் அஃறிணைக்கும் உயர்திணைக்கும் பொதுவாக இரண்டு திணையிலும் விரவி வரும். இப்படி இருதிணையிலும் விரவி வரும் பெயர்களை விரவுப் பெயர் என்பர்.

உயர்திணைக்கே உரிய பெயர் அஃறிணைப் பொருளையும் குறிக்கப் பயன்பட்டு இருதிணையிலும் விரவி வருமாயின் அதனை உயர்திணை விரவுப் பெயர் என்பர்.

அஃறிணைக்கே உரிய பெயர் உயர்திணைப் பொருளையும் குறிக்கப் பயன்பட்டு இரு திணையிலும் விரவி வருமாயின் அதனை அஃறிணை விரவுப் பெயர் என்பர்.

எ.டு.

சாத்தி வந்தாள்
சாத்தி வந்தது
கொற்றன் வந்தான்
கொற்றன் வந்தது
மணி வந்தான்
மணி வந்தது
கோதை வந்தாள்
கோதை வந்தது (இலக்.கலைக்.110)

விரள்(ளு)-தல் *viral-*, 2 செ.கு.வி. (v.i.) அச்சப்படுதல் (வின்.); to be frightened; to be afraid of.

விரளம் *viralam*, பெ.(n.) 1. செறிவின்மை; being wide apart. *'மாலையில் மலர் விரளமாகத் தொடுக்கப்பட்டிருக்கிறது'.* 2. இடைவெளி (இலக்.அக.); intervening space. 3. கால நீட்டிப்பு (இலக்.அக.); leisure. 4. அருமை; rarity. *'படித்தவர்கள் விரளமாயிருக்கிறார்கள்'.*

விரளல் *viralal*, பெ.(n.) நெருக்கம் (நாமதீப. 777); narrowness, closeness, closely personal.

விரளிமஞ்சள் *virali-mañjal*, பெ.(n.) விரலிமஞ்சள் (இ.வ.) பார்க்க; see *virali-mañjal*

*[விரலி → விரளி + மஞ்சள்]*

விரற்கடை *virar-kadai*, பெ.(n.) விரற்கிடை (வின்.) பார்க்க; see *virar-kidai*.

விரற்கிடை *virar-kidai*, பெ.(n.) விரலகலமுள்ள அளவு (வின்.); finger's breadth = 8 grains of paddy = 1/12 *šāṇ*.

*[விரல் + கிடை[2]]*

விரற்குறி *virar-kuri*, பெ.(n.) கைவிரல் வரியை ஒற்றியெடுத்த அடையாளம் (C.G.); finger impression.

*[விரல் + குறி]*

விரற்கொடி *virar-kodi*, பெ.(n.) பூடு வகை (திவா.); a plant growing in hedges and thickets.

*[விரல்கொடி → விரற்கொடி]*

விரற்சாடு *virar-šādu*, பெ.(n.) விரலுறை (சீவக. 2202, உரை); glove for the finger, put on while shooting arrows.

*[விரல் + சாடு[4]]*

விரற்சுற்று *virar-šurru*, பெ.(n.) நகச்சுற்று (வின்.); whitlow.

*[விரல் + சுற்று]*

விரற்செறி *virar-šeri*, பெ.(n.) நெளி; curved finger-ring. *"விரற்செறியினைத் திருத்தலும்" (தொல். பொ. 22, உரை).*

மறுவ. கணையாழி.

*[விரல் + செறி[2]-,]*

விரற்படுவன் *virar-paduvan*, பெ.(n.) விரலில் வரும் புண்கட்டி வகை (M.L); abscess finger, thecal abscess.

*[விரல் + படுவன்]*

விரற்புட்டில் *virar-puttil*, பெ.(n.) 1. விரற் சாடு பார்க்க; see *virar-šādu*. *"விரற்புட்டி*

*லிவை சிறிய" (கலிங். 534).* 2. விரற் சிமிழ் (அங்குஸ்தான்); thimble.

*[விரல் + புட்டில்']*

விரற்புறப்பாடு *viraṟ-puṟappāḍu,* பெ.(n.) விரற்சுற்று பார்க்க; see *viraṟ-śuṟṟu* (M.L.).

*[விரல் + புறப்படு → புறப்பாடு]*

விரற்பூண் *viraṟ-pūṇ,* பெ.(n.) கணையாழி (மோதிரம்) (நாமதீப. 435); finger-ring.

மறுவ. விரற்செறி.

*[விரல் + பூண்]*

விரனெரி-த்தல் *viraṉeri-,* 4 செ.கு.வி. (v.i.) வருத்தத்தால் விரல்களை நெரித்தல்; to wring one's hands, squeeze one's fingers together in sign of great distress. *"மெல்விர னெரித்து விம்மி வெய்துயிர்த்து" (பதினொ. திருவாரூர்மும். 7).*

*[விரல் + நெரி ²-]*

விராகன் *virāgaṉ,* பெ.(n.) 1. வராகன் என்பதன் மறுவழக்கு; the derivative of *varāgaṉ.* 2. கடவுள்; one without passion the deity. 3. அருகன் (சது.); arha.

விராகு *virāgu,* பெ.(n.) விராகம் பார்க்க; see *virāgam.* *"விராகெனும் வேலின் வீழ" (சீவக. 3080).*

விராய் *virāy,* பெ.(n.) 1. விறகு; fuel, firewood. *"வல்விராய் மாய வெரிதழல்" (நீதிநெறி. 64).* 2. பூச்செடிவகை; a flowering plant. *"விராய் மலர்க் கோதை" (பெருங். வத்தவ. 12,38, அரும்.).* 3. விராயம் (R.) பார்க்க; see *virāyam.*

விராயம் *virāyam,* பெ.(n.) தளவாடம் (யாழ்.அக.); materials, as for a piece of work.

விராலி *virāli,* பெ.(n.) செடிவகை (வின்.); jamaica switch sorrel.

தெ. பண்டவ செட்டு; ம. வாவலி.

இரட்டை விதையிலை நிலைத் திணைகளிலே பூந்திக்கொட்டைக் குடும்பத்தைச் சேர்ந்த சிறு மரம். இது குற்று மரமாகவும் சிறிய புதராகவும் வளர்வதுண்டு. இது கூட்டமாக உலர்ந்த இடங்களிலும் காடுகளிலும் இந்தியா நெடுகிலும் வளர்கின்றது. 8000 அடி உயரம் வரையில் இதைக் காணலாம். இதன் இலையின்மேல் நெய் பூசினது போல மெழுகுப் பொருள் உண்டு. இதன் இலைகள் ஆடுமாடு மேய்வதில்லை. மரம் கடினமானது. கடைசல் வேலைக்கும் , கைத்தடி, கருவிகளின் பிடி முதலியவை செய்யவும் உதவும். குச்சிகளை ஒடித்துக் கட்டித் துடைப்பம் போலப் பயன்படுத்துவர். இலையை எலும்பு முறிவு, அடி முதலியவற்றிற்கு வைத்துக் கட்டுவார்கள். இதன் கனி சிறகு போன்ற நீட்சி உள்ளது. அதனால், காற்றில் எளிதில் அடித்துக்கொண்டு போகப்படும். மண் கரைந்து போகாமலிருக்கவும், மணலைக் காற்று அடித்துக்கொண்டு போகாமலிருப்பதற்கும் இந்தச் செடியை நட்டுப் பயிர் செய்வார்கள். இது பெரும்பாலும் விறகாகப் பயன்படுகிறது. விராலி மலை என்பது இம் மரத்தால் பெற்ற பெயரே.

விராலிச்சம்பா *virāli-c-cambā,* பெ.(n.) சம்பா நெல்வகை (விவசா. 1); a kind of *cambā* paddy.

*[விராலி + சம்பா]*

விராவம் *virāvam,* பெ.(n.) ஒலி (சங்.அக.); sound.

விராவலங்காரம் *virā-v-alaṅgāram,* பெ.(n.) கலவையணி (தண்டி. 87); a composite figure of speech in which several figures of speech are blended.

*[விராவு + Skt. alaṅkāra > த. அலங்காரம்]*

**விராவு[1]-தல்** *virāvu-,* 5 செ.குன்றாவி. செ.கு.வி.(v.t) & (v.i) விரவு-, பார்க்க; see *viravu. "செம்பொன் விராவியும்" (கம்பரா. ஆற்றுப். 8).*

*[விரவு → விராவு-,]*

**விராவு[2]** *virāvu,* பெ.(n.) விராவலங்காரம் பார்க்க; see *virā-v-alaṅgāram. "பல்லலங் காரஞ் சேர்த்துப் பயிலுவது..... விராவாம்" (வீரசோ. அலங். 34).*

*[விரவு → விராவு]*

**விராளி** *virāḷi,* பெ.(n.) பிரிவு (வின்.); separation.

**விராளிமஞ்சள்** *virāḷi-mañjaḷ,* பெ.(n.) விரலிமஞ்சள் (இ.வ.) பார்க்க; see *virali-mañjaḷ.*

*[விராளி + மஞ்சள்]*

**விரானு** *virāṉu,* பெ.(n.) 1. கொடிவகை; mussell-shell creeper. 2. கொடிக் காக்கட்டான் (L ); sky-blue bindweed

மறுவ. காக்கட்டான்.

**விரி[1]-தல்** *viri-,* 4 செ.கு.வி. (v i.) 1. பரத்தல்; to expand, to spread out *"விரிமுக விசும்பு" (சீவக. 329).* 2. மலர்தல்; to open, unfold. *"மணத்துடன் விரிந்த கைதை" (கல்லா. 2).* 3. தொக்க வேற்றுமையுருபு முதலியன வெளிப்பட விரிதல்; (Gram ) to be expanded, as an elliptical sentence, to be elaborated. 4. முற்றுதல்; to become developed. 5. அவிழ்தல்; to be loosened. *"விரிந்துவீழ் கூந்தல் பாரார்" (கம்பரா. உலாவியற். 4).* 6. பிளவு கொள்ளுதல்; to split, crack, to burst asunder *'அந்தச் சுவர் விரிந்து போயிற்று'.*

தெ. விரியு; க. பிரி; ம. விரியுக; **Kod.** biri; **Tu.** biriyuni; **Pa.** virng; **Kui.** Vringa; **Kuwi.** ringali; **Kur.** *berrnā*; **Te.** ara-viri.

*[விள் → விரி → விரிவு, விரிதல்] (மு.தா. 100)*

**விரி[2]-த்தல்** *viri-,* 11 செ.குன்றாவி. (v.t.) 1. விரியச் செய்தல்; to cause to expand, to open, unfold. 2. விளக்கியுரைத்தல்; to expound, to explain, to elaborate, as in writing or in speaking. *"நூல் விரித்துக் காட்டினும்" (நாலடி, 341).* 3. பரப்புதல்; to extend, to spread. *"பல்கதிர் விரித்தே" (புறநா. 8). "விரித்த நாணல்" (கம்பரா. கங்கை. 50).* 4. கூந்தல் முதலியவற்றை அவிழ்த்து நெகிழ விடுதல்; to unite, loosen, as the tresses of a woman. *"விரித்த கருங்குழலும்" (சிலப். 20, வெண்பா, 3).*

*[விரி → விரி-,]*

**விரி[3]** *viri,* பெ.(n.) 1. பரப்பு; expanse. 2. விரிந்த அளவு; fullness. *"சார்பெழுத்துறு விரி" (நன். 60).* 3. விரித்தல் 2 பார்க்க; see *viri-. "தொகைவகை விரியிற் றருகென" (நன். சிறப்புப். ).* 4. பொதிமாட்டின் மேலிடும் மெத்தைப் பை; pannier for pack-oxen, pack-saddle. 5. விரிப்பு 2 (இ.வ.) பார்க்க; see *virippu.* 6. திரை; curtain. *"விரியை யவிழ்த்துவிர'.* 7. விரியன் 1 பார்க்க; see *viriyaṉ1*, viper. *"நாகம் விரிபெடை யோடாடி விட்டற்று" (நாலடி, 240).* 8. காட்டுப் புன்னை (L.); malabar poon. 9. விரியன் 2 (L.) பார்க்க; see *viriyaṉ.*

**M.** viri; **Ko.** viry.

**விரிக்கட்டு** *viri-k-kaṭṭu,* பெ.(n.) 1. விரி 4 (வின்.) பார்க்க; see *viri-,4.* 2. சேணம் (யாழ்.அக.); saddle.

**M.** viri, **Ko.** viry.

[விரி + கட்டு]

**விரிகண்** *viri-kaṇ,* பெ.(n.) விழியை அகலச் செய்யும் கண்ணிமை நோய்வகை (வின்.); a disease of the eye-lid that causes the eye to dilate.

[விரி²-. + கண்]

**விரிகண்மணி** *viri-kaṇmaṇi,* பெ.(n.) கருவிழியைப் பெருக்கச் செய்யும் மருந்து; drug that causes dilatation of the pupil of the eye.

[விரி + கண்மணி]

**விரிகாங்கூலம்** *viri-kāṅgūlam,* பெ.(n.) நளிநயக்கை வகை (சிலப். 3, 12, பக். 94, உரை); a hand-pose.

[விரி + காங்கூலம் = ஆட்காட்டிவிரல், பெருவிரல், நடுவிரல் ஆகியவை ஒட்டிநிற்க மோதிரவிரல் முடங்கிச் சுண்டுவிரல் நிமிர்ந்து நிற்கும் நாட்டிய நளிநயக்கை]

**விரிகாசம்** *virikāšam,* பெ.(n.) வெங்காரம் (சங்.அக.); borax.

**விரிகி** *virigi,* பெ.(n.) விரீகி (தைலவ.) பார்க்க; see *viriki.*

**விரிகுடா** *virikuḍā,* பெ.(n.) நிலப்பரப்புக்குள் உள் வாங்கியிருக்கும் கடற்பகுதி; bay.

கடல் அல்லது பெரிய ஏரியின் நீர், நிலப் பகுதியினுள் குடைந்து அல்லது உள்வாங்கி இருக்கும். இது குறுகலாயிருப்பின் கழி என்றும், பெரிதாயிருப்பின் குடா என்றும் பெயர் பெறும். இது பொதுவாக, நிலப்பகுதியின் தொடக்கத்தில் குறுகியும், கடல் நோக்கிச் செல்லச்செல்ல விரிந்தும் இருப்பின் விரிகுடா எனப்படும் (உ.ம்.) வங்காள விரிகுடா, பிஸ்க்கே விரிகுடா.

குடாவின் அகலம் ஏறக்குறைய சீராகவோ அல்லது கடலுடன் கலக்குமிடம் குறுகியோ இருப்பின் வளைகுடா எனப்படும் (உ.ம்.) மன்னார் வளைகுடா, மெக்சிக்கோ வளைகுடா.

**விரிகுளம்பு** *viri-kuḷambu,* பெ.(n.) பிளவுபட்ட காற்குளம்பு (வின்.); cloven hoof.

[விரி¹ + குளம்பு]

**விரிகொம்பன்** *virikombaṉ,* பெ.(n.) பரந்த கொம்புள்ள மாடு (வின்.); ox with outspread horns.

[விரிகொம்பு → விரிகொம்பன்]

**விரிகொம்பு** *viri-kombu,* பெ.(n.) விலங்கின் பரந்த கொம்பு (வின்.); outspread horns.

[விரி¹ + கொம்பு]

**விரிகோணம்** *viri-kōṇam,* பெ.(n.) நேர் கோணத்தைவிட அகன்ற கோணம் (இக்.வ.); (math.) obtuse angle.

[விரி¹ + கோணம்²]

**விரிச்சி** *viricci,* பெ.(n.) 1. தெய்வக்குறி; oracle. *"படையியங்கரவம் பாக்கத்து விரிச்சி" (தொல். புறத். 3).* 2. தன் னேர்ச்சியான நற்சொல்; utterance of an invisible speaker.

[விள் → விடு → விடுச்சி → விடிச்சி → விரிச்சி]

போருக்குச் செல்லுமுன் தெய்வக்குறி கேட்பது பண்டைப் படைமறவர் வழக்கம். விரிச்சி என்னும் தென் சொல்லிற்கும் வினாவைக் குறிக்கும். 'பிரச்' என்னும் வடசொல்லிற்கும், யாதொரு தொடர்புமில்லை. தெய்வக்குறி அல்லது வாய்ப்புள், மறை வெளிப்பாடாதலால் விரிச்சியெனப்பட்டது - பாவாணர் (மு.தா.56).

**விரிச்சிகம்** *viriccigam,* பெ.(n.) விருச்சிகம்[1] (யாழ்.அக.) பார்க்க; see *viruccigam.*

**விரிச்சிகன்** *viriccigaṉ,* பெ.(n.) குறி கூறுவோன்; one who tell fortune. *"விசும்பிவர் கடவுளொப்பான் விரிச்சிக னறிந்து கூறு" (சீவக. 621)*

*[விரிச்சி → விரிச்சிகன் (வே.க.150)]*

**விரிச்சிகை** *viriccigai,* பெ.(n.) விரிசிகை[2] (அக.நி.) பார்க்க; see *virišigai.*

**விரிச்சிநில்-தல்** *viricci-nil-,* 14 செ.கு.வி. (v.i.) விரிச்சியோர்–, பார்க்க; see *viricci-y-ōr. "பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்ப" (முல்லைப். 11).*

*[விரிச்சி + நில்–.]*

**விரிச்சியூரார்** *viricciyūrār,* பெ.(n.) கடைக்கழகக் காலப் புலவர்; a sangam poet.

**விரிச்சியோர்-த்தல்** *viricci-y-ōr-,* 4 செ.கு.வி. (v.i.) நற்சொற் கேட்க விரும்பி நிற்றல்; to wait for the utterance of an invisible speaker. *"நென்னீரெறிந்து விரிச்சியோர்க்கும்" (புறநா. 280).*

*[விரிச்சி + ஓர்–,]*

**விரிசல்** *virišal,* பெ.(n.) 1. பிளவு; split, crack, rent. 2. அலை; wave. *"சலங்கு விரிசலில் அகப்பட்டது" (வின்.).* 3. விரியல் 5 (தஞ்சை) பார்க்க; see *viriyal.*

*[விரி → விரிசல்]*

**விரிசற்குளம்பு** *virišaṟ-kuḷambu,* பெ.(n.) விரிகுளம்பு (வின்.) பார்க்க; see *viri-kuḷambu.*

*[விரிசல் + குளம்பு]*

**விரிசா** *virišā,* பெ.(n.) கையாந்தகரை (சங்.அக.) பார்க்க; see *kaiyāndagarai,* a plant growing in wet places.

**விரிசிகை[1]** *virišigai,* பெ.(n.) விரிசா (மலை.) பார்க்க; see *virišā.*

**விரிசிகை[2]** *virišigai,* பெ.(n.) 36 கோவையுள்ள மாத ரிடையணி (திருமுரு. 16, உரை); an ornamental waist-band of 36 strings, worn by women.

**விரிசு[1]** *virišu,* பெ.(n.) பெரியநறுவிலி (L.); large sebesten.

ம. விரிசு.

**விரிசு[2]** *virišu,* பெ.(n.) புருசு (இ.வ.); a kind of rocket.

**விரிசு[3]** *virišu,* பெ.(n.) அயோத்தி (நாமதீப. 506); *ayōddi.*

**விரிசுழி** *viri-šuḻi,* பெ.(n.) முதுகின் இடப்புறமுள்ள மாட்டுச் சுழிவகை; a curl on the top left side of cattle.

*[விரி[1]– + சுழி]*

**விரிஞ்சன்** *viriñjaṉ,* பெ.(n.) விரிஞ்சி[1] (பிங்.) பார்க்க; see *viriñji. "வேதங்கண்ணிய பொருளெல்லாம் விரிஞ்சனே யீந்தான்" (கம்பரா. இரணிய. 1.).*

**விரிஞ்சனன்** *viriñšaṉaṉ,* பெ.(n.) விரிஞ்சி[1] (வின்.) பார்க்க; see *viriñši.*

**விரிஞ்சி[1]** *viriñji,* பெ.(n.) நான்முகன்; *brahmā. "விபுதாதியர் விரிஞ்சி..... சூழ்தா" (பாரத. அருச்சுனன்றவ. 113).*

**விரிஞ்சி[2]** *viriñji,* பெ.(n.) சித்திரான்னவகை (வின்.); a special preparation of rice.

உ. பிரிஞ்.

விரித்தல் *virittal,* பெ.(n.) 1. செய்யுள் விகாரம் ஒன்பதனுள் சொல்லிடையே எழுத்துத் தோன்றுவது (நன். 155); a poetic licence which consists in the augmentation of letter in the middle of a word, one of nine *šeyyuḷ-vikāram* q.v. 2. நூல் யாப்பு நான்கனுள் முன்னூலிற் தொகுத்துக் கூறப் பட்டதனை விளங்குமாறு விரித்துக் கூறுவது (தொல். பொ. 652); elaborate treatment of topics briefly summarised in a former treatise, one of four *nūl-yāppu,* q.v.

*[விரி → விரித்தல்]*

விரித்துரை *virittural,* பெ.(n.) அகலவுரை (பிங்.); elaborate commentary.

*[விரி + உரை[6]]*

விரிதூறு *viri-tūṟu,* பெ.(n.) புதர் (திவா.); thicket.

*[விரி[1] + தூறு[2]]*

விரிந்த *virinda,* பெ.(n.) பரப்பு மிகுதியான; abundant surface. *'விரிந்த உலகில் தெரிந்தவர் சிலர்' (பழ.).*

*[விரி[1] + தூறு[2]]*

விரிநிலைத்தொடர் *viri-nilai-t-toḍar,* பெ.(n.) தொகைச்சொல் முதலியவற்றை முழுநிலையில் காட்டுதல்; expand, a compound of words, etc.

'சாரைப்பாம்பு' என்பதைச் 'சாரையாகிய பாம்பு' என்று விரித்துச் சொல்லுதல்.

விரிநூல் *viri-nūl,* பெ.(n.) 1. தொகுத்துக் கூறாது விரித்துக் கூறும் நூல்; elaborate treatise. 2. மறை நூல்கள் (ஆகமங்கள்); the *āgamas.* *"விரிநூ லந்தணர் விழவு தொடங்க" (பரிபா. 11, 78).*

*[விரி[2] + நூல்]*

விரிப்பு *virippu,* பெ.(n.) 1. விரிக்கை (வின்.); spreading. 2. விரிக்குங் கம்பள முதலியன; anything spread, as cloth, carpet, table-cloth mat. 3. மலர்த்துகை; opening out. 4. பிளப்பு (வின்.); opening, parting. 5. மாட்டுக் காய்ச்சல் வகை (cm.m.248); a fever of cattle.

*[விரி → விரிப்பு]*

விரிபம் *viripam,* பெ.(n.) சிறு துகில் (பிங்.); small piece of cloth.

விரிபுலப்பொருட்டற்குறிப்பணி *viribula-p-poruṭṭaṟkuṟippaṇi,* பெ.(n.) ஒருவகைச் சொல்லணி; one of the thirty five rhetorical figures, a fanciful kind of metaphor.

*[விரி[1] + பூ[3]]*

*"காமத்தீயின் புகைபோன்றிருக்கின்றது இருள்" இத் தொடரில் இருளாகிய செய்தி விரிந்து நின்றது. புகைக்கூட்டம் (செய்தி).*

விரிபூ *viri-pū,* பெ.(n.) மலர்ந்த பூ; full-blown flower.

*[விரி[1] + பூ[3]]*

விரிபூடு *viri-pūḍu,* பெ.(n.) பற்படகம் (மலை.) பார்க்க; see *paṟ-paḍagam,* fever plant.

*[விரி + பூடு]*

விரிமலர் *viri-malar,* பெ.(n.) விரிபூ (வின்.) பார்க்க; see *viri-pū.*

*[விரி + மலர்]*

**விரிமுட்டு** *viri-muṭṭu,* பெ.(n.) பழைய சிற்றூர் வரி வகை (I.M.P.TP.234); an ancient village cess.

*[விரி + முட்டு]*

**விரிமுரண்** *viri-muraṉ,* பெ.(n.) ஒருவகை இசைப்பா (சிலப். 6, 35, உரை); a kind of song.

*[விரி¹ + முரண்]*

**விரியல்** *viriyal,* பெ.(n.) 1. பரப்பு (பிங்.); spread, expanse. 2. ஒளி (சூடா.); light. 3. மலர்ச்சி; blossoming. *"தாழை விரியல் வெண்டோட்டுக் கோதை மாதவி" (சிலப். 2, 17).* 4. பூமாலை; wreath of flowers. *"விளங்குகதிர்த் தொடுத்த விரியல் சூட்டி" (சிலப். 10, 133).* 5. தென்னோலையால் முடைந்த தட்டிவகை (தஞ்சை.); screen, plaited of coconut-leaves.

*[விரி → விரியல்]*

**விரியலை** *viri-y-alai,* பெ.(n.) விரியல், 5 (தஞ்சை) பார்க்க; see *viriyal.*

*[விரி + அலை]*

**விரியறுகு** *viri-y- aṟugu,* பெ.(n.) அறுகம்புல்வகை (மலை.); a kind of harialli grass.

*[விரி + அறுகு]*



**விரியன்** *viriyaṉ,* பெ.(n.) **1.** ஒருவகைப் பாம்பு; viper, Daboia elegans. **2.** நறுவல்லி, **1 (L.)** பார்க்க; see *naṟuvalli,* common sebesten.

ம. விரியந்.

*[விரி → விரியன்]*



**விரியாப்பு** *viri-y-āppu,* பெ.(n.) களைப்பால் வரும் மயக்கம் (நெல்லை); fainting due to exhaustion.

*[விரி + ஆப்பு]*

**விரியுருவகம்** *viri-y-uruvagam,* பெ.(n.) முற்றுருவகம் (தண்டி. 35) பார்க்க; see *muṟṟuruvagam,* complete metaphor.

*[விரி¹ + உருவகம்]*

இது, ஆகிய முதலிய சொற்கள் வெளிப்பட்டு நிற்றலையுடையது.

**விரியுரை** *viri-y-urai,* பெ.(n.) விரித்துரை (வின்.) பார்க்க; see *virittuṟai.*

*[விரி⁶ + உரை⁶]*

**விரியுவமம்** *viri-y-uvamam,* பெ.(n.) பொதுத்தன்மை விரிந்து நிற்றலுடைய உவமை (தண்டி–30); a kind of simile where the common qualities of the things

compared are clearly and fully expressed, dist fr. *togai-y-uvamam.*

*[விரி + உவமம்]*

இது உவமானமும் உவமையுருபும் பொதுத் தன்மையும் உவமேயமும் வெளிப்படையாய் விரிந்து நிற்க வருவது. (எ–டு) *"பால்போலும் இன்சொல்".*

**விரியூர்நக்கனார்** *viriyūr-nakkaṉār,* பெ.(n.) கடைக் கழகக் காலப் புலவருள் ஒருவர்; a sangam poet.

இவர் பெயர் பலவாறு படிகளிற் சிதைந்து காணப் பெறுகிறது. நக்கனாரென்பது சிவபிரான் திருப்பெயர்களுள் ஒன்று. அதனை இவருக்கிட்டனர் போலும் (புறம். 332).

**விரியோலை**[1] *viri-y-ōlai,* பெ.(n.) 1. குருத்து விரிந்து முதிரும் பனையோலை; fully developed leaf of the palmyra tree. 2. விரியல் 5 (வின்.) பார்க்க; see viri-yal. 3. ஓலைப்பாய் (நாஞ்.); palm-leaf mat.

*[விரி + ஓலை]*



**விரியோலை**[2] *viri-y-ōlai,* பெ.(n.) தாழங்குடை; ōla umbrella. *"வர்ஷாதப பரிஹாரமான விரியோலையும்" (திவ். பெரியாழ். 3, 3, 4, வ்யா. பக். 569).*

*[விரி + ஓலை]*



**விரிவாக** *virivāga,* வி.எ.(adv.) இந்தச் செய்தி அந்த நூலில் விரிவாக எழுதப்பட்டிருக்கிறது; in detail, elaborately.

*[விரிவு + ஆ –,]*

**விரிவுநிகண்டு** *virivu-nikaṇḍu,* பெ.(n.) நிகண்டு வகைநூல்; a kind of *nikaṇḍu.*

சூடாமணி நிகண்டை அடிப்படையாகக் கொண்டு அதன்படியே எதுகை முறையில் ஆசிரியமண்டிலப்பாவால் இயற்றப்பட்டுள்ளது. சூடாமணி நிகண்டிலுள்ள பதினோரந் தொகுதியிற் கண்ட சொற்களுடன் பல உலகவழக்குச் சொற்களையும் சேர்த்துக்கூட்டி மிக விரிவாக அமைத்துள்ளார் இந்நூலாசிரியர். இந்நூலின் இறுதிப் பகுதி பலவாறு சிதைந்துள்ளது. பல செய்யுள்கள் எண்ணிடப்படாமல் உள்ளன. 1100 செய்யுட்களுக்கு மேல் இருக்கலாம்; தெளிவாகத் தெரிவன 1036 செய்யுள்கள்.

இந்நூலாசிரியர் திருநெல்வேலி மாவட்டத் திலுள்ள வீரவநல்லூரார், நா. அருணாசல நாவலர் என்னும் பெயரினர். நூலாசிரியரே நூலுக்கு உரையும் இயற்றியுள்ளார். இவர் சைவர். இந்நூலின் காப்புச் செய்யுளில் இந்நூலைப் பற்றி, *"பொன் பொலி வீரை வேணிப் பூமிநாதன் தன் தாசன் – முன்புறுநிகண்டோடு ஏனை முதுமொழிப் பொருளனேகம் – இன்புறும் எதுகையாக இயற்றுமிந் நிகண்டை"* என்னுங் குறிப்புள்ளது. திருநெல்வேலிப் பக்க வழக்குச் சொற்கள் இதன்கண் மிகுதியாக உள்ளன.

*[விரிவு + ஆ –,]*

விரிவுரை *virivurai,* பெ.(n.) 1. நூலின் விரிவான உரை (நன். மயிலை. அரும்.); elaborate commentary. 2. சொற்பொழிவு (இக்.வ.); lecture.

*[விரிவு + உரை[5]]*

விரீஇ *virii,* பெ.(n.) விரீகி, 1 பார்க்க; see *virigi.* *"நங்கைமார் வீரிஇ யற்றவர்" (சீவக. 89).*

விரீகி *virigi,* பெ.(n.) 1. நெல் (திவா.) (சீவக. 89, உரை); paddy. 2. அரிசி (சங்.அக.); rice. 3. காரேலம் (யாழ்.அக.); a kind of cardamom.

விருக்கு *virukku,* பெ.(n.) சாதிலிங்கம் (சங்.அக.); vermilion.

விருகம் *virugam,* பெ.(n.) செந்நாய்; a kind of wild dog. *"மையார் விருகந் துருவி மறைந்தே" (கம்பரா. நகர்நீங்கு. 83) (பிங்.).*

விருத்தூண் *viruttūn,* பெ.(n.) புத்துணவு (இலக்.அக.); fresh food.

*[விருந்து + ஊண்]*

விருதம் *virudam,* பெ.(n.) வெள்ளெருக்கு (சங்.அக.); white madar.

*[விருத்தம் → விருதம்]*

விருதர் *virudar,* பெ.(n.) வீரர்; warriors. *"வாளி கொண்ட விருதர்" (பாரத. வாரணா. 76).*

விருதா[1] *virudā,* பெ.(n.) வீண்; uselessness, fruitlessness, that which is vain or profitless.

விருதா[2] *virudā,* பெ.(n.) வீணாய்; uselessly. *"விருதாவலைந் துழலு மடியேன்" (திருப்பு. 102).*

விருதாவளி *virudāvaḷi,* பெ.(n.) அரசர் முதலியோர் பெறும் பட்டவரிசை; detailed statement of titles, as for kings ehe.

*[விருது + ஆவளி]*

விருதாவன் *virudāvaṉ,* பெ.(n.) மக்கட்பதடி; good for - nothing fellow, useless fellow, lazy person. *"போக்கிடமற்ற விருதாவனை ஞானிகள் போற்றுத லற்றது" (திருப்பு. 266).*

*[விருதா → விருதாவன்]*

விருது[1] *virudu,* பெ.(n.) 1. பட்டம்; title. *"தலம்புகழ் விருது" (திருவாலவா. 46, 9).* 2. கொடி; banner. *"கயல் விருதனங்கன்" (தனிப்பா.* i, 384, 33). 3. வெற்றிச் சின்னம்; trophy, badge of victory. *"பருதி..... விருது மேற்கொண்டுலாம் வேனில்" (கம்பரா. தாடகை. 5).* 4. குலவழி (வின்.); pedigree, genealogy. *'விருதுக்கோ வேட்டை யாடுவது?' (பழ.). 'விருது கூறிவந்து செடியில் நுழையலாமா?' (பழ.).*

விருது

வெல் – (வில்) – (விர்) – (வீறு) = வெற்றி *"வீறு பெற வோச்சி" (மதுரைக். 54)*

விர் → விருது. 1. வெற்றிப்பட்டம். *"தலம் புகழ் விருது" (திருவாலவா. 49,9).*

2. வெற்றிக் கொடி. *"கயல்விரு தனங்கன்" (தனிப்பாடல்)*

3. வெற்றிச் சின்னம். *"பருதி விருதுமேற் கொண்டுலாம் வேனில்" (கம்பரா. தாடகை.5)* வடவர் காட்டும் மூலம்:

வி–ருத் (d) = அழு, கரை, ஏங்கு, புலம்பு, துயர் கொண்டாடு. விருத = புகழ்ச்சிச் செய்யுள். பாடாண் பாட்டு, ஏத்துரை.

இரங்கற் செய்யுளாகிய கையறு நிலையில் ஒரு தலைவனை அல்லது வள்ளலைப் புகழ்ந்து பாடுவது வழக்கமேனும் அழுகைக் கருத்தில் வெற்றிக் கருத்துத் தோன்றுமா? என்பதை அறிஞர் ஆய்ந்து காண்க எனப் பாவாணர் (வ.மொ.வ.92) கூறுகிறார்.

தெ., க. பிருது; **Ma.** virutu; **Tu.** birdu; **Te.** birudamu.

**விருது**[2] *virudu,* பெ.(n.) நோன்பு (வின்.); religious vow.

**விருதுக்கொடி** *virudu-k-kodi,* பெ.(n.) பிறர்க்கில்லாச் சிறப்பை அறிவித்தற்குரிய கொடி; distinguishing ensign or banner.

*[விருது + கொடி]*

**விருதுகட்டு-தல்** *virudu-kattu-,* 5 செ.கு.வி. (v.i.) நினைப்பளவுக் கொள்ளுதல்; to determine, resolve firmly, as on a course of action. *"அட்டசித்தியு நலன்பருக்கருள விருதுகட்டியபொ னன்னமே" (தாயு. அகிலா. 1).*

*[விருது + கட்டு-,]*

**விருதுகாளம்** *virudu-kāḷam,* பெ.(n.) வெற்றிக் குறியாகிய காளம் (வின்.); trumpet of victory.

*[விருது + காளம்]*

**விருதெழுத்து** *virudeḻuttu,* பெ.(n.) விருதாகக் கொள்ளும் மொழி (பாண்டிச்.); motto.

மறுவ. காரணமொழி.

*[விருது + எழுத்து]*

**விருந்தம்**[1] *virundam,* பெ.(n.) 1. பூ பழம் முதலியவற்றின் காம்பு (தைலவ.); footstalk of leaves, flowers or fruits. 2. வேம்பு (சங்.அக.); margosa. 3. பானை முதலியவற்றை வைக்கும் பாதம் (யாழ்.அக.); stand for keeping pots, etc.

**விருந்தம்**[2] *virundam,* பெ.(n.) 1. உறவின் முறை (சூடா.); circle of relatives. *'அவர் விருந்தங்களுக்கும்'* (E.I.XXI.188). 2. விலங்கின் கூட்டம் (வின்.); herd, flock. 3. குவியல் (யாழ்.அக.); heap.

**விருந்தம்**[3] *virundam,* பெ.(n.) விருந்தனை (சூடா.) பார்க்க; see *virundaṉai.*

*[விருந்து → விருந்தம் (வே.க.120)]*

**விருந்தமர்க்களம்** *virundamarkkaḷam,* பெ.(n.) விருந்தாரவாரம் (வின்.); stir and bustle of a feast.

*[விருந்து + அமர்க்களம்]*

**விருந்தர்** *virundar,* பெ.(n.) விருந்தினன் பார்க்க; see *virundiṉaṉ.*

*[விருந்து → விருந்தர்]*

**விருந்தனை** *virundaṉai,* பெ.(n.) விருந் தோம்பும் மனைவி (பிங்.); wife.

*[விருந்து → விருந்தனை (வே.க.120)]*

**விருந்தாகம்** *virundāgam,* பெ.(n.) சேம்பு (மூ.அ.); Indian kales.

**விருந்தாட்டு** *virundāṭṭu,* பெ.(n.) 1. விருந்தளிக்கை; giving feasts, feasting. 2. ஆட்டைத் திருவிழா (சிலப். 6, 4, உரை); annual festival.

*[விருந்து + ஆட்டு = பெயரீறு]*

**விருந்தாடி** *virundāḍi,* பெ.(n.) விருந்தாளி; guest.

*[விருந்தாடு → விருந்தாடி] (வே.க.120)*

**விருந்தாடு-தல்** *virundāḍu-,* 5 செ.கு.வி. (v.i.) ஒரு வீட்டிற்கு விருந்தாகப் போதல் (சென்னை); to go as a guest.

*[விருந்து + ஆடு-,]*

விருந்தாரம் *virundāram,* பெ.(n.) 1. அழகு; beauty. 2. மேன்மை; excellence.

*[விருந்து + ஆரம்]*

விருந்தாளி *virundāḷi,* பெ.(n.) விருந்தினன் (வின்.); guest.

*[விருந்து + ஆளி ⁷]*

விருந்தாற்றுதல் *virundāṟṟu-,* 9 செ.கு.வி. (v.i.) விருந்திடு-, (ஐங்குறு. 1, உரை) பார்க்க; see *virundiḍu.*

*[விருந்து + ஆற்று-,]*

விருந்திடு-தல் *virundiḍu-,* 20 செ.கு.வி. (v.i.) நண்பர்க்கு உணவளித்து பணிவிடை செய்தல்; to give a feast, to show hospitality.

*[விருந்து + இடு-,]*

விருந்தினன் *virundinaṉ,* பெ.(n.) 1. புதியவன்; newcomer. *"விருந்தின னிவனு மன்றி" (சீவக. 1647).* 2. விருந்தினர்; guest. *"தான்போய் விருந்தின னாதலே நன்று" (நாலடி, 286).*

*[விருந்து → விருந்தினன்]*

விருந்து *virundu,* பெ.(n.) 1. விருந்தினர் முதலியோர்க்கு உணவளித்துப் பணிவிடை செய்தல்; feast, banquet *"யாதுசெய் வேன்கொல் விருந்து" (குறள், 1211).* 2. விருந்தினர்; guest. *"விருந்துகண் டொளிக்கும் திருந்தா வாழ்க்கை" (புறநா. 266).* 3. புதியவன்; newcomer. *"விருந்தா யடை குறுவார் விண்" (பு.வெ. 3, 12).* 4. புதுமை; newness, freshness. *"விருந்து புனலயர" (பரிபா. 6, 40).* 5. நூலுக்குரிய எண்வகை வனப்புக்களுளொன்று (தொல். பொ. 551); poetic composition in a new style. *'விருந்திட்டுப் பகை தேடினாற் போல' (பழ.). 'விருந்திலோர்க்கு இல்லைப் பொருந்திய ஒழுக்கம்' (பழ.). 'விருந்தில்லாச் சோறு மருந்து' (பழ.). 'விருந்தைப் பண்ணிப் பொருந்தப் பண்ணு' (பழ.). 'விருந்தும் மருந்தும் மூன்று நாளைக்கு' (பழ.).*

தெ. விந்து; ம. விருந்நு; **Ka.** birdu; **Tu.** binne; **Go.** *wartōl*; **Kui**. breenju.

*[விள் → விர் → விரு → விருந்து (வே.க.120)]*

விருந்துக்கூடம் *virundu-k-kūḍam,* பெ.(n.) விருந்தினரை வரவேற்கும் மாளிகைப் பகுதி (கட்டட. நாமா. 1); banqueting hall.

*[விருந்து + கூடம்]*

விருந்துசொல்(லு)-தல் *virundu-šol-,* 8 செ.குன்றாவி. (v.t.) விருந்துக்கழைத்தல்; to invite to a feast.

*[விருந்து + சொல்-,]*

விருந்துவை-த்தல் *virundu-vai-,* 4 செ.கு.வி. (v.i.) விருந்தூண் அளித்தல் (இ.வ); to give a feast.

*[விருந்து + வை-,]*

விருந்தூட்டு *virundūṭṭu,* பெ.(n.) விருந்தினருக்கு உணவளிக்கை; feeding of guests. *"இவ்விருந் தூட்டு முட்டில்"* (S.I.I.iii.13).

*[விருந்து + ஊட்டு]*

விருந்தை *virundai,* பெ.(n.) துளசி (மூ.அ.); sacred basil.

விருந்தோம்பல் *virundōmbal,* பெ.(n.) புதிதாக வருபவரை உண்டி முதலியவற்றால் வரவேற்றல் (குறள்.); welcoming and

entertaining guests. *"இருந்தோம்பி இல்வாழ்வது எல்லாம் விருந்தோம்பி வேளாண்மை செய்தற் பொருட்டு" (குறள், 81).*

*[விருந்து + ஓம்பு → ஓம்பல்]*

விருந்தோர் *virundōr,* பெ.(n.) 1. புதியவர் (சூடா.); newcomers. 2. விருந்தினர்; guests.

*[விருந்து → விருந்தோர்]*

விருப்பம் *viruppam,* பெ.(n.) 1. விருப்பம் (சூடா.); desire, liking. 2. அன்பு; love, affection. 3. பற்று (பிங்.); attachment. *'விருப்பத்தினால் ஆகாதது வீம்பினால் ஆகுமா?' (பழ.).*

ம. விரும்புக.

*[விரும்பு → விருப்பு → விருப்பம் (வே.க.120)]*

விருப்பன் *viruppan,* பெ.(n.) 1. விருப்ப முள்ளவன்; one who has desires. 2. அன்புள்ளவன்; one who likes, lover. *"திருப்பனையூரில் விருப்ப னாகியும்" (திருவாச. 2, 87).*

*[விருப்பு → விருப்பம் →விருப்பன்]*

விருப்பிள-த்தல் *viruppiḷa-,* 3 செ.கு.வி. (v.i.) நிலம் வெடித்தல்; to be split in the land.

விருப்பு *viruppu,* பெ.(n.) விருப்பம் பார்க்க; see *viruppam. "விருப்பறாச் சுற்றம்" (குறள், 522).*

*[விரும்பு → விருப்பு] (வே.க.100)*

விருப்புவெறுப்பு *viruppu-veṟuppu,* பெ.(n.) வேண்டுதல் வேண்டாமை; desire and aversion, like and dislike. *"வேண்டுதல் வேண்டாமையிலான்" (குறள், 4).*

*[விருப்பு + வெறுப்பு]*

விருபன் *viruban,* பெ.(n.) வெள்ளெலி (சது.); a kind of rat.

*[இரும்பன் → விருபன்]*

விரும்பன் *virumban,* பெ.(n.) விருப்பன் பார்க்க; see *viruppan. "துறையூர் விரும்பா" (தேவா. 1005, 4).*

*[விரும்பு → விரும்பன்]*

விரும்பார் *virumbār,* பெ.(n.) பகைவர்; enemies. *"விரும்பா ரமரிடை வெல்போர் வழுதி" (பு.வெ. 10, 2, கொளு.).*

*[விரும்பு + ஆ (எதிர்மறை) + ஆர்]*

விரும்பு-தல் *virumbu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. விருப்பப்படுதல்; to wish, long for, to covet, to love, like. *"நனிவிரும்பு தாளாண்மை நீருமமிழ் தாய்விடும்" (நாலடி, 200).* 2. அழுத்தமாய்க் கருதுதல் (வின்.); to think intensely of.

**Mu**. virumpuka.

*[விள் → விர் → விரு → விரும்பு-, (வே.க.120)]*

விருமதரு *viruma-taru,* பெ.(n.) மரவகை (பதார்த்த. 212); battle of plassey tree.

மறுவ. புரசு.

விருமமூலி *viruma-mūli,* பெ.(n.) பூடுவகை (சீவக. 2703, உரை); a prostrate herb.

விருவிரு-த்தல் *viruviru-,* 4 செ.கு.வி. (v.i.) 1. கடுத்தல்; to tingle with pain. 2. காமம் முதலியவற்றால் உடலூருதல்; to itch with sensual desire. *"மோகமயக்கத்தான் மேல் விரு விருக்கும்"* (தனிப்பா. i, 329, 31). 3. உறைப்பாயிருத்தல்; to be peppery in

taste. 4. சினத்தாற் பரபரத்தல்; to get flurried due to angry mood. 5. விரைதல்; to be in a hurry.

விருவிருப்பு *viruviruppu,* பெ.(n.) 1. கடுப்பு; tingling sensation. 2. காமம் முதலிய வற்றால் உடலூருகை; itching with sensual desire. 3. உறைப்பு; pungent, peppery taste. 4. சினத்தாலுண்டாம் பரபரப்பு; hurry activity due to angry. 5. விரைவு; haste, hurry.

*[விருவிரு-, → விருவிருப்பு]*

விருவிரெனல் *viruvirenal,* பெ.(n.) 1. கடுப்புக் குறிப்பு; tingling sensation. 2. காமம் முதலியவற்றால் உடலூருதற் குறிப்பு; itching with sensual desire. 3. உறைப்பாயிருத்தற் குறிப்பு; being peppery in taste. 4. சினத்தாலுண்டாகும் பரபரப்புக் குறிப்பு; being in a flurry owing to anger. 5. விரைவுக் குறிப்பு; hurrying.

*[விருவிரு + எனல்]*

விருவு *viruvu,* பெ.(n.) நிலச் சிறுவெடிப்பு; a crack in the earth.

*[விள் → விரு → விருவு] (மு.தா.100)*

விருவெட்டு *viru-vettu,* பெ.(n.) கருங்காரை வகை (L.); black honey thorn.

மறுவ. நக்கணி.

விருளை *virulai,* பெ.(n.) கடிவாளப் பூண் (பிங்.); ornamental knob or ring of a bridle.

விரை[1]-த்தல் *virai-,* 11 செ.கு.வி. (v.i.) விறை[2] பார்க்க; see *virai.*

விரை[2]-தல் *virai-,* 12 செ.கு.வி. (v.i.) 1. வேகமாதல்; to be speedy, swift, rapid. *"தன்னை வியந்தான் விரைந்து கெடும்" (குறள்.474).* 2. பதைத்தல்; to hurry, hasten. 3. சினங்கொள்ளுதல் (வின்.); to be importunate, intent, eager. 4. மனங் கலங்குதல்; to be perturbed, disturbed in mind. *"விரையாது நின்றான்" (சீவக. 513).*

**Ma.** Virayuka; **To.** Pern; **Ka.** beragu; **Kod.** beria; **Tu.** birsu.

விரை[3] *virai,* பெ.(n.) 1. மணம் (சூடா.); odour, fragrance. *"விரைசெறி கமலப் போதில் வீற்றிருந் தருளுஞ் செல்வன்" (கந்தபு. திருவவ. 100).* 2. கோட்டம், துருக்கம், தகரம், அகில், சந்தனம் என்ற ஐவகை நறுமணப் பண்டம்; perfumes, five in number, viz. *kōttam, turukkam, tagaram, agil, šandanam. "பத்துத் துவரினு மைந்து விரையினும்" (சிலப். 6, 79).* 3. நறும்புகை (சூடா.); incense. 4. கலவைச் சாந்து (சூடா.); sandal mized with perfumes. 5. பூந்தேன்; honey of flowers. *"விரைததும்பு பூம்பிண்டி" (சீவக. 1467).* 6. மலர்; flower, blossom. *"விரையுறு கடியின்" (ஞானா. 57, 43.).*

விரை[4]-த்தல் *virai-,* 11 செ.கு.வி. (v.i.) மணங்கமழ்தல்; to be fragrant, to emit perfumes. *"விரைக்குந் தீம்புகை" (காஞ்சிப்பு. இருபத். 182).*

விரை[5] *virai,* பெ.(n.) 1. விதை; seed, as of plants. *"விரை வித்தாமலே விளையும்" (வரத. பாகவத. நாரசிங்க. 105).* 2. வித்து மூலம் (அண்ட பீசம்); testicle. *'விரை ஒன்று போடச் சுரை ஒன்று முளைக்குமா?' (பழ.)*

ம. விர.

*[விதை → விரை]*

**விரை[6]-த்தல்** *virai,* 11 செ.குன்றாவி. (v.t.) 1. விதைத்தல்; to sow. 2. பரவச் செய்தல்; to spread abroad, diseminate. *'செய்தியை ஊரெங்கும் விரைத்தான்'.*

ம. விர.

*[விதை → விரை]*

**விரைக்கரும்பு** *virai-k-karumbu,* பெ.(n.) நடுதற்குரிய கரும்பு; sugarcane for planting.

*[விதை → விரை + கரும்பு]*

**விரைக்காய்** *virai-k-kāi,* பெ.(n.) 1. கறிக்கு உதவாது விதைக்குப் பயன்படும் முற்றற்காய்; fruit set apart for obtaining seeds. 2. விரை[5], 2 பார்க்க; see *virai.*

*[விரை + காய்]*

**விரைக்குவிடு-தல்** *viraikku-viḍu-,* 18 செ. குன்றாவி. (v.t.) விரைக்குதவுமாறு கொடி, மரங்களிற் காய்களை முற்றவிடுதல்; to allow set apart berries, fruits, etc. to ripen on the plant itself for obtaining seeds.

*[விதைக்கு → விரைக்கு + விடு-,]*

**விரைக்கொட்டை** *virai-k-koṭṭai,* பெ.(n.) 1. நிலக்கடலை மணி; groundnut. 2. விரை[5], 2 பார்க்க; see *virai.*

*[விதைக்கொட்டை → விரைக்கொட்டை]*

**விரைக்கோட்டை** *virai-k-kōṭṭai,* பெ.(n.) 1. ஒரு கோட்டை விதை விதைத்தற்குரிய நிலவளவு (C.G.); extent of land computed by one *kōṭṭai* of seed required to be sown in it = 1.62 acres. 2. விதைப் பதற்குரிய தவசத்தை உள்ளடக்கிச் சுற்றிக்கட்டிய வைக்கோற்கட்டு (திவ். திருமாலை, 30, வ்யா.); bundle of straw containing seed-grains of paddy. 3. விதைப்பை; scrotum.

*[விதைக்கோட்டை → விரைக்கோட்டை]*

**விரைகால்** *virai-kāl,* பெ.(n.) விதைத்தற்குரிய நிலம்; land fit for sowing.

*[விதை → விரை + கால்]*

**விரைசொல்** *virai-šol,* பெ.(n.) விரைவைக் குறிக்கும் அடுக்குச் சொல்; word repeated to indicate haste. *"விரைசொல் லடுக்கே மூன்று வரம்பாகும்" (தொல். சொல். 424).*

*[விரை[2] + சொல்]*

**விரைதெளி[1]-த்தல்** *virai-teḷi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. நாற்றுக்காக விதையிடுதல்; to sow seeds for raising seedlings. 2. அறுகும் அரிசியும் இடுதல்; to sprinkle a mixture of rice and cynodon grass, as on a newly married couple. *"மங்கல வச்சுதந் தெளித்து ..... வாழ்த்தினர்" (சீவக. 2411).*

*[விதை → விரை + தெளி-,]*

**விரைதெளி[2]** *virai-teḷi,* பெ.(n.) விதை முளைக்க வித்திடுகை (இ.வ); sowing of seeds.

*[விதை → விரை + தெளி]*

**விரைநாசம்** *virai-nāšam,* பெ.(n.) பயிர் முற்றும் அழிகை; complete or total ruin of crops.

மறுவ. விதைப்பழுது, பதர்.

*[விரை + நாசம்]*

**விரைநோய்** *virai-nōy,* பெ.(n.) விரைவாதம் (பைஷஜ.) பார்க்க; see *virai-vādam.*

*[விரை + நோய்]*

**விரைப்பண்டம்** *virai-p-paṇḍam,* பெ.(n.) நறுமணப்பண்டம்; aromatic substance.

*[விரை[3] + பண்டம் [1]]*

**விரைப்பாடு** *virai-p-pāḍu,* பெ.(n.) விதைப்பாடு பார்க்க; see *vidai-p-pāḍu.*

*[விரை[5] + படு → பாடு]*

**விரைப்பு[1]** *viraippu,* பெ.(n.) விதைப்பு (வின்.) பார்க்க; see *vidaippu.*

*[விரை → விரைப்பு]*

**விரைப்பு[2]** *viraippu,* பெ.(n.) விறைப்பு பார்க்க; see *viṟaippu.*

*[விரை → விரைப்பு]*

**விரைபோடு-தல்** *virai-pōḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. விதையிடுதல்; to sow seed. 2. அலுவல் தொடங்குதல்; to make a beginning, to commence.

மறுவ. வித்திடு-தல்

*[விரை + போடு-,]*

**விரைமுந்திரிகை** *virai-mundirigai,* பெ.(n.) மரவகை; cashew tree.

*[விரை + முந்திரிகை]*

**விரையடி[1]-த்தல்** *virai-y-aḍi-,* 4 செ. குன்றாவி.(v.t.) காளை முதலியவற்றின் விதைப் பையிலுள்ள விதையை நசுக்கி ஆண்மை இல்லாமற் செய்தல்; to castrate.

மறுவ. விதைவாங்குதல்

*[விதை → விரை + அடி-,]*

**விரையடி[2]** *virai-y-aḍi,* பெ.(n.) 1. விதைப் பாடு பார்க்க; see *vidai-p-pāḍu.* 2. நில வளவு வகை (Rd.); a measure of land = 1/8 acre.

*[விரை + அடி]*

**விரையாக்கலி** *viraiyākkali,* பெ.(n.) 1. சிவபிரானது திருவாணை; the sacred command of *śiva.* *"விரையாக்கலி யெனு மாணையும்" (பதினொ. கோயி. 4). "எத்திக்கினும் விரையாக்கலி யிவர்வித்து" (தணிகைப்பு. பிரம. 41).* 2. சிவபிரானை முன்னிட்டுச் செய்யும் ஆணை வகை. (பெரியபு. கோப்புலி. 4); an oath calling on *śiva* to witness.

**விரையிடு-தல்** *virai-y-iḍu-,* 20 செ.கு.வி. (v.i.) விரைபோடு-, பார்க்க; see *virai-pōḍu.*

*[விதை → விரை + இடு-,]*

**விரையெடு-த்தல்** *virai-y-eḍu-,* 4 செ. குன்றாவி.(v.t.) விதையடி-, பார்க்க; see *vidai-y-aḍi.*

*[விதை → விரை + எடு-,]*

**விரையெடுத்தவன்** *virai-y-eḍuttavaṉ,* பெ.(n.) 1. விரையெடுக்கப்பட்டவன்; eunuch, castrated man. 2. வலியும் சுறுசுறுப்பு முள்ளவன்; strong and active man. 3. முதிர்ந்த பட்டறிவுள்ளவன்; man of ripe experience.

*[விதை → விரை + எடுத்தவன்]*

**விரைவழி-த்தல்** *virai-vaḻi-,* 4 செ.கு.வி. (v.i.) நறுமணப்பண்டம் பூசுதல்; to apply aromatic unguents. *"விரைவழித் திளைய ரெல்லாம்" (சீவக. 699).*

*[விரை + வழி-,]

**விரைவாங்கு-தல்** *virai-vāṅgu-,* 5 செ. குன்றாவி.(v.t.) விதையடி; to castrate.

*[விதை → விரை + வாங்கு-,]*

**விரைவாதம்** *virai-vādam,* பெ.(n.) 1. குடற்சரிவு; rupture, scrotal hernia. 2. விதைப்பெருக்கம் (பைஷஜ. 171); swelled, testicle, orchitis. 3. நீர்ச்சூலை; dropsy of the testicle, hydrocele. 4. விதை நோய் வகை; inflammation of the epididymis edidiymitis.

மறுவ. விரைவீக்கம்.

*[விதை → விரை+வாதம்]*

**Skt.** *vādam* > த. வாதம்.

**விரைவிடு-தல்** *virai-viḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) விரைக்குவிடு-, பார்க்க; see *viraikku-viḍu-.*

*[விரை + விடு-,]*

**விரைவித்து** *virai-vittu,* பெ.(n.) விதைப்பதற்கென வைத்துள்ள வித்து; seed-grain.

மறுவ. விதைப்பண்டம்.

*[விதை → விரை + வித்து]*

**விரைவினர்** *viraivinar,* பெ.(n.) செயன் முனைப்புடையவர்; persons swift in action. *"வெல்வான் விரைவினர் துவன்றி" (சீவக. 615).*

*[விரை → விரைவு + இன் + அர். 'இன்' சாரியை, 'அர்' பலர்பால் வினைமுற்று ஈறு]*

**விரைவீக்கம்** *virai-vīkkam,* பெ.(n.) விரைவாதம் பார்க்க; see *virai-vādam.*

*[விதை → விரை + வீக்கம்]*

**விரைவு** *viraivu,* பெ.(n.) 1. சடுதி (வேகம்); swiftness, celerity, despatch. *"விரைவதின் வருகென" (பெருங். இலாவாண 5, 4).* 2. வெம்மை (அக.நி.); heat, warmth. 3. வேண்டுகை (அக.நி.); request. 4. உதவி (அரு.நி.); hospitality.

*[விரை → விரைவு]*

**விரைவை-த்தல்** *virai-vai-,* 4 செ.கு.வி. (v.i.) விதைப்பதற்கு நெல்லை அணியப்படுத்துதல்; to prepare paddy seeds for sowing.

*[விதை → விரை[5] + வை-,]*

**வில்[1]-தல்(விற்றல்)** *vil-,* 10 செ.குன்றாவி. (v.t.) 1. விலை செய்தல்; to sell, put on sale. *"விற்றுக்கோ ட்டக்க துடைத்து" (குறள், 220).*

தெ. வில்சு; க. பில்; ம. வில்; **To.** pil; **Kod.** bele; **Tu.** *bile*; **Te.** viluva.

**வில்[2]-தல்** *vil-,* 4 செ.கு.வி.(v.i.) விற்கப் படுதல்; to be sold. *"அது என்ன விலைக்கு விற்கிறது" (வின்.).*

**To.** pil; **Ka.** bill, bili; **Kod.** bele; **Tu.** *bilē*; **Te.** vil(u)cu, viluva,vela.

**வில்[3]** *vil,* பெ.(n.) வில் வடிவிலுள்ள வாச்சியவகை; a bow-like musical instrument. *"பாடுகின்ற வில்லா முரசாம்" (தெய்வச். விறலி விடு. 397).*

**வில்[4]** *vil,* பெ.(n.) 1. அம்பு எய்தற்குரிய கருவி; bow. *"வில்லும் வேலும்" (தொல். பொ. 638).* 2. வில்லின் நாண் (இலக். வி. 608, உரை, பக். 574); string of the bow. 3. விற்கிடை பார்க்க; see *vir̠-kiḍai.* *"நொடிப்பின் மாத்திரை நூற்றுவில் லேகுவ" (சீவக. 1773).* 4. வானவில்; rainbow. *"வரைசேர்பு வில்கிடந்தன்ன கொடிய" (நெடுநல். 109).*

5. மூலநாள் (பிங்.); the 19th naksatra. 6. ஒளி; light brilliance. *"தண்ணாரம் வில்விலங்க" (சீவக. 2959). 'வில்லடியால் சாகாதது கல்லடியால் சாகுமா?' (பழ.). 'வில்லம்போ சொல்லம்போ' (பழ.). 'வில் இல்லாதவன் அம்பு தேடுவானேன்' (பழ.). 'வில்லுக் குனியாது எய்தால், விலகாது எதிர்த்த பகை' (பழ.).*

தெ. வில்லு; க. பில்; ம. வில்; **Kod.** billi; **Tu.** billu; **Kol.** vil; **Pa.** vil; **Ga.** vind; **Go.** vil; **Koṇḍa.** vil, **Kui**. viḍu; **Kuwi.** *vellū*; **Br.** bil; **Ko.** vily.

வில்கண்டம் *vil-kaṇḍam,* பெ.(n.) 1. வில்லண்டம் 1, 2 பார்க்க; see *villaṇḍam.* 2. முட்டுப்பாடு; obstruction.

*[வில் + கண்டம்]*

வில்சுருள் *vil-šuruḷ,* பெ.(n.) வண்டிகளில் அதிர்ச்சியைத் தாங்கும் அமைப்பு; spring.

*[வில் + சுருள்]*

கட்டை வண்டியில் செல்வதை விட வில் வண்டியில் செல்லுவது ஏந்தாக இருக்கும். அதற்குக் காரணம் எளிதாக விளங்கும். சக்கரங்கள் தரையில் உருளும் போது ஏற்படுகின்ற அதிர்ச்சிகளைப் பெரும்பாலும் வில் என்ற உறுப்புத் தாங்கிக் கொள்கிறது. மோட்டார் வண்டி, ரெயில் வண்டி முதலியவற்றிலும் வில் உண்டு. அழுத்தியோ அல்லது இழுத்தோ விட்டுவிட்டால் முன் இருந்த நிலையை அடையும் தன்மையுள்ள உலோகத்தகடு அல்லது கம்பிச்சுருள் வில் அல்லது வில் சுருள் எனப்படும். எஃகு, வெண்கலம், இரும்பு, உலோகக் கலவைகளுள் சில ஆகியவை வில் சுருள் செய்ய பயன்படுபவை. மீள் சக்தி (Elasticity) உடைய பொருள்களே வில் சுருள் செய்ய ஏற்றவை.

கம்பியைச் சுருளாக்கி, ஆற்றிப் பதனிட்டு (Annel) அதே நிலையில் கடினப்படுத்தி வில் சுருள் செய்யப்படுகிறது.

வில்மாடம் *vil-māḍam,* பெ.(n.) விற்போல் வளைந்த கட்டடப் பகுதி; vault.

*[வில் + மாடம்]*

வில்யாழ் *vil-yāḷ,* பெ.(n.) வில்வடிவமான யாழ்வகை; a kind of bow-shaped lute. *"வில்யா ழிசைக்கும் விரலெறி குறிஞ்சி" (பெரும்பாண். 182).*

*[வில் + யாழ்]*



வில்லகவிரல் *vil-l-aga-viral,* பெ.(n.) விற்பிடிப்பில் இணைந்து செறிந்த விரல்; the finger that holds the bow, as pressed tightly. *"வில்லகவிரலிற் பொருந்தி" (குறுந். 370).*

*[வில் + அகம் + விரல்]*

வில்லகவிரலினார் *villaga-viraliṉār,* பெ.(n.) கடைக்கழகக்காலப் புலவர்களில் ஒருவர்; a sangam poet.

கை நெகிழாமல் தழுவிய நிலைக்கு வில்லைப் பிடித்த விரல்களை உவமையாக இவர் கூறியிருக்கும் சிறப்பினால் வில்லக விரலினார் என்னும் பெயர் பெற்றார். (குறுந். 370) இவ்வுவமை, "வீட்டிடந்தோறும் வில்லக விரல்போல் பொருந்தி நின்று ஒருங்கெதிர் கொள்கென்று" (சீவக. 2110) என்று திருத்தக்க தேவராலும் எடுத்தாளப்பெற்றது.

**வில்லங்கக்காரன்** *villaṅga-k-kāraṉ,* பெ.(n.) வழக்காடுபவன்; one who raises a dispute.

*[வில்லங்கம் + காரன்.]*

**வில்லங்கசுத்தி** *villaṅga-šutti,* பெ.(n.) 1. அடைமானம் முதலிய பந்தகம் இன்மை; absence of charge or encumbrnce on properties. 2. சொத்துரிமையில் குற்றமின்மை; absence of defect in tittle to properties.

*[வில்லங்கம் + **Skt.** suddhi > த. சுத்தி]*

**வில்லங்கப்படு-தல்** *villaṅga-p-paḍu,* 20 செ.கு.வி. (v.i.) 1. தொந்தரவுக்குள்ளாதல்; to be troubled. 2. அடைமானம் முதலிய பந்தகத்திற்கு உட்படுதல்; to be subject to a charge or encumbrance, as property.

*[வில்லங்கம் + படு-,]*

**வில்லங்கம்** *villaṅgam,* பெ.(n.) 1. தடை; bar, impediment, difficulty. 2. துன்பம் (தனிப்பா. 1, 387, 39); trouble distress. 3. அடைமானம் முதலிய பந்தகம்; charge or encumbrance on properties. 4. சொத்துரிமையிலுள்ள குற்றம்; defect in title to properties. 5. சிக்கல்; contest, dispute, claim. 6. வில்கண்டம் (யாழ்.அக.) பார்க்க; see *vilkaṇḍam.*

**Ma.** villrikam; **Ka.** vilaga.

*[வில் + அடி]*

**வில்லடி** *villaḍi,* பெ.(n.) ஏற்றுமதி செய்யப்பட்ட சரக்கின் குறிப்பு (C.G.); bill of landing.

*[வில் + அடி]*

**வில்லடிக்குறி** *vil-l-aḍi-k-kuṟi,* பெ.(n.) மழை பெய்தற்கு அறிகுறியாகிய வானவில் (தஞ்.சர.i, 311); rainbow, as portending rain.

*[வில் + அடி + குறி]*



**வில்லடியம்** *villaḍiyam,* பெ.(n.) வில்லடி **(C.G.)** பார்க்க; see *villaḍi.*

**வில்லடிவழக்கு** *villaḍi-vaḻakku,* பெ.(n.) அலைக்கழிப்பான வழக்கு; troublesome dispute.

*[வல்லடி → வில்லடி + வழக்கு]*

**வில்லடை** *villaḍai,* பெ.(n.) 1. இடையூறு; adversity, distress. *'எனக்கு அநேக வில்லடை வந்திருக்கிறது'.* 2. தடை (வின்.); impediment. 3. பகைமை (யாழ்.அக.); enmity.

*[ஒருகா. வில்கண்டம் → வில்லடை]*

**வில்லண்டம்** *villaṇḍam,* பெ.(n.) 1. வலுக்கட்டாயம் (யாழ்ப்.); force, compulsion. 2. வில்கண்டம், 2 (யாழ்.அக.) பார்க்க; see *vilkaṇḍam.*

*[வில்கண்டம் → வில்லண்டம்]*

**வில்லம்¹** *villam,* பெ.(n.) வில்வம் பார்க்க; see *vilvam. "வடிவுடை வில்லம்" (திருமந். 1720).*

**வில்லம்²** *villam,* பெ.(n.) பெருங்காயம் (யாழ்.அக.); asafoetida.

**வில்லம்³** *villam,* பெ.(n.) குகை (யாழ்.அக.); cave.

*[புல் → பில் → பிலம் → (பில்லம்) → வில்லம்]*

**வில்லரணம்** *vil-l-araṇam,* பெ.(n.) விற்படையாலாகிய காவல்; policing by bowmen or archers; fence of bows. *"வில்லரண மரணமாக" (முல்லைப். 42).*

*[வில் + அரணம்]*

**வில்லவன்** *villavaṉ,* பெ.(n.) 1. சேரன்; *šēra* king, as having a banner with the figure of a bow. *"வில்லவன் வந்தான்" (சிலப். 27, 238) (திவா.);* 2. கரும்பு விற்கொண்ட காமன்; kāma, as having a sugarcane bow. *"வில்லவன் விழவினுள்" (கலித். 35).*

*[வில் → வில்லவன்]*

**வில்லன்** *villaṉ,* பெ.(n.) வில்லி¹, 1, 5, 6. பார்க்க; see *villi*¹1,5,6. *"தொடைமாண்ட கண்ணியன் வில்லன்" (கலித்.37).*

*[வில் → வில்லன்]*

**வில்லாண்மை** *vil-l-āṇmai,* பெ.(n.) விற்றிறமை (வின்.); skill or expertise in archery.

*[வில் + ஆண்மை = ஆளுந்தன்மை]*

**வில்லார்** *villār,* பெ.(n.) 1. வில்லாளர்; bowmen. 2. வேடர்; hunters.

க. பில்லார்.

*[வில் → வில்லார்]*

**வில்லாள்** *villāḷ,* பெ.(n.) வில்லாளன் (புறநா. 168, உரை) பார்க்க; see *villāḷaṉ.*

க. பில்லாள்.

*[வில் + ஆள்]*

**வில்லாளன்** *vil-l-āḷaṉ,* பெ.(n.) விற்றொழிலில் வல்லவன்; archer, one skilled in archery, an expert archer. *"சரந்துரந்த வில்லாளனை" (திவ். பெரியாழ். 2, 1, 10).*

*[வில் + ஆள் → ஆளன்]*

**வில்லாளி** *villāḷi,* பெ.(n.) வில்லாளன் பார்க்க; see *villāḷaṉ.*

ஒ.நோ உழைப்பாளி, தொழிலாளி.

*[வில் + ஆள் → ஆளி]*

**வில்லி¹** *villi,* பெ.(n.) 1. வில்லாளன் பார்க்க; see *villāḷaṉ. "மும்மதிலெய்த வில்லி" (திருவாச. 9, 5).* 2. காமன் (பிங்.); *kāma.* 3. வீரபத்திரன் (பிங்.); virabhadra. 4. அருச்சுனன் (யாழ்.அக.); arjuna. 5. இருளன், 1 (கொ.வ.) பார்க்க; see *iruḷaṉ*, member of the *iruḷa* caste. 6. வேடன் (வின்.); hunter.

க. பில்லா.

*[வில் → வில்லி]*

**வில்லி²** *villi,* பெ.(n.) வில்லிபுத்தூராழ்வார், 2 பார்க்க; see *villiputtūr-āḻvār. "குறும்பியளவாய்க் காதைக் குடைந்து தோண்டி யெட்டினமட்டும் அறுப்பதற்கு வில்லியில்லை" (தமிழ்நா. 230).*

*[வில்லிபுத்தூரார் → வில்லி]*

**வில்லிங்கம்** *villiṅgam,* பெ.(n.) வில்லங்கம் (C.G.) பார்க்க; see *villaṅgam.*

**வில்லிடு-தல்** *villiḍu-,* 20 செ.கு.வி. (v.i.) ஒளி வீசுதல்; to shine, sparkle, flash. *"பொலஞ் செய் கோதை வில்லிட" (சிலப். 29, கந்துகவரி.)*

*[வில் + இடு-,]*

**வில்லிபாரதம்** *villi-bāradam,* பெ.(n.) வில்லிபுத்தூரார் ஆசிரிய மண்டிலப்பாவில் இயற்றிய மாபாரதநூல்; the epic poem *Mahā-bhārada* composed or framed in Tamil viruttam, by *villi-puttūrār.*

*[வில்லி + பாரதம்]*

**வில்லிபுத்தூர்** *villi-puttūr,* பெ.(n.) பெரியாழ்வாரும் ஆண்டாளும் தோன்றிய ஊர்; *śrīvilliputtūr,* the birth place of *Peri-y-āḻvār* and *Aṇḍāḷ.* *"வில்லிபுத்தூர் விட்டுசித்தன்" (திவ். திருப்பல். 12).*

**வில்லிபுத்தூரர்** *villi-puttūrar,* பெ.(n.) வில்லிபுத்தூராழ்வார் பார்க்க; see *villi-puttūrāḻvār.*

*[வில்லிபுத்தூர் + அர் = பெருமைப் பொருட் பின்னொட்டு]*

**வில்லிபுத்தூராழ்வார்** *villiputtūr-āḻvār,* பெ.(n.) 1. பெரியாழ்வார்; *periyāḻvār,* as born in *śrīvilliputtūr.* 2. 14-ஆம் நூற்றாண்டினரான தமிழ்ப்பாரத நூலாசிரியர்; a poet, the author of the Tamil *Mahā-bhārada,* 14th C.

மாபாரதத்தைத் தமிழில் பாடிப் புகழ் பெற்றவர். தென்னார்க்காடு மாவட்டத்தைச் சேர்ந்த திருமுனைப்பாடி நாட்டில் உள்ள சனியூரில் பிறந்தவர். வீரராகவன் என்பது இவருடைய தந்தையின் பெயர். இவர் மாலியக் குடும்பத்தில் பிறந்ததனால், ஆழ்வார்களுள் ஒருவராகிய வில்லிபுத்தூரார் என்று அழைக்கப்படும் பெரியாழ்வார் பெயரே இவருக்கு இடப்பட்டது.

இவருடைய வரலாற்றுக்கு அடிப்படையாயுள்ளது, இவருடைய மகனான வரந்தருவார் பாடிய சிறப்புப் பாயிரமே. அதன்படி அவர் பார்ப்பனர் என்றும், கல்வி கேள்விகளில் சிறந்து பல்வகைப்பட்ட தமிழ்ப் பாடல்களைப் பாடும் திறமை பெற்றவரென்றும், அதனால் தமிழ் நாட்டு மூவேந்தரும் இவருக்கு வரிசை விருது முதலியன வழங்கினார்களென்றும் அறியலாம். இவர் சமயத்தில் மாலியரென்பதை வரந்தருவார் பாயிரத்தாலும், பாரதத்தின் ஒவ்வொரு சருக்கத்தின் முதலிலுள்ள கடவுள் வணக்கச் செய்யுள்களாலும் அறியலாம். ஆனால் இவர் சிவனை வெறுப்பவர் அல்லர். சிவனைப் பற்றிப் பேச நேரிடும் இடங்களிலெல்லாம் அவரை உயர்வாகவே பேசுகிறார். இவ்வுண்மையைப் பதின்மூன்றாம் போர்ச் சருக்கத்திலும் அருச்சுனன் தவநிலைச் சருக்கத்திலும் காணலாம்.

இவருக்குப் புரவலனாக விளங்கியவன் வரபதி ஆட்கொண்டான் என்னும் அரசன். அவன் கொங்கர் குலத்தலைவனாய்த் திருமுனைப்பாடி நாட்டில் வக்கபாகை என்னும் ஊரிலிருந்து ஆட்சி செலுத்தியவன். அவன் இவரைப் பாரதக் கதையைத் தமிழில் செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டபடி இவரும் பாரதம் பாடினார் என்று வரந்தருவார் பாயிரத்தால் தெரிய வருகிறது. இந்த அரசனை வில்லி பல இடங்களில் புகழ்ந்து பாடி இருக்கிறார்.

*[வில்லிபுத்தூர் + ஆழ்வார்]*

**வில்லிமை** *villimai,* பெ.(n.) விற்றிறமை; skill or expertise in archery. *"மிறைத்தார் புரமெய்த வில்லிமை" (பதினொ. திருவேகம். திருவந். 59).*

மறுவ. வில்லாண்மை

*[வில் → வில்லிமை]*

**வில்லியடி** *villi-y-aḍi,* பெ.(n.) உள்ளங்கால் பதியாத அடிச்சுவடு (இ.வ.); indistinct footprint, as of a man of the Irula caste.

*[வில்லி[1] + அடி[3]]*

**வில்லியர்** *villiyar,* பெ.(n.) 1. வில்லார் (வின்.) பார்க்க; see *villār.* 2. நீலமலை முதலிய இடங்களில் வாழும் இருளர் என்னும் வேட்டுவ இனத்தினர்; *Iruḷas,* a tribe of hunters inhabiting the Nilgiris and the adjacent plains.

*[வில்லி → வில்லியர்]*

**வில்லியாதன்** *villi-y-ādaṉ,* பெ.(n.) திண்டிவனத்தருகிலுள்ள மாவிலங்கை என்ற நகரத்தில் வாழ்ந்த ஒரு தலைவன் (புறநா. 379); a chief of *māvilaṅgai* town near *tiṇḍivaṇam.*

*[வில்லி + ஆதன் ¹]*

**வில்லுகன்** *villugaṉ,* பெ.(n.) சிற்றாமுட்டி; a kind of medicinal herb.

*[வில்லி + ஆதன் ¹]*

**வில்லுப்பாட்டு** *villu-p-pāṭṭu,* பெ.(n.) கொடைவிழா முதலியவற்றில் வில்லடித்துப் பாடும் பாட்டு (நெல்லை.); song sung to the accompaniment of a vil, in *kōḍai* festival etc.

பொது மக்கள் மரபுவழிப் பாடி வருகிற பாடலைப் பல்வரிக் கூத்து என்பர் அடியார்க்கு நல்லார். வில்லுப்பாட்டை இதன் வகையிலே ஒன்று எனலாம். ஏனைய ஏற்றப்பாட்டு இறவைப் பாட்டிலும் வில்லடியாகிய இது வேறானது. சிற்றூர்த் தெய்வங்களின் திருவிழாக் காலங்களிலே முத்தாரம்மன், இசக்கி, நீலி, சங்கிலி, பூதத்தார், சாத்தன், சுடலைமாடன் கதைகள் வில்லடியுடன் பாடப்பெறும். மேலும், போரிலே இறந்த வீரர் வரலாறுகளும், கணவருடன் உடன்கட்டையேறி உயிர் நீத்த கற்புடை மனைவியர் வரலாறுகளும் வில்லடிக்குப் பொருளாகும். இவ்வினத்தில் சின்னத்தம்பி முத்துப்பாட்டன் கதைகள் பெரும் புகழ் பெற்றன.

பொதுமக்களிடையே பத்தி, கைம்மாறு கருதா உதவி, காதல், வீரம் முதலிய பெருங் குணங்களை வளர்க்க இக்கதைகள் பயன்படுகின்றன. உள்ளத்தின் உணர்ச்சிகளை வெளியிட மாந்தனுக்குக் கிடைத்த கருவிகளிலே வில்லடியும் ஒன்று. வில்லடியின் உறுப்புக்கள் பல. அவற்றுள் கதிரும், குடமும், உடுக்கும் முதன்மையானவை. கதிர் என்பது ஏறத்தாழ ஒன்பதடி நீளமும் 3 1/2 விரலக் கனமும் வாய்ந்த ஒரு கம்பு. இது கூந்தற்பனையின் வயிரம் பாய்ந்த அடிமரத்தால் ஆயது. இதன் முனைகள் இரண்டிலும் பொருந்தியிருக்கும் குப்பிகளைத் தோல் முறுக்காலமைந்த வடக்கயிற்றால் இழுத்துக் கட்டியிருப்பதால், கதிர் வில்போல வளைந்து காணப்படும். இந்த வில்லிலே வெண்கல வார்ப்பாலான சதங்கைகள் பொருந்தியிருக்கும். ஒருமண் குடத்தினுடைய கழுத்தின் புறத்திலே வில் கட்டப்படும். வைக்கோல் புரியாலாகிய புரிமணை மீது குடம் வைக்கப்படும்.

தோல் பட்டைகளாலான (பந்தடி மட்டை போன்ற) பத்தி கொண்டு குடத்தின் வாயிலே தட்டும்போது மதங்க (மிருதங்கம்) ஒலி போன்ற ஓசை தோன்றும். இதற்கு ஒத்து மதங்கம் போல ஒலிப்பது உடுக்கு. வெண்கல வார்ப்பாலாகிய உடுக்கையின் இருபக்கமும் மாட்டுச் சவ்வால் போர்த்தப்பட்டிருக்கும். வலப்பக்கச் சவ்விலே கைவிரலால் தட்டும் போது எழும்பும் ஒலிக்கு ஒத்து இடப்பக்கச் சவ்வு அதன் குறுக்கே கட்டியுள்ள வீணை என்ற குதிரைவால் மயிர்கள் மீது அதிர்ந்து விண் என்று ஒலிக்கும்.

வெண்கலக் கிண்கிணி பொருத்தப் பெற்ற வீசுகோல் இரண்டு கொண்டு வில்நாண் வடத்திலே சாடும் போது கிண்கிணியும் சதங்கைகளும் மாறிமாறி ஒலிக்கும். தாளக் கருவியாகப் பயன்படும் தாளத்தின் அடித்தாளம் இரும்பாலும் மேல்தாளம் வெண்கல வார்ப்பாலும் ஆனவை–தட்டுவதற்குச் சப்பளாக் கட்டைகளும் உண்டு.

புலவர் பாடும்போது வீசுகோலும் வில் நாணும் இயங்கா, ஏனைய தாளவரிசைகள் அடங்கி ஒலிக்கும். புலவர் பாடிய பாடலை வாங்கி உடன் அமர்ந்தோர் சேர்ந்து பாடும் போது அவர்கள் கையிலே உள்ள கருவிகள். குடம், உடுக்கு, சல்லரி (ஜால்ரா) கட்டை, வீசுகோல் முதலியன வியப்பான ஒற்றுமையுடனும் விரைவுடனும் இயங்கி இசை வெள்ளத்தைப் பெருக்கும்.

கதைப்போக்கிலே புதிய கட்டம் தொடங்கும் ஒவ்வொரு சமயத்திற்குத் தகுந்த விருப்பம், வெறி, கைநளிநயத்துடன் புலவர் பாடுவதால் கதை முழுவதும் உயிர்க்களைத் ததும்பி நிற்கும்.

(எ–டு) முத்துப்பாட்டன் கதை கலப்பு மண அடிப்படையில் அமைந்தது. பட்டன் பகடையின் பெண்களை மணந்து கொள்கிறான். மணமான அன்றிரவே தற்செயலாய் நேர்ந்த மாடுபிடி சண்டையில் இறந்து விடுகிறான். அவன் மனைவியராகிய பொம்மியும் திம்மியும்

தீப்பாய்கிறார்கள். இக்கதை வில்லுப்பாட்டில் சிறப்பாக அமைந்துள்ளது.

இக்காலத்தில் இக்கலை அருகி வந்தாலும் காலச் சூழ்நிலைக்கேற்ப எல்லாப் பொருள் நிலையிலும் கதைப் போக்கினை அமைத்துக் கொண்டு பாடுவோர் ஒருசிலர் உள்ளனர். இக்கலையை ஊக்குவிப்பது தமிழர்தம் மரபை வேரூன்றச் செய்வதாகும்.

*[வில் → வில்லு + பாட்டு]*



**வில்லுமன்** *villuman,* பெ.(n.) செடிவகை (மலை.); rose-coloured sticky mallow.

மறுவ. சிற்றாமுட்டி.

**வில்லுவம்** *villuvam,* பெ.(n.) வில்வம் 1 (பிங்.) பார்க்க; see *vilvam*, bael.

*[வில்வம் → வில்லுவம்]*

**வில்லுழு-தல்** *villulu-,* 1 செ.கு.வி. (v.i.) விற்போர் செய்து வாழ்தல்; to earn one's living as a bowman. *"வில்லுழு துண்மார்" (புறநா. 170).*

*[வில் + உழு-,]*

**வில்லுறுதி** *villurudi,* பெ.(n.) வில்லூர்திப் பட்டென்னும் ஒருவகைப் பட்டுத் துணி; a kind of silk cloth.

**வில்லூதிப்பட்டு** *villūdi-p-paṭṭu,* பெ.(n.) ஒருவகைத் துணி (வின்.); a kind of cloth.

*[வில்லூதி + பட்டு]*

**வில்லூன்றிப்புழு** *vil-l-ūṉṟi-p-puḻu,* பெ.(n.) உடலை மேலும் கீழுமாக நெளித்து வளைந்து வளைந்து செல்லும் ஒருவகைப் புழு (ஞான. 20, உரை); a kind of worm which moves in an undulating manner.

*[வில் + ஊன்றி + புழு]*



**வில்லேப்பாடு** *vil-l-ēppāḍu,* பெ.(n.) அம்பு விழும் எல்லை; the boundary where arrow falls. *"வில்லேப்பாட்டிடை யெவ்வெம் மருங்கினுந் தெரிவோற்கு" (பெருங். உஞ்சைக். 53, 68).*

*[வில் + ஏ + படு- ஏப்படு → ஏப்பாடு]*

**வில்லேருழவர்** *vil-l-ēr-uḻavar,* பெ.(n.) 1. வீரர்; warrior, brave soldier, bowmen. *"வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க சொல்லே ருழவர் பகை" (குறள், 872).* 2. வேடர்; hunters. *"கடுங்கணை வில்லேருழவர்.... மாமலை" (பு.வெ.12, இருபாற். 1).* 3. பாலை நில மாக்கள்; inhabitants of the desert tract. *"மாரி வளம் பெறா வில்லேருழவர்" (சிலப். 11, 210.).*

*[வில்லேருழவு → வில்லேருழவர்]*

**வில்லேருழவு** *vil-l-ēr-uḻavu,* பெ.(n.) விற்போர் செய்து வாழ்கை; profession of a

bowman. "வில்லேரு ழவினின் னல்லிசை" (புறநா. 371).

[வில் + ஏர் + உழவு]

**வில்லை[1]** *villai,* பெ.(n.) 1. வட்டமாயிருப்பது; that which is circular. 2. நறுமண வில்லை; scented tablet. 3. ஒட்டுத் துணி; patched cloth. 4. வில்லைமுருகு (வின்.) பார்க்க; *villai-murugu.* 5. ஊழியன் அணியும் வட்டமான மாழைத் தகடு; metal badge on a servant's belt. 6. தலையணி வகை; a kind of head-ornament. 7. வில்லைச் சாதம் பார்க்க; see *villai-c-cādam.*

[வல் → வில் → வில்லை]

**வில்லை[2]** *villai,* பெ.(n.) வில்வம் (யாழ்.அக.) பார்க்க; see *vilvam.*

[விள் → விள → விளவம் → விலவம் → வில்வம் → வில்லம் → வில்லை]

**வில்லை[3]** *villai,* பெ.(n.) வட்டமான துண்டு; round slice. "கைக் கரும்பை வில்லை செய்யக் காணேனான்" (அழகிய நம்பி யுலா. 148).

[வல் → வில் → வில்லை]

**வில்லைச்சாதம்** *villai-c-cādam,* பெ.(n.) கோயில்களிற் கிடைக்கும் கட்டிச் சோறு; ball of cooked rice-offering available in temples.

மறுவ. பட்டைச்சோறு.

[வில்லை[1] + **Skt.** *sādam* > த. சாதம்]

**வில்லைச்சேவகன்** *villai-c-cēvagaṉ,* பெ.(n.) 1. வில்லைத் தகடு அணிந்த ஊழியன்; liveried servant. 2. வட்டாட்சிப் பணியாளன் (இ.வ.); Taluk peon.

[வில்லை + **Skt.** *sēvak* > த. சேவகன்]

**வில்லைமுருகு** *villai-murugu,* பெ.(n.) காதணிவகை (வின்.); a kind of ear-ornament.

[வில்லை + முருகு]

**வில்லோர்** *villōr,* பெ.(n.) வில்லாளர்; bowmen. "வடிநவி லம்பின் வில்லோர் பெரும" (புறநா. 168).

[வில் → வில்லார் → வில்லோர்]

**வில்லோர்நிலை** *villōr-nilai,* பெ.(n.) வில்லில் அம்பினைத் தொடுத்து எய்வார்க்குரிய (பைசாசம், மண்டிலம், ஆலீடம், பிரத்தியாலீடம் என்ற) நால்வகை விற்போர் நிலை (பிங்.); position of archers in shooting, of four kinds, viz., *paiśāśam, maṇḍilam, āliḍam, pirattiyāliḍam.*

[வில்லோர் + நிலை]

**வில்வட்டம்** *vil-vaṭṭam,* பெ.(n.) விற்றொழில்; archery. "வில்வலான் வில்வட்டங் காய்ந்தான் றன்னை" (தேவா. 961, 2).

[வில் + வட்டம்]



**வில்வட்டு** *vilvaṭṭu,* பெ.(n.) வில்லூதிப்பட்டு பார்க்க; see *villūdi-p-paṭṭu.*

**வில்வதளம்** *vilva-taḷam,* பெ.(n.) சிவ வழிபாட்டிற்கு ஏற்றதான மூவிலைகளை யுடைய வில்வத்தழை; trifoliate bael leaf used in *śaiva* worship.

*[வில்வம் + தளம்]*

**வில்வதிப்பட்டு** *vilvadi-p-paṭṭu,* பெ.(n.) வில்லூதிப்பட்டு (இ.வ) பார்க்க; see *villudi-p-paṭṭu.*

**வில்வபத்திரம்** *vilva-pattiram,* பெ.(n.) வில்வதளம் பார்க்க; see *vilva-taḷam.*

*[வில்வம் +* **Skt.** *patra > த. பத்திரம்]*

**வில்வபத்திரி** *vilva-pattiri,* பெ.(n.) வில்வபத்திரம் (வின்.) பார்க்க; see *vilva-pattiram.*

*[வில்வம் +* **Skt.** *patri > த. பத்திரி]*

**வில்வம்** *vilvam,* பெ.(n.) 1. மரவகை (பதார்த்த 448); bael. 2. பெரியமாவிலங்கம் (L) பார்க்க; see *periya-māvilaṅgam,* a species of garlic-pear. *'வில்வப் பழம் தின்பார் பித்தம் போக, பனம்பழம் தின்பார் பசிபோக' (பழ.).*

தெ. பிலவமு; க. பீட்டா; ம. குவலம்; **Skt.** பில்வ; **pees.** shul; **Hindi.** Bel.

விள் → விளம். வெள்ளையான தோடுடைய கனி.

விள் → விளா → விளவு – விளவம்

விளம் → விளர் → விளரி = விளர். விளா – விளாத்தி.

விளவம் → விலவம் → வில்வம் = கருவிளத்திற்கினமான கூவிளம். வடமொழியில் மூலமில்லை. (வ.மொ.வ. 92).

பில்வ, வில்வ = skt.

[இரட்டை விதையிலை நிலைத் திணைகளிலே கிச்சிலிக் குடும்பத்தைச் சேர்ந்த சிறிய மரம் (Aegle marmeelas). இது இந்தியா, மியான்மர், இலங்கை ஆகிய பகுதிகளில் வளர்கிறது. இது ஓர் இலையுதிர் மரம். 20–25 அடி உயரம் வளரும், 3–4 அடி சுற்றளவிருக்கும். நேரான கூரிய முட்கள் இலைக் கக்கங்களிலிருக்கும். காட்டு மரங்களில் முள் அதிகம். வளர்க்கும் வகைகளில் முள் குறைவு. இலைகள் மூன்று சிற்றிலைகளுள்ள கூட்டிலைகள். அவை மணமுள்ளவை. பூக்கள் பச்சை கலந்த வெண்மை நிறமுள்ளவை. பன்னீர் போன்ற நறுமணமுள்ளவை. மேழம், விடை, கடக மாதங்களில் இம்மரம் பூக்கும். கனி சிலையில் முதிரும். கனி உருண்டையானது. 2–4 விரல விட்டமிருக்கும்; ஓடு வழுவழுப்பாகவும், கடின மாகவும், பசுமை கலந்த சாம்பல் நிறம் அல்லது சற்று மஞ்சள் நிறமுள்ளதாகவும், மணமுள்ளதாகவும் இருக்கும். காட்டு மரங்களில் கனி சிறிதாக இருக்கும். வளர்க்கும் வகைகளில் பெரிதாக இருக்கும். விதைகள் பல. அவை நீள் சதுரமாகப் பக்கத்துக்குப் பக்கம் அழுந்திச் சப்பையாக இருக்கும். விதையின் மேல்தோல் கோழை போன்றிருக்கும். விதைகள் கிச்சிலி நிறமாகத் தடிப்பான, குழகுழப்பான உறையில் அழுந்திக் கிடக்கும். இந்த மரம் வேரிலிருந்து உண்டாகும் குருத்துக்களினாலும் பரவும்.

இம்மரத்தின் வேர், இலை, பூ, பிஞ்சு, காய், பழம் ஆகியவை மருந்தாகப் பயன்படுகின்றன. வயிற்றுப்போக்கு, குன்மம் முதலிய நோய்களுக்கு இது பயன்படுகிறது. பழம் சற்று இனிப்பாக இருக்கும். அதிலிருந்து இனிப்புப் பருகம் (ஷர்பத்) செய்கின்றார்கள்.]



வில்வமாலை *vilva-mālai,* பெ.(n.) பொன் அல்லது வெள்ளியினால் வில்வஇலை உருக்களாகச் செய்து கோத்த கழுத்தணி (யாழ்.அக.); a neck ornament consisting of silver or gold bael leaves.

*[வில்வம் + மாலை]*

வில்வரி *vil-vari,* பெ.(n.) பழைய வரிவகை (I.M.P. cg.689); an ancient tax.

*[வில் + வரி 5]*

வில்வலன் *vilvalan,* பெ.(n.) வாதாபியின் தமையனான அசுரன்; an asura elder brother of *vātābi,* destroyed by Agastya. *"மேயின விருமைந்தர் வில்வலன் வாதாவி" (கந்தபு. வில்வலன் வாதா. 10).*

வில்வளைவு *vil-valaivu,* பெ.(n.) கட்டடத்தில் விற்போன்ற வளைவு (பாண்டிச்.); bow-shaped arch, as in a building.

*[வில் + வளைவு]*



வில்வாதசன்னி *vil-vāda-šanni,* பெ.(n.) சன்னிவகை (M.L.); tetanus.

வில்வாள் *vil-vāl,* பெ.(n.) ஒருவகை வாளரம் (C.E.M.); bowsaw, locksaw.

*[வில் + வாள் 1]*

வில்வித்தை *vil-vittai,* பெ.(n.) வில்லிலிருந்து அம்பெய்யும் கல்வி (வின்.); archery, art of using the bow.

*[வில் + வித்தை]*

**Skt.** *vidyā* > த. குலவித்தை.

வில்விழா *vil-viḻā,* பெ.(n.) 1. விற்போர்; joust or tournament, as a festival of the bow. *'வீரர்..... வில்விழாவை விரும்ப' (பு.வெ.3, 1, உரை).* 2. மலைவேடர் தம் சிறுவர்க்கு விற்றொழில் பயிற்றத் தொடங்கும் நிகழ்வு; introductory ceremony of hillmen initiating their children in the art of archery. *"வில்விழா வெடுக்கவென்று விளம்பினன் வேடர் கோமான்" (பெரியபு. கண்ணப்ப. 31).*

*[வில் + விழா]*

வில்வீசு-தல் *vil-vīsu-,* 5 செ.கு.வி. (v.i.) ஒளிவிடுதல்; to shed light. *"மின்னுமாமணி மகர குண்டலங்கள் வில்வீசும்" (திவ். பெரியதிரு. 8, 1, 3).*

*[வில் + வீசு-,]*

வில்வெட்டு *vilvettu,* பெ.(n.) வில்லூதிப்பட்டு (இ.வ.) பார்க்க; see *villūdi-p-pattu.*

வில்வேதம் *vil-vēdam,* பெ.(n.) *தனுர்வேதம்* பார்க்க; see *tanur-vēdam,* a secondary *vēda.* *"ஆயுள் வேதம் வில்வேதம்" (காஞ்சிப்பு. சனற். 41).*

*[வில் + **Skt.** vēda > த. வேதம் = அறிவியம், கலை]*

**Skt.** *vēda* > த. வேதம்.

விலஃகு-தல் *vilaku-,* 5 செ.குன்றாவி. (v.t.) விலக்கு பார்க்க; see *vilakku.* *"விலஃகி*

*வீங்கிரு ளோட்டுமே ..... முத்தினினம்" (நன். 90, உரை).*

*[விலகு → விலஃகு-,]*

**விலக்கடி[1]** *vilakkaḍi,* பெ.(n.) 1. விலக்கத் தக்கது; that which is prohibited. *"இவ்வடியறியாதாரிறே உபயாந்தரங்களாகிய விலக்கடிகளிற் போகிறவர்கள்" (ஈடு. 4, 1, ப்ர.).* 2. மாறானது; that which is contrary. *"ஸம்ஸாரத்துக்கு விலக்கடி தேடிக் கொண்டு" (ஈடு. 1, 2, 8).* 3. விலக்காக வுள்ளது; that which is an exception. 4. தடை; obstacle, restraint, felter. *"இதுக்கு வேறு விலக்கடியில்லை" (ஈடு. 6, 8, 1).* 5. புறம்பாக்குகை (இ.வ); excommunication, expulsion. 6. பாதத்தைக் குறுக்கே வைத்தளக்கும் அடியளவு; linear measure, being the breadth of the human foot. *"22 அடியும் ஒரு விலக்கடியுங் கொண்டது கம்பு"* (Rd.).

*[விலக்கு + அடி]*

**விலக்கடி[2]** *vilakkaḍi,* பெ.(n.) சண்டையிடும் இருவர்க்கு விலக்குபவரால் உண்டாம் அடி (இ.வ); blow given to two persons fighting with a view to separate them.

*[விலக்கு + அடி]*

**விலக்கணன்** *vilakkaṇaṉ,* பெ.(n.) சிறப்பியல் புடையவன்; one who has special or distinguishing attributes; esteemed person. *"மிழலைமேய விலக்கணா" (தேவா. 582, 9).*

*[இலக்கணன் → விலக்கணன்]*

**விலக்கணி** *vilakkaṇi,* பெ.(n.) 1. முன்ன விலக்கு (தண்டி. 43) பார்க்க; see *muṉṉa-vilakku,* a figure of speech. 2. வெளிப் படையான விலக்கை ஒரு சிறப்புக் கருத்தோடு சொல்வதாகிய அணி (அணியி. 98); a figure of speech in which a well-known negation is stated with a special significance.

*[விலக்கு + அணி]*

முன்ன விலக்கணி

*"முன்னத்தின் மறுப்பது முன்னவிலக்கே*
*மூவகைக் காலமும் மேவியதாகும்"*

ஒரு பொருளைக் குறிப்பினால் விலக்கின் அது முன்னவிலக்கு என்னும் அணியாம். அஃது இறப்பு எதிர்வு, நிகழ்வு என்னும் மூவகைப்பட்ட காலங்களோடும் கூடியதாம். இம்முக்காலங்களைக் கூற்றொடுங் குறிப்பொருங் கூட்ட அறுவகையாம்.

எ.டு.

*"பாலன் றனதுருவா யேழுலகுன் – டாலிலையின்*
*மேலன்று கண்டுயின்றாய் மெய்யென்பர் – ஆலன்று*
*மேலைநீ ருள்ளதோ விண்ணதோ மண்ணதோ*
*சோலைசூழ் குன்றெடுத்தாய் சொல்"*
(தண்டி.43).

**விலக்கம்[1]** *vilakkam,* பெ.(n.) 1. விலகியிருக்கை; sparseness, as of plants placed apart, separation. 2. மாதவிடாய்; menses. 3. ஊரைவிட்டு நீங்குகை (வின்.); desertion of a place.

*[விலகு → விலக்கு → விலக்கம்]*

**விலக்கம்[2]** *vilakkam,* பெ.(n.) 1. வழங்காமல் விலக்குகை; prohibition. 2. விலக்கடி[1], 5 (வின்.) பார்க்க; see *vilakkaḍi.*

*[விலக்கு → விலக்கம்]*

**விலக்கற்பாடு** *vilakkaṟ-pāḍu,* பெ.(n.) ஒழிபு; restriction, exception. *"இதனால் விலக்கற்பாடின்றி வேண்டியது செய்வர்" (குறள், 1073, உரை).*

*[விலக்கு- + பாடு [1]]*

**விலக்கியற்கூத்து** *vilakkiyaṟ-kūttu,* பெ.(n.) ஒருவகைக் கூத்து (தொல். பொ. 91, உரை); a kind of dance.

*[விலக்கு + இயல்[2] + கூத்து]*

**விலக்கியற்சூத்திரம்** *vilakkiyar-cūttiram,* பெ.(n.) பொது வகையான் விதிக்கப் பட்டதனை அவ்வகையாகா தென்பது குறிக்கும் நூற்பா (யாப். வி. பாயி. 1, பக். 11); rule of exception from the operation of a general rule.

*[விலக்கு + இயல் +* **Skt.** *sūtra > த. சூத்திரம்]*

**விலக்கு[1]-தல்** *vilakku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. விலகச் செய்தல்; to turn aside, to divert, to avert, to prevent; to cause, to leave, to put out of the way. *"விற்படை விலக்குவ" (சீவக. 567).* 2. கூடாதென்று தடுத்தல்; to forbid, prohibit. *"யாம் வேண்டேமென்று விலக்கவும்" (கலித். 94).* 3. தடைசெய்தல்; to check, retard, obstruct. *"விண்ணிற் றிங்கள் விலக்குதன் மேயினார்" (சீவக. 902).* 4. அழுத்துதல்; to inset, fix. *"வேல் விலக்கி" (திணை மாலை. 30).* 5. மாற்றுதல் (பிங்.); to change, to vary. 6. வேலையினின்று தள்ளுதல்; to dismiss, as from a post. 7. வேண்டாத வற்றை நீக்கிவிடுதல் (வின்.); to eschew, discard, remove Irrelevent things. 8. கண்டனம் செய்தல் (வின்.); to repudiate, to controvert, to condemn. 9. பிரித்தல்; to separate. *'அவர்களைச் சண்டை செய்யாதபடி விலக்கு'.*

**Ma.** villakkam; **Ka., Te.** vilu.

*[விலகு → விலக்கு]*

**விலக்கு[2]** *vilakku,* பெ.(n.) 1. வேண்டாத தென்று ஒதுக்குகை; prohibition, injuction not to do a thing. *"பிறனில் வேட்கை யின்னன விலக்கதா மே" (பிரபோத. 39, 16).* 2. தனி; seclusion. *'அவன் யாரோடுஞ் சேராது விலக்காயிருக்கிறான்'.* 3. சிறப்பு நெறியீடு; rule of exception. *'இந்த நூற்பாவிற்கு விலக்கென்ன?'.* 4. தடை; hindrance, obstruction. 5. விலக்குக் கருமம் பார்க்க; see *vilakku-k-karumam. "விலக்கொடு பிராயச்சித்த மெனவைந்து வினைகள்" (பிரபோத. 39, 13).* 6. ஐந் தொழில்களுள் வீரன் தன்மேல் வரும் அம்புகளைத் தடுக்கை (சீவக. 1676, உரை); activity of a warrior in warding off arrows aimed at him, one of *pañša-kiruttiyam.* 7. மாதவிடாய்; menses. 8. வழு (வின்.); error, fault. 9. விலக்கணி (தண்டி. 45, உரை) பார்க்க; see *vilakkaṇi.*

**Ma.** vilakkam; **Te.** vilu

**விலக்குச்சீட்டு** *vilakku-c-cīṭṭu,* பெ.(n.) ஒருவனை நீங்கிக் கொள்ளும்படியனுப்பப் படும் ஆணை (நாஞ். நா); order to keep oneself away.

*[விலக்கு + சீட்டு]*

**விலக்குருவகம்** *vilakkuruvagam,* பெ.(n.) உருவகிக்கப்பட்ட பொருளினிடத்து அத் தன்மை யில்லையென்ற விலக்கோடு கூடி வரும் உருவகவணி (தண்டி. 36, உரை); a kind of metaphor in which certain distinguishing features of the object of comparison are pointed out, as absent in the thing compared.

*[விலக்கு + உருவகம்]*

*"வல்லி வதன மதிக்கு மதித்தன்மை*
*இல்லை யுளதே லிரவன்றி – எல்லை*
*விளக்கு மொளிவளர்த்து வெம்மையா லெம்மைத்*
*துளக்கு மியல்புளதோ சொல்" (தண்டி.36, உரை)*

**விலக்குவமை** *vilakkuvamai,* பெ.(n.) உவமேயத்திற்கு உயர்வு தோன்ற உவமானத்திலே ஒப்புமைக்கு விலக்காயுள்ள சில தன்மைகள் புலப்படக் கூறும் அணிவகை (தண்டி. 31, உரை); a kind of simile in which, with the object of praising the *upamēyam*, certain characteristics absent in *uvamēyam* are pointed out as being present in the *upamāṇam.*

*[விலக்கு + உவமை]*

*பாரிபாரி யென்றுபல வேத்தி*
*ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்*
*பாரி யொருவனு மல்லன்*
*மாரியு முண்டீண் டுலகுபுரப் பதுவே*

இதில் பாரிக்கு முகிலை உவமை கூறுதல் புலவர்க்குக் கருத்தன்று என்னும் கருத்தைக் குறிப்பாகக் கூறி உவமையை விலக்குதலால் இது விலக்குவமையாம். (தண்டி. 31, உரை)

**விலக்குறுப்பு** *vilakkuṟuppu,* பெ.(n.) நாடகவுறுப்புவகை (அபி.சிந்.) அவை பதினான்கு வகைப்படும்; a section in drama.

*[விலக்கு + உறுப்பு]*

**விலகு[1]-தல்** *vilagu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. நீங்குதல்; to withdraw; to leave. 2. பின்னிடுதல்; to recede. 3. ஒதுங்குதல்; to step aside and give way. 4. ஒழுங்கு தவறுதல்; to deviate from, to go astray, to err. 5. இடம் விட்டுப் பெயர்தல்; to be dislocated, to fall out of position. 6. பிரிதல்; to separate, to get away. 7. அசைதல்; to move. *"விலகு குண்டலத்தன்" (திவ். திருவாய். 8, 8, 1).* 8. செல்லுதல்; to proceed, go. *"விலகுஞ் சில வேழம்" (இரகு.யாகப். 19).* 9. தூரத்தி லிருத்தல்; to be far off. 10. மாதவிடாயாதல்; to be in menstrual periods. 11. ஒளிவிடுதல் (வின்.); to sparkle, shine.

**விலகு[2]-தல்** *vilagu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. எறிதல் (பிங்.); to throw, cast. *"விலகிற் பிழையாச் சூலத்தே" (தக்கையாகப். 224).* 2. விட்டு நீங்குதல்; to part from, separate from. *'அவனை விலகிப் போ'.*

**விலங்கடி[1]** *vilaṅgaḍi,* பெ.(n.) மாட்டு நோய்வகை (மாட்டு.வை.); a disease of cattle.

*[விலங்கு + அடு[1] → அடி]*

**விலங்கடி[2]-த்தல்** *vilaṅgaḍi-,* 4 செ. குன்றாவி.(v.t.) விலங்குமாட்டுதல்; to bind with fetters or handcuffs. *"இருகால் விலங்கடியா தேவிடில்" (பஞ்ச. திருமுக. 1658).*

*[விலங்கு + அடி-,]*

**விலங்கம்** *vilaṅgam,* பெ.(n.) விலங்கு, 4 (திவா.) பார்க்க; see *vilaṅgu.*

*[விலங்கு → விலங்கம்]*

**விலங்கரசு** *vilaṅgarašu,* பெ.(n.) அரிமா; lion, as the king of beasts. *"விலங்கரசனைய காளை" (சீவக. 2092).*

*[விலங்கு + அரசு [2]]*



**விலங்கரம்** *vilaṅgaram*, பெ.(n.) வாளரவகை; a saw, especially for conch-shells. *"விலங்கரம் பொரூஉம் வெள்விளை போழ்நரொடு" (மணிமே. 28, 44).*

*[விலகு → விலங்கு + அரம் [1]]*

**விலங்கல்** *vilaṅgal*, பெ.(n.) 1. குறுக்கா யிருக்கை; lying athwart or across. 2. மலை; hill, mountain. *"விலங்கண் மீமிசை" (மலைபடு. 298).* 3. கலங்கனீர் (திவா.); turbid water, puddle. 4. பிரசயம் (தொல். எழுத். 88, உரை) பார்க்க; see *pirašayam*, a tone occuring in a series of unaccented syllables following a svarita. 5. பண்மாறி நரம்பிசைக்கை; abrubt change of the tune, change of tune from one to another, as on a stringed instrument. *"காகுளி விலங்கல்" (திருவாலவா. 57, 26).*

*[விலங்கு → விலங்கல்]*

**விலங்கன்** *vilaṅgaṉ*, பெ.(n.) விலாங்கு பார்க்க; see *vilāṅgu*.

*[விலங்கு → விலாங்கு → விலங்கன்]*

**விலங்கி** *vilaṅgi*, பெ.(n.) வேலி (ஞான. 26, 5): hedge, fence.

தெ. வெலுங்கு

*[விலங்கு → விலங்கி]*

**விலங்கியல்** *vilaṅgiyal*, பெ.(n.) விலங்குகளைப் பற்றிய ஆராய்ச்சியியல்; zoology.

[நிலைத்திணைகளும் விலங்குகளுமாகிய உயிர்களைப் பற்றிய ஆராய்ச்சி உயிரியல் எனப்படும். விலங்குகளைப் பற்றிய ஆராய்ச்சி விலங்கியலாகும். விலங்குகள் என்னும்போது நாம் நாற்கால் விலங்குகள் மயிர்ப் போர்வையுள்ள பாலூட்டிகள், இறகுப் போர்வையுள்ள பறவைகள், செதிற் போர்வையுள்ள ஊர்வன, நீரில் வாழும் தவளைகள் ஆகியவற்றை மட்டும் குறிப்பதில்லை. மீன்கள், பூச்சிகள், தேள், புழு, நத்தை, ஓரணு உயிரிகள் ஆகிய எல்லாவற்றையும் குறிக்கிறோம். சுருங்கச் சொல்லின் நிலைத்திணை உயிரின் அல்லாத எல்லா உயிருடைப் பொருளும் விலங்கேயாகும். நிலைத்திணை உயிரிகள் தமக்கு வேண்டிய உணவைத் தாமே நிறைவு செய்து கொள்ளக்கூடிய ஆற்றலுள்ளவை. விலங்குகள் என்பவை நிலைத்திணை உயிரிகளிலிருந்து அல்லது வேறு விலங்குகளிலிருந்து தமக்கு வேண்டிய உணவைப் பெறுபவை. இந்தப் பண்பினாலே விலங்குகளை எளிதில் வேறுபடுத்தி யுணர்ந்து கொள்ளலாம்.]

*[விலங்கு → விலங்கியல்]*

**விலங்கினர்** *vilaṅgiṉar*, பெ.(n.) பகைவர்; enemies, foes. *"விலங்கினர் தம்மை யெல்லாம் வேரொடும் விளியநூறி" (கம்பரா. மகேந்திர. 21.).*

*[விலங்கு → விலங்கினர்]*

**விலங்கு[1]–தல்** *vilaṅgu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. குறுக்கிடுதல்; to lie athwart, to be transverse. *"ஆறுகெட விலங்கிய வழலவி ராரிடை" (கலித். 2).* 2. மாறுபடுதல்; to change, become different. *"விலங்கானே னாதலினால் விலங்கினேன்" (கம்பரா. சடாயு. 22).* 3. விலகு–, 1, 2, 3, 5, 6 பார்க்க; see *vilagu-*. *"பருவரை நாடனீங்கி விலங்காது நெஞ்சுடைந்தது" (திருக்கோ. 150, உரை).* 4. விலகு–, 4 *பார்க்க;* see *vilagu*. *"வாவெனச் சென்றாய் விலங்கினை" (கலித். 84).* 5. விலகு–, 11 பார்க்க; see *vilagu*. *"வில்விலங்கிய வீரரை" (கம்பரா. பிரமாத். 60).*

*[வில் → விலகு → விலங்கு]*

விலங்கு[2]–தல் *vilaṅgu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. தடுத்தல்; to hinder, obstruct. *"விலங்குந ரீங்கில்லை வெள்வேலோய்" (பு.வெ.12. பெண்பாற். 19).* 2. களைதல் (பிங்.); to pluck, pull up and remove. 3. கொல்லுதல்; to slay. *"கழல் வேந்தர் படைவிலங்கி" (பு.வெ.7, 15, கொளு.).* 4. அழித்தல்; to destroy. *"ஒரு வரங்கொண்டு விலங்கென..... அவனுருவு திரித்திட்டோன்" (பரிபா. 5, 31).* 5. எறிதல் (அக.நி.); to throw. 6. செலவிடுதல் (அக.நி.); to let pass.

*[வில் → விலகு → விலங்கு]*

விலங்கு[3] *vilaṅgu,* பெ.(n.) 1. குறுக்கானது; that which is transverse, across or crosswise. *"விலங்ககன்ற வியன்மார்ப" (புறநா. 3).* 2. மாவும் புள்ளும்; beast or bird, as having their bodies not erect but horizontal. *"விலங்கு மக்களும் வெருஉப்பகை நீங்கும்" (மணிமே. 12, 95). "விலங்கானே னாதலினால் விலங்கினேன்" (கம்பரா. சடாயு. 22).* 3. மான்; deer. *"விலங்கு மலைத்தமைந்த..... நாட்டத்து" (மலைபடு. 45).* 4. கை கால்களில் மாட்டப்படுந் தளை (சூடா.); fetters, shackles, manacles. 5. வேறுபாடு; difference. *"விலங்கோரார் மெய் யோர்ப்பின்" (கலித். 52).* 6. தடை; obstruction, hindrance. *"இந்த வினையுடல் விலங்காகும்" (ஞானவா. லீலை. 34).* 7. உயிர் மெய்யெழுத்துக்களில் இ, ஈ, உ, ஊ முதலிய உயிர்களைக் குறிக்கும் அடையாளமாக மேலுங் கீழுமுள்ள வளைவு (தொல். எழுத். 17, உரை); curve added to a consonant, above or below as the symbol of the vowel i or *ī* or u or *ū*. 8. குன்று (அரு.நி.); hill. 9. விலங்கல், 4 (பி.வி. 40, உரை) பார்க்க; see *vilaṅgal.* *'விலங்கை விட்டுத் தொழுவில் மாட்டிக் கொண்டது போல' (பழ.).*

விலங்கு[4] *vilaṅgu,* பெ.(n.) உடல் (திவ். திருச்சந். 56, வ்யா. பக். 162); body, as fettering the soul.

விலங்குக்காட்சித்தோட்டங்கள் *vilaṅgu-k-kāṭci-t-tōṭṭaṅgal,* பெ.(n.) உயிர்க்காட்சிச் சாலை; zoological park.

[காணக் கிடைக்காதனவும், பழக்கமில்லா தனவும், குறிப்பாகக் காட்டில் வாழ்பவனவுமான பல விலங்குகளை உயிருடன், அவற்றின் வாழ்விற்குத் தகவான ஏந்துகளுடன் பாதுகாத்து வைக்கப்பெறும் இடங்கள். பெரும்பாலும் பல பொருட்காட்சிச் சாலைகளின் தொழில்களுள் பலவற்றை இவையும் செய்கின்றன. இவை பொதுவாக எல்லோருக்கும், முதன்மையாகச் சிறுவர்களுக்கும் ஆங்குச் சேகரித்து வைத்துள்ள விலங்கினங்களின் பழக்க வழக்கங்களையும், அவற்றின் உணவு வகைகள், பிறப்பு, வளர்ச்சி முதலியவற்றையும் நேர்முகமாக அறியக்கூடிய வாய்ப்பைத் தருகின்றன. இவற்றால் மக்கள் விலங்கினங்களை உயிரோடு கண்டு, அவற்றோடு பழக வாய்ப்பு உண்டு. நாட்டுப்புற மக்களொடு நகர மக்களும் இவற்றைக் காணப் பெரிதும் விரும்புகின்றார்கள். உலகத்தின் பல்வேறுபட்ட பல மூலை முடுக்குகளில் உள்ளவற்றை ஒன்றாக ஒரே இடத்தில் காண இத்தோட்டங்கள் வாய்ப்பாகின்றன., பெருக்கமின்றித் தொகையில் குன்றி அற்றுப்போகும் நிலையிலிருந்து வரும் விலங்கினங்களை இந்நிலையங்கள் காப்பாற்று கின்றன. இவை அறிவியலுக்குப் பெரிதும் பயன்படுகின்றன. விலங்கினங்களுள் ஏதேனும் ஒருவகை படைப்புக் குன்றுமாயின், உலகத்துள் எந்த ஆற்றலாலும் அவற்றை மறுபடியும் படைக்க இயலாது. இவை விலங்கினங்கள் தாமாகவும், தன்னுரிமை யாகவும், அச்சமின்றியும் இயற்கையாக வாழ வசதியளிக்கப்பட்ட பெரு வியப்புச் சாலைகளாகும். இவையும் ஒருவகையில் விலங்கினக் கண்காட்சிச் சாலைகளே. இவை பல திறப்பட்டவைகளும், குன்றி வருவனவுமான காடுறை விலங்கினங்களின் பெருக்கம் குன்றாமல் வளர உதவுகின்றன.

இறுதியாக, இவ்வகையானெல்லாம் விலங்கினக் கண்காட்சி சாலைகளில் விலங்

கினங்களைப் பற்றி அணியமாக்கப்பட்ட குறிப்புகள், அவற்றைப் பற்றிய அறிவு வளரப் பெரிதும் உதவுகின்றன. மேற்படி காட்சிச் சாலைகளில் விலங்கினங்கள் உயிரோடு வளர்க்கப்பட்டு வருவதனால், விலங்கினங்களின் உடலமைப்பு, மனநிலை, ஒலி, குரல், நடவடிக்கைகள், உணவு, அவற்றை உண்பிக்கும் முறை, இனப்பெருக்கம், காதல், தாய்மை, அகவை, நோய், இவற்றைப் பற்றிய ஆராய்ச்சிக்குக் காட்சிச் சாலைகள் சிறந்த கருவியாகின்றன]

விலங்குகதி *vilangu-kadi,* பெ.(n.) நால்வகை நிலைகளுள் ஒன்றான விலங்குநிலை; birth as living being a stage in the transmigration of souls, one of *nāṟ-kati,* q.v.

*[விலங்கு + கதி = உயிர்கள் தேவகதி, மக்கட்கதி, விலங்குகதி, நரககதி என நான்கு நிலைகளாக எடுக்கும் பிறப்பு]*

விலங்குச்சுழி *vilangu-c-cuḻi,* பெ.(n.) உடையவனைச் சிறைப் புகுத்துவதாகக் கருதப்படும் மாட்டின் முதுகுச் சுழி; involuted curls on the back of cow or ox, as portending imprisonment to its owner.

*[விலங்கு + சுழி]*

விலங்குநர் *vilangunar,* பெ.(n.) 1. விலகி யிருப்பவர்; those who stand off. 2. விலக்குபவர்; those who obstruct or cause to turn aside or seperate. *"விலங்குந ரீங்கில்லை" (பு.வெ.12, பெண்பாற், 19).*

*[விலகு → விலங்கு → விலங்குநர்]*

விலங்குபாய்-தல் *vilangu-pāy-,* 5 செ.கு.வி. (v.i.) குறுக்குப்பாய்தல்; to jump aside or across. *"விலங்குபாய்வன..... கலிமா" (சீவக. 1770.).*

*[விலங்கு + பாய்-,]*

விலங்குபோடு-தல் *vilangu-pōḍu,* 20 செ.கு.வி. (v.i.), 19 செ.குன்றாவி. (v.t.) கைகால்களில் தளையிடுதல்; to handcuff, put in chains or felleis.

*[விலங்கு + போடு-,]*



விலங்கூண் *vilangūṇ,* பெ.(n.) விலங்குகட்கு உணவிடும் அறச் செயல் (சூடா.); feeding animals, considered an act of charity.

*[விலங்கு + ஊண்]*

விலத்தல் *vilattal,* பெ.(n.) நீங்குகை (யாழ்.அக.); separation.

*[விலகு → விலத்து → விலத்தல்]*

விலத்தி *vilatti,* பெ.(n.) நெருக்கமின்மை; sparseness, being not close. *'இந்த ஆடையில் நூலிழை விலத்தியா யிருக்கிறது'.*

*[விலத்து-, → விலத்தி]*

விலத்து-தல் *vilattu-,* 5 செ.குன்றாவி. (v.t.) விலக்கு (யாழ்.அக.) பார்க்க; see *vilakku.*

*[விலக்கு → விலத்து-,]*

விலர் *vilar,* பெ.(n.) மரவகை; a kind of tree. 'விலர்ங்கோடு' (தொல். எழுத். 363, உரை).

**விலவில–த்தல்** *vilavila-,* 11 செ.கு.வி. (v.i.) 1. மிகநடுங்குதல்; to tremble exceedingly. *"கொக்கு வல்லூறுகண் டென்ன விலவிலத்து" (தனிப்பா.* i, 171, 23). 2. மிகவும் வலுவிழத்தல்; to become extremely weak. *'பசியால் கை கால்கள் விலவிலத்துப் போயின'.* 3. நெருக்க மின்றியிருத்தல்; to be sparse, not close. *'இந்தத் துணி விலவிலவென்று என்று உள்ளது' (உ.வ.).*

**Ma.** vilakkam; **Ka.** (vili. vilivilisu); **Te.** vilavila; **Kui.** vida.

**விலவு**[1] *vilavu,* பெ.(n.) விலா பார்க்க; see *vilā. "விலவறச் சிரித்திட் டேனே" (திவ். திருமாலை. 34).*

*[விலா → விலவு]*

ஒ.நோ. நிலா → நிலவு

**விலவு**[2]**–தல்** *vilavu,* 5 செ.கு.வி. (v.i.) விலாவி–, பார்க்க; see *vilāvi. "விலவித் தவித்தேனை விழித்தொருகாற் பாராயோ" (தனிப்.).*

**விலா** *vilā,* பெ.(n.) 1. மார்பின் பக்கம்; sides of the chest in body. *"கழுகும் பாறும் விலா விற்றுக் கிடந்தவன்றே" (சீவக. 804).* 2. விலாவெலும்பு பார்க்க; see *vilā-v-elumbu.*

ம. விலாவு.

*[வில் → விலா]*

**விலாக்குடை** *vilā-k-kuḍai,* பெ.(n.) விலா,1 (நெல்லை) பார்க்க; see *vilā.*

*[விலா + குடை]*

**விலாக்குறிப்பு** *vilā-k-kuṟippu,* பெ.(n.) பொத்தகப் பக்கங்களின் யாதானுமொரு மருங்கிடுங் குறிப்பு (இக்.வ.); marginal note.

*[விலா + குறிப்பு]*

**விலாக்கூடு** *vilā-k-kūḍu,* பெ.(n.) மார்புக்கூடு (இ.வ.); chest.

*[விலா + கூடு]*

**விலாக்கொடி** *vilā-k-koḍi,* பெ.(n.) விலாவெலும்பு (யாழ்.அக.); rib.

*[விலா + கொடி]*

**விலாங்கு** *vilāṅgu,* பெ.(n.) பழுப்பு வண்ணமும் நான்கு அடி வளர்ச்சியும் உள்ள பாம்பு போன்ற மீன்வகை (பதார்த்த. 940); eel, brownish, attaining more than 4 ft. in length.

*[விலங்கு → விலாங்கு]*



**விலாச்சுழி** *vilā-c-cuḻi,* பெ.(n.) விலாவைச் சுருட்டியிழுக்கும் ஒருவகை நுரையீரல் நோய்(M.L.); rapid respiration producing flattening of the chest-walls in flanks; a lung disease.

*[விலா + சுழி]*

**விலாசம்** *vilāšam,* பெ.(n.) 1. வாழை (அரு.நி.); plantain. 2. நீபம்[1], 1,2,3,4 (அரு.நி.) பார்க்க; see *nibam.*

விலாசு[1]–தல் *vilāśu,* 5 செ.குன்றாவி. (v.t.) அழகுற அணிதல் (சரப. குற. 32, 3, உரை); to put on attractively.

விலாசு[2]–தல் *vilāśu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. முற்றுந் தோல்வியுறச் செய்தல்; to rout, to defeat out and out, as in a discussion. *'வாதத்தில் எதிரியை விலாசிவிட்டான்'* 2. வலுவாக அடித்தல்; to beat soundly or strongly. *'சண்டையில் நன்றாக விலாசி விட்டான்' (இ.வ.).*

*[விளாசு → விலாசு–,]*

விலாடி–த்தல் *vilāḍi-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. எண்ணை பிரித்தல் (இ.வ); to seperate. 2. வரி முதலியன இரட்டை மடங்கு கொடுத்தல் (வின்.); to pay doubly, tribute or tax etc. 3. பல மடங்கு கொடுத்தல்; to pay manifold. *'ஒன்றுக்கு ஐந்தாக விலாடிக் கொடுப்பா யானால் கடன் கொடுப்பேன்' (இ.வ.).*

விலாத்தோரணம் *vilā-t-tōraṇam,* பெ.(n.) விலாவெலும்பு (யாழ்.அக.) பார்க்க; see *vilā-v-elumbu.*

*[விலா + தோரணம்]*

விலாப்பாரிசம் *vilā-p-pāriśam,* பெ.(n.) விலா 1 பார்க்க; see *vilā.*

*[விலா + பாரிசம்]*

விலாப்புடை *vilā-p-puḍai,* பெ.(n.) விலா 1 பார்க்க; see *vilā.* *"விலாப்புடை பெரிதும் வீங்க" (சீவக. 400).*

*[விலா + புடை [3]]*

விலாப்புடைத்தல் *vilā-p-puḍaittal,* பெ.(n.) உண்ட உணவின் நிறைவால் இருபக்கமும் விலாப்புறம் வீங்குகை (வின்.); bulging out of the nib sides, as when the stomach is full. *'விருந்தில் விலாப்புடைக்க வுண்டான்'* (உ.வ.).

*[விலா + புடைத்தல்]*

விலாப்புறம் *vilā-p-puṟam,* பெ.(n.) விலா 1 பார்க்க; see *vilā 1.* *"இரு விலாப்புறத்தும்" (கொக்கோ, 2, 12.).*

*[விலா + புறம்]*

விலாம்பிச்சை *vilām-biccai,* பெ.(n.) விலாமிச்சை (வின்.) யின் மறுவழக்கு.

விலாமிச்சு *vilā-miccu,* பெ.(n.) விலாமிச்சை பார்க்க; see *vilā-miccai.*

விலாமிச்சை *vilā-miccai,* பெ.(n.) இலாமிச்சை (பதார்த்த. 996) பார்க்க; see *elāmiccai.* white cuscus grass.

*[இலாமிச்சை → விலாமிச்சை]*

விலாய் *vilāy,* பெ.(n.) 1. துன்பம் (யாழ்.அக.); trouble, suffering. 2. சண்டை (நாஞ்.சா); quarrel.

விலாரி *vilāri,* பெ.(n.) 1. வெள்ளைக்கடம்பு பார்க்க; see *veḷḷai-k-kaḍambu,* bridal-couch plant. 2. நீண்ட செடிவகை; jamaica switch sorrel.

விலாவலக்கு *vilā-v-alakku,* பெ.(n.) விலாவெலும்பு பார்க்க; see *vilā-v-elumbu.* *"விலாவலக்குக..... அடிக்கடி சிரித்தன" (கலிங். 216).*

*[விலா + அலக்கு = எலும்பு]*

விலாவி–த்தல் *vilāvi-,* 11 செ.கு.வி. (v.i.) அழுதல்; to bewail, lament. *"முதுநகர் விலாவிக்கின்றதே" (சீவக. 1092).*

விலாவெலும்பு *vilā-v-elumbu,* பெ.(n.) மார்பின் பக்கவெலும்பு; குறுக்கெலும்பு; rib.

மறுவ. விலாக்கூடு.

*[விலா + வெலும்பு]*

விலாவொடி[1] *vilā-v-oḍi,* பெ.(n.) விலாப்பக்கம் ஒடியும்படி சிரிக்குஞ் சிரிப்பு; side-splitting laughter. *"வெள்ளை கண்டன வணிவாராகி..... விலாவொடி யாக்கினாரால்" (திருவாலவா. 38, 48).*

*[விலா + ஒடி]*

விலாவொடி[2]–த்தல் *vilā-v-oḍi,* 4 செ. குன்றாவி.(v.t.) 1. கடுமையாக வேலை வாங்குதல்; to extract hard work from. 2. பெருஞ் சிரிப்பு மூட்டுதல்; to cause side-splitting laughter. *"வீதியினுறுமவர் தங்களை விலாவொடிப்பும்" (திருவாலவா. 54, 22).*

*[விலா + ஒடி–,]*

விலாழி *vilāḻi,* பெ.(n.) 1. குதிரையின் வாய் நுரை; foam from a horse's mouth. *"நீங்கா விலாழிப் பரித்தானை" (பு.வெ.4, 22.).* 2. யானைத் துதிக்கை யுமிழ் நீர் (சூடா.); spittle or exudation from an elephant's trunk. *"அங்கையின் விலாழி யாக்கி" (தாயு. மௌன. 1.).*

விலாளம் *vilāḷam,* பெ.(n.) 1. பூனை (பிங்.); cat. *"அலமரு விலாளத்தைப் பார்த்து" (விநாயகபு. 26, 35).* 2. ஆண்பூனை (திவா.); tom-cat.

*[விடாரம் → விலாளம்]*

விலூபன்னிவிழு *vilūpaṉṉiviḻu,* பெ.(n.) 1. பெருங்குரும்பை (மலை.) பார்க்க; see *peru-ṅ-kurumbai.* 2. கிலுகிலுப்பை, 2,3 (மலை.) பார்க்க; see *kilu-kilubbai.*

விலை *vilai,* பெ.(n.) 1. விற்கை (சூடா.); selling, sale. 2. விலைத்தொகை; price, cost, value in exchange. *"யாரும் விலைப் பொருட்டா லூன்றருவா ரில்" (குறள், 256.).* 3. மதிப்பு; value. *"விலையுடைக் கூறை போர்க்கு மொற்றர்" (தேவா. 1082, 9).*

*[வில் → விலை]*

விலைக்கணிகை *vilai-k-kaṇigai,* பெ.(n.) பொதுமகள்; harlot, prostitute. *"மாயப்பொய் கூட்டி மயக்கும் விலைக்கணிகை" (பரிபா. 20,49.).*

மறுவ. விலைமாது, விலைமகள், விலைநலப் பெண்டிர், பரத்தை, பொது மகளிர்.

*[விலை + கணிகை]*

விலைக்கழிவு *vilai-k-kaḻivu,* பெ.(n.) வாங்கிய விலையில் தள்ளுபடியாவது (இக்.வ.); discount in sale price.

*[விலை + கழிவு]*

விலைக்காமர் *vilai-k-kāmar,* பெ.(n.) விலைமகள்; harlots. *"காமனார்புரம் விலைக்காமர் வீதியே" (இரகு. நகரப். 8).*

*[விலை + காமம் → காமர்]*

விலைக்காரன் *vilai-k-kāraṉ,* பெ.(n.) விலைகாரன் (வின்.) பார்க்க; see *vilai-kāraṉ.*

*[விலை + காரன்]*

விலைக்கிரயச்சீட்டு *vilaikkiraya-c-cīṭṭu,* பெ.(n.) விலையாவணம்; sale deed.

*[விலை + கிரயம் + சீட்டு. கிரயம் = உருது]*

விலைக்கிரயம் *vilai-k-kirayam,* பெ.(n.) பெறுமணத் தொகை (வின்.); selling price.

மறுவ. விலைமதிப்பு.

*[விலை + கிரயம்]*

**விலைகட்டு-தல்** *vilai-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) விலை மதிப்பை (பெறுமானத்தொகை) உறுதிப்படுத்துதல் (வின்.); to set or fix a price.

*[விலை + கட்டு-,]*

**விலைகாரன்** *vilai-kāraṉ,* பெ.(n.) பெறுமானத் தொகையைக் கொடுத்துப் பண்டங்கொள்வோன் (யாழ்.அக.); purchaser.

*[விலை + காரன்[1]]*

**விலைக்குறி-த்தல்** *vilai-k-kuṟi,* 4 செ.கு.வி. (v.i.) விலைமதித்தல்; to estimate the price.

*[விலை + குறி-,]*

**விலைகூவு-தல்** *vilai-kūvu-,* 5 செ. குன்றாவி. (v.t.) விலைகூறு-, 2 பார்க்க; see *vilai-kūṟu.*

*[விலை + கூவு-,]*

**விலைகூறு-தல்** *vilai-kūṟu-,* 5 செ. குன்றாவி. (v.t.) 1. பண்டத்தின் விலையைச் சொல்லுதல்; to tell the product price. 2. விற்பதாக கூவிச் சொல்லுதல்; to offer for sale publicly, by crying out. *"மீன்களை ... விலைகூறி விற்ற ... மீன் பிடிப்பார்" (மதுரைக். 256, உரை).*

*[விலை + கூறு-,]*

**விலைகொடுத்துயிர்காத்தல்** *vilai-koḍuttuyir-kāttal,* பெ.(n.) கொல்லப்படும் விலங்குகளைப் பணங் கொடுத்து உயிர் மீட்கும் அறச்செயல் (பிங்.); saving a life by payment of ransom, considered as an act of charity.

*[விலை + கொடு-, + உயிர்காத்தல்]*

**விலைகொள்[1](ளு)தல்** *vilai-koḷ-,* 16 செ. குன்றாவி.(v.t.) விலைக்கு வாங்குதல்; to buy, purchase.

*[விலை + கொள்-,]*

**விலைக்கொள்(ளு)-தல்** *vilai-koḷ,* 12 செ.கு.வி. (v.i.) அதிக விலையுடையதாதல்; to be costly or valuable; to be at prohibitive cost.

*[விலை + கொள்-,]*

**விலைகோள்** *vilai-kōḷ,* பெ.(n.) 1. விலை மதிப்புப் பெறுகை; worthiness. 2. சிப்பி முத்தின் குணங்களுள் ஒன்று (திருவாலவா. 25, 16); a characteristic quality of pearls.

*[விலைகொள் → விலைகோள்]*

**விலைச்சரக்கு** *vilai-c-carakku,* பெ.(n.) விலைப்படுத்த வைத்திருக்கும் பண்டம்; products or goods or articles kept ready for sale.

மறுவ. விலைப்பண்டம்.

*[விலை + சரக்கு]*

**விலைச்சேரி** *vilai-c-cēri,* பெ.(n.) பலபண்டம் விற்குமிடம்; bazaar, market, fair. *"பல்விலைவாணிகர் நல்விலைச் சேரி" (பெருங். மகத. 3, 77).*

மறுவ. அங்காடி, சந்தை.

*[விலை + சேரி]*

**விலைசவு-த்தல்** *vilai-šavu-,* 4 செ.கு.வி. (v.i.) விலைசளை-, பார்க்க; see *vilai-šalai-,*

*[விலை + சவு-,]*

**விலைசளை-த்தல்** *vilai-šaḷai,* 4 செ.கு.வி. (v.i.) விலைகுறைதல்; to decrease or fall in price.

*[விலை + சளை-,]*

**விலைசிராவணை** *vilai-širāvaṇai,* பெ.(n.) விலைத்தீட்டு பார்க்க; see *vilai-t-tīṭṭu.* *"சங்கரதேவற்கு இறையிழித்துவிற்று விலைசிராவணை செய்து கொடுத்தோம்"* (S.I.I.iii.105).

*[விலை + சீராவணம் → சிராவணை]*

**விலைஞன்** *vilaiñaṉ,* பெ.(n.) 1. விற்பவன்; seller. *"மைந்நிண விலைஞர்" (மணிமே. 28, 33).* 2. வணிகன் (சது.); merchant.

*[விலை → விலைஞன்]*

**விலைத்தண்டம்** *vilai-t-taṇḍam,* பெ.(n.) பழைய வரிவகை (Insc.); an ancient tax.

*[விலை + தண்டம்]*

**விலைத்தரம்** *vilai-t-taram,* பெ.(n.) நெல்வரியை கைப்பண வரியாக மாற்றிவந்த பணவரி (நாஞ். நா.); commuted value of paddy tax.

**விலைத்தரவு** *vilai-t-taravu,* பெ.(n.) விலையாவணம் (S.I.I.viii, 357); sale deed.

*[விலை + தரவு]*

**விலைத்தீட்டு** *vilai-t-tīṭṭu,* பெ.(n.) விலையோலை; sale-deed. *"சாத்தனது விலைத்தீட்டு" (தொல். சொல். 81, உரை).*

*[விலை + தீட்டு]*

**விலைத்துண்டு** *vilai-t-tuṇḍu,* பெ.(n.) 1. சிற்றூர்களில் சில்லறையாக விற்கும் நெல்விலைக்கும் மதிப்பு விலைக்குமுள்ள வேறுபாட்டை ஈடு செய்வதற்காகக் குடிவாரத்திலிருந்து மேல்வாரத்தாருக்குச் செலுத்தும் அதிக வரி; a charge paid out of the *kuḍivāram* by cultivators to the *mēlvāratār* or to the government on account of the difference between the price at which the cultivators had sold their grain and the estimated retail prices at the place of sale. 2. அடக்கவிலைக்கும் விற்கிற விலைக்குமுள்ள வேறுபாட்டால் நேரும் இழப்பு (இ.வ.); loss due to the difference between the sale price and the cost price.

*[விலை + துண்டு]*

**விலைத்தூக்கம்** *vilai-t-tūkkam,* பெ.(n.) *விலையேற்றம்* பார்க்க; see *vilai-y-ēṟṟam.* *'நல்லெண்ணெய் விலை தூக்கமாக இருக்கிறது'.*

*[விலை + தூக்கு → தூக்கம்]*

**விலைதீர்-தல்** *vilai-tīr-,* 4 செ.கு.வி. (v.i.) விலை உறுதியாதல் (வின்.); to settle or confirm the price.

*[விலை + தீர்-,]*

**விலைநலப்பெண்டிர்** *vilai-nala-p-peṇḍir,* பெ.(n.) பரத்தையர்; harlots. *"விலைநலப் பெண்டிரிற் பலர்மீக் கூற" (புறநா. 365).*

*[விலை + நலம் + பெண்டிர்]*

**விலைப்பட்டி** *vilai-p-paṭṭi,* பெ.(n.) 1. விற்ற பண்டங்களின் விலைக் குறிப்பு; list of prices; invoice. 2. விற்பனைக் கணக்கு; sales account.

*[விலை + பட்டி, பட்டி = அட்டவணை, அட்டவணைக்குறிப்பு.]*

விலைப்படு-தல் *vilai-p-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) விலையாதல்; to be sold.

*[விலை + படு-,]*

விலைப்பண்டம் *vilai-p-panḍam,* பெ.(n.) விலைச்சரக்கு பார்க்க; see *vilai-c-carakku.*

*[விலை + பண்டம்]*

விலைப்பணம் *vilai-p-paṇam,* பெ.(n.) விலைத்தொகை (வின்.); price money.

*[விலை + பணம்]*

விலைப்பருவம் *vilai-p-paruvam,* பெ.(n.) 1. விலையின் நிலைமை (யாழ்.அக.); position of the market. 2. விலையாகும் காலம்; time of sale.

*[விலை + பருவம்]*

விலைப்பலி *vilai-p-pali,* பெ.(n.) பயன்கருதித் தெய்வங்கட்கிடும் படையல்; sacrificial offering given to deities, with a view to gaining their favour. *"விலைப்பலி யுண்ணும் மலர்பலி பீடிகை" (சிலப். 12, 43).*

*[விலை + பலி]*

**Skt.** Bali > த. பலி.

விலைப்பிரமாணக்கச்சாத்து *vilai-p-piramāṇa-k-kaccāttu,* பெ.(n.) விலைத்திட்டு பார்க்க; see *vilai-t-tiṭṭu.*

*[விலைப்பிரமாணம் + கச்சாத்து. கச்சாத்து = பற்றுச்சீட்டு]*

**Skt.** *pramāna* > த. பிரமாணம்

விலைப்பிரமாணம் *vilai-p-piramāṇam,* பெ.(n.) விலைத்தீட்டு (S.I.I.i, 104) பார்க்க; see *vilai-t-tīṭṭu.*

*[விலை + பிரமாணம்]*

**Skt.** *pramāna* > த. பிரமாணம்.

விலைப்பிரமாணவிசைவுதீட்டு *vilai-p-piramāṇa-v-iśaivutīṭṭu,* பெ.(n.) விலைத்தீட்டு (S.I.I.iv, 127) பார்க்க; see *vilai-t-tīṭṭu.*

*[விலைப்பிரமாணம் + இசைவுச்சீட்டு → இசைவுதீட்டு. இசைவுதீட்டு = ஒப்புகை ஆவணம்.]*

**Skt.** *pramāna* > த. பிரமாணம்.

விலைப்போ-தல் *vilai-p-pō-,* 8 செ.கு.வி. (v.i.) விலைபோ-, பார்க்க; see *vilai-pō-.*

*[விலை + போ-,]*

விலைபெறு-தல் *vilai-peṟu,* 5 செ.கு.வி. (v.i.) 1. தக்க விலை பெறுதல்; to be worth, a good price. *"நல்லாவின் கன்றாயி னாகும் விலைபெறூஉம்" (நாலடி,115).* 2. விலை போ-, பார்க்க; see *vilai-pō-.* 3. மதிப்பு மேம்படுதல்; to be valued high.

*[விலை + பெறு-,]*

விலைபேசு-தல் *vilai-pēśu-,* 9 செ.குன்றாவி. (v.t.) விலைபற்றி உசாவுதல்; to bargain or discuss the price of, to negotiate price.

*[விலை + பேசு-,]*

விலைபொருந்து-தல் *vilai-porundu-,* 5 செ.கு.வி. (v.i.) விலை தகுதியாதல் (வின்.); to be worth the price.

*[விலை + பொருந்து-,]*

விலைபோ-தல் *vilai-pō-,* 9 செ.கு.வி. (v.i.) விலையாதல்; to fetch a price. *'நல்ல மாடானால் உள்ளூரிலே விலை போகாதா?'.*

*[விலை + போ-,]*

**விலைபோடு-தல்** *vilai-pōḍu-,* 9 செ.கு.வி. (v.i.) விலைத்தொகை குறித்தல் (வின்.); to estimate or fix a price.

*[விலை + போடு-,]*

**விலைமகள்** *vilai-magaḷ,* பெ.(n.) பரத்தை; harlot. *"விலைமக ளனைய நீயும் கல்லிய லாதி யென்றான்" (கம்பரா. அகலி. 79),* *'விலைமகட்கு அழகு தன்மேனி மினுக்குதல்' (பழ.).*

மறுவ. பொதுமகள்.

*[விலை + மகள்]*

**விலைமதிப்பு** *vilai-madippu,* பெ.(n.) விலை மதிப்பிடுகை; estimate of price.

*[விலை + மதிப்பு]*

**விலைமாது** *vilai-mādu-,* பெ.(n.) விலைமகள் பார்க்க; see *vilai-magaḷ.*

*[விலை + மாது]*

**விலைமானம்** *vilai-māṉam-,* பெ.(n.) விலைமதிப்பு (யாழ்.அக.) பார்க்க; see *vilai-madippu.*

*[விலை + மானம்]*

**விலைமேவு-தல்** *vilai-mēvu-,* 10 செ.கு.வி. (v.i.) 1. விலையை ஒத்துக் கொள்ளுதல் (வின்.); to agree the price. 2. எளிதாக விலையாதல்; to be easily saleable.

*[விலை + மேவு-,]*

**விலையருத்தம்** *vilai-y-aruttam,* பெ.(n.) விலைப்பணம் (நாஞ்.நா); purchase money.

*[விலை + **Skt.** artha > த. அருத்தம்]*

**விலையாட்டி** *vilaiyāṭṭi,* பெ.(n.) பண்டம் விற்பவள்; trades woman. *"கள் விலையாட்டி" (சிலப். 12, உரை, பக். 320).*

*[விலை + ஆட்டி. ஆட்டி = பெண்பாலீறு. ஒ.நோ. மூதாட்டி.]*

**விலையாவணம்** *vilai-y-āvaṇam,* பெ.(n.) விலைத்தீட்டு பார்க்க; see *vilai-t-tīṭṭu.* *"நிலமுற்றும் விற்று விலையா வணஞ்செய்து கொடுத்தோம்" (S.I.I.iii.110).*

*[விலை + ஆவணம்]*

**விலையாள்** *vilai-y-āḷ,* பெ.(n.) அடிமை; slave. *"விலையாளா வடியேனை வேண்டுதியோ" (திவ். பெரியதி. 5, 5, 2).*

மறுவ. தொழும்பன்

*[விலை + ஆள்[1]]*

**விலையாளன்** *vilai-y-āḷaṉ,* பெ.(n.) விலைகூறி பண்டம் விற்போன் (வின்.); seller, dealer, merchant.

*[விலை + ஆள் → ஆளன்.]*

**விலையிடு-தல்** *vilai-y-iḍu,* 20 செ.கு.வி. (v.i.) விலைபோடு-, பார்க்க; see *vilai-pōḍu.* *"தேவிக்காவதோர் காற்கணி நீ விலையிடுதற்காதியோ" (சிலப். 16, 112).*

*[விலை + இடு-,]*

**விலையிறங்கு-தல்** *vilai-y-iṟaṅgu,* 10 செ.கு.வி. (v.i.) விலைத்தொகைகுறைத்தல்; to reduce or fall in price.

மறுவ. விலை வீழ்-தல்.

*[விலை + இறங்கு-,]*

**விலையுணி** *vilai-y-uṇi,* பெ.(n.) 1. விலைக்குத் தன்னை விற்பவன் (வின்.); one who sells himself, as a slave to clear off or in lieu

of a debt. 2. கடனுக்காக உடைமையை இழந்தவன்; one whose entire property is sold or lost for clearing debt. 3. விலைக்கு வாங்கி விற்கப்படும் அடிமை (வின்.); slave, resold.

*[விலை + உண் → உணி]*

விலையுயர்-தல் *vilai-y-uyar-,* 2 செ.கு.வி. (v.i.) 1. விலைத் தொகை மிகுதல்; to raise in price. 2. பெருமதிப்புடையதாதல்; to be valuable.

*[விலை + உயர்-,]*

விலையேற்றம் *vilai-y-ēṟṟam,* பெ.(n.) 1. விலைத்தொகை மிகுகை; raise in price. 2. அதிகவிலை யுடையதாகை; costliness; prohibitive cost.

*[விலையேறு → விலையேற்றம்]*

விலையேற்று-தல் *vilai-y-ēṟṟu-,* 5 செ. குன்றாவி.(v.t.) பண்டங்களின் விலை மிகும்படி செய்தல்; to raise the price, as of an article.

*[விலை + ஏற்று-,]*

விலையேறு-தல் *vilai-y-ēṟu,* 5 செ.கு.வி. (v.i.) விலையுயர் பார்க்க; see *vilai-y-uyar.*

*[விலை + ஏறு-,]*

விலையொட்டு-தல் *vilai-y-oṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) பண்டங்களின் விலையைச் சிறிது கூட்டிச் சொல்லுதல் (வின்.); to add slightly to the price.

*[விலை + ஒட்டு-,]*

விலையொறு-த்தல் *vilai-y-oṟu,* 4 செ.கு.வி. (v.i.) விலை அதிகமாதல் (யாழ்ப்.); price on ascending trend.

*[விலை + ஒறு-,]*

விலையொறுப்பு *vilai-y-oṟuppu,* பெ.(n.) விலையேற்றம் (யாழ்ப்.); escalation of price.

*[விலை + ஒறுப்பு]*

விலையோலை *vilai-y-ōlai,* பெ.(n.) விலைத்தீட்டு பார்க்க; see *vilai-t-tīṭṭu.* *"இதுவே விலையோலை ஆவதாகவும்" (S.I.I.iii, 154, 23).*

*[விலை + ஓலை]*

விலைவன் *vilaivaṉ,* பெ.(n.) கூலியின் பொருட்டாக ஒன்றைச் செய்பவன்; one who does a thing for money, one does a thing in anticipation of money or remuneration. *"மற்றிவன் விலைவன் போலான்" (புறநா.152).*

*[விலை → விலையன் → விலைவன்]*

விலைவாசி *vilaivāśi,* பெ.(n.) விலையளவு; rate of price, current price trend.

*[விலை + வாசி]*

விலைவிழு-தல் *vilai-viḻu-,* 2 செ.கு.வி. (v.i.) விலையிறங்கு-, பார்க்க; see *vilai-iṟaṅgu.*

*[விலை + விழு-,]*

விலைவை-த்தல் *vilai-vai,* 19 செ.கு.வி. (v.i.) விலைபோடு-, (யாழ்.அக.) பார்க்க; see *vilai-pōḍu-,*

*[விலை + வை-,]*

விவரநாலிகை *vivara-nāligai,* பெ.(n.) மூங்கில் (சங்.அக.); bamboo.

*[வயிர் → வயிரம் → வெயிரம் → விவரம் + நாலிகை]*

விவரம் *vivaram,* பெ.(n.) 1. துளை; fissure, hole, cavity, hollow, vacuity. 2. மலைக் குகை (சூடா.); cave. 3.இடைவெளி; intervening space. *"பிலங்களேழு மதனிடையிடை விழுந்த.... வேர் விவரம்" (தக்கயாகப். 147).* 4. வரலாற்றுக் குறிப்பு; particulars, details; circumstance, as of a narrative.

*[வயிர் → வயிரம் → வெயிரம் → விவரம்]*

விழ *vila,* பெ.(n.) விழா பார்க்க; see *vilā. "விழ வித்தாய் வீடுபெற்றான்" (சீவக. 3114).*

*[விழா → விழ]*

விழக்குழிபாய்ச்சு-தல் *vila-k-kuli-pāyccu-,* 9 செ.கு.வி. (v.i.) 1. படுகுழியில் வீழ்த்துதல்; to throw into a deep pit. 2. பிறனுக்கு இடையூறு செய்து வினைக்கேடு விளைத்தல்; to thwart an undertaking by putting obstacles in the way.

*[விழு → விழ + குழிபாய்ச்சு-,]*

விழத்தட்டு-தல் *vila-t-tattu-,* 5 செ. குன்றாவி.(v.t.) 1. கீழ்விழும்படித் தள்ளுதல்; to overthrow, fell down. 2. பிறன் கையிலுள்ளதைத் தட்டிவீழ்த்துதல்; to fall a thing dashing out of another's hand.

*[விழு → விழ + தட்டு-,]*

விழத்தள்ளு-தல் *vila-t-tallu-,* 5 செ. குன்றாவி.(v.t.) விழத்தட்டு-, (வின்.) பார்க்க; see *vila-t-tattu.*

*[விழு → விழ + தள்ளு-,]*

விழம்பு *vilambu,* பெ.(n.) சோறு (யாழ்.அக.); boiled rice.

*[அவிழ் → விழம்பு]*

விழல்[1] *vilal,* பெ.(n.) விழுகை; falling. *"பாவாடை விடலொன்றே நரகத்தில் விழலொன்றே".*

*[விள் → விழல்] (வே.க.156)*

விழல்[2] *vilal,* பெ.(n.) 1. பயனின்மை; worthlessness, being valueless. *"அழல தோம்பு மருமறையோர் திறம் விழல தென்னு மருகர்" (தேவா. 366, 7) (பிங்.).* 2. நாணற்புல் வகை; a variety of sacred grass. *"காமரெழில் விழலுடுத்த" (திவ். பெருமாள். 9, 7).* 3. பயனற்ற கோரைவகை; a kind of sedge. 5. ஒரு நறுமண வேர்; cuscus grass.

*[விள் → வெள் → விழல்]*

**Ma.** *viral;* **Ka.** *biril;* **Te.** *vidavali.*



விழல்கட்டி *vilal-katti,* பெ.(n.) விழற்புல்லாற் பின்னுவோன் (இ.வ); one who knits sacred grass.

*[விழல் + கட்டு → கட்டி]*

விழலரிசி *vilalarisi,* பெ.(n.) புல்லினத்தைச் சேர்ந்த கோரையரிசி; rice of the sedge.

*[விழல் + அரிசி]*

இவ்வரிசியை நொய்யாக்கிக் கஞ்சி காய்ச்சியுண்ண எந்நோய்கள் நீங்கும் என்பதை

குணபாடப் பாடல் காட்டுகிறது.

"விழலரிசி யென்றான் மிகுபித்த மேகும்
அழல் குடலின் வாதம் அகலும் – துழவு
திரிதோட மேகவிவை சேராவா நீயுங்
குறியா இதையறிந்து கொள்" (கு.பா.)

**விழலன்** *viḻalaṉ,* பெ.(n.) ஒன்றுக்கும் உதவாதவன்; idler, worthless man, a man of good for nothing. *"விழல னெனையாள நினைவாய்" (திருவேங். சத. 86).*

மறுவ. உதவாக்கரை, விழலி.

*[விழல் → விழலன்] (வே.க.156)*

**விழலாண்டி** *viḻal-āṇḍi,* பெ.(n.) சோம்பித்திரியும் வீணன் (வின்.); idler, worthless man; lazy fellow.

*[விழல் → விழலாண்டி] (வே.க.156)*

**விழலி** *viḻali,* பெ.(n.) ஒன்றுக்கும் உதவாதவள்; idle woman, worthless woman, a woman of good for nothing. *"வீணிகள் விழலிகள்" (திருப்பு. 890).*

*[விழல் → விழலன் → விழலி] (வே.க.156)*

**விழலுக்கிறை-த்தல்** *viḻalukkiṟai-,* 4 செ.கு.வி. (v.i ) வீண்பாடுபடுதல்; to labour unprofitably, as watering unproductive grass. *'விழலுக் கிறைத்த நீர்போல' (பழ.).*

*[விழலுக்கு + இறை-,]*

**விழவணி** *viḻa-v-aṇi,* பெ.(n.) நன்னாளில் அணியும் ஒப்பனை; adornment of the person on festive occasions, as marriage etc. *"வதுவை விழவணி வைகலுங் காட்டினை" (கலித். 98).*

*[விழவு + அணி]*

**விழவர்** *viḻavar,* பெ.(n.) விழா கொண்டாடுவோர்; those who celebrate a festival. *"தண்பதங்கொள் விழவ ரோதை சிறந்தார்ப்ப" (சிலப். 7, பக். 206).*

*[விழா → விழவு → விழவர்]*

*ஒ.நோ. உழவு → உழவர்*

**விழவாற்றுப்படு-த்தல்** *viḻavāṟṟu-p-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) விழாவை நிறைவு செய்தல்; to bring a festival to a close, ralidiction. *"விழவாற்றுப்படுத்த பிற் புல்லென்ற களம்போல" (கலித். 5.)*

*[விழவு → விழா + ஆற்றுப் படு-த்தல்,]*

**விழவி** *viḻavi,* பெ.(n.) பூடுவகை; a plant. *"ஒருபிடி விழவியிலையும்" (தஞ். சர.* iiii, 290).

**விழவு** *viḻavu,* பெ.(n.) 1. விழா பார்க்க; see *viḻā. "முந்நீர் விழவி னெடியோன்" (புறநா. 9).* 2. விளையாட்டு; pastime. *"ஊரனொடப்பு விழவமரும் பணிமொழி யரிவை" (பு.வெ.12. பெண்பாற். 10).* 3. அவா (அரு.நி.); desire, longing. 4. இரட்டை ஓரை (மிதுனராசி) (பிங்.); gemini of the zodiac.

*[விழா → விழவு]*

**விழவுக்களம்** *viḻavu-k-kaḷam,* பெ.(n.) விழா நடைபெறும் இடம்; place of celebration of a festival. *"விழவுக்கள நந்தி" (குறிஞ்சிப். 192).*

*[விழா → விழவு + களம் 2]*

**விழவேடெடு-த்தல்** *viḻa-v-ēḍeḍu-,* 4 செ.கு.வி. (v.i.) நூலினைத் திருடிக் கொள்ளுதல்; to steal one's book. *"அவ்வூரில் விழவே டெடுத்துக் கொண்டறிதல்..... செய்வாரில்லை" (திவ். பெரியதி. 8,1, 8. வ்யா.).*

*[விழ + ஏடு + எடு-,]*

**விழற்கட்டு** *vil̤ar-kaṭṭu,* பெ.(n.) விழற்புல் வேய்ந்த வீடு (யாழ்.அக.); house thatched with *vil̤al* grass.

*[விழல் + கட்டு]*

**விழற்கிறை–த்தல்** *vil̤arkiṟai-,* 4 செ.கு.வி. (v.i.) விழலுக்கிறை–, பார்க்க; see *vil̤alu-k-kiṟai-.* *"சுத்தப் பாமரராய் விழற்கிறைத்துப் பட்டனரால்" (பிரபோத. 13, 14), 'விழலுக்கு இறைத்த நீர்' (பழ.).*

*[விழலுக்கு + இறை–,]*

**விழற்கூரை** *vil̤ar-kūrai,* பெ.(n.) விழற்புல் வேய்ந்த கூரை; roof of *vil̤al* grass thatch.

மறுவ. கூரைவீடு.

*[விழல் + கூரை]*



**விழற்பாய்** *vil̤ar-pāy,* பெ.(n.) விழற்புல்லாற் பின்னிய பாய்; mat made of *vil̤al* grass. *'வெயில்நாளில் விழற்பாயும் குளிர்நாளில் கோரைப்பாயும்' (உ.வ.).*

*[விழல் + பாய்[2]]*

**விழா** *vil̤ā,* பெ.(n.) 1. விழாக்கொண்டாட்டம்; festive occasion, festivity, celebration of an event. *"ஆலமர் செல்வன்... மகன் விழாக் கால்கோளென்று" (கலித். 83).* 2. திருமணக் கொண்டாட்டம்; celebration of a marriage. *"அரசிளங் குமரர்க்குயர் விழா நடத்தி" (திருவாலவா. 25, 24).*

ம. விழா.

*[விழு → விழை → விழா]*

[விழாக்கள் பண்டைக்கால மக்கள் ஒன்று சேர்ந்து நடத்தும் கூட்டுச் சடங்கிலிருந்து தோன்றியனவாகும். பண்டைமக்கள், தனி ஒருவருக்கோ குழுவினருக்கோ தீங்கான நெருக்கடி உண்டாகும் காலத்தில் அதை நீக்கிக் கொள்வதற்காகவும், அந்தக் காலத்தில் உண்டாகும் உள்ளக்கிளர்ச்சி அமைதி யடைவதற்காகவும் சடங்குகளில் கலந்துகொள்வது வழக்கமாயிருந்தது.

நாட்டுப்புறத்தில் நடைபெறும் பலவகையான விழாக்கள் பெரும்பாலும் மதத் தொடர்பானவையாகும். இந்த விழாக்கள் புராண இதிகாசங்களிலுள்ள பல நிகழ்ச்சிகளை அடிநிலையாகவுடையன. இவை நாடகம், நடனம், பாடல்கள், விளையாட்டுகள் என்றவாறு கொண்டாடப்பெறும். இவை மக்களை ஒற்றுமைப்படுத்தும்; மதக்கொள்கைகளை இறவாமல் பாதுகாக்கும் ஆற்றலுடையன.

வேளாண்மை செய்வோர் பருவகால வேறுபாடுகளுக்குத் தக்க விழாக்களும், நாற்று நடுதல், அறுவடை செய்தல் போன்ற பல நிகழ்ச்சிகளுக்குத் தக்க விழாக்களும் உடையர். கடக(ஆடி)த் திங்களில் தென்னிந்திய ஆறுகள் வெள்ளப் பெருக்குடையன. அக்காலங்களில் மக்கள் ஆற்றுத் தெய்வங்களை வழிபடும் விழாக்கள் நடத்திப் பயிரிடத் தொடங்குவர். சுறவத்(தை) திங்களில் அறுவடை விழாவாகப் பொங்கல் விழாவைக் கொண்டாடுவர். அச்சமயம் அறுவடை செய்த தவசத்தை ஞாயிற்றுக் கடவுளுக்குப் படைப்பர். இவ்வாறு இந்திய மக்கள் மற்ற நாட்டார் போலவே வாழ்வின் இன்றியமையாத கட்டங்களில் விழாக்களை நடத்தி, நாகரிகத்தை இறவாமற் பாதுகாப்பர்]

**விழாக்கடி** *vil̤ā-k-kaḍi,* பெ.(n.) விழாக்காட்சி (வின்.); sights of a festival.

*[விழா + கடி[5]]*

**விழாக்கால்கோள்** *viḻā-k-kāl-kōḷ,* பெ.(n.) திருவிழாத் தொடக்கம்; commencement of a festical. *"ஆலமர் செல்வன் மகன் விழாக் கால்கோள்" (மணிமே. 3, 144.).*

*[விழா + கால்கோள்]*

**விழாக்கோள்** *viḻā-k-kōḷ,* பெ.(n.) திருவிழாக் கொண்டாட்டம்; celebration of a festival. *"விழாக் கோளெடுத்த நாலேழ் நாளினும்" (மணிமே. 1, 7).*

*[விழா + கோள்]*

**விழாக்கோளாளர்** *viḻā-k-kōḷāḷar,* பெ.(n.) அரசர் முதலியோர் ஆணைப்படி திருவிழா நடத்துவோர்; those who conduct a festival, as by order of a king and others. *"விழாக்கோ ளாளரைக் குழாத்திடைத் தரீஇ" (பெருங். உஞ்சைக். 37, 247).*

*[விழாக்கோள் + ஆளர்]*

**விழாப்புறம்** *viḻā-p-puṟam,* பெ.(n.) திருவிழா நடைபெறுதற்கு விடப்பட்ட இறையிலி நிலம் (T.A.S.i,6); land-endowment for the conduct of festivals.

*[விழா + புறம்¹]*

**விழால்** *viḻāl,* பெ.(n.) விழாலரிசி (தைலவ.) பார்க்க; see *viḻāl-ariśi.*

*[விழல் → விழால்]*

**விழாலரிசி** *viḻāl-ariśi,* பெ.(n.) ஒருவகைப் புல்லரிசி (தைலவ.); seed of a kind of grass.

தெ. விடவலி.

*[விழால் + அரிசி]*

**விழாவணி** *viḻā-v-vaṇi,* பெ.(n.) 1. விழவணி பார்க்க; see *viḻa-v-aṇi.* 2. திருவிழாச் சிறப்பு; ceremonial grandeur, as of festivities. *"நித்தல் விழாவணி நிகழ்வித் தோனே" (சிலப். உரைபெறுகட். 4).* 3. வீரனது போர்க்களம்; state or appearance of an armed warrior for battle. *"வில்லின் செல்வன் விழாவணி விரும்பி நோக்கி" (கம்பரா. மீட்சிப். 55).*

*[விழா + அணி]*

**விழி¹-த்தல்** *viḻi-,* 11. செ.கு.வி. (v.i.) 1. கண்திறத்தல்; to awaken; to open the eyes. *"இமையெடுத்துப் பற்றுவே னென்றியான் விழிக்குங்கால்" (கலித். 144).* 2. உறக்கம் தெளிதல்; to wake from sleep. *"உறங்கி விழிப்பது போலும் பிறப்பு" (குறள்,339).* 3. விழிப்பாக இருத்தல்; to be watchful, beware of, to be vigilant, to be wide awake alert. *'அவன் சோர்வு போகாமல் விழித்துக் கொண்டிருப்பவன்'.* 4. உண்ணித்து நோக்குதல்; to look at attentively or pointedly. *"நாட்டார்கள் விழித்திருப்ப... நாயினுக்குத் தவிசிட்டு" (திருவாச. 5, 28).* 5. மருண்டு நோக்குதல்; to gaze, stare. *"விண்ணின்று மிழியாம லெப்போதும் வானோர் விழிக்கின்றதே" (பிரபோத. 6, 14).* 6. ஒளிர்தல்; to shine. *"பொன்னு ணிருள் கெட விழிப்ப" (சீவக. 2280).* 7. தெளிவாதல்; to be clear. *"மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்றா" (தொல். சொல். 394).* 8. உயிர் வாழ்தல்; to be alive. *"அழற்கணாக மாருயிருண்ண விழித்தலாற்றேன்" (மணிமே. 23, 70).*

*[விள் → விழி → விழி-,] (வே.க.143)*

**விழி**[2] *viḻi,* பெ.(n.) 1. கண் (பிங்.); eye. *"விழியிலா நகுதலை" (தேவா. 345, 5).* 2. மிண்டை; eye-ball. 3. அறிவு; knowledge; wisdom. *"தேறார் விழியிலா மாந்தர்" (திருமந். 177).*

**Skt.** வித்; ம. மிழி.

*[விள் → விழி]*

விழி = 1. அறிவு. 2. ஓதி (ஞானம்).

"தேறார் விழியிலா மாந்தர்" (திருமந். 177).

**L.** Vide, **E.** vide, **Skt.** Vid = to know.

வித்யா, வித்வான், வைத்ய, வேத, வேதஸ் (dh.) முதலிய பலசொற்கள் 'வித்' என்னும் மூலத்தினின்று பிறந்தவையே.

ஆகவே ஆரியர்க்கு ஞானமும் வித்தையும் தமிழினின்றே தோன்றின என அறிக.

வித்யா என்னும் வடசொல், தமிழில் வித்தை, விச்சை, விஞ்சை என முறையே திரியும். ஆரியர் இதைக் கொண்டு, விழி என்பதன் திரிபே 'வித்' என்பதை அறியாத தமிழரை மயக்குவர் (வ.மொ.வ.92).

**விழிக்கட்பேதைப்பெருங்கண்ணனார்** *viḻi-kaṭ-pēdai-p-peruṅkaṇṇaṉār,* பெ.(n.) கடைக்கழகப் புலவர்; a sangam poet.

கடைக்கழகக் காலப் புலவருள் ஒருவர். இவரியற் பெயர் பெருங்கண்ணனார் என்பது இவர் செய்யுளில் (நற். 242) மான் குட்டியை விழிக்கட் பேதையென அழைத்துள்ளதால் இப்பெயர் பெற்றாரென்பர்.

**விழிகண்குருடு** *viḻi-kaṇ-kuruḍu,* பெ.(n.) வெளித்தோற்றத்தில் விழியில் மாறு பாடின்றியே கண்தெரியாமை; blindness without any apparent defect in the eye. *"அவமுறு விழிகண்குருடொடு மாவி யயர்வுறும்" (கடம்ப. பு. இலீலா. 104.).*

*[விழிகண் + குருடு]*

**விழிகண்ணன்** *viḻi-kaṇṇaṉ,* பெ.(n.) கண்பார்வையுள்ளவன்; one who is not blind. *'குருடர்க்கு வைத்த அறச்சாலையில் விழிகண்ணர் புகுதரலாமோ வென்று' (திவ். அமலனாதி. 3, வ்யா. பக். 46).*

*[விழி + கண்ணன்]*

**விழிச்சி** *viḻicci,* பெ.(n.) காதுக்குள் வெடிக்குங்கட்டி (M.L); inflammation of the internal ear, otitis.

மறுவ. எழுச்சி.

**விழிஞம்** *viḻiñam,* பெ.(n.) திருவிதாங் கூரிலுள்ள ஒரு துறைமுகப்பட்டினம்; a harbour town on the seacost of Travancore. *"விழிஞக் கடற் கோடியுள் வேல்வலங்கைக் கொண்டான்" (இறை. 3, உரை).*

**விழிதுறை** *viḻituṟai,* பெ.(n.) 1. நீர்க்கரை; shore, bank, ford. 2. இறங்குதுறை; ghat, ford.

*[இழிதுறை → விழிதுறை]*

**விழிப்ப** *viḻippa,* இடை.(part.) முற்றும் விளங்க, தெளிவாக; to be clear, to illustrate. *"மொழிப் பொருட் காரணம் விழிப்பத்தோன்றா" (தொல்.உரி.96).*

சொற்களின் பொருட்களுக்குக் காரணம் உண்டு என்பது மட்டும் தேற்றம்.

**விழிப்பு** *viḻippu,* பெ.(n.) 1. விழிக்கை; waking up, awakening. 2. எச்சரிக்கை; watchful ness, vigilance, awareness. 3. சிறந்து விளங்குகை (வின்.); conspicuousness, prominence. 4. செய்வது தெரியாமல் திகைக்கை; blinking caution in ignorance.

*[விள் → விழி → விழிப்பு]*

விழிபிதுங்கு-தல் *viḻi-piduṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) வேலை நெருக்கடியால் வருந்துதல்; to suffer from over work.

*[விழி + பிதுங்கு-,]*

விழிமி *viḻimi,* பெ.(n.) விழுதி (பிங்.) பார்க்க; see *viḻudi.*

விழியம் *viḻiyam,* பெ.(n.) வித்தமிழ்து; semen.

விழியன் *viḻiyaṉ,* பெ.(n.) 1. பெருங் கண்ணுடையவன் (வின்.); one having large prominent eyes. 2. பிதுங்கிய விழி யுடையவன்; one having bulging eyes.

*[விழி → விழியன்]*

விழிவாதம் *viḻi-vādam,* பெ.(n.) இமைகளையாட்டும் கண்ணோய்வகை (சீவரட்); a disease of the eye that causes twitching.

*[விழி +* **Skt.** *vāda > த. வாதம்]*

விழிவிழுங்கி *viḻi-viḻuṅgi,* பெ.(n.) கண்ணோய்வகை (யாழ்.அக.); an eye-disease.

*[விழிவிழுங்கு → விழிவிழுங்கி]*

விழு[1]-தல் *viḻu-,* 4 செ.கு.வி. (v.i.) 1. கீழ் நோக்கி யிழிதல்; to fall, fall down, to descend; to flowdown. *“விழூஉமவ்வெள் ளருவி” (பதிற்றுப். 78, 1).* 2. நிலம் படியச் சாய்தல்; to lie prostrate, as in reverence. *“பாடல் புரிந்து விழுந்தெழுந்து..... பயில்வித்தார்” (பெரியபு. திருநா. 309).* 3. சோர்ந்து வீழ்தல்; to fall down exhausted. *“வெஞ்சினவீரர் விழுந்தனர்” (கம்பரா. இராவணன்வதை. 36.).* 4. நோய் வாய்ப்பட்டுக் கிடத்தல்; to fall sick or ill, to be bed-ridden. 5. தோற்றுப்போதல்; to be defeated or overthrown. *‘அவன் வாக்கு வாதத்தில் விழுந்துவிட்டான்’. ‘விழுந்தாலும் மீசையில் மண் ஒட்டவில்லை என்கிறார்’.* 6. தாழ்தல்; to fall low, decline, slash as prices, to sink to a lower leve. *‘விலை விழுந்து விட்டது’.* 7. கெடுதல்; to be destroyed, ruined. *“விழுந்தன கொடிய தீவினைப் பரப்பெலாம்” (பிரபுலிங். அக்கமா. உற். 11).* 8. சாதல்; to die. *‘அவர் விழுந்து போனார்’.* 9. மறைதல்; to set, as the sun. *“விழுந்த ஞாயிறு வெழுவதன் முன்” (கம்பரா. காப்பு. 9).* 10. வழக்கிலின்றி ஒழிதல்; to fall into desuetude to be iobsolete. 11. தங்குதல்; to settle, to be fixed. *‘அவன் நினைவு அதிலே விழுந்தது’.* 12. திரண்டு கூடுதல்; to crowed to gether, to swarm. *‘மக்கள் வந்து விழுகிறார்கள்’.* 13. கிடைத்தல்; to be allotted, to fall to one's lot or share. *‘சீட்டு அவனுக்கு விழுந்தது’.* 14. பதிதல்; to be imprinted. *‘புகைப்படம் நன்றாய் விழுந்திருக்கிறது’.* 15. வெளித் தோன்றுதல்; to appear, to be formed, to come out. *‘துளை விழுந்த மரம்’. ‘மாட்டுக்கு இரண்டு பல் விழுந்திருக்கிறது’. ‘கிழங்கு விழுந்தது’.* 16. நேர்தல்; to take place, happen. 17. கழிதல்; to pass, to pass away. *‘இப்படி நாள் விழுகை யாலும்’ (S.I.I.V.140).* 18. ஒருவன் மீது தாக்கிச் செல்லுதல். *‘பகைமேல் விழுந்தான்’.* 19. விருப்பங் கொள்ளுதல்; to exhibit desire. *"ஐம்புலன் மேல் விழுந்து” (திருநூற். 13).* 20. இடத்திற் பொருந்துதல்; to fit into position. 21. உரிமை முதலியன இறங்குதல்; to devolve. 22. பிறத்தல்; to be born, used in contempt. *‘பெண் கட்டை விழுந்தது’.* 23. சொல் முதலியன வெளிப்படுதல்; to

issue, proceed from,, as speech. 24. பிரிவு படுதல்; to become detached. 25. கீழ் நோக்கிப் பாய்தல்; to swoop. 26. ஆறு முதலியன கூடுமிடம்; to decharge, empty as ariver. 27. தொங்குதல்; to hang down, droop. 28. கடுஞ்சினங் கொள்ளுதல்; to fall into a rage. 29. முகம் முதலியன வாடுதல்; to lose animation, as face. 30. பணம் முதலியன முடங்கிக் கிடத்தல்; to be locked up, as capital.

க. பீழு; **Ma.** *viruka*; **Ko.** vig; **To.** pid; **Ka.** *birisu*; **Kod.** bu.L; **Tu.** *būruni*; **Te.** biddu; **Kui.** *vriva*; **Kuwi.** briali.

*[வீழ் → விழு–,]*

**விழு[2]–தல்** *viḻu-,* 4 செ.கு.வி. (v.i.) விரும்புதல், விருப்பங்கொள்ளுதல்; to desire. *"ஐம்புலன்மேல் விழுந்து" (திருநூற். 13) (வே.க.119).*

**விழு[3]–த்தல்** *viḻu-,* 11 செ.குன்றாவி. (v.t.) 1. விழச் செய்தல்; to cause to fall, to throw down. *"பழைய கால்விழுத்த நெடுவேலைவீழ் வெற்பனை" (பாரத. இராசசூய. 64).* 2. மடியச் செய்தல்; to cause to die. *"நமன்றமர்... விழுப்பதன் முன்" (தேவா. 420. 6).* 3. களைதல்; to abandon, to remove, mitigale, enadicate. *'அரைத்துணியை விழுத்து வை'.*

*[விழு[1] → விழு–,]*

**விழு[4]** *viḻu,* பெ.எ.(adj.) 1. சிறந்த; excellent, sublime pure, blessed. *"விழுப்பேற்றி னஃதொப்ப தில்லை" (குறள்,162).* 2. துன்பமான (சீவக. 2355); distressing, grievous.

*[விழு[1] → விழு]*

**விழுக்காடிடு–தல்** *viḻukkāḍiḍu-,* 18 செ. குன்றாவி.(v.t.) கூறிடுதல்; to apportion. *"ஒன்று மிரண்டுமாகப் பகழியை விழுக்காடிட்டு" (சீவக. 798, உரை).*

*[விழுக்காடு + இடு–,]*

**விழுக்காடு** *viḻukkāḍu,* பெ.(n.) 1. வீழ்கை; falling, flowing down, as of a waterfall. *"மலைநீர் விழுக்காடு" (திருவாலவா. 54, 9).* 2. கீழ் நோக்கான பாய்ச்சல்; swoop, as of a kite. *"பருந்தின் விழுக்காடு" (நன். 18, மயிலை.).* 3. பங்கு(வின்.); share, portion, lot. 4. மேனி; proportion, rate. *"நூறுகுழிக்குக் கலனேநானாழி நெல்லும் கால் பணமும் விழுக்காடு கொள்ளக் கடவதாகவும்"* (S.I.I.i, 93, 7). 5. தற்செயல்; chance. *"பகவத் குணானுபவம் வழிந்த பேச்சுகள் விழுக்காட்டாலே பண்ணான படி" (ஈடு. 3, 6, 11).* 6. மேல்வருவது; that which is in store in the future. *"இவனும் விழுக்காடறியாதே அகப்பட்டுக் கொடு நின்றான்" (ஈடு. 6, 1, 5, ஜீ.).* 7. பொருளின்றிக் கூட்டியுரைக்கப்படுஞ் சொல்; expletive. *"என்றால் என்பது ஓர் சொல் விழுக்காடு" (சீவக. 1886, உரை).* 8. எதிர்நிலைப் பொருள்; implication, implied sense. *"விழுக்காட்டாலே சொன்னார்" (ஈடு. 3, 3, 5.).*

**விழுக்கு[1]** *viḻukku,* பெ.(n.) மென்று தின்னாமல் ஒருசேர வுட்கொள்ளுகை; gulp, swallow. *'ஒரு விழுக்கு விழுங்கினான்'.*

*[விழுங்கு → விழுக்கு]*

**விழுக்கு[2]** *viḻukku,* பெ.(n.) 1. ஊன் கொழுப்பு; fat, suet. *"விழுக்கொடு விரைஇய வெண்ணிணச் சுவையினள்" (புறநா. 371).* 2. எண்ணெய்ப் பிசுக்கு; oiliness, grease.

ஒ.நோ. விழுது.

**விழுக்குப்புரட்டு** *vilukku-p-purattu*, பெ.(n.) எண்ணெயில் வேகவைத்தெடுத்த கறிவகை (நாஞ்.); a relish prepared in oil.

மறுவ. வறுவல்.

*[விழுக்கு + புரட்டு]*

**விழுங்கு-தல்** *vilungu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. மென்று தின்னாமல் ஒருசேர வுட்கொள்ளுதல்; to swallow, gulp, as food. *"தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று" (குறள், 931).* 2. முற்றும் விழுங்குதல்; to devour, consume, to absorb, to exhaust. *'நெருப்பு எல்லாவற்றையும் விழுங்கிவிட்டது'.* 3. தெளிவின்றிப் பேசுதல் (வின்.); to ulter indistinctly. 4. சொற்களை மழுப்புதல்; to be hesitant in speech, slurring over words. *'ஏன் விழுங்கி விழுங்கிப் பேசுகிறாய்'.* 5. வெல்லுதல்; to overcome. *"வெம்பு காலினை விழுங்கிட... உம்பர் மீதினிமிர் வாசுகி யொத்தான்" (கம்பரா. இராவணன் தானை. 3).* 6. கவர்தல்; to seize, capture, rob. *"விடையுடை யினநிரை விழுங்கன் மேயினார்" (சீவக. 1817).* 7. கொல்லுதல்; to kill. *"கல்லாமந்திரி விஷழுங்கப்பட்டான்" (சீவக. 385).* 8. எங்கும் நிறைதல்; to pervade; to swarm everywhere. *"வானகம் விழுங்கினர் விண்ணவர் வெளியின் றென்னவே" (கம்பரா. திருவவ. 85).*

தெ. மிங்கு; க. முங்கு; ம. விழுங்க.

**விழுங்கும்பாம்பு** *vilungum-pāmbu*, பெ.(n.) மதிற்பொறிவகை (சிலப். 15, 216, உரை); a deadly defensive machine in a fortress.

*[விழுங்கு + பாம்பு]*

**விழுச்சிறை** *vilu-c-cirai*, பெ.(n.) சீரிய சிறைவாசம்; imprisonment without loss of dignity or honour. *"விலங்கி வில்லுமிழும் பூணான் விழுச்சிறைப் பட்டபோழ்தும்" (சீவக. 1167).*

*[விழு[4] + சிறை]*

**விழுச்செல்வம்** *vilu-c-celvam*, பெ.(n.) பெருஞ்செல்வம்; great fortune, immense wealth; imperishable treasure. *"கேடில் விழுச்செல்வங் கல்வி" (குறள், 400).*

*[விழு[1] + செல்வம்]*

**விழுசுமை** *vilu-šumai*, பெ.(n.) பெருஞ்சுமை (யாழ்.அக.); heavy burden.

*[விழு[1] + சுமை]*

**விழுத்தகை** *vilu-t-tagai*, பெ.(n.) பிறர்க்கில்லாத சிறப்பு; unequalled or uncomparable excellence. *"விழுத்தகை பெறுகென" (பரிபா. 11, 117).*

*[விழு[4] + தகை]*

**விழுத்தண்டு** *vilu-t-tandu*, பெ.(n.) பெரிய ஊன்றுகோல்; large stick for support in walking. *"தொடித்தலை விழுத்தண் டூன்றி" (புறநா. 243).*

*[விழு + தண்டு]*

**விழுத்தம்** *viluttam*, பெ.(n.) கருஞ்சீரகம் (வின்.) பார்க்க; see *karuñcīragam*. black cumin.

**விழுத்தாட்டு-தல்** *vilu-t-tāttu-*, 5 செ. குன்றாவி.(v.t.) விழத்தட்டு–, பார்க்க; see *vila-t-tattu-*.

*[விழுக்காட்டு → விழுத்தாட்டு]*

**விழுத்திணை** *vilu-t-tinai*, பெ.(n.) உயர்குலம்; noble family. *"வேற்றுமை யில்லா*

*விழுத்திணைப் பிறந்து" (புறநா. 27).*

*[விழு¹ + திணை]*

விழுத்து¹–தல் *viḻuttu-*, 5 செ.குன்றாவி.(v.t.) விழு²–, பார்க்க; see *viḻu.* *"விழுத்தினன் சிரமெனும் வெகுளி மீக்கொள" (கம்பரா. இராவணன்வதை. 155).*

க. பிளிசு.

*[விழு → விழுத்து]*

விழுத்து² *viḻuttu,* பெ.(n.) இலக்கு; direction, aim, goal. *"அந்த விழுத்திலே ஓடினேன்" (இ.வ.).*

*[விழு → விழுத்து]*

விழுதி *viḻudi,* பெ.(n.) மருந்துச் செடிவகை; a straggling shrub with wimple oblong leaves and greenish flowers.

இரட்டை விதையிலை நிலைத்திணைகளிலே ஆதொண்டைக் குடும்பத்தைச் சேர்ந்த புதர் போன்ற குற்றுமரம். இதன் இலைகள் தனியிலைகள். கனி சூலகம் தாங்கியின் முனையில் இருக்கும். அது வெடிக்கும் விதைகளைச் சுற்றிலும் கிச்சிலி நிறமான சவ்வு மூடியிருக்கும். பறவைகள் இதைத் தின்னும். விதைகள் பறவைகளால் பரவலுறும். விழுதியின் இலையும் வேரும் மருந்தாகப் பயன்படும்.

விழுதிக்கீரை *viḻudi-k-kīrai,* பெ.(n.) விழுதியின் இலை; leaves of *viḻudi.*

*[விழுதி + கீரை]*

*"விழுதித் தழைகரப்பான் வெண்மேகம் நீங்கும்*
*பழுபடுவன் சூலைநோய் மாறும் – எழுபேதி*
*யாக்குமதி மந்தம் அகக் கிருமி துன்மலமும்*
*போக்கும் அதுவே புகல்" (கு.பா.)*

விழுது *viḻudu,* பெ.(n.) 1. ஆலமரம் முதலியவற்றின் கிளைகளினின்று இறங்கும் வேர்த்தொகுதி (பெரும்பாண். 357, உரை); aerial root, as of the banyan. *"விழுதுடைத் தனியாலென விருந்த தொல்வியாதனை முகநோக்கி" (வில்லி. பாரத. சம்பவச்சருக்கம். 10.)* 2. தலை மயிர்ச் சடையின் ஒருகால் (இ.வ.); lock of hair. 3. நெசவுக்கருவி யுறுப்புள் ஒன்று; heddles. 4. ஆழமளக்குங் கருவி (Naut.); lead for sounding. 5. இறுகிக் கட்டியான நெய்; ghee in congealed state. 6. வெண்ணெய்; butter. *"ஆய்ச்சி விழுதுண்ட வாயானை" (திவ். இயற். 3. 25).* 7. கொழுப்பு (வின்.); fat. 8. நீர் விட்டரைத்துத் திரட்டியது; paste, pulpy mass. *'இந்த உழுந்து தோசைக் கரைத்தால் விழுது காணுமா?'*

க. பிலலு; ம. விழுது; தெ. *ūḍa.*

*[விழு → விழுது]*



விழுதுக்கயிறு *viḻudu-k-kayiṟu,* பெ.(n.) 1. நெசவுக் கயிறுவகை; thread of linen, wound on the two beams, which the slay moves up and down. 2. கடலின் ஆழமறிய உதவுங்கயிறு; (Naut. Man.71) sounding-line.

*[விழுது + கயிறு]*

விழுதுசாந்து *viḻudu-šāndu,* பெ.(n.) மையாக அரைத்த சுண்ணச் சாந்து (இ.வ.); mortar ground to a pulpy mass.

[விழுது + சாந்து]

விழுதுவிடு-தல் *viludu-vidu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. ஆல் முதலியவற்றின் கிளைகளினின்றும் வேர் வெளிப்பட்டுத் தோன்றுதல்; to drop or let down aerial roots, as banyan. 2. ஆழமளத்தல் (வின்.); to take soundings, to cast the lead-line.

[விழுது + விடு-,]

விழுந்தான்கொட்டு *vilundān-koṭṭu,* பெ.(n.) ஒருவன் இறந்ததைக் குறிக்கும் பறைமுழக்கு (இவ); a peculiar beat of drum, indicating the death of a person.

மறுவ. சாப்பறை.

[விழுந்தான் + கொட்டு]

விழுந்துபோ-தல் *vilundu-pō-,* 8 செ.கு.வி. (v.i.) 1. கீழ் விழுதல்; to fall down. 2. இறத்தல்; to die. 3. குறுக்கு வழியாகச் செல்லுதல்; to cut across. *'அந்த ஊருக்கு இந்த வழியே விழுந்து போகவேண்டும்'.*

[விழு → விழுந்து + போ-,]

விழுப்பகை *vilu-p-pagai,* பெ.(n.) சீரிய பகை; enmity towards the great. *"வேந்தனொடு நாடுதரு விழுப்பகை யெய்துக" (புறநா. 306).*

[விழு[4] + பகை]

விழுப்பம் *viluppam,* பெ.(n.) 1. விழுமம் 1, பார்க்க; see *vilumam. "ஒழுக்கம் விழுப்பந் தரலான்" (குறள், 131).* 2. நன்மை (பிங்.); good, benefit. 3. குலம் (பிங்.); family ancestry pedigree. 4. விழுமம், 4 பார்க்க; see *vilumam. "நின் விழுப்ப நீக்குதி" (விநாயகபு. 57, 23.).*

[விழு → விழுப்பம்]

விழுப்பரையன் *vilupparaiyan,* பெ.(n.) 1. விழுப்பாதராயன், 1 **(I.M.P.Tj. 89)** பார்க்க; see *vilu-p-pāda-rāyan.* 2. விழுப்பாதராயன், 2 பார்க்க; see *vilu-pāda-rāyan. "வேளாளனான விழுப்பரை யனுக்குக் கோயிற்கணக்கனென்றும்" (கோயிலொ. 44).*

[விழுப்பம் + அரையன்]

விழுப்பாதராயன் *vilu-p-pāda-rāyan,* பெ.(n.) 1. தமிழ் அரசர்க்குக் கீழ்ப்பட்ட தலைவரில் ஒருசாராரின் பட்டப்பெயர்; a title of a class of vassals of the Tamil kings.(I.M.P.Sm.47). 2. கோயிலிற் கடவுள் திருமுன்பு கணக்கு வாசிக்கும் உரிமையுடைய மரபினன்; a class of people whose duty is to read the accounts of a temple in the presence of the deity. *"பாண்டி பதினாலுக்கும் வேண்டிய விழுப்பா தராயர்" (திருவாலவா. அரும்.).*

[விழு[4] + பாதம்[1] + அரையன் → ராயன்]

விழுப்பாதிராசன் *vilu-p-pādi-rāšan,* பெ.(n.) விழுப்பாதராயன், 1 (I.M.P.Tj. 1092) பார்க்க; see *vilu-p-pāda-rāyan.* .

விழுப்பிணி *vilu-p-piṇi,* பெ.(n.) தீராத முற்றிய நோய்; disease in an advanced acute and incurable stage. *"விழுப்பிணிப்போழ்து மறுமை மனத்தாரேயாகி" (நாலடி, 329).*

[விழு[4] + பிணி]

விழுப்பு[1] *viluppu,* பெ.(n.) 1. கழிக்கப்படுவது; anything cast off . *"விழுப்புற வதுக்கியிட்டு" (சீவக. 2771).* 2. நீராடுதல் செய்யுமுன் உள்ள தூய்மையின்மை; state of ceremonial impurity before daily bath. *'விழுப்புத் துணி'.*

*[விழு → விழுப்பு]*

**விழுப்பு[2]** *viḻuppu,* பெ.(n.) விழுப்பம் 1,3,4 (அரு.நி.) பார்க்க; see *viḻuppam.*

*[விழுப்பம் → விழுப்பு]*

**விழுப்புண்** *viḻu-p-puṇ,* பெ.(n.) 1. போரில் முகத்தினும் மார்பினும் பட்ட புண்; wound of a warrior on his face or chest received in battle. *"விழுப்புண் படாத நாளெல்லாம் வழுக்கினுள் வைக்கும்" (குறள், 776).* 2. இடும்பை தரும் புண்; grievous wound. *"கொழுவாய் விழுப்புண் குரைப்பொலியும்" (சீவக. 2355).*

*[விழு[4] + புண்]*

**விழுப்புரம்** *viḻu-p-puram,* பெ.(n.) தமிழ்நாட்டு ஊர்ப்பெயர்; a place name of Tamil Nadu.

இயற்கை வனப்புகள் இல்லாத சமநிலம். செழிப்பானது. இதன் கிழக்குக் கரையோரம் வங்காள விரிகுடா உள்ளது. புதுச்சேரி இதன் எல்லையருகில் இருக்கின்றது.

சென்னைக்குத் தெற்கே 101 கல் தொலைவிலுள்ளது. தென்னிந்தியாவிலுள்ள இன்றியமையாத தொடர்வண்டி சந்திப்புகளில் ஒன்று. இங்கிருந்து ஐந்து இருப்புப் பாதைகள் பிரிந்து செல்கின்றன.

*[வில்லிபுரம் → விழுப்புரம்]*

**விழுப்பேரரையர்** *viḻu-p-pēr-araiyar,* பெ.(n.) தமிழ்த் தலைவரில் ஒரு சாரார் பட்டப் பெயர்; a little of a-class of Tamil chieftains.

*[விழு + பேர்[4] + அரையர்]*

**விழுப்பொருள்** *viḻu-p-poruḷ,* பெ.(n.) மேலான பொருள்; the highest object or thing. *"விண்ணகத்தேவரும் நண்ணவும் மாட்டா விழுப்பொருளே" (திருவாச. 20, 9).*

*[விழு + பொருள்]*

**விழுபாலை** *viḻu-pālai,* பெ.(n.) கொடிவகை (யாழ்.அக.); a creeper.

*[விழு[1] + பாலை]*

**விழுமம்** *viḻumam,* பெ.(n.) 1. சிறப்பு (தொல். சொல். 353); excellence, greatness, sublimity, eminence, magnificence, superiority. 2. சீர்மை (தொல். சொல். 353); good state. 3. தூய்மை (இ.வ); purity. 4. இடும்பை; distress, affliction. *"நின்னுறு விழுமங் களைந்தோள்" (அகநா. 170).*

*[விழு[4] → விழுமம்]*

**விழுமலை** *viḻu-malai,* பெ.(n.) கதிரவன் மறையும் மலை; the western mountain beyond which the sun is supposed to set. *"எழுமலை விழுமலை புடைமணி யாக" (கல்லா. 19).*

*[விழு[1] + மலை[4]]*

**விழுமா-த்தல்** *viḻumā-,* 12 செ.கு.வி. (v.i.) சிறப்படைதல்; to attain to eminence or glory. *"மகளிர் விழுமாந்தனர் தங்கொழு நரைக் காத்தே" (நற். 320).*

*[விழுமம் + யா[4]-த்தல் → விழுமா-த்தல்]*

**விழுமிய** *viḻumiya,* பெ.எ.(adj.) சிறந்த; pre-eminent, excellent. *"விழுமிய பெறலரும் பரிசி னல்குமதி" (திருமுரு. 294).*

**விழுமியதுபயத்தல்** *viḻumiyadu-payattal,* பெ.(n.) நூலழகு பத்தனுள் சீரிய பொருளை யுணர்த்தலாகிய அழகு (நன். 13); inculcating noble teaching, one of ten *nūl-aḻagu,* q.v.

*[விழுமியது + பயத்தல்]*

விழுமியர் *viḻumiyar,* பெ.(n.) விழுமியோர் பார்க்க; see *viḻumiyōr.* *"விழுமிய ரென்னினு மவர்பா லிரவாமை" (பிரபோத. 30, 72).*

*[விழுமம் → விழுமியர்]*

விழுமியோர் *viḻumiyōr,* பெ.(n.) சிறந்தோர்; excellent persons, persons of pre-eminence. *"வாகனங் கையுறினும் வேண்டார் விழுமியோர்" (நாலடி, 300).*

*[விழுமியர் → விழுமியோர்]*

விழுமீன்[1] *viḻumīṉ,* பெ.(n.) வீழ்மீன் பார்க்க; *see vīḻ-mīṉ, meteor.*

*[விழு [1]– + மீன் [1]]*

விழுமீன்[2] *viḻu-mīṉ,* பெ.(n.) உல்லம் 1 பார்க்க; see *ullam1*, hilsa.

*[விழு + மீன்]*

விழுமுதல் *viḻu-mudal,* பெ.(n.) வாணிகத்தின் முதலீடு (இ.வ.); capital invested in a business.

*[விழு + முதல்]*

விழுமுறு–தல் *viḻumuṟu-,* 2 செ.கு.வி. (v.i.) துன்புறுதல்; to be distressed or afflicted. *"வேந்து விழுமுறினே" (புறநா. 318).*

*[விழுமம் + உறு–,]*

விழுமெனல் *viḻum-eṉal,* பெ.(n.) விழு விழெனல் பார்க்க; see *viḻu-viḻeṉal.*

விழுவிழெனல் *viḻu-viḻeṉal,* பெ.(n.) 1. வழ வழப்பாதற்குறிப்பு (வின்.); sliminess, slipperiness. 2. பசை பிடித்தற்குறிப்பு (யாழ்.அக.); pastiness.

*[விழுவிழு + எனல்]*

விழை[1]–தல் *viḻai-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. விரும்புதல்; to wish, desire, love, to be anxious for, to covet. *"இன்பம் விழையான் வினைவிழைவான்" (குறள், 615)* 2. நன்குமதித்தல்; to esteem. *"ஒன்னார் விழையுஞ் சிறப்பு" (குறள், 630).* 3. ஒத்தல்; to resemble. *'மழைவிழை தடக்கை' (தொல். பொ. 289, உரை).*

*[விழு – விழை. விழை–, (வே.க.119)]*

விழை[2]–தல் *viḻai-,* 2 செ.கு.வி. (v.i.) நெருங்கிப் பழகுதல் (இ.வ.); to move closely or intimately.

*[இழை → விழை]*

விழைச்சி *viḻaicci,* பெ.(n.) 1. நலவழக்கம்; enjoyment. *'மன்னர்விழைச்சி' (சிலப். 2, 2, உரை).* 2. விழைச்சு,1 பார்க்க; see *viḻaiccu1*. *'அறுவகைப்பட்ட பாசாண்டிகரும் இணைவிழைச்சி தீதென்ப' (இறை. 1. உரை. பக். 9).*

*[விழை → விழைச்சி]*

விழைச்சு *viḻaiccu,* பெ.(n.) 1. புணர்ச்சி; sexual union, intercourse. 2. இளமை; tenderness, youth.

*[விழை → விழைச்சு (வே.க.120)]*

விழைந்தோன் *viḻaindōṉ,* பெ.(n.) 1. நண்பன்; friend. 2. கணவன்; husband..

*[விழை → விழைந்தான் → விழைந்தோன்] (வே.க.120)*

விழைநன் *viḻainaṉ,* பெ.(n.) விழைந்தோன் பார்க்க; see *viḻaindōṉ.*

*[விழை → விழைநன்]*

விழைய *vilaiya,* பெ.(n.) ஓர் உவமவாய்பாடு (தொல். பொ. 289); a particle of comparison.

*[விள் → விழை → விழைய]*

விழையார் *vilaiyār,* பெ.(n.) பகைவர்; enemies. *"விழையார் விழையப் படுப" (குறள், 810).*

*[விழை → விழை + ஆர்]*

விழைவு *vilaivu,* பெ.(n.) 1. புணர்ச்சி (பிங்.); copulation. 2. விருப்பம்; desire. *"விழைவோ விழுமிதே" (பு.வெ.9, 41).* 3. யாழி னுள்ளோசை (பிங்.); vibration of a lute.

*[விழை → விழைவு]*

விள்[1](ளு)-தல் *vil-,* 2 செ.கு.வி. (v.i.) 1. மலர்தல் (சூடா.); to open out, expand, to unfold, as a blossom. 2. உடைதல்; to crack. *'அந்தப் பழம் கீழேவிழுந்ததனால் விண்டு போயிற்று'.* 3. வெடித்தல் (யாழ்.அக.); to split, burst. 4. மாறுபடுதல்; to be at variance, to be opposed. *"விள்வாரை மாறட்ட வென்றிமறவர்" (பு.வெ. 1.14).* 5. தெளிவாதல்; to become clear.

**Ma.** *villuka*; **Tu.** bulluni; **pa.** *velng*; **Kui.** *vlēnda*; **Kur.** *belbelrnā.*

*[புள் → விள் → விள்ளு-,] (வே.க.142)*

விள்[2](ளு)தல் *vil-,* 13 செ.குன்றாவி. (v.t.) 1. பிளத்தல்; to break open, to split. *'பழத்தை விண்டான்'.* 2. பகைத்தல்; to hate. *"விண்டு..... மண்டினார்" (சீவக. 418).* 3. நீங்குதல்; to be separated from, to leave. *"வினைகளும் விண்டனன்" (தேவா. 928, 7).* 4. சொல்லுதல்; to say, tell, state. *"தன்னிடத்து வந்து விள்ளான்" (திருவாலவா. 33, 10).* 5. வெளிப்படுத்துதல்; to reveal, make known. *"உமக்கே விண்டு பேசினலல்லால்" (அஷ்டப். திருவரங்கக். 70).* 6. வாய் முதலியன திறத்தல்; to open, as the mouth. *"வாய்விண்டு கூறும்" (பாகவத. 1. தன்புத்திர. 29).* 7. பிதிர் முதலியன விடுத்தல்; to slove, as a riddle or conundrum. *'இந்தப் பிதிரை விள்ளு'.* 8. கலத்தல், விரும்புதல்; to mingle, to desire.

*[பிள் → விள் → விள்ளு-,] (வே.க.142)*

விள்கை *vilgai,* பெ.(n.) விட்டகலுகை; leaving. *"விள்கை விள்ளாமை விரும்பி" (திவ். திருவாய். 1, 6, 5).*

*[விள் → விள்கை] (செல்வி 177 ஆனி, 542)*

விள்ளல் *villal,* பெ.(n.) 1. பிரிவு; separation. *"விலங்கிற்கும் விள்ள லரிது" (நாலடி, 76).* 2. மலர்கை (சூடா.); unfolding, as of a flower. 3. தழுவுதல் (சூடா.); embracing. 4. நெடுநாரை என்னும் மரவகை; wynaad coffee cherry-nutmeg.

*[விள் → விள்ளல்]*

விள்ளோடன்தேங்காய் *villōdan-tēngāy,* பெ.(n.) உள்ளீடான பருப்பு, சிரட்டை யினின்று எளிதாகப் பெயருந் தேங்காய் (யாழ்ப்.); coconut in which the kernel parts easily from the shell.

*[விள் + ஒடு + தேங்காய்]*

விள[1]-த்தல் *vila-,* 4 செ.கு.வி. (v.i.) விலக்கல்; to remove.

*[வில் → வில → விலத்து → விளத்து → விளத்தல் (சு.வி.27)]*

**விள[2]** *viḷa,* பெ.(n.) வெண்தோட்டுக்காய் மரவகை (தொல். எழுத். 181, உரை); wood-apple.

*[முள் → விள் → விள (மு.தா.161)]*

**விள[3]** *viḷa,* பெ.(n.) விளவு[4] (பிங்.) பார்க்க; see *viḷavu.*

**விள[4]** *viḷa,* பெ.(n.) விளவு[6] (பிங்.) பார்க்க; see *viḷavu.*

**விளக்கங்காண்(ணு)-தல்** *viḷakkaṅ-kāṇ-,* 16 செ.குன்றாவி. (v.t.) ஆராய்ந்தறிதல்; to test. *"தொண்டரை விளக்கங்காண"* *(பெரியபு. திருநீல கண்ட. 10).*

*[விளக்கம் + காண்-.]*

**விளக்கணம்** *viḷakkaṇam,* பெ.(n.) 1. பொடி வைத்துப் பொருத்துகை (யாழ்.அக.); soldering. 2. பற்றுப்பொடி; solder.

*[விளக்கு → விளக்கணம்] (வே.க.135)*

**விளக்கணி** *viḷakkaṇi,* பெ.(n.) *தீவகம்[1],2 (அணியி. 15)* பார்க்க; see *tīvagam,* a figure of speech.

*[விளக்கு + அணி]*

**விளக்கணை-த்தல்** *viḷakkaṇai-,* 4 செ.கு.வி. (v.i.) விளக்கைப் பெருக்குதல்; to extinguish a lamp.

கெடுத்தல் எனப் பொருள்படும் அணைத்தல் என்பது மங்கலச் சொல்லன்றாதலின் 'பெருக்குதல்' என்று சொல்வது தமிழ்நாட்டு மரபு.

*[விளக்கு + அணை-,]*

**விளக்கத்தார்கூத்து** *viḷakkattār-kūttu,* பெ.(n.) வழக்கு வீழ்ந்த ஒரு நாடகத் தமிழ் நூல் (தொல். பொ. 553. உரை); a treatise on dramaturgy, not now extant.

**விளக்கப்பிரைசிதான்** *viḷakka-p-piraiśidāṉ,* பெ.(n.) குற்ற உசாவலுக்குரிய நடுவர்; examining magistrate.

**விளக்கம்** *viḷakkam,* பெ.(n.) 1. தெளிவான பொருள்; elucidation, explanation. 2. தெளிவு; clearness, perspicuity. *'நீ சொல்வது விளக்கமாக இல்லை'.* 3. ஒளி; light. *"ஊர்சுடு விளக்கத்து" (புறநா. 7).* 4. நிலவின்கலை (சது.); phase of the moon. 5. விளக்கு; lamp. *"குடியென்னுங் குன்றா விளக்கம்" (குறள், 601).* 6. கணையாழி; ring. *"செவ்விரற் கொளீஇய செங்கேழ் விளக்கத்து" (நெடுநல். 144).* 7. புகழ்; praise. *"தாவில் விளக்கந் தரும் (குறள், 853).* 8. ஆய்கை (யாழ்.அக.); investigation. 9. சான்று ஆய்கை நடக்கும் முறைமன்றம்; court of the first instance, where evdence is taken. 10. மிகை; plenty. *'விளக்கமாய்க் கொடு' (நெல்லை.).*

க. பெளகு (*beḷahu*)

*[விளக்கு → விளக்கம்] (வே.க.136)*

**விளக்கவி-த்தல்** *viḷakkavi-,* 4 செ.கு.வி. (v.i.) விளக்கணை-, பார்க்க; see *viḷakkaṇai.*

*[விளக்கு + அவி-,]*

**விளக்கிசைக்குறி** *viḷakkiśaikkuṟi,* பெ.(n.) படிக்கையில் மூன்று மாத்திரை நிறுத்துவதற்கு இடுங்குறி; colon, a punctuation mark (:).

*[விளக்கு + இசை[4]- + குறி]*

**விளக்கிடு[1]-தல்** *vilakkiḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. விளக்கேற்றுதல்; to light lamps. 2. கோயிலில் திருவிளக்கேற்றி வைத்தல்; to burn lights in the temple, as an act of piety.

*[விளக்கு + இடு-,]*

**விளக்கிடு[2]-தல்** *vilakkiḍu-,* 18 செ. குன்றாவி.(v.t.) விளங்கச் செய்தல்; to explain to throw light upon.

*[விளக்கு + இடு-,]*

**விளக்கிடுகல்யாணம்** *vilakkiḍu-kalyāṇam,* பெ.(n.) கார்காத்த வேளாளரில் மணம் புரியாத பெண்களுக்கு 7 அல்லது 11 ஆம் வயதிற் செய்யப்படுஞ் சடங்குவகை (E.T.vii.380); an auspicious ceremony performed before a girls marriage, generally in her seventh or ninth year, among *kārkātta vēlālas.*

*[விளக்கிடு + கல்யாணம்]*

**விளக்கீடு** *vilakkīḍu,* பெ.(n.) திருவாரல் நாளில் (கார்த்திகையன்று) விளக்கேற்றுகை; lamplighting on the evening of *tiru-k-kārttigai.* *"கார்த்திகை நாள்..... விளக்கீடு காணாதே போதியோ பூம்பாவாய்" (தேவா. 1118, 3).*

*[விளக்கிடு → விளக்கீடு]*

**விளக்கு[1]-தல்** *vilakku,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. தெளிவாக்குதல்; to make clear, to explain, elucidate. *"சொல்லிக் காட்டிச் சோர்வின்று விளக்கு" (மலைபடு. 79).* 2. அறிவிப்புப்படுத்துதல்; to make illustrious. *"தம்மை விளக்குமால்" (நாலடி.132).* 3. துலக்குதல்; to clearn, brighten, polish. *'பல்லை விளக்குகிறான்', 'பாத்திரத்தை விளக்குகிறான்'.* 4. தூய்மை யாக்குதல்; to purify. *'குருவினருளிச்செயல் மனத்தை விளக்கும்'.* 5. பரிமாறுதல்; to distribute, serve. *"அட்டன யாவையும் விளக்கின மிவர்க்கே" (விநாயகபு. 53, 29).* 6. துடைப்பத்தாற் பெருக்குதல்; to sweep, clear up. 7. பொடியிட்டுப் பற்றவைத்தல்; to solder. *"பொன்னின் பட்டைமேற் குண்டுவைத்து விளக்கின வளை"* (S.I.I.ii.182).

*[விள் → விள → விளங்கு → விளக்கு-,] (வே.க.135)*

**விளக்கு[2]-தல்** *vilakku-,* 5 செ.குன்றாவி. (v.t.) பெரிதாக்குதல் (இ.வ.); to enlarge.

*[விளங்கு → விளக்கு-,]*

**விளக்கு[3]** *vilakku,* பெ.(n.) 1. ஒளிதருங் கருவி; lamp, light. *"எல்லா விளக்கும் விளக்கல்ல" (குறள், 299).* 2. ஒளிப்பிழம்பு (அக.நி.); lustre, band of rays. 3. ஒளிபெறச் செய்கை; brightening. *"நிலம் விளக்குறுப்ப" (மதுரைக். 705).* 4. விளக்கு நாண்மீன் (சுவாதி நட்சத்திரம்); the 15th *nakšatra.* *'விளக்கைப் பிடித்துக் கொண்டு கிணற்றில் விழுகிறதா? (பழ.), 'விளக்கை வைத்துக் கொண்டு நெருப்புக்கு அலைகிறதா? (பழ.), 'விளக்கு ஒளிக்கு ஆசைப்பட்ட விட்டில் போல' (பழ.)*

ஆதியில் குகையில் மாந்தன் வாழ்ந்த காலத்திலேயே ஏதோ ஒருவகையான விளக்கைப் பயன்படுத்தி வந்தான். உருகிய கொழுப்பை அவ் விளக்கில் எரிபொருளாகப் பயன்படுத்தினான். குகை மாந்தர்கள் பயன்படுத்திய விளக்கை எகிப்தியர் சீர்திருத்தி யமைத்தனர். உட்கூடான கல்லில் கொழுப்பை நிரப்பி, பஞ்சாலான திரியை அதனூடே செலுத்தி, எகிப்தியர் தம் விளக்கை யமைத்தனர். சுட்ட மட்பாண்டம், வெண்கலம்

ஆகியவற்றால் செய்த விளக்கைக் கிரேக்கரும் ரோமானியரும் பயன்படுத்தினர். ஆளி விதையெண்ணெயை அவர்கள் எரிபொருளாகப் பயன்படுத்தினர்.

நாகரிகம் முன்னேற்றம் அடைந்தபின் மக்கள் அகல் விளக்கு, குத்து விளக்கு, மெழுகுத்திரி விளக்கு, சிமிழ் விளக்கு, பெட்ரோமாக்ஸ் எனப்படும் ஆவி விளக்கு என பலவகையான விளக்குகளைப் பயன்படுத்தினர்.

விளக்குகள் பலபெயர்களால் உச்சியில் பலவகை உருவங்கள் வைத்துச் செய்யப்பட்டுள்ளன. இவற்றைக் குத்து விளக்கு எனவும் அழைப்பர்.

1. மதியொளி விளக்கு, 2. அன்ன விளக்கு, 3. கிள்ளை விளக்கு, 4. மயில் விளக்கு, 5. குயில் விளக்கு, 6. நாகர் விளக்கு, 7. கிளை விளக்கு, 8. கம்பி விளக்கு, 9. காய் விளக்கு, 10. தண்டு விளக்கு, 11. சிலை விளக்கு, 12. குருவி விளக்கு, 13. அகல் விளக்கு, 14. நிலை விளக்கு, 15. புருஷா மிருக விளக்கு, 16. ஒதிமக் கிளை விளக்கு, 17. முக்கிளை விளக்கு, 18. காமாட்சி விளக்கு, 19. மணி விளக்கு, 20. மாயோன் விளக்கு, 21. ஏழுதலை நாக விளக்கு, 22. காமதேனு விளக்கு, 23. சரோருக விளக்கு, 24. மங்கல விளக்கு, 25. பத்மாசன முருகன் விளக்கு, 26. பதும விளக்கு, 27. கஜலட்சுமி விளக்கு, 28. சந்நிதி விளக்கு, 29. கின்னரி விளக்கு, 30. கிண்கிணி விளக்கு, 31. கன்னி விளக்கு, 32. காமன் விளக்கு, 33. திருமண விளக்கு, 34. தாரா விளக்கு, 35. ஈழச்சியல் விளக்கு, 36. மலையாண்சியல் விளக்கு, 37. அரைதலை விளக்கு, 38. சோழியச்சியல் விளக்கு, 39. ஆரக்குட விளக்கு, 40. அனந்தலை விளக்கு, 41. எரிக்கடை விளக்கு, 42. பகர்வோர் விளக்கு, 43. கைவினை விளக்கு, 44. ஊழ்உறு விளக்கு, 45. குடக்கால் விளக்கு, 46. கடைக் கெழு விளக்கு, 47. மீன் திமில் விளக்கு, 48. ஒழியா விளக்கு, 49. காவலர் விளக்கு, 50. மான் விளக்கு

இவையே யன்றித் தமிழகத்தில் புழக்கத்தில் உள்ள விளக்கு வகைகள்.

1. கைவிளக்கு, 2. பாவை விளக்கு, 3. நந்தா விளக்கு, 4. தூண் விளக்கு, 5. தூக்கு விளக்கு, 6. சர விளக்கு, 7. அகல் விளக்கு.

தெ. வெளுகு (g); க. பௌகு (b); ம. விளக்கு.




**விளக்குக்குச்சோறூட்டு-தல்** *viḷakkukku-c-cōṟūṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) நாட்கதிர் கொண்டதும் நெருப்பின் பொருட்டு விளக்கு முன்பாகப் புதிய சோறு படைத்தல் (வின்.); to make an offering of boiled rice before a burning lamp in thanks-giving to the God of fire, on gathering in the first sheaves.

*[விளக்கு + சோறூட்டு-,]*

**விளக்குக்குடிமக்கள்** *viḷakku-k-kuḍi-makkaḷ*, பெ.(n.) கோயிலில் விளக்கிடும் பணியாளர் (S.I.I.iv.281); lamp-lighters in a temple.

*[விளக்கு + குடிமக்கள்]*

**விளக்குக்குப்புதிதூட்டு-தல்** *viḷakkukku-p-pudidūṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) விளக்குக்குச்சோறூட்டு-, (வின்.) பார்க்க; see *viḷakkukku-c-cōṟūṭṭu-*.

*[விளக்கு + கு + புதிதூட்டு-,]*

**விளக்குக்கூடு** *viḷakku-k-kūḍu*, பெ.(n.) 1. விளக்குத்தகழி பார்க்க; see *viḷakku-t-tagaḷi*. 2. விளக்குக் கூண்டு 1,3 பார்க்க; see *viḷakku-k-kūṇḍu*. 3. விளக்குமாடம், 1 (வின்.) பார்க்க; see *viḷakku-māḍam*. 4. விளக்கை உள்வைத்து வானத்துச் செல்லவிருக்கும் கூண்டு; balloon carrying

a light.

[விளக்கு + கூடு]




**விளக்குக்கூண்டு** *viḷakku-k-kūṇḍu,* பெ.(n.) 1. கலங்கரை விளக்கம் (கொ.வ.) பார்க்க; see *kalaṅkarai-viḷakkam,* lighthouse. 2. விளக்குக் கூடு 4 பார்க்க; see *viḷakku-k-kūḍu.*

[விளக்கு + கூண்டு]



**விளக்குக்கொளுத்து-தல்** *viḷakku-k-koḷuttu-,* 5 செ.கு.வி. (v.i.) விளக்கேற்று-, பார்க்க; see *viḷakkēṟṟu.*

[விளக்கு + கொளுத்து-,]

**விளக்குத்தகழி** *viḷakku-t-tagaḻi,* பெ.(n.) விளக்கு ஏற்றுவதற்கு உரிய அகல் (யாழ்.அக.); oil-receptacle in a lamp.

[விளக்கு + தகழி]

**விளக்குத்தண்டு** *viḷakku-t-taṇḍu,* பெ.(n.) விளக்கு ஏற்றி வைக்கும் தகழியைத் தாங்கும் தண்டு; lamp-stand, standard of a lamp.

[விளக்கு + தண்டு]

**விளக்குத்தாங்கி** *viḷakku-t-tāṅgi,* பெ.(n.) ஒளிகாட்டி (தீவட்டிக்காரன்); torch-bearer.

[விளக்கு + தாங்கி]



**விளக்குத்தாள்** *viḷakku-t-tāḷ,* பெ.(n.) விளக்குத்தண்டு (யாழ்.அக.) பார்க்க; see *viḷakku-t-taṇḍu.*

[விளக்கு + தாள்]

**விளக்குத்தூண்** *viḷakku-t-tūṇ,* பெ.(n.) 1. மின் விளக்கு இல்லாத பண்டைநாளில் தெருக்கள் தோறும் மூலைச் சந்திப்புகளில் வைக்கப்பட்டு இருந்த எண்ணெய் விளக்கைத் தாங்கிய தூண்கள்; pillars having oil lamps in the junction of the streets in olden times. 2. மதுரையில் உள்ள ஓர் இடத்தின் பெயர்; a place name in Madurai.

[விளக்கு + தூண்]

**விளக்குநாய்ச்சியார்** *viḷakku-nāycciyār*, பெ.(n.) 1. திருவிளக்கு நாச்சியார், 1 பார்க்க; see *tiruviḷakku-nāycciyār*, lamp in a house, regarded as a goddess. 2. திருவிளக்கு நாச்சியார், 2 பார்க்க; see *tiruviḷakku-nācciyār*, metallic image of a woman holding a lamp in her hands.

*[விளக்கு + நாச்சியார்]*



**விளக்குநிலை** *viḷakku-nilai*, பெ.(n.) 1. அரசனது கோலோடு விளக்கும் ஒன்று பட்டோங்குவதைக் கூறும் புறத்துறை (தொல். பொ. 90); theme describing the royal lamp as flourishing inseparably with the royal sceptre. 2. வலமாகத் திரியாநிற்கும் விளக்கு அரசனது வெற்றியைக் காட்டுவதாகக் கூறும் புறத்துறை (பு. வெ. 9, 12); theme describing the movement of a lamp from left to right, indicating the victory of a king. 3. சிற்றிலக்கியங்கள் தொண்ணூற்றாறனுள் வேலும் அதன் தலையும் விலங்கா தோங்கியவாறு போலக் கோலும் விளக்கும் விலங்காதோங்குவதாகக் கூறுவது (சது.); a poem on the theme of *viḷakku-nilai*, in which the royal sceptre and the royal lamp are described as flourishing inseparably, as the spear and the spear-head, one of 96 *śirrilakkiyam* q.v. 4. விளக்குத்தண்டு (அக.நி.) பார்க்க; see *viḷakku-t-taṇḍu*.

*[விளக்கு + நிலை]*

**விளக்குப்பாடம்** *viḷakku-p-pāḍam*, பெ.(n.) இரவிலேற்றிய விளக்கின் முன்னிருந்து பிள்ளைகள் படிக்கும் பாடம் (இ.வ.); lesson learnt at night under a lamp.

*[விளக்கு + பாடம்]*

**விளக்குப்பாதம்** *viḷakku-p-pādam*, பெ.(n.) 1. விளக்குத்தண்டு (வின்.) பார்க்க; see *viḷakku-t-taṇḍu*. 2. விளக்குத் தண்டின் அடிப்பாகம்; foot of the lamp-stand.

*[விளக்கு + பாதம்]*

**விளக்குப்பார்-த்தல்** *viḷakku-p-pār-*, 4 செ.கு.வி. (v.i.) விளக்கேற்று–, (இ.வ.) பார்க்க; see *viḷakkēṟṟu-*.

*[விளக்கு + பார்–,]*

**விளக்குப்பிணம்** *viḷakku-p-piṇam*, பெ.(n.) இருட்டு; darkness. *"விளக்குப்பிணம் போலே காணவொண்ணாதபடி"* *(ஈடு. 5, 7, 4).*

*[விளக்கு + பிணம்.]*

**விளக்குப்புறம்** *viḷakku-p-puṟam*, பெ.(n.) கோயிலில் விளக்கிடுதற்கு விடப்பட்ட இறையிலி நிலம்; endowment created for lights in a temple. *"நந்தா விளக்குப்புற மாகெனா"* *(சீவக. 2564).*

*[விளக்கு + புறம்]*

**விளக்குப்பொருத்து-தல்** *viḷakku-p-poruttu-*, 5 செ.கு.வி. (v.i.) விளக்கேற்று–, (வின்.) பார்க்க; see *viḷakkēṟṟu-*.

*[விளக்கு + பொருத்து–,]*

**விளக்குப்போடு[1]-தல்** *viḷakku-p-pōḍu-,* 8 செ.கு.வி. (v.i.) விளக்கேற்று-, பார்க்க; see *viḷakkēṟṟu.*

*[விளக்கு + போடு-,]*

**விளக்குப்போடு[2]-தல்** *viḷakku-p-pōḍu-,* 8 செ.கு.வி. (v.i.) கட்குடித்தல் (யாழ்ப்.); to drink intoxicating liquors.

**விளக்குமாடம்** *viḷakku-māḍam,* பெ.(n.) 1. விளக்கு வைப்பதற்கான சுவர்ப்புரை (வின்.); niche in a wall for lamps. 2. திருவிளக்கிடும் கோயிலிடம் (T.A.S.i, 176); place for lights in a temple.

*[விளக்கு + மாடம்]*

**விளக்குமாற்றுக்கட்டை** *viḷakkumāṟṟu-k-kaṭṭai,* பெ.(n.) 1. தேய்ந்த துடைப்பம்; old and worn-out broom. 2. ஒரு பழிச்சொல் (இ.வ.); a term of reproach. *'விளக்குமாற்றுக் கட்டைக்குப் பட்டுக்குஞ்சம் கட்டியது போல' (பழ.).*

*[விளக்குமாறு + கட்டை]*

**விளக்குமாறு** *viḷakkumāṟu,* பெ.(n.) துடைப்பம் (தைலவ.); broom. *'புது விளக்குமாறு நன்றாகக் கூட்டும்' (உ.வ.), 'விளக்கு மாற்றுக்குப் பட்டுக் குஞ்சமா?' (பழ.).*

*[விளக்கு + மாறு,]*

**விளக்குறு-த்தல்** *viḷakkuṟu-,* 4 செ. குன்றாவி. (v.t.) ஒளிபெறச் செய்தல்; to brighten, give splendour to. *"நிலம் விளக்குறுப்ப" (மதுரைக். 705).*

*[விளக்கு + உறு-,]*

**விளக்கெண்ணெய்** *viḷakkeṇṇey,* பெ.(n.) 1. விளக்கிடுவதற்கு உதவும் ஆமணக் கெண்ணெய் (கொ.வ.); castrol oil, as used for lamps. 2. மருந்தாக உதவும் ஆமணக்கெண்ணெய் (கொ.வ.); medicinal castor oil. 3. வேப்பெண்ணெய் (யாழ்.அக.); oil extracted from neem seeds. *'முதலிச்சம்பம் விளக்கெண்ணெய்க்குக் கேடு' (பழ.). 'விளக்கெண்ணெயைத் தடவிக் கொண்டு ஆற்று மணலில் புரண்டாலும் ஒட்டுகிறதுதான் ஒட்டும்' (பழ.).*

*[விளக்கு + எண்ணெய்]*

**விளக்கேற்றிவை[1]-த்தல்** *viḷakkēṟṟi-vai-,* 4 செ.கு.வி. (v.i.) 1. விளக்கேற்று-, பார்க்க; see *viḷakkēṟṟu-.* 2. திருமணம் செய்து வைத்தல்; to help to marry. *'இவனுக்குக் காலத்தில் ஒரு விளக்கேற்றி வைக்க நினைக்கிறேன்' (வின்.).*

*[விளக்கு + ஏற்றி + வை-,]*

**விளக்கேற்றிவை[2]-த்தல்** *viḷakkēṟṟi-vai-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. நிலைநிறுத்துதல்; to set up, establish. *'அழியவிருந்த குடும்பத்தை விளக்கேற்றி வைத்தான்'.*

*[விளக்கேற்றி + வை-,]*

**விளக்கேற்று-தல்** *viḷakkēṟṟu-,* 5 செ.கு.வி. (v.i.) விளக்கையேற்றுதல்; to light lamps.

*[விளக்கு + ஏற்று-,]*

**விளக்கைக்குளிரவை-த்தல்** *viḷakkai-k-kuḷira-vai-,* 5 செ.கு.வி. (v.i.) விளக்கணை (இ.வ.) பார்க்க; see *viḷakkaṇai.*

*[விளக்கை + குளிர + வை-,]*

**விளக்கைச்சமனஞ்செய்-தல்** *viḷakkai-c-camaṉañ-šey,* 3 செ.கு.வி. (v.i.) விளக்கணை (இ.வ.) பார்க்க; see *viḷakkaṇai.*

*[விளக்கு + சமனம் + செய்-,]*

**விளக்கைநிறுத்து-தல்** *vilaikkai-niruttu-,* 5 செ.கு.வி. (v.i.) விளக்கணை பார்க்க; see *vilakkanai.*

*[விளக்கை + நிறுத்து-,]*

**விளகம்** *vilagam,* பெ.(n.) சேங்கொட்டை (மலை.); marking-nut tree.

**விளங்கம்** *vilangam,* பெ.(n.) கொடிவகை (நாமதீப.310); small elliptic cuspidate-leaved windberry.

**விளங்கவை-த்தல்** *vilanga-vai-,* 4 செ. குன்றாவி.(v.t.) 1. தெளிவாக்குதல்; to make position clear, to make record clear. 2. விளக்கேற்றிவை-, பார்க்க; see *vilakkērri-vai.* 3. புகழ்பெறச் செய்தல்; to make illustrious or renowned. *'பெற்ற வயிற்றை விளங்க வைக்க வேண்டும்'.*

*[விளங்க + வை-,]*

**விளங்கவைத்தல்** *vilanga-vaittal,* பெ.(n.) நூலழகு பத்தனுள் கூறப்படும் பொருளைத் தெளியச் சொல்லுவது (நன். 13); perspicuity, clearness of expression, one of ten *nūl-alagu* q.v.

*[விளங்க + வைத்தல்,]*

**விளங்கிப்பேர்** *vilangi-p-pēr,* பெ.(n.) நிலவிளத்த அடங்கல் (இ.வ.); history of lands, fields, etc., given in the old settlement register or *adangal.*

*[விளங்கு → விளங்கி + பேர்]*

**விளங்கிழை** *vilangilai,* பெ.(n.) பெண்; woman, as wearing bright jewels. *"விளங்கிழை தமியளானாள்" (சீவக. 303).*

*[விளங்கு + இழை]*

**விளங்கு[1]-தல்** *vilangu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. ஒளிர்தல்; to shine. *"பகல் விளங்குதியாற் பல்கதிர் விரித்தே" (புறநா. 8).* 2. வெளிப்படையாதல்; to become renowned, illustrious. *'அவன் பெயர் எங்கும் விளங்கும்'.* 3. பளபளத்தல்; to be polished. 4. தெளிவாதல்; to be clear or plain. *'நீ சொல்வது எனக்கு விளங்கவில்லை'.* 5. வெற்றி வளர்ச்சியாதல்; to be prosperous, successful. *'அந்தக்குடி விளங்கவில்லை'.* 6. மிகுதல்; to excel, become great. *"திறல் விளங்கு சேர்த்தானை" (பு.வெ. 4, 8).*

க. பெளகு; ம. விளங்நுக; தெ. வெளுங்கு, ஒண்மைக் கருத்து.

*[விள் → விள → விளங்கு-, (செல்வி வைகாசி பக். 496)]*

**விளங்கு[2]-தல்** *vilangu-,* 5 செ.குன்றாவி.(v.t.) அறிதல் (யாழ்ப்.); to know.

ம. விளங்நு(க); தெ. வெளுங்கு; க. பெளகு (belagu)

**விளங்கு[3]** *vilangu-,* பெ.(n.) அரத்தைவகை (பதார்த்த. 985); lesser galangal.

**விளங்குதாரணத்ததாகுதல்** *vilangu-dāranattatāgudal,* பெ.(n.) நூலழகு பத்தனுள் மேற்கோள் எளிதாக விளங்குவது (நன். 13); being furnished with appropriate illustrations, one of ten *nūl-alagu* q.v.

*[விளங்கு + Skt. udhāran > த. உதாரணம் + அத்து + ஆகுதல்]*

**விளங்குதிங்கள்** *vilangu-tingal,* பெ.(n.) வெள்ளி மீன் (சுக்கிரன்) (திவா.); venus, as

the shining planet.

*[விளங்கு + திங்கள்.]*

**விளங்குபொன்** *viḷaṅgu-poṉ,* பெ.(n.) மாழையாற் செய்த கண்ணாடி; metallic mirror. *"விளங்கு பொன்னெறிந்த நலங்கிளர் பலகையொடு"* (புறநா. 15).

*[விளங்கு + பொன்]*

**விளங்கொளி** *viḷaṅgoḷi,* பெ.(n.) அருகன் (திவா.); arhat, as the shining light.

*[விளங்கு + ஒளி]*

**விளச்சீர்** *viḷa-c-cīr,* பெ.(n.) நிரையசையில் முடியும் இயற்சீர் (யாப்.வி.); foot of two *asai* ending in nirai, either *kūviḷam* or *karu-viḷam.*

*[விளம்[2] + சீர்]*

**விளத்தம்** *viḷattam,* பெ.(n.) விளக்கம்; description. (வே.க.136).

*[விளத்து → விளத்தம்]*

**விளத்தாரு** *viḷa-t-tāru,* பெ.(n.) வெண்கடம்பு (மலை.); sea-side Indian oak.

**விளத்து-தல்** *viḷattu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. விலக்குதல் (யாழ்.அக.); to except, to exclude. 2. விளக்கமாகக் கூறுபடுத்திக் கூறுதல்; to explain.

*[விள் → விள → விளத்து-, (செல்வி, 77 சைகாசி, 497)]*

**விளப்பு** *viḷappu,* பெ.(n.) 1. சொல்லுகை; saying. 2. புகழ் பரவுகை; becoming famous. *"தனிச்சிறையில் விளப்புற்ற"* (திவ். திருவாய். 4, 8, 5).

*[விளம்பு → விளப்பு]*

**விளம்[1]** *viḷam,* பெ.(n.) 1. அடம்; long-felt hatred, spite. 2. செருக்கு; self-conceit. 3. கடுஞ்சினம்; violent anger. *'விருந்திற்குத் தம்மை யழைக்கவில்லை யென்று விளமெடுத்துத் திரிகின்றான்' (உ.வ.) (வே.க.134).* 4. பெருஞ் சினத்திற் கொட்டும் நஞ்சு; poison.

**E.** Venom; **Skt.** விஷ; **L.** Venenum; **Fr.** Venin.

*[விள் → விளம்]*

**விளம்[2]** *viḷam,* பெ.(n.) 1. விளா[1](அரு.நி.); see *viḷa,* wood-apple. 2. இயற்சீரின் இறுதி நிரை வாய்பாடு; symbolic expression for nirai. *"விளமுன் னேரும்".* 3. வெள்ளையான தோடுடைய கனி; wood apple.

க. பெளல.

*[விள் → விளம் (வ.மொ.வ.264)]*

**விளம்பகதி** *viḷambagadi,* பெ.(n.) விளம்பம் பார்க்க; see *viḷambam.*

*[விளம்பம் + கதி]*

**விளம்பம்** *viḷambam,* பெ.(n.) 1. சுணக்கம் (ஈடு. 6, 1, ப்ர.); slowness, tardiness, delay. 2. இலயவகை (பரத. தாள. 51); a variety of ilayai indicating a slow pace.

*[விளம்பு → விளம்பம்]*

**விளம்பரம்** *viḷambaram,* பெ.(n.) அறிக்கை (கொ.வ.); advertisement, proclamation, notice, publication, publicity.

ம. விளம்பரம்.

*[விளம்பு → விளம்பரம் (வே.க.143)]*

**விளம்பனம்[1]** *viḷambaṉam,* பெ.(n.) *விளம்பம், 1* பார்க்க; see *viḷambam.*

*[விளம்பம் → விளம்பனம்]*

**விளம்பனம்[2]** *viḷambaṉam,* பெ.(n.) பண்டைக்காலத்து மக்களின் வழக்க வொழுக்கம் முதலியவற்றை ஆடியும் பாடியுங் காட்டுகை (திவா.) (யாப். வி. பக். 526); imitation of ancient customs and manners, with acting and singing.

*[விளம்பம் → விளம்பனம்]*

**விளம்பி[1]** *viḷambi,* பெ.(n.) கள் (திவா.); toddy, as causing unguarded utterance.

*[விளம்பு → விளம்பி (வே.க.143)]*

*[கள்ளைச் சொல்விளம்பி என்பது மருத்துவர் குழூஉக்குறி.]*

**விளம்பி[2]-த்தல்** *viḷambi-,* 11 செ.கு.வி. (v.i.) சுணங்குதல்; to delay, procrastinate. *"நீங்கள் மந்தாயுசுக் களாகையாலே விளம்பிக்க வொண்ணாது" (ஈடு. 1, 3, 11).*

**விளம்பிதம்** *viḷambidam,* பெ.(n.) 1. சுணக்கம் (நாமதீப. 562); slowness. 2. விளம்பம், 2 பார்க்க; see *viḷambam. "விளம்பித நெறி வழாமல்...... ஆடும்" (கம்பரா. ஊர்தே. 106).*

**விளம்பிநாகனார்** *viḷambi-nāgaṉār,* பெ.(n.) நான்மணிக்கடிகை இயற்றிய ஆசிரியர்; a poet, author of *Nāṉ-maṇi-k-kaḍigai.*

**விளம்பு[1]-தல்** *viḷambu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. சொல்லுதல்; to speak, tell, say. *"உற்றது விளம்ப லுற்றேன்" (சீவக. 1694).* 2. வெளிப்படக் கூறுதல்; to proclaim openly, make public, reveal. *"உடையது விளம்பேல்" (ஆத்திசூடி).* 3. பரப்புதல் (பிங்.); to spread abroad. 4. பழகுதற்காகப் பிள்ளைகள் எழுத்தின்மே லெழுதுதல் (இ.வ.); to trace letters over the model of a copy. 5. பரிமாறுதல் (நாமதீப. 711); to serve food. 6. ஆய்தல் (வின்.); to inquire into.

ம. விளம்புக; **To.** pily; **Tu.** bulpuni; **Te.** *viḷambaramu.*

*[விள் → விளம்பு → விளம்பு-, (வே.க.143)]*

**விளம்பு[2]** *viḷambu,* பெ.(n.) சொல் (நன்.458); word, speech.

*[விள் → விளம்பு]*

**விளமேலடி** *viḷamēlaḍi,* பெ.(n.) நெல் நீங்கிய மற்றைய தவச விளைவிற்கு இடும் வரி (இ.வ.); assessment levied on crops other than paddy.

*[விளை[3] + மேல் + அடி[1]]*

**விளர்[1]-தல்** *viḷar-,* 4 செ.கு.வி. (v.i.) 1. வெளுத்தல்; to become pale, to whiten. *"விளரும் விழமெழும்" (திருக்கோ. 193).* 2. முதிராதிருத்தல்; to be imperfect, to be immature. *"விளரா வன்பின்" (விநாயகபு. 52, 18).*

க. பெளர்; ம. விளர்க.

**விளர்[2]-த்தல்** *viḷar-,* 11 செ.கு.வி. (v.i.) 1. வெளுத்தல்; to become white or pale. *"விளர்த்த வாளினை அசைத்து" (பு.வெ.7, 21, உரை).* 2. வெட்குதல்; to feel ashamed. "மேய கலைப்பெண் விளர்ப்ப" (பிரபுலிங். மாயை பூசை. 50).

**விளர்[3]** *viḷar,* பெ.(n.) 1. வெண்மை; whiteness. *"கொழுங்கொடி விளர்க்காய்*

*கோட்பத மாக" (புறநா. 120).* 2. கொழுப்பு (பிங்.); fat. 3. கொழுமை (வின்.); fertility. 4. இளமை (பிங்.); tenderness. 5. முற்றாதது; that which is immature or imperfect. *"விளரில் பூசனை" (திருவானைக் குபேர. 2).* 6. நேர்மை; straightness. *"விளர்நிறீஇ" (கல்லா. 8).* 7. பெருஞ்சினம் (அரு.நி.); great anger, wrath, fury. 8. வெறுப்பு (அக.நி.); hatred.

க. பெளர்; ம. விளர்.

*[விளம் → விளர். (சினக்கருத்து. வே.க.134)]*

விளர்[4]–தல் *viḷar-,* 5 செ.குன்றாவி. (v.t.) கூப்பிடுதல்; to call. *"வையமுற்றும் விளரியதே" (திவ். இயற். திருவிருத். 82).*

*[விள் → விளர்–,]*

விளர்[5] *viḷar,* பெ.(n.) இளங்கொம்பு; twig.

*[வளார் → விளர்]*

விளர்ப்பு *viḷarppu,* பெ.(n.) வெளுப்பு (யாழ்.அக.); whiteness.

*[விளர் → விளர்ப்பு]*

விளரி[1] *viḷari,* பெ.(n.) 1. இளமை (பிங்.); tenderness, youth. 2. மிக்க வேட்கை (பிங்.); great or longing desire. 3. மிகுதி (வின்.); abundance, surplus.

*[விள் → விளரி (மு.தா.68)]*

விளரி[2] *viḷari,* பெ.(n.) 1. ஏழிசையு ளொன்று (திவா.); the sixth note of the gamut, one of seven *iśai,* q.v. 2. நெய்தற்குரிய இரங்கற்பண்; a melody-type of the neydal class, suited for mourning. *"விளரியுறு தருந் தீந்தொடை நினையா" (புறநா. 260).* 3. யாழ் (அக.நி.); *yāḻ.*

விளரி[3] *viḷari,* பெ.(n.) விளா[1] (அரு.நி.) பார்க்க; see *viḷā,* wood-apple.

விளரிப்பாலை *viḷari-p-pālai,* பெ.(n.) பாலைப்பண்களுளொன்று (பிங்.); a melody-tupe of *pālai* class.

*[விளரி + பாலை]*

விளவரிசி *viḷa-v-ariśi,* பெ.(n.) அறுவகையரிசியு ளொன்று (சங்.அக.); a medicinal drug, one of *aṟuvagai-y-ariśi.*

*[விள + அரிசி]*

விளவு[1] *viḷavu,* பெ.(n.) ஒருவகை நறுமண மரம்; eagle-wood.

மறுவ. அகில்

*[விள் → விள → விளவு]*

விளவு[2]–தல் *viḷavu-,* 5 செ.குன்றாவி. (v.t.) விளாவு[1]–தல் (வின்.) பார்க்க; see *viḷāvu-.*

விளவு[3] *viḷavu,* பெ.(n.) விளா[1] (பிங்.) பார்க்க; see *viḷā.*

விளவு[4] *viḷavu,* பெ.(n.) நிலம் முதலியவற்றிற் பிளப்பு (பிங்.); cleft, crack.

*[பிளவு → விளவு]*

விளவு[5]–தல் *viḷavu-,* 5 செ.கு.வி. (v.i.) கமராதல் (வின்.); to split, to burst asunder.

*[விடவு → விளவு–,]*

விளவு[6] *viḷavu,* பெ.(n.) இளமை (பிங்.); youth.

*[விளர்[1] → விளவு]*

விளா[1] *viḷā,* பெ.(n.) மரவகை (பு.வெ.10. சிறப். 1, உரை); wood-apple.

இரட்டை விதையிலை நிலைத்திணை உயிரிகளிலே கிச்சிலிக் குடும்பத்தைச் சேர்ந்த மரம். இந்த இனத்தில் ஒரே ஒரு இனமே உண்டு. இந்தோனேசியா, மலேயா பகுதிகளில் வளர்வது. இந்தியா நெடுகிலும் உலர்வான பகுதிகளில் காட்டு மரமாகவும் வளர்ப்பு மரமாகவும் இருக்கிறது. சாலையருகிலும் சிற்றூர்களின் பக்கங்களிலும் இம்மரத்தைக் காணலாம்.

இது ஒரு சிறிய இலையுதிர் மரம். கிளைகள் முள்ளுள்ளவை; இலைகள் இறகுக் கூட்டிலைகள்; கனிகள் உருண்டையாக இருக்கும். கனியின் ஓடுகள் மரப்பொருளால் ஆனது; கடினமானது; சொரசொரப்பானது; உள்ளே சற்று இனிப்பும் மணமும் உள்ள, உண்ணக்கூடிய சதை இருக்கும். அதிலே பல தட்டையான விதைகள் புதைந்திருக்கும். கனிகள் நளி மாதம் முதல் மீனம் வரையில் கிடைக்கும். துவர்ப்புச் சுவையுடைய இச்சதைப் பகுதியில் வெல்லமும் சிறிது உப்பும் சேர்த்து உண்ணச் சுவையாக இருப்பதுடன் பித்தமும் போகும் எனக் (சா.அக.) கூறுகிறது.

மறுவ. கடிப்பகை, கபித்தம், விளவு, வெள்ளில்.

தெ. வெலக; ம. விலவ; க. பேலட.

*[விள → விளா]*



**விளா**[2] *viḷā*, பெ.(n.) உழவில் வருஞ் சுற்று; a turn or round in ploughing. *"விளாக் கொண்டு உழும் உழவர்" (சிலப். 27. 230, அரும்.).*

**விளாக்குலைகொள்(ளு)-தல்** *viḷā-k-kulai-koḷ-*, 13 செ.குன்றாவி. (v.t.) 1. எங்கும் நிறைந்திருத்தல்; to overspread, pervade. *"ஒரு திருவடியே பூமிப்பரப்படங்கலும் போய் விளாக்குலை கொண்டது" (திவ். இயற். திருவிருத். 58. வ்யா. பக். 321).* 2. உட்கொள்ளுதல்; to swallow.. *"ஸ்துத்ய குணங்களை விளாக்குலை கொள்ளும் படியான பாடல்கள்" (ஈடு,2.7.6).*

*[வளா → விளா + குலை + கொள்-,]*

**விளாக்கை-த்தல்** *viḷākkai-*, 4 செ. குன்றாவி.(v.t.) உழுதல்; to plough. *"நுகமின்றி விளாக்கைத்து" (திருவாச. 26, 8).*

*[விளா[2] + கை[3]-,]*

**விளாக்கொள்(ளு)-தல்** *viḷā-k-koḷ-*, 3 செ. குன்றாவி.(v.t.) எங்கும் நிறைதல்; to spread everywhere, pervade. *"தாவியன் றுலகமெல்லாந் தலை விளாக்கொண்ட வெந்தாய்" (திவ். திருமாலை. 35).*

*[வளா → விளா + கொள்-,]*

**விளாக்கோல்(லு)-தல்** *viḷā-k-kōl-*, 10 செ.கு.வி. (v.i.) கழனியைச்சுற்றி ஒரு வட்டம் உழுதல் (இ.வ.); to plough one turn or round.

மறுவ. படைசால்.

*[விளா[2] + கோல்-,]*

**விளாகம்** *viḷāgam*, பெ.(n.) 1. சூழ்ந்தவிடம்; surrounding area. *"பைம்பொழில் விளாகத்து" (தேவா. 734, 6). "சோழிய விளாகம்" (ஊர்ப்).* 2. போர்க்களம்; battlefield. *"வென்றவர் விளாகந் தன்னுட் சென்றிலேன்" (தேவா. 1193, 1) (பிங்.).*

ம. விளாகம்.

*[வளாகம் → விளாகம்]*

விளாசு-தல் *viḷāšu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. அடித்தல் (கொ.வ.); to beat, strike. 2. மனத்தில் உறுத்தப்பேசுதல்; to harangue.

*[விலாசு[2]-தல் → விளாசு-,]*

விளாத்தி *viḷātti*, பெ.(n.) விளா[1] (மலை.); wood -apple.

*[விளா[1] → விளாத்தி]*

விளாப்பு *viḷāppu*, பெ.(n.) பிறர்க்குப் பங்கில்லாமற் கொண்டது (யாழ்.அக.); anything solely and exclusively owned.

*[ஒருகா. வளை[2] → விளா → விளாப்பு]*

விளாப்பூசை *viḷā-p-pūšai*, பெ.(n.) சிவன் கோயிலில் வைகறையில் நிகழும் பூசை (இ.வ.); the early morning worship in a *šivaṉ* temple.

*[விளா + பூசை[2]]*

விளாம்பிசின் *viḷām-pišiṉ*, பெ.(n.) விளாமரத்தின் பிசின்; gum exuded by wood-apple tree.

*[விளா[1] + பிசின்]*

விளாம்பூச்சு *viḷām-pūccu*, பெ.(n.) சித்திரப் பூச்சு வகை (யாழ்.அக.); a kind of painting.

*[முலாம்பூச்சு → விளாம்பூச்சு]*

விளார் *viḷār*, பெ.(n.) வளார்; twig.

விளாவு[1]-தல் *viḷāvu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. கலத்தல்; to mix, as cold water with hot water. *"கடல் வெதும்பினால் விளாவ நீரில்லை" (ஈடு. 2, 2, அவ.).* 2. தழுவிக் கொள்ளுதல் (திவா.); to embrace, move in a friendly way with. 3. விளாசு-, பார்க்க; see *viḷāšu-*.

*[வளாவு → விளாவு-,]*

விளாவு[2]-தல் *viḷāvu-*, 5 செ.குன்றாவி. (v.t.) சுற்றிச்சுற்றி உழுதல்; to plough round and round. *"பாழ்ச் செய் விளாவி" (திருவாச. 40, 9).*

*[வளாவு → விளாவு-,]*

விளாவு[3]-தல் *viḷāvu-*, 9 செ.கு.வி. (v.i.) சுற்றுதல்; to wave round. *"முன்பு வயலிட னாக முன்னி விளாவிய" (தணிகைப்பு. நாட்டு. 129).*

*[வளாவு-தல் → விளாவு-,]*

விளாறு[1] *viḷāṟu*, பெ.(n.) பெருக்கெடுத் தோடும் ஆறு; flooded stream. *'அடித்து அரத்தம் விளாறாகப் பெருகிற்று' (கொ.வ.).*

ஒ.நோ. வளாறு.

*[வெள்ளம் + ஆறு → விளாறு]*

விளாறு[2] *viḷāṟu*, பெ.(n.) வளார் (இ.வ.) பார்க்க; see *vaḷār*, twig. *'கையகப்பட்ட திருடனைப் புளிய விளாறால் போட்டுப் பிய்த்து எடுத்துவிட்டனர் ஊர்மக்கள்'.*

விளி[1]-தல் *viḷi-*, 4 செ.கு.வி. (v.i.) 1. இறத்தல்; to die. *"விளிந்தாரின் வேறல்லர்" (குறள். 143).* 2. அழிதல்; to perish, to be ruined, to become extinct. *"விளிவதுகொல்..... மறவர் சினம்" (பு.வெ. 1.15).* 3. குறைதல்; to diminish. *"விளியா நோயுழந்து" (கலித். 53). 4. கழிதல்;* to pass away. *"வேண்டுநாள் வறிதே விளிந்தால்" (கம்பரா. நிந்தனை. 31).* 5. ஒய்தல்; to cease, to be interrupted. *"நாரை... விளியாது நரலும்" (கலித். 128).*

6. சினம் கொள்ளுதல்; to be angry. *'விளிந்தாரே போலப் பிறராகி' (பழமொழி. 182).* 7. நாணமடைதல்; to be overcome with shame, ashamed. *"கவிதை பரமன் சொலவிளிந்து" (திருவாலவா. 16, 22).* 8. இழிவடைதல்; to be dishonoured or disgraced. *"கற்றவ ரவைநடு விளிய" (திருவாலவா. 57, 5).* 9. வருத்தப்படுதல் (வின்.); to suffer, regret. 10. மறிதல் (வின்.) (சது.); to turn about.

விளி²–தல் *vil̤i-,* 2 செ.குன்றாவி. (v.t.) சொல்லுதல்; to say, speak, tell. *"தீவிளி விளிவன்" (திவ். திருமாலை.30).*

*[விள் → விளி→ விளி–,]*

விளி³–த்தல் *vil̤i-,* 11 செ.குன்றாவி. (v.t.) 1. அழைத்தல்; to call, summon. *"கூற்றத்தைக் கையால் விளித்தற்றால்" (குறள், 894).* 2. சொல்லுதல்; to say, speak, tell. *"இராமநாமம் விளித்திட" (கம்பரா. சம்பா. 59).* 3. பாடுதல்; to sing. *"பஞ்சுரம் விளிப்பினும்" (ஐங்குறு. 311), "விளியாதான் கூத்தாட்டுக் காண்டலும்" (திரிகடு. 11).* 4. அழித்தல்; to destroy, ruin, collapse. *"முதல் விளிக்கும் வினையைப் புரியற்க" (விநாயகபு. 2, 59).* 5. கொல்லுதல்; to kill. *"வெஞ்சின வரக்கரை விளித்து வீயுமோ" (கம்பரா. நிந்தனை. 48).* 6. சினத்தல்; to anger. *"விளிந்தாரே போலப் பிறராகி" (பழமொ. 182) (செல்வி. 77 வைகாசி 475).* 7. மறைந்தவனை வெளிப்படுத்துவது போற் கூப்பிடுதல்; to call.

*[விள் → விளி → விளி–,]*

**L.** pello; **E.** appeal, repeal etc. (ஒ.மொ.216)

பேசுவோன் படர்க்கையோரைத் தன் முகமாக அழைப்பதனை விளி என்பர். பெயர்கள் விளிப் பொருளையேற்கும் போது அதனைத் தமிழிலக்கணங்கள் எட்டாம் வேற்றுமையாகக் கொள்ளும் (இலக்.கலைக்.112).

விளி⁴–த்தல் *vil̤i-,* 4 செ.கு.வி. (v.i.) பேராரவாரஞ் செய்தல்; to roar, shout. *"விளித்துப்பின் வேலைதாவும் வீரன்" (கம்பரா. கடறாவு. 33).*

*[விள் → விளி–,]*

விளி⁵ *vil̤i,* பெ.(n.) 1. ஓசை; sound. *"வளைவாய்க் கிள்ளை மறைவிளி பயிற்றும்" (பெரும்பாண். 300).* 2. இசைப்பாட்டு; song. *"விளியாக்கொண்டு" (சீவக. 2691).* 3. சொல்; word, speech. *"தீவிளி" (திவ். திருமாலை. 30).* 4. கொக்கரிப்பு; shout of excitement, frenzy or joy. *"எடுத்தனர் விளியும் சங்கும்" (சீவக. 447).* 5. அழைப்பு (பிங்.); call. 6. எட்டாம் வேற்றுமை; (gram.) vocative case. *"விளியெனப் படுப" (தொல். சொல். 114).*

*[விளி ²–, → விளி.]*

விளி⁶ *vil̤i,* பெ.(n.) ஐந்தாம் சுரம் (திவா.); (mus.) the fifth note of the gamut.

*[இளி ³ → விளி]*

விளிக்கூத்து *vil̤i-k-kūttu,* பெ.(n.) சீழ்க்கைக் கூத்து; dancing with whistling. *"நாத்தலை மடிவிளிக் கூத்தொடு" (சீவக. 120).*

*[விளி³ + கூத்து]*

விளிகொள்பெயர் *vil̤i-kol̤-peyar,* பெ.(n.) விளியினையேற்கும் பெயர்கள்; the nouns which accepted the vocative case.

விளிகொள்ளாப்பெயர்கள் *viḷi-koḷḷā-p-peyargaḷ,* பெ.(n.) விளியினையேற்காத பெயர்கள்; the nouns which are not accepted the vocative case.

[அவன், அவள் முதலாய பெயர்கள் விளி ஏற்பதில்லை. விளி ஏலாத பெயர்களைத் தமிழிலக்கணங்கள் தொகுத்துக் கூறி அவற்றை விளிகொள்ளாப் பெயர்கள் என்று குறிக்கின்றன.

நுமன், நுமள், நுமர் என்பனவும் எவன், எவள், எவர், எவை, எது என்பனவும் யாவன், யாவள், யாவர், யாவை, யாது என்பனவும் அவன், அவள், அவர், அவை, அது என்பனவும், இவன், இவள், இவள், இவர், இவை, இது என்பனவும், உவன், உவள், உவர், உவை, உது என்பனவும், தாம், தான் என்பனவும், பிறன், மற்றையான் முதலாயினவும் விளிகொள்ளாப் பெயர்கள் என்பர்]

(இலக். கலைக். 112).

விளிந்தார் *viḷindār,* பெ.(n.) இறந்தவர்; the dead. *"விளிந்தாரின் வேறல்லர்" (குறள். 143), "விளிந்தார் ஈமம் – விளக்காக" (சீவக.).*

*[விளி ¹ → விளிந்தார்]*

விளிப்பு *viḷippu,* பெ.(n.) 1. ஓசை; sound. *"விளிப்பறை போகாது" (மணிமே. 3, 63).* 2. இரைச்சலிடுகை (நாமதீப. 670); calling loudly, shouting.

*[விளி ² → விளிப்பு]*

விளிம்பு *viḷimbu,* பெ.(n.) 1. ஓரம் (நாமதீப. 546); border, edge, rim. 2. கரை; brink, margin. *"விளிம்பு தெற்றி முற்றுவித்து" (கம்பரா. நகரப். 20).* 3. கண்ணிமை (பிங்.); eyelid. 4. எயிறு (பிங்.); gums.

ஒ.நோ. வடிம்பு.

**Ma.** *viḷimbu.*

*[விளி ¹ → விளிம்பு]*

விளிம்புகட்டு-தல் *viḷimbu-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. பாய் முதலியவற்றிற்கு ஓரம் அமைத்தல்; to form a ring, to form the border, as in mat-making. 2. புண் ஆறி ஓரம் வைத்தல் (வின்.); to form proud flesh around a wound.

*[விளிம்பு + கட்டு–,]*

விளிவி-த்தல் *viḷivi-,* 11 செ.குன்றாவி.(v.t.) 1. பிறனொருவனைக் கூப்பிடும்படி ஆளனுப்புதல்; to send one to call another. 2. கொல்லச் செய்தல்; to cause to kill.

*[விளி ² → விளிவி–,]*

விளிவு[1] *viḷivu,* பெ.(n.) 1. இறப்பு (சூடா.); death. 2. கேடு; ruin. *"விளிவின்று... ஒருநீயாகித் தோன்ற" (திருமுரு. 292).* 3. உறக்கம்; sleep. *"காடுதேர் வேட்டத்து விளிவிடம் பெறா அது" (அகநா. 58).* 4. இடையறவு; interruption, cessation. *"விளிவின்று... தளிபொழிசாரல்" (பரிபா. 12. 2).* 5. நாணம்; shame. *"பேசரும் விளிவிற் கூடி" (திருவாலவா. 32, 7).* 6. கடுஞ்சினம்; great anger. *"பாவிமேல் விளிவு சரத நீங்கலதாம்" (கம்பரா. மீட்சிப். 130) (அக.நி.).*

*[விளி ¹ → விளிவு]*

விளிவு[2] *viḷivu,* பெ.(n.) வீரரார்ப்பு; warriors shout, war-cry. *"விளிவொடு விழியு மிழந்தார்" (கம்பரா. கிங்கர. 28).*

*[விளி ² → விளிவு]*

விளிவேற்றுமை *viḷi-vēṟṟumai,* பெ.(n.) எட்டு வகை வேற்றுமைகளில் ஒன்று;

[எண் வகை வேற்றுமைகளில் விளி வேற்றுமையும் ஒன்று. பெயர்கள் விளிப்பொருளில் ஆளப்படும் போது அதனை விளிவேற்றுமை என்பர்.

ஏனைய வேற்றுமைகளிலிருந்து விளிவேற்றுமை சொல்லியல்பாலும் தொடரியல்பாலும் வேறுபடு மாற்றை உணர்ந்த தொல்காப்பியர் விளி வேற்றுமைக்கு விளிமரபு என ஒரு தனியியலையே அமைத்திருக்கிறார். எல்லாப் பெயர்களும் விளி ஏற்பதில்லை என்பதும் விளிவேற்றுமை ஏற்கும்போது பெயர்கள் சாரியை பெறுவதில்லை என்பதும் இங்கே குறிப்பிடத்தக்கது] (இலக்.கலைக்.113).

**விளை¹–தல்** *vilai-,* 4 செ.கு.வி. (v.i.) 1. தவசம் முதலியன விளைதல்; to be produced. *"ஆற்ற விளைவது நாடு" (குறள், 732).* 2. பயன்றருதல்; to be productive. *'இந்த நிலம் நன்றாய் விளையுமா?'* 3. உண்டாதல் (பிங்.); to result. *'முற்பகற் செய்யிற் பிற்பகல் விளையும்'.* 4. முதிர்தல்; to mature, ripen, as grain. *"புன்புல மயக்கத்து விளைந்தன தினையே" (ஐங்குறு. 260).* 5. நிகழ்வித்தல்; to occur, happen. *"நாசமிவடனால் விளைந்த தென்னா" (கம்பரா. மாயாசீ. 62).*

க. பெள், ம. விளயுக; **Ko.** *velu*; **To.** *pel*; **Ka.** *bele*; **Kod.** *bole*; **Tu.** *bulē*; **Te.** velayu, belayu.

*[விள் → விளை → விளை–,]*

**விளை²–த்தல்** *vilai-,* 11 செ.குன்றாவி. (v.t.) 1. பயிர் முதலியன வளரச்செய்தல்; to raise cropscet, cause to grow. *"செய்விளைக்கும் வாய்க்கா லனையார் தொடர்பு" (நாலடி, 218).* 2. உண்டாக்குதல்; to produce, bring into being. *"புகழ் விளைத்தல்" (பு.வெ.2.14).* 3. புரிதல்; to perform, as worship. *"பூசனை விளைத்த வாறும்" (விநாயகபு. பதிக. 22).*

*[விளை ¹–, → விளை–,]*

**விளை³** *vilai,* பெ.(n.) 1. விளைவு, 1 (அரு.நி) பார்க்க; see *vilaivu.* 2. விளைவு, 4 பார்க்க; see *vilaivu.* 3. பட்டறிவு; experience, enjoyment. *"விளைவயின் மாண்டற் கரிதாம் பயன்" (குறள், 177).* 4. புன்செய்க் காடு (நெல்லை.); dry land. 5. நீரேறாத மேட்டு நிலம் (வின்.); high ground far above the level of the water-course. 6. நகர்சூழ் காவற்காடு (நாமதீப. 519); forest round a city, serving as a defence.

க. பெளெ.

*[விள் → விளை]*

**விளை⁴** *vilai,* பெ.(n.) காக்கட்டான் என்னும் கொடி; mussel-shell creeper. *"விளையின் மென்பூ" (கம்பரா. கார்காண். 32);*

*[கருவிளை → விளை]*

**விளை⁵** *vilai,* பெ.(n.) 1. நரம்பு (அரு.நி.); string. 2. மீன்வகை (யாழ்.அக.); a kind of fish.

*[விள் → விளை]*

**விளைகரி** *vilai-kari,* பெ.(n.) நிலக்கரி (வின்.); coal, mineral coal.

*[விளை ¹– + கரி ¹]*

**விளைச்சல்** *vilaiccal,* பெ.(n.) 1. விளைவு, 4 (சிலப். 6, 30 அரும்.) பார்க்க; see *vilaivu.* 2. முற்றிவரும் பயிர் (வின்.); ripening grain. 3. விளைவு 1, 2, 6, 7 பார்க்க; see *vilaivu.* 4. இளமையிலேயே முதிர்ந்த அறிவு (இ.வ.); precocity.

*[விளை–, → விளைச்சல்]*

**விளைஞர்** *vilaiñar,* பெ.(n.) மருத நிலமாக்கள்; agriculturists.

*[விளை → விளைஞர்]*

**விளைதயிர்** *viḷai-tayir,* பெ.(n.) நன்கு கெட்டியான தயிர்; curd in robustness.

*[விளை + தயிர்]*

மறுவ. கெட்டித்தயிர்.

**விளைநிலம்** *viḷai-nilam,* பெ.(n.) பயிரிடக்கூடிய நிலம்; fertile ground, arable land, land suitable for raising crops. *"விளைநிலத்து நெல்லின் விழுமிதாக் கொள்வர்" (நாலடி, 133).*

*[விளை[1]– + நிலம்]*

**விளைநீர்** *viḷai-nīr,* பெ.(n.) பாசனத்துக்குரிய நீர்; water for irrigation. *"விளைநீராக வளர்ந்தபடி" (திவ். திருப்பா. 17. வ்யா. பக். 164).*

*[விளை + நீர்]*

**விளைநீரடை-த்தல்** *viḷainīr-aḍai-,* 4 செ.கு.வி. (v.i.) பாசனத்திற்கு வேண்டிய அளவுக்கு நீரைத் தேக்கிக் கொள்ளுதல்; to let water into a field, in quantity sufficient for its irrigation. *"விளை நீரடைத்துக் கொண்டு" (ஈடு. 6, 2. ப்ர.).*

*[விளைநீர் + அடை–,]*

**விளைப்பு** *viḷaippu,* பெ.(n.) செய்கை (யாழ்.அக.); doing.

*[விளை[2] → விளைப்பு]*

**விளைபுலம்** *viḷai-pulam,* பெ.(n.) விளைநிலம் (தக்கயாகப். 2, உரை) பார்க்க; see *viḷai-nilam.*

*[விளை[1] + புலம்]*

**விளைபொருள்** *viḷai-poruḷ,* பெ.(n.) நிலத்தில் விளையும் பொருள்; produce, product.

*[விளை + பொருள்]*

**விளையவை-த்தல்** *viḷaiya-vai-,* 4 செ. குன்றாவி. (v.t.) 1. முதிரச் செய்தல் (வின்.); to cause to mature or ripen. 2. பயன் படச் செய்தல்; to make a thing serve its purpose, to make use of. 3. விளைவுண்டாகச் செய்தல்; to cause to be productive. 4. இறுகிக் கட்டியாகும்படி விடுதல் (வின்.); to allow to crystallize, harden. 5. அவுரிச்சரக்கை அழுகவைத்தல் (வின்.); to set aside to ferment, as indigo. 6. ஈமக்காட்டில் பிணத்திற்கு நெருப்பு மூட்டுதல் (வின்.); to kindle a fire for burning a corpse in burial ground, to cremate.

*[விளைய + வை–,]*

**விளையாட்டம்[1]** *viḷaiyāṭṭam,* பெ.(n.) விளையாட்டு பார்க்க; see *viḷaiyaṭṭu.* *"பிள்ளை விளையாட்ட மனைத்தினும்" (திவ். பெருமாள். 7, 9).*

*[விளையாடு → விளையாட்டம்]*

**விளையாட்டம்[2]** *viḷai-y-āṭṭam,* பெ.(n.) விளைநிலம் பார்க்க; see *viḷai-nilam.* *"கோவில் விளையாட்ட மெங்கும்" (குற்றா. குற. 98).*

*[விளை[1] + ஆடு → ஆட்டம்]*

**விளையாட்டம்மை** *viḷaiyāṭṭammai,* பெ.(n.) 1. மணல் வாரியம்மைவகை; measles. 2. சின்னம்மை; chicken-pox.

*[விளையாட்டு + அம்மை. அம்மை = அம்மை நோய்வகை]*

**விளையாட்டரங்கம்** *viḷaiyāṭṭaraṅgam,* பெ.(n.) விளையாடவும், விளையாட்டுப்

பயிற்சி பெறவும், சுற்றிலும் பார்வையாளர்கள் அமர்ந்து பார்க்க ஏந்துடையதுமான அரங்கம்; stadium.

*[விளையாட்டு + அரங்கம்]*



**விளையாட்டு** *viḷaiyāṭṭu,* பெ.(n.) 1. பொழுது போக்குக்குரிய மகிழ்ச்சிச் செயல்; play, sport, pastime, recreation. *"இன்று நீர்விளையாட்டினுள்" (சீவக. 903).* 2. துன்பமின்றி எளிதாகச் செய்யுந் தொழில்; that which is done with ease without strain. *"பெருவிளையாட் டைந்தாடும் பிஞ்ஞகன்" (திருவாலவா. நாட்டுச். 1.).* 3. வேடிக்கை; fun. *"நான் இதை விளையாட்டாகச் சொன்னேன்" (வின்.).* 4. விளையாடல், 3 பார்க்க; see *viḷaiyāḍal* 3. 5. கலைத்தொழில் எட்டனுள் பாட நினைத்த வண்ணத்திற் சந்தத்தை விடுகை (சீவக. 657, உரை); adapting the *candam* to the *vaṇṇam*, one of eight *kalai-t-toḻil*, q.v.

*விளையாட்டின் கூறுகள்*

1. கட்சி பிரித்தல்

இரு கட்சியார் விளையாடும் விளையாட்டு களிலெல்லாம் முதலாவது கட்சி பிரித்துக் கொள்ளல் வேண்டும். ஆற்றலும் மூப்பும் வாய்ந்த இருவர் முதலில் கட்சித் தலைவராய் அமர்ந்து கொள்வர். அதன்பின், பிறர் இருவர் இருவராய்ச் (இவ்விருவராய்ச்) சேர்ந்து தமக்குக் கவர்ச்சியான வெவ்வேறு புனைபெயரிட்டுக் கொண்டு, கட்சித் தலைவரிடம் சென்று "இவ்விரு பெயராருள் உமக்கு எவர் வேண்டும்?" எனக்கேட்பர். கட்சித்தலைவர் யாரேனும் ஒருவரைத் தெரிந்து கொண்டு அவரைத் தம் கட்சியிற் சேர்த்துக் கொள்வர். இங்ஙனம் இவ்விருவராய்ச் சேர்ந்து செல்லற்கு உத்திகட்டுதல் என்று பெயர். கட்சித் தலைவனைப் பொதுவாக 'அண்ணாவி' என அழைப்பர். இவை பாண்டி நாட்டு வழக்கு.

உத்தியாளர் கட்சித் தலைவரைக் கேட்கும் போது, காற்றைக் கலசத்தில் அடைத்தவன் வேண்டுமா, கடலைக் கையால் நீந்தினவன் வேண்டுமா? என்றும், வானத்தை வில்லாய் வளைத்தவன் வேண்டுமா, மணலைக் கயிறாய்த் திரித்தவன் வேண்டுமா? என்றும் பிறவாறும், அருஞ்செயல் ஆற்றிய பழமறவரின் சிறப்புப் பெயர்களையே கூறிக்கேட்பர். இத்தகைய பெயர்களைக் *"கூடிவரு வழக்கின் ஆடியற் பெயர்"* என்பர் தொல்காப்பியர் (சொல் : 165)

மகளிராயின், தாந்தாம் விரும்பிய பூப்பெயரைச் சொல்லிக் கேட்பர்.

2. தொடங்கும் கட்சியைத் துணிதல்

இரு கட்சியாருள் யார் முந்தி யாடுவதென்று துணிதற்கு, உடன்பாடு, திருவுளச்சீட்டு ஆகிய இரு முறைகளுள் ஒன்று கையாளப் பெறும். இவற்றுட் பின்னதே பெரும்பான்மை. காசு சுண்டல், ஒடெறிதல் முதலியன திருவுளச் சீட்டின் வகைகளாம்.

இரு கட்சியாரில்லாது ஒருவரே பிறரையெல்லாம் ஓடிப் பிடிக்கும் விளையாட்டுக்களில், புகையிலைக் கட்டை யுருட்டல், சீமூட்டையெறிதல், நீருட்சுண்டல், கைமேற்கை வைத்தல், மரபுரை கூறல் முதலியன, அவ்வவ் விளையாட்டிற் கேற்பத் திருவுளச் சீட்டு வகையாய் அமையும். கோலி ஆட்டத்தில் கோலிபுருட்டுவதில் பிறரை மேற்கொண்டவர் முந்தியாடுவர்.

3. இடை நிறுத்தல்

ஒரு விளையாட்டின் இடையில் ஓர் ஆடகர்க்கு ஆடையவிழ்தல் முடிகுலைதல் முதலிய தற்செயலான தடைகள் நிகழின், அன்று அவற்றைத் திருத்தற்கு ஏதேனுமொரு மரபுச் சொல்லைச் சொல்லிச் சற்று ஆட்டை நிறுத்திக் கொள்ளலாம். பாண்டி நாட்டில் *'தா'* என்பதும், சேர

கொங்குநாட்டில் *'அம்பேல்'* என்பதும் இடைநிறுத்த மரபுச் சொல்லாம்.

### 4. தோல்வித் தண்டனை

முட்டு வாங்கல், எதிரியைச் சுமத்தல் முதலிய மெய்வருத்தமும் காசுத் தண்டமும் இருவகைத் தோல்வித் தண்டனையாம்.

*'இடுக்கண் வருங்கால் நகுக அதனை*
*அடுத்தூர்வ தஃதொப்ப தில்'*

என்னும் குறளிலுள்ள 'அடுத்தூர்வது' என்னும் தொடர் விளையாட்டில் வென்றவர் தோற்றவர் மேல் குதிரையேறும் என்பதைக் குறிப்பான் உணர்த்துவதாகும்.

தண்டனையே யில்லாது விளையாடுவது முண்டு. தண்டனையுண்மையும் இன்மையும், தண்டனையில் வகையும் அளவும் விளையாட்டைத் தொடங்கு முன்னரே, பேசி முடிவு செய்யப் பெறும்.

### 5. ஆடைதொடல் கணக்கன்மை

ஒருவர் பிறரைத் தொடும் விளையாட்டுக் களிலெல்லாம் உடம்பைத் தொடுதலின்றி ஆடையைத் தொடுதல் கணக்காகாது. "வண்ணான் சீலைக்கு வழக்கில்லை" என்பது இந்நெறிமுறை பற்றிய பழமொழியாகும்.

### 6. தவற்றால் ஆடகர் மாறல்

ஆட்டு நிகழும் போது ஆடுகிறவன் தவறின், அடுத்தவன் ஆடல் வேண்டும்.

### 7. வென்றவர்க்கு மறு ஆட்ட வசதி

ஓர் ஆட்டையில் வென்றவர்க்கு மறு ஆட்டையில் முந்தியாடுவது அல்லது எதிர்க்கட்சியில் பிடிக்கப்படுவது போன்ற வசதியளிக்கப்பெறும்.

### 8. இடத்திற்கேற்ப வேறுபடல்

பல ஆட்டுக்களை ஆடு முறையும், அவற்றிற் சொல்லும் மரபுரைகளும் இடத்திற்கு இடம் சிறிதும் பெரிதும் வேறுபட்டிருப்பது, இயல்பு.

### 9. ஆட்டைத்தொகை வரம்பின்மை

எவ்விளையாட்டிலும் இத்துணை ஆட்டை ஆடித் தீர வேண்டும் என்னும் கடுவரம்பில்லை, ஆடுவார் விருப்பம் போல் எத்துணை ஆட்டையும் ஆடலாம். பொதுவாக, ஓர் ஆட்டையில் தோற்றவன் அடுத்த ஆட்டையில் வெற்றி, நம்பிக்கை கொள்ளின், அதை ஆடுமாறு எதிரியை வற்புறுத்துவது வழக்கம்.

### 10. நடுநிலை

விளையாட்டு இருபாலர்க்கும் இருபருவத்தார்க்கும் இன்பம் விளைவிப்பதே யாயினும், நடுநிலை போற்றாக்கால் இன்பத்திற்கு மாறாகத் துன்பமே விளையும். பணையம் வைத்தாடினும் வையாதாடினும் கெலித்தவர்க்கு மகிழ்ச்சியும் தோற்றவர்க்கு வருத்தமும் உண்டாவது திண்ணம். தோற்றவர் நடுநிலை போற்றின், அவ்வருத்தத்தை ஆற்றிக் கொள்வர். அல்லாக்கால் தம் தோல்வியை ஒப்புக் கொள்ளாது கலாம் விளைப்பர். அல்லது கரவு நெறியால் வெல்ல முயல்வர்.

விளையாட்டிற் பெரியோருந் தப்புவர் என்பது, 'சோழன் நலங்கிள்ளி தம்பி மாவளத்தானும், தாமப்பல் கண்ணனும் வட்டுப் பொருவுழிக் கைகரப்ப வெகுண்டு வட்டுக் கொண்டெறிந் தானைச் சோழன்மகனல்லை யெனத் தாமப்பல் கண்ணனார் கடிந்து கூறிய புறப்பாட்டால் (43) அறியக் கிடக்கின்றது.

பெரியோரும் விளையாட்டில் தப்புவராயின் சிறியோர் தப்புவதைச் சொல்ல வேண்டுவதில்லை. சிறுவர் விளையாட்டில் நிகழ்ந்த சிறு சண்டையின் விளைவாக எத்துணையோ பெரியோர் தம் கண்ணன்ன கேளிரைப் பகைத்ததும், அதனாற் பெருஞ் செல்வத்தைத் தொலைத்ததும் உண்டு. இதனால்தான் சிறுவர் சண்டையில் பெரியோர் தலையிடக் கூடாது என்னும் நெறிமுறையும் எழுந்தது.

விளையாட்டின்பம் கருதிப் பிறர்க்கு நோவைத் தருவனவும் செய்தல் கூடாது. பிறர் நோவையும் தன்நோவு போற் பேணுந் தன்மை, விளையாட்டிற்கு இன்றியமையாததாகும். இராமன் தன் பையற் பருவத்தில் மந்தரையின் கூனில் மண் ணுண்டையால் அடித்ததற்காகத் தன் காளைப் பருவத்தில் பதினாலாண்டு அரசிழக்க நேர்ந்தது என்று இராமகாதை கூறும். இங்ஙனம் விளையாட்டே வினையானது என்றில்லாவாறு கூடி விளையாடும் ஆடகரெல்லாம் நடுநிலையைப் போற்றல் வேண்டும். (பாவாணர் – தமிழ் நாட்டு விளையாட்டுக்கள்). *'விளையாட்டாய் இருந்தது வினையாய் முடிந்தது'* (பழ.)

*[விளையாடு → விளையாட்டு]*

**விளையாட்டுக்காட்டு-தல்** *viḷaiyāṭṭukkāṭṭu-,* 10 செ.கு.வி. (v.i.) 1. குழந்தைகட்குப் போக்குக் காட்டுதல்; to divert attention of children. 2. கண்கட்டு வித்தை முதலியன காண்பித்தல்; to exhibit one's magical powers, art, etc. 3. வேடிக்கைக் காட்டுதல்; to play tricks.

*[விளையாட்டு + காட்டு-,]*

**விளையாட்டுக்கூட்டம்** *viḷaiyāṭṭukkūṭṭam,* பெ.(n.) 1. களித்து விளையாடுவதற்கு உரியவரின் கூட்டம் (தக்கயாகப். 307, உரை); merry or gay company. 2. காரணமின்றிச் சேரும் மாந்த ரீட்டம் (யாழ்.அக.); idle crowd gathering together for no purpose.

*[விளையாட்டு + கூட்டம்]*

**விளையாட்டுடைமை** *viḷaiyāṭṭuḍaimai,* பெ.(n.) பொம்மை (புதுவை.); toy.

*[விளையாட்டு + உடைமை]*

**விளையாட்டுப்பண்டம்** *viḷaiyāṭṭu-p-paṇḍam,* பெ.(n.) குழந்தைகள் விளையாடுவதற்கான பொருள்கள்; things for playful children. *'விளையாட்டுப் பண்டம் வீடு வந்து சேராது' (பழ.).*

**விளையாட்டுப்பிள்ளை** *viḷaiyāṭṭu-p-piḷḷai,* பெ.(n.) 1. சிறுபிள்ளை (யாழ்.அக.); little child, as playful. 2. சிறுபிள்ளைத் தனமாக நடப்பவ-ன்-ள்; person behaving in a silly way. 3. கவலையின்றியிருப்பவ-ன்-ள்; irresponsible. *'விளையாட்டுப் பிள்ளை நஞ்சிற்கு அஞ்சாது' (பழ.).*

*[விளையாட்டு + பிள்ளை]*

**விளையாட்டுபொம்மைகள்** *viḷaiyāṭṭu-p-pommaigaḷ,* பெ.(n.) குழந்தைகள் வைத்து விளையாடும் பொம்மைகள்; dolls.

[பொம்மைகள் குழந்தைகளைக் கவர்ந்து மகிழ்விக்கின்றன. பொம்மைகளால் கவரப்படாத குழந்தையே இல்லை எனலாம். இந்த ஆர்வத்தை அறிவு வளர்க்கும் துறையில் திருப்பி விடுதலே சிறந்த குழந்தை வளர்ப்பு முறையாகும்.

விளையாட்டுப் பொம்மைகள் விலை உயர்ந்தவை என்றும், அதனால் அவை செல்வர்களின் குழந்தைகளுக்குத்தான் ஏற்றவை என்றும் ஒரு கருத்து நிலவுகிறது. இது முற்றிலும் தவறானது. குழந்தைகளை வளர்க்கும் அறிவுடன் புதுமையாகச் சிந்திக்கும் திறன் சிறிதளவேனும் இருந்தால், குறைந்த செலவில் தம் குழந்தைகளுக்கு ஏற்ற விளையாட்டுப் பொம்மைகளைப் பெற்றோர் அளிக்க முடியும்.

குழந்தை விளையாட்டுப் பொம்மைகளில் காட்டும் ஆர்வம், பிற்காலத்தில் வாழ்க்கையில் காட்டும் ஆர்வத்தின் துவக்கமேயாம். வளர வளரக் குழந்தை பொம்மைகளில் கொண்டுள்ள ஆர்வம் வாழ்க்கைச் சிக்கல்களுக்கு மாறுகிறது. விளையாட்டுப் பருவத்தில் பொம்மைகளினால் வளம்பெற்ற ஆர்வமே, மகிழ்ச்சியும் பயனும் மிக்க வாழ்க்கைக்குச் சிறந்த அடிப்படையாகும்]



**விளையாடல்** *viḷaiyāḍal,* பெ.(n.) 1. பொழுது போக்குகை (நாமதீப. 701.); play, sport. 2. கடவுளின் திருவிளையாடல்; sport of the gods. 3. இன்ப ஆடல்; amorous sport.

*[விளையாடு → விளையாடல்]*

**விளையாடு-தல்** *viḷaiyāḍu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. பொழுதுபோக்காக மனத்துக்கு இன்பந்தருஞ் செயலைப்புரிதல்; to play, sport, recreate. *"காத்தும் படைத்துங் கரந்தும் விளையாடி" (திருவாச. 7, 12).* 2. துள்ளிக்குதித்தல்; to gambol. 3. வேடிக்கையாகச் செய்தல்; to do an act light-heartedly. 4. பகடி செய்தல்; to be playful, humorous or funny.

*[விள் → விளை → விளையாடு-,]*

பிள் → விள் = விளை = விருப்பம். விளையாடுதல் = விருப்பமாய் ஆடியோடித் திரிதல் அல்லது ஒரு வினை செய்தல். "கெடவரல் பண்ணை யாயிரண்டும் விளையாட்டு" (தொல்.உரி.) என்பதற்கேற்ப, விளையாடல் என்னும் சொற்குப் பயிர்த்தொழில் செய்தல் போல் நடித்து மகிழ்தல் என்னும் பொருளும் பொருந்துமேனும், விரும்பியாடுதல் என்னும் பொருளே சிறந்ததாகத் தோன்றுகின்றது. (பாவாணர். வே.க.119).

**விளையாநிலம்** *viḷai-y-ā-nilam,* பெ.(n.) களர்நிலம் (பிங்.); brackish soil.

மறுவ. உவர்நிலம், உவர்க்களம்.

*[விளை + ஆ.எதிர்மறை இடைநிலை + நிலம்]*

**விளையுங்காலம்** *viḷaiyuṅ-kālam,* பெ.(n.) அறுப்புக் காலம் (யாழ்.அக.); time of harvest, harvest season.

மறுவ. அறுவடைக்காலம்

*[விளையும் + காலம்]*

**விளையுள்** *viḷaiyuḷ,* பெ.(n.) 1. நாட்டமைதி ஆறனுளொன்றான விளைச்சல்; produce, crop. one of six *nāṭṭamaidi,* q.v. *"பெயலும் விளையுளுந் தொக்கு" (குறள், 545).* 2. முதிர்கை; maturing. *"வேய்ப் பெயல் விளையுட் டேக்கட் டேறல்" (மலைபடு. 171).* 3. வயல் (பிங்.); field. 4. உள்ளம் (அரு.நி.); mind.

*[விளை + உள்²]*

நாட்டில் விளைவன : நெல், வாழை, கரும்பு, மஞ்சள், இஞ்சி, வெற்றிலை பாக்கு முதலியன.

காட்டில் விளைவன : எள், பயறு, தேன், அரக்கு, சந்தனம், புனுகு காசறை (கஸ்தூரி) முதலியன.

மலையில் விளைவன : ஏலம், மிளகு, அகில், மருப்பு (தந்தம்) மரம், பொன், மணி, முதலியன.

கடலில் விளைவன : உப்பு, மீன், இறால், சங்கு, முத்து, பவழம், ஓர்க்கோலை முதலியன (குறள். 730)

**விளைவி-த்தல்** *viḷaivi-,* 11 செ.குன்றாவி. (v.t.) 1. விளையச் செய்தல்; to cause to grow, to cultivate. 2. செயற்கை வழியாகப் பயிர் முதலியன வளர்த்தல் (வின்.); to stimulate growth by artificial means. 3. பயன் தருதல்; to yield results, to bring about consequencesd, to be fruitful.

*[விளை → விளைவி]*

**விளைவு** *viḷaivu,* பெ.(n.) 1. விளைகை; growth, ripening. 2. முதிர்ச்சி; maturity, ripening. *"விளைவமை தயிரொடு மிசைகுவர்" (சீவக. 122).* 3. முதுமை (பிங்.); old age. 4. விளைபொருள்; produce, crop, yield. *"விச்சு தின்றியே விளைவு செய்குவாய்" (திருவாச. 5, 96).* 5. பழம்; fruit. *"வெள்ளில் விளைவுதிரும்" (பு.வெ.10. சிறப்பிற். 1).* 6. பயன்; result, consequence. *"விளைவின்கண் வீயா விழுமந் தரும்" (குறள், 284).* 7. கைகூடுகை; success, grain. *"வேண்டிய பொருளின் விளைவு நன்கறிதற்கு..... சொல்லோர்த்தன்று" (பு.வெ.1, 4).* 8. ஆக்கம் (நாமதீப. 623); increase. 9. நிகழ்ச்சி;

event, happening. *"விளைவுரையென்று விட்டார்..... மெய்ம்மை யோர்வார்" (கம்பரா. பிணிவீ. 116).* 10. விளையுமிடம்; place where anything is produced. *"வினைக்கு விளைவாயது" (மணிமே. 4, 113).* 11. வயல் (யாழ்.அக.); field. 12. மேகம் (பிங்.); cloud. 13. நாடகச்சந்தி ஐந்தனுளொன்று (சிலப். 3, 13, உரை); denouement or solution in a play, one of five *nāḍaga-c-šandi*, q.v. *'விளையும் பயிர் முளையிலே தெரியும்' (பழ.).*

க. பெளவிகெ; ம. விள.

*[விளை → விளைவு]*

விளைவுபலன் *viḷaivu-palaṉ,* பெ.(n.) விளையுபொருள்; produce.

மறுவ. விளைச்சல்

*[விளைவு + பயன் → பலன் [1]]*

விற்கண்டம் *viṟ-kaṇḍam,* பெ.(n.) கட்டட வுறுப்புக்களுள் ஒன்று (S.I.I.V. 236); arch.

*[வில் + கண்டம்]*

விற்காயம் *viṟ-kāyam,* பெ.(n.) முற்காலத்தில் வழங்கிய வரிவகை (S.I.I.vii.404); an ancient tax.

*[வில் + காயம்]*

விற்காரன் *viṟ-kāraṉ,* பெ.(n.) வில்லாளன்; archer, bowman.

க. பில்கார.

மறுவ. வில்லேறுழவர்.

*[வில் + காரன் [1]]*

விற்கால் *viṟ-kāl,* பெ.(n.) வளைந்த கால் (வின்.); bowleg.

*[வில் + கால்]*

விற்கிடை *viṟkiḍai,* பெ.(n.) நான்கு முழங்கொண்ட அளவு; bow's length = 4 cubits. *"அத்தவெற்பிரண்டு விற்கிடை யெனப்போயாதவன் சாய்தல் கண்டருளி" (பாரத. பதினேழாம். 237).*

*[வில் + கிடை]*

விற்குடி *viṟ-kuḍi,* பெ.(n.) எண்வீரட்டங்களுள் ஒன்றும் திருவாரூர் மாவட்டத்திலுள்ளது மாகிய ஒரு சிவன் கோயில்; a *šiva* shrine in the Thiruvaerur district, one of *aṭṭa-viraṭṭam*, q.v.

விற்குன்று *viṟ-kuṉṟu,* பெ.(n.) மேரு மலை; mount *mēru*, as *šiva's* bow. சிவபிரானது வில். *"பள்ளிக்குன்றம் விற்குன்று மொழிய" (தக்கயாகப். 536).*

*[வில் + குன்று]*

விற்கோடி *viṟ-kōḍi,* பெ.(n.) 1. சிலைத் தீவு; *daṉus-kōḍi*. *"விற்கோடியிற் குடைந்துளோர் பவம்..... ஓடும்" (சேதுபு. கந்த. 79).* 2. ஒரு பேரெண் (அரு.நி.); a big number.

*[வில் + கோடி [3]]*

விற்படை *viṟ-paḍai,* பெ.(n.) 1. வில்லாகிய படைக்கருவி; bow, as a weapon. *"விற்படை நிமிர்ந்த தோளான்" (சீவக. 1710).* 2. விற்றானை பார்க்க; see *viṟṟāṉai*. *"விற்படை யிருக்கின்ற ஊர்களிலே" (பெரும்பாண். 82. உரை).* 3. அம்பு; arrow. *"விற்படை விலக்குவ பொற்புடைப் புரவியும்" (சீவக. 567).*

*[வில் + படை]*

விற்பணம் *viṟ-paṇam,* பெ.(n.) வில்லின் பொருட்டுச் செலுத்தும் வரி (S.I.I.i.81); a tax on bows.

*[வில் + பணம்]*

விற்பனவு *vir-panavu,* பெ.(n.) விற்பனை (யாழ்.அக.) பார்க்க; see *virpanai.*

*[விற்பனை → விற்பனவு]*

விற்பனன் *virpanan,* பெ.(n.) விற்பன்னன் பார்க்க; see *virpannan.*

*[விற்பன்னன் → விற்பனன்]*

விற்பனை *virpanai,* பெ.(n.) விற்றல் பார்க்க; see *virral.*

*[வில் → விற்பனை]*

விற்பனைப்பத்திரம் *virpanai-p-pattiram,* பெ.(n.) விலை ஆவணம்; sale deed.

**Skt.** patra > த. பத்திரம்.

*[விற்பனை + பத்திரம்]*

விற்பாட்டு *vir-pāttu,* பெ.(n.) விற்போன்ற இசைக்கருவியை யொலிக்கச் செய்து கதை தழுவிப் பாடும் பாட்டு; a kind of narrative poem sung to the accompaniment of a bow-like musical instrument.

மறுவ. வில்லுப்பாட்டு

*[வில் + பாட்டு]*

விற்பிடி[1] *vir-pidi,* பெ.(n.) வில்லைப் பிடிக்குங் கையினுள்ளளவு; the inside measure of the hand holding a bow. *"விற்பிடியளவாதலுமெல்லாம் கொள்க" (தக்கயாகப். 41).* 2. இணையாவினைக்கை முப்பத்து மூன்றனுள் கட்டை விரலை நிமிர்த்திச் சுட்டுவிரல் முதலிய நான்கு விரல்களையும் உட்புறம் வளைப்பதாகிய மெய்ப்பாடு வகை (சிலப். 3, 18, உரை); a gesture with one hand in which the four fingers other than the thump are held together and bent in while the thumb is kept separate and held upright, one of 33 *inaiyā-vinai-k-kai,* q.v.

*[வில் + பிடி [2]]*

விற்பிடி[2]-த்தல் *vir-pidi-,* 4 செ.கு.வி.(v.i.) வில்வித்தை பயிலத் தொடங்குதல்; to stand or commence learning archery. *"திண்ணன் விற்பிடிக்கின்றா னென்று" (பெரியபு. கண்ணப்ப. 29).*

*[வில் + பிடி-,]*

விற்பிடிமாணிக்கம் *virpidi-manikkam,* பெ.(n.) சிறந்த மாணிக்கம்; superior ruby. *"தன் கைக்கடங்காத விற்பிடி-மாணிக்கத்தைப் பெற்றவன்" (திவ். திருப்பல். வ்யா. ப்ர.).*

*[விற்பிடி + மாணிக்கம்]*

விற்பு *virpu,* பெ.(n.) விறப்பு (அரு.நி.) பார்க்க; see *virappu.*

விற்புட்டில் *vir-puttil,* பெ.(n.) விரலுறை; glove. *"விற்புட்டிலிட்டு" (பாரதவெண். 775).*

*[விரற்புட்டில் → விற்புட்டில்]*

விற்புரமுத்திரை *virpura-muttirai,* பெ.(n.) முத்திரைவகை (செந். x. 424); a hand-pose.

*[விற்புர + முத்திரை]*

விற்புருதி *virpurudi,* பெ.(n.) விப்புருதி (யாழ்.அக.) பார்க்க; see *vippurudi.*

விற்புருதிக்கிழங்கு *virpurudi-k-kilangu,* பெ.(n.) அமுக்கிராக்கிழங்கு (சங்.அக.); tuber of Indian wintercherry.

*[விற்புருதி + கிழங்கு]*



விற்பூட்டு *vir-pūṭṭu,* பெ.(n.) 1. பூட்டுவிற்பொருள்கோள் பார்க்க; see *pūṭṭu-vir-poruḷkōḷ,* a mode of construing verse. *'விற்பூட்டு விதலையாப்பு' (இறை. 56, உரை).* 2. கத்தரிவகை (பெருங். வத்தவ. 14, 32); a kind of egg-plant or brinjal.

*[வில் + பூட்டு]*

விற்பூட்டுப்பொருள் *virpūṭṭu-p-poruḷ,* பெ.(n.) பூட்டுவிற்பொருள்கோள் (வின்.) பார்க்க; see *pūṭṭu-vir-poruḷ-kōḷ,* a mode of construing verse.

*[விற்பூட்டு + பொருள்]*

விற்பூட்டுப்பொருள்கோள் *virpūṭṭu-p-poruḷkōḷ,* பெ.(n.) பூட்டுவிற்பொருள் கோள் (வின்.); a mode of construing verse.

*[விற்பூட்டு + பொருள்கோள்]*

விற்பூண்பொருள்கோள் *virpūṇ-poruḷkōḷ,* பெ.(n.) பொருள்கோள் எட்டனுள் செய்யுளின் முதலிலும் ஈற்றிலும் உள்ள சொற்கள் தம்முள் இயையப் பொருள் கொள்ளும் முறை (நன். 415); a method of construng a verse by taking together the first and last words one of eight *poruḷ-kōl,*q.v.

[ஒரு செய்யுளில் முதலில் நிற்கும் சொல்லும் ஈற்றில் நிற்கும் சொல்லும் இயைந்து பொருள் பயக்குமாயின் அதனை விற்பூண் பொருள்கோள் என்பர். வில்லில் உள்ள நாண் இருதலையும் சேரப்பூட்டி நிற்பது போல இப்பொருள்கோள் அமைவதால் விற்பூண் பொருள்கோள் என்றனர்]

விற்பொறி *virpoṛi,* பெ.(n.) சேரவரசரது வில்லிலாஞ்சனை; the bow-emblem of the *šēra-kings. "இமயஞ் சூட்டிய வேம விற்பொறி" (புறநா. 39).*

*[வில் + பொறி = இலாஞ்சனை]*

விற்றல் *virral,* பெ.(n.) விலைசெய்கை; selling, sale.

*[வில் → விற்றல்]*

விற்றானை *virrāṇai,* பெ.(n.) அறுவகைப் படையுள் வில் வீரர்களாலான படை (திவா.); the battalion of archerss in an army, one of *aṟuvagai-t-tāṇai,* q.v.

*[வில் + தானை]*

விற்று *virru,* பெ.(n.) விள்ளுகை (அரு.நி.) பார்க்க; see *viḷḷugai*, dividing.

விற்றுமுதல் *virru-mudal,* பெ.(n.) விற்றுவந்த பணம் (C.G.); sale proceeds. *'அவனுக்கு நாள்தோறும் விற்றுமுதல் கொழிக்கிறது' (உ.வ.).*

*[வில் → விற்று + முதல்]*

விற்றூண் *virrūṇ,* பெ.(n.) விற்றுண்ணற்குரிய சில்லரைப் பண்டங்கள்; sundry articles which can be sold for daily food. *"விற்றூ ணொன்றில்லாத நல்கூர்ந்தான் காண்" (தேவா. 1097, 1).*

*[வில் → விற்று+ ஊண்]*

**விற்றூற்றுமூதெயினனார்** *virrūrru-mūteyiṉaṉār,* பெ.(n.) கடைக்கழகப் புலவர்; a sangam poet.

கடைக்கழகப் புலவர்களில் ஒருவர், இவரை முந்நூற்று மூதெயினனார் என்றும் சில படிகள் கூறும். விற்றூறு, முத்தூறு என்பவை ஊர்களின் பெயர்கள், மூதெயினன் என்னும் பெயர் இவரை வேடர் மரபினரென்றும் முதியவரென்றும் காரணங் காட்டுகின்றன. எனவே, இது இவருக்கியற் பெயரெனலாகாது. தமிழருடைய திருமண முறையை இவர் அகநானூற்றில் மிக அழகாகக் கூறுகிறார். திங்களை சகடு (உரோகிணி) கூடிய நேரம் திருமணத்திற்கு நல்ல நேரம் என்பது இவர் கருத்தென்றும், மண நாளன்று வாகையிலையையும் அறுகின் கிழங்கையும் நூலிற் சேர்த்துக் கட்டி மணமகளுக்குச் சூட்டுவதும், மணநாளிரவிலேயே மணமக்களைப் பள்ளியறையிற் சேர்ப்பதும் அந்நாளைய வழக்கமென்றும் அச்செய்யுள் அறிவிக்கின்றது. தலைமகளைப் போர்த்தியிருந்த போர்வையை நீக்கியவுடன் வெளிப்படும் அவள் உருவம் உறை நீங்கிய வாள்போலக் காணப்பட்டதென்று இவர் கூறியுள்ளார். (அகம்.136). இவர் பாடிய வேறிரு செய்யுட்களும் அகநானூற்றில் உள்ளன (37, 288). குறுந்தொகையில் 372 ஆம் செய்யுள் இவர் பாடியது.

**விற்றூற்றுவண்ணக்கன்தத்தனார்** *virrūrru-vaṇṇakkaṉ-tattaṉār,* பெ.(n.) கடைக்கழகக் காலப் புலவர்; a sangam poet.

கடைக்கழகப் புலவர்களில் ஒருவர். விற்றூறு என்பது ஓர் ஊர். இவ்வூரில் மூதெயினனார் என்னும் புலவரொருவரும் இருந்தனரென அகநானூற்றாலும் குறுந்தொகையாலும் அறிய முடிகிறது. வண்ணக்கன் என்பது காசுத் தேர்வு செய்வோனைக் குறிக்கும். இத் தொழிலினருட் புலவர்கள் பலர் இருந்தனரெனத் தொகை நூல்களால் அறியலாம். தத்தனார் என்பது இவரது இயற்பெயர். இவர் செய்யுளில் பாண்டியனையும் மதுரையையும் கூறுகிறார் (நற். 298).

**விற்றெனல்** *virreṉal,* பெ.(n.) ஓர் ஒலிக்குறிப்பு (வின்.); onom. expr. of whirring sound, as a stone whirled in the air.

**விற்றொற்றிப்பரிக்கிரயம்** *virrorri-p-parikkirayam,* பெ.(n.) விற்றலும் ஒற்றி வைத்தலும் பண்டமாற்றுதலும்; sale, mortgage and exchange or barter. *“விற்றொற்றிப்பரிக்கிரயத்துக்கு உரித்தாவதாகக் கொடுத்தோம்” (S.I.I.i.105).*

*[வில் → விற்று + ஒற்றி + பரிக்கிரயம். பரிக்கிரயம் = விற்பனை.]*

**விற-த்தல்** *vira-,* 12 செ.குன்றாவி. (v.i.) 1. செறிதல்; to be dense; close, to be intense. *“கலுழ்ந்துவீ ழருவிப்பாடு விறந்து” (நெடுநல். 97).* 2. மிகுதல்; to abound, increase. *“களிப்பு விறக்கவிடும் பண்டங்கள் பெருகக் கூட்டில்” (பதிற்றுப். 40, 18, உரை).* 3. வெற்றி பெறுதல்; to conquer. 4. போர் செய்தல் (வின்.); to fight. 5. வெருவுதல்; to fear. *“விறப்பே வெருஉப் பொருட்டு மாகும்” (தொல். சொல். 348).*

க. வெறெ.

**விறகாள்** *viragāl,* பெ.(n.) விறகு சுமந்து விற்போன்; fire wood seller, one who hawks fire wood. *“விறகாளாய்ச் சாதாரி பாடுமாறும்” (திருவாலவா. பதி. பாயி. 8).*

*[விறகு + ஆள்[2]]*

**விறகு** *viragu,* பெ.(n.) 1. எரிக்குங்கட்டை; fire wood, fuel. *“நாறு நறும்புகை விறகின்” (சீவக. 131).* 2. வேள்வித் தீக்குரிய சுள்ளிகள்; sacrificial fuel. *“களிறுதரு விறகின் வேட்கும்” (பெரும்பாண். 499), ‘விறகு கோணலானாலும் நெருப்பு பற்றாதா?’ (பழ.). ‘விளங்கா மடையன் விறகுக்குப் போனால்*

*விறகு கிடைத்தாலும் கொடிகிடைக்காது' (பழ.).*

**Ma.** *viṟuku*, **Ko.** verg; **To.** berkh; **Tu.** bejakire; **Konda.** *veṟgu*; **Kui.** veju, vejgu, (pl. veska); **Kuwi.** *vegū* (pl. veska).

விறகுக்கட்டு *viṟagu-k-kaṭṭu,* பெ.(n.) கட்டிய விறகுத் தொகுதி; bundle of fire wood. *"விறகுக்கட்டு மூன்றும்" (S.I.I. iii, 188, 7). 'விறகுக் கட்டுக் காரனுக்கு நாரை வலம் ஆனால் ஒரு பணம் விற்கிறது, ஒன்றே காற்பணம் விற்கும்' (பழ.).*

*[விறகு + கட்டு.]*

விறகுக்கட்டை *viṟagu-k-kaṭṭai,* பெ.(n.) எரிக்கவுதவும் மரத்துண்டு (வின்.); piece of firewood.

*[விறகு + கட்டை]*

விறகுகாடு *viṟagu-kāḍu,* பெ.(n.) 1. விறகின் தொகுதி; heap of fire wood. *"மரக்காடான விறகுகாடு எரிந்த தொத்தது" (தக்கயாகப். 329, உரை).* 2. விறகு வெட்டுவதற்காக ஒதுக்கப்பட்ட காடு (இக்.வ.); reserved forest for fire wood.

*[விறகு + காடு]*

விறகுதலையன் *viṟagu-talaiyaṉ,* பெ.(n.) 1. விறகாள் (வின்.) பார்க்க; see *viṟagāḷ.* 2. விறகுவெட்டி (யாழ்.அக.) பார்க்க; see *viṟagu-veṭṭi.* 3. முட்டாள் (வின்.); stupid person; fool; idiot.

*[விறகு + தலையன்]*

விறகுவெட்டி *viṟagu-veṭṭi,* பெ.(n.) விறகு தறிப்பவன்; wood - cutter.

*[விறகு + வெட்டு → வெட்டி. 'இ' வினை முதலீறு.]*

விறப்ப *viṟappa,* பெ.(n.) ஓர் உவம வாய்பாடு (தொல். பொ. 287); a particle of comparison.

*[விற→விறப்ப]*

விறப்பு *viṟappu,* பெ.(n.) 1. செறிவு; crowdedness, density, intensity. *"விறப்பும் உறப்பும் வெறுப்பும் செறிவே" (தொல். சொல். 347).* 2. பெருக்கம் (வின்.); increase. 3. வலிமை (பிங்.); strength. 4. வெற்றி (சூடா.); victory. 5. போர் (சூடா.); battle. 6. அச்சம் (தொல். சொல். 348); fear.

*[விறு → விற → விறப்பு] (மு.தா.89)*

விறல்[1] *viṟal,* பெ.(n.) 1. வெற்றி; victory. *"விறலீனும் வேண்டாமை யென்னுஞ் செருக்கு" (குறள், 180).* 2. வீரம் (யாழ்.அக.); bravery. 3. வலி; strength. *"விறல்விசயனே வில்லுக்கிவ னென்றும்" (தேவா. 647, 2).* 4. பெருமை (பிங்.); greatness; nobility. 5. சிறப்பு; distinctive excellence; honour. *"பெருவிறல் யாணர்த்தாகி" (புறநா. 42, 12).* 6. உள்ளக் குறிப்புப் பற்றி உடம்பிற்றோன்றும் வேறுபாடு" (தொல். பொ. 249, உரை); physical expression of emotion.

*[விற → விறல்]*

விறல்[2](லு)-தல் *viṟal-,* 5 செ.கு.வி.(v.i.) சினத்தோடு எதிர்த்துச் செல்லுதல்; to rush forward with rage, to oppose in an angry mood. *"மதுரைமுன்னா விறலி வருகின்றதது" (திருவிளை. மாயப்பசு. 9).*

விறல்கோளணி *viṟal-kōḷ-aṇi,* பெ.(n.) பகை அல்லது அதன் துணையின் மேற் செலுத்தும் வலிமையைக் கூறும் அணிவகை (அணியி. 58); a figure of speech in which is described the heroic acts against an enemy or his allies.

*[விறல் + கோள்[1]+ அணி[2]]*

**விறல்வென்றி** *viṟal-veṉṟi,* பெ.(n.) போர் வீரத்தாலுண்டாகிய வெற்றி; victory due to one's prowess. *"இன்னிசைய விறல் வென்றித் தென்னவர் வயமறவன்" (புறநா. 380, 4).*

*[விறல் + வென்றி]*

**விறலி** *viṟali,* பெ.(n.) 1. உள்ளக் குறிப்புப் புறத்து வெளிப்பட ஆடுபவள் (தொல். பொ. 91); female dancer who exhibits the various emotions and sentiments in her dance. 2. பாண்குலப் பெண் (பிங்.); woman of the *pāṉ* caste. 3. பதினாறு வயதுப் பெண் (யாழ்.அக.); girl who is 16 year old.

எண்வகைச் சுவையும் மனத்தின் கண்பட்ட குறிப்புகளில் புறத்துப் போந்து புலப்பட ஆடுகின்றவள். இவ்வாறு ஆடுவது விறலாகலின் 'விறல்பட ஆடுவாள்' விறலி எனப்பட்டாள். விறலிக்கு இனவரையறையில்லை யென்பர் நச்சினார்க்கினியர் (தொல்.பொருள்–91 உரை) பாண் இனப் பெண்ணை விறலி யென்று பிங்கலந்தை என்னும் நிகண்டு கூறும். மதுரைக் காஞ்சியில், 'பாணர் வருக பாட்டியர் வருக' (749) என்னுமிடத்துப் பாட்டியர் என்னுஞ் சொற்குப் பாணிச்சியர்என நச்சினார்க்கினியர் கூறுவர். பாணர் பாடுவோரும் விறலியர் ஆடுவோருமாக இருத்தலின் பாட்டியர் என்பவரே பாணிற் பெண்பாலாயிருத்தல் வேண்டும். எனினும் பாணருங் கூத்தரும் பொருநரும் விறலியரும் பாடுவோரும் ஆடுவோருமாக அக் கலைகளிலே வல்லவராகத் தமிழகத்தி லிருந்தனரென்றும், அவர்கள் தமிழக முடியுடை வேந்தர் மூவரையும் குறுநிலமன்னரையுஞ் செல்வரையும் கண்டு ஆடிப்பாடிப் பரிசில் பெற்று வாழ்ந்தனரென்றும் தமிழ் நூல்களிலிருந்து தெரிகிறது.

*[விறல் → விறலி]*

**விறலியாற்றுப்படை** *viṟali-y-āṟṟu-p-paḍai,* பெ.(n.) அரசன்பாற் பரிசில் பெற்ற ஓர் விறலி பரிசில் பெற விரும்பும் விறலியை அவன்பால் ஆற்றுப்படுத்தலைக் கூறும் புறத்துறை (பு.வெ. 9, பாடாண் 31); theme in which a *viṟali* who had been rewarded by a king directs another *viṟali* to the royal presence to obtain rewards. *"திறல்வேந்தன் புகழ்பாடும் விறலியை ஆற்றுப்படுத்தன்று" (பு.வெ.9–31).*

வள்ளலிடத்தே விறலியை ஆற்றுப்படுத்துவது, பாணாற்றுப்படை முதலிய நான்கும்

*"கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்*
*ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்*
*பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச்*
*சென்று பயனெதிரச் சொன்ன பக்கமும்"*
*(புறத். 36)*

எனத் தொல்காப்பியர் தொகுத்துக் கூறினார்.

*[விறலி + ஆற்றுப்படை.]*

**விறலிவிடுதூது** *viṟali-viḍu-tūdu,* பெ.(n.) காமுகனாய்த் திரிந்த ஒருவன் தான் கழிந்ததற் கிரங்கிப் பின் ஓர் தலைவனை யடுத்துப் பரிசில்பெற்றுத் தன் மனைவிபால் ஓர் விறலியைத் தூதனுப்புவதாகக் கூறும் சிற்றிலக்கியம்; a poem in which a person who led the life of a profligate repents and sends a *viṟali* as a messenger to his wife to acquaint her with his good fortune in obtaining the partronage of a chieftain and to conciliate her.

*[விறலி + விடு + தூது]*

**விறலோன்** *viṟalōṉ,* பெ.(n.) 1. திண்ணியன் (பிங்.); robust, strong and verile man. 2. வீரன்; warrior, hero. *"விறலோன் மார்பம் புல்லேம் யாமென" (பு.வெ. 9, 47).* 3. அருகன் (பிங்.); arhat.

*[விறல் → விறலான் → விறலோன்]*

**விறற்சொல்** *viṟaṟ-col,* பெ.(n.) வெற்றியைக் குறிக்கும் சொல்லின் மூலம் வெற்றி உடையானைக் குறித்தல்; to denote a successful person in the manner of successful word.

**விறன்மிண்டநாயனார்** *viṟaṉmiṇḍa-nāyaṉār,* பெ.(n.) நாயன்மார் அறுபத்து மூவருள் நம்பியாரூரர் (சுந்தரமூர்த்திகள்) காலத்தவரான ஒரு சிவனடியார் (பெரியபு.); a cononized *śaiva* saint, a contemporary of *śundaramūrtti-nāyaṉar,* one of 63.

பெரிய புராணத்துட் கூறப்பெறும் அறுபத்து மூவருள் (சிவனடியார்) ஒருவர். இவர் சேர நாட்டில் கொல்லம் துறைமுக நிலையத்திற்குக் கிழக்கே செங்குன்றூரிலே பிறந்தவர். இவர் சிவபெருமா னடியவர்களிடத்திலும் சிவபிரான் திருவடியிலும் பேரன்புடையவர். சிவபெருமான் எழுந்தருளியுள்ள திருப்பதிகளுக்குச் சென்று வழிபடுவது இவர் வழக்கம். அப்பகுதிகளில் சிவனடியார்களை நேரில் வணங்கிய பிறகே திருக்கோயிலுக்குச் செல்வார். ஒருமுறை இவர் திருவாரூருக்குச் சென்றார். அங்குள்ள தேவாசிரிய மண்டபத்தில் அடியார்கள் குழுமியிருந்தனர். அப்போது அங்கு வந்த நம்பியாரூரர் அடியார்களை வணங்காமலே திருக்கோயிலுக்கு ஒரு புறமாக ஒதுங்கிச் செல்வதை இவர் கண்டார். இவர் மனம் வருந்தி, 'அடியார்களை வணங்காமற் செல்கின்ற வன்றொண்டன் அடியார்களுக்குப் புறகு!' என்று கூறினார். அம்மொழி கேட்ட நம்பியாரூரர், இவருடைய அன்புடைமை கண்டு வியந்து, திருத் தொண்டத் தொகை பாடி அடியார்களை வணங்கினார்.

இவ்வாறு சிவ நெறியைப் பலகாலும் காப்பாற்றிவந்த விறன்மிண்டர், சிவபெருமா னருளால் சிவகணத்தவராகும் பேறு பெற்றார். இத்தகு சிறப்புடன் நம்பியாரூரர் திருத்தொண்டத் தொகை பாடுதற்குக் காரணராயிருந்த இப்பெரியாரை நம்பியாரூரர், 'விரி பொழில் சூழ் குன்றையார் விறன் மிண்டர்க் கடியேன்' என்று திருத்தொண்டத் தொகையிற் சிறப்பித்துள்ளார்.

**விறாசு** *viṟāśu,* பெ.(n.) பருவான்களைத் (பருங்கொம்பு) திருப்பும்படி அவற்றிற் கட்டுங் கயிறு; brace (M.naut. 86).

**விறாட்டி** *viṟāṭṭi,* பெ.(n.) வறட்டி; bratty.

*[வறட்டி → விறாட்டி]*

**விறாண்டு-தல்** *viṟāṇḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) பிராண்டு-, (வின்.); to scratch.

**விறாய்** *viṟāy,* பெ.(n.) செருக்கு; sauciness. *"அவனுக்கு விறாய் அதிகம்" (வின்.).*

*[வீறு → விறாய்]*

**விறிசாய்** *viṟiśāy,* வி.எ.(adv.) விரைவாக; swiftly. *"விறிசாய் நடக்கிறான்" (வின்.).*

*[விறிசு → விறிசாய்]*

**விறிசு** *viṟiśu,* பெ.(n.) ஒருவகை வாணம்; rocket. *"விறிசெனவே சிதறி" (திருப்போ. சந். பிள்ளைத். முத்தப். 9).*

தெ. பிருசுலு; *birisū. grōvi;* க. பிறிசு.

*[விரைசு → விரிசு → விறிசு]*

**விறிசுவிடு-தல்** *viṟiśu-viḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. விறிசுவாணத்தை மேலெழ விடுதல்; to send up a rocket. 2. பொய்யுரைகட்டிப் பேசுதல்; to tell lies.

*[விறிசு + விடு-,]*

**விறுதா** *viṟudā,* பெ.(n.), வி.எ. (adv.) விருதா (நாமதீப. 645) பார்க்க; see *virudā.*

**விறுமதண்டம்** *viṟumadaṇḍam,* பெ.(n.) மாதவிக்கொடி; common delight of the woods.

மறுவ. குருக்கத்தி.

**விறுமதரு** *virumadaru,* பெ.(n.) புன் முருக்குப்பூடு (சங்.அக.); a plant.

**விறுமமூலி** *viruma-mūli,* பெ.(n.) பூடுவகை; a prostrate herb.

மறுவ. பிரமி.

*[பிரமமூலி → விறுமமூலி]*

**விறுமன்** *virumaṉ,* பெ.(n.) சிற்றூர்ப் பெண் தெய்வம் (யாழ்.அக.); a village deity.

**விறுமாண்டி** *virumāṇḍi,* பெ.(n.) சிற்றூர்த் தெய்வம்; a village deity.

**விறுவிறு-த்தல்** *viru-viru-,* 11 செ.கு.வி. (v.i.) 1. மேற்பூச்சு உலர்ந்ததனால் விறுவிறென் றிழுத்தல்; to twitch, as when a coating of paste on one's body dries up. *"சேறு உலர்ந்து விறுவிறுத்த உடல்" (அகநா. 17, உரை).* 2. காரம் உறைத்தல்; to be pungent. *'மிளகாய் விறுவிறுக்கின்றது'.* 3. புண் குத்தெடுத்தல் (வின்.); to throb, as a boil. 4. சினம் பொங்குதல் (இ.வ.); to fret with anger, to rage. 5. விரைதல் (சங்.அக.); to hasten, hurry.

*[விறுவிறு → விறுவிறுத்தல்]*

**விறுவிறுப்பு** *viruviruppu,* பெ.(n.) 1. மேற் பூச்சு உலர்ந்ததனால் விறுவிறென்றிழுக்கை; twitching, as when a coating of paste on one's body dries up. 2. சார்ப்பு (உறைப்பு); pungency. 3. புண் முதலியன குத்தெடுக்கை; throbbing pain, as of a boil. 4. கடுஞ்சினம் (வின்.); rage. 5. சுறு சுறுப்பு (இ.வ.); briskness, activity.

*[விறுவிறு → விறுவிறுப்பு]*

**விறுவிறெனல்** *viruvireṉal,* பெ.(n.) 1. விறு விறென்றிழுத்தற் குறிப்பு; மலைத்தல் (வின்.); twitching pain. 2. உறைத்தற் குறிப்பு; being pungent in taste. 3. குத்தெடுத்தற் குறிப்பு; throbbing, as of a boil. 4. சினக்குறிப்பு; being angry. 5. விரைவுக்குறிப்பு; speed, rapid motion. *'விறுவிறென்று கல்வந்து விழுந்தது'.*

*[விறுவிறு + எனல்]*

**விறுனல்** *viruṉal,* பெ.(n.) கப்பலிலுள்ள ஒருவகைத் துளை (naut); scupper hole.

**விறை¹-த்தல்** *virai-,* 11 செ.கு.வி. (v.i.) 1. மரத்துப்போதல்; to grow stiff, as from cold, to become numb. 2. குளிர் முதலியவற்றால் நடுங்குதல் (இ.வ.); to shiver, as from cold. 3. வியத்தல்; to become bewildered. *'குதிரை விறைத்துப் பார்க்கிறது'.* 4. செருக்குக் காட்டுதல்; to assume airs. *'யாரிடத்தில் விறைக்கிறாய்?'.*

க. பெரெ; ம. விரக்க; **Ko.** verk; **Tu.** *beragu*; **Te.** *verāgu*; **Kui.** *brā.*

*[விறு → விறை → விறைத்தல் (மு.தா.244)]*

**விறை²-த்தல்** *virai-,* 11 செ.கு.வி. (v.i.) 1. பெருமை கொள்ளல்; sense of pride. 2. சினத்தல்; get angry.

*[விறு → விறை → விறைத்தல் (சு.வி.28)]*

**விறைப்பு** *viraippu-,* பெ.(n.) 1. விறைத்துப் போகை (யாழ்.அக.); numbness, stiffness, as from cold. 2. நடுக்கம்; shivering. *'குளிர் என்ன விறைப்பு விறைக்கிறது'.* 3. மலைப்பு (யாழ்.அக.); bewilderment. 4. செருக்குக் காட்டுகை; assuming airs; self-abandon.

**Ma.** virakka; **Ko.** veru; **To.** *per*, **Ka.** *birasa, birasu, birisu, birusu, biru*; **Tu.** *bir-gāḷ, birsu*, **Te.** *birusu*, birusu.

*[விறை → விறைப்பு]*

**விறையல்** *viṟaiyal,* பெ.(n.) குளிர்நடுக்கம்; shivering. *"வெடுவெடென் றுடல் விறையலாகி" (வள்ளி, கதை Ms.).*

*[விறை → விறையல்]*

**வின்மை** *viṉmai,* பெ.(n.) 1. விற்றொழில்; archery. *"தெம்மாறு வின்மை முதலாய செயல்கள் யாவும்" (பாரத. அருச்சுனன்ற. 88).* 2. வில்வன்மை (இலக்.அக.); skill, adept, expertise in archery.

மறுவ. வில்லாண்மை.

*[வில் → வின்மை]*

**வி ன் ன ப் ப டு – த ல்** *viṉṉa-p-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. சிதைதல்; to be marred, injured, to be damaged, as an idol with pieces broken off. *"வின்னப்படுத்தி.... வெருட்டுவனே" (தனிப்பா. ii, 158, 394).* 2. காயப்படுதல் (இ.வ.); to be hurt, wounded. 3. தடைப்படுதல்; to be frustrated. 4. மனம் வேறுபடுதல்; to be estranged.

*[வின்னம் + படு–தல்]*

**வின்னம்** *viṉṉam,* பெ.(n.) பின்னம்¹ (யாழ்.அக.) பார்க்க; see *piṉṉam.*

*[பிள் → பின் → பின்னம் → வின்னம்]*

**வின்னா** *viṉṉā,* பெ.(n.) கடுரோகிணி (மலை.); christmas rose.

**வின்னாண்** *viṉṉāṇ,* பெ.(n.) வில்லை வளைத்துப் பூட்டுங் கயிறு (யாழ்.அக.); bow-string.

*[வில் + நாண் ²]*

**வின்னூல்** *viṉṉūl,* பெ.(n.) வில்வித்தை (யாழ்.அக.); art of archery.

*[வில் + நூல்]*

**வின்னூலாளன்** *viṉṉūl-āḷaṉ,* பெ.(n.) விற்பயிற்சியளிக்கும் ஆசிரியன்.

*[வின்னூல் + ஆளன்]*

**வினகம்** *viṉagam,* பெ.(n.) சேங்கொட்டை (வின்.); marking-nut tree.

*[வில் + நகம் ¹]*

**வினதை** *viṉadai,* பெ.(n.) கருடனது தாய்; the mother of *garuḍa.* *"மழைபுரை பூங்குழல் வினதை" (கம்பரா. சடாயுகா. 27).*

**வினயம்¹** *viṉayam,* பெ.(n.) 1. வினையம்¹ 1, 4, 5, 6 பார்க்க; see *viṉaiyam.* 2. சூழ்ச்சி; device, means, stratagem. *"என் மனது கன்ற வினயங்கள் செய்தாள்" (விறலிவிடு. 420).* 3. கொடுஞ்செயல்; wicked deed. *"இனம்வள ரைவர்கள் செய்யும் வினயங்கள் செற்று" (தேவா. 212, 7).*

*[வினை → வினயம்]*

**வினயம்²** *viṉayam,* பெ.(n.) 1. நன்னயம்; good breeding, propriety of conduct. 2. வணக்கவொடுக்கம்; பேச்சு, விடை முதலியவற்றில் வெளிப்படுத்தும் பணிவும் அடக்கமும் நிறைந்த தன்மை; modesty, politeness. *"வினயத்தொடு குறுக" (தேவா. 908, 8).* 3. அடக்கம்; self-control, disipline. 4. தேவரைப் புகழ்ந்து கூறும்

பாட்டுவகை (சிலப். 8, 26, உரை); a kind of song in praise of the gods.

வினவு-தல் *vinavu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. உசாவுதல்; to question, enquire. *"அனையையோ நீயென வினவுதி யாயின்" (கலித். 76).* 2. ஆய்வு செய்தல்; to investigate, to examine or review judicially. *"நமன்றம ரென்றமரை வினவப்பெறுவா ரலரென்று" (திவ். பெரியதி. 10, 6, 5).* 3. செவியேற்றல்; to give ear to, listen to, pay attention to. *"மேயாயே போல வினவி" (கலித். 82).* 4. கேள்விப்படுதல்; to hear, receive news of. *"மெலிந்திலன் சுதனென..... காரியும் வினவா" (அரிசமய. பராங்.25).* 5. நினைதல்; to bear in mind to think over. *"திருவடி வினவாக் கருவுறை மாக்கள்" (கல்லா. 8).*

*[வினா → வினவு]*

வினவுநர் *vinavunar*, பெ.(n.) 1. உசாவுவோர்; enquirers, questioners. 2. செவியேற்பவர்; listeners, hearers. *"வினவுந ரின்றி நின்று வேண்டுவ கூறுவாரும்" (சீவக. 466).*

*[வினவு → வினவுநர்]*

வினா[1]-தல் *vinā-*, 5 செ.குன்றாவி. (v.t.) வினவு- பார்க்க; see *vinavu*. *"வினாதல் வினாயவை விடுத்தல்" (நன். 41).*

*[விள் → (விளவு) → வினவு → வினாவு → வினாதல்] (சு.வி.28)*

வினா[2] *vinā*, பெ.(n.) 1. கேள்வி; question. 2. அறியான் வினா, ஐயவினா, அறிவொப்புக் காண்டல் வினா, அவனறிவுதான் காண்டல்வினா, மெய்யவற்குக் காட்டல் வினா என ஐவகையாகவும் (தொல். சொல். 13, இளம்) அறியான் வினா, ஐயவினா, அறிபொருள் வினா என மூவகையாகவும் (தொல். சொல். 13) அறிவினா, அறியான் வினா, ஐயவினா, கொளல் வினா, கொடைவினா, ஏவல் வினா என அறுவகையாகவும் (நன். 385, உரை) இலக்கண நூல்களிற் கூறப்படும் கேள்விகள்; question, of five kinds, viz., *ariyān-vinā, aiya-vinā, arivoppu-k-kāndal-vinā, avanarivu-tān-kāndal-vinā, mey-y-avarkku-k-kāttal-vinā*, according to *Tolkāppiyam Iḷambūranam*: of three kinds viz., *ariyān-vinā, aiya-vinā, ariporuḷ-vinā*, according to *Tolkāppiyam šēnāvaraiyam* of six kinds. viz., *ari-vinā, ariyān-vinā, aiya-vinā, koḷal-vinā, kodai-vinā, ēval-vinā*, according to *Nannūl*. 3. சொல் (சூடா.); word. 4. நுண்ணறிவு; sagacity, prudence, discretion, sharpness, discernment, shrewdness. *'அவனுக்கு வினாப் போதாது' (வின்.).* 5. கவனம்; attention. *'வினாவோடே கேள்' (வின்.).* 6. நினைவு; memory, remembrance. *"அது எனக்கு வினா வில்லை" (வின்.).* 7. தமிழ்க் கணக்கில் ஒரு தொகையின் பகுதிகளான தனி யெண்ணுக்கும் பின்ன வெண்களுக்குமுரிய பெயர்; a technical term for a part, integral or fractional, of a number. *'இரண்டேகாலரைக்கால் என்பது இரண்டு, கால், அரைக்கால் என்ற மூன்று வினாக்கள் கொண்டது' (வின்.).*

பேசுவோன் கேட்போனிடத்திருந்து விடையை எதிர்பார்த்து வினாச்சொற்களைப் பெய்து அமைக்குந்தொடர் வினாத் தொடராம். இந்த வினாச் சொற்கள் விகுதி வினா, வேர்ச்சொல் வினா என இரு வகைப்படும். யார், யாது, எவள் முதலாயின வேர்ச்சொல் வினாக்கள். ஆகார, ஓகார, ஏகார விகுதிகளைப் பெற்றுவரும் வினாச்சொற்கள் விகுதி வினாக்களாம். தமிழிலக்கணங்கள் வினாத் தொடர்களை

அறுவகையாகப் பிரித்துள்ளன. அவை :

1. அறிவினா – ஆசிரியன் இந்நூற்பாவிற்குரிய பொருள் யாது ? என்பது.

2. அறியா வினா – மாணவன் இந்நூற்பாவிற்குப் பொருள் யாது? என்பது.

3. ஐயவினா – அங்கே கிடப்பது பாம்போ பழுதையோ? என்பது.

4. கொளல் வினை – வணிகனுழைச் சென்று பொன் உளவோ மணி உளவோ? என்பது.

5. கொடை வினா – சாத்தனுக்கு ஆடை இல்லையோ? என்பது.

6. ஏவல் வினா – அமுதா உண்டாயோ? என்பது. (இலக். கலைக். 114.)

**Ma.** Uinavuka; **Ko.** vent; **To.** pint; **Te.** vinu; **K.** vin(u)cu; **Kol.** vin-; **Nk.** vin; **pa.** ven; *Konḍa.* ven; **Kui.** venba; **Kuwi.** venjali; **Kur.** *mennā*; **Malt.** mene; **Br.** bining; **Go.** *wankānā*.

வினா³ *viṉā*, இடைச். (prep.) அன்றி; without, except. *'தங்களைவினா எனக்கியார் துணை?'*

வினாக்குறிப்பு *viṉā-k-kuṟippu*, பெ.(n.) வினாவுடன் குறிப்பு முற்றுப் பொருளதாய் வருஞ்சொல்; interrogative, functioning as a predicate. *'எவன், யாது'.*

*[வினா² + குறிப்பு]*

வினாங்கு *viṉāṅgu*, பெ.(n.) நிணம்; fat.

*[விளர் → வினாங்கு] (சு.வி.29)*

வினாச்சொற்கள் *viṉā-c-coṟkaḷ*, பெ.(n.) வினாவை உணர்த்தும் சொற்கள்; words denoting questions.

*[வினா + சொற்கள்]*

பாவாணர் விளக்கம் :

சுட்டுச் சொற்கள் போன்றே வினாச் சொற்களும் தமிழிலும் திரவிடத்திலும் ஒரெழுத்துச் சொல்லாகவும் பலவெழுத்துச் சொல்லாகவும் இருக்கும். எ–டு: எ, எந்த.

வினாவெழுத்துக்கள் மூன்றென்றார் தொல்காப்பியர் "ஆ ஏ ஓ அம்மூன்றும் வினாஅ" (தொல். 32) இவற்றையே பவணந்தியார் ஐந்தாக விரித்துரைத்தார்.

"எயா முதலும் ஆஓ ஈற்றும்
ஏயிரு வழியும் வினாவா கும்மே" (நன்.67)

இவ்வைந்தும் மூல அளவில் ஒரெழுத்தாகவே தோன்றுகின்றன. ஏ–எ, ஏ–யா, ஆ–ஓ.

இவற்றுள் சொல்முதலில் வரும் எ, ஏ, யா என்னும் மூன்றும் சுட்டெழுத்துப் போன்றே வகர மெய்யும் தகர மெய்யும் அடுத்து வினாப் பெயராகும் எ–டு. எவன், எது.

எவை என்பதின் திரிபான 'எவி' என்னும் தெலுங்கச் சொல் அற்றுச் சாரியையேற்று வேற்றுமைப் படும்பொழுது எவட்டி எனத் திரியும். இங்ஙனமே எவ், ஏவ் என்னும் வினாச் சொற்களும் முறையே வெ, வே, வை முன் பின்னாக எழுத்து முறை மாறி நிற்கும். இத்திரிபுகளின் வகரமுதலே ஆரிய மொழிகளில் ககரமாக மாறியுள்ளது. வெ–கெ–க. வே–கே–கா.

இவ் வ–க–திரிபு. தெலுங்கை யடுத்த மராத்தியிலேயே தொடங்கி விடுகின்றது. மராத்தி முதலில் ஐந்திரவிடத்துள் ஒன்றளவும், பின்பு நடுத்திரவிடம் என்று கருதத் தக்கதாயும், அதன் ஐம்பிராகிருதத்துள் ஒன்றாயும், இருந்தமை கவனிக்கத் தக்கது.

தமிழ் ஆரிய மொழிகளுக்கு முன்தோன்றிய மொழியாதலின் அதில் நேரியல் வினாச் சொற்களும் உறவியல் வினாச் சொற்களும் (Relative) வினாச் சொற்களும் வேறு பிரிக்கப் பெறவில்லை.

எ–டு,

யார் என்ன செய்தார்? – நேரியல்

யார் என் சொன்னாலும் – உறவியல்

இந்திய ஆரிய மொழிகளில், நேர்வினாச் சொற்களுக்கு வகரத்தின் திரிபான ககர வடியும், உறவியல் வினாச் சொற்களுக்கு எகரத்தின் திரிபான யகரவடியும் ஆளப் பெறுகின்றன. யகரம் ஐகரமாகவும் திரியும்.

நேர்வினா – உறவியல் வினா

மராத்தி

இந்தி – கஹான் யவரான் – ஜஹான்

வடமொழி – குத்ர யத்ர

சில தமிழ் வினாச் சொற்கள் வடிவிலேனும் பொருளிலேனும் வடமொழியிற் சற்றே

வேறுபட்டுள்ளன.

| தமிழ் | வடமொழி |
|---|---|
| எ-டு. எதோள் = எங்கு | யத்ர = எங்கு (வடிவு) |
| எதா = எங்கே | யதா = என்று (பொருள்) |

– பாவாணரின் வடமொழி வரலாறு – பக் 284.

**வினாடி** *viṉāḍi,* பெ.(n.) விநாடிகை; a minute portion of time.

**வினாதல்விடை** *viṉātal-viḍai,* பெ.(n.) வினாவே இன்னொரு வினாவுக்கு விடையாக வருமாயின் அது வினாதல் விடை; reply in the form of a counter question. *'உன் நண்பனைச் சந்தித்தாயா'* என்றவழி *'சந்திக்க மாட்டேனா?'* என்பது வினாதல் விடை.

மறுவ. வினாவெதிர் வினாதல்.

**வினாதலிறை** *viṉādal-iṟai,* பெ.(n.) வினாவடிவமான மறுமொழி (நன்.386); interrogation serving as a reply to a question.

*[வினா → வினாதல் + இறை ²]*

**வினாப்பெயர்** *viṉā-p-peyar,* பெ.(n.) வினாவெழுத்தினடியாகப் பிறந்த பெயர்ச்சொல் (நேமிநா. சொல். 31); interrogative pronoun.

1. ஏ–ஏன் (ஒருமை) – ஏம் (பன்மை) ஏன் – ஏவன். ஏம் – ஏவம் ஏன் என் ஏன் என். என் + அ = என்ன. ஏன் என்னும் வினாப்பெயர், இன்று காரணம் வினவும் குறிப்பு வினையெச்சமாகவும் வினை முற்றாகவும் வழங்குகின்றது.

2. ஏவன், ஏவன், ஏவர், ஏது, ஏவை

இவ்வடிவங்களால், ஆவன், ஈவன், ஊவன் முதலிய நெடில் முதல் சுட்டுப் பெயர்களும் ஒரு காலத்தில் வழங்கினவோ என ஐயறக் கிடக்கின்றது. ஏது என்னும் பெயர் ஒரு பொருள் வந்த வழியை வினவும் குறிப்பு முற்றாகவும் இன்று வழங்குகின்றது.

3. யாவன், யாவள், யாவர், யாவது, யாவை

ஏ–யா. யா – யாவை. யாவது = யாது.

சுட்டுவிளக்கம்

4. எவன், எவள், எவர், எது, எவை

ஏ–எ, எ + அது = எவ்வது – எப்படி ?

வினாப்பெயர்கள் இன்று 'ஏ' 'எவ்' 'யா' என மூவகையடிகளைக் கொண்டுள்ளன. இவற்றுள் 'ஏ' எவ் அடிகள் தெலுங்கில் வேற்றுமைத் திரிபில், 'வே' என இலக்கணப் போலி (metathesis) யாகி, பின்பு ஆரியமொழிகளில் 'கெ' எனப் போலித் திரிபு கொள்ளும், வ.க.போலி. எ–டு. சிவப்பு – சிகப்பு. ஆவா (ஆ + ஆ) ஆகா. 'யா' அடி ஆரிய மொழிகளில் 'ஜா' எனத் திரியாதும் தொடர்கொள் (Relative) வினாச் சொற்களைப் பிறப்பிக்கும்.

–(தேவநேயம் 12–பக்.133)

*[வினா ² + பெயர்]*

**வினாப்போக்கு–தல்** *viṉā-p-pōkku-,* 8. செ.கு.வி. (v.i.) கேள்வி கேட்டல்; to question to enquire into. *"குறிகூடியிருந்து வினாப்போக்கி ஒத்தெழுத்திட்டு"* (S.I.I.vii, 412).

*[வினா + போக்கு–,]*

**வினாமுதற்சொல்** *viṉā-mudaṟ-col,* பெ.(n.) வினாவெழுத்தை முதலிற் பெற்று வந்துள்ள சொல் (தக்கயாகப். 585, உரை); prefixed interrogative word.

*[வினா ² + முதற்சொல்]*

**வினாவழு** *viṉā-vaḻu,* பெ.(n.) வினாவைப் பொருளியைபில்லாதபடி வழங்குகை (தொல். சொல். 14. சேனா.); incorrect use of an interrogative. *'இந்தக் காளை எவ்வளவு கறக்கும்'.*

*[வினா ² + வழு]*

**வினாவழுவமைதி** *viṉāvaḻu-v-amaidi,* பெ.(n.) வினா வழுவை ஆமென்று

அமைத்துக் கொள்வது (தொல். சொல். 14. சேனா); sanction by usage of an incorrect use of an interrogative.

*[வினாவழு + அமைதி]*

**வினாவறி-தல்** *viṉā-v-aṟi-,* 3 செ.கு.வி. (v.i.) அறியுந்திறமை யுண்டாதல் (வின்.); to begin, to have powers of understanding.

*[வினா + அறி-,]*

**வினாவறிபருவம்** *viṉāvaṟi-paruvam,* பெ.(n.) பகுத்தறிவு உண்டாம் பருவம்; age of discretion, when a child is capable of understanding the meaning of questions put.

*[வினாவறி + பருவம்]*

**வினாவிசைக்குறி** *viṉā-v-išai-k-kuṟi,* பெ.(n.) கேள்விக் குறி; mark of interrogation (?).

*[வினா 2 + இசை 4 + குறி]*

**வினாவிடை** *viṉā-viḍai,* பெ.(n.) 1. வினா உருவமான விடைவகை (நன். 386, உரை); reply in the form of a question. 2. கேள்வியும் விடையும்; question and answer. 3. வினாவிடைப்புத்தகம் பார்க்க; see *viṉā-viḍai-p-puttagam.*

*[வினா + விடை]*

**வினாவிடைப்புத்தகம்** *viṉā-viḍai-p-puttagam,* பெ.(n.) வினாவும் விடையுமாக அமைந்த நூல் (வின்.); catechism.

*[வினாவிடை + புத்தகம்]*

**வினாவினைக்குறிப்பு** *viṉāviṉai-k-kuṟippu,* பெ.(n.) வினாவே குறிப்பு வினையாக வருவது; question word which act as a symbolic verb, without variation of tense.

யாது, யார் என்பன இவ்வாறு வந்த வினாவினைக் குறிப்புச் சொற்கள்; அவன் யார்?, அவள் யார்?, அவர் யார்? அது யாது? அவை யாவை?

**வினாவு-தல்** *viṉāvu-,* 5 செ.குன்றாவி. (v.t.) வினவு-, பார்க்க; see *viṉāvu-.* *"ஆக்க மதர்வினாய்ச் செல்லும்" (குறள், 594).*

**வினாவுத்தரம்** *viṉā-v-uttaram,* பெ.(n.) ஒரு பொருளைக் காட்டும் ஒரு மொழியினைப் பிரித்து ஒருவனுடைய பல்வேறு வகை வினாவிற்கும் விடையாகுமாறு அமைக்குஞ் சொல்லணி வகை (மாறனலங். 280) (பிங்.); a kind of composition in which a word having a particular significance is split into a number of words, each serving as a reply to a question set before.

*[வினா 2 + உத்தரம் 1]*

**வினாவுள்ளவன்** *viṉā-v-uḷḷavaṉ,* பெ.(n.) தெளிமதியுள்ளவன் (வின்.); man of judicious or calm temperament.

*[வினா + உள்ளவன்]*

**வினாவெண்பா** *viṉā-veṇbā,* பெ.(n.) மெய்கண்டசாத்திரம் பதினான்கனுள் வினா வடிவமாய் வெண்பாக்களால் அமைந்ததும் உமாபதி சிவாசாரியர் இயற்றியதுமான சிவனியக் கொண்முடிபு நூல்; a text-box on *šaiva siddhānta* philosophy by *umāpati-šivāšariyar,* in *veṇbā* metre and in the form of questions, one of 14 *meykaṇḍa-šāttiram,* q.v.

*[வினா + வெண்பா]*

**வினாவெதிர்வினாதல்** *viṉā-v-edir-viṉādal,* பெ.(n.) ஒருவனது வினாவுக்கு எதிர் வினா வடிவமாகக் கூறும் உத்தரம்

(தொல். சொல். 14. இளம்); reply in the form of a counter-question.

மறுவ. வினாதல் விடை.

*[வினா + எதிர்வினாதல்]*

**வினாவெழுத்து** *viṉā-v-eḻuttu,* பெ.(n.) சொல்லின் முதலில் அல்லது இறுதியில் வந்து வினாப்பொருளைத் தரும் எழுத்து (நன். 67); initial or final letter of a word, indicating interrogation.

*[வினா + எழுத்து]*

**வினை** *viṉai,* பெ.(n.) 1. தொழில்; act, action, deed, work. *"செய்திரங்கா வினை" (புறநா.10).* 2. நல்வினை, தீவினை என இருவகைப்பட்ட முன்வினை; karma, as the accumulated result of deeds done in previous-births, of two kinds, viz. *nal-viṉai, tī-viṉai.* 3. நான்கு வினைகள் (வேதநீயம் ஆயுஷ்யம் நாமம் கோத்திரம்) (சீவக. 3114, உரை); the four results of karma, viz., *vētanīyam, ayusyam, nāmam, kōttiram.* 4. வினைச்சொல் (தொல். சொல். 198); verb. 5. செய்தற் குரியது; thing to be done or performed. *"அவனை வேறல் வினையன்றால்" (கம்பரா. சூளா. 2).* 6. நீக்கவினை செயல் (பரிகாரச் செயல்); remedial measure. *"வினையுண்டே யிதனுக் கென்பார்" (கம்பரா. நாகபாச. 194).* 7. மேற் கொண்ட செயல்; work on hand; work undertaken. *"வினைவகை யென்றிரண்டி னெச்சம்" (குறள், 674).* 8. தீச் செயல்; evil deed. *"தாய்வினை செய்யவன்றோ கொன்றனன் றவத்தின் மிக்கோன்" (கம்பரா. கும்பகர்ண. 143).* 9. முயற்சி; effort. *"வினைக்கண் வினையுடையான் கேண்மை" (குறள், 519).* 10. போர்; war. *"செய்வினைக் கெதிர்ந்த தெவ்வர்" (புறநா. 6).* 11. ஏய்ப்பு; deceitfulness, guile. *"வினை களைந்தனர் நண்புகொண் டொழுகினர்" (உபதேசகா. பஞ்சாக். 33).* 12. சூழ்ச்சி; art, cunning, deceit. *"வினையி னென்வயின் வைத்தனன்" (கம்பரா. அயோத். மந்திரப். 69).* 13. கருத்து (யாழ்.அக.); thought, design. 14. தொந்தரவு; trouble. *'அது அதிக வினை செய்யும் போலிருக்கிறது' (வின்.).* 15. சீழ்; pus. *'இந்தப் புண்ணில் இன்னும் வினையிருக்கின்றது'.* 16. இரண்டைக் குறிக்கும் குழூஉக்குறி (தைலவ. தைல.); a cont term signifying two. *'வினை விதைத்தவன் வினை அறுப்பான் தினை விதைத்தவன் தினை அறுப்பான்' (பழ.).*

**Ma.** vina; **Tu.** benpini.

வினை

வேற்றுமை உருபுகளை ஏலாததாய், காலக் கிளவிகளை ஏற்பதாய் வரும் சொற்கள் வினை எனப்படும். இந்த வினை தெரிநிலை வினை குறிப்பு வினை என இருவகைப்படும். இவற்றின் அமைப்பினைக் கீழ்வருமாறு காட்டலாம்.

தெரிநிலைவினை

| பகுதி | காலஇடைநிலை | பாலிடவிகுதி |
|---|---|---|
| செய் | த் | ஆன் |
| படி | த்த் | ஆன் |

குறிப்பு வினை

| பகுதி | பாலிடவிகுதி | |
|---|---|---|
| | | நல் |
| | அன் | ஊர் |
| | அன் | |

மேற்காட்டிய அமைப்பிலிருந்து வினைக்குப் பகுதியும் பாலிட விகுதியும் இன்றியமையாதன என்பது விளங்குகின்றது. கால இடைநிலைகளைப் பெற்று வரும் வினைகள் தெரிநிலை வினைகள். கால இடைநிலைகளைப் பெறாமல் வரும் வினைகள் குறிப்பு வினைகள். (இலக். கலைக். 115).

**வினைக்கட்டு** *viṉai-k-kaṭṭu,* பெ.(n.) வினைகளின் கட்டு; the bondage of karma. *"தமிழ்..... கேட்பவர் தம் வினைக்கட்டறுமே" (தேவா. 977. 11).*

[வினை + கட்டு]

**வினைக்களம்** *vipai-k-kaḷam,* பெ.(n.) போர்க்களம்; battlefield. *"அங்கண் மேவரும் வினைக்களத்து" (திருவாலவா. 46, 17).*

[வினை + களம்[2]]

**வினைக்காலம்** *vipai-k-kālam,* பெ.(n.) நல்வினைக்காலம்; auspicious time. *'வினைக்காலம் வருங்காலம்; மனை வழியும் தெரியாது' (பழ.).*

**வினைக்கீடு** *vipai-k-kīḍu,* பெ.(n.) செய்த வினையின் பயன் (சி.போ.பா.அவை. பக். 13); resultant effect of one's karma.

[வினை + ஈடு.]

**வினைக்குடுக்கை** *vipai-k-kuḍukkai,* பெ.(n.) வஞ்சனை மிக்கவன் (வின்.); man full of guile and crafty schemes.

[வினை + குடுக்கை]

**வினைக்குணம்** *vipai-k-kuṇam,* பெ.(n.) மனக்கடுப்பு (வின்.); spitefulness.

[வினை + குணம்]

**வினைக்குறிப்பு** *vipai-k-kuṟippu,* பெ.(n.) குறிப்பு வினை (நன். 321, உரை); conjugated appellative participle, indefinite or finite.

[வினை + குறிப்பு]

**வினைக்குறிப்புமுற்று** *vipaikkuṟippu-muṟṟu,* பெ.(n.) குறிப்பு வினை முற்றாய் வருவது (புறநா. 68, உரை); finite, conjugated appellative participle.

[வினைக்குறிப்பு + முற்று]

**வினைக்குறை** *vipai-k-kuṟai,* பெ.(n.) வினையெச்சம்; vabal participle refairing a verb to complete the sense.

[குறை என்னும் சொல் ஒரு பொருள் அல்லது உறுப்பு இல்லாக் குறையை முதலிற் குறித்து, பின்பு அக்குறையால் ஏற்படும் தேவையையும் தேவையான பொருளையும் ஆகுபெயராக உணர்த்திற்று.

நிறை என்பதன் மறுதலை குறை (குறள். 612)]

**வினைக்கேடன்** *vipai-k-kēḍap,* பெ.(n.) 1. முன் வினையை யொழிப்பவன்; one who destroys by experiencing the bondage of karma accumulated in previous births. *"வினைக்கேட னென்பாய் போல்" (திருவாச. 5, 22).* 2. வேலையைத் தடை செய்து கெடுப்போன் (இ.வ.); one who puts obstacles or felters in the way of an undertaking with a view to spoil it.

[வினை + கேடன்]

**வினைக்கேடு** *vipai-k-kēḍu,* பெ.(n.) 1. வீணானது; that which is useless. *"வினைக்கேடு பலபேசி வேண்டியவா திரிவீர்" (தேவா. 677, 5).* 2. செயலறுகை (நாமதீப. 641); inactivity. 3. சுணக்கம் (இலக்அக.); delay; slow approach.

[வினை + கேடு]

**வினைச்செவ்வெண்** *vipai-c-cevvep,* பெ.(n.) தொடர்ந்துவரும் வினை யெச்சங்களில் எண்ணிடைச் சொல் தொக்கு வருவது (நன். 429, மயிலை); ellipsis of connective particles in a series of *vipai-y-eccam.*

[வினை + செவ்வெண்]

**வினைச்சொல்** *vipai-c-col,* பெ.(n.) பொருளின் புடைபெயர்ச்சியைத் தெரிவிக்குஞ் சொல் (நன். 269); verb.

**ஊண் வினைகள் :**

உறிதல் } உறிஞ்சுதல் } நீர்ப்பொருளையும் நெகிழ்ச்சிப் பொருளையும் காற்றால் வாய்க்குள் இழுத்தல்.

குடித்தல் – நீர்ப்பொருளை இயல்பாக உட்கொள்ளுதல்.

பருகுதல் – நீர்க்கலத்திற் பற்படக் குடித்தல்.

அருந்துதல்– சிறிது சிறிதாகக் குடித்தல்.

மண்டுதல் – மண்டியுட்படக் குடித்தல்.

மாந்துதல் – பேரளவாகக் குடித்தல்.

சப்புதல் – ஒன்றைமெல்லாது நாவிற்கும் அண்ணத்திற்கும் இடையிலிட்டு நெருக்கி, அதன்சாற்றை மெல்ல மெல்ல உறிஞ்சுதல்; அல்லது அப் பொருளைச் சிறிது சிறிதாகக் கரைத்தல்.

சுவைத்தல் – ஒன்றை மென்று அதன் சுவையை நுகர்தல்.

சவைத்தல் – மெல்லிய பொருளை மெல்லுதல், குழந்தை தாய்ப்பாலைச் சப்புதல்.

சூம்புதல் } சூப்புதல் } தித்திப்புக் குச்சும் மூளையெலும்பும் விரலும் போன்றவற்றை வாயிலிட்டுச் சப்புதல்.

தின்னுதல் – பழமும் பலகாரமும் போன்ற சிற்றுண்டியை மென்று உட்கொள்ளுதல்.

உண்ணுதல் –கவளங் கவளமாகச் சோற்றை உட்கொள்ளல்.

சாப்பிடுதல் – குழம்பும் சாறும் மோரும் (அல்லது அவற்றுள் ஒன்று) கலந்த சோற்றைக் கவளங் கவளமாகக் கறிவகைகளுடன் (அல்லது அவையின்றி) உட்கொள்ளுதல்.

மடுத்தல் } வாய்மடுத்தல் } கம்பங்கஞ்சியும் கேழ்வரகுக் கூழும் போன்றவற்றைக் கட்டிகட்டியாகக் கூட்டில் தொட்டுண்ணுதல், கவளங் கவளமாகப் பிறர் ஊட்டுதல்.

அசைத்தல் } அசைவு செய்தல் } விலங்கு அசையிடுவதுபோல் அலகையசைத்து மென்று உட்கொள்ளுதல்.

அயிலுதல் – குழந்தை அளைந்து சோறுண்ணுதல்.

அயில் – அயின் – அயினி = உணவு.

"தாலி களைந்தன்று மிலனே பால்விட்
டயினியு மின்றயின் றனனே".....

(புறம். எஎ).

அள்ளல் = நெருக்கம், குழைந்தசேறு.

அள் – (அய்) – அயில்.

அளிதல் = கலத்தல், குழைதல்.

அள் – அளாவு. அள் – அளை.

"சிறுகை யளாவிய கூழ்." (குறள்.64)

"......................................இன்னடிசில்
புக்களையுந் தாமரைக்கைப் பூநாறுஞ் செய்யவாய்
மக்களையிங் கில்லா தவர்."

(நள. கலிதொ.68).

ஒ.நோ : பள் – (பய்) – பயில். பயிலுதல் பழகுதல்.

கப்புதல் – மொக்கி விரைந்து உட்கொள்ளுதல்.

மொக்குதல் = வாய்நிறையக் கொண்டு மெல்லுதல்.

"கைத்தல நிறைகனி யப்பமொ டவல்பொரி
கப்பிய கரிமுக னடிபேணி"

(திருப்பு. விநாயக. க)

மிசைதல் – விருந்தினரை யுண்பித்து மிஞ்சியதை யுண்ணுதல்.

"வித்து மிடல் வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம்"

(குறள்.85).

மொசித்தல் – பலர் கூடி யுண்ணுதல்.

"விழவின் றாயினும் படுபதம் பிழையாது
மையூன் மொசித்த வொக்கலொடு"

(புறம். 96 ).

"மொய்கொண் மாக்கள் மொசிக்கவூண் சுரந்தனள்" (மணிமே.19–136).

மொய்த்தல் = திரளுதல்.

மொய் – மொயி – மொசி.

மொசிதல் = மொய்த்தல்.

"கடுந்தே றுறுகிளை மொசிந்தன
துஞ்சும்" (பதிற்றுப். 71 : 6)

ஆர்தல் - வயிறு நிரம்ப வுண்ணுதல்.

விழுங்குதல் – மெல்லாதும் சுவை பாராதும் ஒரே தடவையில் விரைந்து வாய்வழி வயிற்றிற்குள் இடுதல்.

உட்கொள்ளுதல் – எவ்வகையிலேனும் வயிறு சேர்ப்பித்தல். இது எல்லா ஊண் வினைகட்கும் பொதுவாம்.

கடைக்கழகக் காலத்திற் புலவர் பலர் மரபும் (Idiom) தகுதியும் (Propriety) போற்றாமையால், பலசொற்கள் தம் சிறப்புப் பொருளை இழந்து விட்டன.

இன்று, குளம்பி ( காப்பி ) சாப்பிடுதல், சுருட்டுக் குடித்தல், கொசுவலை, தேட்கடி என்பன மரபுவழுவாம். இவை, குளம்பி குடித்தல், சுருட்டுப் பிடித்தல் அல்லது புகைத்தல், உலங்கு வலை அல்லது நுளம்பு வலை, தேட்கொட்டு என்றிருத்தல் வேண்டும். சம்பளத்தை (Salary) ஊதியம் (profit, gain) என்பதும் வழுவாம். இலக்கணப்புலமை நிரம்பாதவர் நூலாசிரியரும் பொத்தக ஆசிரியரும் ஆவதனாலும் மரபு கெடுகின்றது.

– ( பாவாணர் தமிழர் வரலாறு 105–107)

*[வினை + சொல்]*

**வினைசூழ்–தல்** *vin̲ai-šūḻ-*, 2 செ.கு.வி. (v.i.) தீங்கிழைக்க வெண்ணுதல் (வின்.); to plot evil or harm.

*[வினை + சூழ்–,]*

**வினைசெய்யிடம்** *vin̲ai-šey-y-iḍam*, பெ.(n.) ஒருவினை உடனிகழ்கின்ற பிறிதொரு வினைக்கு இடமாவது (பி.வி. 16); locative absolute.

*[வினை + செய்இடம்]*

**வினைசெயல்வகை** *vin̲ai-šeyal-vagai*, பெ.(n.) வினையைச் செய்யுந்திறம் (குறள், அதி. 68); method of action, modes of action; conduct of affairs.

*[வினை + செயல்வகை]*

**வினைஞர்** *vin̲aiñar*, பெ.(n.) 1. தொழில் வல்லோர்; workers; artisans, artificers. *"தண்டமிழ் வினைஞர் தம்மொடுகூடி" (மணிமே. 19, 109).* 2. மருத நில மாக்கள் (திவா.); agriculturists. 3. கம்மாளர் (யாழ்.அக.); smiths. 4. கூத்தர் (திவா.); dancers. 5. கடைமகள் (சூத்திரர்) (பிங்.); *šūdras*. 6. வணிகர் (திவா); *vaišyas*. 7. வேளாளர் (இலக்.அக.); *vēḷāḷas*.

**வினைத்தலை** *vin̲ai-t-talai*, பெ.(n.) போர்க்களம்; battle field. *"வினைத் தலையிலே வந்தவாறே" (ஈடு. 4, 6, 1).*

*[வினை + தலை]*

**வினைத்திட்பம்** *vin̲ai-t-tiṭpam*, பெ.(n.) தொழில் செய்வதில் மனத்திண்மை; powerful acts, firmness, resolutensss in action greetness of will. *"வினைத்திட்ப மென்பது ஒருவன் மனத்திட்பம்" (குறள், 661).*

*[வினை + திட்பம்]*

**வினைத்திரிசொல்** *vin̲ai-t-tiričol*, பெ.(n.) 1. திரிந்த வினைச்சொல் (சீவக. 223, உரை); verb in an abnormal form. 2. வழக்கிலின்றி அரிதிற் பொருளுணர்தற்குரிய வினைச்சொல் (நன். 273); verb not in common use or absolute and not easily understood.

*[வினை + திரிசொல்]*

**வினைத்திரிபு** *vin̲ai-t-tiribu*, பெ.(n.) தன்மை, முன்னிலை, படர்க்கை ஆகிய மூன்று இடங்களையும், மூன்று காலங்களையும் காட்டுதற்கு வினைச்சொல் அடையும் மாற்றம்; conjugation of a verb.

*[வினை + திரிபு]*

**வினைத்திறப்பொருத்தம்** *vinaittira-p-poruttam,* பெ.(n.) மணமக்கள் இருவரும் சூழ்ச்சி, வலிமையிலும் சுறுசுறுப்பிலும் ஒத்திருப்பது, வினைத்திறப் பொருத்தம் ஆகும். அவருள் ஒருவர் விரைமதியும் தாளாண்மையும் உடையராயிருக்க இன்னொருவர் மந்தமதியும், சோம்பலு முடையவராகயிருப்பின் அவர்தம் இல்லற வாழ்க்கை ஒற்றுமையும் இன்பமும் உடையதாயிராது. (தமி. திரு. 48); hormony in the life of couple.

**வினைத்தூய்மை** *vinai-t-tūymai,* பெ.(n.) செய்யப்படும் வினைகள் பொருளேயன்றி அறமும் புகழும் பயந்து நல்லவாகை (குறள். அதி. 66); purity in action which brings in not merely wealth but also religious merit and fame.

*[வினை + தூய்மை]*

**வினைத்தொகை** *vinai-t-togai,* பெ.(n.) காலங்கரந்த பெயரெச்சத் தொடர் (நன். 364); elliptical compound in which a verbal root forms the first component; a compound that can function or be operative in all the three tenses.

*[வினை + தொகை]*

மூன்று காலத்திற்கும் பொருந்தும் வகையில் இருக்கும் தொகைச்சொல். வினைப்பெயரும் பெயரும் சேர்ந்து அமைந்த தொகையினை வினைத்தொகை என்பர். சொல்யானை, வரு பொருள் முதலாயின வினைத் தொகைகளாம். கேள், கல், பார், நட ஆகிய நான்கு வாய்பாடு களுக்கும் உரிய வினைகள் வினைத்தொகையினை அமைப்பதில்லை. இதற்கு விதிவிலக்காகக் குடிதண்ணீர், அடிமாடு முதலிய சில வினைத் தொகைகளைக் காணலாம். பார் யானை, நடயானை என வினைத் தொகைகள் அமையாமை காண்க.

நன்னூலாரின் கருத்துப்படி வினைத் தொகையின் முதலுறுப்பு பெயரெச்சம் என்று கொள்ளப்படும். (இலக்.கலைக்.பக்.116).

**வினைத்தொடர்ச்சி** *vinai-t-todarcci,* பெ.(n.) தீவினையின் பயன் (நாமதீப. 291); effect of evil deeds upon the soul.

*[வினை + தொடர் → தொடர்ச்சி]*

**வினைத்தொழிற்சோகீரனார்** *vinai-t-tolir-cōkīranār,* பெ.(n.) கடைக்கழகக் காலப் புலவர்; a sangam poet.

இவர் செய்யுளில் நள்ளிரவிற் கடற்கரைக் கானலும் கடல் சார்ந்த ஊரின் தெருக்களும் இருக்கும் நிலை அழகுறக் கூறப் பெற்றுள்ளது (நற். 319). இவர் தம் பெயர்க் காரணம் அறிய முடியவில்லை.

**வினைதீயார்** *vinai-tīyār,* பெ.(n.) தீவினையோர்; sinners, men of evil deeds. *"வெறுமின் வினைதீயார் கேண்மை" (நாலடி, 172).*

மறுவ. கீழ்கள்.

*[வினை + தீயார்]*

**வினைதீர்-த்தல்** *vinai-tīr-,* 4 செ.கு.வி.(v.i.) 1. முன் வினையைப் போக்குதல்; to eradicate the bondage of karma. *"வினையேன் வினைதீர் மருந்தானாய்" (திவ். திருவாய். 1, 5, 6).* 2. இடையூறு நீக்குதல் (யாழ்.அக.); to remove or dismiss obstacles or constraints.

*[வினை + தீர்-,]*

**வினைதீர்த்தான்** *viṉai-tīrttāṉ,* பெ.(n.) 1. வேழமுகத்தோன் (யாழ்.அக.); *Gaṇēšaṉ.* 2. புள்ளிருக்குவேளூர்ச் சிவன்; Lord sivan of a abide in the place *puḷḷirukkuvēḷūr.*

மறுவ. அறிவு (ஞான)க் கொழுந்து.

*[வினைதீர் → வினைதீர்த்தான்]*

**வினைநர்** *viṉainar,* பெ.(n.) வினைஞர், 1 பார்க்க; see *viṉaiñar,* workmen, artisans. *'அரிய லார்கை வன்கை வினைநர்' (பதிற்றுப். 62, 16).*

*[வினை → வினைநர்]*

**வினைப்பகுதி** *viṉai-p-pagudi,* பெ.(n.) பகுசொல்லில் வினையைக் குறிக்கும் பகுதியாகிய முதனிலை (நன். 137, சங்கர.); verbal base of a derivative word.

*[வினை + பகுதி]*

**வினைப்படுத்துவினை** *viṉai-p-paḍuttu-viṉai,* பெ.(n.) தான் சேர்ந்து வரும் வினையல்லாத சொற்களுக்கு வினைத் தன்மை தரும் வினை; verb that serves as a verbalizer. *'சமையல் செய்'* என்பதில் *'செய்'* என்பது வினைப்படுத்து வினையாகச் செயல்படுகிறது.

*[வினைப்படுத்து + வினை]*

**வினைப்பயன்** *viṉai-p-payaṉ,* பெ.(n.) முன் வினையின் விளைவு; result of karma, fruit of action in previous birth. *"பற்றே பவமே தோற்றம் வினைப்பயன்" (மணிமே. 24, 107).*

*[வினை + பயன்]*

**வினைப்பெயர்** *viṉai-p-peyar,* பெ.(n.) 1. தொழிற்பெயர்; verbal noun. *"செயலென்னும் வினைப்பெயர்" (நெடுநல். 171, உரை).* 2. வினையாலணையும்பெயர் பார்க்க; see *viṉaiyāl-aṇaiyum-peyar. "வினைப் பெய ரல்பெயர்க் கிடைநிலை யெனலே" (நன். 141). "எழுதாள் மகிழாள் காதினள் என்னும் வினைப்பெயரான் முடித்து" (சிலப். 4, 47–57, உரை).* 3. செய் தொழிலினால் ஒருவனுக்கு வரும் பெயர்; name given to a person from his action or vocation. *"நிலப்பெயர் குடிப்பெயர் குழுவின் பெயரே வினைப்பெயர்" (தொல். சொல். 165).*

*[வினை + பெயர்]*

[வினையிலிருந்து பிறந்த பெயரை வினைப்பெயர் என்பர். தொல்காப்பியர் வினைப்பெயரையும் வினையாலணையும் பெயரையும் வேறுபடுத்திப் பேசவில்லை; ஆனால் நன்னூலார் வினைப் பெயரையும் வினையாலணையும் பெயரையும் தெளிவாக வேறுபடுத்தி விளக்குகிறார். நன்னூலார் கருத்துப்படி வினைப்பெயர் அல்லது தொழிற் பெயர் படர்க்கைக்கு மட்டுமே உரியதாம். வினையாலணையும் பெயர், தன்மை, முன்னிலை படர்க்கை ஆகிய மூவிடத்திற்கும் உரியதாம்.

உணல், தினல். வரல், செலல் என வருவன வினைப்பெயர் அல்லது தொழிற்பெயர். உண்டேனை, உண்டாயை, உண்டானை என வருவன வேற்றுமை ஏற்ற வினையாலணையும் பெயர்.

வினைப்பெயர் என்பதும் தொழிற்பெயர் என்பதும் ஒன்று. தொல்காப்பியர் வினைப்பெயர், வினையாலணையும் பெயர் இரண்டையுமே வினைப்பெயர் என்றும் (தொல்.சொல்.பெயர்.14) குறிக்கின்றார்]

மறுவ. வினைப்பெயர்க் கிளவி.

**வினைபாராட்டு-தல்** *viṉai-pārāṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) வினைவளர்-, (யாழ்.அக.) பார்க்க; see *viṉai-vaḷar.*

*[வினை + பாராட்டு–,]*

**வினைமாற்று** *vinai-māṟṟu,* பெ.(n.) முன்சொன்ன தொழிலொழிய இனி வேறொன்று என்பதைக் காட்டுவதாகிய பொருண்மை; signification of the introduction of an alternative verb in a sentence. *"வினைமாற் றசைநிலை" (தொல். சொல். 264).*

*[வினை + மாற்று]*

**வினைமாற்றுச்சொல்** *vinaimāṟṟu-c-col,* பெ.(n.) வினைமாறுவதைத் தெரிவிக்கும் 'மற்று' முதலிய இடைச்சொல்; an expletive word in a sentence, introducing an alternative verb, as *maṟṟu.*

*[வினைமாற்று + சொல் [3]]*

**வினைமுதல்** *vinai-mudal,* பெ.(n.) கருத்தா; subject. *"வினைமுதல் மாத்திரை விளக்கல்வினைக் குறிப்பே" (நன். 321).*

மறுவ. வினையன்.

*[வினை + முதல்]*

எழுவாயை வினைமுதல் என்று குறிப்பதுண்டு. 'அவன் உங்களைப் பார்த்துப் பேசினான் என்ற தொடரில் 'அவன்' வினைமுதல் அல்லது எழுவாய். "பேசினான்" என்பதை வினை முதலுக்கு உரியவினை என்ற பொருளில் வினைமுதல் வினை என்பர் (நன்.344).

**வினைமுதற்றொழில்** *vinaimudaṟṟoḻil,* பெ.(n.) செயப்படுபொருள்(வின்); object.

*[வினைமுதல் + தொழில்]*

**வினைமுற்று** *vinai-muṟṟu,* பெ.(n.) முற்றுவிகுதி கொண்ட வினைச்சொல் (நன். 323, மயிலை); finite verb.

*[வினை + முற்று]*

தொடர்ப் பொருள் குன்றி நிற்கின்ற வினையினை வினைமுற்று என்பர். இந்த வினைமுற்று குறிப்பு, வினை என இருவகைப்படும். செயல் முடிவதைக் குறிப்பதாகவும் சொற்றொடரில் பயனிலையாகவும் வரும் வினைச்சொல் என்றும் கூறலாம்.

**வினைமுற்றுத்தொடர்** *vinai-muṟṟu-t-toḍar,* பெ.(n.) வினைமுற்றை முதலில் கொண்டு அதனைத் தொடர்ந்து அமையும் முற்றுத் தொடர்; sentence with finite verb in first.

எ.டு. வந்தான் கந்தன்.

**வினைமுறுகுதல்** *vinai-murugudal,* பெ.(n.) ஊழ்வினை முதிர்ந்து பயன்றரு நிலையிலாகை (யாழ்.அக.); maturation of one's past karma or destiny.

*[வினை + முறுகு[1]–தல்]*

**வினைமூளுதல்** *vinai-mūḷudal,* பெ.(n.) வினைமுறுகுதல் பார்க்க; see *vinai-murugudal.*

*[வினை + மூளுதல்]*

**வினைமை** *vinaimai,* பெ.(n.) 1. செய் தொழிலின் தன்மை; nature of a deed. 2. தொழிலுடைமை; property of functioning. *"அவை மூவினைமையில்" (சி.போ.1).*

*[வினை → வினைமை]*

**வினையடை** *vinai-y-aḍai,* பெ.(n.) வினைச் சொற்கு அடையாக வரும் சொற்கள்; verb qualifier, adverb.

எ–டு. இன்று வந்தான், அழகாகப்

பாடினான், உரக்கப் பேசினான், நடந்து வந்தான், அங்கே நின்றான், ஏன் சிரிக்கிறான்?

*[வினை + அடை]*

**வினையம்[1]** *vinaiyam,* பெ.(n.) 1. செய் தொழில் (பிங்.); action, deed. *"வேண்டுமாறு புரிதியைய வினைய நாடி" (கந்தபு. ஏமகூடப். 30).* 2. முன்வினை; past karma or destiny. *"காவலர்க் கரசாய் வாழ்ந்து வினையம தறுத்து" (கம்பரா. காப்பு).* 3. வழிவகை; device, means. *"மிகை செய்வார் வினைகட்கெல்லா மேற்செய்யும் வினையம் வல்லான்" (கம்பரா. இரணிய. 147).* 4. வஞ்சகம் (கொ.வ.); cunning, deceit, sly. 5. வஞ்சக வேலைப்பாடு; deceptive workmanship. *"மருங்குடை வினையமும்" (கம்பரா. இலங்கைகே. 20).* 6. வினையம்[1], 3 பார்க்க; see *vinayam*. 7. நிகழ்ச்சி; happening, event. *"மேல்வரும் வினைய மோர்ந்திலை" (கந்தபு. மூவாயிர. 5).*

*[வினை → வினையம்]*

**வினையம்[2]** *vinaiyam,* பெ.(n.) வினயம்[2] பார்க்க; see *vinaiyam.*

**வினையழுத்து-தல்** *vinai-y-aluttu,* 10 செ.கு.வி. (v.i.) வினைவளர்-, (யாழ்.அக.) பார்க்க; see *vinaivalar.*

*[வினை + அழுத்து-,]*

**வினையள-த்தல்** *vinai-y-ala-,* 3 செ.கு.வி. (v.i.) வினைவளர்-, (வின்.) பார்க்க; see *vinai-valar.*

*[வினை + அள-,]*

**வினையன்** *vinaiyan,* பெ.(n.) 1. தொழில்செய்பவன்; doer, worker. *"புலைவினையர்" (குறள், 329).* 2. வஞ்சகன்; cunning or guileful man.

*[வினையம் → வினையன்]*

**வினையாட்டி** *vinaiyātti,* பெ.(n.) 1. ஏவல் வேலை செய்பவள்; female servant. 2. தீவினையுடையவள்; ill-fated woman. *"வினையாட்டியேன் காதன்மையே" (திவ். திருவாய். 6, 1, 1).*

*[வினையாளன் → வினையாட்டி. ஒ.நோ. திருவாட்டி, மூதாட்டி]*

**வினையாண்மை** *vinai-y-ānmai,* பெ.(n.) தொழிலைச் செய்து முடிக்குந் திறமை; capacity or talent to accomplish or do a work. *"வினையாண்மை வீறெய்த லின்று" (குறள், 904).*

*[வினை + ஆண்மை]*

**வினையாலணையும்பெயர்** *vinaiyāl-anaiyum-peyar,* பெ.(n.) வினைமுற்று பெயர்த்தன்மைப்பட்டு வருவது (நன். 286); verbal noun, personal noun in the form of a finite verb.

*[வினையால் + அணையும் + பெயர்]*

வினையின் அடியாகப் பிறந்ததாய்ப் பாலிட விகுதிகளை ஏற்றதாய் அமைந்துள்ள பெயர்களை வினையாலணையும் பெயர் என்பர். இது குறிப்பு வினையாலணையும் பெயர், தெரிநிலை வினையாலணையும் பெயர் என இருவகைப்படும். நல்லவன், தீயவன், வலியவன், எளியவன் என்பன குறிப்பு வினையாலணையும் பெயர்கள். வந்தவன், சென்றவன் முதலான பெயர்கள் தெரிநிலை வினையாலணையும் பெயர்கள்.

நல்லன், தீயன் முதலாய குறிப்பு வினைமுற்றுகளே பழந்தமிழில் குறிப்பு வினையாலணையும் பெயர்களாகவும் வருவதுண்டு, அவ்வாறே, வந்தான், சென்றான் முதலாய

முற்றுகளே பழந்தமிழில் தெரிநிலை வினையாலணையும் பெயர்களாக வருவதுண்டு. தொழிற்பெயர் அல்லது வினைப் பெயர் வினையாலணையும் பெயரிலிருந்து வேறுபட்ட ஒன்று (இலக்.கலைக்.117).

**வினையாள்** *viṉayāḷ,* பெ.(n.) வினையாளன், 1 பார்க்க; see *viṉai-y-āḷaṉ.* *"வினையாளை வேலையிடத்து" (பெருந்தொ. 404).*

**வினையாளன்** *viṉai-y-āḷaṉ,* பெ.(n.) 1. தொழிலியற்றுவோன்; one who is engaged in a work, worker. *"கணக்குவினையாள ரொடு" (பெருங். மகத. 12, 50).* 2. ஏவலாளன் (யாழ்.அக.); servant. 3. தீவினையுடையவன்; ill-fated man.

*[வினை + ஆளன்]*

**வினையிடைச்சொல்** *viṉai-y-iḍaiccol,* பெ.(n.) வினைத்தன்மை பெற்றுவரும் இடைச்சொல்வகை (நன். 269, மயிலை); particle having the characteristics of a verb.

*[வினை + இடைச்சொல்.]*

**வினையியற்சொல்** *viṉai-y-iyaṟšol,* பெ.(n.) உலக வழக்கிலுள்ள வினைச் சொல் (நன். 269, மயிலை); verb in popular use.

*[வினை + இயற்சொல்]*

செந்தமிழ் நிலத்து மொழியாய்க் கற்றோர்க்கும் கல்லாதவர்க்கும் தம் பொருளை இயல்பாக விளக்கும் வினைச்சொல். (நன். பெயரிய. 14).

**வினையிலி** *viṉai-y-ili,* பெ.(n.) கடவுள் (இலக். அக.); God, as free from karma; the Lord.

*[வினை + இன்–மை]*

**வினையின்மை** *viṉai-y-iṉmai,* பெ.(n.) இறைவனெண்குணங்களில் வினைப்பயன் இல்லாமையாகிய குணம் (பிங்.); being unaffected by karma, one of eight attributs or *iṟaivaṉ-eṇguṇam* q.v.

*[வினை + இன்மை]*

**வினையுரிச்சொல்** *viṉai-y-uriccol,* பெ.(n.) வினைக்கு அடையாய் வருஞ்சொல் (வின்.); adverb.

*[வினை + உரிச்சொல்]*

**வினையுருபு** *viṉai-y-urubu,* பெ.(n.) வினைச் சொல்லின் உறுப்பான இடைநிலை ஈறு முதலியன (நன். 420, உரை); component particle of a verb, as *iḍainilai,* vigudi.

*[வினை + உருபு.]*

**வினையுரைப்போர்** *viṉai-y-uraippōr,* பெ.(n.) தூதர் (பிங்.); messengers, ambassadors.

*[வினை + உரைப்போர்]*

**வினையுவமம்** *viṉai-y-uvamam,* பெ.(n.) தொழில் பற்றி வரும் ஒப்புமை (தொல். பொ. 276, உரை); comparison based on the actions of the objects compared.

*[வினை + உவமம்]*

**வினையுவமை** *viṉai-y-uvamai,* பெ.(n.) வினையுவம் பார்க்க; see *viṉai-y-uvam.*

*[வினை + உவமம்]*

**வினையெச்சக்குறிப்பு** *viṉaiyecca-k-kuṟippu,* பெ.(n.) குறிப்புவினையெச்சம் (நன். 342, உரை) பார்க்க; see *kuṟippu-viṉai-y-eccam,* partciple of an appellative verb.

*[வினையெச்சம் + குறிப்பு]*

**வினையெச்சம்** *vinai-y-eccam,* பெ.(n.) வினையைக் கொண்டு முடியும் குறைவினை (நன். 342); verbal participle, requiring a verb to complete the sense.

மறுவ. வினையெஞ்சு கிளவி.

*[வினை + எச்சம்]*

தமிழிலக்கண மரபுப்படி, எச்சவினைகள், வினை கொண்டு முடியும் போது அவை வினையெச்சம் எனப்படும். அந்த வினையெச்சங்களைச் செய்து, செய, செயின் என வாய்ப்பாட்டு முறையில் தமிழிலக்கணங்கள் வகைப்படுத்தி விளக்கும். (இலக். கலைக். 118).

வினைச்சொல்லைத் தன் பொருள் முடிவிற்கு வேண்டுவதும் வினைச்சொல்லிலிருந்து பெறப்படுவதுமான வடிவம் என்றும் கூறும்.

**வினையெச்சவினைக்குறிப்புமுற்று** *vina-y-ecca-vinai-k-kurippu-murru,* பெ.(n.) குறிப்பு வினைமுற்று வினையெச்சப் பொருளதாய் வருவது (புறநா. 44, உரை); appellative verb used participially.

*[வினையெச்சம் + வினைக்குறிப்பு + முற்று]*

**வினையெஞ்சணி** *vinai-y-eñjani,* பெ.(n.) வினை யெஞ்சி நிற்பதாகிய ஒப்பனை வகை (யாழ்.அக.); a figure of speech in which the finite verb is omitted.

*[வினை + எஞ்சு + அணி[2]]*

**வினையெஞ்சுகிளவி** *vinai-y-eñju-kilavi,* பெ.(n.) வினையெச்சம் (தொல். எழுத். 204) பார்க்க; see *vinai-y-eccam.*

*[வினை + எஞ்சு + கிளவி]*

**வினைவயிற்பிரிதல்** *vinai-vayir-piridal,* பெ.(n.) தலைவன் தலைவியை நீங்கி வேந்தனாணையாற் பகைமேற் பிரியும் பிரிவைக் கூறும் அகத்துறை (முல்லைப். உரையவதாரிகை); theme describing the separation of a hero from his beloved when he proceeds under orders against his king's enemy.

*[வினை + வயின் + பிரிதல்]*

**வினைவர்** *vinaivar,* பெ.(n.) 1. தொழிலினர்; workers, doers, agents. *"வேந்துபிழைத் தகன்ற வினைவராயினும்" (பெருங். உஞ்சைக். 38, 94).* 2. சந்துசெய்விப்பவர்; mediators. *"நட்பாக்கும் வினைவர்போல்" (கலித். 46, 8).* 3. அமைச்சர்; minister. *"கொலையஞ்சா வினைவரால்" (கலித். 10.).*

*[வினை → வினைவர். ஒ.நோ. அறிவர்]*

**வினைவலம்படு-த்தல்** *vinai-valam-padu-,* 20 செ.கு.வி. (v.i.) எடுத்துக்கொண்ட செயலை வெற்றிபெறச் செய்தல்; to complete a business successfully (to a successful conclusion). *"வினைவலம் படுத்த வென்றியோடு" (அகநா. 74).*

*[வினை + வலம்[1] + படு. வலம்படு-தல் = வெற்றியுண்டாதல்]*

**வினைவலர்** *vinai-valar,* பெ.(n.) 1. பிறரேவிய வினைகளைச் செய்வோர்; those who do an act under orders, as of a king. *"அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினும்" (தொல். பொ. 23).* 2. தொழில் செய்வதில் வல்லமை யுள்ளோர்; skilled workmen; expert, a dept. *"வினைவல ரியற்றிய.... புகையகல்" (பெருங். உஞ்சைக். 42, 88).*

*[வினை + வலன்[2]]*

வினைவலி viṉai-vali, பெ.(n.) 1. அரண் முற்றுதல் அரண்கோடல் முதலிய தொழில்களின் அருமை; the difficulty of an enterprise (undertaking), as besieging or capturing a fort. *"வினைவலியுந் தன்வலியும்" (குறள், 471).* 2. வினைத் திட்டம் (வின்.) பார்க்க; see *viṉai-t-tiṭṭam.* 3. ஊழ்வினையின் வலிமை; the power of destiny.

*[வினை + வலி¹]*

வினைவழிச்சேறல் *viṉai-vaḻi-c-cēṟal,* பெ.(n.) வினைவயிற்பிரிதல் பார்க்க; see *viṉai-vayiṟ-piridal.*

*[வினை + வழி + சேறல்]*

வினைவளர்–த்தல் *viṉai-vaḷar-,* 4 செ.கு.வி. (v.i.) பகை விளைத்தல் (வின்.); to create ill-will, enmity or spite.

*[வினை + வளர்–,]*

வினைவாங்கு–தல் *viṉai-vāṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) வினையைப் புலப்படுத்தல்; to indicate the line or course of action, to direct the affairs, as of a state, job description. *"பேதையோன் வினைவாங்க" (கலித். 27).*

*[வினை + வாங்கு–,]*

வினைவிநாசன் *viṉaivi-nāšaṉ,* பெ.(n.) கடவுள் (யாழ்.அக.) (தீவினையை ஒழிப்பவன்); god, as the destroyer of karma.

*[வினை + **Skt.** viṉāsa >த. விநாசன்]*

வினைவிளை–த்தல் *viṉai-viḷai-,* 5 செ.கு.வி. (v.i.) பொல்லாங்கு செய்தல் (யாழ்.அக.); to do a wicked act. *'வினை விதைத்தவன் வினை அறுப்பான்; தினை விதைத்தவன் தினை அறுப்பான்' (பழ.).*

*[வினை + விளை–,]*

# வீ

வீ¹ *vī,* பெ.(n.) 'வ்' என்னும் மெய்யெழுத்தும் நெட்டுயிரான ஈ காரமும் சேர்ந்து பிறந்த உயிர்மெய்யெழுத்து; the compound of 'வ்' and 'ஈ'.

வீ² *vī,* பெ.(n.) கருவுறுதல்; conceiving. (சா.அக.)

வீ³–தல் *vī-,* 4 செ.கு.வி.(v.i.) 1. அழிதல்; to perish, to cease, to disappear. *"வீயாச் சிறப்பின்" (புறநா. 15).* 2. சாதல்; to die. *"சிலைத் தெழுந்தார் வீந்தவிய" (பு.வெ.3,7).* 3. நீங்குதல்; to leave. *"வினைப்பகை வீயாது பின்சென் றடும்"* (குறள். 207). 4. மாறுதல்; to change, to vary, to deviate as from one's course. *"வானின் வீயாது சுரக்கும்" (மலைபடு.76).*

**Ka.** *bī,* **Te.** *vīgu.*

*[விள் → (விய்) → வீ–,]*

வடவர் வி–இ⁵ என்று மூலங்காட்டி வ்யய் (vyay) = பிரிந்து போ (to go apart or in different directions) என்று விரித்து விளக்குவர். 'வி' என்பது 'விள்' என்பதன் திரிபு. 'இ' என்பது இயல் என்பதன் முதனிலை. இயல் = செல்கை, நடக்கை. (வ.மொ.வ.93).

**வீ[4]-த்தல்** *vī-,* 11 செ.குன்றாவி. (v.t.) அழித்தல்; to destroy. *"ஏழுய ருலகமும் வீக்கின்றான்" (கம்பரா. முதற்போ. 118).*

*[வீ → வீ-,]*

**வீ[5]** *vī,* பெ.(n.) 1. அழிவு; ruin, destruction. *"வீகலந்த மஞ்ஞை போல்" (சீவக. 1104).* 2. இறப்பு (பிங்.); death. 3. நீக்கம் (பிங்.); separation, removal. 4. மடிவு (பிங்.); dropping, languishing. 5. மலர்; flower. *"வீகமழ் நெடுஞ்சினை" (புறநா. 36).* 6. மகரந்தம்; pollen. *"பூவணையின் வீயை" (மேருமந். 1058).*

க. *bī,* தெ. *vīgu.*

*[வீத்தல் → வீ]*

**வீ[6]** *vī,* பெ.(n.) பறவை (பிங்.); bird.

**வீக்கக்கணம்** *vīkka-k-kaṇam,* பெ.(n.) கருவிலுண்டாகிய போதே ஏற்படும் சூட்டினால் ஏற்படுவதும், உடம்பு முழுவதும் வீங்கிக் காணப்படுவதுமான குழந்தை நோய்; a children's disease caused by congenital heat and marked by swelling of the body.

*[வீக்கம் + கணம்.*
*கணம் = குழந்தை நோய்வகை]*

**வீக்கம்[1]** *vīkkam,* பெ.(n.) 1. உடலுறுப்பு வீங்குகை; enlargement, swelling, inflammation. *'கால் வீக்கம்'.* 2. புண் முதலியவற்றின் புடைப்பு; contusion, cellulitis. 3. நீர்ச்சுரப்பால் உடல் வீங்கும் நோய்; dropsy, oedema. 4. தோள் முதலியன பூரிக்கை (யாழ்.அக.); puffing of the limes. 5. மிகுதி (பிங்.); abundance. 6. கூட்டம்; crowd. *"விண்பிளந் தேங்க வார்க்கும் வானர வீக்கம்" (கம்பரா. இராவணா. களா. 26).* 7. பெருமை; greatness; nobility. *"விசயனும் வீக்கமற்றான்" (சீவக. 2192).* 8. செருக்கு; pride. *"இலங்கைக் கோமான்றன்னை..... வீக்கந் தவிர்த்த விரலார் போலும்" (தேவா. 56. 10).* 9. விருப்பம் (யாழ்.அக.); longing, hankering. *'வீக்கமோ தூக்கமோ?' (பழ.).*

*[வீங்கு → வீக்கம்]*

**வீக்கம்[2]** *vīkkam,* பெ.(n.) 1. கட்டு (சூடா.); bond, tie. 2. இடையூறு; trouble, obstacle. *"வீக்கஞ் செய்தார் தவத்தினுக்கு" (திருவிளை. பன்றிக்குட்டி. முலை. 6).* 3. மூடுகை (திவா.); covering, packing. 4. இறுக்கம்; tightness. *'வீக்கம் கண்டால் தூக்கமாம்' (பழ.).*

*[வீக்கு → வீக்கம்]*

**வீக்கம்[3]** *vīkkam,* பெ.(n.) வேகம்; swiftness. *"சில்லிவரன் செல்லும் வீக்கம்" (புரூரவ. போர்புரி.33).*

*[வீங்கு → வீக்கம்]*

**வீக்கம்வாடல்** *vīkkam-vāḍal,* பெ.(n.) நோயினால் ஏற்பட்ட வீக்கம் குறைதல்; resolving of the swelling.

*[வீக்கம் + வாடல்]*

**வீக்கமாந்தம்** *vīkka-māndam,* பெ.(n.) குழந்தைகளுக்கு காதும் கண்ணும் வீங்கி நாக்கு, புண்ணாகிக் காய்ச்சலையுண்டாக்கு மோர் மாந்த நோய்; a digestive disease of children marked by swelling of ears, eyes, inflammation of the tongue and fever.

*[வீக்கம் + மந்தம் → மாந்தம்]*

**வீக்கமிறங்குதல்** *vikkamirangudal,* பெ.(n.) உடலின் மேற்பகுதியிலிருந்த வீக்கங் குறைந்து மெல்ல மெல்லக் கீழ்நோக்கி யிறங்குகை (வின்.); subsiding of a swelling and its transition from the upper to the lower parts of the body.

*[வீக்கம் + இறங்குதல்]*

**வீக்கு[1]-தல்** *vikku-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. கட்டுதல்; to tie up. *"கச்சையும் வீக்கினன்" (சீவக. 1836).* 2. அடக்குதல்; to control, restrain. *"புலன்கள் வீக்கியும்" (கம்பரா. காட்சிப். 72).* 3. தடுத்தல்; to hinder. *"உயிர்ப்பினை வீக்கி" (பாகவத. 2. மாயவனிலை. 8) "கொழும்புகை வீக்கி மாடந் திறந்திட" (சீவக. 534).* 4. அடித்தல் (நெல்லை.); to strike.

ம. வீக்குக.

*[வீங்கு → வீக்கு → வீக்கு-,]*

**வீக்கு[2]** *vikku,* பெ.(n.) 1. கட்டுகை; tying, binding. *"பேர்யாழ்... யாப்புறு புரிஞாண் வீக்கு முதலவிழ" (பெருங். உஞ்சைக். 52,86).* 2. இறுகுகை; tightness. *"தானை வீக்கற விசித்து" (சீவக. 1086).* 3. அடிக்கை (நெல்லை.); beating.

*[வீக்கு[1] → வீக்கு]*

**வீக்கு[3]-தல்** *vikku-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. நிறைத்தல்; to fill. 2. விரைவாகச் செலுத்துதல்; to urge, force out. *"வீக்கினான் றாரை வெய்தா" (சீவக. 2661).*

*[வீங்கு → வீக்கு-,]*

**வீக்கு[4]** *vikku,* பெ.(n.) 1. பெருமை; greatness, nobility. *"வீக்கறுத்து..... வஞ்சமறுத் திடுகென்றான்" (சீவக. 2207).* 2. மிகுதி (பொரு.நி); abundance, surplus. 3. கணித முறை (பொரு.நி.); a mode of calculation.

*[வீங்கு → வீக்கு]*

**வீக்கு[5]-தல்** *vikku-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. உயிரைப் போக்குதல்; to kill. *"வீக்கு..... வெவ்விடத்தை" (கம்பரா. இராவணன் வதை. 122).* 2. அழித்தல் (யாழ்.அக.); to destroy, ruin.

*[வீ-, → வீக்கு-,]*

**வீகம்[1]** *vigam,* பெ.(n.) 1. பூட்டு (யாழ்.அக.); padlock. 2. கணையாழி (திவா.); ring. 3. விரைவு; rapidity, speed, hurry. *"இப்போது நீயிருந்தாயாகில் வீகமென்" (ஈடு. 7,6. அவ.).*

தெ. பீகமு; க. பீக; ம. வீகம்.

**வீகம்[2]** *vigam,* பெ.(n.) 1. காற்று; wind. 2. பறவை; bird.

*[வீ → வீகம்]*

**வீகமுத்திரை** *viga-muttirai,* பெ.(n.) கோயிற்கதவைப்பூட்டி இடும் முத்திரை (இ.வ.); seal set on locked doors. especially of a temple.

*[வீகம்[1] + முத்திரை]*

**வீகாசம்** *vikāšam,* பெ.(n.) 1. பகட்டு; pomp and show. 2. தனிமை; solitude; loneliness.

**வீங்கச்செய்வது** *vinga-c-ceyvadu,* பெ.(n.) உடம்பில் அடிபடுவதனாலோ ஒவ்வா மருந்துகளாலோ உடம்பு வீங்கிப்போவது; to cause swelling-tumescent.

**வீங்கப்பண்ணல்** *viṅga-p-paṇṇal,* பெ.(n.) வீங்கச் செய்வது பார்க்க; see *viṅga-c-ceyvadu,* tumidity.

*[வீங்க + பண்ணல்]*

**வீங்கல்** *viṅgal,* பெ.(n.) 1. மிகுதி (பொரு.நி.); abundance, plenty. 2. பொருளைப் பெறும் பொருட்டு ஏக்கங் கொள்ளுகை (வின்.); morbid desire, longing. 3. இளைத் திருப்பவ-ன்-ள் (இ.வ); lean, emaciated person. 4. வீங்கி,1 பார்க்க; see *viṅgi. "வீங்கலிவன்" (விறலிவிடு. 825).* 5. உறங்குகை (வின்.); sleeping.

*[வீங்கு → வீங்கல்]*

**வீங்கி** *viṅgi,* பெ.(n.) 1. ஒன்றன்மீது ஏக்கங் கொண்டிருப்பவ-ன்-ள் (யாழ்.அக.); person having morbid desires. *"கறிக்கு வீங்கி".* 2. சேங்கொட்டை, 1 (மலை.); marking-nut.

*[வீங்கு → வீங்கி]*

**வீங்கிநாரி** *viṅgi-nāri,* பெ.(n.) ஒன்றன்மீது ஏக்கங் கொண்டிருப்பவள்; woman having morbid desires. *'பஞ்சைநாரி பணிகாரஞ் சுட்டாள், வீங்கிநாரி விசாரப்பட்டாள்' (பழ.).*

*[வீங்கி + நாரி [4]]*

**வீங்கிவிழி-த்தல்** *viṅgi-viḻi-,* 4 செ.குன்றாவி. (v.t ) கண்ணுறுத்தி இமைகனத்து, திறந்தால் குத்தல் வலியும் கடைக் கண்ணில் மூங்கில் முளைபோல் கூர்மையான சதை வளர்ந்தும் கண் சிவப்பு, எரிச்சல், வீக்கம், புடைப்பு, நீர் வடிதல் ஆகியவிக் குணங்களையுடைய வோர் கண்ணோய்; a disease of the eye marked by irritation, thickening of the eye lids, some growth in the angle of the eye, causing swelling, burning ozing tears etc.

*[வீங்கி + விழி-,]*

**வீங்கிவெடி** *viṅgi-veḍi,* பெ.(n.) ஒன்றன் மீது ஏக்கங் கொண்டு அழுது புலம்புதல்; weeping for not getting or loosing something.

**வீங்கிவெடி-த்தல்** *viṅgi-veḍi-,* 4 செ. குன்றாவி.(v.t.) ஒன்றன் மீது ஏக்கம் கொண்டு அழுது புலம்புதல்; to swell and burst as dead body.

*[வீங்கி + வெடி-,]*

**வீங்கு-தல்** *viṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. பருத்தல் (நாமதீப. 710); to increase in size, to bulge. 2. பூரித்தல்; to swell. *"மணந்தநாள் வீங்கிய தோள்" (குறள், 1233).* 3. வீக்கமுறுதல் (பொரு.நி.); to become morbidly inflamed and swollen. 4. வளர்தல் (அக.நி.); to grow. 5. மிகுதல்; to be copious or excessive; to increase. *"வளம் வீங்கு பெருக்கம்" (பதிற்றுப். 24, 17).* 6. நெருங்குதல் (சூடா.); to be close, crowded. 7. இறுகுதல்; to become tight and pressing. *"வீங்கிறை தடக்கையின்" (குறிஞ்சிப். 123).* 8. விறைப்பாய் நிற்றல்; to be taut and not slack; to be stiff. *"விளரூஞ் றின்ற வீங்குசிலை மறவர்" (அகநா. 89. 10).* 9. மேனோக்கிச் செல்லுதல்; to go up, to ascend. *"நாவிளிம்பு வீங்கி" (தொல். எழுத். 96).* 10. மெலிதல்; to become emaciated. *'அவன் வீங்கலாயிருக்கிறான்'.* 11. ஏக்கங் கொள்ளுதல்; to have morbid desires. 12. உறங்குதல் (யாழ்.அக.); to sleep.

க. பீகு; ம. வீங்நுக; தெ. வீகு.

வீங்குகரப்பான் *viṅgu-karappāṉ,* பெ.(n.) வீக்கத்தை யுண்டாக்கும் ஒருவகைக் கரப்பான் நோய்; an eczema causing swelling.

*[வீங்கு + கரப்பான். கரப்பான் = குழந்தைகளுக்கு உண்டாகும் சொறி, புண்வகை]*

வீங்குகால் *viṅgu-kāl,* பெ.(n.) பத்து வகை வளிகளுள் ஒன்று (வாயு.); one of the ten vital airs. It stays in the dead body when all others have left and causes it to swell and burst then it leaves it i.e. on 3rd day.

*[வீங்கு + கால்]*

வீங்குபுள்[1] *viṅgu-puḷ,* பெ.(n.) ஒரு பறவை; a bird.

*[வீங்கு + புள்]*

வீங்குபுள்[2] *viṅgu-puḷ,* பெ.(n.) வீங்குபுள் தோஷம் (பாலவா. 69) பார்க்க; see *viṅgupuḷ-dōšam.*

*[வீங்கு– + புள்]*

வீங்குபுள்தோஷம் *viṅgu-puḷ-dōsam,* பெ.(n.) மாலை நள்ளிரவு முதலிய காலமல்லாக் காலங்களில் குழந்தைகளை வீட்டுக்கு வெளியில் எடுத்துச் செல்லுகையில் சில பறவைகளின் நிழல் படுவதால் உண்டாவதாகக் கருதப்படும் நோய் வகை (பாலவா. 71); a disease of children, attributed to the flight of certain birds overhead when they are taken outside the house at dusk, midnight or other inauspicious hour.

*[வீங்கு + புள் + **Skt.** dōsā > த. தோஷம்]*

வீங்குவாயு *viṅgu-vāyu,* பெ.(n.) விதையைப் பற்றிய 6 வகை வளியுளொன்று; swelling of the testicles due to *vaḷi.*

*[வீங்கு + **Skt.** vāyu > த. வாயு ]*

வீங்குவிரைவாதம் *viṅgu-virai-vādam,* பெ.(n.) இரண்டு விரையும் வீங்கி இரு கால் நரம்பிழுத்து மிக்க வலியுண்டாய் மலம் போகாமலும் வளி பரியாமலும் குளிர் கண்டு கண் புகைந்து வரும், ஒருவகை நோய் (யூகி-1200); orchitis marked by constipation, flatulence, chillness, pain in the legs etc.

*[வீங்கு + விரை + வாதம்]*

**Skt.** *vāda* > த. வாயு.

வீங்கை *viṅgai,* பெ.(n.) 1. ஒருவகை அசைவு; a movement. 2. ஆடல் வகை; a mode of dancing. 3. குதிரை நடைவகை; a pace of a horse.

*[வீங்கு → வீங்கை]*

வீச்சம் *viccam,* பெ.(n.) நாற்றம்; smell, effluvium.

*[வீசு → வீச்சு → வீச்சம்] (மு.தா.65)*

காற்றானது நீண்டு செல்வதால் அதனொடு கலந்த வாசனையும் நீண்டு செல்கின்றதென்க. வீசுதல் என்னும் சொல், வழக்கில் தீய நாற்றத்தையே குறிக்கும்.

வீச்சரிவாள் *viccarivāḷ,* பெ.(n.) அறுவாள்வகை (இ.வ.); a kind of billhook.

மறுவ. புல்லரிவாள்.

*[வீச்சு + அறுவாள் → அரிவாள்]*



வீச்சலை *viccalai,* பெ.(n.) ஆழிப்பேரலை; tsunami.

*[வீச்சு + அலை]*

வீச்சாட்டம் *viccāṭṭam,* பெ.(n.) 1. பரப்பகலம் (வின்.); spaciousness, roominess. 2. வீச்சு, 5 பார்க்க; see *viccu.* 3. நன்னிலைமை; good circumstances, profilable increase..

*[வீச்சு + ஆடு → ஆட்டம்]*

வீச்சு *viccu,* பெ.(n.) 1. எறிகை; throw, cast, as of a net. *"எறிந்த வீச்சுத் தவ்விட..... வாளொடுந் தழுவிக் கொண்டான்" (கம்பரா. அதிகா. 213).* 2. சிறகடிக்கை; beat, flat, as of wings. 3. அடி; blow, strike. 4. ஆட்டுகை; swinging, oscillation. *'ஊஞ்சலை ஒரு வீச்சு வீசியாடினாள்'.* 5. நீளம்; length. *'அந்த வீடு வீச்சா யிருக்கிறது'.* 6. விரைவு; quickness, rapidity. *'அவன் வீச்சாக நடக்கிறான்'.* 7. ஓட்டம்; sweep, glance. 8. நோய் வகை (யாழ்.அக.); a disease. 9. வலிமை (வின்.); strength. 10. தற்பெருமை; self-boasting, arrogant talk. *'யாரிடத்தில் இந்த வீச்சு'.* 11. ஆந்தை முதலியவற்றின் ஓசை; dry, screech as of an owl. *"வாய்ச்சிறு புதுப்புள் வீச்சுறு விழுக்குரல்" (பெருங். உஞ்சைக். 55, 89).* 12. மெய்யெழுத்துக்கள் உயிரெழுத்தோடு சேர்ந்து வரும் போது கொள்ளும் ஒருவகைக் குறியீடு; a vowel-sign of vowel-consonants. 13. வளைவு (கட்டட. நாமா. 16); curve. 14. வீச்சம் (இ.வ.) பார்க்க; see *viccam.*

க. பீசு.

*[வீசு → வீச்சு]*

வீச்சுக்காரன் *viccu-k-kāraṉ,* பெ.(n.) 1. மிகுதியாக செலவு செய்பவன் (யாழ்.அக.); person driven to extravagance, spend thift. 2. தற்பெருமை பேசுவோன்; boastful person, braggart.

*[வீச்சு + காரன்]*

வீச்சுக்காரி *viccu-k-kāri,* பெ.(n.) வரம்புமீறி செலவு செய்பவள்; extravagant woman. 2. பெருமை பேசுபவள்; boastful woman. 3. விலைநலப் பெண்டிர்; prostitute.

*[வீச்சு + காரி]*

வீச்சுசன்னி *viccu-ṡaṉṉi,* பெ.(n.) இசிவு நோய்வகை (வின்.); lockjaw, tetanus.

*[வீச்சு + சன்னி]*

**Skt.** Janni > த. சன்னி.

வீச்சுப்புத்து *viccu-p-puttu,* பெ.(n.) ஒரு வகைப் புண்; an ulcer.

*[வீச்சு + புத்து]*

வீச்சுலை *vicculai,* பெ.(n.) காற்று வீசும் உலை; blast furnace.

*[வீசு → வீச்சு + உலை]*

வீச்சுவலி *viccuvali,* பெ.(n.) நரம்புகளை இழுத்துவிடும் ஒரு வகை வலிப்பு; a spasm in which the muscles or muscular fibres contract and relax alternately in quick succession.

*[வீச்சு + வலி]*

வீச்சுவலை *viccu-valai,* பெ.(n.) மீன்பிடி வலைவகை (இ.வ.); a kind of casting net.

மறுவ. எறிவலை, மணிவலை.

ம. வீச்சுவல.

*[வீசு → வீச்சு + வலை. வலை = மீனுள்ளிட்ட கடல்வாழ் உயிரிகளைச் சூழ்ந்து அகப்படுத்தும் கருவி]*

வாய்ப்பக்கம் நீர்ப்பரப்பில் எறிந்து மையமூடாக நாற்புறக் கோடியும் இழுக்கப்படத் தக்க வகையில் அமைவுற்ற பெரிய வட்ட வடிவமான மீன்பிடி வலை.

வீச்சுவிளக்கு *viccu-viḷakku,* பெ.(n.) மாழைகளை (அல்) மாழைகளினாலான அணிகலன்களை உருக்கவும், காய்ச்சவும் பயன்படுத்தும் காற்று வீசும் விளக்கு; blast lamp.

*[வீசுவிளக்கு → வீச்சுவிளக்கு]*



வீச்சுவீச்செனல் *viccu-viccenal,* பெ.(n.) கதறுதற்குறிப்பு; onom. expr, of screaming.

*[வீச்சு + வீச்சு + எனல்]*

வீச்சுவேனுமாய் *viccu-vēṉum-āy,* வி.எ. (adv.) அளவில் மிகுதியாய்; with a free hand, liberally, as in measuring.

*[வீசு → வீச்சு + வியனுமாய் → வேனுமாய்]*

வீச்சேணி *viccēṇi,* பெ.(n.) வீசுகாலேணி (சங்.அக.); a kind of ladder.

*[வீச்சு + ஏணி¹]*

வீசக்கணக்கு *viša-k-kaṇakku,* பெ.(n.) கணக்கு வகை (M.E.R.1931-32, P.55); a mode of calculation.

வீசகணிதம் *viša-kaṇidam,* பெ.(n.) கணித வகை; algebra.

*[வீசம் + கணிதம்]*

வீசகரி *višakari,* பெ.(n.) வேங்கை மரம் (சங்.அக.); East Indian kino tree.

*[வீசம் + கரி]*

வீசகா *višakā,* பெ.(n.) வீசகரி (சங்.அக.) பார்க்க; see *višakari.*

வீசம்¹ *višam,* பெ.(n.) மாகாணி (பிங்.); the fraction, 1/16.

தெ. வீசமு; க. வீச; து. வீசு, வீச; ம. வீசம்.

வீசல் *višal,* பெ.(n.) 1. எறிகை (பிங்.); throwing. 2. வரையாது கொடுக்கை (திவா.); giving liberally; unconcelled liberality.

*[வீசு → வீசல்]*

வீசனம் *vīšaṉam,* பெ.(n.) 1. சிற்றால வட்டம் (சூடா.); small fan. 2. விசிறி (திவா.); fan.

*[வீசு → வீசனம்]*

வீசானம் *vīšāṉam,* பெ.(n.) திருகுவட்டம் (பாண்டிச்.); a small wedge shaped reel.

*[வீசு → வீசானம்]*

வீசி¹ *vīši,* பெ.(n.) 1. அலை; wave, ripple. *"வீசிகள் கவரியாக" (கந்தபு. திருவவ. 110).* 2. சிறுக்கம் (இலக்.அக.); trifle, a little reduction.

*[வீசு → வீசி]*

வீசி² *vīši,* பெ.(n.) நலம் (இலக்.அக.); health; welfare.

வீசி³ *vīši,* பெ.(n.) சதகுப்பை; dill or sowa seed.

வீசிக்கட்டு-தல் *vīši-k-kaṭṭu,* 5 செ.குன்றாவி. (v.t.) விரிவாகக் கட்டுதல்; to build in large proportions. *"தூணுமெழ வீசிக்கட்டி" (கோயிலொ. 3).*

*[வீசு + கட்டு-,]*

வீசிதரங்கநியாயம் *vīšitaraṅga-niyāyam,* பெ.(n.) அலைகள் போல ஒன்றன்பின் னொன்று தொடர்ந்து வருதலைக் கூறும் நெறி (இலக்.அக.); the *nyāya* of the wave undulation, typifying an uninterrupted and regular succession or series, as of waves.

*[வீசி + தரங்கம் + நியாயம்]*

**Skt.** *Niyāya* > த. நியாயம்.

வீசிநட-த்தல் *vīši-naḍa-,* 3 செ.கு.வி.(v.i.) 1. காலை யெட்டி வைத்து விரைவாக நடத்தல்; to take long and quick strides, as in walking. 2. நெடுந்தொலைவு செல்லுதல்; to go long distance. *'வீசி நடந்தால் வெள்ளி வீசம் குறையும்' (பழ.)*

*[வீசி +நட-,]*

வீசிப்பிடி-த்தல் *vīši-p-piḍi-,* 2 செ. குன்றாவி. (v.t) மூச்சை இழுத்து உள்ளே கும்பித்துப் பிறகு சீராக விடுதல்; a breath exercise followed by siddhas. *"வீசிப் பிடிக்கும் விறகறியாரில்லை" (திருமந்.).*

வீசிப்போ-தல் *vīši-p-pō-,* 8 செ.கு.வி.(v.i.) வீசிநட-, பார்க்க; see *vīši-naḍa-,.*

*[வீசி + போ-,]*

வீசிமாலி *vīšimāli,* பெ.(n.) கடல் (இலக்.அக.); sea.

*[வீசி + மாலி]*

வீசியடி-த்தல் *vīši-y-aḍi-,* 2 செ.குன்றாவி. (v.t.) ஓங்கியடித்தல்; to strike with force, swinging the arm.

*[வீசி- + அடி-,]*

வீசிவில்லிடு-தல் *vīši-villiḍu-,* 5 செ. குன்றாவி.(v.t.) தேர் முதலிய நெம்பத்தணி போடுதல்; to apply a lever as in raising the wheel of a car. *"வீசிவில்லிட் டெழுப்பினாலும் எழுப்பப் போகாதிருத்தல்" (திவ். திருப்பா. 23, வ்யா. பக். 203).*

*[வீசு + வில்லிடு-,]*

வீசு¹-தல் *vīšu,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. எறிதல் (பிங்.); to throw, fling, as a weapon, to cast, as a net. *"நின்ற*

*மண்ணாயினுங் கொண்டு வீசுமினே" (திவ். இயற். திருவிருத். 53).* 2. சிறகடித்தல்; to flap, as wings. *"வீசுஞ் சிறகாற் பறத்திர்" (திவ். இயற். திருவிருத். 54).* 3. ஆட்டுதல்; to swing, as the arm. *"மூங்கில் போன்றிருந்துள்ள தோள் வீசி" (திவ். பெரியதி. 3. 7. 5. வ்யா).* 4. இரட்டுதல்; to fan. *"முழவுத் தோளோச்சித் தண்ணென வீசியோயே" (புறநா. 50. 13).* 5. சுழற்றுதல்; to wave, flourish, as a sword. *"வருமாய ரோடுடன் வளைகோல் வீச" (திவ். பெரியாழ். 3, 4, 6).* 6. அடித்தல்; to strike, beat, flog. *'கழியால் அவனை வீசினான்'.* 7. விரித்து நீட்டுதல்; to open out, spread, to lengthen, stretch. *"இருஞ்சிறை வீசியெற்றி" (கம்பரா. சடாயுவுயிர். 107).* 8. மிகுத்திடுதல் (அரு.நி.); to accumulate. 9. வரையாது கொடுத்தல் (பிங்.); to give liberally. *"இரவலர் புன்கண்டீர நாடொறும் உரைசா னன்கலம் வரைவில வீசி" (பதிற்றுப். 54. 8).* 10. சிந்துதல்; to spill. *"கண்ணீர்க் கடலாற் கனைதுளி வீசாயோ" (கலித். 145).* 11. சிதறுதல்; to strew, scatter, sow, as seeds. *"கொள்பத மொழிய வீசிய புலனும்" (புறநா. 23).* 12. களைதல்; to lay aside, throw off. *"உடலுறு பாசம்வீசா தும்பர்ச் செல்வாரு மொத்தார்" (கம்பரா. கடறாவு. 11).* 13. செய்யா தொழிதல்; to abandon, to leave off, to drop. *"சுடுவேனது தூயவன் வில்லினாற்றற்கு மாசென்று வீசினேன்" (கம்பரா. சூளா. 18).*

தெ. வீசு; க. பீசு; ம. வீசுக; **Ko.** vic; **To.** pis; **Kod.** bi-j (bi-di); து. bijuni; **Go.** *mihitānā*, **Kui.** vinja; **Kur.** *bikhrnā*, **malt.** bengre.

*[விசு → வீசு] (மு.தா.பக்.68)*

**வீசு²-தல்** *vīsu-*, 5 செ.கு.வி.(v.i.) 1. காற்று முதலியன அடித்தல்; to blow, as the wind. *"வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்" (தேவா. 1203,1).* 2. பரவுதல்; to spread, to be diffused or emitted, as fragrance, rays, etc. *"ஞானவாசம் வீசி ப்ரகாசியா நிற்ப" (திருப்பு. 1132).* 3. தீநாற்றம் அடித்தல்; to be emitted, as a bad foul smell.

வீசுதல் = மணம் வீசுதல், மணத்தல்.

வீச்சம் = மணம், நாற்றம். நாறு என்னும் சொற்போன்றே வீசு என்பதும், செய்யுள் வழக்கில் நறுமணத்தையும் உலக வழக்கில் தீய மணத்தையும் உணர்த்தும்.

வாஸ் → வாஸ = மணம். வாஸ் என்பது பெயரடி வினையே. மா.வி.அகராதி. "perhaps only Nom. fr.next" என்று குறித்திருத்தல் காண்க. 'next' என்றது 'வாஸ' என்னும் சொல்லை. (வ.மொ.வ.93).

**வீசுகாலேணி** *vīsu-kāl-ēṇi*, பெ.(n.) தாங்குகால்களிரண்டுள்ள ஏணி வகை (வின்.); a kind of ladder with two supporting legs. step-ladder.

*[வீசு- + கால் + ஏணி]*



**வீசுகோல்** *vīsu-kōl*, பெ.(n.) 1. **வீசுவில் (வின்.)** பார்க்க; see *vīsu-vil*. 2. வில்லுப்

பாட்டுப் பாடும்போது வில்லடிக்கப் பயன்படும் கோல் வகை (நாஞ்.நா.); a kind of rod used for striking the bow in singing *viṟ-pāṭṭu.*

*[வீசு + கோல்]*

**வீசுகோற்காரன்** *vīsukōṟ-kāraṉ,* பெ.(n.) வில்லுப்பாட்டில் வில்லடிப்போன் (நெல்லை); one who plays with the vil instrument in *villu-p-pāṭṭu.*

*[வீசு + கோல் + காரன்]*

**வீசுதமர்** *vīšu-tamar,* பெ.(n.) துரப்பண வகை (வின்.); bow drill.

*[வீசு + தமர்]*

**வீசுதவர்** *vīšu-tavar,* பெ.(n.) வீசுதமர் (யாழ்.அக.) பார்க்க; see *vīšu-tamar.*

*[வீசு + தவர்[2]]*

**வீசுவில்** *vīšu-vil,* பெ.(n.) துரப்பண மிழுக்கப் பயன்படும் வில்; drill bow.

*[வீசு + வில்]*



**வீசுவிற்குடம்** *vīšu-viṟ-kuḍam,* பெ.(n.) துரப்பணக் கூடு (வின்.); case for a drill bow.

*[வீசுவில் + குடம்]*

**வீசேறு-தல்** *vīšēṟu,* 5 செ.குன்றாவி. (v.t.) மேலேறுதல்; to be upraised. *"வீசேறிய புருவத்தவர்" (தேவா. 69, 10).*

*[வீசு + ஏறு-,]*

**வீசை[1]** *vīšai,* பெ.(n.) நாற்பது பலங்கொண்ட எடுத்தலளவை; viss, a measure of weight = 40 palams.

தெ. வீசெ.

**வீசை[2]** *vīšai,* பெ.(n.) நீண்டு வளரும் மேலுதட்டு மயிர்; moustache.

*[வீசு → வீசை]*

தலைமயிரும் தாடியும் நீண்டு வளர்வனவேயாயினும், குறுக்காக நீண்டு வளர்வது மீசையொன்றே யாதலின், அது வீசையெனப்பட்டது. (மு.தா.பக்.68).

**வீசை[3]** *vīšai,* பெ.(n.) வாழை; plantain.

**வீசைத்தூக்கம்** *vīšai-t-tūkkam,* பெ.(n.) காற்குன்றி மணி எடை; gold-smith's weight = 1/4 *kuṉṟi.*

*[வீசம்[2] + தூக்கம்[2]]*

**வீட்டன்** *vīṭṭaṉ,* இடை.(part), தோறும் என்று பொருள்படும் ஓர் ஈறு; a distributive suffix meaning each, every. *"ஆட்டை வீட்டன் பொலிசை காசு அரைக்கால்" (S.I.I.ii. 97).*

*[வட்டம் → விட்டன் → வீட்டன்]*

**வீட்டார்** *vīṭṭār,* பெ.(n.) வீட்டிலுள்ள மக்கள்; members of a household; family members.

*[வீடு → வீட்டார்]*

**வீட்டாள்** *viṭṭāḷ,* பெ.(n.) மனைவி (யாழ்.அக.); wife.

*[வீடு → வீட்டாள்]*

ஒ.நோ. இல் → இல்லாள்

**வீட்டிருப்பு** *viṭṭiruppu,* பெ.(n.) குடும்ப நிலை; state of the family, family affairs. *"வீட்டிருப் பறியாத ஆண்பிள்ளை" (விநோதரச. 24).*

*[வீடு → வீட்டு + இருப்பு]*

**வீட்டிலொன்று** *viṭṭil-oṉṟu,* பெ.(n.) முப்பூவி லொன்று; one of the three salts.

*[வீட்டில் + ஒன்று]*

**வீட்டிறப்பு** *viṭṭiṟappu,* பெ.(n.) மேற்கூரையின் தாழ்ந்த பக்கம் (சூடா.); eaves of the roof of a house.

*[வீடு → வீட்டு + இறப்பு]*

ஒ.நோ. இறப்பு,7.

**வீட்டினெருப்பு** *viṭṭiṉeruppu,* பெ.(n.) அகத்தி; a tree.

**வீட்டு**[1]**-தல்** *viṭṭu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. கொல்லுதல் (சூடா.); to kill. *"அந்தகன் றூதர் வீட்டு முன்னரே" (உபதேசகா. சிவபுரா. 40).* 2. அழித்தல்; to destroy. *"என்றன் வெந்தொழில் வீட்டிட" (திருவாச. 41. 5).* 3. நீக்குதல்; to remove. *"பிணியை வீட்டி மணித்தடந் தோளினாற்குக் கொடுத்தியோ" (கம்பரா. மிதிலைக். 97).*

*[வீழ்த்து → வீட்டு-,]*

**வீட்டு**[2]**-தல்** *viṭṭu,* 5 செ.குன்றாவி.(v.t.) தள்ளுதல்; to cast into, throw in. *"இரவியைச் சிறையில் வீட்டினான்" (கந்தபு. அமரர் சிறைபு. 3).*

*[வீழ்த்து → வீட்டு-,]*

**வீட்டுக்கப்புறம்** *viṭṭukkappuram,* பெ.(n.) வீட்டுக்குத்தூரம் பார்க்க; see *viṭṭukku-t-tūram.*

*[வீட்டுக்கு + அப்புறம்]*

**வீட்டுக்கரு** *viṭṭu-k-karu,* பெ.(n.) ஐங்காய மெழுகு பார்க்க; see *aiṅkāya-meḷugu.*

**வீட்டுக்காரர்** *viṭṭukkārar,* பெ.(n.) கணவர்; husband.

*[வீடு → வீட்டு + காரர்]*

**வீட்டுக்காரன்** *viṭṭu-k-kāraṉ,* பெ.(n.) 1. வீட்டுக்குரியவன்; landlord of a house. 2. வீட்டுக்காரர் பார்க்க; see *viṭṭu-k-kārar.*

*[வீடு → வீட்டு + காரன்*[1]*]*

**வீட்டுக்காரி** *viṭṭu-k-kāri,* பெ.(n.) 1. வீட்டுக் குடையவள்; landlord of a house. 2. மனைவி; wife.

மறுவ. மனையாள்.

*[வீடு → வீட்டு + காரி]*

**வீட்டுக்காரியம்** *viṭṭu-k-kāriyam,* பெ.(n.) குடும்ப வேலை; house hold affairs. *"நம் சேனாதிபதி விண்ணப்பத்தால் நம் வீட்டுக் காரியம் செய்யும் கோவணவர்" (Pudu. Insc. 791).*

*[வீடு → வீட்டு + **Skt.** kārya > த. காரியம்]*

**வீட்டுக்கிரியை** *viṭṭu-k-kiriyai,* பெ.(n.) வீட்டிற் செய்யுஞ் சாச்சடங்குப் பகுதி (யாழ்.அக.); part of the funeral ceremonies, performed at the house.

*[வீடு → வீட்டு +* **Skt.** *kiriyā > த. கிரியை]*

**வீட்டுக்குட்சாட்சி** *viṭṭukkuṭ-cāṭci,* பெ.(n.) வீட்டிலிருப்பவர்களுடைய சான்று மூலம் (வின்.); domestic evidence.

*[வீடு + உள்[2] +* **Skt.** *sakshi > த. சாட்சி]*

**வீட்டுக்குடையவன்** *viṭṭukkuḍaiyavaṉ,* பெ.(n.) 1. வீட்டுக்கு உரியவன் (வின்.); owner of a house. 2. குடும்பத் தலைவன் (வின்.); head of a family. 3. ஓரைக்குரிய (இராசி) தலைவர்; lord of a zodiacal sign.

*[வீடு → வீட்டுக்கு + உடையவன்]*

**வீட்டுக்குத்தூரம்** *viṭṭukku-t-tūram,* பெ.(n.) வீட்டுக்குவிலக்கு (யாழ்.அக.) பார்க்க; see *viṭṭukku-vilakku.*

*[வீடு → வீட்டுக்கு + தூரம்]*

**வீட்டுக்குவிலக்கம்** *viṭṭukku-vilakkam,* பெ.(n.) வீட்டுக்குவிலக்கு பார்க்க; see *viṭṭukku-vilakku.*

*[வீடு → வீட்டுக்கு + விலக்கம்]*

**வீட்டுக்குவிலக்கு** *viṭṭukku-vilakku,* பெ.(n.) மகளிர் மாதவிடாய்; menstruation, as necessitating a woman to stay outside her house during her periods.

*[வீடு → வீட்டுக்கு + விலக்கு]*

**வீட்டுக்குவெளி** *viṭṭukku-veḷi,* பெ.(n.) மாதவிலக்கு; menses.

*[வீடு → வீட்டுக்கு + வெளி]*

**வீட்டுக்குளிர்ச்சி** *viṭṭu-k-kuḷircci,* பெ.(n.) தீயபெண்கடவுள்களுக்கு வீடுகளில் இடும் காணிக்கை (யாழ்ப்.); offerings made to demons when worshipped at home.

*[வீடு → வீட்டு + குளிர்ச்சி]*

**வீட்டுக்கோழி** *viṭṭu-k-kōḻi,* பெ.(n.) வீடுகளில் வளர்க்கப்படும் கோழி; domesticated fowl.

*[வீடு → வீட்டு + கோழி]*

**வீட்டுச்சாமான்** *viṭṭu-c-cāmāṉ,* பெ.(n.) 1. வீட்டிற்குரிய தட்டு முட்டுகள்; household furniture and utensils. 2. வீட்டுப் பண்டம், 2, 3 பார்க்க; see *viṭṭu-p-paṇḍam.*

*[வீடு → வீட்டு + சாமான்]*

saman = urdhu.

**வீட்டுச்சீட்டு** *viṭṭu-c-ciṭṭu,* பெ.(n.) 1. வீட்டை விலைகொடுத்து வாங்கிய ஒப்பந்தம், உறுதி முதலிய ஆவணம் (வின்.); title-deeds relating to one's house. 2. குடும்ப வழக்கு (இ.வ.); monetary transactions of a family.

*[வீடு → வீட்டு + சீட்டு]*

**வீட்டுச்சுகம்** *viṭṭu-c-cugam,* பெ.(n.) வீட்டிற் பெறக்கூடிய இன்பம்; domestic felicities.

*[வீடு → வீட்டு +* **Skt.** *suga > த. சுகம்[1]]*

**வீட்டுச்செலவு** *viṭṭu-c-celavu,* பெ.(n.) உணவு முதலியவற்றிற்கு ஆகுஞ் செலவு; household expenditure, opp. to *veḷi-c-celavu.*

*[வீடு → வீட்டு + செலவு]*

**வீட்டுத்தீ** *viṭṭu-t-tī,* பெ.(n.) அகத்தி; a tree. (சா.அக.)

**வீட்டுத்தெய்வம்** *vīṭṭu-t-teyvam,* பெ.(n.) 1. குடும்பப் பெண் கடவுள் (இ.வ.); household deity. 2. மங்கலப் பெண்டு; woman who dies during the lifetime of her husband and is worshipped as a deity by her family.

மறுவ. குலதெய்வம்.

*[வீடு → வீட்டு + தெய்வம்]*

**வீட்டுத்தேவை** *vīṭṭu-t-tēvai,* பெ.(n.) வரிவகை *(S.I.I.vii, 63);* a tax.

*[வீடு → வீட்டு + தேவை]*

**வீட்டுத்தேன்** *vīṭṭu-t-tēṉ,* பெ.(n.) வீடுகளில் ஈக்கள் கட்டும் அடையின் தேன்; honey collected from the honey comb built in the houses.

*[வீடு → வீட்டு + தேன்]*

**வீட்டுநெறி** *vīṭṭu-neṟi,* பெ.(n.) வீடுபேற்றிற் குரிய வழி; path to salvation. *"வீட்டு நெறிப்பால்" (ஔவைக் குறள்).*

*[வீடு → வீட்டு + நெறி [3]]*

அறிவுமிக்கு உலகவாழ்வை வெறுத்து வீட்டு நெறியில் நின்ற தமிழ்நாட்டுத் துறவிகளே அந்தணரென்னும் அறவோ ரெனப்பட்டனர்.

**வீட்டுப்பண்டம்** *vīṭṭu-p-paṇḍam,* பெ.(n.) 1. வீட்டுச்சாமான் (வின்.) பார்க்க; see *vīṭṭu-c-cāmāṉ.* 2. வீட்டுக்கு வேண்டிய உணவுப் பொருள்கள்; household provisions. 3. வீட்டிற் செய்யப்படும் பொருள்கள்; home-made articles.

*[வீடு → வீட்டு + பண்டம் [1]]*

**வீட்டுப்பூசை** *vīṭṭu-p-pūšai,* பெ.(n.) கடவுளுக்கு வீட்டிற் செய்யும் வழிபாடு; worship of the deity at home.

*[வீடு → வீட்டு + பூசை]*

**வீட்டுப்பெண்** *vīṭṭu-p-peṇ,* பெ.(n.) 1. குடும்பத்திலே பிறந்த பெண்; daughter of the family. 2. மகன் மனைவி (வின்.); daughter-in-law.

*[வீடு → வீட்டு + பெண்]*

**வீட்டுப்பெண்சாதி** *vīṭṭu-p-peṇšādi,* பெ.(n.) முறையாக மணந்த மனைவி; one's own wedded wife. *"வீட்டுப் பெண்சாதி வேம்பும் காட்டுப்பெண்சாதி கரும்பும்" (வின்.).*

*[வீடு + **Skt.** jādi > த. சாதி, பெண்சாதி]*

**வீட்டுமணியம்** *vīṭṭu-maṇiyam,* பெ.(n.) 1. வளமனை உட்படு கருமத் தலைவர் (வின்.); stewardship, management of a house or family. 2. வீட்டு அலுவல்களை மேற்பார்ப்பவன் (இ.வ.); steward.

*[வீடு → வீட்டு + மணியம்]*

**வீட்டுலகம்** *vīṭṭulagam,* பெ.(n.) மேலுலகம்; heaven. *"தேவர் பெருமானை... நாவி னவிற்றாதார் வீட்டுலக நண்ணாரே" (சீவக. 1467).*

*[வீடு → வீட்டு + உலகம்]*

**வீட்டுவரி** *vīṭṭu-vari,* பெ.(n.) வீட்டுக்காகச் செலுத்தும் வரி; house-tax. *"வீட்டுவரி யெப்பொழுதும் வேண்டா மெனநிறுத்தி" (பணவிடு. 46).*

*[வீடு → வீட்டு + வரி [5]]*

**வீட்டுவழக்கம்** *vīṭṭu-vaḻakkam,* பெ.(n.) குடும்பத்தில் நடந்து வரும் வழக்கம்; family usage, tradition, opp. to *nāṭṭu-vaḻakkam.*

*[வீடு → வீட்டு + வழக்கம்]*

**வீட்டுவாசல்** *vīṭṭu-vāśal,* பெ.(n.) வீட்டின் முன்புற வாயில்; the front gate of a house.

*[வீடு → வீட்டு + வாசல்]*

**வீட்டுவாடகை** *vīṭṭu-vāḍagai,* பெ.(n.) குடிக்கூலி; house-rent.

*[வீடு → வீட்டு + வாடகை]*

**வீட்டுவாடை** *vīṭṭu-vāḍai,* பெ.(n.) வீட்டு வாடகை (யாழ்.அக.) பார்க்க; see *vīṭṭu-vāḍagai.*

*[வீடு → வீட்டு + வாடை[4]]*

**வீட்டுவிசாரணை** *vīṭṭu-viśāraṇai,* பெ.(n.) வீட்டுமணியம், 1 (வின்.) பார்க்க; see *vīṭṭu-maṇiyam.*

*[வீடு → வீட்டு +* **Skt.** *visārana > த. விசாரணை]*

**வீட்டுவிசாரம்** *vīṭṭu-viśāram,* பெ.(n.) குடும்பக் கவலை; cares of a householder, worries of a family.

*[வீடு → வீட்டு +* **Skt.** *vicāra > த. விசாரம்]*

**வீட்டுவீரன்** *vīṭṭu-vīraṉ,* பெ.(n.) வீட்டிலிருந்து வீரம்பேசும் கோழை (பயங்கொள்ளி) (யாழ்.அக.); one who effects heroism at home but is really a coward outside.

மறுவ. வாய்ச் சொல் வீரன்

*[வீடு → வீட்டு + வீரன்]*

**வீட்டுவேலை** *vīṭṭu-vēlai,* பெ.(n.) 1. வீட்டிற் செய்து கொணருமாறு இடப்படும் வேலை (இக்.வ.); home-work, home exercise. 2. குடும்ப வேலை (கொ.வ.); domestic duties. 3. பெருக்குதல், துணிதுவைத்தல் முதலிய தொழில்; menial service, as washing, sweeping, etc. 4. வீடு கட்டுந் தொழில்; house-building work.

*[வீடு → வீட்டு + வேலை]*

**வீட்டுள்ளார்** *vīṭṭuḷḷār,* பெ.(n.) 1. வீட்டுக் குரியார்; inmates of a house. 2. தன் வீட்டில் குடியிருக்கும் வீட்டுடைமையாளர்; house holders.

*[வீடு → வீட்டு + உள்ளார்]*

**வீட்டெலி** *vīṭṭeli,* பெ.(n.) இல்லெலி (புறநா. அரும்.); house rat.

*[வீடு → வீட்டு + எலி]*

**வீட்டைச்சுற்று-தல்** *vīṭṭai-c-cuṟṟu-,* 5 செ.கு.வி.(v.i.) வெளியேறி வேலை செய்யாமல் தன்வீட்டிலேயே திரிந்து கொண்டிருத்தல்; to be hanging about one's own house, to be a stay-at-home.

*[வீடு → வீட்டை + சுற்று-,]*

**வீட்டோடுங்கூட்டோடும்** *vīṭṭōḍuṅ-kūṭṭōḍum,* வி.எ.(adv.) வீடு முழுவதும் (T.A.S.V.224); throughout the house. *'பொங்கல் பண்டிகைக்கு வீட்டோடும் கூட்டோடும் தூய்மை செய்தாயிற்று' (உ.வ.).*

*[வீட்டோடும் + கூட்டோடும்]*

**வீட்டோடேயிருந்துபத்தியங்காத்தல்** *viṭṭōḍē-y-irundu-pattiyaṅ-kāttal,* பெ.(n.) நோய்வாய்க் காலத்தில் வீட்டில் ஒய்வாகவிருந்து மருந்தே உணவாகவும் உணவே மருந்தாகவும் கொண்டு உணவுக் கட்டுப்பாட்டில் இருத்தல்; to observe diet and remain at home taking rest.

*[வீட்டோடே + இருந்து + பத்தியம் + காத்தல்]*

**வீடடைத்தல்** *vīḍaḍaittal,* பெ.(n.) சாவு முதலியவற்றால் தலைமுறையற்று வீடு மூடிக்கிடக்கை; closing of a house due to extinction of a family, as by death.

*[வீடு + அடைத்தல்]*

**வீடறு-த்தல்** *vīḍaṟu-,* 4 செ.குன்றாவி.(v.t.) வழக்கு முதலியன தீர்த்தல்; to settle, as a case or dispute. *"வழக்குமாறுபட்டு வந்தோர்க்கு அவ்வழக்கு வீடறுப்பன்" (பொருந. 188, உரை)*

*[வீடு + அறு-,]*

**வீடாயிரு-த்தல்** *vīḍā-y-iru-,* 2 செ.கு.வி. (v.i.) தங்கியிருத்தல்; to encamp, to stay. *"சீவலவன் மங்கலத்து நாம் வீடாயிருக்க"* (T.A.S.vi.158).

**வீடாரம்** *vīḍāram,* பெ.(n.) 1. பாசறை (பு.வெ.8, 16, கொளு, உரை); camp. 2. வீடு (வின்.); house.

தெ. பிடாரமு; க. பிடார.

*[வீடு → வீடாரம்]*

**வீடாவழி** *vīḍā-vaḻi,* வி.எ.(adv.) வீடு வீடாக(வின்.); door to door. *'இவ்விரவலன் வீடாவழிச்சென்று இருக்கிறான்' (உ.வ.).*

*[வீடு + ஆ + வழி]*

**வீடி[1]** *vīḍi,* பெ.(n.) கொற்றன் (மலை.); a parasitic leafless plant.

**வீடி[2]** *vīḍi,* பெ.(n.) வேரிலாக் கொத்தான்; rootless plant.

**வீடி[3]** *vīḍi,* பெ.(n.) வெற்றிலை பாக்கு (தாம்பூலம்) (இலக். அக.); betel and betel nut.

*[மிடையம் → விடையம் → வீடி]*

**வீடிகை** *vīḍigai,* பெ.(n.) 1. வெற்றிலை (மலை.); betel. 2. வெற்றிலைச் சுருள் (வின்.); roll of betel leaves with arecanut, spices and lime.

*[மிடையம் → விடையம் → வீடிகை]*



**வீடு[1]** *vīḍu,* பெ.(n.) 1. விடுகை; leaving. *"நட்டபின் வீடில்லை" (குறள், 791).* 2. விடுதலை; emancipation, freedom, liberation, release; to set free. *"நெடுங்கை விலங்கின் வீடுபெறல் யாதென" (பெருங். நரவாண. 3. 107).* 3. வினைநீக்கம்; freedom from the bondage of karma. *"வீடெனப்படும் வினைவிடுதல் (சீவக. 2846).* 4. முடிவு (பிங்.); completion; settlement, end. 5. அழிவு; dissolution of the universe. *"நுகர்ச்சி யுறுமோ மூவுலகின்*

*வீடுபேறு" (திவ். திருவாய். 8. 10. 6), 'அற்றது பற்றெனில் உற்றது வீடு' (பழ.).* 6. படைப்பு (திவ். திருவாய். 8, 10, 6, பன்னீ. ); creation. 7. வீடுபேறு; heaven, as the final release or liberation, immortality. *"வீடுடையா னிடை" (திவ். திருவாய். 1, 2, 1).* 8. வானுலகு; Svarga, Indra's heaven. *"வீரிய ரெய்தற் பால வீடு" (பு.வெ. 8.30).* 9. மனை; house, habitation, abode. *"வீடறக் கவர்ந்த" (பு.வெ. 3. 15. கொளு).* 10. ஓரை (இராசி.) (இ.வ); zodiacal sign. 11. சதுரங்கத்தில் காய்களிருத்தற்கு உரிய இடம் (தானம்) (இ.வ.); squares, as of a chess board. 12. கட்டாட்டத்திற் பழமெடுத்தற்குரிய இடம்; winning place or goal in a board of an indoor game. 13. தேற்றா பார்க்க; see *teṟṟā.* clearing nut tree. *"காழிருள் வீடும்" (பெருங். உஞ்சைக். 41. 33).* 14. ஒன்றைக் குறிக்குங் குழூஉக்குறி (தைலவ.); a cant term signifying one. *'வீடு அசையாமல் தின்னும்; யானை அசைந்து தின்னும்' (பழ.). 'வீடு கட்டுவது அரிது; வீடு அழிக்கிறது எளிது' (பழ.). 'வீடு கட்டும் முன்னம் கிணறு வெட்ட வேண்டும்' (பழ.). 'வீடு போபோ என்கிறது; காடு வாவா என்கிறது' (பழ.). 'வீடு வெறுவீடு வேலூர் அதிகாரம்' (பழ.). 'வீடு வெறுவீடாய் இருந்தாலும் மணியம் ஏழுஊர்' (பழ.). 'வீட்டில் அழகு வேம்பு அடியாகும்' (பழ.). 'வீட்டுக் கருமம் நாட்டுக்கு உரையேல்' (பழ.). 'வீட்டுக்கு அழகு விளக்கு' (பழ.). 'வீட்டுச் செல்வம் மாடு; தோட்டச் செல்வம் முருங்கை' (பழ.). 'வீட்டுச் சோற்றைத் தின்று வீண் சண்டைக்குப் போவானேன்' (பழ.). 'வீட்டு வேலை பாராதவன் நாட்டு வேலை பார்ப்பானா?' (பழ.). 'வீட்டுக்கு வீடு எதிர்வீடு ஆகாது' (பழ.). 'வீட்டைக் கட்டிக் குரங்கைக் குடிவைத்தது போல' (பழ.). 'வீட்டைக் கட்டிப்பார்; கலியாணம் செய்துபார்' (பழ.).*

மக்கள் குடியிருக்கும் மனைக்குத் தமிழில் வீடு என்று பெயர். பேரின்ப உலகிற்கும் வீடு என்றே பெயர். இவ்விரு பெயரும் ஒரு சொல்லே.

மாந்தன் பகலெல்லாம் உழைத்துக் களைத்து உணவு அல்லது பொருள்தேடி, மாலைக் காலத்தில் மனையாகிய வீட்டையடைந்து இளைப்பாறி இன்புற்றிருக்கிறான்.

எழுவகையான எல்லையற்ற பிறவிகளில் உழன்று அறத்தை ஈட்டிய ஆன்மா அல்லது அப்பிறவிகளில் அலைந்து திரிந்து வீட்டுநெறிச் செலவை முடித்த ஆன்மா, அடையும் பேரின்ப உலகும் வீடுபோலுதலின் வீடெனப் பட்டதென்க.

**வீட்டின் வகை**

1. வீடு = நிலையான உறைவிடம், 2. மனை = வீட்டு நிலம் (ஆட்சிப் பொருள்), 3. இல், இல்லம் = வளமான வீடு, 4. அகம் = உள்வீடு, 5. உறையுள் = தங்குமிடம், 6. குடிசை = தாழ்ந்த சிறு கூரை வீடு, 7. குடில் = இலையால் வேய்ந்த சிறுகுடிசை, 8. குடிலம் = பெருங்குடில் (பர்ண சாலை), 9. குடிகை = சிறுகோயில், 10. குச்சு வீடு = சிறுகூரை வீடு, 11. மச்சு வீடு = மெத்தை வீடு, 12. கூடு = நெற்கூடுபோல் வட்டமான சிறுவீடு,13. கொட்டகை = சுவர் அல்லது நெடுஞ்சுவர் இல்லாத நீண்ட கூரைவீடு, 14. கொட்டில் = தொழுவம் அல்லது ஆயுதச் சாலை, 15. சாலை = பெருங்கூடம், 16. வளைவு = ஒருவருக்குச் சொந்தமான பலவீடுகள் சேர்ந்த விடம், 17. வளைசல் = வீடு முதலியவற்றின் சுற்றுப்புறம் அல்லது சூழ்நிலம், 18. வளாகம் = திருமடம், 19. மாளிகை = மாண்பான குடும்பம்; பெருவீடு, 20. மாடம் = மேனிலை, 21. மாடி = மேனிலை வீடு, 22. குடி = ஒரு குடும்பம் அல்லது குலம் வகிக்கும் தெரு அல்லது வீட்டுத் தொகுதி, 23. அரண்மனை : அரண் அல்லது பாதுகாப்புள்ள அரசன் மனை, 24. பள்ளி = படுக்கும் வீடு, 25. மடம் = துறவிகள் தங்கும் பெருங்கூடம் அல்லது மண்டபம். —பாவாணர், (சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள் பக்.49).

**Ka.** *biḍ-āgu*, **Te.** *viti.*

நாகரிகமற்ற பழங்காலத்தில் மக்கள் மண்ணாலும் கற்பாறைகளாலும் சுவர்கள் எழுப்பி, இலைகளாலும் கிளைகளாலும் கூரை வேய்ந்து, அதற்குள் வசித்துவந்தார்கள். கிடைத்த பொருள் எதுவானாலும் அதைக் கொண்டு வீடு என்று பெயர் கொண்ட ஓர் உறைவிடம் அமைத்துக் கொண்டார்கள். நாகரிகம் வளரவளர மண்ணைச் சுட்டுச் செங்கற்கள் செய்து, அதனால் வீடு கட்டத் தொடங்கினர். நல்ல களிமண் அகப்படாத இடங்களிலும், கற்பாறை மிகுந்த இடங்களிலும், பாறாங்கற்களைத் தகுந்த அளவுக்கு உடைத்து அதையே வீடு கட்டுவதற்கு இன்றும் பயன்படுத்துகிறார்கள். இக்காலத்தில் சுதைமாவையும் கருங்கல் சல்லியையும் மணலையும் சேர்த்துச் செய்த சுதைமாக் கலவை எனப்படும் பொருள் மிகவும் பயன்பட்டு வருகிறது இத்துடன் எஃகுக் கம்பிகளையும் சேர்த்து வலுவூட்டிய சுதைமாக் கலவை என்பதும் பயன்பட்டு வருகிறது.

**வீடு²–தல்** *vīḍu-*, 5 செ.கு.வி.(v.i.) 1. கெடுதல்; to perish, to be destroyed. *"வினை..... வீடுமே" (தேவா. 360, 8).* 2. சாதல்; to die. *"வீடுமளவும் விடுகின்றிலேனே" (திருமந். 1654).* 3. ஒழிதல்; to cease, end. *"தளர் நடை வருத்தம் வீட" (பெரும்பாண். 250).*

*[வீழ் → வீடு]*

**வீடு³–தல்** *vīḍu*, 5 செ.குன்றாவி.(v.t.) விடுதல் (வின்.); to let off, leave off.

*[விடு → வீடு]*

**வீடுகட்டுதல்** *vīḍu-kaṭṭudal*, 1. இல்லம் எழுப்புதல்; to construct a house. 2. சிலம்ப விளையாட்டில் சிலம்பத்தைச் சுற்றியபடி சுற்றி வருதல்; brandish a staff.

**வீடுகொள்(ளு)¹–தல்** *vīḍu-koḷ-*, 13 செ. குன்றாவி.(v.t.) மீண்டும் பெறுதல்; to recover, get back. *"ஆருயிரைக் கூற்றம் விழுங்கிய பின் வீடுகொண்டற்றால்" (பு.வெ. 2. 1).*

*[வீடு + கொள்(ளு)–,]*

**வீடுகொள்(ளு)–தல்** *vīḍu-koḷ-*, 13 செ.கு.வி. (v.i.) வரி முதலியன நீங்கப் பெறுதல்; to be exempted from, as from payment of tax. *"பழஞ் செய்க்கடன் வீடு கொண்டது" (புறநா. 35).*

*[வீடு + கொள்–ளுதல்]*

**வீடுசெய்–தல்** *vīḍu-šey-*, 1 செ.குன்றாவி. (v.t.) 1. துறத்தல்; to renounce, relinguish. *"வீடுமின் முற்றவும் வீடுசெய்து" (திவ். திருவாய். 1,2,1).* 2. விடுதலை செய்தல்; to release. 3. வரி முதலியன விட்டுக் கொடுத்தல்; to remit, as taxes. *"கறை வீடு செய்ம்மென" (சிலப். 28, 204).* 4. காணிக்கை செய்தல்; to surrender, as to God. *"உம்முயிர் வீடுடையானிடை வீடுசெய்ம்மினே" (திவ். திருவாய். 1. 2. 1).*

*[வீடு + செய்–,]*

**வீடுசேர்–தல்** *vīḍu-šēr-*, 3 செ.கு.வி. (v.i.) அழிதல்; to be destroyed or ruined. *"வீடுசேரநீர் வேலைகான் மடுத்து" (கம்பரா. நாட்டுப். 61).*

*[வீடு + சேர்–,]*

**வீடுண்ணசாலி** *vīḍuṇṇa-šāli*, பெ.(n.) தோலிற் காணப்படும் மச்சம்; mole.

மறுவ. மரு.

**வீடுதூங்கி** *vīḍu-tūṅgi*, பெ.(n.) பிறனை யடுத்து மதிப்பிழந்து வாழ்வோன் (யாழ்.அக.) (வின்.); hangeron, sponger; parasite.

*[வீடு + தூங்கி]*

**வீடுநர்** *vīḍunar,* பெ.(n.) இறப்பவர்; those who die, mortals. *"விண்ணவரும் வீடுநரே"* *(விநாயகபு. 22. 15).*

*[வீழ்த்து → வீட்டு → வீடு → வீடுநர்]*

**வீடுநுழை-தல்** *vīḍu-nūḻai-,* 2 செ.கு.வி. (v.i.) தீயவெண்ணத்துடன் பிறன் வீட்டினுட் புகுதல்; to tresspass; to enter into a house with an evil intent.

*[வீடு + நுழை-,]*

**வீடுபார்-த்தல்** *vīḍu-pār-,* 4. செ.குன்றாவி. (v.t.) மணவினை முடிந்த சின்னாட் சென்ற பின் மணமகள் பெற்றோர் மணமகன் வீடு சென்று தம் மகள் மனையறம் நடத்தும் திறத்தை பார்த்தல் (த.தி.பக். 21); parent's to be examined their bride's newly married life at her home.

**வீடுபெயர்[1]-தல்** *vīḍu-peyar-,* 2 செ.கு.வி. (v.i.) இருப்பிடம் விட்டு வேறிடஞ் செல்லுதல் (வின்.); to change one's residence or abode or habitat; to migrate. *'வீடு பெயர்ந் தாயிற்றா?'* *(உ.வ.).*

*[வீடு + பெயர்-,]*

**வீடுபெயர்[2]-த்தல்** *vīḍu-peyar-,* 3 செ.கு.வி. (v.i.) வீடுபெயர்[1] (வின்.) பார்க்க; see *vīḍu-peyar.*

*[வீடு + பெயர்]*

**வீடுபேறு** *vīḍu-pēṟu,* பெ.(n.) முத்திநிலை; final emancipation, salvation, altainment, bliss divine. *"விண் பொருந்து தேவர்க்கும் வீடுபேறாய் நின்றானை"* *(தேவா. 268. 5).*

இல்லறத்தாலும் வீடுபெறலாமென்பது தமிழர் மதமும் திருவள்ளுவர் கொள்கையுமாகும்.

"வீழ்நாள் படாஅமை நன்றாற்றி னஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல்" (குறள், 38)

"அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றின் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ தெவன்" (குறள், 46)

"இயல்பினா னில்வாழ்க்கை வாழ்பவ னென்பான்
முயல்வாரு ளெல்லாந் தலை" (குறள், 47)

"ஆற்றி னொழுக்கி யறனிழுக்கா வில்வாழ்க்கை
நோற்பாரின் நோன்மை யுடைத்து" (குறள், 48).

என்னுங் குறள்களை நோக்குக.

துறவறமும் ஒருகுலத்தார்க்கு மட்டும் உரியதன்றி எல்லார்க்கும் பொதுவாம். அவாவும் செருக்கும் அடியோடு ஒழிந்தாலொழிய ஒருவன் வீட்டையடைய முடியாது.

பேய்போல் திரிந்து பிணம்போற் கிடந்திட்ட பிச்சை யெல்லாம்
நாய்போ லருந்தி நரிபோ லுழன்றுநன் மங்கையரைத்
தாய்போற் கருதித் தமபோலெவர்க்கும் தாழ்ச்சிசொல்லிச்
சேய்போ லிருப்பர்கண் டீருண்மை ஞானந் தெரிந்தவரே. (பட்டினத். பாடல்)

மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற. (குறள், 34)

மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகை. (குறள், 345)

நீற்றைப் புனைந்தென்ன நீராடப் போயென்ன நீமனமே
மாற்றிப் பிறக்க வகையறிந் தாயில்லை மாமறைநூல்
ஏற்றித் தொழூஉம் எழுகோடி மந்திரம் என்ன கண்டாய்
ஆற்றைக் கடக்கத் துறைதெரி யாமல் அலைகின்றையே (பட்டினத். பாடல்).

இச்செய்யுட்களால், சிறுபிள்ளைபோல் மறுபடியும் பிறந்து செருக்கடங்கி ஆசை வேரறுத்தவரன்றி, செல்வத் தொடர்புள்ளவரும், ஆரவாரமாக ஆடையணிபவரும் தம்மைப் பிறப்பால் சிறந்தவராகக் கருதுபவரும் மனமாறாது ஆரிய மந்திரங்களை யோதுபவரும், வடமொழியைத் தேவ மொழி யென்றும் தென்மொழியைக் கீழோர் மொழி (நீசபாஷை) யென்று கூறுபவரும் திருக்குறளை ஓதக் கூடாதென்பவரும் வீட்டுலகையடைவது ஒட்டகம்

ஊசியின் காதில் நுழைவதினும் அரிதாயிருக்கு மென்று அறிந்து கொள்க. இனி, விருந் தோம்பாமையால் இல்லற வகையாலும் செருக்கடங் காமையால் துறவற வகையாலும், ஆரியர் வீடடைவதும் இயலாதென அறிந்து கொள்க.
- (தேவநேயம் பக்.136-137)

*[வீடு + பேறு]*

**வீடும்விளக்குமாய்வை-த்தல்** *vīḍum-viḷakkum-āy-vai-,* 4 செ.குன்றாவி.(v.t.) ஒருவனை வாழவைத்தல்; to start or settle one in life, to make one prosper in life. *'அவரை வீடும் விளக்குமாய் வாழவைத்தவர் இவர்தான்' (உ.வ).*

*[வீடும் + விளக்குமாய் + வை-,]*

**வீடுமாற்று-தல்** *vīḍu-māṟṟu-,* 5 செ.கு.வி. (v.i.) ஒரு வீட்டை விட்டு மற்றொரு வீட்டிற்குக் குடிபோதல்; to migrate or shift from one house to another.

*[வீடு + மாற்று-,]*

**வீடுமாறு-தல்** *vīḍu-māṟu-,* 5 செ.கு.வி. (v.i.) வீடுமாற்று-, பார்க்க; see *vīḍu-māṟṟu.*

*[வீடு + மாறு-,]*

**வீடுமூலி** *vīḍu-mūli,* பெ.(n.) முப்பு; the three mystic salts.

**வீடுவாசல்** *vīḍu-vāšal,* பெ.(n.) வீடும் அதைச் சார்ந்த பொருளும்; house and its appurtenances. *'அவன் வீடு வாச லில்லாதவன்'.*

*[வீடு + வாசல்]*

**வீடுவி-த்தல்** *vīḍuvi-,* 9 செ.குன்றாவி.(v.t.) அழிவு செய்தல்; to cause, to perish, to destroy to ruin. *"காலனை விடுவித்து" (தேவா. 444. 3).*

*[வீடு → வீடுவி-,]*

**வீடெடு-த்தல்** *vīḍeḍu-,* 18. செ.கு.வி.(v.i.) 1. வீடுகட்டுதல்; to build a house. *"வீடெடுக்க அஸ்திபாரஞ் செய்பவர்" (பரத. ஒழிபி. 3. உரை).* 2. அடித்தளமிடுதல்; to lay the foundation. *"நல்ல வீடெடுப்பவர்" (பரத. ஒழிபி. 3.).* 3. வாடகைக்கு வீடு எடுத்தல்; to take house for rent.

*[வீடு + எடு-,]*

**வீண்** *vīṇ,* பெ.(n.) 1. பயனின்மை (சூடா.); uselessness, unprofitableness. 2. பயனற்றது; that which is unprofitable. 3. தேவையற்றது; unneccessariness. *"வீண்பேசி மடவார்கை வெள்வளைகள் கொண்டால்" (தேவா. 677, 3).*

ம. வீண்.

*[விள் → வீள் → வீண்] (வே.க.155)*

**வீண்கத்து** *vīṇ-kattu,* பெ.(n.) பயனற்ற பேச்சு; profitless words, as empty noise.

மறுவ. பயனிற்சொல்.

*[வீண் + கத்து-,]*

**வீண்காரியம்** *vīṇ-kāriyam,* பெ.(n.) பயனற்ற செயல் (நன். 298, உரை); useless deed; unprodrative work.

மறுவ. வெட்டிவேலை.

*[வீண் + காரியம்]*

**Skt.** *Kārya* > த. காரியம்.

**வீண்காலம்** *vīṇ-kālam,* பெ.(n.) பயனின்றிப் போக்குங் காலம்; time spent in vain, time wasted to while time away.

*[வீண் + காலம்]*

வீண்குறிசொல்லுவோன் *viṇ-kuṟi-šolluvōṉ,* பெ.(n.) போலியாகக் கணியக்குறி (சோதிடக்குறி) சொல்லிப் பிழைப்போன் (சுக்கிர நீதி. 176); sham astrologer.

*[வீண் + குறிசொல்லுவோன்]*

வீண்செயல் *viṇ-šeyal,* பெ.(n.) வீண்காரியம் பார்க்க; see *viṇ-kāriyam.*

*[வீண் + செயல்]*

வீண்செலவு *viṇ-šelavu,* பெ.(n.) பயனற்ற பணச்செலவு; profitless expenditure.

*[வீண் + செலவு]*

வீண்சொல் *viṇ-šol,* பெ.(n.) பயனிற் சொல் (வின்.); idle , word, unprofitable discourse.

மறுவ. வெற்றுரை.

*[வீண் + சொல்[3]]*

வீண்சோறுதின்னி *viṇ-šōṟu-tiṉṉi,* பெ.(n.) சோற்றுக்குக் கேடாய் ஒன்றுக்கு முதவாதிருப் பவ–ன்–ள் (வின்.); useless person.

*[வீண் + சோறு [1] + தின்னி]*

வீண்டம்பம் *viṇ-tambam,* பெ.(n.) பயனற்ற ஆரவாரம்; vain show; that which is more for show than for use.

மறுவ. பகட்டு.

*[வீண் + டம்பம்]*

வீண்தெண்டம் *viṇ-teṇḍam,* பெ.(n.) 1. சிறிதும் பயனின்மை (கொ.வ.); sheer waste. 2. முறைகேடான ஒறுப்புக் கட்டணம் (அநீதமான அபராதம்) (வின்.); unjust fine.

*[வீண் + தெண்டம்]*

வீண்தேங்காய் *viṇ-tēṅgāy,* பெ.(n.) தேங்காயுருட்டியாடும் பந்தய வாட்டத்தில் எளிதில் உடையுந் தேங்காய் (யாழ்ப்.); coconut that breaks easily, as in a game.

*[வீண் + தேங்காய்]*

வீண்நியாயம் *viṇ-niyāyam,* பெ.(n.) 1. சாக்கு (இ.வ.); pretext, excuse. 2. பயனற்ற உரையாட்டு; profitless argument.

*[வீண் + நியாயம்]*

**Skt.** *Niyāya* > த. நியாயம்.

வீண்பத்தி *viṇ-patti,* பெ.(n.) மூடநம்பிக்கை (வின்.); superstition.

*[வீண் + பத்தி]*

வீண்பாக்கு *viṇ-pākku,* பெ.(n.) உணவு கொள்ளாத வேளைகளில் தின்னும் பாக்கு (வின்.); betel-nut chewed at other times than after meal, dist. fr. *ūṉ-pākku.*

*[வீண் + பாக்கு [1]]*

வீண்பாடு *viṇ-pāḍu,* பெ.(n.) 1. பயனற்ற வேலை; profitless task, non-profitable interprise. 2. பயனற்ற முயற்சி; profitless or wasteful effort.

*[வீண் + பாடு]*

வீண்பிரதிட்டை *viṇ-piratiṭṭai,* பெ.(n.) தற்பெருமை (வின்.); vanity; self-boashing.

*[வீண் + **Skt.** பிரதிஷ்டை > த. பிரதிட்டை]*

வீண்பொழுதுபோக்கு-தல் *viṇ-poḻudu-pōkku-,* 5 செ.கு.வி.(v.i.) காலத்தை வீணே கழித்தல் (வின்.); to while one's time away.

*[வீண் + பொழுதுபோக்குதல்]*

**வீண்போக்கு** *vīṇ-pōkku,* பெ.(n.) பொருத்த மற்ற சாக்குவார்த்தை; vain, lame excuse.

*[வீண் + போக்கு]*

**வீண்போக்குப்போக்கு[1]-தல்** *vīṇ-pōkku-p-pōkku-,* 5 செ.குன்றாவி.(v.t.) விடுதல் (வின்.); to let off, leave off.

*[விடு → வீடு]*

**வீண்போக்குப்போக்கு[2]-தல்** *vīṇ-pōkku-p-pōkku-,* 5 செ.கு.வி.(v.i.) வீண்பொழுது போக்குதல் (இ.வ.); to waste or while away the time, to be idle.

*[வீண் + போக்கு + போக்குதல்]*

**வீண்வம்பு** *vīṇ-vambu,* பெ.(n.) 1. முறை கேடான பேச்சு அல்லது செயல் (இ.வ.); mischievous talk or deed. 2. பயனற்ற வம்பளப்பு; idle gossip. 3. தேவையில்லாத தலையீடு; வலுச்சண்டை; unnecessary interference. *'வீண் வம்புக்குப் போகாதே'.*

*[வீண் + வம்பு]*

**வீண்வார்த்தை** *vīṇ-vārttai,* பெ.(n.) வீண் சொல் (கொ.வ.) பார்க்க; see *vīṇ-šol.*

*[வீண் + **Skt.** வார்த்தை]*

**வீண்விதி** *vīṇ-vidi,* பெ.(n.) இழக்கச் செய்யும் விதி; illfate; misfortune; evil destiny.

மறுவ. போகூழ்.

*[வீண் + **Skt.** விதி]*

**வீண்வீம்பு** *vīṇ-vīmbu,* பெ.(n.) தேவையற்ற விடாப்பிடி; unjustifiable obstinacy; stubborn unyielding.

*[வீண் + வீண்பு → வீம்பு]*

மறுவ. முரண்டு.

**வீணணி** *vīṇaṇi,* பெ.(n.) இழிவான அணிகலன் (பாண்டி.); trinket.

*[வீண் + அணி]*

**வீணத்தனம்** *vīṇa-t-taṉam,* பெ.(n.) ஒழுங்கின்மை (நாஞ்.நா.); wickedness.

*[வீணன் + தனம்[1]]*

**வீணன்** *vīṇaṉ,* பெ.(n.) 1. பயனற்றவன்; useless fellow. *"வீணர்க்குள் வீணன்" (அரிச். பு. 4. சூழ்வினை. 19).* 2. சோம்பேறி (வின்.); idle or lazy fellow. 3. ஒழுக்கக் கேடனாவன் (இ.வ.); one given to wicked ways. *'வீணருக்குச் செய்ததெலாம் வீண்' (பழ.). 'வீணுக்கு உழைக்கிறவன் வீணன்' (பழ.). 'வீண் இழவுக்கு மாரடிக்கிறதா?' (பழ.).*

மறுவ. மக்கட் பதடி.

*[வீண் → வீணன்] (வே.க.பக்.156)*

**வீணாகரணம்** *vīṇā-karaṇam,* பெ.(n.) யாழ் இசைத்தல் (யாழ்.அக.); playing on the lute.

*[வீணை + கரணம்]*

**Skt.** *Karaṇa* > த. கரணம்.

**வீணாகானம்** *vīṇā-kāṉam,* பெ.(n.) யாழிசை; music played on the lute.

*[வீணை + கானம்]*

**Skt.** *Ghānam* > த. கானம்

**வீணாட்டம்** *vīṇāṭṭam,* பெ.(n.) வீண்பாடு (யாழ்.அக.) பார்க்க; see *vīṇ-pāḍu.*

*[வீண் + ஆட்டம்]*

**வீணாடிவீணன்** *vīṇāḍivīṇaṉ,* பெ.(n.) வீணாதிவீணன் (நாஞ்.நா) பார்க்க; see *vīṇādi-vīṇaṉ.*

*[வீணாடி + வீணன்]*

**வீணாத்தண்டு** *vīṇā-t-taṇḍu,* பெ.(n.) வீணாதண்டம் பார்க்க; see *vīṇā-taṇḍam.* *"வீணாத் தண்டூடே வெளியுறத் தாநோக்கி" (திருமந். 588).*

*[வீணை → வீணா + தண்டு]*

**வீணாதண்டம்** *vīṇā-taṇḍam,* பெ.(n.) 1. வீணைக்காம்பு; neck of a lute. 2. முதுகெலும்பு; spine, as like the neck of the lute.

*[வீணை → வீணா + தண்டு → தண்டம்]*

**வீணாதண்டம்** *vīṇā-taṇḍam,* பெ.(n.) 1. முள்ளெலும்பு; vertebrae. 2. முதுகந் தண்டு; vertebral column.

மறுவ: வீணாதண்டு.

*[வீணை → வீணா + தண்டம்]*

**வீணாதண்டு** *vīṇā-taṇḍu,* பெ.(n.) வீணாதண்டம், 1 (இலக்.அக.) பார்க்க; see *vīṇā-taṇḍam.*

*[வீணை + தண்டு]*

**வீணாதிவீணன்** *vīṇādi-vīṇaṉ,* பெ.(n.) 1. முற்றும் பயனற்றவன்; entirely worthless person. 2. கயவன் (இ.வ.); rogue. 3. உரிமையில்லா திருக்கையிலும் தனக்கு உரிமையுண்டென்று வழக்காடுபவன் (தஞ்சை.); person who persists in making unjust claims.

*[வீணன் + அதி + வீணன். அதி = மிகுதிப்பொருள் தரும் முன்னொட்டு]*

**வீணாரவீணன்** *vīṇāravīṇaṉ,* பெ.(n.) வீணாதிவீணன் பார்க்க; see *vīṇādi-vīṇaṉ.* *"வீணரவீணனைப் போனீதி செய்வர்" (தண்டலை. சத. 55).*

**வீணாவாதன்** *vīṇā-vādaṉ,* பெ.(n.) வீணை இசைப்போன் (யாழ்.அக.); one who plays on the *vīṇai.*

**வீணானுபந்தம்** *vīṇāṉu-bandam,* பெ.(n.) வீணைக்குடம்; the pot of the *vīṇai.*

*[வீண் + Skt. aṉubandha > த. அனுபந்தம்]*

**வீணி** *vīṇi,* பெ.(n.) மலைக்குறட்டை; spindle tree.

**வீணிழவு** *vīṇiḻavu,* பெ.(n.) பயனற்றது; that which is profitless, as labour. *'வீணிழவுக்கு மாரடிக்கிறேன்'.*

*[வீண் + இழவு]*

**வீணை[1]** *vīṇai,* பெ.(n.) யாழ்வகை; a kind of indian lute. *"எம்மிறை நல்வீணை வாசிக்குமே" (தேவா. 1199. 7). "மாசில் வீணையும் மாலை மதியமும்" (தேவா.)*

விண் = வில்நரம்பு தெறித்தற் குறிப்பு.
விண்விண் = 1. யாழ் நரம்பு இசைத்தற் குறிப்பு.
2. புண்ணினால் நரம்பு நோவெடுத்தற் குறிப்பு.

*[விண் → வீணை]*

*"நாரதன் வீணை நயந்தெரி பாடலும்" (சிலப். 6:18)*
*"மங்கலம் இழப்பவீணை" (சிலப்.6:22)*
*"மாசில் வீணையும் மாலை மதியமும்" (அப்பர்)*

ஆரியர் வருமுன்பே தலைக்கழகத் தமிழ் முத்தமிழாய் வழங்கி வந்ததினாலும் நாரதர் தமிழ்நாடு வந்தே 'இசைத்தமிழ் கற்றுப்

பஞ்சபாரதீயம்' என்னும் இசைத்தமிழ் நூலியற்றியதாலும் கி.பி.2 ஆம் நூற்றாண்டுச் சிலப்பதிகாரம் வீணையைக் குறித்தலாலும் 7ஆம் நூற்றாண்டில் அப்பர் "மாசில் வீணை" (குற்றமற்ற யாழ்) என்று பாடியிருத்தலாலும், வீணை 11 ஆம் நூற்றாண்டில் வடக்கினின்று வந்த ஆரிய இசைக்கருவி என்பார் கூற்று, தமிழ் வெறுப்பால் எழுந்தது என்க.

வீணை தமிழர் இசைக்கருவியே என்பதைப் 'பாணர் கைவழி' என்னும் நூலுட் கண்டு தெளிக.

வடவர் வேண் என்றொரு சொல்லைப் படைத்து இசைக்கருவியியக்குதல் என்று பொருள் கூறி, வேணு (மூங்கில்) என்னும் சொல்லோடு தொடர்பு காட்ட விரும்புவர். வேணு என்பது 'வேய்' என்னும் தென்சொல்லின் திரிபாகத் தெரிகின்றது.

மேலும் அதன் பொருந்தாமையையும் 'விண்' என்பதன் முழுப் பொருத்தத்தையும் பகுத்தறிவுள்ளார் கண்டறிக.

மா.வி.அகராதி. "of doubtful derivation" என்று குறித்திருத்தலையும் மூலங்காட்டாமையையும், வேண் என்னும் சொல்லைப் பற்றி "prob. artificial" என்று கருதுதலையும் நோக்குக.

(வ.மொ.வ.பக்.93-94)

*"நாரதர் வீணை நயந்தெரி பாடலும்*

. . . . . . . . . . . . . . . . . . . . . . . .

*மங்கல மிழப்ப வீணை மண்மிசைத்*
*தங்குக இவளென" (சிலப்.ம-18-23)*

என்பதாலும், நாரதனின் தமிழகத் தொடர்பும் இசைப் புலமையும் அறியப்படும். வீணை என்பது தமிழர் நரப்புக் கருவி; நரம்பு விண்ணெனன இசைப்பது வீணை. நோயினால் நரம்பு வலிக்கும்போது நரம்பு விண்விண் எனத் தெறிக்கின்றது என்று கூறும் உலக வழக்கை நோக்குக.

*[விண் → வீண் → வீணை]*

வ. வீணா. மூங்கிலைக் குறிக்கும் வேணு என்னும் வடசொல்லினின்று, வீணை அல்லது வீணா என்னும் சொல்லைத் திரிப்பது பொருந்தாது.

வேதக்காலத்தில் ஆரியருக்கு நரப்புக் கருவியுமில்லை; இசைப்புலமையும் இல்லை. ஒரு நரம்பில் ஒரேயிசை (சுரம்) இசைப்பது யாழ் என்றும், ஒரு நரம்பில் மெலிவு சமன் வலிவு என்னும் முந்நிலைகளுள் ஒன்றும் பலவும் இசைப்பது வீணை என்றும் வேறுபாடறிக.

செங்கோட்டி யாழும், சகோட யாழும் வீணை வகைகளே. இவற்றுள் முன்னது மெட்டுள்ளது; பின்னது கோட்டியம் (கோட்டு வாத்தியம்) போல் மெட்டில்லது. – (பாவாணர் – தமிழர் வரலாறு – கலவுநிலைக் காண்டம் பக்.158).

இந்திய இசைக்கே ஓர் அணிகலனாக விளங்கும் இசைக்கருவி வீணையாகும். கலைமகளின் கையில் வீணையிருப்பது அக்கருவியின் பெருமையை நன்கு புலப்படுத்துகிறது. 'வீணை, வேணு, மதங்கம் (மிருதங்கம்) என்று தொன்றுதொட்டுச் சிறப்பாகப் போற்றப்பட்டு வரும் மூன்று கருவிகளில் வீணை முதல் இடம் பெற்றுள்ளது. பண்களின் (இராகங்களில்) வடிவங்களைப் புலப்படுத்தும் நுட்பச் சுருதிகளையும், கமகங்களையும், இந்த கருவியில் தெளிவாக இசைத்துக் காட்டலாம். இசைத் தத்துவங்களையும், இசை நுணுக்கங்களையும் விளக்கிக் காட்டுவதற்கு இது மிக நன்கு பயன்படும்.

இக்காலத்தில் வீணையென்பது, மெட்டுக்களுடன் கூடிய, மீட்டி இசைக்கப்படும் கம்பிக் கருவியையே குறிக்கும். ஆனால் பண்டைக் காலத்தில் வீணையென்னும் சொல்லைப் பொதுவாக எல்லாக் கம்பிக் கருவிகளுக்கும் பயன்படுத்தினர். 'சத தந்திரி வீணை' என்பது நூறு கம்பிகளுடன் கூடின கருவியைக் குறித்தது. இந்தச் சததந்திரி வீணையே பாரசீகத்தில் சந்தூர் என்றும், மையரில் சால்தரி என்றும் வழங்கி வந்தது. மெட்டுகளுடன் கூடிய வீணை ஏறத்தாழ ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு ஏற்பட்டதாகக் கூறலாம். மைசூரிலுள்ள பேலூர், ஹளேபீடு கோயில்களிலுள்ள சிற்பங்களில் மெட்டுக்களுடைய வீணையை முதன் முதலில் காண்கிறோம். பட்டீசுவரர் கோயிலிலும் மெட்டுப் போட்ட வீணையின் சிற்பத்தைக் காணலாம். யாழ்க் கருவியில் ஒவ்வொரு கம்பியையும் ஒவ்வொரு சுரத்திற்குச் சுருதி கூட்டித் தேவையான பண்ணை வாசித்தார்கள். ஆனால் பண்டைக் காலத்து வீணையில் 2 அல்லது 4 கம்பிகளே பயன்பட்டன. தேவையான சுரங்களை ஒரு கம்பியின் அந்தந்த இடங்களில் விரலால் கம்பியை அழுத்தி

இசைத்தனர். இக்காலத்திய வீணை 17 ஆம் நூற்றாண்டில், தஞ்சாவூரில் அரசுபுரிந்த இரகுநாத மன்னரின் காலத்தில் உருவாக்கப்பட்டது. இக்காரணம் பற்றியே இதைத் தஞ்சாவூர் வீணையென்றும், இரகுநாத வீணையென்றும் அழைப்பதுண்டு.

### வீணையின் அமைப்பு

வீணை, நரம்புக் கருவிகளில் மீட்டுக் கருவிகள் என்னும் வகுப்பைச் சேர்ந்தது. அதில் 31/2 மேலிசை இசைக்கலாம். மாழையினால் செய்யப்படும் கம்பிகளே அதில் பயன்படும். இசைப்பதற்காக 4 கம்பிகள் தண்டியின் மேலும், தாளத்திற்கும் சுருதிக்கும் 3 கம்பிகள் பக்கவாட்டிலும் இருக்கும். இசைப்பதற்காக உள்ள 4 கம்பிகள், குடத்தின் மேல்பாகத்திலுள்ள லங்கர் வளையங்களில் பிணைக்கப்பட்டுக் குதிரையின் மேலும் மெட்டுக்களின் மேலும் சென்று, தலைப் பாகத்திலுள்ள பிரடைகளில் முடுக்கப்பட்டிருக்கும், தாளக் கம்பிகள், லங்கரிலுள்ள வளையங்களில் பிணைக்கப்பட்டுப் பக்கக் குதிரை அல்லது பக்க வளைவின் மேல் சென்று, தண்டியின் பக்கத்திலுள்ள மூன்று பிரடைகளில் முடுக்கப்பட்டிருக்கும். லங்கர்கள் நாகபாசத்தில் சுற்றப்பட்டிருக்கும்.

### வீணையின் பாகங்கள் :

குடம், குடத்தின் மேல் பலகை, தண்டி, தண்டியின் மேல்பலகை, தண்டியின் மேல் இருபக்கங்களிலுள்ள காடிச்சக்கை, காடிச் சக்கையின் மேல் பொருத்தப்பட்டிருக்கும் மெழுகுச் சட்டம், மெழுகுச் சட்டத்தின் மேல் பொருத்தப்பட்டுள்ள 24 வெண்கல மெட்டுக்கள், சுரைக்காய், 7 பிரடைகள், கழுத்துப் பாகம், யாளிமுகம், இரண்டு குதிரைகள், 7 தந்திகள் பிணைக்கப்பட்டிருக்கும் 7 லங்கர்கள். அந்த லாங்கர்களின் மேல் நுட்பச் சுருதி செய்வதற்கு ஏந்தாகவுள்ள வளையங்கள், 7 தந்திகள் (5 எஃகுத் தந்திகளும், 2 பித்தளைத் தந்திகளும்), நாகபாசம் ஆகியவை. தண்டியானது குடப்பக்கத்தில் சற்றுப் பருத்தும், கழுத்துப் பக்கத்தில் சற்றுச் சிறுத்துமிருக்கும். யாளிமுகம் கீழ்நோக்கி யிருக்கும். மெட்டுக்கள் வெண்கலம், வெள்ளி, பித்தளை, எஃகு என்னும் மாழைகளில் (உலோகங்களில்) செய்யப்படும். வீணையின் இடப்பக்கத்திலுள்ள சுரைக்காய் தாங்கியாகவும், ஒலி பெருக்கியாகவும் பயன்படும்.

### வீணை செய்யப்படும் முறை

வீணை பலா மரத்தினால் செய்யப்படும். மைசூரில் கறுப்பு மரத்தினாலும் வீணையைச் செய்கிறார்கள். ஒரே மரத்துண்டினின்றும், குடமும் தண்டியும் குடையப் பட்டிருப்பின், அதை ஏகாண்ட வீணை யென்பர். வழக்கமாகக் குடம் ஒரு மரத்துண்டினின்றும், தண்டி மற்றொரு துண்டினின்றும், தலைப்பாகம் வேறொரு மரத்துண்டினின்றும் செய்து பொருத்தப் பட்டிருக்கும். தந்தத்தினாலும், மான் கொம்பினாலும், தாமரைப்பூ வேலைகள் செய்து, வீணையை அணி செய்வது வழக்கம். வீணையை நிறுத்தி வைத்தும் இசைப்பதுண்டு, படுக்க வைத்தும் இசைப்பதுண்டு, வலக்கை ஆட்காட்டி விரலினாலும், நடு விரலினாலும் தந்திகளை மெட்டுக்களின்மேல் அழுத்தி, வீணையை இசைப்பார்கள். வீணையின் இசை இனிமையாக இருக்கும். மெட்டுக்களைச் சரியான இடங்களில் அமைப்பதற்கு ‘மேளம் செய்தல்’ என்று பெயர். தஞ்சாவூர் வீணையிலும் திருவனந்தபுர வீணையிலும் குடத்தின் மேல் நாபுகள் அல்லது கோடுகள் கீறப்பட்டிருக்கும். மைசூர், பொப்பிலி வீணைகளில் இம்மாதிரி நாபுகள் இல்லை.

(கலைக்.)

*[விண் → வீண் → வீணை]*



**வீணை²** *vīṇai,* பெ.(n.) மின்னல்; lightning.

**வீணைக்காணி** *vīṇai-k-kāṇi,* பெ.(n.) கோயிலில் வீணை இசைக்கும் உரிமை (I.M.P. Tj. 465) ; right of playing on the *viṇai* in a temple.

*[வீணை + காணி]*

**வீணைச்செல்வம்** *vīṇai-c-celvam,* பெ.(n.) மாதங்கி, 3 (சீவக.411, உரை) பார்க்க; see *mādaṅgi.* the Goddess of *yāḻ.*

*[வீணை + செல்வம்]*

**வீணைத்தண்டு** *vīṇai-t-taṇḍu,* பெ.(n.) வீணாதண்டம், 1 (சீவக. 717, உரை) பார்க்க; see *vīṇā-taṇḍam.*

*[வீணை + தண்டு]*

**வீணைமிருகம்** *vīṇai-mirugam,* பெ.(n.) 1. கத்தூரி பார்க்க; see *kattūri.* 2. எலும்பு பார்க்க; see *elumbu.*

*[வீணை + Skt. mirugha > த. மிருகம்]*

**வீணைமீட்டு-தல்** *vīṇai-mīṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) யாழ்நரம்பை ஒன்றியுணர்ந்து சுருதி சேர்த்தல்; to tune the *Yāḻ.*

*[வீணை + மீட்டு-. மீட்டுதல் = யாழின் நரம்பை விரலாற் சுண்டுதல்]*

**வீணையர்** *vīṇaiyar,* பெ.(n.) 1. வீணை இசைப்பதில் வல்லார்; expert players on the *viṇai.* *"இன்னிசை வீணையர் யாழின ரொருபால்" (திருவாச. 20,4).* 2. பதினெண் கணத்துள் ஒரு தொகுதியார் (திவா.); Gandharvas.

*[வீணை → வீணையர்]*

**வீணைவலிக்கட்டு** *vīṇai-vali-k-kaṭṭu,* பெ.(n.) யாழின் வார்க்கட்டு (வின்.); fret of a *viṇai* ; place where the strings of a *yāḻ* are held down by the fingers.

*[வீணை + வலி + கட்டு]*

**வீணைவாசி-த்தல்** *vīṇai-vāśi-,* 4 செ.கு.வி. (v.i.) யாழ் இசைத்தல்; to play on the *yāḻ.*

*[வீணை + வாசி-,]*

**வீத்து**[1] *vittu,* பெ.(n.) 1. அடிக்கை (வின்.); flogging. 2. நீளம் (இ.வ); length.

*[வீச்சு → வீத்து]*

**வீத்து[2]-தல்** *vittu-,* 5 செ.குன்றாவி.(v.t.) அடித்தல் (இ.வ.); to flog.

**வீத்து[3]-தல்** *vittu-,* 5 செ.குன்றாவி.(v.t.) ஊற்றுதல்; to pour. *'என் பாத்திரத்திலும் கொஞ்சம் கஞ்சி வீத்துங்கள்'.*

மறுவ. வீழ்த்து.

**வீத்துகம்** *vittugam,* பெ.(n.) 1. சதகுப்பை; dill or sowa seeds. *2. வெள்ளரி;* cucumber. (சா.அக.)

**வீத்துமம்** *vittumam,* பெ.(n.) சதகுப்பை, 1 (மலை.); dill.

**வீதசாகி** *vida-šāgi,* பெ.(n.) விலாமிச்சை வேர்; fragrant root which is brown or black in colour. (சா.அக.)

**வீதசோகம்** *vida-šōgam,* பெ.(n.) அசோகம் (இலக்.அக.); *ašoka.*

**வீதசோகன்** *vida-šōgaṉ,* பெ.(n.) அருகக் கடவுள் (சூடா.); Arhat, as free from sorrow.

**வீதபுட்பி** *vida-puṭpi,* பெ.(n.) குக்கில்; a fragrant gum-resin. (சா.அக.)

வீதம்[1] *vīdam,* பெ.(n.) 1. அளவுமுறை; rate, ratio. *'எனக்கு அவன்வீதங் கொடுத்தான்'.* 2. பங்கு; share, portion.

*[விழு → விகு → விகுதம் → வீதம்]*

வீதம்[2] *vīdam,* பெ.(n.) 1. விடுகை (சூடா.); abandonment, abolition. 2. விடப்பட்டது (இலக்.அக.); that which is forsaken or relinquished. 3. அமைதி (இலக்.அக.); peace.

*[விடு → வீடு → வீடம் → வீதம்]*

வீதம்[3] *vīdam,* பெ.(n.) தகரம்; tin. (சா.அக)

வீதல் *vīdal,* பெ.(n.) 1. சாவு (சூடா.); death. 2. வறுமை (திவா.); poverty.

*[வீ → வீதல்] (வ.மொ.வ.265).*

வீதலகம் *vīdalagam,* பெ.(n.) செங்கண் மாரி; letrus. (சா.அக.)

வீதனகோபம் *vīdaṉa-kōbam,* பெ.(n.) முன்கழுத்துக் கழலை என்னும் நோய்; goitre, bronchocele. (சா.அக.)

வீதனகோளம் *vīdaṉa-kōḷam,* பெ.(n.) உடலில் உள்ள நாளமில் சுரப்பிகளுள் ஒன்று; thyroid gland. (சா.அக.)

வீதி[1] *vīdi,* பெ.(n.) 1. தெரு (பிங்.); street. *"வாழ்த்தொலிபோய் வீதிவாய்க் கேட்டலுமே" (திருவாச. 7.1).* 2. கதிரவன் முதலிய கோள்கள் செல்லும் வழி; the sun's path, orbit of celestial bodies. 3. வழி; direction, way. *"கனிந்த கீதவீதியே... ஓடியெய்தினார்" (சீவக. 2039).* 4. முறை; means. *"தியான வீதியான்... வீட்டுல கெய்தும்" (சூளா. முத். 4).* 5. ஒழுங்கு (வின்.); row, order. 6. நாடக வகைப் பத்தனுள் காமவிச்சை மிகுந்த பரத்தையிடத்துக் கொண்ட காதலைக் குறித்து ஒருவர் அல்லது இருவர் நடிப்பதான ஓரங்க நாடகவகை(சிலப். பக். 84 கீழ்க் குறிப்பு); a species of drama in one act and with one or two actors, the theme being love for a lascivious prostitute, one of ten *rūbagam,* q.v. 7. அகலம்; width, breadth. *"வீதிவே னெடுங் கண்ணியர்" (தேவா. 168. 2). 'அந்தத் துணியின் வீதி எவ்வளவு?'* 8. நேரோட்டம் (பிங்.); running straight, as of a horse. *"வினைதகு வட்டமும் வீதியும் பத்தியும்" (சீவக. 1839).* 9. வையாளி வெளி (வின்.); place for breaking horses. 10. ஒளி (இலக்.அக.); light. 11. மேடை (யாழ்.அக.); platform.

*[வியம் → (வியதி) → வீதி]*

வீதி[2] *vīdi,* பெ.(n.) குதிரை (யாழ்.அக.); horse.

வீதிக்குத்து *vīdi-k-kuttu,* பெ.(n.) தெருக்குத்து; an inauspicious position of a house.

*[வீதி[2] + குத்து]*

வீதிகுத்து-தல் *vīdi-kuttu-,* 10. செ.கு.வி. (v.i.) ஓடியாடுதல்; to run hither and thither. *"வீதிகுத்திய குறுந்தாட்பாரிடம்" (கல்லா. 41).*

*[வீதி + குத்து-,]*

வீதிகோத்திரம் *vīdi-kōttiram,* பெ.(n.) வீதிகோத்திரன், 1 (இலக்.அக.) பார்க்க; see *vīdi-kōttiraṉ.*

*[வீதி + **Skt.** kothra > த. கோத்திரம்]*

வீதிகோத்திரன் *vīdi-kōttiraṉ,* பெ.(n.) 1. தீக் கடவுள்; the God of fire. 2. கதிரவன்; sun.

*[வீதி + **Skt.** kōthra > த. கோத்திரன்]*

**வீதிப்பாய்ச்சல்** *vīdi-p-pāyccal,* பெ.(n.) தெருக்குத்து; an inauspicious position of a house.

*[வீதி¹ + பாய்ச்சல்]*

**வீதிப்போக்கு** *vīdi-p-pōkku,* பெ.(n.) இசையின் நேர்செலவு; even movement of music in the same pitch. *"அசையொடு வீதிப்போக்கு முருகியல்" (திருவிளை. விறகு. 28).*

*[வீதி + போக்கு]*

**வீதிமறிச்சான்** *vīdi-maṟiccāṉ,* பெ.(n.) குறித்த இடங்களில் கீழ்மக்கள் வராதபடி தடுக்க இடப்படும் தட்டி முதலியன (நாஞ். நா.); tatti, etc. put up in specified localities to shut out low-caste people, as in festivals.

*[வீதி + மறி → மறிச்சான்]*

**வீதியிலேவிடு-தல்** *vīdiyilē-viḍu-,* 20 செ. குன்றாவி.(v.t.) குழந்தை முதலியவற்றை பற்றுக்கோடின்றி விட்டு விடுதல்; to leave adrift, to leave uncared for , as children.

*[வீதி → வீதியிலே + விடு-,]*

**வீதிவர்ணச்சேலை** *vīdi-varṇa-c-cēlai,* பெ.(n.) ஒருவகைப் புடைவை; a kind of saree. *"வீதிவர்ணச் சேலை யொன்று விந்தையாம்" (விறலிவிடு. 714).*

*[வீதி **Skt.** varṇa > த. வண்ணம் + சேலை]*

**வீதிவர்ணம்** *vīdi-varṇam,* பெ.(n.) *வீதிவர்ணச்சேலை* பார்க்க; see *vīdivarṇa-c-cēlai.*

*[வீதி + **Skt.** varṇa > த. வர்ணம்]*

**வீதிவிடங்கன்¹** *vīdi-viḍaṅgaṉ,* பெ.(n.) திருவாரூரில் கோயில் கொண்டு திருவிழாக் காலத்தில் உலாப்புறம் காணும் கடவுளாகிய சிவபெருமான்: the moveable image of siva, worshipped at *Tiru-v-ārūr.*

*[வீதி + விடங்கன்]*

**வீதிவிடங்கன்²** *vīdi-viḍaṅgaṉ,* பெ.(n.) நான்கு திங்களில் விளையும் நெல்வகை; a kind of paddy, maturing in four months. *"வீதிவிடங்க னென்ற மெய்ப்பேரும்" (நெல்விடு. 191).*

*[வீதி + விடங்கன்]*

**வீதிவிலாசம்** *vīdi-vilāśam,* பெ.(n.) தெருவில் உலா வருகை (வின்.); taking a walk along the streets.

*[வீதி + **Skt.** vilāśa > த. விலாசம்]*

**வீப்பகழி** *vī-p-pagaḻi,* பெ.(n.) காமனது மலரம்பு (உரி.நி); the flower-arrow of *kāmaṉ.*

*[வீ + பகழி]*

**வீபணி** *vīpaṇi,* பெ.(n.) 1. கடைவீதி (சது.); bazaar-street. 2. விபணி பார்க்க; see *vipaṇi,* shop.

**வீபத்து** *vīpattu,* பெ.(n.) திங்கள் (சது.); moon.

*[வீ + பத்து]*

**வீம்பன்** *vīmbaṉ,* பெ.(n.) 1. தற்பெருமைக் காரன்; boaster, braggart. 2. செருக் குடையவன்; proud person. 3. விடாப் பிடியாளன்; pertinacious person.

*[வீம்பு → வீம்பன்] (செல்வி, 77.ஆடி. பக். 595)*

**வீம்பாட்டம்** *vimbāṭṭam,* பெ.(n.) 1. வீண் பகட்டு; ostentatious display. 2. தற் பெருமை பேசுகை; bragging.

*[வீம்பு + ஆட்டம்]*

**வீம்பு** *vimbu,* பெ.(n.) 1. தற்புகழ்ச்சி; boast, swagger, bombast, vaunt. *"வீம்பு நாரியர்" (திருப்பு. 772).* 2. செருக்கு; pride. 3. விடாப்பிடி (ஒட்டாரம்); obstinacy. *'வீம்புக்கு வேடம் கொள்ளாதே' (பழ.)*

ம. வீம்பு.

*[வீண் → வீண்பு → வீம்பு] (செல்வி, 77, ஆடி.595)*

**வீம்புக்காரன்** *vimbu-k-kāraṉ,* பெ.(n.) வீம்பன் (வின்.) பார்க்க; see *vimbaṉ.*

*[வீம்பு + காரன்]*

**வீம்புப்பேச்சு** *vimbu-p-pēccu,* பெ.(n.) தற்புகழ்ச்சி; boasting speech. *'வீம்பு பேசுகிறவன் அழிவான்; வீரியம் பேசுகிறவன் விழுவான்' (பழ.).*

*[வீம்பு + பேச்சு]*

**வீம்புவைத்தியன்** *vimbu-vaittiyaṉ,* பெ.(n.) போலி மருத்துவர் (புதுவை.); quack doctor

*[வீம்பு + Skt. vaidya > த. வைத்தியன்]*

**வீமசக்கிரம்** *vima-šakkiram,* பெ.(n.) புளிவஞ்சி பார்க்க; see *puḷi-vañji.*

**வீமசேனன்** *vima-šēṉaṉ,* பெ.(n.) பீமன் 1; bhima. *"அருச்சினன் தமையனான வீமசேனன்" (சிறுபாண். 240. உரை).*

**வீமஞ்சிகாந்தம்** *vimañji-kāndam,* பெ.(n.) ஊசிக் காந்தம்; loadstone which attacts small needles; magnet.

**வீமதேவன்** *vima-dēvaṉ,* பெ.(n.) பதினொரு உருத்திரருள் ஒருவர் (பிங்.); a rudra, one of *ēgādaša-ruttirar,* q.v.

**வீமபாகம்** *vima-pāgam,* பெ.(n.) பீமபாகம் (குற்றா. குற. 17); excellent cooking.

**வீமபீசம்** *vimapišam,* பெ.(n.) அண்டவீக்கம் (வின்.); hydrocele.

*[வீமம் + Skt. bijā > த. பீசம்]*

**வீமம்** *vimam,* பெ.(n.) 1. அச்சம்; fearfulness, dreadfullness. *"வீமப்பேரொளியாய விழுப்பொருள்" (தேவா. 327. 8).* 2. அச்சந் தருவது (வின்.); fearful thing. 3. நிரய (நரகம்) வகை; a hell. *"அதன் கீழ் வீமம்" (சிவதரு. சுவர்க்கநரக. 109).* 4. பருமன் (வின்.); bulkiness.

**வீமமந்தி** *vima-mandi,* பெ.(n.) கழுதைத் தும்பை பார்க்க; see *kaḻudai-t-tumbai.*

**வீமவீடணம்** *vima-viḍaṇam,* பெ.(n.) நிரயவகை (நரகம்) (சிவதரு. சுவர்க்க. நரக. 109); a hell.

*[வீமம் + வீடணம்]*

**வீமன்** *vimaṉ,* பெ.(n.) 1. பீமன் 1 பார்க்க; see *pimaṉ.* the second son of *pāṇḍu.* *"மிடுக்கிலாதானை வீமனே... என்று" (தேவா. 647. 2).* 2. தமயந்தியின் தந்தை; father of damayanti. 3. பச்சைக் கருப்பூரவகை (பதார்த்த. 1077); a kind of purified camphor.

**வீமி** *vimi,* பெ.(n.) எட்டுவகை எழுத்துகளி லொன்று; one of the eight mystic letters.

வீமியச்சரம் *vīmi-y-accaram,* பெ.(n.) குழந்தைகளுக்கு ஈரல் நொந்து காய்ச்சலுடன் மயக்கம், குளிர், தலைவலி, நீர்வேட்கை போன்ற குணங்கள் காணும் ஒருவகை நோய்; a disease of the children marked by fever, giddiness, chill, head-ache, thirst etc. due to the liver is affected.

*[விமி + அக்கரம் → அச்சரம்]*

வீமேச்சுரவுள்ளமுடையான் *vīmēccura-v-uḷḷamuḍaiyāṉ,* பெ.(n.) ஒரு கணிய நூல் (சோதிடம்); an astrological work.

வீயம் *vīyam,* பெ.(n.) 1. வித்து; seed. *"அகோசர வீயத்தை" (திருமந். மாயி. 100).* 2. அரிசி (பிங்.); rice.

தெ. பீயமு; க. பீய; **Kol.** பீயம்.

வீயு *vīyu,* பெ.(n.) ஆடுதின்னாப்பாளை (மலை.); worm killer.

வீர்தி *vīrdi,* பெ.(n.) வேலி (பிங்.); hedge, fence.

வீர்வீரெனல் *vīr-vīr-eṉal,* பெ.(n.) கத்துதற் குறிப்பு; onom. expr. of screaming, shrieking.

**Ma.** vīr; **Kui.** verevere.

வீரக்கட்டி *vīrakkaṭṭi,* பெ.(n.) ஓர் மருந்து; a lump of per Chloride of mercury. (சா.அக.)

வீரக்கட்டு *vīra-k-kaṭṭu,* பெ.(n.) 1. வீரத்தைக் கட்டும் முறை; consolidated per-chloride of mercury. 2. வில்வப் பழத்தைக் கீறி வீரத்தை உள்ளே வைத்து, சீலை செய்து மணல் மறைவில் புடம் போட்டு, இப்படி 10 முறை 10 பழத்தில் போட வீரம் கட்டும்; a lump of perchloride of mercury is inserted into the bael fruit, and luted with clay and cloth, then calcined in sand bath, repeat the proces 9 more times, the per-chloride gets consolidated. (சா.அக.)

வீரக்கல் *vīra-k-kal,* பெ.(n.) நடுகல் (இ.வ.); memorial stone.

*[வீரம் + கல்.]*




வீரக்கழல் *vīra-k-kaḻal,* பெ.(n.) ஆண்மைக் குறியாக வீரரணியும் காலணி; string of little bells worn on the leg, as a sign of heroism.

*[வீரம் + கழல்]*

வீரக்கிலேதம் *vīrakkilēdam,* பெ.(n.) ஒருவகை மஞ்சள் புண் கழுவுநீர்; a yellow lotion for cleaning and dressing ulcers and sores.

*[வீரம் + **Skt.** kilētha > த. கிலேதம்]*

வீரக்குட்டி *vīra-k-kuṭṭi,* பெ.(n.) வீரரிற் சிறந்தோன் (யாழ்.அக.); eminent warrior.

*[வீரம் + குட்டி]*

வீரக்குடியான் *vīra-k-kuḍiyāṉ,* பெ.(n.) மங்கலம் மற்றும் இரங்கத்தக்க காலங்களில் சங்கு கொம்பு முதலியனவூதும் பணி செய்பவன் (வின்.); one employed to sound the trumpet or conch on joyful or mournful occasions.

*[வீரம் + குடியான்]*

வீரக்குடிவெள்ளாழன் *vīra-k-kuḍi-veḷḷāḻaṉ,* பெ.(n.) வேளாளர் குல வகையில் ஒரு பிரிவினர்; a sub-caste of *vēḷāḷā.*

*[வீரக்குடி + வெள்ளாழன்]*

வீரக்குழல் *vīra-k-kuḻal,* பெ.(n.) முன்கையில் அணியும் கரும்பொற்காப்பு (யாழ்.அக.); a piece of armour for the forearm.

*[வீரம் + குழல்[3]]*

வீரக்கொடி[1] *vīra-k-koḍi,* பெ.(n.) வெற்றிக் கொடி (பு.வெ.9, 39, உரை); banner of victory.

*[வீரம் + கொடி]*

வீரக்கொடி[2] *vīra-k-koḍi,* பெ.(n.) வெற்றிலைக்கொடி; betelvine-piper betel.

*[வீரம் + கொடி]*



வீரக்கொம்பு *vīra-k-kombu,* பெ.(n.) படையெழுச்சியில் ஊதுங்கொம்பு; martial trumpet. *“சங்கும் கரிய வீரக்கொம்பும்” (பு.வெ. 2, 3, உரை).*

*[வீரம் + கொம்பு]*

வீரகங்கணம் *vīra-kaṅgaṇam,* பெ.(n.) வீரகடகம் (வின்.) பார்க்க; see *vīra-kaḍagam.*

*[வீரம் + கங்கணம்]*

வீரகடகம் *vīra-kaḍagam,* பெ.(n.) வீரர் அணியும் கைவளை (வின்.); warrior's bracelet. *"கடகம் செறிந்த கையே" (மணிமே. 6, 144).*

*[வீரம் + கடகம்]*

வீரகண்டாமணி *vīra-kaṇḍāmaṇi,* பெ.(n.) வீரக்குறியாக அணியும் மணி கட்டிய கழல்; ring with little bells, worn on the leg, as a mark of heroism. *“வீரகண்டாமணி விருது காலிட்டு” (கொண்டல்விடு. 494).*

*[வீரம் + கண்டாமணி]*

வீரகண்டை *vīra-kaṇḍai,* பெ.(n.) வீரக்கழல் (வின்.) பார்க்க; see *vīra-k-kaḻal.*

க. வீரகண்டே.

*[வீரம் + கண்டை]*

வீரகத்தி *vīra-katti,* பெ.(n.) வீரனைக் கொன்ற தீவினை (இலக்.அக.); sin of killing a hero or warrior.

*[வீரம் + **Skt.** hati > த. கத்தி]*

வீரகதவுப்பு *vīra-kada-v-uppu,* பெ.(n.) வளையலுப்பு; a variety of salt used in making glass bangles. (சா.அக.)

வீரகம் vīragam, பெ.(n.) அலரி, 2 (இலக். அக.) பார்க்க; oleander.

வீரகவசம் vīra-kavaśam, பெ.(n.) வீரர் அணியும் மெய்புகு கருவி; warrior's armour.

[வீரர் + கவசம்]



வீரகவிராயர் vīra-kavirāyar, பெ.(n.) வீரையாசுகவிராயர் பார்க்க; see vīrai-y-āśu-kavirāyar.

வீரகாந்தம் vīra-kāndam, பெ.(n.) ஊசிக் காந்தம்; load-stone attracting needles; magnet.

[வீரம் + காந்தம்]

வீரகுடியான் vīra-kuḍiyāṉ, பெ.(n.) வீரக்குடியான் (வின்.) பார்க்க; see vīra-k-kuḍiyāṉ.

[வீரம் + குடியான்]

வீரகெம்பீரன் vīra-kembīraṉ, பெ.(n.) வீரச்செருக்குடையான் (வின்.); proud or magnificent hero.

[வீரம் + கம்பீரன் → கெம்பீரன்]

**Skt.** gambirā > த. கம்பீரன்.

வீரகேசரி virakēśari, பெ.(n.) 1. முருகனின் ஒன்பது வீரர்களுள் ஒருவர்; a hero in skanda's army, one of *nava-vīrar*, q.v. 2. விக்கிரமாதித்தன் (வின்.); king *vikkiramādittaṉ.*

[வீரம் + கேசரி]

**Skt.** Kēśari > த. கேசரி.

வீரகேந்திரமங்கை virakēndira-maṅgai, பெ.(n.) மூக்குறா பார்க்க; see *mūkkuṟā.*

வீரகேயூரம் vīra-kēyūram, பெ.(n.) வீரரணிவதற்கு உரியதும் இரும் பொன்னாலானதுமான தோள்வளை (யாழ்.அக.); warrior's armlet of iron.

[வீரம் + கேயூரம்]

வீரகோஷம் vīra-kōsam, பெ.(n.) வீரர்களின் ஆர்ப்பரவம்; warrior's shout, war-cry.

[வீரம் + **Skt.** kōsha > த. கோஷம்]

வீரச்சங்கிலி vīra-c-caṅgili, பெ.(n.) வீரசங்கிலி (சிலப். 6, 99, அரும்.) பார்க்க; see vīra-śaṅgili.

[வீரம் + சங்கிலி]

வீரச்சலங்கை vīra-c-calaṅgai, பெ.(n.) வீரரணியும் காற்சதங்கை (இ.வ.); string of little bells, worn on the legs by heroes.

[வீரம் + சலங்கை]

வீரச்சுண்ணம் vīra-c-cuṇṇam, பெ.(n.) சுண்ணவகை; calcined white powder of per-chloride of mercury which has the properties of calcium i.e. turns, turmeric solution red.

[வீரம் + சுண்ணம்]

**வீரச்சுவை** *vīra-c-cuvai,* பெ.(n.) வீரம்[1], 2 (சிலப். 3, 13, உரை) பார்க்க; see *vīram.*

*[வீரம் + சுவை]*

**வீரச்செந்தூரம்** *vīra-c-cendūram,* பெ.(n.) திருமூலர் 'வ' கார உபதேசம் (அறிவுரை) 200 ல் சொல்லியுள்ள ஒரு வகைச் செந்தூரம்; red calcined powder of per-chloride of mercury mentioned in *Tirumūlar 'va'gāra ubadēšam.*

**வீரச்செல்வி** *vīra-c-celvi,* பெ.(n.) கொற்றவை (பிங்.); *durgai.*

*[வீரம் + செல்வி]*

**வீரசங்கிலி** *vīra-šaṅgili,* பெ.(n ) 1. வீரத்திற்கு அறிகுறியாகக் கையிலணியும் பொன்னணி; gold chain worn as an armlet, as a sign of heroism. *"வீரசங்கிலி கேயூரம்" (பிரபுலிங். பிர. 9).* 2. மகளிர் கழுத்தணி வகை (சிலப். 6, 99, உரை); a woman's necklace.

*[வீரம் + சங்கிலி]*

**வீரசம்பன்குளிகை** *vīrašamban-kuḷigai,* பெ.(n.) 14–ஆம் நூற்றாண்டில் வழங்கிய நாணயவகை (I.M.P.N.A.7); a coin current in the 14th C.

*[வீரசம்பன் + குளிகை]*

**வீரசயந்திகை** *vīrašayandigai,* பெ.(n.) 1. போர்; war. 2. வீரர் நிகழ்த்துங் கூத்து வகை; a dance performed by warriors.

*[வீரம் + சயந்திகை]*

**வீரசயனம்** *vīra-šayanam,* பெ.(n.) திருமாலின் திருப் பள்ளிகொள் நிலைவகை; a reclining posture of *viṣṇu.*

*[வீர + Skt. sayana > த. சயனம்]*

**வீரசாகி[1]** *vīrašāgi,* பெ.(n.) அழிஞ்சில்; a tree.

**வீரசாகி[2]** *vīrašāgi,* பெ.(n.) சேங்கொட்டை (மலை.); marking nut tree.

*[வீர + சாகி]*

**வீரசாசனம்** *vīrašašanam,* பெ.(n.) வீரர்களுக்கு கொடுக்கும் நிலம் முதலியன (I.M.P.Cg. 682); land and other property assigned to warriors.

*[வீரம் + Skt. šāšanā > த. சாசனம்]*

**வீரசிங்காசனம்** *vīra-šiṅgāšanam,* பெ.(n.) வீரர்கள் இருத்தற்குரிய அரியுருவவிருக்கை; throne of heroes. *"வீரசிங்காசனத்து...... வீற்றிருந் தருளிய" (S.I.I.i. 134).*

*[வீரம் + சிங்காசனம்]*

**Skt.** சிங்காசனம்.

**வீரசிங்காதனபுராணம்** *vīra-šiṅgādana-purāṇam,* பெ.(n.) கி.பி. 1719–ல் வேலைய தேசிகரும் கோட்டூர் உமாபதி சிவாச்சாரியரும் இயற்றிய ஒரு வீரசைவ புராணம்; a *vīra-šaivapurāṇa,* by *vēlaiya dēšikar* and *umāpati šivāšāriyar* of *kōṭṭur* composed in 1719 A.D.

**வீரசின்னம்** *vīra-šinnam,* பெ.(n.) வீரர் விருதுகளில் ஒன்றான ஊதுகொம்பு; a kind of bugle forming part of the paraphernalia of a hero. *"வீரசின்னந் தான்முழங்க" (கூளப்ப. 48).*

*[வீரம் + சின்னம்]*



**வீரசுவர்க்கம்** *vira-šuvarkkam,* பெ.(n.) இறந்த வீரரடையுந் வானுலகப் பதவி; warrior's heaven; heavenly abode attained by warriors after their brae death in a combat.

*[வீரம் + **Skt.** swarkka > த. சுவர்க்கம்]*

**வீரசூடிகை** *vira-šūḍigai,* பெ.(n.) வீரர் நெற்றியிலணியும் அணி வகை; an ornament for the forehead, worn by warriors. *"வீர சூடிகை நெற்றியி னயலிட்டு விசித்தார்" (கம்பரா. பஞ்சசேனா. 18).*

*[வீரம் + சூடிகை]*

**வீரசூரம்** *vira-šūram,* பெ.(n.) போராண்மை (வின்.); heroic valour.

*[வீரம் + சூரம்]*

**வீரசூரன்** *vira-šuraṉ,* பெ.(n.) 1. அதிவீரன்; valiant hero. 2. வீரதீரன் பார்க்க; see *vira-tiraṉ.*

*[வீரம் + சூரன்]*

**வீரசூலி** *vira-šuli,* பெ.(n.) ஒரு சிற்றூர்ப் பெண் தெய்வம் (இ.வ.); a village goddess.

*[வீரம் + சூலி]*

**வீரசெயநீர்** *vira-šeyanir,* பெ.(n.) இதளியம் சேர்த்து வடிக்கப்படும் மருந்து நீர்; pungent liquid extracted from per-chloride of mercury. (சா.அக.)

**வீரசெல்வி** *viraševi,* பெ.(n.) சத்தி சாரணை என்னும் மூலிகை; a prostate plant.

**வீரசேனன்** *vira-šēṉaṉ,* பெ.(n.) நள அரசனின் தந்தை (நைடத. நளன்றூது. 14); the father of *Nalaṉ.*

**வீரசேஷை** *virašēsai,* பெ.(n.) வரிவகை(S.I.I.vii.290); a kind of tax.

*[வீரம் + **Skt.** sēshā > த. சேஷை]*

**வீரசைவம்** *vira-šaivam,* பெ.(n.) சிவனியக் (சைவம்) கொள்கையுள் இலங்கம் (இலிங்கம்) அணியச் செய்து கொள்ளும் கோட்பாடு (சமயம்); the lingayat sect *šaivaism.*

வீரசைவம் என்பது தோன்றியங்களில் (ஆகமம்) கூறியுள்ள சைவ நெறியாகும். இருபத்தெட்டு தோன்றிய நூல்களின் இறுதிப் பகுதிகள் வீரசைவக் கொள்கைகளையும் சடங்குகளையும் கூறுவதால் வீரசைவம் என்பது தோன்றியங்களின் ஒரு வகையாகும். இது சைவ சமயத்தினின்று பிறந்ததாயிருப்பினும், தனி இயல்புடைய ஒரு சமயக் கொள்கையே. இலிங்க உருவத்தில் சிவனைப் பரதெய்வமாக வழிபடுவது சைவத்துக்கும் வீரசைவத்துக்கும் பொதுவான கொள்கையாகும். ஆயினும் சைவமும் வீரசைவமும் வழிபடக் கையாளும் முறைகள் வேறுபடுவன. சைவர்கள் இலிங்கத்தைக் கோயிலில் வைத்து வழிபடுவர். வீரசைவர்கள் அதனைக் கைத்தலத்தில் வைத்து வழிபடுவர். தத்துவங்கள் முப்பத்தாறு என்று கூறுவதும் இரண்டுக்கும் பொதுவானது. ஆனால் சைவமதம் அவற்றை உலகத் தோற்ற முறையில் விளக்குகிறது. வீரசைவ மதம் உளவியல் முறையிலேயே விளக்குகிறது.

*[வீரம் + சைவம்]*

**வீரசோழர்** *vīra-šōḻar,* பெ.(n.) சோழ அரசர்களின் பட்டப் பெயர்களுள் ஒன்று; a title for *chōla* Kings.

இப்பெயர் பெற்றவர்கள் இரு சோழ அரசரும் ஓர் இளவரசரும் ஆவர்.

1. முதற் பராந்தக சோழர் (ஆ.கா.907 – 953) ராஞ்டிரகூட அரசன் மூன்றாம் கிருஷ்ணனை முதலில் நடந்த போரில் வென்றதால் வீரசோழர் என்ற பட்டம் பெற்றார்.

2. கங்கை கொண்ட சோழர் என்ற முதலாம் இராசேந்திரரின் (ஆ.கா.1014–1044) மகனான வீரராசேந்திரருக்கு (ஆ.கா.1063–70) இப்பெயர் வழங்கியது. பொன்பற்றி எனும் நகரின் சிற்றரசரான புத்தமித்திரர் என்பவர் இவ்வரசர் விருப்பத்திற்கேற்ப ஐந்திலக்கணங்களும் அடங்கிய நூல் ஒன்றெழுதி, அதற்குச் செய்வித்தோர் பெயரால் வீரசோழியம் எனப் பெயரிட்டுள்ளார். நூலாசிரியர் அரசரைப் பலவாறு பாராட்டியுள்ளார்.

3. முதற் குலோதுங்க சோழரின் (ஆ.கா.1070–1122) ஆண் மக்கள் எழுவருள் இரண்டாமவரின் பெயர். இவர் இருமுறை (1078–84, 1089–93) வேங்கியில் அரசப் படிநிகராளியாக இருந்து அதை ஆண்டு வந்தார். அக்காலத்தில் இவர் ஒரு பாண்டியனோடு வடபுலத்தில் பொருது வென்றார். இவர் தம் தந்தையின் ஆட்சிக் காலத்திலேயே இறந்து பட்டதால் இவருக்கு இளவலான விக்கிரம சோழர் தம் தந்தைக்குப் பின் பட்டம் எய்தினார்.

**வீரசைவன்** *vīra-šaivan,* பெ.(n.) வீரச்சிவனிய மதத்தான்; a follower of the sect of *vīra-šaivam.*

*[வீரம் + சைவன்]*

**வீரசொர்க்கம்** *vīra-šorkkam,* பெ.(n.) வீரசுவர்க்கம் (இலக்.அக.) பார்க்க; see *vīra-šuvarkkam.*

*[வீரம் + சொர்க்கம்]*

**வீரசோ** *vīrašō,* பெ.(n.) வாணாசுரன் நகர்; a city of the Asura *bāṇa.* "*வீரசோ வென்னும் அரணத்தை*" *(பு.வெ.6, 7, உரை).*

*[வீரம் + சோ]*

**வீரசோழன்** *vīra-šōḻan,* பெ.(n.) 1. பதினொன்றாம் நூற்றாண்டில் ஆண்டவனும் வீரசோழியத்தை இயற்றுவித்தவனுமான சோழவரசன்; a *Cōḻa* king, 11th C, Patron of the author of *vīrašōḻiyam.* "*வீரசோழன் றிருப்பெயராற் பூமேலுரைப்பன்*" *(வீரசோ. பாயி. 3).* 2. தஞ்சை மாவட்டத்தில் இவனால் வெட்டப்பட்ட ஓர் ஆற்றின் பெயர்; a river name which was orginated by *Choḻa* king *vīra-šoḻan.*

**வீரசோழியம்** *vīrašōḻiyam,* பெ.(n.) வீரசோழன் பெயரால் புத்தமித்திரர் இயற்றிய தமிழிலக்கண நூல்; a grammatical treatise, by Puttamittirar, named after *vīra-šōḻan.*

*[வீரசோழன் → வீரசோழியம்]*

வடமொழி இலக்கணத்தைத் தமிழில் முதன்முதலாகக் கூறிய இலக்கண நூல்; இது எழுத்து, சொல், பொருள், யாப்பு அணி முதலியவற்றைச் சுருக்கிக் கூறுவது. இந்நூலாசிரியர் பொன்பற்றியூர் என்னும் ஊரினர். (அபி–சிந்.).

**வீரட்டம்** *vīraṭṭam,* பெ.(n.) வீரட்டானம் (தேவா. 1222, 2) பார்க்க; see *vīraṭṭāṉam.*

**வீரட்டாணம்** *vīraṭṭāṇam,* பெ.(n.) வீரட்டானம் (வின்.) பார்க்க; see *vīraṭṭāṉam.*

**வீரட்டானம்** *vīraṭṭāṉam,* பெ.(n.) 1. சிவபெருமானது வீரம் விளங்கிய இடம் (தேவா. 1222, 2); sacred place where *šiva's*

heroism was manifested. 2. கூத்து வகை (வின்.); a kind of dance.

*[வீரம் + தானம் → வீரட்டானம்]*

எட்டு வீரட்டத் தலங்கள் :

1. கண்டியூர், 2. கடவூர், 3. திருவதிகை, 4. வழுவூர், 5. பறியலூர், 6. கோவலூர், 7. திருக்குறுக்கை, 8. விற்குடி.

**வீரடங்கல்** *vīradaṅgal,* பெ.(n.) மருந்தின் வேகமடங்கல்; decrease of the virulence of medicine.

*[வீறு → வீரு → வீரடங்கல்]*

**வீரணம்** *vīraṇam,* பெ.(n.) இலாமிச்சை வேர்; khus khus.

**வீரணமூலகம்** *vīraṇamūlagam,* பெ.(n.) விலாமிச்சவேர்; a fragrant root of grass.

**வீரணன்** *vīraṇaṉ,* பெ.(n.) வீரமுள்ளவன்; brave hero. *"அருமுறவினோ டொளிதிகழ் வீரண ருறைவது" (தேவா. 579, 9).*

*[வீரம் → வீரணன்]*

**வீரணி**[1] *vīraṇi,* பெ.(n.) இலாமிச்சை (வின்.); cuscus grass.

**வீரணி**[2] *vīraṇi,* பெ.(n.) மிளகு (மலை.); pepper.

**வீரணுக்கன்** *vīraṇukkaṉ,* பெ.(n.) 1. ஓர் இனம்; a caste. 2. வீரணுக்க இனத்தினன் (நன். 275, மயிலை); man of the caste of *vīraṇukkan.*

**வீரணுக்கிச்சி** *vīraṇukkicci,* பெ.(n.) வீரணுக்க இனப் பெண் (நன்.276, மயிலை); a woman of the caste of *vīraṇukkaṉ.*

*[வீரணுக்கன் → வீரணுக்கிச்சி]*

*அணுக்கன் (ஆ.பா.) – அணுக்கி, அணுக்கிச்சி (பெ.பா.)*

**வீரத்தட்டி** *vīra-t-taṭṭi,* பெ.(n.) மான்றோற் பட்டை (யாழ். அக.); badge of deerskin.

*[வீரம்[1] + தட்டி[1]]*

**வீரத்துக்கதீதம்** *vīra-t-tukkatīdam,* பெ.(n.) அண்டச் சுண்ணம்; white calcined powder of cranium bones or egg shell.

*[வீரத்திற்கு + **Skt.** atīta > த. அதீதம்]*

**வீரத்துவம்** *vīrattuvam,* பெ.(n.) வீரம்[1],1 (வின்.) பார்க்க; see *vīram* bravery, heroism.

*[வீரம் + தத்துவம்]*

**வீரத்தைப்பெந்தம்பண்ணி** *vīratta-p-pendam-paṇṇi,* பெ.(n.) நீர்க்கடம்பு; a kind of herb which is used in medicine.

*[வீரத்தை + பெந்தம்பண்ணி]*

**வீரதச்சுவன்** *vīrataccuvaṉ,* பெ.(n.) காமன் (சது.); *kāma.*

**வீரதத்துவம்**[1] *vīra-tattuvam,* பெ.(n.) கொடிவேலி; a shrub.

**வீரதத்துவம்**[2] *vīra-tattuvam,* பெ.(n.) வீரத்துவம் (வின்.) பார்க்க; see *vīrattuvam.*

*[வீரம் + தத்துவம்]*

**வீரதண்டை** *vīra-taṇḍai,* பெ.(n.) வீரக்கழல் (யாழ்.அக.) பார்க்க; see *vīra-k-kaḻal.*

*[வீரம் + தண்டை]*

வீரதரம் *viratarma,* பெ.(n.) விலாமிச்சவேர்; coleus osmirrhizon.

வீரதரன் *viratarap,* பெ.(n.) வீரருள் மிக்கான்; great hero or warrior. *"கவன நெடும்பரி வீரதரன் காவிரி நாடுடையான்" (கலிங். 515).*

**Skt.** *Dharan* > த. தரன்.

*[வீரம் + தரன்]*

வீரதரு *vîrataru,* பெ.(n.) 1. வீரசாகி (நாமதீப. 291) பார்க்க; see *vîra-šāgi.* 2. நீர்மருது (மலை.); arjuna. 3. விடத்தேரை (மலை.); ashy babool.

வீரதாரு *vîratāru,* பெ.(n.) விடத்தலை பார்க்க; see *vidattalai.*



வீரதீரன் *vîra-tîrap,* பெ.(n.) 1. துணிவு மிக்க வீரன்; valiant hero. 2. ஒன்பது வீரர்களுள் ஒருவர் (கந்தபு. துணைவர். 33); a hero in skanda's army, one of *nava-vîrar,* q.v.

*[வீரம் + தீரன்]*

வீரதுரந்தரன் *vîra-turandarap,* பெ.(n.) 1. ஆண்மையுள்ள வீரன்; hero, worthy of the name. 2. மாமல்லன்; leader of a band of warriors, champion.

*[வீரம் +* **Skt.** *durandrā > த. துரந்தரன்]*

வீரதை *vîradai,* பெ.(n.) வீரம்[1], 1 பார்க்க; see *vîram,* heroism. *"வேதனைக் கிடமாதல் வீரதையன்று பேதைமையாம்" (கம்பரா. கார்கா. 69)*

*[வீரம் → வீரதை]*

வீரந்தரம் *vîrandaram,* பெ.(n.) 1. மயில்; peacock. 2. மார்புக்கவசம்; armour for the chest.

வீரநீர் *vîra-nîr,* பெ.(n.) அமுரி; urine.

வீரப்பட்டயம் *vîra-p-pattayam,* பெ.(n.) வீரப்பட்டிகை (யாழ்.அக.) பார்க்க; see *vîra-p-pattigai.*

*[வீரம் + பட்டயம்]*

வீரப்பல் *vîra-p-pal,* பெ.(n.) பூதம் முதலியவற்றின் கோரப்பல் (இ.வ.); long, curved tooth, as of malignant deities.

*[வீரம் + பல்]*

வீரப்பாடு *vîra-p-pādu,* பெ.(n.) 1. பேராண்மை; heroism, manliness. *"வீரப்பாட்டுக்குத் தலையான சக்ரவர்த்தி திருமகன்" (ஈடு. 6, 1, 10).* 2. வெற்றி (வின்.); victory.

*[வீரம் + பாடு]*

வீரப்பிரதாபம் *vîra-p-piratābam,* பெ.(n.) வீரப்பாடு பார்க்க; see *vîra-p-pādu.*

*[வீரம் +* **Skt.** *pradhaba > த. பிரதாபம்]*

வீரப்பேர் *vîra-p-pēr,* பெ.(n.) வீரம் பற்றிப் புனையும் பெயர்; title conferred upon a person in recognition of his heroism. *"சீலப்பேர் வீரப்பேர் என்று அநேகமா யிருக்குமே" (ஈடு. 2, 5, 6).*

*[வீரம் + பேர்]*

**வீரப்போர்** *vira-p-pōr,* பெ.(n.) வீரர்களின் நெறி தவறாத போர்; fight or combat in strict conformity with the code of honour

*[வீரம் + போர்]*

**வீரபஞ்சரன்காசு** *vira-pañjaraṉ-kāšu,* பெ.(n.) காசு வகை (M.E.R. 14 of 1924-C); a coin.

*[வீரம் + பஞ்சரன் + காசு]*

**வீரபட்டம்** *vira-paṭṭam,* பெ.(n.) 1. வீரபட்டிகை பார்க்க; see *vira-paṭṭigai. "வீரபட்டத் தொடு திலகமின்னவே" (கம்பரா. கடிம. 54).* 2. தெய்வத் திருமேனிகட்கு அணியும் நெற்றியணிவகை; a jewel on the forehead of deities.

*[வீரம் + பட்டம்]*

**வீரபட்டிகை** *vira-paṭṭigai,* பெ.(n.) வீரர் வெற்றிக்குறியாக நெற்றியில் அணியும் பொற்றகடு; frontlet of gold worn on the forhead of a warrior, as a sign of victory. *"நுதலணி யோடையிற் பிறழும் வீரபட்டிகை" (கம்பரா. கரன்வ. 159).*

*[வீரம் + பட்டிகை]*

**வீரபத்திரக்கலிக்கம்** *virapattira-k-kalikkam,* பெ.(n.) திரிகடுகு, இந்துப்பு, தூய்மை செய்த நேர்வாளம், கடுக்காய், இலவங்கம் சமனெடை கொண்டு வெந்தயச் செடி சமூலச் சாற்றாலரைத்துச் செய்யும் மாத்திரை. அதையிழைத்துக் கண்ணிலிட சன்னி காய்ச்சல், முக்குற்றம் போம்; an eye salve prepared as said above and applied to the eye during delirium. (சா.அக.).

*[வீரபத்திரம் + கலிக்கம்]*

**வீரபத்திரதேவன்** *virapattira-dēvaṉ,* பெ.(n.) வீரபத்திரன் (சீவக. 2285, உரை) பார்க்க; see *virapattiraṉ.*

*[வீரபத்திரன் + தேவன்]*

**வீரபத்திரம்**[1] *vira-pattiram,* பெ.(n.) குதிரை வேள்விக்குரிய குதிரை (இலக்.அக); horse fit for the horse-sacrifice.

*[வீரம் + பத்திரம்]*

**வீரபத்திரன்**[2] *vira-pattiraṉ,* பெ.(n.) சிவபெருமானது நெற்றிக் கண்ணிலிருந்து தோன்றியவரும் தக்கன் வேள்வியை யழித்தவருமான கடவுள்; the god who emanated from *šiva's* frontal eye and destroyed *Dakkaṉ's* sacrifice. *"முத்துவீரபத்திரனெனுந் திறலுடை முதல்வன்" (கந்தபு. வீரபத். 14).*

*[வீரம் + பத்திரன்]*

**வீரபத்ராஞ்சனம்** *virapatrāñjaṉam,* பெ.(n.) சன்னிபாதக் காய்ச்சலுக்காக கண்ணிற்கு இடும் கலிக்கம், இது ஆயுர்வேத மருந்து; an ayurvedic collyrium for delirious fevers.

*[வீரம் + பத்ரம் + அஞ்சனம். அஞ்சனம், பத்ரம் = Skt.]*

**வீரபத்தினி** *vira-pattiṉi,* பெ.(n.) 1. வீரனுடைய மனைவி; wife of a hero. 2. மறக் கற்புடையாள்; wife celebrated for her *maṟa-k-kaṟpu* or militant chastity, woman of herioc continence. *"ஆரஞ ருற்ற வீரபத்தினி" (சிலப். பதி. 42).*

*[வீரம் + பத்தினி]*

வீரபற்பக்களிம்பு *vīraparpa-k-kaḷimbu,* பெ.(n.) ஒரு வகை மருந்துக் களிம்பு; ointment containing ammoniated of mercury.

*[வீரம் + களிம்பு]*

வீரபற்பம் *vīra-parpam,* பெ.(n.) இதளியத்தை நீறாக்கிச் செய்யப்படும் ஒருவகை மருந்து; white calcined powder of perchloride of mercury used as medicine, ammoniated mercury.

*[வீரம் + பற்பம்]*

வீரபாண்டியன் *vīra-pāṇḍiyaṉ,* பெ.(n.) 1. பாண்டியவரசருள் ஒருவன்; a *pāṇḍya* king. 2. முகத்தலளவைக் கருவி வகை (Insc.); a dry measure of capacity.

*[வீரம் + பாண்டியன்]*

வீரபாண்டியன்காசு *vīra-pāṇḍiyaṉ-kāśu,* பெ.(n.) வீரபாண்டியன் காலத்து வழங்கிய ஒரு நாணயம் (புதுக்.கல்.); a coin issued by *vīra-pāṇḍiyaṉ.*

*[வீரம் + பாண்டியன் + காசு³]*

வீரபாணம் *vīra-pāṇam,* பெ.(n.) வீரபானம் (இலக்.அக.) பார்க்க; see *vīra-pāṉam.*

*[வீரம் + பாணம்]*

வீரபானம் *vīra-pāṉam,* பெ.(n.) வீரர்கள் மாந்தும் மது; invigorating drink of warriors. *"வீரபானமிருக்கும் குழாய்" (சீவக. 1874, உரை).*

*[வீரம் + பானம்]*

வீரபாவனை *vīra-pāvaṉai,* பெ.(n.) தென்னங் குரும்பையைக் குடைந்து, வீரத்தை வைத்து இதற்கு 6 பங்கிடை விறட்டி, கீழ் பாதி மேல் பாதியாகப் புடமிட்டு எடுக்கக் கால் கட்டு ஆகும். இப்படியே 10 புடமிட்டு எடுப்பதே வீரபாவனை; இதனால் வீரம் சுத்தியாகிக் கால் கட்டாகும். இப்படியே 40–50 தடவை செய்தால் முழுக்கட்டாகும்; another method of consolidating the per-chloride of mercury is given above. (சா.அக.).

வீரபுரந்தரன் *vīra-purandaraṉ,* பெ.(n.) முருகனின் ஒன்பது வீரருள் ஒருவர் (நாமதீப. 35); a hero in skanda's army, one of *nava-vīrar,* q.v.

*[வீரம் +* ***Skt.*** *purandrā > த. புரந்தரன்]*

வீரபுருஷன் *vīra-purusaṉ,* பெ.(n.) வீரமுள்ளவன்; warrior, hero. *"வீரபுருஷர் குடர்களின் உதிரத்தை" (தக்கயாகப். 100, உரை).*

*[வீரம் +* ***Skt.*** *purushā > த. புருஷன்]*

வீரபைரவி *vīra-bairavi,* பெ.(n.) கொற்றவை கோலம் பூண்ட பெண்துறவி; female ascetic wearing the garb of a bhairavi. *"நாக சாகினிகள் வீரபைரவிகள்" (தக்கயாகப். 593).*

*[வீரம் + பைரவி]*

வீரபோகசாதி *vīra-bōgaśādi,* பெ.(n.) பயிரபதி இனமாகிய ஆண் இனம் 4–ல் ஒன்று; one of the four divisions of men.

*[வீரம் + போகம் + சாது]*

***Skt.*** *Bhōga* > த. போகம்.

***Skt.*** *jādhi* > த. சாதி

**வீரபோகம்** *vīra-bōgam,* பெ.(n.) பழைய வரிவகை (I.M.P.S.A. 86); an ancient tax.

*[வீரம் + போகம்]*

***Skt.*** *Bhōga* > த. போகம்.

**வீரம்**[1] *vīram,* பெ.(n.) 1. பேராண்மை; heroism, bravery. *"கன்மே னிற்பர் தம்வீரந் தோன்ற" (சீவக. 2302).* 2. ஒன்பது வகை மெய்ப்பாடுகளுள் ஆண்மையை விளக்குஞ் சுவை (சிலப். 3, 13, உரை); the sentiment of heroism, one of *nava-rasam,* q.v. 3. வலிமை; strength, might. *"வீரநோய் வெகுளி" (சீவக. 2771).* 4. மேன்மை (யாழ். அக.); excellence, esteem. 5. வரிக்கூத்துவகை (சிலப். 3, 13, உரை); a kind of masquerade dance. 6. சிவத் தோன்றியம் இருபத்தெட்டனு ளொன்று (சைவச. 333, உரை); an ancient *śaiva* scripture in sanskrit, one of 28 *śivagamam* q.v. 7. வீராசனம் பார்க்க; see *vīrāśaṉam. "பதுமநகரில் வீரம்" (பிரபோத. 44, 68).* 8. மிளகு (யாழ்.அக.); pepper. 9. கஞ்சி (யாழ்.அக.); gruel. 10. அத்திவகை (யாழ்.அக.); a kind of fig. 11. முதுகு (நாமதீப. 585); back. 12. மலை; mountain. *"வீரந் துஞ்சுவ வெண்மதி" (இரகு. குசன. 71), 'வீரம் பேசுகிறவன் அழிவான்; வீரியம் பேசுகிறவன் விழுவான்', 'வீரன் கேண்மை கூர் அம்பாகும்' (பழ.).*

**வீரம்**[2] *vīram,* பெ.(n.) 1. சவ்வீரம், 2 (வின்.); corrosive sublimate. 2. மருந்துவகை; a kind of medicine.

**வீரம்**[3] *vīram,* பெ.(n.) இஞ்சி[2], 1 (யாழ்.அக.); ginger.

**வீரம்**[4] *vīram,* பெ.(n.) 1. விலாமிச்ச வேர்; khus khus. 2. கஞ்சி; rice gruel. 3. மலையில் இயற்கையாய் விளையும் பொருள்; a natural kind of medicine found in the mountains. 4. பரங்கி நஞ்சு; a mercurial compound. 5. தங்கம்; refined gold. 6. நஞ்சுக்கொடி; placental cord. 7. வேங்கை; Indian kino tree.

**வீரம்பேசு-தல்** *vīram-pēśu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. தன் வல்லமையைத் தானே புகழ்தல்; to boast of one's own prowess. 2. ஆண்மைத் திறங் கூறுதல் (வின்.); to hector, swagger.

*[வீரம் + பேசு-தல்]*

**வீரமகரம்** *vīra-magaram,* பெ.(n.) கோயிற்றிருமேனிகள் உலாவருங்காலத்தும் வேந்தர்கள் வீதியுலா வருங்காலத்தும் அவர்களுக்கு முன்னே மதிப்புரவாக எடுத்துச் செல்லும் விருது வகைகளுள் ஒன்று (யாழ்.அக.); a fish-shaped emblem being part of the paraphernalia carried before deities or kings.

*[வீரம் + மகரம்]*



**வீரமகள்** *vīra-magaḷ,* பெ.(n.) மலைமகள் (சீவக. 411, உரை); *Malai magaḷ,* parvadi.

*[வீரம் + மகள்]*

**வீரமகேச்சுரன்** *vira-magēccuran,* பெ.(n.) ஒன்பது வீரருள் ஒருவர் (வின்.); a hero in skanda's army, one of nava-virar, q.v.

*[வீரம் + மகேச்சுரன்]*

**வீரமகேந்திரன்** *vira-magēndiran,* பெ.(n.) ஒன்பது வீரருள் ஒருவர் (வின்.); a hero in skanda's army, one of nava-virar, q.v.

*[வீரம் + மகேந்திரன்]*

**வீரமங்கை** *vira-mangai,* பெ.(n.) மலைமகள் பார்க்க; see *Malai-magaḷ.*

மறுவ. மலைமடந்தை.

*[வீரம் + மங்கை]*

**வீரமடங்கல்** *vira-madangal,* பெ.(n.) வீரடங்கல்; abatement of virulence.

*[வீரம் + அடங்கல்]*

**வீரமணி**[1] *vira-maṇi,* பெ.(n.) திருமூலர் வகார வுபதேசத்திற் சொல்லியுள்ள ஓர் முறை. வீரத்தைக் கட்டி மணியாகச் செய்து, இதை இழைத்து நாக்கில் தடவச் செத்தவனும் எழுந்து பேசுவான்; per-chloride of mercury is made into a ball by a process mentioned in Tirumoolar vagara upadesham 200. it is said that even a dead will come back to life if it is applied to the tongue.

*[வீரம் + மணி]*

**வீரமணி**[2] *vira-maṇi,* பெ.(n.) 1. விராடக் குரு என்னும் குரு மருந்தினால் வீரத்தைக் கட்டிச் செய்த மணி; perchloride of mercury ball prepared by using magic of விராடக்குரு.

2. வீரமணி கெவுனம் பாய்வதற்கும் வாயிலிட்டு வாயு வேகமாய் நடப்பதற்கும் பிறர் தன்னைக் கண்ட போது நடுங்கும்படி செய்விக்கும் வீரத்தைக் கட்டிச் செய்த ஒரு வித மணி (இதை பசுவின் மேல் வைக்கப் பால் கொடாது); this ball is useful to make one travel in the air, to walk fast, and to make others tremble.

*[வீரம் + மணி]*

**வீரமத்தாளி** *viramattāḷi,* பெ.(n.) யானை நெருஞ்சில்; a stout - stemmed herb with spiny fruits and slimy leaves.

மறுவ. பெருநெருஞ்சில்.



**வீரமந்திரம்** *vira-mandiram,* பெ.(n.) வேண்டும் போது நிற்கவும் பறந்து செல்லவும் குதிரையின் காதில் ஓதும் மறைமொழி; mantra uttered in a horse's ears, so as to enable it to fly or stop as the rider pleases. *"வெம்பரிமான்செவி வீரமந்திரம் ..... நீ மொழிகென" (சீவக. 791).*

*[வீரம் + மந்திரம்]*

**வீரமயேச்சுரர்** *vira-mayēccurar,* பெ.(n.) வீரசைவ முனிவர்; *vira-śaiva* ascetic. *"பெரிய மடந்தனில் வாழ் வீரமயேச்சுரர் வாழியே" (தக்கயாகப். பக். 255).*

*[வீரம் + மயேச்சுரர்]*

**வீரமயேசுரன்** *viramayēšuran,* பெ.(n.) வீரமகேச்சுரன் (நாமதீப. 35) பார்க்க; see *vira-magēccuran.*

*[வீரம் + மயேசுரன்]*

**வீரமயேந்திரன்** *vira-mayēndiran,* பெ.(n.) வீரமகேந்திரன் (நாமதீப. 35) பார்க்க; see *vira-magēndiran.*

*[வீரம் + மயேந்திரன்]*

**வீரமாகாளன்** *vira-mā-kālan,* பெ.(n.) ஐயனார் சேனைத்தலைவரான சிற்றூர்த் தெய்வம்; a village deity, the head of *Aiyanār's* hosts. *"வெய்யரிற் பெரிதும் வெய்யோன் வீரமாகாளனென்போன்" (கந்தபு. மகாகாளர். 3).*

*[வீரம் + மா + காளன்]*

**வீரமாகாளி** *vira-mā-kāli,* பெ.(n.) காளிதேவி; *kāli,* as the ferocious goddess.

*[வீரம் + மா + காளி]*



**வீரமாகேசம்** *vira-mākēšam,* பெ.(n.) வரிக்கூத்துவகை (சிலப். 3, 13. உரை, பக். 88); a kind of masquerade dance.

*[வீரம் + மாகேசம்]*

**வீரமாபுரந்தரன்** *vira-mā-purandaran,* பெ.(n.) வீரபுரந்தரன் (கந்தபு. துணைவர். 29) பார்க்க; see *vira-purandaran.*

*[வீரம் + மா + புரந்தரன்]*

**வீரமாதிப்பூண்டு** *vira-mādi-p-pūṇdu,* பெ.(n.) நச்சு மூலிகை; a poisonous shrub.

*[வீரமாதி + பூண்டு]*

**வீரமாமகேந்திரன்** *vira-mā-magēndiran,* பெ.(n.) வீரமகேந்திரன் (கந்தபு. துணைவர். 27) பார்க்க; see *vira-magēndiran.*

*[வீரம் + மா + மகேந்திரன்]*

**வீரமாமுனிவர்** *vira-mā-munivar,* பெ.(n.) கி.பி.1680 முதல் 1747 வரை வாழ்ந்த கிறித்தவ ஆசிரியர். சதுரகராதி, தேம்பாவணி, தொன்னூல் விளக்கம் முதலிய நூல்கள் இயற்றியவரும் இத்தாலிய நாட்டவருமான அப்பர்; Father Beschi, an Italian jesuit, 1680-1747, author of *cadur-agarādi, Tēmbāvaṇi, Tonnūl-vilakkam,*etc works.

தமிழ் நாட்டிற்கு வந்தபொழுது, தம் பெயரைத் தைரியநாத சுவாமி எனச் சிறப்பாக அமைத்துக் கொண்டார். அவருடைய இயேசு நாதர் பணியின் ஆர்வமும் தமிழ்ப் புலமையும் கண்ட அக்கால மதுரைச் சங்கத்தார், தைரிய நாத சுவாமியை வீரமாமுனிவர் எனத் தமிழால் அழைத்தனர். சந்தா சாகிப் எனும் அவர் நண்பர் அவரது துறவின் மாண்பை உணர்ந்து 'இஸ்மதி சந்நியாசி' என அவர்க்குப் பட்டம் அளித்தார்.

வீரமாமுனிவர் தமிழ் நாட்டிற்கு வந்த காலத்தில், முதல் ஐந்து ஆறு ஆண்டுகள், காமநாயக்கன்பட்டி, கயத்தாறு, மதுரை, தஞ்சாவூர்,

அரியலூர் முதலான இடங்களில் தொண்டாற்றினார். தமிழ் நாட்டின் தட்பவெப்ப நிலைகளால் அவர் நலிவுற்றாரேனும், தளர்வுற்றார் அல்லர்; சமய நூலைத் தமிழனுக்குத் தமிழனாய் இருந்து கற்பிக்க வேண்டும் என்னும் மதுரை மிஷன் தீர்மானத்தை மனத்திற் கொண்டு, தமிழ்மொழியை நன்றாகப் பேசவும் எழுதவும் கற்று, இலக்கிய இலக்கண நூல்களை ஐயந்திரிபற ஆராய்ந்து, தாமும் அந்நூல்கள் இயற்றும் ஆற்றல் பெற்றனர். அவர் தொடர்புடைய இரு கோயில்கள் தமிழ் இலக்கிய வரலாற்றில் சிறப்புடையதாகக் கூறப்படும் கோனான் குப்பத்தில் அவர் தமிழ் நாட்டுப் பெண்மணிபோல் தேவதாயார் திருவுருவம் அமைத்து, அவரைப் பெரியநாயகி அம்மையார் எனப்போற்றி, அவர் திருவருள் வேண்டித் தேம்பாவணி எனும் பெருங்காப்பியம் யாத்தார். 1717–இல் தஞ்சாவூர் அரசின் கத்தோலிக்கக் குடிகள் இன்புறுமாறு ஏலாக் குறிச்சியில் அமைந்திருந்த அடைக்கலமாதா கோயிலில் சிறப்பு விழா நடத்தித் திருக்காவலூர்க் கலம்பகம் பாடினார். அந்த ஆண்டு முதல் 1742 வரை ஏலாக் குறிச்சியே அவர் திருத்தொண்டிற்கு நடுநிலைக் களமாக விளங்கியது.

1742–இல் முதுமை காரணமாகத் தூத்துக் குடியில் வந்து ஒருவாறு ஒய்வுபெற்று, அவர் தம் அகராதியையும் இலக்கண நூல்களையும் எழுதி வந்தார். பின்பு சேர நாட்டின் அம்பலக் காட்டில் நிறுவப்பெற்ற குரு மடத்தில் தங்கியிருந்து, 1747 பிப்ரவரி 4 ஆம் நாள் இறைவன் திருவடி நிழல் எய்தினார். அவர் கல்லறை இருக்கும் இடம் இன்னதென ஐயந்திரிபற அறிதற்கு இதுகாறும் போதிய சான்றுகள் கிடைத்தில.

அவர் தமிழ்நாட்டில் வாழ்ந்த காலம் அரசியற் புரட்சிகள் நாட்டைத் துன்புறுத்திய காலம், மாராட்டியர், மொகலாயர், ஆந்திரர் ஆகியோர் தமிழ் நாட்டில் அரசுரிமை பாராட்டிய காலம், மதுரை மன்னர்க்கும் சேது பதியார்க்கும் பகை நிகழ்ந்த காலம், தமிழ் நாட்டின் பற்பல இடங்களில் கொடிய போர்கள் நடந்த காலம். கத்தோலிக்கக் குருக்களுக்குப் பலவகை இன்னல்கள் விளைந்த காலம். முனிவர் தாமும் ஒருகால் சிறையிடப் பெற்றுக் கொள்ளத் தீர்ப்புக்கு ஆளாகி, நண்பர் சிலர் உதவியால் விடுதலை பெற்றார். அவரது கல்விப் புலமையினால், அரசியல் தலைவர்கள் பலர் அவருக்கு நண்பர்களாகிக் கத்தோலிக்கர் உரிமைகளை உற்ற வேளையில் காப்பாற்றி வந்தனர். சந்தா சாகிப் அவரை நண்பராய்க் கொண்டதும் அல்லாமல், அவரைச் சிலகாலம் தமக்குத் திவானாகவும் நியமித்து வைத்திருந்தனர் என்று கூறுவர். அவருடைய உரைநடைநூல்கள் தரங்கம்பாடியிலுள்ள டேனியர் சபையின் கொள்கைக்கு மறுப்பாக எழுந்தவை.

தமிழ் நாட்டிற்கு வருவதற்கு முன்னமே, இத்தாலியம், கிரேக்கம், ஈபுறு, இலத்தீன், போர்ச்சுகேசியம் முதலாய மொழிகளையும், அவற்றின் இலக்கியங்களையும் அவர் கற்றுணர்ந்திருந்தனர். இங்கு வந்ததும் தமிழ் மொழியைப் பயின்றறிந்தார். வடமொழி, தெலுங்கு, உருது மொழிகளை நன்கு கற்றார். தமிழுக்குத் தாமே இலக்கணம் வகுக்கப் புகுந்த பொழுது, ஏ,ண, முதலாய எழுத்துக்களின் வடிவங்களில் சிற்சில மாற்றங்கள் அமைத்தனர் என்பர். மேலை நாட்டுக் கலைகளிலும் மொழிகளிலும் புலமை வாய்க்கப் பெற்றவராதலின் தமிழ் இலக்கிய இலக்கணங்களில் அவர் புதுமுறைகளைப் புகுத்தவல்ல பெருமையுடையார் ஆயினர். தம் முப்பதாம் ஆண்டிற்குப் பின்னர்ப் பிற மொழிகற்று, இத்துணைப் புலமை எய்தி, பல்வேறு துறைகளில் நூல்கள் இயற்றியுள்ள பெரியார் இவர் ஒருவரை அன்றி, இவர்க்கு இணையாக வேறு எவரேனும் உலக இலக்கியத்திலேயே இதுகாறும் யாம் காணப் பெற்றிலம். பிற்காலத்தில் தமிழில் இயற்றப்பெற்ற கிறித்தவ இலக்கியங்களுக்கு இவரே முனைவராகவும், வழிகாட்டியாகவும், தந்தையாகவும் விளங்குகின்றார். இவர் எழுதிய தமிழ் நூல்களிலும், பற்பல மொழிகளில் வரைந்துள்ள திருமுகங்களிலும், இவருடைய தமிழ்ப் பற்றும் தணியா வேட்கையும் ததும்பி நிற்கின்றன. இவர் எழுதியுள்ள நூல்கள் மிகப் பல. அவை அனைத்தும் நம் காலத்திற்கு வந்து எட்டில. பதிப்பிற்கு வாராத சில ஏடுகள் ஐரோப்பாவின் நூற்கூடங்களில் இருக்கின்றன எனக் கூறுகின்றனர். இதுகாறும் பதிப்பிக்கப் பெற்று வெளிவந்துள்ள இன்றியமையாத நூல்கள் பற்றி ஒரு சிறிது இங்கே

அறிவது நலம்.

### செய்யுள் நூல்கள் :

### தேம்பாவணி :

இந்நூல் இயேசு பெருமானின் காவல் தந்தையாகிய சூசையப்பரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு இயற்றிய பெருங்காப்பியம். விவிலிய மறையிலிருந்து 150 வரலாற்றுப் பகுதிகளும், கத்தோலிக்கத் திருச்சபையின் கொள்கைகளும், அறிவுரைகளும், வழிபாட்டு முறைகளும், கதை வடிவாகவும், தத்துவ வடிவாகவும் இதில் இடம் பெற்றுள்ளன. தேம்பாவணி கிறித்தவர்க்குக் கலைக்களஞ்சியமாய் விளங்கி நிற்கின்றது. இது சீவக சிந்தாமணி நடையை ஒட்டிய பெருங் காப்பியம். முன்னோர் மொழிந்த பொருளை மட்டுமே அன்றி, அவர் மொழிகளையும் பொன்னேபோல் இவர் இந்நூலுள் போற்றி வைத்திருக்கின்றார். ஆதலின் திருவள்ளுவர், திருத்தக்கதேவர், சேக்கிழார், மாணிக்கவாசகர், கம்பர் முதலான புலவர் பெருமக்களின் சொல்லும் பொருளும் ஆங்காங்கே மிளிர்கின்றன. அவ்வாறே மேலை நாட்டுப் பெரும் புலவராகிய ஹோமர், வர்ஜில், தாந்தே, தாசோ போன்றவர் கருத்துக்களையும் அவர் தமது காப்பியத்தில் புகுத்தியுள்ளார். இக்காப்பியத்திற்கு அவர் தாமே ஓர் உரை எழுதினார் எனக் கூறுகின்றனர். அவ்வுரை நமக்குக் கிடைத்திலது.

### திருக்காவலூர்க் கலம்பகம் :

கொள்ளிடத்தின் வடகரையிலுள்ள ஏலாக்குறிச்சி என்னுமூரில், அடைக்கல மாதா கோயில் நிறுவப் பெற்றிருந்தது. அவ்வூரையே திருக்கோவலூர் எனவும் அழைத்தனர். தஞ்சாவூர்ப் பகுதிகளில் மராட்டியரால் துன்புற்ற கிறித்தவர்களும் இங்குத் தம் ஞானக் கடன்களைத் தீர்க்குமாறு வந்து சென்றனர். அரியலூர் மழவராயர் அக்கோயிலுக்கு ஓர் இடத்தை நன்கொடையாக நல்கினர். முனிவர், அத்திருக் கோயிலில் எழுந்தருளியுள்ள அடைக்கல மாதாவை இனிய கலம்பகப் பனுவலால் பாடினார்.

### கித்தேரி அம்மாள் அம்மானை :

போர்ச்சுகல் நாட்டில், மன்னர் மகளாராகப் பிறந்து, கன்னி நோன்பு பூண்ட நவகன்னியரில் ஒருவராய், கி.பி.130-ல் தம்மைப் பெற்ற தந்தையின் கட்டளையினாலேயே, திருமறைச் சான்றாராய்த் தலை இழந்து உயிர் துறந்த கித்தேரி அம்மையார் திருவுருவத்தைத் திருக்காவலூரில் நிறுவி, அவர் திருவரலாற்றையும், அவர் நிகழ்த்திய புதுமைகளையும் வெண்செந்துறையால், 1,100 திருக்கண்ணிகள் கொண்ட அம்மானைப் பனுவலாக அவர் பாடினார்.

### உரைநடை நூல்கள் :

தமிழ் உரைநடைக்குத் தத்துவபோதகரே தந்தை என்பர். வீரமா முனிவரால் அது வளம்பெற்று உயர்ந்தது. வேதவிளக்கம் தரங்கம்பாடி டேனியர் சபையின் போதனைகளை மறுத்துக் கத்தோலிக்க சபையின் போதனைகளை நிலைநிறுத்துவது. பேதமறுத்தல் டேனியர் கொள்கைகளையும் ஓத்தேரினர் கொள்கைகளையும் ஒருங்கே மறுத்துரைப்பது, வேதியர் ஒழுக்கம் கத்தோலிக்க சபை உபதேசிகர் கடைப்பித் தொழுக வேண்டும் ஒழுக்க முறைகளையும், கடமைகளையும் விளக்கியுரைக்கும் பெருநூல். இதன் அருமை பெருமைகளை உணர்ந்து, இவருடைய எதிர்வாதிகள் தாமும், பிற்காலத்தில் இதனை அச்சிட்டுத் தமது சபை உபதேசிகர் வகுப்பிற்குப் பாடப் புத்தகமாக வைத்து இவற்றை ஞான்றும் வழங்கி வருகின்றனர். இது அவருடைய உரைநடை நூல்களில் சிறந்தது என அறிஞர் போப்பையர் புகழ்ந்துள்ளார். பரமார்த்த குரு கதை நகைச்சுவை நிறைந்து, பஞ்சதந்திரம் போன்று பல நீதிகளை விளக்கியுரைப்பது.

### இலக்கண நூல்கள் :

கொடுந்தமிழ் இலக்கணம், செந்தமிழ் இலக்கணம், செந்தமிழ் விளக்கம் ஆகியவையாம். தொன்னூல் விளக்கம் ஐந்திலக்கணங்களையும் நூற்பாக்களால் எடுத்துக் கூறுகின்றது. இது வீரசோழியம், இலக்கண விளக்கம் என்னும் நூல்கள் போன்றது எனச் சிலர் மொழிவர். உற்று நோக்கி ஆராய்வோர் அவற்றிலும் இது பலவகைச் சிறப்புடையது எனக் காண்பர்.

### அகராதிகள் :

தமிழ் - லத்தீன் அகராதி, இதில் 9,000 கொடுந்தமிழ்ச் சொற்களுக்கும் சொற்றொடர் களுக்கும், லத்தீன் மொழியில் விரிவாகப் பொருள்

கூறப்பட்டிருக்கின்றது.

போர்ச்சுகேசியம் - தமிழ் - லத்தீன் அகராதி :

இந்நூலில் 4,400 போர்ச்சுகீசியச் சொற்களுக்குத் தமிழிலும் இலத்தீனிலும் விளக்கம் கூறப்பட்டிருக்கிறது.

சதுரகராதி :

இதுவே பிற்காலத் தமிழ் அகராதிகளுக் கெல்லாம் தந்தை, பெயர், பொருள், தொகை, தொடை என்னும் நான்கு பிரிவுகள் உடையது. பிங்கலம், திவாகரம், சூடாமணி முதலான பல்வகை நிகண்டுகளிலுமுள்ள சொற்களையெல்லாம் பொறுக்கியெடுத்து, அகர வரிசையாகத் தொகுத்து, மேலை நாடுகளில் வழங்கிய அகராதி முறையில் யாத்த அரிய நூல்.

மொழி பெயர்ப்பு நூல்கள் :

திருக்குறள் அறத்துப்பால், பொருட்பால் இரண்டையும் இவர் லத்தீனில் மொழி பெயர்த்துள்ளார். பிற்காலத்தில் ஆங்கிலம், பிரஞ்சு, ஜெர்மன் முதலான ஐரோப்பிய மொழிகளில் தோன்றிய திருக்குறள் மொழிபெயர்ப்பு நூல்களுக்கெல்லாம் இதுவே அடிப்படையாய் உதவியது. பரமார்த்த குரு கதை முதலான நூல்களை லத்தீன் முதலாய வேற்று மொழிகளில் பெயர்த்துள்ளனர்.

வீரமார்த்தாண்டன் *viramārttāṇḍaṉ,* பெ.(n.) 1. பெருமாவீரன்; illustrious hero. 2. ஒன்பது வீரர்களுள் ஒருவர்; a hero in skanda's army, one of nava-virar, q.v. *"மரகதத்திபால் வீரமார்த்தாண்டன் வந்தனனே" (கந்தபு. துணைவர். 31).*

*[வீரம் + **Skt.** marttānda > த. மார்த்தாண்டன்]*

வீரமாலை *vira-mālai,* பெ.(n.) 1. வெற்றி மாலை (யாழ்.அக.); garland of victory. 2. வீரனைப் புகழ்ந்து பாடும் பாடல் வகை (புதுக். கல். 966); a kind of poem or song in praise of a warrior.

*[வீரம் + மாலை]*

வீரமுட்டி *vira-muṭṭi,* பெ.(n.) வாள் முதலிய படைக்கருவிகளை அணிந்து செல்லும் நெறியில் மனவுறுதி மிக்க வீரசைவத் துறவி; fanatical vira-Saiva mendicant who goes about armed with sword and shield. *"உண்பான் தின்பான் சிவப்பிராமணன், கத்துக்கு நிற்பான் வீரமுட்டி" (பழ.).*

*[வீரம் + முட்டி]*

வீரமுடி *vira-muḍi,* பெ.(n.) வீரரணியுந் தலைக்கவிகை (கிரீடம்); warrior's crown.

*[வீரம் + முடி]*



வீரமுத்திரிகை *vira-muttirigai,* பெ.(n.) காலின் நடுவிரலணி (வின்.); a ring worn on the middle toe.

*[வீரம் + முத்திரிகை]*

வீரமுரசு *vira-murašu,* பெ.(n.) மும்முரசு களுள் வீரத்தின் அறிகுறியாக முழக்கும் முரசம்; drum of heroism, one of *mu-m-murašu*, q.v. *"மயிரான்மிக்க கண்ணினை யுடைய வீரமுரசொலிப்ப" (பு.வெ. 8,17, உரை).*

*[வீரம் + முரசு]*



வீரமுழவு *vīra-mulavu,* பெ.(n.) முரசு, நிசாளம், துடுமை, திமிலை என நால்வகையான போர்ப்பறை; war drum of four kinds viz. *murašu, Nišāḷam, tuḍumai, timilai. "முன்சொன்ன வீரமுழவு நான்கும்" (சிலப். 3, 27, உரை, பக். 106).*

*[வீரம் + முழவு]*

வீரமெழுகு[1] *vīramelugu,* பெ.(n.) ஈளை நோய்க்கு மருந்தாகிய விலாங்கு மீனின் தைலம் வாங்கி வீரத்திற்கு வீரம் கட்டிய மெழுகு; per-chloride is turned into wax like substance when treated with the fat of eel-snake like fish-it removes phlegm.

வீரமெழுகு[2] *vīramelugu,* பெ.(n.) ஒரு பலம் வீரத்தை சீலையிலிட்டு முடிந்து பழங்கலையத்தில் நான்கு இளநீர் விட்டு அதில் தோலாந்திரமாகக் கட்டி இரண்டு நாழி எரித்து அடுப்புக்கு மேல் தொங்கவிட்டு உலர்த்தி எடுக்கவும், தேன், முலைப்பால், இஞ்சி ரசம் இவைகளில் கொடுக்கவும், சன்னி காய்ச்சல் குற்றம் போம். இச்சா பத்தியம், மாலை மிளகு கியாழம் கொள்ளவும்; a siddha preparation for cronical fever.

வீரமொழி *vīra-moli,* பெ.(n.) துணிவுடன் உரத்து மொழிகை; defiant speech. *"கண்ணகி சொல்லிய வீரமொழி" (சிலப். 25, 82, அரும்.).*

*[வீரம்[1] + மொழி[2]]*

வீரயாகம் *vīra-yāgam,* பெ.(n.) வீரபத்திரன் பொருட்டுச் செய்யும் வேள்விவகை (யாழ்.அக.); a sacrifice in honour of *virapattiran.*

*[வீரன் + **Skt.** yakya > த. யாகம்]*

வீரரசம் *vīra-rašam,* பெ.(n.) வீரம்[1], 2 (சிலப். 3, 13, உரை) பார்க்க; see *vīram[1].*

*[வீரம் + **Skt.** raša > த. ரசம்]*

வீரரதம் *vīra-radam,* பெ.(n.) அம்பு (யாழ்.அக.); arrow.

*[வீரம் + **Skt.** rathā > த. ரதம்]*

வீரராக்கதன் *vīra-rākkadan,* பெ.(n.) வீரராட்சதன் பார்க்க; see *vīra-rāṭcadan.* (கந்தபு. துணைவர். 30).

*[வீர + **Skt.** rakshasha > த. ராக்கதன்]*

வீரராட்சதன் *vīra-rāṭcadan,* பெ.(n.) ஒன்பதுவீரருள் ஒருவர் (வின்.); a hero in skanda's army one of *nava-vīrar,* q.v.

*[வீரம் + **Skt.** rakshasha > த. ராட்சதன்]*

வீரராயன்பணம் *vīra-rāyan-paṇam,* பெ.(n.) பழைய காசு வகை (பணவிடு. 142); an ancient coin.

*[வீரம் + அரையன்ராயன் + பணம்]*

வீரலட்சுமி *vīra-laṭcumi,* பெ.(n.) வீரலஷ்மி பார்க்க; see *vīra-lasmi.*

*[வீரம் + **Skt.** lakshimi > த. லட்சுமி]*

வீரலஷ்மி *vira-lasmi,* பெ.(n.) 1. வீரத்திற் குரிய கடவுள்; the Goddess of bravery. 2. வீரமாகிய செல்வம்; bravery, heroism, as wealth. 3. வெற்றிக்குரிய கடவுள்; the Goddess of victory.

*[வீரம் +* **Skt.** *latcumi > த. லஷ்மி]*

வீரவசந்தம் *vira-vašandam,* பெ.(n.) பண்வகை (பரத. ராக. பக். 102); a specific melody type.

*[வீரம் +* **Skt.** *vasanta > த. வசந்தம்]*

வீரவஞ்சி *vira-vañji,* பெ.(n.) வஞ்சிக்கொடி; rattan creeper - calamus rotang.

*[வீரம் + வஞ்சி]*

வீரவண்டயம் *vira-vandayam,* பெ.(n.) வீரவெண்டையம், 1 (திவ். திருப்பா. 17. வ்யா.) பார்க்க; see *vira-vendaiyam.*

*[வீரம் + வண்டயம்]*

வீரவரை—த்தல் *vira-v-arai-,* 4 செ.குன்றாவி. (v.t.) திறங் கொண்ட மட்டும் வலுவாக மருந்தைக் கல்வத்திட்டரைத்தல்; to grind well with the best of ability and power.

*[வீரம் + அரை–,]*

வீரவளை *vira-valai,* பெ.(n.) வீரரணியும் கடகம்; warrior's armlet. *"வீரவளையை யுடைய தோளாகிய துடுப்பால்" (புறநா. 26. உரை).*

*[வீரம் + வளை]*

வீரவாகு *vira-vāgu,* பெ.(n.) 1. ஒன்பது வீரருள் ஒருவர்; a hero in skanda's army, one of *nava-virar.* q.v. *"செம்மணிப் பாவை தன் னிடத்தில் வீரவாகுவந் துதித்தனன்" (கந்தபு. துணைவர். 25).* 2. காசியில் அரிச்சந்திரனை விலைக்குப் பெற்ற பறையன்; the *paraiya* who purchased hariccandra, in Benares.

வீரவாதம் *vira-vādam,* பெ.(n.) வீரர் உரத்துக் கூறும் ஆண்மைப் பேச்சு; defiant speech of warriors.

*[வீரம் +* **Skt.** *vata > த. வாதம்]*

வீரவாரம்[1] *vira-v-āram,* பெ.(n.) வீரரணியும் வெட்சிமாலை (யாழ்.அக.); garland of *vetci* flowers, won by warriors.

*[வீரம் + ஆரம்]*

வீரவாரம்[2] *vira-v-āram,* பெ.(n.) பேராரவாரம்; tumultuous noise. *'அங்கு என்ன சிறப்பு? வீரவாரம் செய்கிறார்களே'.*

*[வீரம் + ஆரவாரம்]*

வீரவாளிச்சேலை *vira-vāli-c-cēlai,* பெ.(n.) வீரவாளிப்பட்டு (வின்.) பார்க்க; see *vira-vāli-p-pattu.*

வீரவாளிப்பட்டு *vira-vāli-p-pattu,* பெ.(n.) ஒவியப்பட்டுச்சீலை வகை (வின்.); a kind of silk saree printed with curious devices.

*[வீரவாளி + பட்டு]*

வீரவான் *vira-vān,* பெ.(n.) மாவீரன்; warrior, hero.

*[வீரன் + அவன் → வீரனவன் → வீரவான்]*

வீரவிரதம் *vira-viradam,* பெ.(n.) வீரன் பயிலுங் கொடிய நோன்பு; rigorous austerities, as practised by a warrior. *"வீரவிரதமவள் பிடித்து..... மெலிவுற்றார்" (செவ்வந்திப்பு..... சூரவாதி. 139).*

[வீரம் + விரதம்]

**வீரவிருட்சம்** *vira-viruṭšam,* பெ.(n.) சேமரம்; marking nut tree.

[வீரம் + விருட்சம்]

**வீரவிருக்ஷம்** *vira-viruksam,* பெ.(n.) வீரசாகி (வின்.) பார்க்க; see *vira-šāgi.*

[வீரம் + விருக்ஷம். விருஷம் = **Skt.**]

**வீரவுப்பு**[1] *vira-v-uppu,* பெ.(n.) பூரணாதியுப்பு; a kind of salt.

[வீரம் + உப்பு]

**வீரவுப்பு**[2] *vira-v-uppu,* பெ.(n.) கல்லுப்பு (மூ.அ.); rock-salt.

[வீரம் + உப்பு]

**வீரவெட்சிமாலை** *vira-veṭci-mālai,* பெ.(n.) தொண்ணூற்றாறு சிற்றிலக்கியங்களுள் வெட்சி மாலை சூடிப் பகைவர் நிரை கவர்ந்து வந்த வீரனது வெற்றித் திறத்தைத் பத்து உறுப்புக்களோடு புகழும் நூல் (சது.); a poem in praise of *tašāngam* of a hero who, crowned with a wreath of *veṭci* flowers, captures his enemy's cattle, one of 96 pirapandam, q.v.

[வீரம் + வெட்சி + மாலை]

**வீரவெண்டையம்** *vira-veṇḍaiyam,* பெ.(n.) 1. வீரக்கழல் பார்க்க; see *vira-k-kaḻal.* 2. திருவாரூர்த்தியாகராசரது பட்டாக்கத்தி; sword of the god TIYAGARAJA at *Tiru-v-ārūr.* *"வீரவெண்டையப் பிரதாபர் தியாகராசர்" (தனிப்பா. i, 280. 25).*

[வீரம் + வெண்டையம்]

வெண்டையம் = வீரர் காலணி.

**வீரவெறி** *vira-veṟi,* பெ.(n.) வீரத்தாலான மதர்ப்பு (யாழ்.அக.); frenzy of heroism.

[வீரம் + நெறி]

**வீரவைணவன்** *vira-vaiṇavaṉ,* பெ.(n.) மதப்பற்றுடைய மாலிய சமயத்தோன்; fanatical, uncompromising, vaisnaya having ardent faith in *Vaishṇnavism.* *'நெறிப்பற்று மிக்க மாலியக் கோட்பாடுடையவன்'.*

[வீரம் + வைணவன்]

**வீரன்** *viraṉ,* பெ.(n.) 1. ஆண்மையுள்ளவன்; hero, warrior. *"நன்னீர் சொரிந்தனன் வீரனேற்றான்" (சீவக. 489).* 2. வீரபத்திரன்; virabhadra. *"நெற்றி விழிக்கவந்து பணிந்துநின்றனன் வீரனே" (தக்கயாகப். 334).* 3. அருகன்; arhat. *"வீரன் றாணிழல் விளங்க நோற்றபின்" (சீவக. 409).* 4. படைத் தலைவன் (திவா.); commander. 5. வீடுமன் (யாழ்.அக.); *Bhisma.* 6. மதுரைவீரன்; a village deity. 7. நெருப்பு (யாழ்.அக.); fire. 8. வேள்வித்தீ (யாழ்.அக.); sacrificial fire. 9. கூத்தாடி (யாழ்.அக.); dancer.

*'வீரன் கேண்மை கூர் அம்பாகும்' (பழ.).*

**வீராகம்** *virāgam,* பெ.(n.) வீரயாகம் (இலக்.அக.) பார்க்க; see *vira-yāgam.*

[வீரம் + **Skt.** *yakya* > த. யாகம்]

**வீராகரன்** *virāgaraṉ,* பெ.(n.) மாவீரன்; great warrior. *"மின்னும் புகழ்க்கு நல்லோனே வீராகரனே" (திருவாலவா. 54,4).*

**வீராசனம்** *virāšaṉam,* பெ.(n.) 1. ஒக இருக்கை ஒன்பதனுள் இடது தொடையில் வலது தாளையும் வலது தொடையில் இடது தாளையும் வைத்து உட்காரும் இருக்கை

வேறுபாடு; hero-posture, a yōgic posture which consists in placing the right foot on the left thigh and the left foot on the right thigh, one of nine *āšaṉam*,q.v. 2. போர்க்களம் (யாழ்.அக.); battle-field.

*[வீரம் + **Skt.** āšaṉā > த. ஆசனம்]*

**வீராசாரன்** *virāšāraṉ,* பெ.(n.) வீரசைவன் (அரு.நி. 8) பார்க்க; see *vira-šaivaṉ.*

*[வீர + ஆசாரன்]*

**வீராசிகா** *virāšigā,* பெ.(n.) நாணற்புல், தருப்பைப்புல்; sacrificial grass.

**வீராணத்தான்** *virāṇattāṉ,* பெ.(n.) வீராணப்பறை கொட்டும் ஐவர் (பஞ்சமர்) வகையினன்; a division of paraiyar who beat the *virāṇam* drum.

*[வீராணம் → வீராணத்தான்]*

**வீராணம்**[1] *virāṇam,* பெ.(n.) ஒருவகைப் பெரியபறை; a large, double drum. *"வீராணம் வெற்றிமுரசு" (திருப்பு. 264)*

தெ. வீராணமு; க. வீராண்ய.



**வீராணம்**[2] *virāṇam,* பெ.(n.) வீரநாராயண ஏரி என்பது வழக்கில் சுருங்கி 'வீராணம்' என வழங்கும் தென்னாற்காடு மாவட்ட ஏரி; the term *veeranārayaṇa ēri* conscised as (veeranam) a great lake in south Arcot Dt.

**வீராணிக்கிழங்கு** *virāṇi-k-kiḻaṅgu,* பெ.(n.) 1. பூடுவகை; viper's grass. 2. வீராணிக் கிழங்கின் வேர்; root of viper's grass.

*[வீரணம் + கிழங்கு]*

**வீராணிவாழை** *virāṇi-vāḻai,* பெ.(n.) ஒருவகை வாழை; a kind of plantain.

*[வீராணி + வாழை]*

**வீராதனம்** *virādaṉam,* பெ.(n.) வீராசனம் (தத்துவப். 107. உரை) பார்க்க; see *virāšaṉam.*

*[வீரம் + ஆதனம்]*

**வீராதிவீரன்** *virādi-viraṉ,* பெ.(n.) வீரர்களுட் சிறந்த வீரன்; hero among heroes.

*[வீரன் + அதி + வீரன். அதி = மிகுதிப் பொருள் தரும் முன்னொட்டு]*

**வீராந்தகன்** *virāndagaṉ,* பெ.(n.) ஒன்பது வீரருள் (கந்தபு. துணைவர். 32); a hero in skanda's army, one of *nava-virar*, q.v.

*[வீர + அந்தகன்]*

**வீராப்பு** *virāppu,* பெ.(n.) செருக்கு (யாழ்.அக.); pride, arrogance.

மறுவ. இறுமாப்பு.

*[வீறாப்பு → வீராப்பு]*

**வீராபிடேகம்** *virābiḍēgam,* பெ.(n.) பகைவென்ற அரசர்க்குச் செய்யும் திருமுழுக்காட்டு (சீவக. 2326. உரை); ceremony of anointing a victorious king.

வீராய்-தல் *vīrāy-*, 10 செ.குன்றாவி.(v.t.) சிறிதுசிறிதாக ஒன்றுகூட்டுதல் (யாழ்.அக.); to scrape together; to gather together little by little.

*[பீராய் → வீராய்-,]*

வீராவளி *vīrāvaḷi,* பெ.(n.) வீரவெறி (யாழ்.அக.) பார்க்க; see *vīraveṟi.*

*[வீரம் + ஆவலிப்பு → வீராவளி ஆவலிப்பு = செருக்கு]*

வீராவேசம் *vīrāvēšam,* பெ.(n.) வீரவெறி (யாழ்.அக.) பார்க்க; see *vīra-veṟi.*

*[வீரம் +* **Skt.** *āvēsā > த. ஆவேசம்]*

வீராளிப்பட்டு *vīrāḷi-p-paṭṭu,* பெ.(n.) மாதவிலக்குக்குரிய சேலை; menrustal cloth.

*[வீராளி + பட்டு]*

வீரி[1] *vīri,* பெ.(n.) 1. வட்டத்திருப்பி; twiner-cissampelos pareira. 2. பங்கம் பாளை; a bitter prostate plant.

வீரி[2] *vīri,* பெ.(n.) 1. வீரமுள்ளவள்; heroic woman. 2. காளி (சூடா.); *kāḷi.* 3. கொற்றவை (துர்க்கை); *Durgā. "வேலார்கை வீரியைமுன் படைத்தார் போலும்" (தேவா. 597.6).* 4. சிற்றூர் பெண் தெய்வம்; a village goddess. 5. அரிவாண்முனைப்பூண்டு; sickle-leaf.

*[வீரம் → வீரி]*

வீரிட்டழு-தல் *vīriṭṭaḻu-,* 1 செ.கு.வி.(v.i.) கூக்குரலெடுத்துக் குழந்தைத் திடுமென் றழுதல்; as in children - to cry deeply.

வீரிடம் *vīriḍam,* பெ.(n.) நாவல்,1 (மலை.); jumoonplum.

தெ. நேரெடு.

வீரிடு-தல் *vīriḍu-,* 20 செ.கு.வி.(v.i.) திடீரெனக் கத்துதல்; to cry out suddenly, to scream, make a sharp, shrill sound. *"வீரிட்டரக்கியர்..... அழ" (இராமநா. உயுத். 58).*

*[வீறிடு → வீரிடு-,]*

வீரிணிகா *vīriṇikā,* பெ.(n.) வில்வம்; a sacred tree - batel tree - Aegle marme losa.

வீரிப்பால் *vīri-p-pāl,* பெ.(n.) எருக்கம் பால்; milk drawn from calotropis gingantia.

வீரிப்பாவிகம் *vīri-p-pāvigam,* பெ.(n.) எட்டிவிரை; seeds of nuxvomica.

வீரிப்பாளை *vīri-p-pāḷai,* பெ.(n.) பங்கம் பாளை; a bitter ash coloured prostate plant.

வீரிமுத்து *vīri-muttu,* பெ.(n.) கொட்டை முத்து; castor seed.

வீரியத்தரிசி *vīriyattariši,* பெ.(n.) வாளானரிசி; a kind of rice.

வீரியதேசு *vīriya-tēšu,* பெ.(n.) வல்லாரை; a prostate plant.

வீரியன் *vīriyaṉ,* பெ.(n.) ஓர் பூண்டு; a plant.

வீரியன்னம் *vīriyaṉṉam,* பெ.(n.) மருள்; a kind of medicinal herb.

மறுவ. மரநாக.



வீரியாடி *vīriyāḍi,* பெ.(n.) நரிப்பயறு; a green pulse. (சாஅக.)

வீருஅண்டம் *vīru-aṇḍam,* பெ.(n.) அண்ட நோய்; a disease of the scrotum. (சாஅக.)

வீருதம்¹ *vīrudam,* பெ.(n.) படர்ந்து காய்க்குங் கொடிகள்; spreading plant. (சாஅக.)

வீருதம்² *vīrudam,* பெ.(n.) மிடைதூறு (வின்.); bush, small shrub. (சாஅக.)

வீரெனல் *vīreṉal,* பெ.(n.) திடீரெனக் கத்தும் ஒலிக்குறிப்பு; onom.expr. of a sharp, shrill cry. *'குழந்தை வீரென்று கத்திற்று'.*

வீரை¹ *vīrai,* பெ.(n.) 1. கடல் (பிங்.); sea. *"திரை வீரை" (திருவிசை. திருமாளி. 3,5).* 2. துன்பம் (பிங்.); affliction, trouble. 3. மரவகை; a kind of tree. *"புகைந்த வீரை யெரிந்தவே" (கலிங். 63).* 4. நெல்லி, 1 (இலக்.அக.) பார்க்க; see *nelli*. 5. முந்திரிகை², 1 (இலக்.அக.); common grape vine. 6. வட்டத்திருப்பி (தைலவ.); sickle-leaf. 7. மயிர் மாணிக்கம் (பிங்.); common snakewood buckthorn.

வீரை² *vīrai,* பெ.(n.) 1. மனைவி (யாழ்.அக.); wife. 2. தாய் (யாழ்.அக.); mother. 3. வாழை (சங்.அக.); plantain.

வீரையாசுகவிராயர் *vīrai-y-āšukavirāyar,* பெ.(n.) 16-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவரும் அரிச்சந்திரப் பழங்கதை (புராணம்) இயற்றிய வருமான புலவர்; *āšukavi-rāyar* of virai, author of *Ariccandira-palaṅ-kadai.*

*[வீரை + ஆசுகவிராயர்]*

வீரோத்துங்கன் *vīrōttuṅgaṉ,* பெ.(n.) வீரத்தாற் சிறந்தவன் (வின்.); person famed for his valour.

*[வீர + உத்துங்கன்]*

வீரோதம் *vīrōdam,* பெ.(n.) நல்ல மாதுளை; good pomegranate.

வீவு *vīvu,* பெ.(n.) 1. அழிவு; ruin, destruction. *"வீவி லாற்றலொர் மீளி" (சீகாளத். பு. கண்ண. 50).* 2. இறப்பு (பிங்.); death. 3. கெடுகை; eradication, removal. *"வீவருங் கடுநோய்" (குறிஞ்சிப். 3).* 4. முடிவு; end. *"வீவில் சீரன்" (திவ். திருவாய். 4,5,3).* 5. குற்றம்; defect, flaw. *"போகலர் யாவும் வீவுக வியற்றல்" (ஞானா. 53, 18).* 6. இடையீடு; interruption, intervel. *"வீவின்றி நின்றவர்க் கின்பக் கதிசெய்யும்" (திவ். திருவாய். 7, 5, 11.).*

*[வீ → வீவு]*

வீழ்¹-தல் *vīḻ-,* 4 செ.கு.வி.(v.i.) 1. விழு¹-,1 பார்க்க; see *viḻu¹*. *"விசும்பிற் றுளிவீழி னல்லால்" (குறள், 16).* 2. விழு¹-,2,3,4,5,6 பார்க்க; see *viḻu¹-*. 3. விழு¹-, 7 பார்க்க; see *viḻu¹*. *"பயன்மர மெல்லாங் கணியுதிர்ந்து வீழுந்தற்று" (நாலடி, 17).*

4. விழு¹-, 8 பார்க்க; *viḻu¹*. *"கிடங்கோ டருமிளை காத்து வீழ்ந்த வேலோர்" (பு.வெ. 5, 4, கொளு.).* 5. விழு¹-, 9. பார்க்க; see *viḻu¹*. *"வீழ்கதிரென" (மணிமே. 30, 103).* 6. விழு¹-, 10, 11 பார்க்க; see *viḻu¹*. 7. விழு¹-, 12 பார்க்க; see *viḻu¹*. *"ஒருநாளே வெள்ளநிதி வீழும்" (சீவக. 496).* 8. விழு¹-, 13,14,15,16,17,18. பார்க்க; see *viḻu¹*. 9. நீங்குதல்; to be separated. *"திருவீழ் மார்பிற் றென்னவர் கோவே" (சிலப். 20, 23).* 10. விழு¹-, 19 பார்க்க; see *viḻu¹*. *"அகத்தோன் வீழ்ந்த நொச்சியும்" (தொல். பொருள். 68). "தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர்" (குறள், 1191).* 11. விழு¹, 20, 21, 22, 23, 24, 25, 26 பார்க்க; see *viḻu*. 12. விழு¹-, 27 பார்க்க; see *viḻu¹*. *"வீழ்கயிற் றூசல்" (அகநா. 38).* 13. விழு¹-, 28, 29 பார்க்க; see *viḻu¹*.

*[விள் → வீள் → வீழ் → வீழ்-,] (மு.தா. 69)*

**வீழ்²-த்தல்** *viḻ-*, 5 செ.குன்றாவி.(v.t.) 1. வீழச்செய்தல்; to cause to fall. *"கூற்றென வேழம் வீழா" (சீவக. 2283).* 2. வீணாகக் கழித்தல்; to let pass, to waste. *"வீழ்த்தவா வினையேன் கெடுங் காலமே" (தேவா. 1203, 7).*

க. பீழிசு; து. பூரு.

*[வீழ் → வீழ்]*

**வீழ்³-த்தல்** *viḻ-*, 4 செ.கு.வி.(v.i.) தாழ விருத்தல்; to hang down. *"கொழுங்கொடி வள்ளித் தாழவீழ்க் கும்மே" (புறநா. 109).*

**வீழ்⁴-த்தல்** *viḻ-*, 11 செ.கு.வி.(v.i.) நோயால் விழச் செய்தல்; causing to fall as from disease of illness.

**வீழ்⁵** *viḻ*, பெ.(n.) 1. விழுது, 1 பார்க்க; see *viḻudu*. *"நெடுஞ்சினை வீழ்பொறுத் தாங்கு" (புறநா. 58).* 2. மங்கலநாண்; cord on which the marriage-badge is strung. *"அவர் முலையாகத்து..... நெடுவீழ் தாழ" (நெடுநல். 137).*

க. பீழல்.

*[வீ → வீழ்]*

**வீழ்⁶** *viḻ*, இடை. (part.) ஓர் உவமவுருபு (தண்டி. 33); a particle of comparison.

**வீழ்க்காடு** *viḻ-k-kāḍu*, பெ.(n.) 1. வீழ்ச்சி; swooping. *"பருந்தின் வீழ்க்காடு" (இறை. 4, பக். 57).* 2. வீதம்; rate. *'ஒவ்வொருவனுக்கும் இரண்டு வீழ்க்காடு கொடுத்தான்'.*

*[வீழ் + காடு]*

**வீழ்க்கை** *viḻkkai*, பெ.(n.) விளக்கு (சுவாதி) நாள் (பிங்.); the 15th naksatra.

**வீழ்கதி** *viḻ-kadi*, பெ.(n.) நிரயம் (நரகம்) (யாழ்.அக.); hell.

*[வீழ்¹- + கதி]*

*கதி = நிலை.*

**வீழ்கதிர்** *viḻ-kadiru*, பெ.(n.) மறையும் கதிரவன் (மணிமே. 30, 103); setting sun.

மறுவ. படுஞாயிறு.

*[வீழ் + கதிர்]*

**வீழ்ச்சி** *viḻcci*, பெ.(n.) வீழ்வு பார்க்க; see *viḻvu*.

*[வீழ் → வீழ்ச்சி]*

**வீழ்ச்சை** *viḻccai*, பெ.(n.) குற்றம் (நாஞ்.); fault; defect.

ம. விழ்ச்ச.

*ஒருகா: வரு → வீழ் → வீழ்ச்சை.*

**வீழ்த்து-தல்** *vīḻttu-,* 5 செ.குன்றாவி.(v.t.) வீழ்²-,1 பார்க்க; see *vīḻ.* *“அம்பா லறுத்தறுத்து வீழ்த்தினனே” (பாரத. பதினேழாம். 170).*

*[வீழ் → வீழ்த்து]*

**வீழ்ந்தாடல்** *vīḻndāḍal,* பெ.(n.) துடி, கடையம், பேடு, மரக்கால், பாவை என ஐவகைப்பட்ட கூத்துவகை (சிலப். 3, 14, உரை, பக். 89); a kind of dance, of which there are five forms, viz., *tuḍi, kaḍaiyam, pēḍu, marakkāl, pāvai.*

*[விழா → வீழ் → வீழ்ந்து + ஆடல்]*

**வீழ்நாள்** *vīḻ-nāḷ,* பெ.(n.) வீணாள்; day spent in vain. *“வீழ்நாள் படாஅமை நன்றாற்றின்” (குறள், 38).*

மறுவ. வீண்காலம்.

*[வீழ் + நாள்]*

**வீழ்ப்பிரமி** *vīḻ-p-pirami,* பெ.(n.) ஒழுக்குப் பிரமியம், தென்னம் பூவால் போம்; gonorrhoea, gleet, it is cured by coconut flower.

**வீழ்பிடி** *vīḻ-piḍi,* பெ.(n.) 1. குறைவு; decrease. 2. வெறுப்பு; dislike.

*[வீழ் + பிடி]*

**வீழ்பு** *vīḻpu,* பெ.(n.) சுள்ளி; twig, small stick. *“நெடுஞ்சினைத் ததர்வீழ் பொடித்துக் கட்டிய வுடையினன்” (மணிமே. 3, 107).*

**வீழ்மீன்** *vīḻ-mīṉ,* பெ.(n.) விண்வீழ்கொள்ளி (தொல். பொருள். 91, உரை); meteor.

மறுவ. எரிமீன்.

*[வீழ் + மீன்]*

**வீழ்வு** *vīḻvu,* பெ.(n.) 1. விழுகை; falling; descending. 2. பாய்ச்சல்; swoop. *“பருந்தின் வீழ்வு” (நன். 19).* 3. விருப்பம்; desire. *“வீழ்வுகொடு வாளா விழுகின்றாய்” (அருட்பா.i, நெஞ்சறி. 540).*

ம. விழு.

*[வீழ் → வீழ்வு]*

**வீழ்வேயம்** *vīḻ-vēyam,* பெ.(n.) கொடிச் சம்பங்கி; climbing sampak.



**வீழ** *vīḻa,* இடை. (part.) ஓர் உவமவுருபு (தொல். பொருள். 2); a particle of comparison.

**வீழி¹** *vīḻi,* பெ.(n.) 1. நீர்முள்ளி; a thorny plant. 2. அயத்தை ஈயமாக்கி பார்க்க; see *ayattai-ēyamākki.* 3. மரவிழுது; adventitious root.

**வீழி²** *vīḻi,* பெ.(n.) மருந்துச்செடி வகை; a straggling shrub with simple oblong leaves and greenish flowers. *"வீழிவாயின் கனிவா யொரு மெல்லியல்" (கம்பரா. புனல்விளை. 28).* 2. தஞ்சாவூர் மாவட்டத்தி

லுள்ள திருவீழிமிலை என்னும் சிவன் கோயில்; a *śiva* shrine in the Tanjore district. *"ஆய வீழி கொண்டீர்" (தேவா. 600, 9). "காழிமாநகர் வாழி சம்பந்தன் வீழிமிழலைமேல் தாழும் மொழிகளே" (தேவா. 3)*

வீழி³ *vīḻi,* பெ.(n.) இளமையாக்கும் மருந்துச் சரக்குள் ஒன்று; a rujuvenated drug.

மறுவ. விழுதி, நாட்டு விழி.

வீழிச்சாறு *vīḻi-c-cāṟu,* பெ.(n.) விழுதிச்சாறு; juice of *viḻudi.*

வீழிச்சூரணம் *vīḻi-c-cūraṇam,* பெ.(n.) வீழிவேர்ப்பொடி; powder of the root of *vīḻi.*

வீழிப்பட்டை *vīḻi-p-paṭṭai,* பெ.(n.) விழுதிப்பட்டை; bark of *viḻudi.*

வீழியர் *vīḻiyar,* பெ.(n.) பார்ப்பனருள் ஒரு வகையினர்; a division of *smārta Brāhmans.*

வீழிறாழை *vīḻiṟāḻai,* பெ.(n.) தென்னை பார்க்க; see *teṉṉai.* coconut-palm. *"வீழிறாழைக் குழவித்தீநீர்" (பெரும்பாண். 357).*

*[வீழ் + இல் + தாழை]*



வீலி *vīli,* பெ.(n.) வெள்ளி; silver.

வீளெனல் *vīḷeṉal,* பெ.(n.) திடீரெனக்கத்தும் ஓசைக்குறிப்பு; onom. expr. of a shrill, sudden noise or cry.

*[வீரெனல் → வீளெனல்]*

வீளை *vīḷai,* பெ.(n.) 1. சீழ்க்கை; whistling. *"மடிவிடு வீளையர்" (குறிஞ்சிப். 161).* 2. சிள்ளென்ற ஓசை; shrill sound. *"வீளைப் பருந்தின்" (அகநா. 33).* 3. ஒலி; noise. *"வீளைக் கடுங் கணையால்" (பு.வெ. 10,8).*

தெ. ஈல; **Ko.** *viḷu.*

வீற்றம் *vīṟṟam,* பெ.(n.) வீற்று, 1 (வின்.) பார்க்க; see *vīṟṟu.*

*[வீற்று → வீற்றம்] (செல்வி '77 ஆனி, 545)*

வீற்றா-தல் *vīṟṟā-,* 6 செ.கு.வி. (v.i.) பிரிவுபடுதல்; to be dismembered, to become separate. *"மறிந்து சகடம் வீற்றாகி...... வீழ்ந்ததால்" (பாகவ. 10, சகட. 2).*

*[வீற்று + ஆ-,]*

வீற்றிரு-த்தல் *vīṟṟiru-,* 3 செ.கு.வி.(v.i.) 1. சிறப்போடிருத்தல்; to sit in state or majestically. *"கேள்விக்கோ வீற்றிருந்த" (சீவக. 30).* 2. வேறுபாடு தோன்ற இருத்தல்; to sit with unique distinction. *"வீற்றிருந் தேழுலகுந் தனிக்கோல் செல்ல" (திவ். திருவாய். 4, 5, 1).* 3. இறுமாந்திருத்தல் (சூடா.); to sit proudly. 4. கவலையின்றி யிருத்தல்; to be care-free. *"நாடு..... வீற்றிருந்தாண்மோ வென்றான்" (சீவக. 2901).* 5. தனிமையாயிருத்தல் (யாழ்.அக.); to sit alone.

*[வீறு → வீற்று + இரு-,]*

**வீற்றிருக்கை** *virrirukkai,* பெ.(n.) அரசிருக்கை; throne. *"நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனின்" (குறள், 789).*

*[வீற்றிரு → வீற்றிருக்கை]*



**வீற்றினிதிருந்தபெருமங்கலம்** *virrinidirunda-perumangalam,* பெ.(n.) பாடாண் திணையின் வகைகளுள் ஒன்றாக வருவதும், அரசன் தனக்கு ஒப்பாரும் மிக்காருமில்லாமையால் தன் மிகுதி தோன்ற இறுமாந்திருத்தலுமாகிய புறத்துறை; (purap.) thane praising a hero's fame, power, etc.

"கூற்றிருந்த கொலைவேலான்
வீற்றிருந்த விறல்மிகுத்தன்று" (பு.வெ.920).

அரசன் தனது அரியணை மீது செம்மாந்திருந்த வெற்றியைப் பாராட்டியது இத்துறை.

எ–டு.

அழலவிர் பைங்கண் அரிமான் அமளி
நிழலவிர் பூண் மன்னர் நின்றேத்தக் கழல்புனைந்து
வீமலிதார் மன்னவனாய் வீற்றிருந்தான்
வீங்கொலிநீர்ப்
பூமலி நாவற் பொழிற்கு.

**வீற்று** *virru,* பெ.(n.) 1. வேறுபடுகை (பிங்.); being different; diversity. 2. துண்டு; piece. *"வீற்று வீற்றாகி யோடி விழுதலும்" (கம்பரா. கும்பக.187).* 3. கூறு; division, class. *"தந்தை தன்னைய ராயிரு வீற்றும்" (இறை. 28).* 4. தனிமை (வின்.); solitariness. 5. வளைவு (வின்.); curve. 6. பக்கம்; side. *"இருவீற்று முரித்தே சுட்டுங்காலை" (தொல். பொருளியல். 26).*

*[வீறு → வீற்று] (செல்வி 'ஆனி' 77, பக். 545)*

**வீற்றுச்சட்டம்** *virru-c-cattam,* பெ.(n.) வளைவுச்சட்டம்; circular frame-work.

*[வீற்று + சட்டம்]*

**வீற்றுத்தெய்வம்** *virru-t-teyvam,* பெ.(n.) உடலிலமர்ந்து காட்சியின்பத்தை யுண்டாக்குந் தெய்வம் (சீவக. 411, உரை); the Goddess dwelling in the body and giving it beauty.

*[வீறு → வீற்று + தெய்வம்]*

**வீற்றுப்பொருள்** *virru-p-porul,* பெ.(n.) சில்லறைப் பண்டம் (வின்.); sundry goods.

*[வீற்று + பொருள்]*

**வீற்றும்** *virrum,* குவி.எ.(adv.) மற்றும்; in addition, besides. *"வீற்று மாயிரம் வெங்கணை யுந்தினான்" (கந்தபு. சிங்கமு. 402).*

*[வீற்று → வீற்றும்] (செல்வி. '77' ஆனி 545)*

**வீற்றுவளம்** *virru-valam,* பெ.(n.) பிறநாட்டுக்கில்லாத செல்வம் (மலைபடு. 68); natural wealth peculiar to a country.

*[வீற்று + வளம்]*

**வீற்றுவளைவு** *virru-valaivu,* பெ.(n.) வட்டமான கட்டட வளைவு; circular arch.

*[வீற்று + வளைவு]*



வீற்றுவீற்றாக *vīṟṟu-vīṟṟāga,* வி.எ.(adv.) வெவ்வேறாக; severally, separately.

*[வீற்றுவீற்று + ஆக]*

வீற்றுவீற்று *vīṟṟu-vīṟṟu,* பெ.(n.) வெவ்வேறு; separateness. *"வெளிற்றுப் பனந்துணியின் வீற்று வீற்றுக் கிடப்ப" (புறநா. 35). "வீற்று வீற்றோடு மயிலினம்போல்" (களவழி. 29).*

*[வீற்று + வீற்று]*

வீறல் *vīṟal,* பெ.(n.) வெடிப்பு; crack.

*[வீறு → வீறல்]*

வீறாட்டம் *vīṟāṭṭam,* பெ.(n.) இறுமாப்பு; arrogance. *"வீறாட்ட முற்றழியு மாறாட்டகத் தடியன்" (பேரின்பக்கீர்த். பக். 104).*

*[வீறு + ஆடு → ஆட்டம்]*

வீறாப்பு *vīṟāppu,* பெ.(n.) இறுமாப்பு; arrogance. *"இந்தமுறுக்கேன் வீறாப்பேன்" (தனிப்பா. i, 88, 173).*

வீறிட்டழு-தல் *vīṟiṭṭaḻu-,* 2 செ.குன்றாவி. (v.t.) வீர்வீரெனல்; make a shrill.

வீறிட்டோடல் *vīṟiṭṭōḍal,* பெ.(n.) நோய் முழுவதுங் குணப்படுதல்; entirely freed from disease.

வீறிடு-தல் *vīṟiḍu-,* 6 செ.கு.வி.(v.i.) வீரிடு-, பார்க்க; see *vīriḍu-.*

*[வீரிடு → வீறிடு-,]*

வீறு¹-தல் *vīṟu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. மேம்படுதல்; to be distinguished, to be eminent. *"போரூர் வீறிவா ழாறுமா முகனே" (திருப்போ. சந். குறுங்கழி. 3, 1).* 2. மிகுதல்; to increase. *"வீறுமுண்டி மிசைந்திட" (கந்தபு. தானப். 20).* 3. கீறுதல்; to scratch, as with the point of an instrument; to tear. *"நின்மெய்க்கட் குதிரையோ வீறியது" (கலித். 96).*

**M.** *viṟu*; **K.** *beṟe*; **Tu.** *biruni*; **Te.** *viruga-baḍu.*

வீறு²-தல் *vīṟu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. வெட்டுதல்; to split, cut. *"தெய்வவாள் வீறப் பொன்றினன்" (கம்பரா. சம்பா. 43).* 2. அடித்தல்; to beat, flog. *'அவனை நன்றாய் வீறினேன்' (இ.வ).*

வீறு³ *vīṟu,* பெ.(n.) 1. தனிப்பட்ட சிறப்பு; distinctive excellence. *"வீறெய்தி மாண்டார்" (குறள், 665).* 2. வெற்றி; victory. *"வீறுபெற வோச்சி" (மதுரைக். 54).* 3. வேறொன்றிற்கில்லா அழகு; unique beauty. *"வீறுயர் கலச நன்னீர்" (சீவக. 489).* 4. பொலிவு; splendour. *"சாறயர் களத்து வீறுபெறத் தோன்றி" (திருமுரு. 283).* 5. பெருமை (இல்க்.அக.); greatness. 6. மிகுதி; abundance, plenty. *"வாணிகர் வீற்றிலாபம் விளைவுழிச் சேறல்போல" (சேதுபு. திருநாட். 42).* 7. நல்வினை; good fortune, merit. *"விசையை யென்றுல கோடிய வீறிலேன்" (சீவக. 1814).* 8. மருந்து முதலியவற்றின் வினை விளை வேகம்; strenth, as of medicines or poisons;

power. *'அந்த மருந்துக்கு வீறில்லை'.* 9. தன்முனைப்பு; arrogance. *"கங்கை வீறடக்கும்..... சடையாய்" (காஞ்சிப்பு. வாணிச். 84).* 10. வெறுப்பு (யாழ்.அக.); dislike, disgust. 11. ஒளி (வின்.); light, brightness. 12. வேறு; separateness. *"வீறுவீ றியங்கும்" (புறநா. 173).* 13. தனிமை (வின்.); solitariness. 14. அடி; blow, strike. *'நாலு வீறு வீறினான்'.*

வீறு[4] *vīṟu,* பெ.(n.) 1. மருந்துச் சத்து; essence of medicine. 2. மருந்தின் பயன்விளைவுத் திறம்; power of medicine.

வீறுகம் *vīṟugam,* பெ.(n.) கொடி நவ்வல்; creeper-jamune.

வீறுகுட்டம் *vīṟu-kuṭṭam,* பெ.(n.) நலனழி குட்டநோய்; virulent leprosy.

*[வீறு + குட்டம்]*

வீறுதணிதல் *vīṟu-taṇidal,* பெ.(n.) மருந்தின் விரைவு குறைவுபடல்; abating of the virulence of medicine.

*[வீறு + தணிதல்]*

வீறுதிங்கனி *vīṟutiṅgaṉi,* பெ.(n.) அணிற்பிள்ளை; squirrel.

*[வீறு + திங்கனி]*

வீறுவாதம் *vīṟu-vādam,* பெ.(n.) விசியுழி பார்க்க; see *viśiyuḻi,* a form polemical discussion. *"வீறுவாதம் புகலும் வாய் வாதநோயாளர்க்கும்" (தாயு. மலை வளர். 3).*

*[வீறு +* **Skt.** *vādhā > த. வாதம்]*

வீறெனல் *vīṟeṉal,* பெ.(n.) வீரெனல் பார்க்க; see *vīreṉal.*

